# கிட்கிந்தா காண்டம்

(இரண்டாம் பகுதி)




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## கிட்கிந்தா காண்டம்

(இரண்டாம் பகுதி)




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1967

Rs 6-00 -

# உள்ளுறை

## கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

---

தலைவர் :

பேராசிரியர், வித்துவான், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A., B.L.

உறுப்பினர்கள் :

பேராசிரியர், திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்

திருவாளர் பி. ஸ்ரீ. ஆச்சாரியார் அவர்கள்

" நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

" மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள்

" பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள்

# பதிப்புரை

அண்ணுமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுவரும் கம்ப ராமாயணப் பதிப்பில் இது கிட்கிந்தா காண்டத்தின் இரண்டாம் பகுதியாகும். இதன்கண் கிட்கிந்தைப் படலம்முதல் மயேந் திரப் படலம் வரை ஏழு படலங்கள் உள்ளன.

கிட்கிந்தைப் படலத்திற்கு வித்துவான் திரு. க. வெள்ளை வாரணன் அவர்களும், தானை காண் படலம், நாட விட்ட படலம், பிலம் புக்கு நீங்கு படலம் ஆகிய மூன்றுக்கும் வித்துவான் திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர்களும், ஆறுசெல் படலம், சம்பாதிப் படலம் ஆகிய இரண்டுக்கும் திரு. தி. கி. இராமாநுஜையங்கார் அவர்களும், மயேந்திரப் படலத்திற்குப் பேராசிரியர், வித்துவான் திரு. கோ. சுப்பிர மணிய பிள்ளை M. A., B. L. அவர்களும் உரை வரைந்துள் ளார்கள்.

தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் தலைமையில் திரு. மு. கோவிந்தசாமி M. A., M Litt., சிரோமணி வித்துவான் திரு. P. S. இராமாநுஜாச்சாரியார். திரு. ந. வீ. ஜெயராமன் M. A., புலவர் திரு. கே. இராமச்சந்திரன், புலவர் திரு. S. கணபதி ராமன் M. O. L. ஆகியோர் கிட்கிந்தா காண்டத்திற்குரிய முப்பத் தேழு சுவடிகளை ஒப்புநோக்கித் தொகுத்த பாடவேறுபாடுகள் இதன்கண் பிற்சேர்க்கையாகத் தரப் பெற்றுள்ளன.

இப்பதிப்புக்கு வேண்டிய ஏட்டுச் சுவடிகளைக் கொடுத் துதவிய மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்க்கும், தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையத்தார்க்கும், சென்னை அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்தினர்க்கும், ஈரோடு திரு. தெய்வ சிகாமணிக் கவுண்டர் அவர்களுக்கும், தெங்கம்புதூர் திரு. சாத்தான்குட்டிப் பிள்ளை அவர்களுக்கும், பல்கலைக் கழகச் சார்பில் நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இத்தகைய தமிழ்த் தொண்டுகள் சிறப்பாக நிகழ்தற்கு வேண்டிய பொருளுதவியினைப் புரிந்துவரும் இந்தியப் பல்கலைக்

கழக மானியக் குழுவினர் பெரிதும் பாராட்டற்கு உரியவராவர். இவ்வாறே, கம்ப ராமாயணத்தின் ஏனைய காண்டங்களும் திருத்தமாக வெளிவரும் வண்ணம் இந்தியப் பேரரசும் தமிழ் நாட்டரசாங்கமும் ஆவன புரிந்து ஆதரித்துவரும் என நம்புகிறேன்.

இதனைக் கண்கவர் வனப்புடன் அச்சிட்டுதவிய சென்னைக் கமர்ஷியல் அச்சகத்தார் பணி பாராட்டற்குரியதாகும்.

1—2—67
அண்ணுமலைநகர்

கோ. சுப்பிரமணியம்,
தலைவர், கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு,
அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

# 10. கிட்கிந்தைப் படலம்

கிட்கிந்தை நகரத்தில் நிகழ்ந்த செய்திகளைக் கூறும் படலம் ஆதலால் கிட்கிந்தைப் படலம் என்னும் பெயருடையதாயிற்று.

இராமபிரான் கூதிர்ப்பருவம் நீங்கிய நிலையில் இலக்குவனை நோக்கி, "பெருவன்மை படைத்த வீரனே! குறித்த கால எல்லை கழிந்த நிலையிலும் சுக்கிரீவன் வந்து சேர்ந்திலன். நம் துணை கொண்டு கிட்கிந்தைக்கு அரசன் ஆகிய அவன், தான் செய்ய வேண்டிய உதவியிற் கருத்தின்றி நம்பால் அன்பும் அச்சமும் இல்லாதவனாகிப் போகநுகர்ச்சியில் அமிழ்ந்து கிடக்கின்றான். நன்றி கொன்று நட்பினைக் கெடுத்து வாய்மையைச் சிதைத்தவனாகிய அவனைக் கொன்று நீக்குதல் குற்றமாகாது. ஆகவே நீ அவன்பாற் சென்று, அவன் தனது கடமையினின்றும் தவறியதனால் உளவாகும் கேடுகளை அறிவுறுத்தி மீள்வாயாக" எனக் கூறினான். சினம் மிக்க இலக்குவன், விற்படையினையும் அம்பறாத் தூணியையும் தாங்கிக் கிட்கிந்தையை நோக்கி விரைந்து சென்றான். இலக்குவனைக் கண்ட வானரர்கள், கூற்றுவனை எதிரிற்கண்டவர்கள் போன்று அஞ்சிப் பதைபதைத்து ஓடி அவனது வருகையை அங்கதனுக்கு அறிவித்தனர். இலக்குவனது வெகுளிக் குறிப்புணர்ந்த அங்கதன், சுக்கிரீவனது அரண்மனையை நோக்கி விரைந்து சென்றான்; உரிமை மகளிர் சூழக் காமபரவசனாய் மதுவுண்டு உறங்கிக் கிடக்கும் தன் சிறிய தந்தையைக் கண்டு கைகூப்பி வணங்கி அவனை உறக்கத்தினின்றும் எழுப்பி, இலக்குவன் வெகுண்டு வந்த செய்தியை எடுத்துரைத்தான். உணர்விழந்து உறங்கிய சுக்கிரீவன், அங்கதன் கூறிய மொழிகளைச் சிறிதும் உணர்ந்திலன்.

இந்நிலையில், தன்னாற் செய்யத்தக்கது எதுவும் இல்லாமையையறிந்த அங்கதன், எதிரதாக் காக்கும் நல்லறிவு படைத்த அனுமனைக் கண்டு, அவனை அழைத்துக்கொண்டு தன் அன்னையாகிய தாரையை அடைந்து, 'இனி நம்மாற் செய்யத்தக்கது யாது?' என வினவினான். அதனைக் கேட்ட தாரை, அவர்களை நோக்கி, 'செய்யத்தகாத தீச் செயல்களை ஆராயாமற் செய்கின்றீர்கள். அத்தீவினைகளால் உளவாகும் கேடுகளை விரைவிற் போக்குதற்கும் வழிபார்க்கின்றீர்கள். செய்ந்நன்றி கொல்லுதலாகிய உய்தியில் குற்றத்தைச் செய்த நீவிர் தப்பி வாழவல்லிரோ" என்று, இராம இலக்குவர் திறத்துச் சுக்கிரீவன் தான் கூறிய உறுதிமொழியில் தவறிய பெரும்பிழையை எடுத்துக்கூறி இடித்துரைத்தாள். அந்நிலையில், இலக்குவன்

கிட்கிந்தை நகரவாயிலை அணுகினன். அது கண்ட குரங்குகள், அவன் நகரத்தினுள்ளே புகவொண்ணாதபடி வாயிற்கதவைத் தாளிட்டுப் பெரும்பாறைகளைப் பெயர்த்தடுக்கிப் போருக்கு ஆயத்த மாயின. சினமுற்ற இலக்குவன், வாயிற் கதவினைக் காலால் உதைத்தான். அவனது பாதம் படவே வாயிலும் மதிலும் ஆகிய யாவும் தகர்ந்து வீழ்ந்தன. அதுகண்ட குரங்குகள் யாவும் துணுக் குற்று அஞ்சி இருந்தஇடந் தெரியாமல் ஓடி மறைந்தன. இலக்குவன் கிட்கிந்தை நகரவீதியினுள்ளே புகுந்தான். தாரையைச் சுற்றி நின்ற வானர வீரர்கள், இலக்குவன் வருதலைக் கண்டு நடுங்கியவர்களாய், 'ஐயோ! இலக்குவன் வந்து விட்டானே, இனி நாம் என்ன செய்வது' என்று இரங்கி ஏங்கினர்.

அனுமன் தாரையை நோக்கி, "அன்னையே, நீ மகளிர் கூட்டத் துடன் இலக்குவனுக்கு முன் சென்று அவன் வரும் வழியினைத் தடை செய்தால், புலன்களை வென்றவனாகிய அவன் மகளிரைக் காண்பதற்குக் கூசித் திரும்பிவிடுவான். இதுவே இப்பொழுது செய்யத்தக்க உபாயமாகும்" என்றான். தாரையும் அவ்வாறே மகளிர் கூட்டத்துடன் எதிர்சென்று இலக்குவன் வரும் வழியினை மறைத்து நின்றாள். தன்னை நோக்கி நெருங்கி வந்த மகளிர் கூட்டத்தைக் கண்ட இலக்குவன், தன் மனத்திற் பொங்கியெழுந்த கோபம் சிறிது தணியத் தன் முகத்தை வேறு திசையில் திருப்பிக்கொண்டு, அம் மகளிரைக் கண்ணாற் பார்த்தற்கும் அஞ்சிக் கூசி நின்றான். தாரை மனம் நடுங்கியவளாய் இலக்குவனை நோக்கி, 'மைந்தனே! நீ இங்கு வந்தமையால் நாங்கள் நல்வாழ்வு பெற்று உய்ந்தோம். வெகுண்டு வரும் நினது தோற்றத்தைக் கண்டு நின் படை வீரர்களாகிய வானரர்கள் அஞ்சி நடுங்குகின்றார்கள். வேந்தர் வேந்தனாகிய இராமனுடைய திருவடிகளைப் பிரியாதுறையும் பெற்றியுடைய நீ, அப்பெரியோனைத் தனித்திருக்கச் செய்து இங்கு வந்த காரணம் யாதோ?' என வினவினாள். இவ்வாறு இன்மொழிகளால் வினவிய தாரையைச் சிறிது முகம் எடுத்து நோக்கிய இலக்குவன், அவளது கைம்மைக் கோலத்தினைக் கண்டான்; 'என்னைப் பெற்று வளர்த்த தாய்மார் இருவரும் இத்தன்மையராகவே யிருப்பர்' என்ற நினை வினனாகி, அயோத்தியில் இருக்கும் தன் அன்னையரை எண்ணித் தன் கண்கள் புன்கணீர் சொரிய நின்றான்.

"சேனை வீரர்களும் யானும் முயன்று தேடிச் சீதாபிராட்டியைக் கொணர்வேன்' எனத் தான் சொல்லிய உறுதிமொழியைச் சுக்கி ரீவன் மறந்தனன். அவனது மனக் கருத்தை விரைந்து அறிந்து வருக என அப்பெருமான் பணித்தவண்ணம் யான் இங்கு வந்தேன். மேல் சுக்கிரீவனுடைய செயல்கள் நிகழுந்திறத்தினை உள்ளவாறு

எடுத்துரைப்பாயாக" என இலக்குவன் தாரையை நோக்கிக் கூறினான். அது கேட்ட தாரை, "ஐயனே! சிறியவர்கள் அறியாமையால் தீமை செய்தனராயின் அவற்றையெல்லாம் பொறுத்தருளும் பெருமையுடையாய் நீ. சுக்கிரீவன்தான் சொன்ன சொல்லை மறந்தானல்லன்; உலகிற் பல இடங்களிலும் தூதர்களை அனுப்பி, அவ்வத்திசைகளிலிருந்து தன் சேனைகள் மிகுதியாக வருதலை எதிர்பார்த்துக் காலந்தாழ்த்துள்ளான். நீங்கள் செய்த உதவிக்குக் கைம்மாறுளதோ? செய்தநன்றியை மறந்தோர் இப்பிறப்பிலேயே வறுமையெய்தி எழுமையும் துன்புறுவர்" எனக் கூறித் தம்மினத்தார் செய்த பிழையினைப் பொறுத்தருளுமாறு வேண்டினாள்.

தாரை கூறிய இனிய மொழிகளைச் செவிமடுத்த இலக்குவன், சுக்கிரீவன் முதலியோர் திறத்து அருளுடையனாய், அன்புடையாரை வெகுண்ட தன் செய்கைக்கு நாணினான். இந்நிலையில் அனுமன், 'இவன் வெகுளியை ஒழிந்தான்' என்று எண்ணி இலக்குவன் அருகில் வந்து வணங்கி நின்றான். இலக்குவன் அனுமனை நோக்கி, 'நூற்பொருள்களை யுணர்ந்த நீயும் முன்னர் நிகழ்ந்ததனை மறந்தனையோ' என்றான். அடங்கிய வெகுளி மீளவும் மூளுமோ என்று அஞ்சிய அனுமன், சீதையைத் தேடுவதில் சுக்கிரீவன் மேற்கொண்ட பெருமுயற்சியும் செய்ந்நன்றிக்கடப்பாடும் இனிது விளங்கத் தக்க இன்மொழிகளைக் கூறினான். அவற்றைக் கேட்ட இலக்குவன், 'சுக்கிரீவன் இராமனது பணியினின்றும் நீங்கினானல்லன்; தன் கண்ணே வந்து பொருந்திய அரச போகமாகிய செல்வம், தன்னை விட்டுப் பெயர ஒண்ணாதபடி பிணித்ததனால் உண்டாகிய சிறுமையுடையவனாயினான்' என்னுந் தன்மையினைத் தன் மனத்திற் கருதினான். சீதையைப் பிரிந்தமையால் இராமபிரான் எய்திய பெருந்துயரத்தையும், அதனைக் கண்டு பொறுக்க ஒண்ணாத தன் நிலையினையும், தன் மனத்தெழுந்த வெகுளியை ஒருவாறு அடக்கிக் கொண்டு தான் தன் தமையனைத் தேற்றிய அருமைப் பாட்டினையும், அவ்வாறு தேற்றியிராவிட்டால் நேரும் பேரிடர்களையும், சுக்கிரீவன் தன் உறுதி மொழியை மறந்து சீதையைத் தேடுதலிற் காலந்தாழ்த்தமையால் உண்டாகிய பெருந்தீமையினையும் இலக்குவன் அனுமனுக்கு எடுத்துரைத்தான். அனுமன் இலக்குவனுக்கு ஆறுதலும் உறுதியும் கூறி அவனைச் சுக்கிரீவன்பால் வருக என அழைத்தான். வழி மறித்து நின்ற தாரையும் மகளிர்கூட்டத்துடன் திரும்பிச் சென்றனள். அந்நிலையில் அங்கதன் இலக்குவனை யணுகி வணங்கி அவன் பணித்தவண்ணம் அவனது வருகையைச் சுக்கிரீவனுக்கு உணர்த்தச் சென்றான். சுக்கிரீவனது அரண்மனையை யடைந்த அங்கதன், இலக்குவன் வெகுண்டு வந்திருத்தலைத் தன் சிறிய தந்தைக்கு எடுத்துரைத்தான். அச்செய்தி கேட்டு அந்தப்புரத்தி

லுள்ள மகளிரனைவரும் அஞ்சி நடுங்கினர். அவரது ஆரவார ஒலி யினைக் கேட்டு விழித்தெழுந்த சுக்கிரீவன், அங்கதனைப் பார்த்து, 'வீரனே! நாம் ஒரு குற்றமும் செய்யாதிருக்கவும் இலக்குவன் நம் மேல் வெகுண்டு வருதற்குரிய காரணம் யாது?' என வினவினன். அங்கதன் இலக்குவன் சினங்கொண்டு வருதற்குக் காரணமாக நிகழ்ந்தவற்றை முறையே எடுத்துக்கூறி, 'எந்தையாகிய நீ விரைவிற் சென்று இலக்குவனைக் காணுதல் முறை' என்றான். சுக்கிரீவன், தான் மதுவுண்டு மயங்கித் தன் கடமையினை மறந்த பெருங் குற்றத்தினை யெண்ணி வருந்தினன். இலக்குவனை எதிர் கொண்டு அழைத்து வருமாறு அங்கதனை அனுப்பித் தன் பரிசனங்கள் சூழ அரண்மனை வாயிலில் வந்து நின்றான்.

இலக்குவனை வரவேற்கும் முறையில் கிட்கிந்தை நகரம் சிறப் பாக அலங்கரிக்கப்பெற்றது. அருக்கியம் முதலிய உபசாரப் பொருள்களை மாதர்கள் ஏந்தி வர, முரசு முதலிய மங்கல வாத்தி யங்கள் ஒலிக்க, மறைமுனிவர்கள் வாழ்த்துக்கூறச் சுக்கிரீவன் இலக்குவனை எதிர்கொண்டழைத்தான். சுக்கிரீவனும் இலக்கு வனும் ஒருவரையொருவர் அன்பினால் தழுவிக்கொண்டு பரிசனங் களுடன் அரண்மனையை அடைந்தனர். இலக்குவனைச் சிங்கா தனத்தில் அமருமாறு சுக்கிரீவன் வேண்டினன். அதுகேட்ட இலக்குவன், 'திருமகள் நாயகனாகிய இராமன் புல்லணையில் தங்கி யிருக்கவும், அவனுடைய பணியாளனாகிய யான் அரியணையில் அமர்தல் தகுதியுடையதாமோ' என்றான். அம்மொழி கேட்டுச் சுக்கிரீவன் தன் கண்களில் நீர் சொரியத் தேம்பியழுது நின்றான். இலக்குவன் தரையிலேயே அமர்ந்தான். அது கண்டு அங்குள்ளா ரனைவரும் ஒன்றும் சொல்லத் தோன்றாதவர்களாய்க் கண்ணீர் சிந்தி வருந்தினார்கள்.

சுக்கிரீவன் இலக்குவனை நோக்கி, "ஐயனே நீ இங்குத் திருமஞ் சனம் ஆடி, இனிய அமுதினை அருந்தினையாயின், நாங்கள் எல் லோரும் உய்ந்தோம்" என்றான். "வருத்தமும் பழியுமே எமது வயிற்றை நிரப்பி மேலோங்க உயிர் துறவாது இருக்கின்றோ மென்றால், எங்களுக்கு இனிய உணவாகத் தக்கது யாதுளது? உண்ணவேண்டும் என்ற விருப்பம் உண்டானாலும் துயரத்தால் மனம் வேறுபட்ட இந்நிலையில் வானோரமுதமாயினும் எமக்குக் கைப் புடையதாகவே அமையும். இராமபிரானது தேவியைத் தேடிக் கண்டு அறிவித்தனையாயின், அரக்கராகிய தீயோரால் மூட்டப்பட்டுக் கனன்றெரியும் பெரும்பழியாகிய தீயை அவித்து எங்களைக் கங்கை யாற்றின் நீரினால் திருமஞ்சனம் ஆட்டியவன் ஆவாய்; திருப்பாற் கடலில் உண்டாகிய இனிய அமிழ்தினை எங்களுக்கு ஊட்டியவனும்

ஆவாய். இதனுல் எத்தகைய துன்பமும் தொடராதொழியும். இராமனுல் நுகரப்பட்டு எஞ்சிய பச்சிலே, கிழங்கு, காய் முதலிய மிச்சிலே, என்னுல் நுகரப்படும் உணவாகும். அவற்றை யன்றி வேறென்றையும் விரும்புவேனல்லேன். அங்ஙனம் விரும்பினேனுயின் அது நாய் தின்று எஞ்சிய எச்சிலெனவே கருதப்படும். அன்றியும் யான் சென்று பச்சிலே கனி முதலியவற்றைத் தேடித் திருத்தினுல், அதுவே நின் தமையனுகிய இராமனுல் நுகரத்தகும் உணவாகும். ஆதலால் நம் முன்னேன் பசியால் வருந்த நான் இங்குக் காலந்தாழ்த்தலும் நன்ருகாது" என்ருன் இலக்குவன்.

அது கேட்ட சுக்கிரீவன், 'யான் இவ்வாறு அரண்மனையில் இனிது தங்கியது, இராமன் துன்புறுதற்கே ஏதுவாகியது. இச் செயல் குரக்கினத்தாராகிய எம்மவர்க்கே ஏற்றதாகும்' எனக் கூறி இராமபிரானையடைதற்கெண்ணி விரைந்து புறப்பட்டான். அனுமனை நோக்கி, 'நீதிநெறியினையுணர்ந்து ஒழுக வல்லவனே, என்னுல் அனுப்பப்பட்ட தூதர்களால் இந்நகரத்தினுள்ளே சேனைகள் வந்து சேரும்வரை நீ இங்குத் தாமதித்திருப்பாயாக. அவையனைத்தும் வந்த பின்னர் அவற்றை இராமனிருக்குமிடத்திற்கு விரைவிற் கொணர்வாயாக' எனப் பணித்து, அங்கதன் தன்னுடன் வரச் சேனைகள் முன் செலச் சிவிகையில் ஏருது இலக்குவனுடனே தரையில் நடந்து சென்று இராமன் இருக்குமிடத்தை விரைந் தடைந்து இராமனுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுன். தன் பாதங்களில் வீழ்ந்து வணங்கிய சுக்கிரீவனை இராமபிரான் அன்பினுல் அணைத்துத் தன்னருகில் ஆசனத்தில் அமரச் செய்து அவனது ஆட்சியின்கீழ் வாழ்வார் நலங்களை வினவினுன். இராமன் அருளால் நலம் பெற்ற திறத்தை எடுத்துரைத்த சுக்கிரீவன், இராமபிரான் திறத்துத் தான் செய்யவேண்டிய உதவியினைச் செய்யாது காலந்தாழ்த்த பெரும்பிழையினை யெண்ணி இரங்கினுன். அவனது குற்றத்தை உளங் கொளாது குணங்கொண்டு பாராட்டிய இராமன், அவனை நோக்கி 'அனுமன் எங்குள்ளான்' என வினவினுன். 'அவன் நாளையே சேனைகளுடன் இங்கு வந்து சேர்வான். சேனைகள் வந்த பின் செய்யத்தக்கது இதுவென்பது நின்னுற் பணித் தற்குரியதாகும்' என மறுமொழி பகர்ந்தான் சுக்கிரீவன். அவனுடைய அன்பு மொழிகளைச் செவிமடுத்த இராமபிரான், 'வீரனே, பகற்பொழுதில் நெடுநேரம் கழிந்துவிட்டது. இனி நின் நகரத் திற்குச் செல்க. நின் சேனைகள் யாவும் வந்த பின்னர் இங்கு வருக' எனப் பணித்தான். சுக்கிரீவன் இராமனைத் தொழுது மீண்டான். பின் இராமன் அங்கதனுக்கு இன்மொழி கூறி அனுப்பி விட்டுத் தம்பியும் தானுமாக அவ்விடத்தில் தங்கியிருந்தான். இலக்குவனை நோக்கி 'ஐய, நீ கிட்கிந்தைக்குச் சென்றபொழுது அங்கு நிகழ்ந்த

வற்றைக் கூறுக' என இராமன் கேட்க, இலக்குவன் அவற்றை முறைப்பட எடுத்துரைத்தான். என்பது, இப்படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

இந்நிகழ்ச்சி முதனூலாகிய வான்மீகத்தில் பின்வருமாறு விரித் துரைக்கப்பட்டது :—

இராமனது பேருதவியால் கிட்கிந்தைக்கு மன்னன் ஆகிய சுக்கி ரீவன், தான் விரும்பிய செல்வங்களையும் தன் மனைவியான ருமை யையும் வாலியின் பத்தினியான தாரையையும் அடைந்து விரும்பிய போகங்களை நுகர்ந்து மகிழ்ந்து இராமனுக்குச் சொல்லிய உறுதி மொழியிற்கருத்தின்றிப் பொழுது போக்குவானாயினன். அந்நிலையில் அனுமன் அவனை யடைந்து, 'அரசே! இராமபிரானிடம் கூறிய உறுதி மொழிப்படி சீதையைத் தேடிக் கொணர்தலாகிய கடமையைச் செய்தல் வேண்டும். இராமன்பால் வருவதாக நீ குறித்தகால எல்லையும் கடந்துவிட்டது. பேராற்றல் படைத்த இராமன் நின் பால் ஒருவரை அனுப்புதற்குமுன் நீ சீதையைத் தேடும் செயலில் நின் படை வீரர்களை ஈடுபடுத்துதல் வேண்டும்' என அறிவுறுத் தினன். சுக்கிரீவனும் அதனை யேற்றுக்கொண்டு எல்லாத் திசை களிலிருந்தும் சேனைகளைத் திரட்டி வரும்படி தூதர்களை அனுப்புமாறு நீலன் என்ற படைத்தலைவனுக்குக் கட்டளையிட்டு மீண்டும் அந்தப் புரத்திற் சென்று தங்கினன்.

மாலியவான் என்ற மலையில் தங்கியிருந்த இராமபிரான், சீதையின் பிரிவாற்ருமையாற் பெரிதும் வருந்தினன். தான் பணித்த வண்ணம் குறித்த காலத்திற் சுக்கிரீவன் வந்து சேராமையாற் பெருஞ் சினங்கொண்டான். இலக்குவனை நோக்கி, 'பகைவர்களை அழிக்கவல்லவனே! நீ உறுதி மொழியிற் றவறிய சுக்கிரீவனை யடைந்து என்னுடைய வெகுளியினல் வாலி இறந்து எந்த வழியிற் சென்ருனே அந்த வழி இன்னும் மறைந்து விடவில்லை என்பதனை அவனுக்கு அறிவுறுத்தி விட்டுவா' என்று சொல்லி அனுப்பினன். இராமபிரானது பணியினை மேற்கொண்ட இலக்குவன், வில்லும் அம்பும் தாங்கியவனுய்க் கிட்கிந்தைக்கு விரைந்து சென்ருன். வெகுண்டுவரும் இலக்குவனைக் கண்ட வானரவீரர்கள், அஞ்சியோடி அவனது வருகையைச் சுக்கிரீவனுக்கு அறிவித்தனர். அந்நிலையில் சுக்கிரீவன் காமபரவசனுகித் தாரையுடன் அந்தப்புரத்தில் இருந் தமையால் அச்சொல்லைச் செவியில் ஏற்றுக்கொள்ளவில்லை. இலக் குவன் கிட்கிந்தையினுள்ளே நுழையும் நிலையில் வானர வீரர்கள் அவனைத் தடுத்து நிறுத்த முயன்றனர். பெருங்கோபமுடையனுய் அவர்களை விலக்கிவிட்டு நகரத்தினுள்ளே நுழைந்த இலக்குவன்,

அங்கதனைக் கண்டு, 'என் வரவைச் சுக்கிரீவனுக்குச் சொல்லுக' என ஏவினன். கலங்கிய உள்ளத்தினனாகிய அங்கதன், சுக்கிரீவனையும் தன் அன்னை தாரையையும் சிற்றன்னை ருமையையும் பணிந்து, இலக்குவன் சீற்றங்கொண்டு வந்த செய்தியைத் தெரிவித்தான். அப்பொழுது சுக்கிரீவன் மதுவுண்டு காமக்களிப்பினல் உணர்விழந்து உறங்கிக் கிடந்தான்; பின் இலக்குவனது வில்லின் நாணொலியைக் கேட்டு வானரர் எழுப்பிய ஆரவாரத்தால் அவன் விழித்துக்கொண்ட நிலையில் அனுமன் அவனை யடைந்து, 'குற்றஞ் செய்த நீ இலக்குவனை வணங்கி வேண்டிக்கொள்வதே செய்யத் தக்கது' எனக் கூறினன்.

பின், சுக்கிரீவன் பணித்த வண்ணம் அங்கதனல் அழைக்கப் பெற்று உள்ளே புகுந்த இலக்குவனைக் கண்டு வாயில் காவலர் வணங்கி நின்றனர். கிட்கிந்தையின் எழில் நலத்தினைக் கண்டு அரண்மனையினுள்ளே சென்ற இலக்குவன், அங்குள்ள மகளிர் கூட்டத்தைக் கண்டு நாணமுற்றுத் தயங்கி நின்றான். இலக்குவனது வருகையை யறிந்து தன் பிழை நினைந்து அஞ்சிய சுக்கிரீவன் தாரையை நோக்கி, 'அன்புடையவளே! நீ இலக்குவனது எதிர் சென்று இன்னுரைகூறி அவனது வெகுளியைத் தணிப்பாயாக' என ஏவினன். கலவி மயக்கத்தவளாகிய தாரை, தடுமாறி நடந்து இலக்குவனருகே சென்றனள். அவளைக் கண்ட இலக்குவன், சினம் தணிந்து வெட்கத்தால் தலை குனிந்து நின்றான். அந்நிலையில் தாரை நாணம் நீங்கியவளாய், நண்பர்கள்பால் அன்பினை விளைப்பதும் ஆழ்ந்த பொருளுடையதுமாகிய இன்மொழி புகன்று அவனது கோபத்தைத் தணிவித்தாள். 'வீரரிற் சிறந்தோனே! சுக்கிரீவன் காமவுணர்வின் வயப்பட்டிருப்பினும் நும்முடைய காரியத்தினை நிறைவேற்றுவதிற் கருத்துடையனாய் நெடுநாளைக்கு முன்னரே வீரர்களுக்குக் கட்டளையிட்டு விட்டான். அதன்படி நூறு கோடி யாயிரக் கணக்கினரான வானரர்கள் வந்து சேர்ந்துள்ளார்கள். ஆதலால் எங்கள்பால் அன்புடைய நீ அரண்மனைக்கு எழுந்தருளுக' எனக் கூறினள். இலக்குவனும் அதற்கிசைந்து அரண்மனையினுள்ளே புகுந்து சுக்கிரீவனை அணுகினன். இலக்குவனைக் கண்ட சுக்கிரீவன் துணுக்குற்றெழுந்தான். அவனைக் கண்ட நிலையில் இலக்குவனுள்ளத்தே மீண்டும் சினம் மூண்டெழுந்தது. இராமபிரான் வெகுண்டுரைத்தவை அனைத்தையும் இலக்குவன் சுக்கிரீவனுக்கு எடுத்துரைத்தான். இலக்குவன் சினந்துரைப்பக்கேட்ட தாரை, அவனை நோக்கி, 'பகைவரை அடக்க வல்ல பெருவீரனே! சுக்கிரீவர் இராமபிரானது அருளால் கிட்கிந்தை அரசையும் ருமையையும் என்னையும் அடைந்தார். முன்னே பெருந்துன்பத்தில் விழுந்து கிடந்த அவர் இப்பொழுது நிறைந்த இன்பத்தினை அடைந்து விடவே

விசுவாமித்திர முனிவரைப் போன்று தக்க காலத்தையும் அறிந்து கொள்ளாதிருக்கிருர். அவர் தம்முடைய கடமையைத் தவருது செய்வதிற் கருத்துடைய நான் நின்னை வேண்டுகின்றேன். அவர், இராமருக்குச் செய்ய வேண்டிய காரியத்தின் பொருட்டுத் தம்முடைய அரசபோகம் முதலிய எல்லாவற்றையும் சுற்றத்தவராகிய எங்களையும் விட்டு நீங்கும் உள்ளத் துறுதியுடையவராவர் என்பது எனது உண்மையான நம்பிக்கையாகும். சுக்கிரீவர் இராவணனைப் போரிற்கொன்று சீதையை மீட்டுக் கொணர்ந்து இராமருடன் சேர்க்கப்போகிருர். இக்காரியம் தடையின்றிக் கைகூடுவதற்காகவே ஆற்றல் மிக்க தன் படை வீரர்களின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டு இங்குத் தாமதித்துள்ளார். அவ்வீரர்களும் இப்பொழுதே வந்து சேர்வார்கள். கட்குடியினுலும் காம வேட்கையினுலும் அவர் பால் நிகழ்ந்த பிழைகளைப் பொறுத்தருள்க" என வேண்டினுள். இலக்குவனும் சினம் நீங்கப் பெற்ருன்.

சுக்கிரீவன் அனுமன் வாயிலாகப் படைத்தலைவர் பலர்க்கும் விரைந்து செய்தியனுப்பினமையால், பல திசைகளிலிருந்தும் படைத்தலைவர்கள் வானர சேனைகளைத் திரட்டிக்கொண்டு கையுறைப் பொருள்களுடன் வந்து சேர்ந்தனர். சுக்கிரீவன் அவர்கள் அனைவரையும் கண்டு விசாரித்து அனுப்பிவிட்டு இலக்குவ னுடன் சிவிகையில் ஏறியமர்ந்து இராமபிரானை அடைந்தனன் என்பதாம்.

இந்நிகழ்ச்சியில், சுக்கிரீவன் தமையன் மனைவியைக் கைப் பற்றிய கழிகாமுகனுகவும், வாலியின் மனைவியாகிய தாரை தன் கணவன் இறந்த நிலையிற் கைம்மை நோன்பினை மேற்கொள்ளாத வளாய்க் கொழுந்தனுகிய சுக்கிரீவனெடு கூடி மகிழும் குற்றமுடைய வளாகவும் வான்மீகத்திற் குறிக்கப்பட்டிருத்தல் காணலாம். பேராற்றல் படைத்த வாலியின் வாழ்க்கைத் துணைவியாய் வானரர் அரசு வளம் பெறத்தக்க அறிவும் ஒழுக்கமும் கற்பிக்க வல்ல நற்குண நற்செய்கைகள் வாய்க்கப்பெற்ற தாரையைக் கற்புநலன் அழிந் தவள் எனவும், இராமபிரானுல் மாசற்ற நண்பினனுக ஏற்றுக் கொள்ளப் பெற்ற பெருமை வாய்ந்த சுக்கிரீவ மன்னனைப் பிறனில் விழைதலாகிய கூடா ஒழுக்கத்தினையுடைய இழிந்தோன் எனவும் கூறுதல் பொருந்தாது எனக் கருதிய செந்தமிழ்க் கவியரசராகிய கம்பர், தாம் இயற்றிய இராமாவதாரம் என்னும் இக்காப்பியத்தில், வாலியின் மனைவியாகிய தாரையை இளைய பெருமாளாகிய இலக்கு வனுல் தாயென மதிக்கப்பெறும் கற்புடைய பெருமாட்டியாகவும்,

சுக்கிரீவனைத் தமையன் மனைவியைத் தாயெனக் கொண்ட தூயோனாகவும் அழகுபெற உருவாக்கிக் காட்டியுள்ளார். கற்பிற் சிறந்த தாரையின் வாயிலாகவும் சொல்லின் செல்வனாகிய அனுமன் வாயிலாகவும் செய்ந்நன்றியறிதல் என்னும் அறத்தின்மேன்மையை இனிது விளக்கியுள்ளார். தெய்வப் புலவர் திருவள்ளுவர், செய்ந்நன்றியறிதல் என்னும் அதிகாரத்திற் கூறிய பொருளுரைகளுக்கு ஏற்ற விளக்கமாக இப்பகுதி அமைந்திருத்தல் உணர்ந்து மகிழத் தக்கதாகும்.

# 10. கிட்கிந்தைப் படலம்

இராமன், தான்குறித்த காலஎல்லேயிற் சுக்கிரீவன் வராமையால் இலக்குவனைக் கிட்கிந்தைக்கு அனுப்புதல் 4374-4381

**4374.** அன்ன கால மகலு மளவினின்
முன்ன வீர னிளவலே மொய்ம்பினேய்
சொன்ன வெல்லேயி னூங்கினுந் தூங்கினன்
மன்னன் வந்தில னென்செய்த வாறரோ.

அன்ன காலம் அகலும் அளவினில்,
முன்னம் வீரன், இளவலே, 'மொய்ம்பினேய் !
சொன்ன எல்லேயின் ஊங்கினும் தூங்கினன் ;
மன்னன் வந்திலன் ; என்செய்தவாறு அரோ ?

பொ :—அத்தன்மையதாகிய கூதிர்ப்பருவம் நீங்கிய அளவில், சிங்கம்போன்ற வீரன் ஆகிய இராமன், தன் தம்பியை (நோக்கி) 'பெருவன்மை படைத்தவனே ! (வானர) மன்னவனுகிய சுக்கிரீவன் (முன்பு நாம்) கூறிய (நான்கு மாதங்களாகிய) கால எல்லே கழிந்ததன் மேலும் காலந் தாழ்த்தலேயுடையனுகி, இங்குவந்து சேர்ந்திலன். அவன் செய்த செயன்முறை எத்தகையதா யிருந்தது ?

கு :—முன்னம் - சிங்கம்; என்றது, சிங்க ஏறனையான் ஆகிய இராமனே. இனி முன்னே வீரன், எனப் பாடங்கொண்டு, 'வீரர் எல்லாருள்ளும் முன்வைத்து எண்ணத்தக்க முதன்மையுடைய வீரன்' எனப் பொருளுரைத்தலும் உண்டு. இளவல் - தம்பி ; என்றது, இராமனுக்கு இளேயோனுகிய இலக்குவனே. மொய்ம்பு - வலிமை. 'முன்னவீரன்' என்னும் எழுவாய், இப்படலத்து எட்டாஞ் செய்யுளில் வந்த 'என்ருன்' என்னும் வினையைக் கொண்டு முடிந்தது. முன்னவீரன், இளவலே (நோக்கி), 'மொய்ம்பினேய்......போதியாதி' என்ருன் என முடிக்க. 'மொய்ம்பினேய்' என்பது முதல் 'போதியாதி' என்பதுவரை அமைந்த பகுதி இராமன் கூற்ருகும். சொன்ன எல்லே—'வீரனே ! நீ அரசாட்சிக்குரிய செயல்களே யெல்லாம் முறைப்படி செய்து, ஆவணி முதல் கார்த்திகை முடிய நான்கு மாதங்கள் கழிந்த அளவில் என்பால் வருக' எனச் சுக்கிரீவனுக்குச் சொல்லி அனுப்பிய காலஎல்லே. எல்லேயின் ஊங்கினும் - எல்லேயின் மேலும். தூங்குதல் - விரைந்து செய்தற்குரிய காரியத்திற் கருத்தின்றிச் சோம்பியிருத்தல். சுக்கிரீவன் நமது உதவியால்

மன்னனுகும் உயர்நிலையைப் பெற்றிருந்தும் அவ்வுதவியைத் தான் மறந்த நிலையில் நமது காரியத்திற் கருத்தின்றிக் காலந்தாழ்த்தனன் என்பது புலப்பட, 'மன்னன் வந்திலன்' எனக் குறித்தான். தான் சொன்ன சொற்படி நடந்து கொள்ளாமற் பொய்த்ததும், செய்ந்நன்றி மறந்ததும் ஆகிய சுக்கிரீவனுடைய தகுதியற்ற செயல்களையெண்ணிச் 'செய்தவாறு என்?' எனச் சுட்டினன் இராமன். அரோ - அசை. (1)

4375. பெறல ருந்திருப் பெற்றுத விப்பெருந்
திறனி னைந்திலன் சீர்மையிற் றீர்ந்தனன்
அறம றந்தன னன்புகி டக்கநம்
மறன றிந்திலன் வாழ்வின் மயங்கினன்.

'பெறலரும் திருப் பெற்று உதவிப் பெருந்
திறன் நினைந்திலன்; சீர்மையின் தீர்ந்தனன்;
அறம் மறந்தனன், அன்புகிடக்க; நம்
மறன் அறிந்திலன்; வாழ்வின் மயங்கினன்.

பொ:—பெறுதற்கு அரிய அரசாட்சிச் செல்வத்தை (நம்மாற்) பெற்று, (நாம் செய்த) உதவியாகிய பெருநன்றியினைத் தான் நினைந்தான் அல்லன். (தனக்குரிய ஒழுக்கமாகிய) மேன்மையினின்றும் நீங்கினன். (தனக்கு இறுதிவந்த எல்லைக்கண் உதவி செய்தார்க்குத் தன்னால் இயல்வன எல்லாம் செய்தல் வேண்டும் என்னும்) அறத்தினை மறந்தொழிந்தான். (அவன் நம்பால் வைத்தற்குரிய) அன்பு ஒருபுறம் இருக்கட்டும்; நம்முடைய வீரமாகிய திண்மையினை உள்ளவாறறிந்திலன். (அரச போகமாகிய) வாழ்க்கை நுகர்ச்சியில் அமிழ்ந்து கிடக்கின்றான்.

கு:—பெறல் அரும் திரு - யாவராலும் எளிதிற் பெறுதற்கு அரிய அரச பதவியாகிய பெருஞ் செல்வம். நமது துணைகொண்டு அரச பதவியினைப் பெற்ற சுக்கிரீவன், நாம் செய்த பேருதவியினை நினையாதவனாய், நமக்குத் தான் செய்தற்குரிய உதவியிற் கருத்தின்றி உவளகத்திலேயே மடிந்திருந்து காலங் கழிக்கின்றான் என்பான், 'பெறலருந் திருப்பெற்று உதவிப் பெருந் திறன் நினைந்திலன்' என்றான். "அறம் நிரம்பிய அருளுடை யருந்தவர்க் கேனும், பெறலருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்" (கம்பர்-அயோத்தி-1565) என இவ்வாசிரியர் முன்னர்க் கூறிய பொருளுரை இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். சுக்கிரீவன் தான் சொல்லிய வண்ணம் தன் கடமையைச் செய்யத் தவறினமையால் தனக்குரிய ஒழுக்க மாகிய

மேன்மையினின்றும் விட்டு நீங்கினுன் என்பான், 'சீர்மையிற் றீர்ந்தனன்' என்ருன். தன்னுல் நண்பு செய்யப் பெற்றவர்கள் துன் புற்ற நிலையில் அவர்களது துன்பந்துடைத்தற்கு முந்தும் அன்பின் செய்கையை அவன் அறியாமற்போனது ஒருபுறம் இருக்கட்டும், ஒருவர் செய்த உதவிக்கு மாற்றுதவி செய்தல் வேண்டும் என்னும் உலகத்தாரது பொது அறத்தையும் மறந்தான்; தனக்குப் பேரிடர் விளைத்த பகைவனைக் கொன்ருெழித்த நமது வீரத்திறனை நேரிற் கண்டு வைத்தும் அதனை உள்ளவாறு அறியப் பெற்றிலன்; அறிந்தானுயின் அஞ்சியாயினும் அன்புபட்டாயினும் தன்கடமையில் தவருது ஒழுகியிருப்பான்; நம்பால் அன்பும் அச்சமுமின்றி அரச போகமாகிய நுகர்ச்சியில் அமிழ்ந்து தன்னுணர் விழந்து கிடக் கின்ருன் என்பான், 'அன்பு கிடக்க, அறம் மறந்தனன், நம் மறன் அறிந்திலன், வாழ்வின் மயங்கினுன்' என்ருன். 'அஞ்சியாகிலும் அன்பு பட்டாகிலும், நெஞ்சம் வாழி நினை நின்றியூரை நீ' (5—23—9) எனவரும் அப்பர் அருள்மொழி ஈண்டு ஒப்பு நோக்கி உணரத்தக்க தாகும். (2)

**4376.** நன்றி கொன்றரு நட்பொடு நாரறுத்
தொன்று மெய்ம்மை சிதைத்துரை பொய்த்துளாற்
கொன்று நீக்குதல் குற்றத்தி னீங்குமால்
சென்று மற்றவன் சிந்தையைத் தேர்குவாய்.

'நன்றி கொன்று, அரு நட்பொடு நார் அறுத்து
ஒன்றும் மெய்ம்மை சிதைத்து, உரை பொய்த்துளான்—
கொன்று நீக்குதல், குற்றத்தின் நீங்குமால்;
சென்று, மற்று அவன் சிந்தையைத் தேர்குவாய்.

பொ :—(தனக்குப் பிறர் செய்த) நன்றியைச் சிதைத்துப் பெறு தற்கு அரிய நண்பும் அன்பும் ஆகிய பண்பினைத் தொடர்வறத் துணித்து நீக்கி, மனத்தொடு பொருந்திய வாய்மையினைக் கெடுத்துச் சொல்லில் வழுவியவனுகிய சுக்கிரீவனைக் கொன்ருெழித்தல் குற்றத் தினின்றும் நீங்கிய நற்செயலே யாகும். (இக்குற்றங்கள் அவனது மனத்தொடு தொடர்புடையன தாமா என்பதனை அறியும் பொருட்டு) நீ சுக்கிரீவன்பாற் சென்று அவனது மனக்கருத்தை நாடி யறிவாயாக.

கு :—நன்றி கொல்லுதல் - தனக்குப் பிறர்செய்த நன்றியை மறத்தல். நண்பென்பது, நல்லூழின் துணையால் மனம் அன்பொடு பொருந்திய வழியல்லது பெறுதற்கு அரிய அருமையுடைய தாதலின்

'அருநட்பு' எனச் சிறப்பிக்கப்பட்டது. 'நண்பென்னும் நாடாச் சிறப்பு' (74) என்ருர் தெய்வப் புலவரும். நார் - அன்பு (திருக்குறள் - 958) நண்பு வளர்தற்கு இன்றியமையாத உயிர்ப் பண்பு அன்பாதலின் 'நட்பொடு நார்' என இயைத்துரைக்கப்பட்டது. அறுத்தல் - தொடர் பறத் துணித்தல். மனத்தொடு பொருந்தியமைந்ததே வாய்மையாம் ஆதலின் 'ஒன்றும் மெய்மை' எனப்பட்டது. ஒன்றுதல் - பொருந்து தல்; மனத்திற்கு ஏறுதல். 'மனத்தொடு வாய்மை மொழியின்' (திருக்குறள் – 295) என்பதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. குறித்த கால எல்லைக்குள் வருவதாக இராமனிடம் இசைந்து சென்ற சுக்கிரீவன், அவ்வெல்லைக்குள் வந்து சேராமையால் 'உரை பொய்த் துளான்' எனப்பட்டான். உரைபொய்த்தல் - சொன்ன சொற்படி நடவாமை. தன்னுல் ஆளப்பெறும் குடிகளிடத்துக் குற்றங்கள் நிகழின் அக்குற்றங்களைத் தண்டனையால் ஒழித்துப் போக்குதல், நாடாளும் வேந்தற்கு முறையெனக் கொள்ளப்படுவதன்றிக் குற்ற மாகா தென்பான், 'கொன்று நீக்குதல் குற்றத்தின் நீங்கும்' என்ருன். ஆல் - அசை. "குடிபுறங்காத் தோம்பிக் குற்றங்கடிதல், வடுவன்று வேந்தன் ருெழில்" (திருக்குறள் - 549) என்ருர் திருவள்ளுவனுரும். சுக்கிரீவன்பாற் கண்ட இக் குற்றங்கள்யாவும் அவன் நெஞ்சறியச் செய்தவைதானு என்பதனை நீ நேரிற் சென்று அறிந்து வருவாயாக என்பான், 'சென்று மற்று அவன் சிந்தையைத் தேர்குவாய்' என்ருன். மற்று - அசை. தேர்தல் - நாடி ஆராய்தல். (3)

**4377.** வெம்பு கண்டகர் விண்புக வேரறுத்
திம்பர் நல்லறஞ் செய்ய வெடுத்தவிற்
கொம்பு முண்டருங் கூற்றமு முண்டுங்க
ளம்பு முண்டென்று சொல்லுநம் மாணையே.

"வெம்பு கண்டகர் விண்புக வேர்அறுத்து,
இம்பர் நல்அறம் செய்ய எடுத்த விற்
கொம்பும் உண்டு; அரும்கூற்றமும் உண்டு; உங்கள்
அம்பும் உண்டு"என்று சொல்லு, நம் ஆணையே.

பொ:—வெகுண்டு வருத்தும் கொடியோர்கள் இறந்து விண்ணுல கடையும்படி (அவர்களைக் குலத்துடன்) வேரறக்களைந்து நீக்கி இவ்வுலகின்கண் நல்லறத்தினை நிலைநிறுத்துதற் பொருட்டு(யாம்) கைக்கொண்ட வில்லென்னும் தடியும் (எம்பால்) உள்ளது: (யாவரா லும் தடுத்து விலக்குதற்கு) அரிய கூற்றமும் (இறவாது) உள்ளது; (வாலியைக் கொன்று தன்னுற்றலைப் புலப்படுத்திய) உங்களுக்குரிய

அம்பும் (எம்பால்) உள்ளது என்று நமது கட்டளையினைச் (சுக்கிரீவனுக்குச்) சொல்வாயாக.

கு :—கரன் முதலிய அரக்கர்களை அழித்து இவ்வுலகில் அறத்தை நிலைநாட்டுதற்குக் காரணமாக விளங்கும் வில்லாகிய தண்டமும், வாலியைக் கொன்று உங்களுக்கு அரச பதவியைத்தந்து தன் ஆற்றலைப் புலப்படுத்திய அம்பும், இக்கருவிகளின் ஆற்றலுடன் இணைந்து மாற்ருருயிரைக் கவர்ந்து மகிழும் இயல்புடைய கூற்றுவனும் தத்தம் வன்மையிற் சிதைவின்றி யிருத்தலை எடுத்துக்கூறி, நமது ஆணைக்கு அடங்கி நடத்தலின் இன்றியமையாமையினைச் சுக்கிரீவனுக்கு அறிவுறுத்துவாயாக என இராமன் இலக்குவனுக்குக் கூறினுன். வெம்புதல் - அழலுதல்; சினத்தல். கண்டகர் - கொடுந் தொழிலாளர். இம்பர் - இவ்வுலகம். விற்கொம்பு - வில்லாகிய தண்டம். அரும் கூற்றம் - எத்தகைய பேராற்றலுடையவர்களாலும் தடுத்து விலக்குதற்கு அரிய ஆற்றல்மிக்க கூற்றுவன். வாலியைக் கொன்று சுக்கிரீவன் முதலியோர்க்கு வாழ்வளித்த சிறப்பினதாதல் பற்றித் தன்கையிலுள்ள அம்பினை 'உங்கள் அம்பு' எனச் சுக்கிரீவன் முதலிய வானரரோடு தொடர்புபடுத்திச் சுட்டினுன். ஆணை - கட்டளை. (4)

**4378.** நஞ்ச மன்னவ ரைநலிந் தாலது
வஞ்ச மன்று மனுவழக் காதலா
லஞ்சி லைம்பதி லொன்றறி யாதவ
னெஞ்சி னின்று நிலாவ நிறுத்துவாய்.

'நஞ்சம் அன்னவரை நலிந்தால், அது
வஞ்சம் அன்று ; மனுவழக்கு; ஆதலால்,
அஞ்சில், ஐம்பதில், ஒன்று அறியாதவன்
நெஞ்சில் நின்று நிலாவ, நிறுத்துவாய்.

பொ :—நஞ்சினையொத்துக் கொடியராயுள்ளாரை(க் கொன்று) தண்டித்தால், அத்தகைய தண்டனை, கொடுஞ்செயலாகாது; மனு நூலில் விதிக்கப்பெற்ற நீதி நெறியாகவே கொள்ளப்படும். ஆதலால் ஐந்து வயதிலும் ஐம்பது வயதிலும் (தனக்கு நலந்தருஞ் செயலாக) ஒன்றையும் அறிந்து கொள்ளாதவனுகிய சுக்கிரீவனது மனத்திற் பதிந்து நிலைபெறும்படி (இவ்வுண்மையை) அறிவுறுத்துவாயாக.

கு :—நஞ்சம் அன்னவர் என்றது, தன்னை அறியாது உண்டாரது இன்னுயிரைக் கவருந் தன்மையதாகிய நஞ்சினைப் போன்று, தம்மை

ஆராயாது நண்பு செய்தார்க்கு இடர்விளைக்கும் இயல்பினராகிய கொடியவர்களை. நாட்டிற் குடிமக்களுக்கு அழிவு செய்யும் கொடியோ ராவார் தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற்கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில் விழைவார் என்று இவர் முதலாயினோர். கொடுந் தொழிலாளராகிய இவர்களை அரசர் தாட்சண்யத்தாற் கொல்லாது விடுவராயின், புற்களைகளால் நலிந்து கெடும் நெற்பயிரைப்போன்று உலக மக்கள் இடர்ப்படுவராகலின் கொடியோராகிய அவர்களைக் கொன்றொழித்தலும் அரசர்க்கு அறமா யிற்று. "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட் டதனொடு நேர்" (550) எனவரும் திருக்குறளும் அதற்குப் பரிமேலழகர்தரும் விளக்கமும் இங்கு நினைவுகூரத் தக்கனவாகும். நலிதல் - வருத்திக் கொல்லுதல். அது - அக்கொலைத் தண்டனை. வஞ்சம் அன்று - கொடுஞ் செயலாகாது. மனு வழக்கு - மனுநூலில் விதிக்கப்பெற்ற நீதி நெறியாகும். (நலிதலாகிய) அது, வஞ்சம் அன்று, மனுவழக்கு ஆம் என ஆக்கச்சொல் வருவித்து முடிக்க. அஞ்சில் ஐம்பதில் ஒன்று அறியாதவன் என்றது, அஞ்சு வயதாகிய இளமைப் பருவத்திலும் ஐம்பது வயதாகிய முதுமைப்பருவத் தொடக்கத்திலும் தனக்குத் தகுதியுடையதாக ஒன்றையும் அறிந்து கொள்ளும் நல்லுணர்வில்லாதவன் என்பதாம். இளமையொடு முதுமையிடை அறிவின் திறத்தால் சிறிதும் வேற்றுமையின்றி வெறும் யாக்கையளவில் வளர்ச்சி யடைந்தவன் என்பது குறிப்பு. இளமைப் பருவத்தில் தன் தமையனாகிய வாலியின்பால் குறிப்பறிந் தொழுகாது முதுமை தொடங்கிய இந்நிலையிலும் என்பால் ஆராய்ச்சி யின்றி நடந்து கொள்கின்றான் என்றவாறு. 'அஞ்சி லறியாதார் ஐம்பதிலும் தாம் அறியார்' எனவரும் மணவாள மாமுனிகள் வாய் மொழி இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும். அஞ்சு, ஐம்பது என வரும் எண்ணுப் பெயர்கள் முறையே இளமை முதுமைகளை உணர்த்தி நின்றன. அஞ்சு - ஐந்து; போலி. ஒன்றும் என்புழி உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. 'அஞ்சி லைம்பதில் ஒன்றறி யாதவன்' என்னும் இத்தொடர்க்குப் பிறவாறு பொருள் கூறுதலும் உண்டு. நெஞ்சில் நின்று நிலாவ நிறுத்தலாவது, கேட்போனது மனத்திற் பதிந்து என்றும் மாறாது நிலைபெறும்படி தெளிய உணர்த்துதல். (5)

**4379.** ஊரு மாளு மரசுநுஞ் சுற்றமு
நீரு மாளுதி ரேயெனி னேர்ந்தநாள்
வாரும் வாரலி ராமெனின் வானரப்
பேரு மாளு மெனும்பொருள் பேசுவாய்.

'"ஊரும், ஆளும், அரசும், நும்சுற்றமும்
நீரும் ஆளுதிரே எனின், நேர்ந்த நாள்
வாரும்; வாரலிராம் எனின், வானரப்
பேரும் மாளும்" எனும்பொருள் பேசுவாய்.

பொ :—நும்முடைய நகரத்தையும் குடிகளையும் அரசபதவியினையும் சுற்றத்தினையும் நீங்களே ஆட்சிபுரிய விரும்பினீராயின், (சீதையைத்தேட உதவுதற் பொருட்டு நீங்கள் வருவதாக) உடன்பட்ட இந்நாளில் (உடனே) புறப்பட்டு வருவீராக. (அங்ஙனம்) வாராதிருப்பீராயின், வானரம் என்னும் (நும் குலப்) பெயர்கூட (இவ்வுலகில் இல்லாமல்) இறந்தொழியும் என்னும் உண்மையை(ச் சுக்கிரீவன் முதலியோர்க்கு) எடுத்துரைப்பாயாக.

கு:—ஊர் - தலை நகரமாகிய கிட்கிந்தை. ஆள் - குடிகள். நும் என்பதை ஊர், ஆள், அரசு, சுற்றம் என எல்லாவற்றோடும் ஒட்டுக. நீரும் என்புழி உம்மை இசைநிறை. நேர்ந்த நாள் - சீதையைத் தேடுவதற்கு வருவதாகச் சுக்கிரீவன் முதலியோர் உடன்பட்டுரைத்த கார்த்திகை மாதமாகிய எல்லை.' 'நேர்ந்த நாள் வாரும்' என்னும் இத்தொடர்க்கு, 'வருவதாக முன்குறித்த கால எல்லை கழியவும் நேர்பட்ட நாளாகிய இப்பொழுதாவது வந்து சேருங்கள்' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். நேர்ந்த - நேர்பட்ட. வாரலிர் எனின் என இயையும். ஆம் - அசை. பேரும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. வானரம் - குரங்கு. வானரப் பேரும் மாளும் எனவே அப் பெயர்ப் பொருளாகிய குரங்கினம் அனைத்தும் இறந்தொழிதல் சொல்லாமலே விளங்கும். 'நகரமும் சுற்றமும் போற்ற நுமது நாட்டினை ஆட்சிபுரிய விரும்பினீராஞல் முன்னர்ச் சீதையைத்தேட வருவதாக நீவிர் குறித்த கால எல்லை வந்துவிட்டபடியால் விரைந்து வந்து அச்செயலில் முயல்வீராக; இல்லையேல் நும் வானரகுலம் அடியோடழிதலே யன்றி அக் குலத்திற்குரிய பெயர் தானும் இவ்வுலகில் இல்லையாய் மறக்கப்பட்டு ஒழியும்' என்று சுக்கிரீவன் முதலியோர் மனத்தில் நன்கு பதியும்படி எடுத்துச் சொல்லுக' என இராமன் இலக்குவனுக்குக் கூறினன் என்றவாறு. (6)

**4380.** இன்ன நாடுது மிங்கிவர்க் கும்வலி
துன்னி ஞரை யெனத்துணிந் தாரெனின்
உன்னை வெல்ல வுலகொரு மூன்றினு
நின்ன லாற்பிற ரின்மை நிகழ்த்துவாய்.

"இன்னம் நாடுதும் இங்கு இவர்க்கும் வலி
துன்னினாரை" எனத் துணிந்தார் எனின்,
உன்னை வெல்ல, உலகு ஒருமூன்றினும்
நின்அலால் பிறர் இன்மை நிகழ்த்துவாய்.

பொ :—(இராம இலக்குவராகிய) இவரைக் காட்டிலும் இவ்வுலகில் வலிமிக்க துணைவர்களை மேலும் நாடியறிவோம்' என்று (சுக்கிரீவன் முதலியோர் ஒருகால்) நிச்சயித் திருப்பாராயின், (இலக்குவனாகிய) உன்னைப் போரில் வெல்லுதற்கு ஒப்பற்ற இம் மூவுலகங்களிலும் நின்னொருவனையன்றிப் பிறர்யாரும் இல்லை என்பதனை (அவர்கள் உணரும்படி) அறிவுறுத்துவாயாக.

கு :—'இங்கு இவர்க்கும் வலி துன்னினாரை இன்னம் நாடுதும். எனத் துணிந்தார் எனின் என இயைத்துப் பொருள்கொள்க' இன்னம் - மேலும். இவர்க்கும் - இவர்களைக் காட்டிலும். துன்னுதல் - நெருங்குதல்; மிகுதல். 'வாலியைக் கொல்லுதற்கு நம் துணையை நாடிப்பெற்ற சுக்கிரீவன் முதலியோர்' தம் கருத்து நிறைவேறிய பின்னர் நம்மைப் புறக்கணித்து நம்மினும் வலிமிக்காராகப் பிறரைத் தமக்குத் துணையாக நாடிப்பெறும் எண்ணத்துடன் ஒருகால் மனம் மாறினராயினும், என்னை இம் மூவுலகங்களும் எதிர்த்து வந்தாலும் எனக்குத் துணையாகநின்று என் தம்பியாகிய நீ ஒருவனே எத்தகைய பகைவர்களையும் எதிர்த்து வெல்லும் பேராற்றல் படைத்தவனாக இருத்தலையும், நின்னை எதிர்க்கவல்ல பேராற்றல் படைத்தவராக இம்மூவுலகங்களிலும் ஒருவரும் இல்லை என்பதனையும் நின் ஆற்றலை உள்ளவாறு அறியப்பெறாத சுக்கிரீவன் முதலியோர்க்குத் தெளிவாக அறிவுறுத்துவாயாக' என்பான், 'உன்னை வெல்ல உலகொரு மூன்றினும், நின்னலாற் பிறர் இன்மை நிகழ்த்துவாய்' என இராமன் இலக்குவனுக்கு அவனது ஒப்புயர்வற்ற பேராற்றலை நினைவு படுத்தினான் என்பதாம். (7)

4381. நீதி யாதி நிகழ்த்தினை நின்றது
வேதி யாத பொழுது வெகுண்டவண்
சாதி யாதவர் சொற்றரத் தக்கனை
போதி யாதியென் றான்புகழ்ப் பூணினான்.

'நீதிஆதி நிகழ்த்தினை, நின்று, அது
வேதியாத பொழுது, வெகுண்டு, அவண்
சாதியாது, அவர்சொல் தரத்தக்கனை;
போதிஆதி' என்றான்—புகழ்ப்பூணினான்.

பொ :—(அரசர்க்குரிய) நீதி முதலிய அறவுரைகளை எடுத்துரைத் தனையாகி, (நீகூறிய) அச்சொல் (சுக்கிரீவன் முதலியோர் உள்ளத்தில்) நிலைபெற்று (அவர்களது தவறான போக்கினை) மாற்றாத நிலைமைக்கண் சினமுற்று அவ்விடத்திலே அவர்களைக் கொன்றழித்து விடாமல், அன்னோர் கூறிய மறுமொழியினை என்பாற் சொல்லுங் கடமையுடையையாய் (அங்குப்) போவாயாகுக' எனக் கூறினான் புகழையே தனக்குரிய அணிகலனாகக் கொண்ட இராமன்.

கு :—முன்ன வீரனும் புகழ்ப் பூணினானும் ஆகிய இராமன், போதியாதி என்றான் எனமுடிக்க. நீதிஆதி - நீதி முதலிய அறவுரைகள். 'அது நின்று வேதியாத பொழுது'என இயைத்துப் பொருள்கொள்க. அது - (நீ கூறிய) அச்சொல். நின்று - (உள்ளத் தில்) நிலைபெறப் பதிந்து. வேதியாத பொழுது - மாற்றாத நிலைமைக் கண். வேதித்தல் - பேதித்தல்; மாற்றுதல். சாதியாது - கொன்றழிக் காமல். சாதித்தல் - கொல்லுதல். அவர்சொல்-(சுக்கிரீவன் முதலிய) அன்னோர் கூறிய மறுமொழி. போதிஆதி - போவாய் ஆகுக. குற்றஞ் செய்தாரை ஆராயாமல் தண்டித்தலை விடுத்து, குற்றம் புரிதற்கு இடனாகிய அன்னோரது சூழ்நிலையை நடுநின்று ஆராய்ந்து, மேலும் அவர்கள் அத்தகைய குற்றங்களைச் செய்யாதவாறு திருத்திப் பணி கொள்ளுதலே செங்கோல் வேந்தனது நீதிமுறை என்பதனை நன்குணர்ந்து, சுக்கிரீவனை வெகுளாது அவன் கூறிய மறுமொழி யினைக் கேட்டுவந்து தன்னிடம் கூறுமாறு இலக்குவனுக்கு அறிவுறுத்தினமை பற்றிச் செங்கோல் வேந்தனாகிய இராமனைப் 'புகழ்ப்பூணினான்' எனப் போற்றினார் ஆசிரியர். "தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால், ஒத்தாங் கொறுப்பது வேந்து" (திருக்குறள் - 561) எனவரும் தெய்வப்புலவர் வாய்மொழி இங்கு நினைக்கத்தக்கதாகும். (8)

## இராமனது ஆணையை மேற்கொண்டு இலக்குவன் செல்லுதல் 4382—4388

**4382.** ஆணை சூடி யடிதொழு தாண்டிறை
பாணி யாது படர்வெரிந் பாழ்படாத்
தூணி தூக்கித் தொடுசிலை தொட்டருஞ்
சேணி னீங்கினன் சிந்தையு ணீங்கலான்.

ஆணைசூடி, அடிதொழுது, ஆண்டு இறை
பாணியாது படர்வெரிந் பாழ்படாத்

தூணி தூக்கி, தொடுசிலை தொட்டு, அருஞ்
சேணின் நீங்கினன்—சிந்தையுள் நீங்கலான்.

பொ :—இராமனை என்றும் விட்டு நீங்கப்பெறாத உள்ளமுடையானாகிய இலக்குவன், (இராமனது) கட்டளையைச் சிரமேற்கொண்டு (அவனுடைய) திருவடிகளை வணங்கி, அவ்விடத்திற் சிறிதும் தாமதித்து நில்லாமல், பரந்து அகன்ற தன்முதுகிடத்தே என்றும் வெறுமை யடைதலில்லாத அம்பறாத் தூணியை மேலிட்டுக்கொண்டு, அம்பினைத் தொடுத் தெய்தற்குரிய வில்லினைக் கையிற் பிடித்துச் செல்லுதற்கு அரிய நெடுவழியில் விரைந்து சென்றான்.

கு :—ஆணை சூடுதலாவது, பெரியோர் பணித்த கட்டளையினைத் தலைவணங்கி மேற்கொள்ளுதல். ஆண்டு - அவ்விடத்தில். இறை - சிறிதும். பாணியாது - காலந்தாழ்க்காமல். பாணித்தல் - காலம் தாழ்த்தல். வெரிந் - முதுகு. பாழ்படாத்தூணி - என்றும் வெறுமை நிலையடையாத அம்புப் புட்டில். சிந்தையுள் நீங்கலான் என்றது இலக்குவனை. இறைப் பொழுதும் பிரிந்துறைதலாற்றாத பேரன்புடன் இராமனை அகலாது தன் உள்ளத்துட் கொண்டு போற்றும் இயல்பினனாகிய இலக்குவன், இப்பொழுது இராமனது கட்டளையினை நிறைவேற்றுதல் கருதி உள்ளத்தை அவன்பால்வைத்து உடலளவில் அவனைப்பிரிந்து நெடுந்தூரஞ் சென்றான் என்பார், 'சேணின் நீங்கினன், சிந்தையுள் நீங்கலான்' என்றார் ஆசிரியர். இத்தொடரில் முரண் என்னும் அணிநலம் அமைந்திருத்தல் அறியத் தக்கதாகும். 'சிந்தையுள் நீங்கலான்' என்னும் இத்தொடருக்கு 'இராமபிரானது மனத்தினின்றும் நீங்காத அன்புடைத் தம்பி' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். (9)

4383. மாறு நின்ற மரனு மலைகளு
நீறு சென்று நெடுநெறி நீங்கிட
வேறு சென்றனன் மேன்மையி னோங்கிடும்
ஆறு சென்றில னாணையி னேகுவான்.

மாறு நின்ற மரனும், மலைகளும்,
நீறுசென்று நெடுநெறி நீங்கிட,
வேறு சென்றனன்; மேன்மையின் ஓங்கிடும்
ஆறு சென்றிலன்—ஆணையின் ஏகுவான்.

பொ :—(இராமனது) கட்டளைப்படி (கிட்கிந்தையை நோக்கிச்) செல்பவனாகிய இலக்குவன், உயர்ச்சியுடையதாய் நீண்டு செல்லும்

நெடுவழியிற் செல்லாதவனாய், (குறுக்கே) தடையாக நின்ற மரங்களும், மலைகளும் (தனது விரைந்த நடையினால்) பொடியாகிப் புறத்தே நெடுந்தொலைவிற் சென்று நீங்குமாறு (பழைய நெடுவழிக்கு) வேறாகியதொரு புதுவழியிற் சென்றான்.

கு :—ஆணையின் ஏகுவான், மேன்மையின் ஓங்கிடும் ஆறு சென்றிலன், வேறு சென்றனன் எனவும், மாறு நின்ற மரனும் மலைகளும் நீறுசென்று நெடுநெறி நீங்கிட வேறு சென்றனன் எனவும் தனித் தனி இயைத்துப் பொருள் கொள்க. மாறுநிற்றல் - (இலக்குவனது இயக்கத்திற்குக்) குறுக்கே தடையாய் நிற்றல். மேன்மையின் ஓங்கிடும் ஆறு என்றது, மலைகளின்மேல் உயர்ந்தும் நீண்டும் வளைந்து வளைந்து செல்லும் பழைய நெடுவழியினை. மிகவும் நெடியதாகிய அவ்வழியிற் செல்லாது கிட்கிந்தையை விரைந்து அடையும் நோக்கத்துடன் இலக்குவன் தனது செலவினாற் புதியதொரு வழியமையுமாறு காடுகளிலும் மலைகளிலும் இடையிற் புகுந்து விரைந்து சென்றான் என்பதாம். (10)

**4384.** விண்ணு றத்தொடர் மேருவின் சீர்வரை
மண்ணு றப்புக் கழுந்தின மாதிரங்
கண்ணு றத்தெரி வுற்றது கட்செவி
யொண்ணி றக்கழற் சேவடி யூன்றலால்.

விண் உறத் தொடர் மேருவின் சீர் வரை
மண் உறப் புக்கு அழுந்தின, மாதிரம்;
கண் உறத் தெரிவுற்றது, கட்செவி;
ஒண் நிறக் கழல் சேவடி ஊன்றலால்.

பொ :—(இலக்குவனுடைய) ஒளியும் நிறமும் பொருந்திய கழல்களை யணிந்த சிவந்த பாதங்கள் (அவன் விரைந்து நடக்குங்கால்) அழுந்தி ஊன்றினமையால், ஆகாயமளவும் உயர்ந்தோங்கிய மேருமலையின் உயர்ச்சியின் எல்லையளவாக (அதன் உயரம் எவ்வளவோ அவ்வளவு ஆழமாக) மலைகள் மண்ணினுள்ளே சென்று அழுந்தின. அந்நிலையில் கீழிருந்து பூமியினைத் தாங்கும் ஆதிசேடன் என்னும் பாம்பு கட்புலனாகத் தோன்றியது.

கு :—சேவடி ஊன்றலால் மாதிரம் அழுந்தின; கட்செவி கண்ணுறத் தெரிவுற்றது என முடிக்க. சீர் – உயர்ச்சி. மாதிரம் - மலை. கண்ணே செவியாக வுடையது பாம்பாதலின் அதற்குக் கட்செவி என்பது பெயராயிற்று. ஈண்டுக் கட்செவி என்றது ஆதிசேடனாகிய

பாம்பினை. கட்செவி என்பதனைச் சாதியொருமையாகக் கொண்டு பூமியைத் தாங்கும் எட்டு நாகங்களையும் உணர்த்தியதாகக் கொள்ளுதலும் பொருந்தும். இனி, கட்செவி என்னும் இச்சொல் ஆதி சேடனது அவதாரமாகிய இலக்குவனைக் குறித்ததாகக்கொண்டு, கட்செவியின் சேவடி ஊன்றலால், வரை அழுந்தின; மாதிரம் தெரிவுற்றது எனப் பொருளுரைப்பாரும் உளர். இச்செய்யுள் உயர்வு நவிற்சியணி. (11)

**4385.** வெம்பு கானிடைப் போகின்ற வேகத்தால்
உம்பர் தோயு மராமரத் தூடுசெல்
அம்பு போன்றன னன்றடல் வாலிதன்
றம்பி மேற்செலு மானவன் றம்பியே.

வெம்பு கானிடைப் போகின்ற வேகத்தால்,
உம்பர் தோயும் மராமரத்து ஊடு செல்
அம்பு போன்றனன்—அன்று, அடல் வாலிதன்
தம்பிமேல் செலும் மானவன் தம்பியே.

பொ :—அப்பொழுது வலிமை வாய்ந்த வாலியின் தம்பியாகிய சுக்கிரீவனை நோக்கிச் செல்லும் இராமன் தம்பியாகிய இலக்குவன், வெப்பம் மிகுந்த காட்டினிடத்தே செல்லும் விசையினால் வானுலகளவும் உயர்ந்து பரவிய (ஏழு) மராமரங்களினிடையே ஊடுருவி(த் துளைத்து)ச் சென்ற (இராம) பாணத்தை யொத்துத் தோன்றினன்.

கு :—உம்பர் - வானுலகம். 'மராமரத்து ஊடுசெல் அம்பு' என்றது, சுக்கிரீவனது வேண்டுகோட்கிசைந்து ஏழு மராமரங்களையும் ஒருசேர ஊடுருவித் துளைத்துச் செல்லும்படி இராமனால் எய்யப் பெற்ற அம்பினை. வாலிதன் தம்பிமேற் செலும் மானவன் தம்பி, அம்பு போன்றனன் என முடிக்க. வாலிதன் தம்பி - சுக்கிரீவன். மானவன் - மனுகுலத் தோன்றல்: என்றது இராமனை. மானவன் தம்பி - இராமன் தம்பி; என்றது இலக்குவனை. இராமன் எய்த அம்பு மராமரங்கள் ஏழினையும் ஒருசேர ஊடுருவித் துளைத்துச் சாய்த்துச் சென்றாற்போன்று அவன் தம்பியாகிய இலக்குவனும்தான் செல்லும் வேகத்தால் காட்டிலுள்ள மரங்கள் பலவும் முறிந்து சாயுமாறு விரைந்து சென்றான் என இலக்குவனது போக்குக்கு இராமபாணத்தின் போக்கினை உவமை கூறியவாறு. (12)

**4386.** மாடு வென்றியொர் மாதிர யானையின்
சேடு சென்று கெடிலொரு திக்கின்மா
நாடு கின்றது நண்ணிய கால்பிடித்
தோடு கின்றது மொத்துள னாயினான்.

மாடு வென்றி ஒர் மாதிர யானையின்
சேடு சென்று கெடில், ஒரு திக்கின் மா
நாடுகின்றது நண்ணிய கால்பிடித்து
ஓடுகின்றதும், ஒத்துளன் ஆயினான்.

பொ :—அயலில் உள்ள வெற்றி வாய்ந்த திசையானையினது இளங்கன்று (அவ்யானையினை விட்டுத்) தவறிக் காணாமற் போய் விட்டால், மற்றொரு திசையானை (அக்கன்றினைத்) தேடுவதாய் (அது) சென்ற அடிச்சுவட்டினைப் பின்பற்றி ஓடிச் செல்கின்றதனையும் ஒத்து விளங்கினான் (இலக்குவன்).

கு :—மாடு - பக்கம்: மாதிரம் - திசை. சேடு - இளமை; இச் சொல் இளமையினையுடைய யானைக்கன்று என்னும் பொருளில் இங்கு ஆளப்பெற்றது. கெடுதல் - வழி தவறிச் செல்லுதல்; காணாமற்போதல். திக்கின் மா - திசை யானை. நண்ணிய கால் பிடித்து - சென்ற அடிச்சுவட்டைப் பின்பற்றி. ஓடுகின்றதும் என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. இராமன் பணித்தவண்ணம் சுக்கிரீவனைத் தேடி விரைந்து செல்லும் இலக்குவன், இராம பாணத்தையொத்து விளங்கினான் என மேற்பாடலிற் குறித்த ஆசிரியர், அயல்நின்ற திசையானையின் காணாமற்போன கன்றினைத் தேடி மற்றொரு திசை யானை செல்வதையொத்து விளங்கினான் என இப்பாடலிற் குறித்துள்ளார். மேற்பாடலிற் குறித்த உவமை சுக்கி ரீவனை ஒறுத்தடர்க்கும் மனக்குறிப்புடன் செல்லும் இலக்குவனது வெகுளித் தோற்றத்தையும், இப்பாடலிற் குறித்த உவமை எவ்வகை யாலும் சுக்கிரீவனை இராமனது அன்புப் பிணிப்பிற்கொணர்ந்து சேர்த்து விடுதல் வேண்டுமென இலக்குவன் கொண்ட நண்பின் திறத்தையும் குறிப்பாக உணர்த்தி நிற்றல் காணலாம். இராம பிரானால் அரசளிக்கப்பெற்று அவ் இராமவேழத்தின் இளங்கன்றென அவனைச் சார்ந்து ஒழுகற்பாலனாகிய சுக்கிரீவன், தன் கடமையை மறந்து சேய்மையில் தங்கினானாக, இராமனது ஆணைக்குள் சுக்கி ரீவனை அடங்கச் செய்யும் நோக்குடன் அவனை நாடிச் செல்லும் இலக்குவனுக்குத் தன் அயல் நின்ற திசையானையின் காணாமற் போன கன்றினைத் தேடிக்கொணரச் செல்லும் திசையானையை உவமை கூறியதிறம் கூர்ந்து நோக்கத்தக்கதாகும். (13)

**4387.** உருக்கொ ளொண்கிரி
யொன்றினின் றொன்றினைப்
பொருக்க வெய்தினன்
பொன்னொளிர் மேனியான்
அருக்கன் மாவுத
யத்தினின் றத்தமாம்
பருப்ப தத்தினை
யெய்திய பண்பினால்.

உருக் கொள் ஒண்கிரி ஒன்றின் நின்று ஒன்றினைப்
பொருக்க எய்தினன், பொன் ஒளிர் மேனியான்—
அருக்கன், மா உதயத்தின் நின்று அத்தமாம்
பருப்பதத்தினை எய்திய பண்பினால்.

பொ :—சூரியன், பெருமை வாய்ந்த உதய மலையிலிருந்து அத்த மன மலையை அடைந்த தன்மையைப் போன்று, பொன் போன்று ஒளிரும் ஒளிமிக்க திருமேனியையுடைய இலக்குவன், அழகிய வடிவினைக்கொண்ட ஒளிமிக்க (மாலியவான் என்னும்) மலையிலிருந்து (கிட்கிந்தை என்னும்) மற்றொரு மலையினை விரைந்து அடைந்தான்.

கு :—பொன்னொளிர் மேனியான், அருக்கன் உதயத்தினின்று அத்தமாம் பருப்பதத்தினை எய்திய பண்பின், ஒண்கிரி ஒன்றின் நின்று ஒன்றினை எய்தினன் என இயையும். பொன்னொளிர் மேனியான் என்றது, பொன்னிற மேனியனாகிய இலக்குவனை. "சுவணவண்ணன்" (ஆரணிய - விராதன் – 38) என முன்னர்க் குறித்தமை காண்க. ஒரு மலையிலிருந்து மற்றொரு மலையினை அடைந்த இலக்குவனுக்கு, உதய மலையிலிருந்து அத்தமன மலையை அடையும் அருக்கனை உவமையாகக் கூறினார். அருக்கன் - சூரியன். ஒளியும் நிறமும் உடைமை பற்றி இலக்குவனுக்கு அருக்கன் உவமை. பொருக்க - விரைய. 'பொருக்க நும்வினை போயறுங் காண்மினே' (5-30-10) என்பது தேவாரம். மா - பெருமை. உதயம் - ஞாயிறு தோன்றும்மலை. அத்தமாம் பருப்பதம் - ஞாயிறு மறையும் மலை. உதயம் - தோன்றுதல். அத்தம் - மறைதல். பண்பின் - தன்மையைப்போன்று. ஆல் – அசை. (14)

**4388.** தன்று ணைத்தமை யன்றனி வாளியிற்
சென்று சேணுயர் கிட்கிந்தை சேர்ந்தவன்

குன்றி னின்றொரு குன்றினிற் குப்புறும்
பொன்று ளங்குளைச் சீயமும் போன்றனன்.

தன் துணைத் தமையன் தனி வாளியின்
சென்று, சேண் உயர் கிட்கிந்தை சேர்ந்தவன்,
குன்றின் நின்று ஒரு குன்றினில் குப்புறும்
பொன் துளங்கு உளைச் சீயமும் போன்றனன்.

பொ :—தன் (உயிர்க்குயிராந்) துணைவனாகிய அண்ணன் இராமனது ஒப்பற்ற அம்பினைப் போன்று (தடையின்றி விரைந்து) சென்று வானளாவ வுயர்ந்த கிட்கிந்தை மலையை அடைந்தவனாகிய இலக்குவன், ஒரு மலையில் நின்று மற்றொரு மலையிற் பாய்ந்து குதிக்கும் பொன்போன்றொளிரும் பிடரிமயிரினையுடைய ஆண் சிங்கத்தினையும் ஒத்துத் தோன்றினான்.

கு :—தனி வாளி - ஒப்பற்ற அம்பு; என்றது, இராமபாணத்தை. எத்தகைய தடைகளையும் ஊடுருவிக்கொண்டு விரைந்து சென்று குறித்த இலக்கையடைந்து பகைவரை யழித்தலும், இராமனது கருத்திற் பிறழாது உற்றுழியுதவுதலும் பற்றி, இலக்குவனுக்கு இராம பாணம் உவமையாயிற்று. குப்புறுதல் - குதித்தல். துளங்குதல் - ஒளிர்தல். 'துளங்கும் இளம் பிறையாளன்' (1-60-10) என்பது தேவாரம். உளை - பிடரிமயிர். சீயம் - சிங்கம். உளையினையுடைய சீயம் எனவே ஆண் சிங்கம் என்பது புலனாம். முற் செய்யுளிற் குறித்தவண்ணம் இலக்குவன் உதயகிரியிலிருந்து அத்தமன மலையிற் செல்லும் அருக்கனை யொத்ததோடன்றி, ஒரு மலையிலிருந்து மற்றொரு மலையிற் குதிக்கும் சிங்கத்தினையும் ஒத்துத் தோன்றினான் என்பார், 'சீயமும் போன்றனன்' என்றார். உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை. சேர்ந்தவன், போன்றனன் என முடிக்க. (15)

## இலக்குவன் வெகுண்டு வருதலைக்கண்டு அஞ்சிய வானரர், அங்கதனுக்கு அவனது வருகையைத் தெரிவித்தல்

**4389.** கண்ட வானரங் காலனைக் கண்டபோல்
மண்டி யோடின வாலி மகற்கமர்
கொண்ட சீற்றத் திளையோன் குறுகினான்
சண்ட வேகத்தி னாலென்று சாற்றலும்.

கண்ட வானரம், காலனைக் கண்டபோல்
மண்டி ஓடின; வாலிமகற்கு 'அமர்

கொண்ட சீற்றத்து இளையோன் குறுகினன்,
சண்ட வேகத்தினல்' என்று சாற்றலும்.

பொ :—(இவ்வாறு இலக்குவன் வெகுண்டு வருதலைக்) கண்ட குரங்குகள் (உயிர்கவரவரும்) இயமனை (எதிர்ப்பட்டு)க் கண்டன போன்று (அஞ்சி) விரைந்து ஓடினவாய், வாலியின் புதல்வனை அங்கதனை நோக்கி, 'இராமனுக்கு இளையோனாகிய இலக்குவன், நம்மேற் போர் மேற்கொண்டாலொத்த பெருங்கோபம் உடையவனாய் மிக்க விரைவுடன் இங்கு நெருங்கி வந்து விட்டான்' என்று கூறிய அளவில்,

கு :—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். கண்ட வானரம், காலனைக் கண்ட போல் மண்டி ஓடினவாய், 'இளையோன் அமர் கொண்ட சீற்றத்துச் சண்டவேகத்தினல் குறுகினன்' என்று வாலி மகற்குச் சாற்றலும் என இயைத்துப் பொருள் கொள்க. கண்ட வானரம் - இலக்குவன் வெகுண்டு வருதலைக் கண்ட குரங்குகள். காலனைக் கண்ட போல் - (தம் உயிரைக் கவரவரும்) இயமனை நேரே எதிர்ப்பட்டுக் கண்டனவற்றைப்போன்று (அஞ்சி). மண்டி-விரைந்து. ஓடின - ஓடி; முற்றெச்சம். அமர்கொண்ட சீற்றம் – போர் மேற்கொண்டு வந்தாலொத்த பெருங்கோபம். இளையோன் - இலக்குவன். குறுகுதல் - அணுகுதல். சண்டவேகம் - மிக்க விரைவு. (16)

அங்கதன், இலக்குவனது குறிப்புணர்ந்து
சுக்கிரீவனது அரண்மனையை அடைதல்

**4390.** அன்ன தோன்றலு மாண்டொழி லான்வர
வின்ன தென்றறி வான்மருங் கெய்திலான்
மன்னன் மைந்தன் மனக்கருத் துட்கொளாப்
பொன்னின் வார்கழற் றாதையிற் போயினன்.

அன்ன தோன்றலும், ஆண் தொழிலான் வரவு
இன்னது என்று அறிவான், மருங்கு எய்திலான்;
மன்னன் மைந்தன் மனக்கருத்து உட்கொளா,
பொன்னின் வார்கழல் தாதை இல் போயினன்.

பொ :—அத்தகைய (பெருமை வாய்ந்த) நம்பியாகிய அங்கதனும், ஆண்மைப் பண்பிற்கு ஏற்ற வீரத்தொழிலானாகிய இலக்குவனது வருகையின் நோக்கம் இத்தன்மையது என்று சிந்தித்து அறியும் நுண்ணறிவுடையான் ஆதலின், (சீற்றத்துடன் வரும் அவ்

விலக்குவனது) அருகில் செல்லாதவனாய், அரசகுமாரனாகிய இலக்குவனது உள்ளக்கருத்து இதுவென்பதனைத் தன் மனத்திற்கொண்டு, பொன்னால் இயன்ற நீண்ட வீரக்கழலை யணிந்த (தன் சிறிய) தந்தையாகிய சுக்கிரீவனது அரண்மனையை நோக்கி (விரைந்து) சென்றான்.

கு :—வானரவேந்தனாகிய வாலியின் மைந்தனாய் அழகும் ஆண்மையும் நிரம்பியவன் அங்கதனாதலின் அவனை 'அன்ன தோன்றல்' எனக் குறித்தார் ஆசிரியர். 'ஆண் தொழிலான்' என்றது, இலக்குவனை; தன்னிகரற்ற பெருவீரனுக்குரிய போர்த் தொழிற்றுறைகள் எல்லாவற்றிலும் சிறந்து விளங்குபவன் இலக்குவன் என்றவாறு. வரவு - வருதலின் நோக்கம். இன்னது - இத் தன்மையது; என்றது, இராமனிடம் தான் வருவதாகக் குறித்த கால எல்லையை மறந்து சுக்கிரீவன் சென்று சேராமையால் ஆயது என்பதனை. அவன் சினமுற்று வருகின்றான் என வானரவீரர்கள் சொல்லக் கேட்ட அளவிலேயே அறிந்துகொண்ட அங்கதன், சீற்றத்துடன் பொங்கிவரும் இலக்குவனை அணுகுதற்கு அஞ்சி, அவனருகே செல்லாதவனாய், அவனது வருகையைத் தன் சிறிய தந்தையாகிய சுக்கிரீவனுக்கு அறிவிக்க எண்ணி அவனது அரண்மனையை விரைந்து அடைந்தான் என்பதாம். (17)

## அரண்மனையினுள்ளே சுக்கிரீவன் இருந்த நிலை 4391-4395

**4391.** நளனி யற்றிய நாயகக் கோயிலுட்
டளம லர்த்தகைப் பள்ளியிற் றாழ்குழ
லிளமு லைச்சிய ரேந்தடி தைவர
விளைது யிற்கு விருந்து விரும்புவான்.

நளன் இயற்றிய நாயகக் கோயிலுள்,
தள மலர்த்தகைப் பள்ளியில், தாழ்குழல்
இள முலைச்சியர் ஏந்து அடி தைவர,
விளை துயிற்கு விருந்து விரும்புவான்;

பொ :—நளன் என்பவனால் அழகுறச் செய்யப்பட்ட தலைமை யமைந்த அரண்மனையின் உள்ளே இதழ் நிரம்பிய மலர்களால் அமைக்கப் பெற்ற படுக்கையிலே, தாழ்ந்து அசையும் கூந்தலையும் இளமை வாய்ந்த தனத்தினையும் உடைய மகளிர், சிறந்த பாதங்களை மெல்லத் தடவ (அதனால்) விளையும் (இனிய) தூக்கத்திற்குத் தான் விருந்தாதலை விரும்புபவனும்;

கு :—சுக்கிரீவன் மகளிர்சூழ அந்தப் புரத்தினுள்ளே இன்துயில் கொண்டிருக்கும் நிலை இதுமுதல் ஐந்து செய்யுட்களில் விரித்துரைக்கப் பெற்றுள்ளது. இச்செய்யுட்களின் ஈற்றில், சுக்கிரீவனைக் குறித்தனவாக அமைந்த, விரும்புவான், விளங்குவான், வைகுவான், மயங்குவான், தயங்குவான் எனவரும் வினையாலணையும் பெயர்கள், 23-ஆம் செய்யுளின் முதற்கண் வரும் 'கிடந்தனன்' என்னும் வினையைக் கொண்டு முடிந்தன. நளன் என்பான், தெய்வத்தச்சனாகிய விசுவகர்மாவின் மைந்தனாகத் தோன்றிய வானரவீரன்; தன் தந்தையைப் போன்று தானும் சிற்ப நூலில் தேர்ச்சியடைந்தவன். இவனால் அழகுற அமைக்கப் பெற்றதே கிட்கிந்தையில் உள்ள தலைமையமைந்த அரண்மனை என்பார் 'நளன் இயற்றிய நாயகக் கோயிலுள்' என்றார். தளமலர்-(கால்களைந்து) இதழ்களே நிரம்பிய மலர்கள். தகை – அழகு. பள்ளி - படுக்கை. ஏந்துதல் - உயர்தல்; சிறத்தல். தைவருதல் - மெல்லத் தடவுதல். பாதங்களை வருடுதலால் இனிய தூக்கம் உண்டாதல் இயல்பு. 'தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு கண் வளருந் திருவை யாறே' (1-130-7) என்பது தேவாரம். சுக்கிரீவன் தான் நுகர்தற்குரிய இனிய நுகர்ச்சிகள் பலவற்றுள்ளும் ஒன்றாகத் தூக்கத்தைக் கருதாமல், தூக்கமாகிய ஒன்றுக்குத் தான் ஒரு நுகர்ச்சிப் பொருள்போன்று அதனுள் ஆழ்ந்து கிடத்தலையே விரும்புவானாயினான் என்பார், 'விளை துயிற்கு விருந்து விரும்புவான்' என்றார். துயில் - தூக்கம். விருந்து - புதிய நுகர்ச்சியாம் தன்மை. (18)

4392. தெள்ளி யோருத வப்பெருஞ் செல்வமாங்
கள்ளி னலதி கங்களித் தான்கதிர்ப்
புள்ளி மானெடும் பொன்வரை புக்கதோர்
வெள்ளி மால்வரை யென்ன விளங்குவான்.

தெள்ளியோர் உதவு, அப்பெருஞ் செல்வம் ஆம்
கள்ளினால், அதிகம் களித்தான்; கதிர்ப்
புள்ளி மால்நெடும் பொன்வரை புக்கது ஓர்
வெள்ளி மால்வரை என்ன விளங்குவான்;

பொ :—தெளிந்த நல்லறிவினராகிய இராம இலக்குவரால் அளிக்கப்பெற்ற அத்தகைய பெருமை வாய்ந்த (அரசாட்சிச்) செல்வமாகிய கள்ளைப் பருகினமையால் மிக்க களிப்புடையானாய், ஒளிக்கற்றைகளாகிய புள்ளிகளைத் தன்பாற்கொண்ட பெரிய நீண்ட

பொன் மலையிற் புகுந்து அமர்ந்ததொரு வெள்ளிமலையைப் போன்று விளங்குபவனும் ;

கு :—தெள்ளியோர் - இன்பக்காலத்தும் துன்பக்காலத்தும் தம் தன்மை கெடாது ஒரேநிலையில் நிற்கும் உள்ளத்திண்மையுடைய தெளிந்த நல்லறிவினோர்; என்றது இராம இலக்குவரை. அவர்களால் உதவப் பெற்றதே சுக்கிரீவன்கொண்ட அரச பதவியாகவும், அவன் அவர்கள் செய்த அப் பேருதவியை மறந்து தனக்குக் கிடைத்த அரசுரிமையாகிய பெருஞ்செல்வக் களிப்பால் மகிழ்ச்சி மீதுரப்பெற்று உணர்விழந்துள்ளான் என்பார், 'தெள்ளியோர் உதவு அப்பெருஞ்செல்வமாம் கள்ளினல் அதிகங் களித்தான்' என்றார். பெறுதற்கரிய அரச பதவியாகிய செல்வமும், உள்ளத் திண்மையில்லாதவர்கட் படின், தன்னையுண்டாரது அறிவினைப் பேதுறுத்தும் கள்ளினையொத்து, ஒழுக்கமும் உணர்வும் அழித்தலின், 'பெருஞ்செல்வமாம் கள்' என உருவகஞ் செய்யப்பட்டது. பன்னிற நன்மணிகள் பதிக்கப்பெற்றுப் பொன்னினல் இயன்ற கட்டிலின் கண்ணே தூவெள்ளை மேனியனாகிய சுக்கிரீவன் துயிலும் காட்சி, பல்வகைச் சுடர்க் கற்றைகளையுடைய பொன்மலையின் நடுவே வெள்ளிமலையொன்று புகுந்து தங்கியிருந்தாற் போலும் தோற்றமுடையதாய் விளங்கியது என்பார், 'புள்ளி மால்நெடும் பொன் வரை புக்கதோர், வெள்ளி மால்வரையென்ன விளங்குவான்' என்றார். (19)

**4393.** சிந்து வாரத் தருநறை தேக்ககில்
சந்த மாமயிற் சாயலர் தாழ்குழற்
கந்த மாமலர்க் காடுக டாவிய
மந்த மாருதம் வந்துற வைகுவான்.

சிந்துவாரத்தரு, நறை, தேக்கு, அகில்,
சந்தம் மாமயிற் சாயலர் தாழ்குழல்
கந்த மாமலர்க் காடுகள் தாவிய
மந்த மாருதம் வந்து உற, வைகுவான் ;

பொ :—சிந்துவாரம் என்னும் மரம், நறைக்கொடி, தேக்கு, அகில், சந்தன மரங்கள், சிறந்த மயில்போலும் சாயலையுடையாராகிய மகளிருடைய தாழ்ந்தசையும் கூந்தலாகிய நறுமணம் வீசும் மலர்களையுடைய காடுகள் ஆகியவற்றிற்படியும் மென்காற்ருகிய தென்றல் (தன்மேல்) வந்து வீச இனிது உறைபவனும் ;

கு:—சிந்துவாரம் - கருநொச்சி. (சிறுபாண்-89. நச். உரை) நறை - நறையென்னும் பெயருடைய வாசனைக் கொடி. தேக்கு, அகில், சந்தம் என்பன மரங்கள். சந்தம் - சந்தனம். கந்தம் - நறுமணம். மந்தமாருதம் - மென்காற்று; தென்றல். உற - பொருந்தி வீச. (20)

4394. தித்தி யாநின்ற செங்கிடை வாய்ச்சியர்
முத்த வாணகை முள்ளெயி றூறுதேன்
பித்து மாலும் பிறவும் பெருக்கலான்
மத்த வாரண மென்ன மயங்குவான்.

தித்தியா நின்ற செங்கிடை வாய்ச்சியர்
முத்த வாள்நகை முள்எயிறு ஊறுதேன்,
பித்தும், மாலும், பிறவும், பெருக்கலால்,
மத்த வாரணம் என்ன மயங்குவான்;

பொ:—தித்திக்கின்ற செந்நெட்டியினைப் போலும் சிவந்த வாயினையுடைய மகளிரின் முத்தினையொத்த ஒளியுடன் விளங்கும் முறுவலாகிய கூரிய பற்களின் அடியிலிருந்து ஊறும் வாயூறலாகிய தேன், (மேன்மேலும் அதனையே நுகரவேண்டும் என்னும்) பித்தினையும் மனமயக்கத்தினையும் (மதக் களிப்பு முதலிய) பிறவற்றையும் மிகுதிப்படுத்தலால், மதங்கொண்ட யானையினைப் போன்று மயங்குபவனும்;

கு:—தித்தியாநின்ற - தித்திக்கின்ற. தித்தித்தல் - இனித்தல். தித்தியா நின்ற வாய், செங்கிடை வாய் எனத் தனித்தனி இயையும். வாய்ச்சியர் - வாயினையுடைய மகளிர்; என்றது சுக்கிரீவனுடைய உரிமை மகளிரை. முத்தம், மகளிரது முறுவலுக்கு உவமை. வாள் - ஒளி. நகை - முறுவல். முள்எயிறு - கூரிய பல். பாலொடு தேன் கலந்தாற்போன்று இனிக்கும் வாயூறலுடையராதல் பற்றித் ‘தித்தியாநின்ற வாய்ச்சியர்’ என்றும், செந்நிறம் வாய்ந்த நெட்டியினையொத்த அதரமுடையராதல் பற்றிச் ‘செங்கிடை வாய்ச்சியர்’ என்றும் குறித்தார். செங்கிடை - சிவந்த நிறமுடைய நெட்டி. பித்து என்றது, தான் விரும்பிய நுகர்ச்சிப் பொருளை விட்டுச் சிறிதும் பிரியவொண்ணாதபடி அறிவு திரிந்த நிலையிற் பெருகிய பெருவேட்கையினை. மால் - மனமயக்கம். பெருக்கல் - மிகுதிப்படுத்தல். மத்த வாரணம் - மதயானை. (21)

**4395.** மகுட குண்டல மேய்முக மண்டலத்
துகுநெ டுஞ்சுடர்க் கற்றை யுலாவலாற்
பகல வன்சுடர் பாய்பனி மால்வரை
தகம லர்ந்து பொலிந்து தயங்குவான்.

மகுட குண்டலம் ஏய் முக மண்டலத்து
உகு நெடுஞ் சுடர்க்கற்றை உலாவலால்,
பகலவன் சுடர் பாய் பனி மால்வரை
தக, மலர்ந்து, பொலிந்து தயங்குவான்;

பொ:—முடியும் குண்டலங்களும் பொருந்திய முகமாகிய ஒளி மண்டிலத்திலிருந்து வீசப்பெறும் நீண்ட கதிர்த்தொகுதிகள் (தனது வெண்ணிறம் வாய்ந்த மேனி முழுவதும்) பரவித் தோன்றுதலால், பகல் செய்வானாகிய சூரியனது ஒளி பரவிய பனிமலையாகிய இமய மலையையொப்ப முகமலர்ந்து ஒளிமிகுந்து விளங்குபவனும் (ஆகி)

கு:—மகுடகுண்டலம் என்பது உம்மைத்தொகை; மகுடமும் குண்டலமும் என விரியும். மகுடம் - முடி. குண்டலம் - காதணி. ஏய் - பொருந்திய. கற்றை - தொகுதி. பகலவன் - பகற்பொழுதைச் செய்பவனாகிய சூரியன். 'பகல் செய்வான்' (சிலப் - கானல்வரி) என்றார் இளங்கோவடிகளும். பனிமால் வரை - பனி படர்ந்த பெரிய மலை; என்றது இமயமலையை. 'பனிமால் இமயப் பொருப்பு' (யாப்பருங்கலக்காரிகை) என்றார் பிறரும். தயங்குதல் - விளங்குதல். (22)

## அங்கதன், சுக்கிரீவனை அணுகித் துயில் எழுப்புதல்

**4396.** கிடந்த னன்கிடந் தானைக் கிடைத்திரு
தடங்கை கூப்பினன் றாரைமுன் னாட்டந்த
மடங்கல் வீரனன் மாற்றம் விளம்புவான்
றொடங்கி னனவ னைத்துயி னீக்குவான்.

கிடந்தனன்—கிடந்தானைக் கிடைத்து, இரு
தடங்கை கூப்பினன்; தாரை முன்நாள் தந்த
மடங்கல் வீரன், நல் மாற்றம் விளம்புவான்
தொடங்கினான், அவனைத் துயில் நீக்குவான்.

பொ:—உறங்கிக் கிடந்தான் (சுக்கிரீவன்); அவ்வாறு படுத்து உறங்கினவனாகிய அச் சுக்கிரீவனை, முன்னாளில் தாரை என்பாள்

பெற்ற ஆண் சிங்கம் போலும் வீரனாகிய அங்கதன், அணுகிநின்று, பெரியனவாய் நீண்ட தன் இரு கைகளையும் குவித்து வணங்கினான்; நலந்தரும் சொற்களைக் கூறுதல் வேண்டி (சுக்கிரீவனாகிய) அவனை உறக்கத்தினின்றும் எழுப்பலுற்றான்.

கு:—முன்னர் ஐந்து செய்யுட்களின் முடிவிலும் சுக்கிரீவனைக் குறித்து அமைந்த விரும்புவான், விளங்குவான், வைகுவான், மயங்குவான், தயங்குவான் எனவரும் வினையாலணையும் பெயர்கள், இச் செய்யுளின் முன்னுள்ள 'கிடந்தனன்' என்னும் முற்றுவினையைக் கொண்டு முடிந்தன. கிடந்தானை - உறங்கிக் கிடந்தவனாகிய சுக்கிரீவனை. கிடைத்து - நெருங்கி; அணுகி. முன்னாள் தாரை தந்த வீரன் - மடங்கல் வீரன் என இயையும். தருதல் - பெற்றெடுத்தல். மடங்கல் வீரன்-மடங்கல் போல்வானாகிய வீரன்; என்றது அங்கதனை. மடங்கல் - சிங்கம். நல்மாற்றம் விளம்புவான் அவனைத் துயில் நீக்குவான் தொடங்கினான் என இயைத்துப் பொருள்கொள்க. விளம்புவான் - கூறுதல் வேண்டி; வானீற்று வினையெச்சம். (23)

**4397.** எந்தை கேளவ் விராமற் கிளையவன்
சிந்தை யுண்ணெடுஞ் சீற்றந் திருமுகந்
தந்த ளிப்பத் தடுப்பரும் வேகத்தன்
வந்த னன்னுன் மனக்கருத் தியாதென்றான்.

'எந்தை! கேள்: அவ் இராமற்கு இளையவன்,
சிந்தையுள் நெடுஞ் சீற்றம், திருமுகம்
தந்து அளிப்ப, தடுப்ப அரும் வேகத்தன்
வந்தனன்; உன் மனக்கருத்து யாது?' என்றான்.

பொ:—'என் தந்தையே, யான் கூறுவதனைக் கேட்டருள்வாயாக. அவ் இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன், (தன்) மனத்தினுள்ளே எழுந்த பெருஞ்சினத்தினை(த் தனது) அழகிய திருமுகமே வெளிப்படுத்திக் காட்டியிட (யாவராலும்) தடுத்து நிறுத்தவொண்ணாத வேகமுடையனாய் (இங்கு) வந்துள்ளான். (இது பற்றி) உனது திருவுள்ளக் கருத்துயாதோ?' என(ச் சுக்கிரீவனை நோக்கி)க் கூறினான் (அங்கதன்).

கு:—தேவர் முதலிய யாவராலும் அணுகுதற்கு அரிய பெரியோனாக இருந்தும் குரக்கினத்தாராகிய நாமும் தன்னை அணுகி அன்பு செய்தற்குரிய நிலையில் நமக்கு எளிவந்துதவிய பேரருளாளன் என்பது புலப்பட, 'அவ் இராமன்' எனச் சுட்டினான். அருளாள

ளுகிய அவனுக்கு இளையோனுகிய இலக்குவன், தன் உள்ளத்திற் பொங்கியெழுந்த பெருஞ் சீற்றத்தை அவனது அழகிய முகம்தானே புலப்படுத்திக் காட்டும் நிலையில் இங்கு வந்துள்ளான் என்பான், 'சிந்தையுள் நெடுஞ் சீற்றம் திருமுகம் தந்தளிப்ப வந்தனன்' என்றும், பெருஞ் சீற்றத்துடன் வரும் அவனை நாங்கள் எதிர் நின்று தடுத்தற்கியலாத நிலையில் உள்ளோம் என்பான், 'தடுப்பரும் வேகத்தன் வந்தனன்' என்றும், நின்கீழ்க் குடிகளாகிய யாம் அவன்பால் எவ்வாறு நடந்து கொள்வது என்பதனை எம் வேந்தனுகிய நீயே எமக்கு விரைந்து அறிவுறுத்தல் வேண்டும் என்பான், 'உன் மனக் கருத்து யாது?' என்றும் கூறினன். (24)

**4398.** இனைய மாற்ற மிசைத்தன னென்பதோர்
நினைவி லானெடுஞ் செல்வ நெருக்கவும்
நனைந றுந்துளி நஞ்சு மயக்கவுந்
தனையு ணர்ந்திலன் மெல்லணைத் தங்கினுன்.

இனைய மாற்றம் இசைத்தனன் என்பது ஓர்
நினைவு இலான், நெடுஞ் செல்வம் நெருக்கவும்,
நனை நறுந்துளி நஞ்சு மயக்கவும்
தனை உணர்ந்திலன், மெல் அணைத் தங்கினுன்.

பொ :—(தன்முன் நிற்கும் அங்கதன்) இன்ன வார்த்தையைக் கூறினன் என்பதனை ஓர்ந்து உணரும் நினைவு இல்லாதவனுகிய சுக்கிரீவன், (தான்பெற்ற) அரசாட்சியாகிய பெருஞ் செல்வத்தின் விளைவாகிய மகிழ்ச்சி (தன்னுள்ளத்தில் சுமையாய்த் தங்கி) நெருக்கியதனுலும், நறுமணம் வாய்ந்த திவலையாகிய கள்ளென்னும் நஞ்சு (தன் மனத்தை) மயக்கியதனுலும் தன்னுணர்விழந்தவனுகி, மெத்தென்ற படுக்கையிலே (உறங்கிக்) கிடப்பானுயினுன்.

கு :—தன்முன் நின்ற அங்கதன் இன்னவார்த்தையைக் கூறினன் என்பதனை ஓர்ந்துணரும் நினைவில்லாதவனுயினுன் சுக்கிரீவன் என்பார், 'இனைய மாற்றம் இசைத்தனன் என்பது ஓர் நினைவிலான்' என்ருர். இசைத்தனன் என்றது, அங்கதனைச் சுட்டிய குறிப்பாகும். ஓர் நினைவு - ஓரும் நினைவு. நெடுஞ் செல்வம் - உலகியலிற் பெறுதற்குரிய செல்வங்களுள் எல்லாம் மிக்கதாகிய அரசாட்சி என்னும் செல்வம். காமம் முதலிய குற்றங்களாற் சிறுமையுற்ற உள்ளத்தினேர்க்கு அரசபதவியாகிய இப்பெருஞ் செல்வம் பொறுக்கவொண்ணுத சுமை போன்று நெருக்குமியல்பினதாதல் பற்றி 'நெடுஞ்செல்வம் நெருக்கவும்' என்ருர். 'சிறியோன்

பெறினது சிறந்தன்று மன்னே.........முரசுகெழுதாயத் தரசுகெழு திருவே' (புறம் - 75) என நலங்கிள்ளி கூறிய பொருண்மொழி இங்கு நினைக்கத் தகுவதாகும். நனை - கள். துளி - திவலை. நறுந் துளிநனையாகிய நஞ்சு என்க. கள்ளானது, உயிரினது உணர்வினைக் கெடுத்துச் செயலற்ற தன்மையினை விளைத்தலால், நஞ்செனப் படுவ தாயிற்று. "துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும், நஞ்சுண்பார் கள்ளுண்பவர்" (திருக்குறள் 926) என்றார் தெய்வப் புலவரும். சுக்கிரீவன் தான் பெற்றுள்ள அரச பதவியாகிய செல்வ மிகுதியாலும் கள்ளுண்ட மயக்கத்தாலும் தன்னுணர் விழந்தவ னாய்த் தன்முன் நின்று அங்கதன் கூறும் வார்த்தை யின்னதென் பதனை ஓர்ந்துணரும் நினைவையும் இழந்து படுக்கையில் உறங்கிக் கிடந்தான் என்பதாம். (25)

## அங்கதன் அநுமனிடம் செல்லுதல்

**4399.** ஆத லாலவ் வரசிளங் கோளரி
யாது முன்னின் றியற்றுவ தின்மையாற்
கோதில் சிந்தை யனுமனைக் கூவுவான்
போதன் மேயினன் போதக மேயனான்.

ஆதலால், அவ் அரசு இளங்கோளரி
யாதும் முன் நின்று இயற்றுவது இன்மையால்
கோது இல் சிந்தை அனுமனைக் கூவுவான்
போதல் மேயினன்—போதகமே அனான்.

பொ:—(தான் கூறும் சொற்களைக் கேட்டுணரும் நினைவின்றிச் சுக்கிரீவன் உறங்கிக் கிடந்தனன்) ஆதலால், இளைய யானைக் கன்றினைப் போல்வானும் அரசிளஞ்சிங்கமும் ஆகிய அங்கதன், (உணர்விழந்துறங்கும் தன் சிறிய தந்தையின்) முன் நின்று தன்னாற் செய்யத்தக்கது எதுவும் இல்லாமையால், குற்றமற்ற நெஞ்சினனாகிய அநுமனை அழைத்தற் பொருட்டு (அவன்பாற்) செல்வானாயினான்.

கு:—ஆதலால், போதகமே அனான் அரசிளங்கோளரி, (சுக்கிரீ வன்) முன் நின்று இயற்றுவது யாதும் இன்மையால், அனுமனைக் கூவுவான் போதல் மேயினான் என இயையும். வானர குலமாகிய தன்னினத்தாரைப் பகையால் நலிவெய்தாதபடி பாதுகாக்கவல்ல ஆற்றலுடையோன் அங்கதன் என்பார், 'போதகமே அனான்' என்றார். போதகம் - யானைக்கன்று. அனான் - அன்னான்; இடைக்குறை.

தன்னினத்தை ஓரிடத்திற் கூட்டிப் பகையால் நலியாதபடி பாது காத்தல் ஆண்யானையின் இயல்பென்பது, 'குழூஉப் படூஉப் புறந் தருதல் குஞ்சரத்தியல்பே' (தொல்-எழுத்து. நச்சினார்க்கினியருரை) எனவரும் மேற்கோட் சூத்திரத்தால் இனிது விளங்கும். அரசிளங் கோளரி என்பது, அரசர்களில் இளஞ்சிங்கம் போல்வான் என இளவரசனாகிய அங்கதனைக் குறித்தமைந்த சிறப்புப் பெயர். கோள் அரி - (மாற்றார் உயிரைக்) கொள்ளவல்ல சிங்கம். காமபரவச னாகித் தன்னுணர்விழந்துறங்கிக் கிடக்கும் சிறிய தந்தையாகிய சுக்கிரீவனுக்கு முன்னேநின்று அறிவுறுத்தும் முறையில் மைந்த னாகிய தன்னாற் செய்யத்தக்க உபாயம் எதுவும் இல்லாமையை யெண்ணிய அங்கதன், குற்றமற்ற சிந்தையனாய் நல்லறிவு வழங்க வல்ல சொல்லின் செல்வனாகிய அநுமனை நாடி விரைந்து சென்றான் என்பார், 'யாதும் முன்னின்று இயற்றுவதின்மையாற், கோதில் சிந்தை அனுமனைக் கூவுவான், போதல்மேயினன்' என்றார். கூவுதல் - அழைத்தல். வான், வினையெச்சவிகுதி. இச் செய்யுளின்பின், 1, 2, 12, 13, 16-18, 22, 24, 40, 41, 45, 52, 56-ஆம் பிரதிகளில்,

4399 (a) சென்று மாருதி தன்னிடஞ் சேர்ந்தவண்
நின்ற தன்மைகள் யாவு நிகழ்த்தலும்
வென்றி வீரன் வியப்பொடு மேல்வினை
ஒன்று வானவன் றன்னை யுசாவினான்.

என்று ஒரு பாடல் காணப்படுகிறது. (26)

## அங்கதன், அநுமனுடன் தாரையின் மாளிகையை அடைதல்

**4400.** மந்தி ரத்தனி மாருதி தன்னொடும்
வெந்தி றற்படை வீரர் விராய்வர
அந்த ரத்தின்வந் தன்னைதன் கோயிலை
இந்தி ரற்கு மகன்மக னெய்தினான்.

மந்திரத் தனி மாருதி தன்னொடும்,
வெந்திறல் படைவீரர் விராய் வர,
அந்தரத்தின் வந்து, அன்னைதன் கோயிலை,
இந்திரற்கு மகன்மகன் எய்தினான்.

பொ :—இந்திர குமாரனாகிய வாலியின் மைந்தனாகிய அங்கதன் தக்க ஆய்வுரைகளை வழங்கிய வாயுவின் புதல்வனான அநுமனுடன் கொடுந்திறல் படைத்த சேனைவீரர்கள் தன்னைச் சூழ்ந்துவர,

(அரண்மனையினின்றும்) வெளிப்போந்து தன் தாயாகிய தாரையின் மாளிகையை அடைந்தான்.

கு:—இந்திரற்கு மகன் என்றது, இந்திர குமாரனாகிய வாலியை. மகன் மகன் என்றது, அவ் வாலியின் புதல்வனாகிய அங்கதனை. இனி 'இந்திரற்கு மகன் மகன்' எனவரும் இத்தொடருக்கு, 'இந்திரனுக்குப் பேரனாகிய அங்கதன்' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். இங்ஙனம் கொள்ளுங்கால் மகன்மகன் என்பது, ஒரு சொல் நீர்மையதாய்ப் பேரன் என்ற பொருளில் வழங்கியதாகக் கொள்ளுதல் வேண்டும். மந்திரம் - உசாத் துணையாயினார் நெடிது நினைந்து கூறும் ஆய்வுரை; ஆலோசனை. தன்னை நாடி யடைந்த அங்கதனுக்குச் சூழ்ச்சித்திறத்தில் வல்ல அநுமன் தக்கதோர் ஆலோசனை கூறினான் எனவும், அவன் கூறிய ஆலோசனையின் படியே அங்கதன் தன் அன்னையாகிய தாரையின் உதவியை நாடி அநுமன் முதலியோருடன் அவளது மாளிகையை அடைந்தான் எனவும் இனிது புலப்படுத்துவார், 'இந்திரற்கு மகன்மகன், மந்திரத் தனி மாருதிதன்னொடும் அன்னைதன் கோயிலை எய்தினான்' என்றார் ஆசிரியர். மாருதி - மருத்தின் மைந்தன்; வாயுகுமாரனாகிய அநுமன். அந்தரம் - வெளி. அந்தரம் என்ற சொல்லுக்குத் துன்பம் எனவும் ஆகாயம் எனவும் பொருள்கொண்டு, 'அந்தரத் தின்வந்து' என்பதற்கு 'மனக்கலக்கத்தோடு போந்து' என்றும், 'ஆகாய மார்க்கமாகத் தாவிவந்து' என்றும் பொருளுரைத்தலும் உண்டு. (27)

### 'மேல் செயத்தக்கது என்' என வினவிய அங்கதன் முதலியோரை நோக்கித் தாரை, கூறுதல்

**4401.** எய்தி மேற்செயத் தக்கதென் னென்றலுஞ்
செய்திர் செய்தற் கருநெடுந் தீயன
நொய்தி லன்னவை நீக்கவு நோக்குதிர்
உய்திர் போலு முதவிகொன் றீரென.

எய்தி, 'மேல்செயத் தக்கது என்?' என்றலும்,
'செய்திர் செய்தற்கு அருநெடுந் தீயன;
நொய்தில் அன்னவை நீக்கவும் நோக்குதிர்;
உய்திர் போலும், உதவி கொன்றீர்?' என.

பொ:—(அங்கதன், அநுமன் முதலியோருடன் தாரையை) அடைந்து (நிகழ்ந்தவற்றைச் சொல்லி) 'இனி நம்மாற் செய்யத்

தக்க செயல்யாது?' என வினவிய அளவில், (அவள் அவர்களை நோக்கி) 'செய்யத்தகாத நீண்ட தீச்செயல்களை (ஆராயாது) செய்கின்றீர்கள்; அத் தீவினைகளாலுளவாகும் கேடுகளை விரைவிற் போக்கவும் வழிபார்க்கிறீர்கள். செய்ந்நன்றி கொல்லுதலாகிய மிகப்பெருந் தீங்கினைப் புரிந்த நீவிர் (அதன் பயனாகிய கேட்டி னின்றும்) தப்பி வாழவல்லீரோ' என்று சொல்லி,

கு:—(இந்திரற்கு மகன் மகனாகிய அங்கதன், மாருதிதன்னொடும் அன்னைதன் கோயிலை) எய்தி, 'மேல் செயத்தக்கது என்' என்றலும் (தாரை, அங்கதன் முதலியோரை நோக்கி) 'செய்தற்கு அரும் நெடுந் தீயன செய்திர்; அன்னவை நொய்தில் நீக்கவும் நோக்குதிர்; உதவி கொன்றீர் உய்திர்போலும்' என இடித்துரைத்தாள் என்பதாம். எனா என்னும் வினையெச்சம், 'மீட்டும் ஒன்று விளம்புகின்றாள்' என வரும் அடுத்த செய்யுளில் விளம்புகின்றாள் என்னும் வினையைக் கொண்டு முடியும். செய்தற்கு அரும் - செய்யத்தகாத; அருமை ஈண்டு ஒவ்வாமையை யுணர்த்தி நின்றது. நெடுந்தீயன - தீயன வற்றுள் எல்லாம் கொடுமையால் நீண்டவை; மிகக் கொடிய தீச் செயல்கள். செய்ந்நன்றி மறத்தலுடன் கள்ளுண்டு களித்தல் முதலிய ஏனைய குற்றங்களையும் சேர்த்துத் 'தீயன' எனப் பன்மை யாற் குறித்தாள். அன்னவை - அத்தீவினையால் வரும் கேடுகள். நொய்தில் - விரைவில். பிறர் செய்த நன்றியை மறத்தலாகிய பெருந்தீங்கு புரிந்தவர்களாகிய உங்களுக்கு அத்தீமையால் வரும் கேட்டினின்றும் தப்பிப் பிழைத்தற்கு வழியேயில்லை என்பாள் 'உதவி கொன்றீர் உய்திர் போலும்' என்றாள். உய்திர்போலும் - உய்வீரோ; உய்யமாட்டீர் என்பதாம். 'எந் நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (திருக் குறள்—110) எனவரும் தெய்வப் புலவர் வாய்மொழிப் பொருளை இச் செய்யுளில் ஆசிரியர் எடுத்தாண்டுள்ளமை உணர்ந்து மகிழத்தக்கதாகும். இதுமுதல் ஐந்து செய்யுட்களில் தாரை தன் மகன் அங்கதனையும் அவனுடன்வந்த அநுமன் முதலிய வானர வீரர்களையும் நோக்கிக் கடிந்துரைப்பனவாக அமைந்த கழற்றுரை கள் யாவும், முன்னின்று கேட்கும் அங்கதனையோ அநுமன் முதலி யோரையோ குறித்தனவாகாமல், அவர்கள் எல்லார்க்கும் தலைவ னாகிய சுக்கிரீவனுடைய பொருந்தாச் செயல்களை இகழ்ந்துரைப் பனவாக அமைந்துள்ளமை கூர்ந்து நோக்கத்தக்கதாகும். (28)

**4402.** மீட்டு மொன்று விளம்புகின் றாள்படை
கூட்டு மென்றுமைக் கொற்றவன் கூறிய

நாட்டி றம்பினுந் நாட்டிறம் பும்மெனக்
கேட்டி லீரினிக் காண்டிர் கிடைத்திரால்.

மீட்டும் ஒன்று விளம்புகின்றாள் : "'படை
கூட்டும்' என்று, உமைக் கொற்றவன் கூறிய
நாள் திறம்பின் நும்நாள் திறம்பும்" எனக்
கேட்டிலீர் ; இனிக் காண்டிர் ; கிடைத்திரால்.

பொ:—மீளவும் ஒருவார்த்தை கூறுகின்றாள்: 'சேனைகளைத் திரட்டி வாருங்கள்' என்று உம்மை (நோக்கி) வெற்றிவேந்தனாகிய இராமன் (குறித்துச்) சொல்லிய கால எல்லை தவறுமானால், நும்முடைய வாழ்நாளும் தவறும்' என்று (யான் பலமுறை) சொல்லவும் (அதனைக்) கேட்டு (அதன்படி) நடந்திலீர். இப்பொழுது (நுமது குற்றத்தால் விளையும் பயனை) அநுபவத்திற் காண்பீர்கள்; (தப்ப முடியாதபடி) அகப்பட்டுக் கொண்டீர்கள்.

கு:—''மீட்டும்'' என்பது, பிறிதும் ஒன்று உண்டு என்பதுபட வினைமாற்றாய் நிற்பதோர் இடைச்சொல்" (திருக்கோவை - 57-ஆம் செய்யுள் உரை) என்பர் பேராசிரியர். கொற்றவன் என்றது, வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு அரசளித்த வெற்றிவேந்தனாகிய இராமனை. 'படை கூட்டும்' என்றது, இராமன் கூற்றாகத் தாரை கொண்டு கூறியது. 'கொற்றவன் கூறிய நாள் திறம்பின் நும் நாள் திறம்பும்' என்றது, தாரை, சுக்கிரீவனையும் அங்கதனையும் குறித்துப் பலமுறை கூறிய அறிவுரை. நாள் - இராமன் குறித்த கால எல்லை. திறம்புதல் - கடத்தல். நும்நாள் – நும்முடைய வாழ்நாள். திறம்புதல் - கெடுதல். காணுதல் - அநுபவித்தல். கிடைத்தல் - அகப்பட்டுக் கொள்ளுதல். (29)

**4403.** வாலி யாருயிர் காலனும் வாங்கவிற்
கோலி வாலிய செல்வங் கொடுத்தவர்
போலு மாலும் புறத்திருப் பாரிது
சாலு மாலுங்க டன்மையி னோர்க்கெலாம்.

'வாலியார் உயிர் காலனும் வாங்க, விற்
கோலி, வாலிய செல்வம் கொடுத்தவர்
போலுமால், உம்புறத்து இருப்பார்? இது
சாலுமால், உங்கள் தன்மையினோர்க்கு எலாம்.

பொ:—(என் ஆருயிர்த் தலைவராகிய) வாலியாரது உயிரினை (அவர் பெயர் கேட்டஞ்சிய) கூற்றுவனும் எதிர்நின்று கவர்ந்திடும்படி (தமது) வில்லை வளைத்து ஒண்மையுடைய அரசாட்சிச் செல்வத்தை (உங்களுக்கு)க் கொடுத்துதவியவராகிய இராமபிரானோ (நுமது உதவியை எதிர்பார்த்து நுமது ஊர்ப்) புறத்தே தங்கியிருத்தலாகிய எளிமையுடையவர்? (இவ்வாறு நுமக்குப் பேருதவி செய்தோரைப் போற்று தொழுகும்) இச்செயல் உங்களைப் போலும் (நன்றிமறந்த) தன்மையினோர்க்கு எல்லாம் பொருத்த முடையதேயாகும்.

கு:—தாரை, தன் ஆருயிர் நாயகனாகிய வாலியை 'வாலியார்' என உயர்த்துக் கூறினமை அவள் தன் கணவன்பாற் கொண்ட பேரன் பினையும் நன்மதிப்பினையும் இனிது விளக்கும். 'வாலியார் வழிபடப் பொருந்தினர்' (3: 91: 6) எனவரும் ஆளுடைய பிள்ளையார் அருளிச் செயல் இங்கு நினைக்கத்தக்கதாகும். காலனும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. 'வாலியார் உயிர்காலனும் வாங்க' என்றது, காலனும் வாலி யின் உயிரைத் தன் வன்மையாற் பறித்துக் கொண்டானல்லன்; இராமனது அம்பு உயிரைப் பிரித்துக்கொடுக்க எதிர்நின்று வாங்கி னன் என்னும் குறிப்புணர நின்றது. விற்கோலி - வில்லை வளைத்து. அம்பு தொடுத்த செய்தியைக் கூறாது விட்டாள்; தன் கணவனுயிர்க்கு இடர் விளைத்த அக்கொடுஞ் செய்தியைக் கூறுதற்குத்தன் நெஞ்சம் இடந்தராமையால். வாலிய செல்வம் - ஒளியுடைய செல்வம்; என்றது, அரசாட்சியாகிய பெருஞ் செல்வத்தை. வாலிக்கு உரியதாய செல்வம் என்றலும் ஒன்று. 'செல்வம் கொடுத்தவர் போலும் உம்புறத்து இருப்பார், என்புழிப் போலும் என்பது, வினாப் பொருட்டாய் நின்றது. உம் தன்மையினோர்க்கு எலாம் இது சாலும்—உங்களைப் போலும் (நன்றிமறந்த) தன்மையினோர்க்கு எல்லாம் இச்செயல் பொருத்த முடையதேயாகும். ஆல்- அசை. (30)

**4404.** தேவி நீங்கவத் தேவரிற் சீரியோன்
ஆவி நீங்கினன் போலயர் வானது
பாவி யாது பருகுதிர் போலுநுங்
காவி நாண்மலர்க் கண்ணியர் காதனீர்.

'தேவி நீங்க, அத்தேவரின் சீரியோன்
ஆவி நீங்கினன்போல் அயர்வான்; அது
பாவியாது, பருகுதிர்போலும், நும்
காவி நாள்மலர்க் கண்ணியர் காதல்நீர்.

பொ :—தேவர்களினும் சிறந்த மேலோனாகிய அவ் இராம பிரான் (தன்) இன்னுயிர்த் தேவியாகிய சீதைபிரிய உளதாகிய துன்பத்தினால் உயிர்நீங்கினான் போன்று (உயிர்ப்படங்கி) வருந்து கின்றான். அவனது துயர் நிலையை (நீங்கள்) மனத்திற்கொள்ளாது நும்முடைய அன்றலர்ந்த கருங்குவளை மலர்போலும் கண்களை யுடையராகிய உரிமைமகளிரது அன்புச் சேர்க்கையாகிய இன்ப நுகர்ச்சியைத் துய்த்து மகிழ்கின்றீர்போலும்.

கு :—அத்தேவரிற் சீரியோன், தேவிநீங்க, ஆவி நீங்கினன் போல் அயர்வான்; அது பாவியாது, நும் காவி நாண்மலர்க் கண்ணியர் காதல் நீர் பருகுதிர்போலும் என இயைத்துப் பொருள் கொள்க. அது—(இராமனது) அத் துயர்நிலையை. பாவித்தல் - மனத்திற் கொள்ளுதல்; எண்ணிப்பார்த்தல். பாவியாது - எண்ணிப் பாராமல். காவி - கருங்குவளை. நாண்மலர் - அன்றலர்ந்த மலர். காதல்நீர் - அன்பின் வழிப்பட்ட இன்ப ரசம். பருகுதல் - நுகர்தல். இராமன், இவ்வுலக மக்களுள் ஒருவனாகத் தோன்றினான் எனினும் தான்பிறந்த மக்களினத்தையே யன்றி மற்றைய நல்லுயிர்களையும் வானுலகில் வாழும் தேவர்களையும் இடர்நீக்கி உய்வித்தருளவல்ல அறத்தின் மூர்த்தியாகத் திகழும் சீர்த்தியுடையோன் என்பாள், 'அத்தேவரிற் சீரியோன்' என்றாள். தேவரினும் மேம்பட்ட மேலோனாகிய அவ் இராமன், தன் வாழ்க்கைத் துணைவியாகிய சீதை நீங்க இன்னுயிர் நீங்கினானைப்போன்று உயிர்ப்படங்கி வருந்து கின்றான்; அவனுடைய பேருதவியால் அரசாட்சியினைப் பெற்று மகிழும் நீரோ, நுமக்கு வாழ்வளித்த அருளாளனாகிய அவனது துயர்நிலையை ஒரு சிறிதும் எண்ணிப்பாராமல் நும்முடைய உரிமை மகளிருடன் காதலாற்களித்துப் பொழுது போக்குகின்றீர்கள். இச்செயல் நுமக்குத் தக்கதாகுமோ' எனத் தாரை அங்கதன் அநுமன் முதலியோரை நோக்கி, அவர்கட்குத் தலைவனாகிய சுக்கி ரீவனது நன்றியொடு படாத கடமைதவறிய பொருந்தாச் செயல் களைக் கண்டித் துரைத்தாள் என்பதாம். (31)

4405. திறம்பி னீர்மெய் சிதைத்தீ ருதவியை
நிறம்பொ லீருங்கள் தீவினை நேர்ந்ததால்
மறஞ்செய் வானுறின் மாளுதிர் மற்றினிப்
புறஞ்செய் தாவதெ னென்கின்ற போதின்வாய்.

'திறம்பினீர் மெய்; சிதைத்தீர் உதவியை;
நிறம்பொலீர்; உங்கள் தீவினை நேர்ந்ததால்,

மறம் செய்வான் உறின், மாளுதிர்; மற்று இனிப்
புறஞ்செய்து ஆவது என்?' என்கின்ற போதின்வாய்'

பொ:—வாய்மையினின்றும் தவறினீர்; பிறர் செய்த நன்றியைக் கொன்றீர்; குணங்கெட்டவராயினீர்; உங்களாற் செய்யப் பட்ட தீவினை (தன் பயனைத்தருதற்கு உங்களை) எதிர்ப்பட்டு நெருங் கியது. (இராமன் முதலியோர் நும்மொடு) மறத்திறற் போர் செய்ய முற்படின் (நிச்சயமாக) இறந்தொழிவீர்; இனி நும்மைப் பாதுகாத்துக் கொள்ள முயலுவதால் விளையும் பயன் யாது? (ஒன்று மில்லை) என்று (தாரை அங்கதன் முதலியோரை நோக்கிக்) கண்டித் துரைக்கும் வேளையில்,

கு:—இச் செய்யுள் குளகம்; என்கின்ற போதின் வாய், 'குரக் கினம் நெடுவாயிலைத் தாளுறுத்தித் தடவரைதந்தன அடுக்கின' என அடுத்த செய்யுளொடு தொடர்ந்து முடியும். மெய்திறம்பினீர், உதவியைச் சிதைத்தீர் என மாற்றிப் பொருள்கொள்க. மெய் - வாய்மை. திறம்புதல் - மாறுபடுதல். இராமன் குறித்த கால எல்லையுட் படையொடு துணைவருவதாக இசைந்த சுக்கிரீவன் தான் சொன்ன எல்லையுட் செல்லத் தாழ்த்தமையைச் சுட்டி 'மெய்திறம்பினீர்' என்றும், அங்ஙனம் தாமதித்தமை இராம இலக்கு வர் செய்த நன்றியை மறந்த தீச்செயலாயிற்று என்பதுபட 'உதவியைச் சிதைத்தீர்' என்றும், இவ்வாறு வாய்மையிற்றவறி நன்றியையும் மறந்தமையால் நுமக்கு இயல்பாக அமைந்த நற் பண்புகள் நீங்க இழிகுண முடையராயினீர் என்பாள் 'நிறம் பொல்லீர்' என்றும் கூறினாள். நிறம் - குணம். நேர்தல் - எதிர்ப் படுதல். மறம் - வீரம்; வீரத்தின் விளைவாகிய போர்த் தொழில். புறஞ் செய்தல் - பாதுகாத்தல். 'புண்கொண்டு போற்றிப் புறஞ் செய்கெனப் பொற்ப நோக்கி' (சீவக - 2353) என்புழி, புறஞ் செய்தல் இப்பொருட்டாதல் அறிக. (32)

## குரங்குகள், கிட்கிந்தை வாயிலின் கதவைத் தாளிட்டுப் பெரும் பாறைகளைப் பெயர்த்து அடுக்கிப் போர் செய்தற்கு ஆயத்தமாதல்

**4406.** கோளு றுத்தற் கரிய குரக்கினம்
நீளெ ழுத்தொட ருந்நெடு வாயிலைத்
தாளு றுத்தித் தடவரை தந்தன
மூளு றுத்தி யடுக்கின மொய்ம்பினால்.

கோள் உறுத்தற்கு அரிய குரக்கினம்,
நீள் எழுத் தொடரும் நெடு வாயிலைத்
தாள் உறுத்தி, தடவரை தந்தன,
மூளுறுத்தி அடுக்கின, மொய்ம்பினால்.

பொ :—(யாவராலும் வலிந்து) கைப்பற்றிக் கொள்ளுதற்கு அரிய (ஆற்றலுடையன வாகிய) குரங்கினங்கள், நீண்ட உழலை மரத்தொடு பொருந்திய நெடிய வாயிற்கதவைத் தாளிட்டு இறுக்கித் தமது பெருவன்மையினால் பெரிய மலையிற் பாறைகளைப் பெயர்த்தெடுத்துக் கொணர்ந்தனவாய், ஊக்கத்துடன் முற்பட்டு அடுக்கின.

கு:—கோளுறுத்தல் - வலிந்து பற்றிக்கொள்ளுதல். குரங்கு+இனம்=குரக்கினம் என மெல்லெழுத்து வல்லெழுத்தாய்த் திரிந்தது. எழு - உழலைமரம்; வெளியிலுள்ளார் கதவினைத்திறந்து உட்புகாதவாறு கதவையொட்டி உள்வாயிற்படியிற் குறுக்கிட்டுத் தடுக்கும்படி அமைக்கப்படும் தடைமரம். நெடுவாயில் என்றது, அவ்வாயிலில் அமைந்த கதவினை. தாளுறுத்தல் - தாழிட்டு இறுக்குதல். மூள்தல் - ஊக்கத்துடன் முற்படுதல். மொய்ம்பு - வலிமை. வெகுண்டு வரும் இலக்குவனைக் கிட்கிந்தையினுள்ளே புகாதபடி தடுக்க எண்ணிய குரங்கினங்கள், நகரத்தின் நெடிய வாயிற்கதவினைத் தாளிட்டு உழலை மரத்தினைக் குறுக்காக இட்டு அவ்வாயிலின்கண் பெரும் பாறைகளைக் கொண்டுவந்து ஒன்றன்மேலொன்றாக அடுக்கிப் பாதுகாப்பமைத்தன என்க. (33)

**4407.** சிக்கு றக்கடை சேமித்த செய்கைய
தொக்கு றுத்த மரத்த துவன்றின
புக்கு றுக்கிப் புடைத்து மெனப்புறம்
மிக்கி றுத்தன வெற்பு மிறுத்தன.

சிக்குறக் கடை சேமித்த செய்கைய,
தொக்குறுத்த மரத்த; துவன்றின;
'புக்கு உறுக்கிப் புடைத்தும்' என, புறம்
மிக்கு இறுத்தன; வெற்பும் இறுத்தன.

பொ :—(நகரத்துப்) புறவாயிலை உறுதியாகப் போற்றிக் காக்கும் செயலை யுடையனவாகிய குரங்குகள், (இலக்குவன் இவ்வாயிலைக் கடந்து உள்ளே நுழைய முற்படுவானாயின்) எதிர் சென்று புகுந்து உரப்பிப் புடைப்போம் என்று எண்ணி நிறைந்து கூடினவாய்த் தொகுதியாகப் பறித்தெடுத்த மரங்களைக் (கையிற்) கொண்டனவும

மலைகளையும் உடைத்தெடுத்துக் கொண்டனவும் ஆகி வாயிலின் புறத்தே மிகுதியாகத் தங்கியிருந்தன.

கு :—கடை சிக்குறச் சேமித்த செய்கைய, 'புக்கு உறுக்கிப் புடைத்தும்' எனத் துவன்றின; தொக்குறுத்த மரத்த; வெற்பும் இறுத்தன; புறம் மிக்கு இறுத்தன என இயையும். கடை - புற வாயில். சிக்குற - உறுதியாக. சேமித்தல் - போற்றிக் காத்தல். 'சிக்குறச் சேமஞ்செய்தாள்' (ஆரணிய - சடாயுவுயிர் - 69) என்றார் முன்னரும். துவன்றுதல் - நிறைதல். உறுக்குதல் - உரப்புதல்; அதட்டுதல். புடைத்தல் - அடித்தல். இறுத்தல் - இரண்டனுள் முன்னையது தங்குதல் என்னும் பொருளது; பின்னையது உடைத்தல் என்னும் பொருளது. (34)

இச்செய்யுளின் பின், 45, 52 என்னும் எண்ணுள்ள பதிப்புக்களில் பின்வரும் பாடலொன்று மிகைப்பாடலாக வெளியிடப் பெற்றுள்ளது :—

மேவி னான்கடை சேமித்த மென்மைகண்
டோவி லாமனத் துன்னின னெங்கள்பால்
பாவி யார்கடம் பற்றிது வோவெனாத்
தேவ ரானுஞ் சினத்தொடு நோக்கியே.

## இலக்குவன் சினந்து உதைக்க, காவல் மதிலும் கதவு முதலியனவும் சிதைந்து அழிதல்

**4408.** காக்க வோகருத் தென்று கதத்தினாற்
பூக்க மூரற் புரவலர் புங்கவன்
தாக்க ணங்குறை தாமரைத் தாளினால்
நூக்கி னானக் கதவினை நொய்தினின்.

'காக்கவோ கருத்து?' என்று, கதத்தினால்
பூக்க மூரல், புரவலர் புங்கவன்,
தாக்கணங்கு உறை தாமரைத் தாளினால்,
நூக்கினான் அக்கதவினை நொய்தினின்.

பொ :—அரசரிற் சிறந்தோனாகிய இலக்குவன், ('நம்மை உள்ளே நுழையாதபடி தடுத்துத் தங்களைப்) பாதுகாத்துக்கொள்ளுதற்கோ (இக்குரங்குகள்) கருதியது ?' என்று எண்ணி(த் தன் உள்ளத்தெழுந்த) வெகுளியினால், புன் சிரிப்புத் தோன்ற (அறவோரை அருளினாற்) பற்றியிருக்கும் திருமகள் விரும்பியுறையும் செந்தாமரை

மலர்போன்ற தன் பாதத்தால் அவ்வாயிற் கதவினை விரைவில் உந்தித்தள்ளினன்.

கு :—புரவலர் புங்கவன், 'காக்கவோ கருத்து ?' என்று, கதத்தினால், மூரல் பூக்க, தாமரைத் தாளினால், அக்கதவினை நொய்தினின் நூக்கினன் என இயையும். கதம் - கோபம். மூரல் - புன்சிரிப்பு; பூத்தல் - தோன்றுதல். இது, பிறர்கண் தோன்றிய பேதைமை பொருளாகத் தோன்றிய நகை. புங்கவன்-சிறந்தோன். 'தாக்கணங்கு உறை' என்பது தாமரைக்கு அடையாய் நின்றது. 'தாக்கணங் குறையுந்தடந்தாமரைப் பூக்கணம்' (சீவக. 871) என்றார் திருத்தக்கதேவரும். இத்தொடர்க்கு 'எல்லாரிடத்தினும் சென்று சேரும் திருத் தங்கும் தாமரைப் பூக்கணம்' எனப் பொருள் கூறினர் நச்சினார்க்கினியர். தாக்கணங்கு - அறஞ்செய்வோர்பால் அருளினாற் பற்றியிருக்கும் திருமகள் என்க. தாக்குதல் - பற்றியிருத்தல். 'அகனமர்ந்து செய்யாளுறையும் முகனமர்ந்து, நல்விருந்தோம்புவா னில்' (திருக்குறள் - 84) என்றார் தெய்வப்புலவரும்.

இனி, 'தாக்கணங்கு' என்பதற்குப் போரிற் பகைவரைத் தாக்கி வருத்தும் பேராற்றலை வழங்கும் வீர இலக்குமி எனப் பொருள் கொண்டு, அத்தகைய வெற்றித் திருவின் ஆற்றல் பொருந்தியுள்ள தன் பாதத்தால் இலக்குவன் அக்கதவினை நொய்தின் நூக்கினன் எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். இப்பொருட்குத் 'தாக்கணங்குறைதாள்; தாமரைத்தாள் எனத் தனித்தனி இயைத்துரைக்க. இலக்குவன் செந்தாமரை மலர்போலும் மென்மை வாய்ந்த தன் பாதத்தினால் கிட்கிந்தை நகரத்தின் வன்மை வாய்ந்த வாயிற்கதவினை விரைவில் உந்தித் தள்ளினன் என்பதாம். (35)

**4409.** காவன் மாமதி லுங்கத வுங்கடி
மேவும் வாயி லடுக்கிய வெற்பொடுந்
தேவு சேவடி தீண்டலுந் தீண்டரும்
பாவ மாமெனப் பற்றழிந் திற்றவால்.

காவல் மாமதிலும், கதவும், கடி
மேவும் வாயில் அடுக்கிய வெற்பொடும்,
தேவு சேவடி தீண்டலும், தீண்ட அரும்
பாவம் ஆம் என, பற்று அழிந்து இற்றவால்.

பொ :—வழிபடு தெய்வத்தின் செவ்விய திருவடி (சிந்தையிலும் சென்னியிலும்) பொருந்திய அளவில், அணுகுதற்கு அரிய (வெம்மை வாய்ந்த) தீவினைகள் (கெட்டொழியுமாறு) போன்று, (இலக்குவன் தன் பாதத்தினால் கதவினைத் தள்ளிய அளவில்) கிட்கிந்தை நகரத்துக் காவலாக அமைந்த பெரிய மதிலும், (வாயிற்) கதவும், பாதுகாப்பமைந்த வாயிலில் அடுக்கப்பட்டிருந்த பெரும் பாறைகளுடன் பற்றுக்கோடின்றி முழுவதும் சிதைந்தழிந்தன.

கு :—புரவலர் புங்கவன், தாமரைத்தாளினால் அக்கதவினை நூக்கினான், (அவ்வளவில்) தேவு சேவடி தீண்டலும் தீண்ட அரும் பாவமாம் என, காவல் மாமதிலும், கதவும், கடி மேவும் வாயில் அடுக்கிய வெற்பொடும் பற்றழிந்து இற்ற என இயைக்க. இலக்குவனது பாதம் பட்ட அளவில் மதிலும் வாயிற்கதவும் அடுக்கிய வெற்பொடும் சார்பின்றிச் சிதைந்தழிந்தமைக்கு, இறைவனது திருவடி தீண்டிய அளவில் அடியார்களின் பண்டைத் தீவினைகள் முழுவதும் பொன்றக் கெட்டொழிதலை ஆசிரியர் இங்கு உவமையாகக் கூறினார். மா - பெரிய. கடி - காவல். தேவுசேவடி - இறைவனது (செந்தாமரை மலர்போலும்) செம்மை வாய்ந்த திருவடி ; என்றது அம்முதல்வனது திருவருளை. தீண்டுதல் - பொருந்துதல். தீண்ட அரும் பாவம் - அணுகுதற்கு அரிய கொடுமையுடைய தீவினை. பற்றழிந்து இறுதல் - சார்பு கெட்டழிதல். 'பரவுவார் பாவம் பறைக்கும் அடி' (6-6-1) என்பது அப்பர் அருள்மொழி. இளையபெருமாளும் சுக்கிரீவனும் சந்தித்தற்குத் தடையாய் நின்ற, காவல் மதில், வாயிற்கதவு, அடுக்கிய வெற்பு என்னும் மூன்று பொருள்கட்கும், இறைவனை உயிர் தலைப்படுவதற்குத் தடைகளாயுள்ள மூவகைத் தீவினைகளையும் ஆசிரியர் உவமையாகக்கொள்ள வைத்தார் என இப்பாட்டிற்கு நயம் கூறுதலும் உண்டு. (36)

### குரங்குகள் அஞ்சிச் சிதறியோடுதல்

4410. நொய்தி னோன்கத வும்முது வாயிலுஞ்
செய்த கன்மதி லுந்திசை யோசனை
ஐயி ரண்டி னளவடி யற்றுக
வெய்தி னின்ற குரக்கும் வெருக்கொளா.

நொய்தின் நோன் கதவும், முது வாயிலும்,
செய்த கல் மதிலும், திசை, யோசனை
ஐஇரண்டின் அளவு அடி அற்று உக,
வெய்தின் நின்ற குரக்கும், வெருக் கொளா.

பொ :—வன்மைவாய்ந்த (வாயிற்) கதவும், பழமை வாய்ந்த (கிட்கிந்தை நகரத்தின்) வாயிலும், கற்களால் அமைக்கப்பட்ட (திண்ணிய) மதிலும், எல்லாப் பக்கங்களிலும் பத்து யோசனை தூரம் அடியோடு சாய்ந்து விரைவில் விழுந்தமையால் (அங்குப் போர் செய்யும் நோக்கத்தினால்) வெகுளியுடையனவாய் நின்ற குரங்கினங்களும் அச்சங்கொண்டு,

கு :—'வெருக்கொளா' என்னும் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம், அடுத்த செய்யுளில் உள்ள 'இரியலுற்றன' என்னும் வினைமுற்றைக்கொண்டு முடியும். இனி, இச்செய்யுளில் 'வெய்தின் நின்ற' என்பதனைப் பெயரெச்சமாக்காமல், 'வெம்மையுடையனவாய்க் கலங்கி நின்றன' என முற்றுக்கி, 'குரக்கும் வெருக்கொளா, வெய்தின் நின்ற' என முடித்தலும் உண்டு. உகுதல் - விழுதல். 'உக' என்னும் செயவென்னெச்சம் காரணப் பொருளில் வந்தது. 'செய்த கல் மதில்' என்ற தொடர், முன்னமே அந்நகரத்திற்கு அரணாகச் செய்யப்பட்டுள்ள திண்ணிய மதிலையும், இலக்குவன் வெகுண்டு வந்த இந்நிலையிற் குரங்குகளால் மலைகளை யடுக்கிச் செய்யப்பட்ட புதிய பாதுகாப்பையும் ஒருங்கே குறிப்பதாகும். வெய்தின் நிற்றல் - வெகுண்டு நிற்றல். குரங்கு என்னுஞ் சொல், பின்வரும் 'வெருக்கொளா' என்னும் சொல்லொடு பொருந்த எதுகையின்பம் நோக்கிக் 'குரக்கு' எனத் திரிந்து நின்றது. வெரு - அச்சம். (37)

**4411.** பரிய மாமதி லும்படர் வாயிலும்
சரிய வீழ்ந்த தடித்தின் முடித்தலை
நெரிய நெஞ்சு பிளப்ப நெடுந்திசை
இரிய லுற்றன விற்றில வின்னுயிர்.

பரிய மா மதிலும், படர் வாயிலும்
சரிய வீழ்ந்த தடித்தின், முடித்தலை
நெரிய, நெஞ்சு பிளப்ப, நெடுந்திசை
இரியலுற்றன ; இற்றில இன் உயிர்.

பொ:—அகன்றுயர்ந்த மதிலும் (அதனைத்) தொடர்ந்து அமைந்த வாயிலும் (கட்டுக் குலைந்து) சரிந்து விழுந்தனவாகிய இடியினால், (குரங்குகள்) உச்சந்தலை நெரிபட, நெஞ்சம் பிளந்தாலொத்துக் கலக்கமுற, நெடுந்தூரம் விரைந்தோடின (ஆதலால் தம்) இனிய உயிர் நீங்காதனவாய்(த்தப்பி) உய்ந்தன.

கு :—பரிய - பருமையுடைய. மா - பெரிய. பருமை, மதிலின் அகலத்தினையும் பெருமை, உயரத்தினையும் குறித்தன. சரிதல் - கட்டுக்குலைதல். மதில் முதலியன சரிந்து விழுதல் இடி வீழ்தலை யொத்துத் தோன்றின. முடி - உச்சி. முடித்தலை - உச்சந்தலை. தடித்து - மின்னல்; ஈண்டு அதனொடு சம்பந்தமுடைய இடியென்னும் பொருளில் ஆளப்பெற்றது. மேற்செய்யுளில் வந்த குரக்கும் என் பதனை எழுவாயாக்கி, குரக்கும் தடித்தின் முடித்தலை நெரிய, நெஞ்சு பிளப்ப, இரியலுற்றன, இன்னுயிர் இற்றில என முடிக்க. இரிய லுற்றன ஆதலால் இன்னுயிர் இற்றில என்க. (38)

**4412.** பகர வேயு மரிது பரிந்தெழு
புகரில் வானர மஞ்சிய பூசலாற்
சிகர மால்வரை சென்று திரிந்துழி
மகர வேலையை யொத்தது மாநகர்.

பகரவேயும் அரிது ; பரிந்து எழு
புகர் இல் வானரம் அஞ்சிய பூசலால்,
சிகர மால்வரை சென்று திரிந்துழி
மகர வேலையை ஒத்தது, மாநகர்.

பொ :—வருந்தி ஓடிய குற்றமற்ற குரங்குகள் பயந்து அரற்றிய பேரொலியினால், பெரிய கிட்கிந்தை நகரம், சிகரங்களையுடைய பெரிய மந்தரமலை (மத்தாக உள்ளே) சென்று சுழன்றபோது மகர மீன்களையுடைய கடல் (பேரிரைச்சலுடன் அலைந்தாற்) போன்று தோன்றியது. (அந்நகரிற் குரங்குகள் உற்ற பெருந்துன்பம்) சொல்லால் வெளியிட்டுரைத்தற்கும் இயலாததொன்ரும்.

கு :—குரங்கள் அடைந்த பெருந்துன்பம் சொல்லுக்கும் அடங் காதது என்பார், 'பகரவேயும் அரிது' என்ருர். பரிதல் - வருந்துதல். புகர் இல் - குற்றம் இல்லாத. பூசல் - துன்புற்ருேர் அஞ்சியரற்றும் பேரொலி. கடலானது, மந்தர மலையென்னும் மத்தினுற்கடையப் பட்ட நிலையில் அக்கடலினுள்ளே வாழும் மகர மீன்கள் துன்புற்று வருந்தினாற்போன்று, கிட்கிந்தை நகரத்து மதில் முதலியன இடிந்து சிதறும்படி இலக்குவனால் உந்தித் தள்ளப்பெற்ற நிலையில், அந்நக ரத்திலுள்ள வானரங்கள் அஞ்சி அலமந்து அரற்றி வருந்தின என் பதாம். (39)

**4413.** வான ரங்கள் வெருவி மலையொரீஇக்
காஞெ ருங்கு படரவக் கார்வரை
மீனெ ருங்கிய வானக மீனெலாம்
போன பின்பொலி வற்றது போன்றதே.

வானரங்கள் வெருவி, மலை ஒரீஇ,
கான் ஒருங்கு படர, அக் கார்வரை,
மீன் நெருங்கிய வானகம், மீன் எலாம்
போனபின், பொலிவு அற்றது போன்றதே.

பொ :—குரங்குகள் மிகவும் பயந்து (கிட்கிந்தை) மலையை விட்டு நீங்கி ஒரு சேரக் காடுகளிற் சென்று சேர்ந்தமையால், மேகந்தவழும் அம்மலையானது, நட்சத்திரங்கள் செறிந்து நிறையப்பெற்ற நீல வானம், அம் மீன்கள் எல்லாம் நீங்கின பின்பு அழகிழந்த தன்மையைப் போன்று (பொலிவிழந்து) காணப்பட்டது.

கு :—வெருவி - அஞ்சி. ஒரிஇ - நீங்கி. படர்தல் - செல்லுதல். 'படர' என்னும் செயவெனெச்சம் காரணப் பொருளது. கார் - மேகம். வரை - மலை. அக்கார்வரை என்றது, மேலே சொல்லப்பட்ட அந்தக்கிட்கிந்தை மலையை. மீன் - விண்மீன்; நட்சத்திரம். கிட்கிந்தை மலையில் வாழும் குரங்குகள் பலவும் இலக்குவனைக் கண்டு மிகவும் பயந்து அம்மலையைவிட்டு நீங்கிக் காடுகளிற் சென்றொளிந்தமையால் அக்குரங்குகள் நீங்க வெறுவிதாகிய அக்கிட்கிந்தை மலை, நட்சத்திரங்கள் இல்லாத வானத்தைப் போன்று பொலிவிழந்து காணப்பட்டது என்றவாறு. (40)

### வாயிற் கதவினைத் தள்ளி நகரத்தினுள் இலக்குவன் வருதல் கண்டு அங்கு நின்றோர், 'இனி என் செய்வது?' எனத் தாரையை வினவுதல்

**4414.** அன்ன காலையி னாண்டகை யாளியும்
பொன்னி னன்னகர் வீதியிற் புக்கனன்
சொன்ன தாரையைச் சுற்றினர் நின்றவர்
என்ன செய்குவ தெய்தின னென்றனர்.

அன்ன காலையின், ஆண்டகை ஆளியும்,
பொன்னின் நல்நகர் வீதியிற் புக்கனன்;
சொன்ன தாரையைச் சுற்றினர் நின்றவர்,
"என்ன செய்குவது? எய்தினன்" என்றனர்

பொ :—அப்பொழுது ஆடவர்களிற் சிங்கம்போல்வானுகிய இலக்குவனும், பொன்மயமான நல்ல (கிட்கிந்தை) நகரத்தின் வீதியினுள்ளே புகுந்தான். (அந்நிலையில்) இடித்துரை கூறிய தாரையைச் சூழ்ந்து நின்றவராகிய வானரவீரர்கள், ('அந்தோ இலக்குவன்) வந்து விட்டானே! (இனி நாம்) என்ன செய்வது' என்று (மனம் நடுங்கிக்) கூறினுர்கள்.

கு :—ஆண் தகை ஆளி – ஆடவர்களிற் சிங்கம் போல்வான்; என்றது, இலக்குவனை. 'ஆண்டகை யாழியான்' எனப் பாடங் கொண்டு, 'ஆடவர்களிற் சிறந்தோனுகிய இராமனது ஆணைச் சக்கரத்தை ஒத்தவனுகிய இலக்குவன்' எனப் பொருளுரைத்தலும் உண்டு. இராமனது ஆணையாகிய அதிகாரம் யாண்டும் தடையின்றிச் செல்லுதற்குத் தான் வாயிலாக அமைந்தமைபற்றி இலக்குவனை இராமனது ஆணைச் சக்கரமாக உருவகித்தார் ஆசிரியர். 'ஆணையின் ஏகுவான்' (கிட்கிந்தை - 10.) என முன்னருங் கூறியுள்ளமை ஈண்டு நினைக்கத்தக்கதாகும். சொன்ன தாரையை - (அங்கதன் முதலியோரை இடித்துக்) கூறிய தாரை என்பவளை. சுற்றினர் நின்றவர் - சூழ்ந்து நின்றவர்களாகிய வானர வீரர்கள். சுற்றினர் - சுற்றி; முற்றெச்சம். 'எய்தினன், என்ன செய்குவது? என்றனர்' என இயையும். (41)

### அநுமன் தக்கதோர் உபாயங் கூறுதல்

**4415.** அனையெ திர்ந்திவ ணுய்வளை யாரொடு
மனையின் வாயில் வழியினை மாற்றினுல்
நினையும் வீரனந் நீணெறி நோக்கலான்
வினைய மீதென் றனுமன் விளம்பினுன்.

'அனை! எதிர்ந்து இவண் ஆய்வளையாரொடும்
மனையின் வாயில் வழியினை மாற்றினுல்,
நினையும் வீரன் அந்நீள்நெறி நோக்கலான்;
வினையம் ஈது' என்று அனுமன் விளம்பினுன்.

பொ :—(அப்பொழுது) அநுமன் (தாரையை நோக்கி) 'அன்னையே! ஆராய்ந்தணிந்த அழகிய வளையலையுடைய மகளிர் கூட்டத்துடன் நீ இங்கு (இலக்குவன்) எதிரிற்சென்று (அவன் சுக்கிரீவனது) அரண்மனை வாயிலில் (உள்ளே புகவொட்டாதபடி) நின்று வழியைத் தடை செய்தால், சிந்திக்கும் நல்லறிவுடைய பெரு வீரனுகிய அவ் இலக்குவன் மகளிர் பலர் கூடி நிற்கும் அந்நீண்ட வழியினைக்

கண்ணுற் பார்க்கவும் கூசித் திரும்பி விடுவான். (இப்பொழுது) செய்யத்தக்க உபாயம் இதுவேயாகும்' என்று கூறினன்.

கு :—அனை - அன்னை; இடைக்குறை. அன்னை, அண்மைவிளி. எதிர்தல் - எதிர்செல்லுதல். மாற்றுதல் - தடை செய்தல். மனை வாழ்க்கை இன்பத்தினை அறவே துறந்து தமையனுடன் வனம் புகுந்து இராமனுக்கு அடித்தொண்டு புரிதலொன்றுமே தனது கடமையெனக்கொண்ட தவநெறிச் செல்வன் இலக்குவன் என்றும், அவன் ஆற்றல் மிக்க வீரரை எதிர்த்துப் பொருவதன்றித் தம்மைக் காத்துக்கொள்ளும் உடல் வன்மையில்லாத மெல்லியலாராகிய மகளிரை வெகுண்டொறுத்தல் வீரமாகாது என்ற உண்மையினை நினைந்து ஒழுகவல்ல பெருவீரன் என்றும் இனிது புலப்படுத்துவான், 'நினையும் வீரன்' என இலக்குவனை அநுமன் சிறப்பித்துக் கூறினன். வினையம் - அறிவின் துணைகொண்டு ஆராய்ந்து இயற்றத் தகுந்த உபாயம்; தந்திரம். (42)

## தாரை, மகளிர் கூட்டத்துடன் இலக்குவனை நோக்கிச் சென்று, அவன் வரும் வழியினைத் தடை செய்து நிற்றல்

**4416.** நீரெ லாமய னீங்குமி னேர்ந்தியான்
வீர னுள்ளம் வினவுவ னென்றலும்
பேர நின்றனர் யாவரும் பேர்கலாத்
தாரை சென்றன டாழ்குழ லாரொடும்.

**'நீர் எலாம் அயல் நீங்குமின்; நேர்ந்து, யான்,
வீரன் உள்ளம் வினவுவன்' என்றலும்,
பேர நின்றனர், யாவரும்; பேர்கலாத்
தாரை சென்றனள் தாழ்குழலா ரொடும்.**

பொ :—(தாரை தன்னைச் சூழ்ந்துநின்ற வானர வீரர்களை நோக்கி) 'நீங்கள் எல்லீரும் (இவ்விடத்தைவிட்டு நீங்கி) அப்பாற் செல்லுங்கள். நான் (இலக்குவன்) எதிரிற்சென்று வீரத்தில் வழுவாதவனாகிய அவனது மனக் கருத்தைக் கேட்டு அறிந்துகொள்வேன்' என்று கூறிய அளவில், வானர வீரர் அனைவரும் (அவள் பணித்தவண்ணம்) அவ்விடத்தைவிட்டு விலகி நின்றார்கள். (தனது உறுதியான கொள்கையினின்றும்) பின்னிடாத பெருமையுடையவளாகிய தாரை என்பவள், தாழ்ந்து அசையும் (நீண்ட) கூந்தலையுடையராகிய மகளிர் கூட்டத்துடன் (இலக்குவனை நோக்கி) எதிரே சென்றாள்.

கு :—'நீர் எலாம் அயல் நீங்குமின், யான் நேர்ந்து வீரன் உள்ளம் வினவுவன்' என்றலும், யாவரும் பேர நின்றனர்; பேர்கலாத் தாரை, தாழ்குழலாரொடும் சென்றனள் - என இயைத்துப் பொருள் கொள்க. தாரை, தன்னைச் சூழ்ந்து நின்ற வானர வீரர்களை நோக்கி 'நீர்எலாம் அயல் நீங்குமின்' எனப் பணித்தாள். நேர்தல் - எதிர்ப்படுதல். வீரன் என்றது, இலக்குவனை; 'மறன் இழுக்கா மானம் உடையோன்' என்பது குறிப்பு. பேரநிற்றல்-இடம் பெயர்ந்து விலகி நிற்றல். பேர்கலா - பின்னிடாத. பேர்தல் - பின்னிடுதல். (43)

**4417.** உரைசெய் வானர வீர ருவந்துறை
அரசர் வீதி கடந்தகன் கோயிலைப்
புரசை யானைய னுன்புக லோடுமவ்
விரைசெய் வார்குழற் றுரை விலங்கினுள்.

உரைசெய் வானர வீரர் உவந்து உறை
அரசர் வீதி கடந்து, அகன் கோயிலைப்
புரசை யானை அ(ன்)னுன் புகலோடும், அவ்
விரைசெய் வார்குழல் தாரை விலங்கினுள்.

பொ :—கழுத்திடு கயிற்றை யணிந்த களிற்றை ஒத்தவனுகிய இலக்குவன், (வீரத்தினுல்) உயர்த்துப் புகழப்படும் (சேனைத் தலைவராகிய) வானர வீரர் மகிழ்ந்து தங்கும் அரச வீதியைக் கடந்து சென்று (சுக்கிரீவன் வாழும்) இடம் அகன்ற அரண்மனையை (நோக்கிச்) செல்லும்பொழுது, மணங்கமழும் கூந்தலையுடையாளாகிய அந்தத் தாரை என்பவள், (வழியிற்) குறுக்கிட்டுத் தடையாய் நின்றுள்.

கு :—உரை செய்தல் - புகழை உளதாக்கல். உரை - புகழ். புரசை - யானையின் கழுத்தில் இடப் பெறும் கயிறு. யானை தன் கழுத்திலுள்ள கயிற்றின் பிணிப்பிற் பட்டுப் பாகனது சொல்வழி அடங்கியொழுகுமாறு போன்று, இலக்குவனும் அறத்தாற் பிணிக்கப்பட்டு இராமனது ஆணைவழி அடங்கி நின்று தன் வெகுளியை அடக்கிச் செல்கின்றுன் என்பது புலப்படப் 'புரசையானை அன்னுன்' எனக் குறித்தார். விரை - நறுமணம். வார் - நீண்ட, 'விரை செய் வார் குழல் என்றது, தாரை கைம்மைநிலை யடையா முன்னை நிலைமைக்கண் அவளது கூந்தலியல்பினைக் குறித்த இயற்கையடை மொழி. விலங்குதல் - குறுக்கிடுதல்; தடையாய் நிற்றல். (44)

**4418.** விலங்கி மெல்லியல் வெண்ணகை வெள்வளை
இலங்கு நுண்ணிடை யேந்திள மென்முலைக்
குலங்கொ டோகை மகளிர் குழாத்தினல்
வலங்கொள் வீதி நெடுவழி மாற்றினுள்.

விலங்கி, மெல்இயல், வெள்நகை, வெள்வளை,
இலங்கு நுண்இடை, ஏந்துஇள மென்முலை,
குலம்கொள் தோகை மகளிர் குழாத்தினல்,
வலம்கொள் வீதி நெடுவழி மாற்றினுள்.

பொ :—(மேற்கூறியவாறு தாரை என்பாள்) குறுக்கிட்டு நின்று மென்மைத் தன்மையினையும் வெண்ணிறம் வாய்ந்த பற்களையும் வெள்ளிய வளையல்களையும், விளங்குகின்ற நுண்ணிய இடையினையும், உயர்ச்சியும் மென்மையும் பொருந்திய கொங்கையினையும் உடைய, நல்லினத்திற்றோன்றிய அழகிய தோகையினையுடைய மயில் போலும் சாயலையுடையராகிய இளநங்கையரது குழுவினுல், வெற்றி நலம்கொண்ட அவ்வீதியின் நீண்ட வழி முழுவதனையும் (யாரும் உள்புக்கு இயங்காதபடி) தடைப்படுத்தினுள்.

கு :—(தாரை) விலங்கி, மகளிர் குழாத்தினல் நெடுவழி மாற்றினுள் என முடிக்க. விலங்கி - குறுக்கிட்டு. மெல்லியல், வெண் நகை, வெள்வளை, நுண்ணிடை, மென்முலை மகளிர் குழாம் எனவும் குலங்கொள் தோகை மகளிர் குழாம் எனவும் தனித்தனி இயைத்துரைக்க. குலம்கொள் தோகை - நல்லினத்தில் தோன்றிய மயில். தோகை என்ற சொல், ஆகுபெயராய் தோகையையுடைய மயிலைக் குறித்து நின்றது. மயில் போலுஞ் சாயலையுடைய மகளிர் என்க. **(45)**

## இலக்குவனை நோக்கி வந்த மகளிர் குழாத்தின் தோற்றம்

**4419.** வில்லும் வாளு மணிதொறு மின்னிட
மெல்ல ரிக்குரன் மேகலை யார்த்தெழப்
பல்வ கைப்புரு வக்கொடி பம்பிட
வல்லி யாயம் வலத்தினின் வந்ததே.

வில்லும் வாளும் அணிதொறும் மின்னிட,
மெல் அரிக்குரல் மேகலை ஆர்த்து எழ,
பல்வகைப் புருவக் கொடி பம்பிட,
வல்லி ஆயம் வலத்தினின் வந்ததே.

பொ :—அணிகள் தோறும் வில்லும் வாளும் ஒளிவிட்டு விளங்கவும், மெல்லென இடையிட்டொலிக்கும் அரிப்பறை போன்று மேகலை ஆரவாரித்து ஒலிக்கவும், பலவகைப்பட்ட புருவமாகிய கொடிகள் செறிந்து தோன்றவும், மகளிர் கூட்டமாகிய சேனை வெற்றியுடன் வளைந்து சுற்றியது.

கு :—இலக்குவனை நோக்கித் தாரையுடன் சென்ற மகளிர் கூட்டத்தைச் சேனையாக உருவகஞ் செய்தார் ஆசிரியர். 'வில்லும் வாளும் அணிதொறும் மின்னிட' என்றதொடர், மகளிர் கூட்டத்திற்கும் சேனைக்கும் பொருந்துமாறு சிலேடையாக அமைந்துளது. மகளிர் கூட்டத்திற்குக் கொள்ளுமிடத்து 'அணி' என்னும் சொல் அணிகலன்களையும், 'வில்' 'வாள்' என்பன வளைந்தும் நேராகவும் செல்லும் ஒளித் தொகுதியையும் குறிப்பன. சேனைக்குக் கொள்ளுங்கால் 'அணி' என்பது சேனையின் அணிவகுப்பினையும், வில் வாள் என்பன விற்படை, வாட்படையாகிய கருவிகளையும் குறிப்பன. மெல் அரிக்குரல் என்றது, மெல்லோசையினதாய் இடையிட்டொலிக்கும் அரிப்பறை என்னும் பறை முழக்கத்தினைக் குறித்தது. மகளிரணியும் மேகலையணி அரிப்பறை முழக்கத்தினையொத்தொலிக்குமியல்பிற்றென்பது, 'அரிக்குரல் மேகலையாகியார்த்தவே' (சீவக—2688) எனத் திருத்தக்க தேவர் கூறுதலால் உய்த்துணரப்படும். வல்லி ஆயம் - மகளிர் திரளாகிய சேனை. வலத்தினின் - வெற்றித் திறத்தோடு. (46)

## இலக்குவன், மகளிர் கூட்டத்தைப் பார்க்க அஞ்சித் திரும்பி நிற்றல்

**4420.** ஆர்க்குநூ புரங்கள் பேரி
★ யல்குலாந் தடந்தேர் சுற்ற
வேற்கண்விற் புருவம் போர்ப்ப
மடந்தையர் மிடைந்த போது
பேர்க்கருஞ் சீற்றம் பேர
முகம்பெயர்த் தொதுங்கிப் பின்னர்ப்
பார்க்கவு மஞ்சி னனைப்
பருவரை யனைய தோளான்.

ஆர்க்கும் நூபுரங்கள் பேரி,
அல்குலாம் தடந்தேர் சுற்ற,
வேற்கண், விற்புருவம் போர்ப்ப,
மடந்தையர் மிடைந்த போது,
பேர்க்க அருஞ்சீற்றம் பேர,
முகம் பெயர்த்து ஒதுங்கி, பின்னர்ப்
பார்க்கவும் அஞ்சினன், அப்
பருவரை அனைய தோளான்.

பொ :—பெரிய மலையினையொத்த பருத்த தோள்களையுடைய னாகிய அவ் இலக்குவன், ஆரவாரிக்கும் காற்சிலம்புகளாகிய பேரிகையும், அல்குலாகிய பெரிய தேரும் (தன் பக்கங்களில் வந்து) சூழவும், கண்களாகிய வேற்படையும் புருவங்களாகிய விற்படையும் (தன்) மேல்வந்து மறைக்கவும் மகளிர் கூட்டம் தன் அருகில் செறிந்து வந்தபொழுது (யாவராலும்) மாற்ற ஒண்ணாத நிலையில் தன் மனத்திற் பொங்கியெழுந்த கோபமானது (தன்னை விட்டுச் சிறிது) இடம் பெயர்ந்து நீங்குமாறு தன் முகத்தை வேறுதிசையில் திருப்பிக்கொண்டு விலகித் தன் பின்னே நிற்கும் மகளிரைக் கண்ணாற் பார்க்கவும் அஞ்சி(க்கூசி) நின்றான்.

கு :—நூபுரம் - சிலம்பு. பேரி - பேரிகை என்னும்பறை. மகளிரது காலணியாகிய சிலம்பின் ஒலி பறையின் ஒலியை யொத்திருத்தல் பற்றி அதனைப் பேரிகையாக உருவகித்தார். 'செருக்குரற் சிறு பறை சிலம்பு கிண்கிணி' (சீவக—2688) எனவரும் திருத்தக்க தேவர் வாக்கும் இங்கு நினைக்கத்தக்கது. வேற்கண், விற்புருவம் என முன்பின்னாகத் தொக்க தொகைமொழிகளை, உருவக அணிக்கு ஏற்பக் கண்ணாகிய வேல் எனவும் புருவமாகிய வில்எனவும் விரித்துப் பொருள்கொள்க. போர்க்களத்தில் பேரிகையும் தேரும் அயலே சூழ்தலும் வேலும் வில்லும் மேல்வந்து மறைத்தலும்பற்றி, பேரி... தடந்தேர் சுற்ற எனவும், வேல் வில் போர்ப்ப எனவும் ஏற்புடைய வினைகொடுத்தோதினர். யாவராலும் மாற்ற வொண்ணாத பெருஞ் சினத்துடன் செல்லும் இலக்குவன், மலைபோன்ற தோளுடைய பெரு வீரனாயினும், தன்னைநோக்கி மெல்லியலாராகிய மகளிர் கூட்டம் வருதலைக்கண்டு, தனது கோபத்திற்குச் சிறிதும் காரண ராகாத அம் மகளிரைச் சினத்தல் அறமாகாது என்று எண்ணின மையாலும், பிற மகளிரைக் கண்ணெடுத்தும் நோக்காத நிறை யுடைமையே தனக்குப் பேராண்மையாம் எனக் கொண்டமை யாலும் தான்கொண்ட சினத்தினை விட்டு, வந்ததிசையினை நோக்கித் தன் முகத்தினைத் திருப்பிக்கொண்டதுடன், தன்பின்னே அணுகி

நிற்கும் மகளிர் கூட்டத்தைத் தன் கண்களாற் காணுதற்கும் அஞ்சி உள்ளங்கூசி நின்ருன் என்பதாம். (47)

## நாணத்தால் தலை குனிந்து நின்ற இலக்குவனை நோக்கித் தாரை கூறுதல்

**4421.** தாமரை வதனஞ் சாய்த்துத்
தனுநெடுந் தரையி னூன்றி
மாமியர் குழுவின் வந்தா
ஞமென மைந்த னிற்பப்
பூமியி லணங்க ஞர்தம்
பொதுவிடைப் புகுந்து பொற்ரேட்
டூமன நெடுங்கட் டாரை
நடுங்குவா ளினைய சொன்ஞள்.

தாமரை வதனம் சாய்த்து,
தனுநெடுந் தரையின் ஊன்றி,
மாமியர் குழுவின் வந்தான்
ஆம்என, மைந்தன் நிற்ப,
பூமியில் அணங்கு அஞர்தம்
பொதுவிடைப் புகுந்து, பொன்தோள்
தூமன நெடுங்கண் தாரை,
நடுங்குவாள், இனைய சொன்ஞள்.

பொ :—(இலக்குவஞகிய) இளையோன், தாமரைமலர் போலும் தன் முகத்தை (நிலம்நோக்கி) வளைத்து, (தன்கையிற் பிடித்த) நெடிய வில்லினைத் தரையின் கண்ணே ஊன்றவைத்து, (அன்புடைய) மாமியர் கூட்டத்தின் நடுவே வந்த மருமகனைப்போன்று (நாணி) நின்ருஞக, அழகிய தோள்களையும் (மாசற்ற) தூய நெஞ்சத்தினையும் நீண்ட கண்களையும் உடைய தாரை என்பாள், மண்ணுலகில் வாழும் தெய்வ மகளிரையொத்த அவ் வானர மகளிர் கூட்டத்தின் நடுவே புகுந்து, (இலக்குவனது வெகுளி நிலையை எண்ணி) நடுக்க முற்றவளாய், அவனை நோக்கிப் பின் வரும்) அன்பு மொழிகளைக் கூறிஞள்.

கு :—மைந்தன், தாமரை வதனம் சாய்த்து, நெடுந்தனு தரையின் ஊன்றி மாமியர் குழுவின் வந்தான் ஆம் என நிற்ப, தாரை, அணங்கஞர்தம் பொதுவிடைப் புகுந்து, நடுங்குவாள் இனைய

சொன்னாள் என இயைக்க. மைந்தன் என்றது இலக்குவனை. வதனம் – முகம். தனு – வில். தன்பால் அன்புடைய மாமியர் கூட்டத்தின் நடுவிலே வந்த மருமகன், அவர்கள்பால் தான் கொண்டுள்ள நன்மதிப்பும் அவர்களை எதிர்ப்பட்ட நிலையில் தனக்கு உளதாகிய வெட்கமும் பற்றி அச்சமும் நாணமும் ஒருங்குடையனாய்த் தலைகுனிந்து நிற்குமாறுபோல, இலக்குவனும், தன்னை மகளிர் கூட்டம் சூழ்ந்துகொண்ட நிலையில், வில்லேந்திப் பெருஞ் சினத்துடன் எதிர்ப்பட்ட தன் நிலைமைக்கு நாணித் தலைகுனிந்து நின்றான் என்பதாம். இலக்குவனைச் சுற்றி நிற்கும் மகளிர், மண்ணுலகிற் பிறந்து வளர்ந்த வானர மகளிராயினும், வானுலகில் வாழும் அரமகளிரே மண்ணுலகில் வந்தனர் என்னும்படி பேரழகிற் சிறந்து விளங்கினர் என்பார், 'பூமியில் அணங்கு அன்னார்' எனக் குறித்தார். அணங்கு – தெய்வமகள். பொது - கூட்டம். தூமனம் – (பிறர் நெஞ்சு புகுதலாகிய தீமையற்ற) தூய நெஞ்சம். நெடுங் கண் - சேய்மைக்கண் உள்ள பொருளையும் நெடிது சென்று நோக்கும் கண். இராம இலக்குவரது பெருங் கோபத்தால் கிட்கிந்தையின் அரசாட்சிக்கு எத்தகைய தீங்கு நேருமோ என உள்ளமும் உடலும் நடுங்கிய நிலையில் இலக்குவனிடம் சில கூறினாள் என்பார், 'நடுங்கு வாள் இனைய சொன்னாள்.' என்றார். (48)

**4422.** அந்தமில் கால நோற்ற
வாற்றலுண் டாயி னன்றி
இந்திரன் முதலி னோர்க்கு
மெய்தலா மியல்பிற் றாமே
மைந்தநின் பாதங் கொண்டெம்
மனைவரப் பெற்று வாழ்ந்தேம்
உய்ந்தனம் வினையுந் தீர்ந்தே
முறுதிவே றிதனி னுண்டோ.

'அந்தம்இல் காலம் நோற்ற
ஆற்றல் உண்டாயின் அன்றி,
இந்திரன் முதலினோர்க்கும்
எய்தல்ஆம் இயல்பிற்று ஆமே?
மைந்த! நின் பாதம் கொண்டு எம்
மனைவரப் பெற்று வாழ்ந்தேம்;
உய்ந்தனம்; வினையும் தீர்ந்தேம்;
உறுதிவேறு இதனின் உண்டோ?

பொ:—வீரருட் சிறந்தோனே! எல்லையற்ற காலம் (முயன்று) செய்த பெருந்தவத்தின் ஆற்றலைப் பெற்றிருந்தாலன்றி (வானவர் வேந்தனாகிய) இந்திரன் முதலிய தேவர்கட்கும் (நினது வருகை) எளிதிற் கிடைக்கக்கூடியதொன்றாகுமோ? (தூய்மை வாய்ந்த) நின் திருவடிகளைக்கொண்டு (நடந்து) எங்கள் மனையின்கண் நீ எழுந்தருளப் பெற்றதனால், (யாங்கள்) நல்வாழ்வு பெற்றோம் ஆயினோம்; (பலவகை இடையூறுகளினின்றும் தப்பி) உய்தி பெற்றோம்; (துன்பத்திற்குக் காரணமாகிய பழைய) வினைத் தொடர்பும் அறவே நீங்கப் பெற்றோம். (பெறுதற்கரிய) இப்பேற்றினைக் காட்டிலும் (நாங்கள் அடைதற்குரிய) உறுதிப்பயன் பிறிதொன்றுளதோ?

கு:—அந்தம் - முடிவு; எல்லை. தேவர்க்கு அரசனாகிய இந்திரன் முதலியோரும் தம் மாளிகையின் கண்ணே நீ எழுந்தருளப்பெறும் பேற்றினை விரும்புவராயின், அதன்பொருட்டு எல்லையற்ற காலம் தவம்புரிந்து அத்தவத்தின் வன்மையாலேயே அதனைப் பெறுதல் இயலுமேயன்றித் தம் இயல்பாகிய பெருமையினாற் பெறுதல் என்பது அத்தகைய பெருமைவாய்ந்த தேவர்களுக்கும் இயலாது என்பாள், 'அந்தம் இல்காலம் நோற்ற ஆற்றல் உண்டாயினன்றி இந்திரன் முதலினோர்க்கும் எய்தல் ஆம் இயல்பிற்று ஆமே?" என்றாள். அரசகுமாரனாகிய நீ, குரக்கினத்தாராகிய எம்மைக் குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு உய்யக் கொள்ளுதற் பொருட்டுப் பரிசனமும் ஊர்தியுமின்றித் தன்னந்தனியே நடத்தற் கரிய காட்டுவழியிலே நின் திருவடிகள்நோவ நடந்து வந்தனையே என்பாள், 'மைந்த நின் பாதங்கொண்டு எம் மனை வரப்பெற்று வாழ்ந்தேம்' எனத் தாயன்பின் பரிவு தோன்றக் கூறினாள். பெற்று - பெறுதலால்; செய்தென் எச்சம் காரணப் பொருட்டாய் வந்தது. இந்திரன் முதலிய பெருந் தேவர்களும் தவத்தாலன்றித் தம் பிறப்பின் சிறப்பியல்பினால் மட்டும் பெற ஒண்ணாத தெய்வநலம் வாய்ந்த நினது வருகையினை இழிந்த குரக்கினத்தாராகிய யாம் எளிதிற்பெற்று வினைத் தொடர்பின் நீங்கித் தூயராய் நல் வாழ்வு பெற்றோம் என்றாள் என்பதாம். (49)

**4423.** வெய்தினீ வருத னோக்கி
வெருவிநின் சேனை வீரர்
செய்திதா னுணர்கி லாது
திருவுளந் தெரித்தி யென்றார்

ஐயநீ யாழி வேந்த
 னடியிணை பிரிக லாதாய்
எய்திய தென்னை யென்று
 ளிசையினு மினிய சொல்லாள்.

'வெய்தின் நீ வருதல் நோக்கி,
 வெருவி நின் சேனை வீரர்,
செய்திதான் உணர்கிலாது,
 "திருவுளம் தெரித்தி" என்றார்;
ஐய! நீ ஆழிவேந்தன்
 அடியிணை பிரிகலாதாய்
எய்தியது என்னை?' என்றாள்
 இசையினும் இனிய சொல்லாள்.

பொ :—(வீரனே) நீ வெம்மையுடையையாய்(ச் சினந்து) வருதலைக் கண்டு நின்சேனை வீரராகிய (இவ்) வானரர்கள் அஞ்சி, (நீ இவ்வாறு வெகுண்டு வருதற்குக் காரணமாக) நிகழ்ந்த செயல் இன்னதென்று அறிய முடியாமல் (என்னை அணுகித்) 'திருவுள்ளத்திற் கருதியது இது என்பதனை அறிந்து கூறுவாயாக' என்றுகூறினார்கள். ஐயனே! நீ ஆணைச்சக்கரத்தினையுடைய பெருவேந்தனாகிய இராமபிரானுடைய திருவடித் துணையினை (இமைப் பொழுது தானும்) பிரிந்திருப்பாயல்லை. (அத்தகைய நீ, அப்பெருமானைத் தனித்திருக்கச் செய்து இங்கு) வந்தது எதுகருதி? என்று (இலக்குவனை நோக்கி) வினவினாள்; இசையினைக் காட்டிலும் (மனமகிழ்ச்சியை விளைக்கும்) இனிய சொற்களைப் பேச வல்லவளாகிய தாரை.

கு :—வெய்து – வெம்மை; வெகுளி. வெகுளிமிக்க நின் வருகையைக் கண்டு அஞ்சியோடியவர்கள் நின் பகைவரல்லர்; நின்னால் தலையளிக்கத்தக்க நின் படைவீரர்களே என்பாள், 'நின் சேனை வீரர்' எனக் குறித்தாள். இக்குறிப்பினால், வானர வீரர்களாகிய இவர்கள் நின் கட்டளையினை எதிர்நோக்கி அதன்படி நடக்கக் காத்திருக்கின்றார்கள் எனவும், இங்ஙனம் அன்பினால் நின் ஆணைக்குக் கட்டுப்பட்டிருக்கும் அவ்வீரர்கள் நின்னால் வெகுளத்தக்க குற்றமுடையாரல்லர் எனவும் இலக்குவனுக்கு உணர்த்தி, அவனது அடங்காச் சினத்தைத் தாரை சிறிது தணித்தாளாயிற்று. வெருவுதல் - அஞ்சுதல். இராம இலக்குவரது பேருதவியால் சுக்கிரீவனுக்கு அரசுகிடைத்தமை பற்றிச் சுக்கிரீவனுடைய சேனையை 'நின்சேனை' என இலக்குவனுக்குரிய சேனையாகத் தாரை கூறினாள்.

செய்தி - செயல்; என்றது, அதற்குரிய காரணத்தை. இனிய சொல் — கேள்வியினும் வினையினும் இனியவாகிய சொல். 'நினது அன்பிற்குக் கொள்கலமாகிய வானர வீரர்களே தங்கள் தலைவனெனத் தக்க நின்னைக்கண்டு வெருவியோடுமாறு நீ பெருஞ் சினங் கொள்ளுதற்கும், வேந்தர் பெருமானாகிய இராமனுடைய அடியிணைகளை இமைப்பொழுதும் பிரியாத பெற்றியுடைய ஆருயிர்த் தம்பியாகிய நீ அப் பெருமானைத் தனித்திருக்கச் செய்து, இவ்வாறு தனியே வருதற்கும் உரிய காரணம் யாது? எனத் தாரை இலக்குவனை வினவினாள் என்பதாம். (50)

**4424.** ஆர்கொலோ வுரைசெய் தாரென்
றருள்வரச் சீற்ற மஃகப்
பார்குலா முழுவெண் டிங்கள்
பகல்வந்த படிவம் போலும்
ஏர்குலா முகத்தி னாளை
யிறைமுக மெடுத்து நோக்கித்
தார்குலா மலங்கன் மார்பன்
றாயரை நினைந்து நைந்தான்.

'ஆர்கொலோ உரைசெய்தார்?' என்று
அருள்வர, சீற்றம் அஃக,
பார்குலாம் முழுவெண் திங்கள்,
பகல்வந்த படிவம் போலும்
ஏர்குலாம் முகத்தி னாளை,
இறைமுகம் எடுத்து நோக்கி,
தார்குலாம் அலங்கல் மார்பன்,
தாயரை நினைந்து நைந்தான்.

பொ :—மாலை (அழகுபெற்று) விளங்குதற்குக் காரணமாகிய ஒளி விளங்கும் மார்பினையுடையானாகிய இலக்குவன், (தாரையின் சொல்லைக் கேட்ட அளவில்) இவ்வாறு (இனிய மொழிகளைப்) பேசியவர் யாவரோ என்று (அறிய) எண்ணி (த்தன் உள்ளத்தே) அருள் வெளிப்பட்டுத் தோன்றவும், (முன்வெளிப்பட்ட) கோபம் குறைந்து தணியவும், ஒளிவிளங்கும் கலைகள் நிறைந்த வெண்மதி பூமியிற் பகற்பொழுதிலே வந்தாற்போலும் வடிவினையுடைய அழகு திகழும் முகத்தினையுடையாளாகிய தாரையை(த்தனது) முகத்தினைச் சிறிது உயர்த்து நோக்கித் தன் தாய்மார்களை எண்ணி (உளங்கசிந்து) வருந்தினான்.

கு:—தார்குலாம் அலங்கல் மார்பன், 'உரை செய்தார் ஆர் கொலோ' என்று, அருள் வர, சீற்றம் அஃக, ஏர்குலாம் முகத்தினளை முகம் இறை எடுத்து நோக்கி, தாயரை நினைந்து நைந்தான் என இயைத்துரைக்க. தார்குலாம் அலங்கல் மார்பன் என்றது, இலக்குவனை. தார் - மார்பில் அணியும் மாலை. குலாவுதல் - விளங்குதல். அலங்கல் - அலங்குதல்; ஒளி செய்தல். இனி, தார் என்பது, போருக்கு அடையாளமாக அணிதற்குரிய அடையாள மாலையையும், அலங்கல் என்பது, அழகுக்கு அணியப் பெறும் மாலையையும் குறித்தன எனக் கொண்டு, போர்குறித்து அணியப்பெறும் தாரும் அழகுக்கு அணியப் பெறும் அலங்கலும் என இருவகை மாலைகளும் விளங்கத் தக்க மார்பினையுடையான் எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். தார்குலாம் அலங்கல் மார்பன் என்றது, இலக்குவனது மார்பின் வன்மையையும் வனப்பினையும் சுட்டிய இயற்கையடைமொழியாகும். சீற்றம் - கோபம். அஃதல் - சுருங்குதல்; குறைதல். குலாம் முழு வெண் திங்கள் பார் பகல் வந்த படிவம்போலும் முகத்தினள், ஏர்குலாம் முகத்தினள் எனத் தனித்தனி இயைத்துப் பொருள் கொள்க. ஏர்குலாம் முகத்தினள் என்றது தாரையை; தன்னியல் பிலேயே பொலிவுடன் திகழும் முகத்தினையுடையாள் என்றவாறு. ஏர் - எழுச்சி; அழகு. இரவுப் பொழுதில் தண்ணிலவைப் பரப்பும் நிறைமதி பகற்பொழுதிலே பூமியின்கண் வந்தாற்போலும் (ஒளி மாழ்கும்) முகத்தினையுடையளாய் இலக்குவனது சினத்தைத் தணித்தற் பொருட்டு எதிர்ப்பட்டு நின்றாள் என்பார், குலாம் முழு வெண் திங்கள் பார் பகல்வந்த படிவம்போலும் முகத்தினள் என்றார். இஃது இல்பொருள் உவமை. பார் - பூமி. படிவம் - வடிவம். முழு வெண்திங்கள் பகல் வந்த படிவம் போலும் முகத் தினள் எனவே, அவளது முகம் பகற்காலத்துச் சந்திரனைப் போன்று தன்னொளியிற் குறைந்து காணப்பட்டது என்பதும் குறிப்பாற் புலப் படுத்தியவாறாயிற்று. இறை - சிறிது. எடுத்துநோக்குதல்-உயர்த்துப் பார்த்தல். வானரர் வேந்தனாகிய வாலியின் பட்டத்தரசியாய் அவன் இறந்துபட்ட நிலையில் கைம்மைக்கோலத்தினளாய் நின்ற தாரையைக் கண்ட இலக்குவன் உள்ளத்தில், தன் தந்தையிறந் தமையால் அந்நிலையினராகிய தன் தாய்மார்களின் கோலம் நினைவுக்கு வரவே, சொல்லொணாத் துயரமுடையனாய் மனங்கலங்கி நின்றான் என்பார், 'தாயரை நினைந்து நைந்தான்' என்றார் ஆசிரியர். ஈண்டுத் தாயர் என்றது, இலக்குவனாற் பேரன்புடன் போற்றப்பெறும் தாய்மார்களாகிய சுமித்திரை, கோசலை ஆகிய இரு வரையும். மற்றை மாதரைத் தன் தாயென மதித்துப் போற்றும் இலக்குவனது தூய மனத்தின் மாண்பும், யாவராலும் தாயென மதித்துப் போற்றப்பெறும் தூய நன்னெஞ்சினளாகிய தாரையின்

கற்பு மாண்பும் இச் செய்யுளால் நன்கு புலப்படுத்தப் பெற்றமை அறிந்து மகிழ்தற்குரியதாகும். (51)

4425. மங்கல வணியை நீக்கி
மணியணி துறந்து வாசக்
கொங்கலர் கோதை மாற்றிக்
குங்குமஞ் சாந்தங் கொட்டாப்
பொங்குவெம் முலைகள் பூகக்
கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்ட வள்ள
ணயனங்கள் பனிப்ப நின்றான்.

மங்கல அணியை நீக்கி,
மணிஅணி துறந்து வாசக்
கொங்கு அலர் கோதைமாற்றி,
குங்குமம் சாந்தம் கொட்டாப்
பொங்குவெம் முலைகள், பூகக்
கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்ட வள்ளல்,
நயனங்கள் பனிப்ப நின்றான்.

பொ :—திருமங்கலநாணாகிய தாலியை நீத்து மணிகள் பதித்த ஏனைய அணிகலன்களையும் விட்டொழித்து நறுமணத்துடனும் தேனுடனும் விரிந்த மலர்களால் இயன்ற மாலையணிதலைத் துறந்து குங்குமக் கலவையும் சந்தனக் குழம்பும் பூசப்பெறாத பருத்த வெம்மை வாய்ந்த தனங்கள் கமுகினையொத்த கழுத்தொடும் மறையும்படி (மேலாடையினால்) போர்த்துள்ள நங்கையாகிய தாரையைக் கண்ட வள்ளன்மை யுடையனாகிய இலக்குவன், தன்கண்கள் புன்கணீர் சொரிய (வருந்தி) நின்றான்.

கு :—மங்கல அணி - செம்முது பெண்டிராகிய மங்கையரால் அணியப்பெறும் எல்லா அணிகளுக்கும் மங்கலத்தை வழங்குவதாய்த் திருமணக் காலத்தில் அவர்தம் கணவனால் அணியப்பெறும் திருமங்கலநாணாகிய தாலி. மங்கல மகளிர்க்கு அடையாளமாகத் திருமங்கல நாணாகிய தாலி விளங்குவதென்பது, 'அகலுள் மங்கல அணியெழுந்தது' (சிலப் - மங்கலவாழ்த்துப் பாடல்) எனவரும் தொடர்க்கு, 'ஊரிலே மாங்கலிய சூத்திரம் வலஞ் செய்தது' என அரும்பதவுரையாசிரியர் கூறும் உரைக் குறிப்பாலும், 'ஈகையரிய

இழையணி மகளிர்' (புறம் - 127) எனவரும் தொடர்க்கு, 'கொடுத் தற்கரிய மங்கலிய சூத்திரத்தை யணிந்த மகளிருடனே' எனப் புறநானூற்று உரையாசிரியர் எழுதிய உரையாலும் இனிது விளங்கும். மங்கல அணியாகிய இதனை 'மங்கையர் மங்கலத் தாலி' (சுந்தர - காட்சி - 48) எனக் கம்பர் குறித்துள்ளமை இங்கு நினைக்கத் தக்கதாகும். கொங்கு - தேன். கொட்டுதல் - பூசுதல். 'கண்ணிற முலையுந் தோளுஞ் சந்தனத் தேய்வை கொட்டி' (சீவக - 624) என்புழி, கொட்டுதல் இப்பொருட்டாதல் காணலாம். பூகக் கழுத்து - கமுகினையொத்த கழுத்து. மகளிர் கழுத்துக்குக் கமுகினை உவமை கூறுதல் மரபு. பூகம் - கமுகு; பாக்குமரம். தன்னலங் கருதாது பிறரது துன்பந் துடைக்க முந்தும் அருளின் வழிப்பட்ட வண்மைக் குணமுடையனாதல் பற்றி இலக்குவனை 'வள்ளல்' எனக் குறித்தார் ஆசிரியர். நயனங்கள் பனித்தல் - கண்ணீர் சிந்துதல், 'நெஞ் சுருகிக் கண்பனிப்ப' (திவ்ய - திருநெடுந் - 12) எனவருதல் காண்க. (52)

**4426.** இனையரா மென்னை யீன்ற
விருவரு மென்ன வந்த
நினைவின னயர்ப்புச் சென்ற
நெஞ்சின னெடிது நின்றான்
வினவினாட் கெதிரோர் மாற்றம்
விளம்பவும் வேண்டு மென்றப்
புனைகுழ லாட்கு வந்த
காரியம் புகல்வ தானான்.

'இனையர் ஆம், என்னை ஈன்ற
இருவரும்' என்ன வந்த
நினைவினன், அயர்ப்புச் சென்ற
நெஞ்சினன், நெடிது நின்றான்;
'வினவினாட்கு எதிர் ஓர் மாற்றம்
விளம்பவும் வேண்டும்' என்று, அப்
புனைகுழ லாட்கு வந்த
காரியம் புகல்வது ஆனான்.

பொ :—என்னைப் பெற்று வளர்த்த தாய்மார் இருவரும் இத் தன்மையராகவே இருப்பர் எனத் தன் உள்ளத்தில் தோன்றிய (துன்ப) நினைவினையுடையனாய்த் தளர்ச்சி மிக்க மனத்தினனாய்

(ஒன்றுந்தோன்ருது) நெடுநேரம் (உயிர்ப்பற்று) நின்ருன்; (அங்ஙனம் நின்றவன்) தன்னை வினவியவளாகிய தாரைக்கு மறுமொழியாக ஒரு வார்த்தை சொல்லுதலும் இன்றியமையாததே எனக் கருதி, அவ் அழகிய கூந்தலினையுடையாளாகிய தாரைக்குத் தான் வருதற்கு (க்காரணமாக) அமைந்த செயல் இன்னதென்று கூறுவானுயினன்.

கு:—பரதனுடைய தாயாகிய கைகேயி, இராமனை வனம்புகப் பணித்த கொடுமையுடையளாதல்பற்றி, அவள் தன் தாயாகாள் எனக்கடிந்த உள்ளத்தவன் இலக்குவனுதலின், கோசலை, கைகேயி, சுமித்திரை என்னும் தாயர் மூவருள் கைகேயியை விலக்கி, ஏனையிருவரையும் 'என்னை ஈன்ற இருவரும்' எனக் குறித்தான். தசரதன் தன் மனைவியாகிய கைகேயியை "இவள் என் தாரம் அல்லள்" என வெகுண்டு விலக்கியுரைத்தமையும் இங்கு நினைக்கத் தக்கதாகும். 'என்னை ஈன்ற இருவரும் இனையர் ஆம் என்ன வந்த நினைவினுன்' என்க. இனையர் - இத்தன்மையர்; கணவனை யிழந்தமையால் இத்தகைய கைம்மை நிலையினராய்ப் பொலிவிழந்த தன்மையர். அயர்ப்புச் சென்ற நெஞ்சினன் - தளர்ச்சியின் கண்ணே சென்று படிந்த நெஞ்சத்தையுடையான்; என்றது தளர்ச்சி மிக்க மனத்தினன் ஆதலை. மலர் முதலியவற்ருற் பண்டு அலங்கரிக்கப்பெற்ற அழகிய கூந்தலையுடையாள் என்பார், 'அப்புனை குழலாள்' எனச் சுட்டினுர். எனவே இப்பொழுது அவளது கூந்தல் புனையப் பெருமையைக் குறிப்பால் உணர்த்திஞராயிற்று. வந்த காரியம் - தான் வருதற்கு(க் காரணமாக) அமைந்த செயல். (53)

**4427.** சேனையும் யானுந் தேடித்
தேவியைத் தருவெ னென்று
மானவற் குரைத்த மாற்ற
மறந்தன னருக்கன் மைந்தன்
ஆனவ னமைதி வல்லை
யறிகென வருளின் வந்தேன்
மேனிலை யனையான் செய்கை
விளைந்தவா விளம்பு கென்ருன்.

'"சேனையும் யானும் தேடித்
தேவியைத் தருவென்" என்று,
மானவற்கு உரைத்த மாற்றம்
மறந்தனன், அருக்கன் மைந்தன்;

"ஆனவன் அமைதி வல்லை
அறிக" என, அருளின் வந்தேன்;
மேல்நிலை அனையான் செய்கை
விளைந்தவா விளம்புக" என்றான்.

பொ :—'சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன், 'என்னுடைய சேனை வீரர்களும் யானும் முயன்று சீதாபிராட்டியைத் தேடிக் கொணர்ந்து தருவேன்' என்று மனு குலத் தோன்றலாகிய இராமனுக்குச் சொல்லிய உறுதி மொழியை மறந்தொழிந்தான். அச்சுக்கிரீவனது மனக்கருத்தை விரைந்து அறிந்து வருவாயாக' என்று (அப்பெருமான் என்னை நோக்கிக்) கூற (அவனது) அருளாணையின் வண்ணம் (இங்கு) வந்தேன். மேலாம் நிலையாகிய அரச பதவியில் உள்ள அச்சுக்கிரீவனுடைய செயல் முறைகள் நிகழுந் திறத்தினை நிகழ்ந்தபடியே எடுத்துரைப்பாயாக' என(த்தாரையை நோக்கி)க் கூறினான் (இலக்குவன்).

கு :—'சேனையும் யானும் தேடித் தேவியைத் தருவென்' என்றது, முன்பு சுக்கிரீவன் இராமனை நோக்கிக் கூறிய உறுதிமொழி. தேவி என்றது, இராமனது ஆருயிர்த் தேவியாகிய சீதையை. மானவன் - மனுகுலத்தில் தோன்றியவன்; என்றது இராமனை. அருக்கன் மைந்தன் என்றது, சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவனை. அமைதி — (உள்ளத்து அமைந்த) எண்ணம். வல்லை - விரைவில். இராமன் என்னை இங்கு அனுப்பியதற்கு அப்பெரியோன் சுக்கிரீவன்பாற் கொண்ட அருளேகாரணம் என்பான், 'ஆனவன் அமைதிவல்லை அறிகென அருளின் வந்தேன்' என்றான். இராமனது அருளால் அரசபதவியாகிய மேல்நிலையைப் பெற்றுள்ள அச்சுக்கிரீவன், செய்ந் நன்றியறிதலாகிய தன் கடமையில் வழுவாவண்ணம் மேற்கொண்ட செயல் முறைகளை அவனது நல்வாழ்விற் கருத்துடைய நீ எனக்கு விளங்க எடுத்துரைத்தல் வேண்டும் என்பான், 'மேல்நிலை அனையான் செய்கை விளைந்தவா விளம்புக' என இலக்குவன் தாரையை நோக்கிக் கூறினான் என்பதாம். விளைந்தவா — நிகழ்ந்த வாறு. (54)

**4428.** சீறுவா யல்லை யைய
சிறியவர் தீமை செய்தால்
ஆறுவாய் நீய லான்மற்
றருள ரயர்ந்தா னல்லன்

வேறுவே றுலக மெங்குந்
தூதரை விடுத்த வெல்லை
ஊறுமா நோக்கித் தாழ்த்தா
னுதவிமா றுதவி யுண்டோ.

'சீறுவாய் அல்லை ஐய!
சிறியவர் தீமை செய்தால்,
ஆறுவாய், நீஅலால் மற்று
ஆர்உளர்? அயர்ந்தான் அல்லன்;
வேறுவேறு உலகம் எங்கும்
தூதரை விடுத்துஅ எல்லை
ஊறுமா நோக்கித் தாழ்த்தான்;
உதவி மாறு உதவி உண்டோ?

பொ :—ஐயனே! (அறிவற்ற) சிறியோர் தீங்கு புரிவராயின் (அவர்களைக்) கோபிக்கும் இயல்புடையை ஆகாய்; (அவர்கள் அவ்வாறு தீமை செய்தற்குக் காரணமாய் அமைந்தது அவர்தம் பேதைமையே என்பதனை யுணர்ந்து) சினத்தினைத் தணித்துக் கொள்ளும் பெருந்தன்மையுடையை ஆவாய்; (இவ்வாறு செய்வன தவிர்வன அறிந்து ஒழுகவல்லோர்) நின்னையன்றி வேறு யார் இருக்கின்றார்கள்? (சுக்கிரீவன் சீதையை மீட்டுத் தருவதாகத் தான் சொன்ன சொல்லை) மறந்தவன் அல்லன்; உலகிற் பல இடங்களிலும் தன் தூதர்களைத் தனித்தனியே அனுப்பி, அவ்விடங்களிலிருந்தும் (தன் சேனை வீரர்கள்) மிகுதியாக வருதலை எதிர்பார்த்துக் காலந்தாழ்த்துத் தங்கியுள்ளான். (அவன் உங்களுக்கு ஒருதவியும் செய்யாத நிலையில் நீங்கள் அவனுக்குச் செய்த) உதவிக்குக் கைம்மாறாக (அவனாற்) செய்யத்தக்க உதவியும் உளதோ? (இல்லை என்பதாம்).

கு :—ஐய! சிறியவர் தீமை செய்தால், சீறுவாய் அல்லை, ஆறுவாய்! நீ அலால் மற்று ஆருளர்? என இயையும். ஈண்டுத் தீமை என்றது, சுக்கிரீவன் தான் சொன்ன சொல்லினின்று வழுவுதலை. சிறியோர் செய்த பிழைகளைப் பொறுத்தருளுதல் பெரியோரியல்பென்பது, 'பிழைத்தவை பொறுக்கையெல்லாம் பெரியவர் கடமை போற்றி' (திருச்சதகம் - 66) எனவும், 'பொறுப்பரன்றே பெரியோர் சிறுநாய்கள்தம் பொய்யினையே' (நீத்தல் விண்ணப்பம் - 6) எனவும் வரும் மணிமொழிகளால் இனிது விளங்கும். அயர்தல் - மறத்தல். எல்லை - இடம். ஊறுதல் - பெருக வருதல். 'உதவிமாறுதவியுண்டோ' என்பது, 'செய்யாமற்

செய்த உதவிக்கு வையகமும், வானகமு மாற்றலரிது' (101) என வரும் திருக்குறட்பொருளை அடியொற்றி அமைந்ததாகும். (55)

4429. ஆயிர கோடி தூத
ரரிக்கண மழைப்ப வாணை
போயினர் புகுது நாளும்
புகுந்தது புகல்புக் கோர்க்குத்
தாயினு மினிய நீரே
தணிதிராற் றரும மஃதாற்
றீயன செய்யா ராயின்
யாவரே செறுந ராவார்.

'ஆயிர கோடி தூதர்,
அரிக்கணம் அழைப்ப, ஆணை
போயினர்; புகுதும் நாளும்
புகுந்தது; புகல்புக் கோர்க்குத்
தாயினும் இனிய நீரே
தணிதிரால்; தருமம் அஃதால்,
தீயன செய்யார் ஆயின்,
யாவரே செறுநர் ஆவார்?

பொ:—ஆயிரங்கோடி தூதர்கள், வானர சேனைகளை அழைத்து வருதற் பொருட்டு (ச்சுக்கிரீவனது) ஆணையினாற் (பல இடங்களுக்குஞ்) சென்றுள்ளார்கள். (சேனைகள்) வந்து சேரவேண்டிய நாளும் அணுகியது. (தம்மைச்) சரணடைந்தோர்க்குத் தாயைக் காட்டிலும் (பேரன்புடையராய்) இனியனவே செய்யும் இயல்புடைய நீங்களே (நும் சினம்) தணிவீராக. அதுவே (போற்றத்தக்க) நல்லறமாகும். (பிறர்க்குத் துன்பந்தரும்) தீய செயல்களைச் செய்யாதவராயின் (அவருள்) யாவர்தான் வெகுண்டு தண்டிக்கப்படுதற்கு உரியராவர்?

கு:—ஆயிரகோடி என்பது மிகப்பல என்ற பொருளில் வந்தது. அரிக்கணம் - வானரசேனை. அரி - குரங்கு. கணம் - கூட்டம். ஆணை - (சுக்கிரீவன்) கட்டளை. ஆணையாற் போயினர் என மூன்றுருபு விரித்துரைக்க. புகுதும்நாள் - வந்துசேரும் நாள். புகல் புகுதல் - சரணடைதல்; அடைக்கலம் புகுதல். தான் பெற்ற பிள்ளைகள் அறியாமையால் தீங்கு புரியினும் அதனை மனத்திற் கொள்ளாது தன் மக்களுக்கு நலந்தரும் செயலையே நாடுதல் தலையன்

புடைய தாயின் இயல்பு. தாய், மக்கள் என்னும் இத்தகைய தொடர்பு எதுவும் இன்றி நும்மைச் சரண் புக்கோர்யாவராயினும் அன்னோர் செய்த குற்றங்களை அறவே மறந்து குணங்கொண்டு ஆதரிக்கும் பேரருளுடையீராதலின், வானரர்களாகிய எங்களது காலத்தாழ்ச்சி பற்றி நும் மனத்தெழுந்த சினந்தணிந்து எம்மை நல்வழிப்படுத்தற்குரிய கடமையும் நும்மைச் சார்ந்ததே என்பாள், 'புகல் புக்கோர்க்குத் தாயினும் இனிய நீரே தணிதிரால்' என்றாள். நுமது கோபம் எங்களாற் பொறுக்க ஒண்ணுதவாறு மிக்க இந் நிலையில் அதனைத் தணிவித்து எம்மை உய்விப்பார் நும்மை யன்றிப் பிறர்யாரும் இல்லாமையை எண்ணி நும்சினந்தணிந்து எங்களை உய்யக்கொள்ளுதல் நுமக்குப் பெரியதோர் அறச்செயலாம் என்பாள், 'தருமம் அஃதால்' என்றாள். ஆல் - அசை. படை வரவு நோக்கிக் காலந்தாழ்த்தலாகிய இச் சிறிய பிழையையன்றி வேறு எத்தகைய தீங்கும் செய்திலோம் ஆதலாற் பேரருளுடைய நீவிர் எம்மை வெகுண்டு ஒறுத்தல் ஒண்ணுது எனக் குறிப்பாற் புலப் படுத்துவாள், 'தீயன செய்யாராயின் யாவரே செறுநர் ஆவார்' என்றாள். செறுநர் - செறப்படுவார்; வெகுண்டு தண்டிக்கப்படத் தக்கவர். தங்கள் மனமறியப் பிறர்க்குத் தீங்கு செய்யாதாரை வெகுண்டொறுத்தல் அருளாளர்க்கு அறமாகாது என்பது இச் செய்யுளின் ஈற்றடியினுற் புலப்படுத்தப்பட்ட கருத்தாகும். சுக்கி ரீவன் எல்லாப் பக்கங்களிலும் தூதர்களைப் போக்கித் தன் சேனை களின் வரவினை எதிர்பார்த்துக் காலந்தாழ்த்திருந்தமையன்றி நும் பணியிற் சிறிதும் வழுவினுன் அல்லன் எனத் தாரை இலக்குவன் மனத்திற் பதியும் வண்ணம் எடுத்துரைத்தாள். கூதிர்ப்பருவம் தொடங்கியதும் சுக்கிரீவன் அனுமனுல் செவியறிவுறுத்தப்பட்டுத் தன் சேனைகளைத் திரட்டி வருமாறு தூதர்களைப் பல இடங்களுக்கும் அனுப்பிவிட்டு மீண்டும் தான் இன்பந் துய்த்தலில் ஈடுபட்டிருந்தான் என வான்மீகம் கூறும். இச்செய்தியைத் தாரை கூற்றில் வைத்து இங்குக் கம்பர் புலப்படுத்துகின்றார். (56)

4430. அடைந்தவர்க் கபய நீவி
ரருளிய வளவில் செல்வந்
தொடர்ந்துநும் பணியிற் றீர்ந்தா
லதுவுநுந் தொழிலே யன்றே
மடந்தைதன் பொருட்டால் வந்து
வாளமர்க் களத்து மாண்டு
கிடந்தில ரென்னிற் பின்னு
நிற்குமோ கேண்மை யம்மா.

'அடைந்தவர்க்கு அபயம் நீவிர்
அருளிய அளவில் செல்வம்
தொடர்ந்து, நும் பணியின் தீர்ந்தால்,
அதுவும்நும் தொழிலே அன்றோ?
மடந்தைதன் பொருட்டால் வந்து,
வாள்அமர்க் களத்து மாண்டு
கிடந்திலர் என்னின், பின்னும்
நிற்குமோ கேண்மை அம்மா?

பொ :—நும்மைச் சரண்புகுந்த சுக்கிரீவன் முதலியோர்க்கு நீங்கள் அச்சம் நீக்கிக் கொடுத்தருளிய அளவில்லாத பெருஞ்செல்வமாகிய அரசாட்சியைத் தொடர்ந்து பேணிக்காத்தற்பொருட்டு, நுமக்குச் செய்தற்குரிய (தம்) பணியினின்றும் தடைப்பட்டு மாத்தத்தால் (அவ்வாறு தடைப்படுதற்கு ஏதுவாக அவர்கள் மேற்கொண்டுள்ள போகநுகர்ச்சியாகிய) அத்தொழிலும் நும்முடைய (அருளின் பயனாக அவர்கள் மேற்கொண்ட) செயல்களுள் ஒன்றாகுமல்லவா? (நுமது ஆணைவழி அடங்கியொழுகுங் கடமையினையுடையராகிய அவர்கள்) சீதையைத் தேடிக்கொணர்தற் பொருட்டுக் கொடிய போர்க்களத்தில் வந்து (நண்பர்களாகிய நும்பொருட்டுத் தம் இனிய உயிரைக் கொடுத்து) இறந்து கிடவாராயின், (அவர்கள் நும்மொடு கொண்ட) நட்பானது (அவர்தம் உடம்பு அழிந்த) பின்னரும் அழியாது (உயிரோடு ஒன்றி) நிலைபெறும் தன்மையினதாகுமோ?

கு :—அடைந்தவர் - சரண்புகுந்த சுக்கிரீவன் முதலியோர். அபயம் - பகைவரால் நலிவுற்றுத் தம்மை அடைந்தோர்க்கு ஆற்றல் மிக்கோர் 'அஞ்சல்மின்' என்றளிக்கும் பாதுகாப்பு. நும்மைச் சரணடைந்து உய்ந்த சுக்கிரீவன் நும்மால் அளிக்கப்பெற்ற பெருஞ் செல்வப்பேறாகிய அரச போகத்தை நுகர்ந்து நாட்கழித்தலாகிய இச் செயலும் நுமது அருளுக்கு உட்பட்டு நிகழும் நுமது பணியேயாகும் என்பாள், 'நீவிர் அருளிய அளவில் செல்வம் தொடர்ந்து நும் பணியில் தீர்ந்தால் அதுவும் நும் பணியேயன்றோ' என்றாள். அளவில் செல்வம் என்றது அரச பதவியை. தொடர்தல் - இடையறவுபடாது அச் செல்வத்தைத் தன் எல்லைக்கு உட்படுத்திப் பேணி அதனால் வரும் பயனை நுகர்தல். தொடர்ந்து-தொடர்தலால்; செய்தெனெச்சம் காரணப் பொருட்டாய் நின்றது. தீர்தல் - தடைப்பட்டுத் தாமதித்தல். நுமதருளால் உய்ந்த சுக்கிரீவன் முதலியோர் நீங்கள் செய்த பேருதவியை நினைந்து குறித்த காலத்தில் வந்து சீதையைத் தேடிக்கொணரும் இப் பணியினைத் தம் உயிரைக் கொடுத்தும் செய்துமுடிக்கக் காத்திருக்கின்றார்கள் என்

பதனை யான் நன்கு அறிவேன்; அவர்கள் அவ்வாறு செய்யத் தவறுவராயின், நும்மொடு கொண்டுள்ள கிடைத்தற்கரிய நட்பு அவர்களது பூதவுடல் அழிந்த பின்னரும் அவர்தம் உயிரோடு ஒன்றி நிலைபெறும் பெருஞ்சிறப்பினை இழந்தொழிதல் திண்ணம் என்பாள், 'மடந்தைதன் பொருட்டால் வந்து வாளமர்க்களத்து மாண்டு கிடந் திலரென்னிற் பின்னும் நிற்குமோ கேண்மை ?' என்றாள். மடந்தை என்றது சீதையை. கேண்மை - நட்பு. அம்மா, வியப்பிடைச் சொல். (57)

**4431.** செம்மைசே ருள்ளத் தீர்கள்
செய்தபே ருதவி தீர
வெம்மைசேர் பகையு மாற்றி
யரசுவீற் றிருத்தி விட்ட
உம்மையே யிகழ்வ ரென்னி
னெளிமையா யொழிவ தொன்றோ
இம்மையே வறுமை யெய்தி
யெழுமையு மிழப்ப ரன்றே.

'செம்மைசேர் உள்ளத் தீர்கள்
செய்தபேர் உதவி தீர,
வெம்மைசேர் பகையும் மாற்றி,
அரசு வீற்றிருத்தி விட்ட
உம்மையே இகழ்வர் என்னின்,
எளிமையாய் ஒழிவது ஒன்றோ?
இம்மையே வறுமை எய்தி,
எழுமையும் இழப்பர் அன்றே.

பொ :—(நும் உதவி பெற்ற சுக்கிரீவன் முதலியோர்) அறஞ் சேர்ந்த நெஞ்சத்தினராகிய நீங்கள் செய்த பெரியதோர் உபகாரம் சிதைந்தொழியும்படி, கொடுமை வாய்ந்த பகையினையும் ஒழித்து அரச பதவியிற் பெருஞ்சிறப்புடன் அமர்த்தி வைத்த (இராம இலக் குவராகிய) உங்களையே (இகழ்ந்து) பொருட்படுத்தாதிருப்பராயின், (பகைவர் பலர்க்கும்) எளியராய் (வலியிழந்து) ஒழிவர் என்பது மட்டுமா ? இப்பிறப்பிலேயே (தாம் பெற்றுள்ள செல்வமனைத்தையும் இழந்து) வறுமையெய்தி, இனிவரும் பிறப்புக்களிலெல்லாம் இன்ப நுகர்ச்சியை யிழந்து (நரகத்தில் வீழ்ந்து) இடர்ப்படுவர்.

கு :—அறஞ்சேர்ந்த நன்னெஞ்சமுடையீர் என்பாள், 'செம்மை சேர் உள்ளத்தீர்கள்' என்றாள். செம்மை என்பது, ஆகுபெயராய்ச்

செம்பொருளாகிய அறத்தினை உணர்த்தி நின்றது. சுக்கிரீவனது உயிர்க்கு இறுதி வந்த எல்லைக்கண் செய்யப்பட்ட பெரிய உதவியாதலின் 'பேருதவி' எனப்பட்டது. செய்தபேருதவிதீர, உம்மையே இகழ்வர் என்னின் என இயையும். தீர்தல் - சிதைந்து கெடுதல். தீர என்னும் செயவெனெச்சம் 'இகழ்வர்' என்னும் வினையைக்கொண்டு முடிந்தது. இகழ்தல் - பொருட்படுத்தாது மறந்தொழுகுதல். வெம்மைசேர் பகையும் மாற்றி அரசு வீற்றிருத்திவிட்ட உம்மை என்க. வெம்மைசேர் பகை - பிறர் எவராலும் அழிக்கவொண்ணாத கொடுமை வாய்ந்த பகை; என்றது, சுக்கிரீவனுக்கு வாலியோடு உளதாகிய கடும் பகையினை. பகையினாலுளதாம் துன்பத்தைப் போக்கி உய்யக் கொண்டமையேயன்றிப் பிறரெவர்க்கும் கிடைத்தற்கரிய பெருஞ் செல்வ வாழ்வாகிய அரசாட்சியிலும் சிறப்புடன் வீற்றிருக்கும்படி அமர்த்தி விட்டீர்கள் என்பாள், 'வெம்மைசேர்பகையும் மாற்றி அரசு வீற்றிருத்திவிட்ட உம்மை' என்றாள். உம்மையே என்புழி ஏகாரம் உயர்வுசிறப்பின்கண் வந்தது. 'இகழ்வர் என்னின்' எனவே, சுக்கிரீவன் முதலியோர் தம் இயல்பால் இகழாமை பெற்றும். எளிமை - பகைவர்க்கு எளியராதல். ஒன்றோ என்பது எண்ணிடைச் சொல். எழுமையும் – இனிவரும் பிறப்புக்களில் எல்லாம்; எல்லாப் பிறப்புக்களும் ஏழாய் அடங்குதல் அறியப்பட்டமையின், 'எழுமையும்' என முற்றும்மை கொடுக்கப்பட்டது. அறஞ்சேர்ந்த நெஞ்சத்தராகிய நீங்கள் காலத்தினாற் செய்த நன்றியைச் சுக்கிரீவன் முதலியோர் மறப்பராயின், அவர்தம் பேதைமைச் செயலால் இப்பிறப்பில் தாம் பெற்றுள்ள செல்வ மனைத்தையும் இழந்து வறுமையுற்று வருந்துதலேயன்றி, இனி வரும் பிறப்புக்கள் எல்லாவற்றினும் நற்கதிப் பேறாகிய பயனை யிழந்து முடிவில் காலமெல்லாம் நரகத்தில் வீழ்ந்து துன்புறுவர் என்பாள், 'இம்மையே வறுமையெய்தி யெழுமையும் இழப்பர்' என்றாள். 'ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையும், தான்புக் கழுந்தும் அளறு' (835) எனவரும் திருக்குறளும் அதற்குப் பரிமேலழகர் தரும் விளக்கமும் இங்கு நினைக்கத்தக்கனவாகும். இம்மையே என்புழி ஏகாரம் தேற்றம். (58)

**4432.** ஆண்டபோர் வாலி யாற்றல்
மாற்றிய தம்பொன் ருனால்
வேண்டுமோ துணைவர் நும்பால்
வில்லினு மிக்க துண்டோ

தேண்டுவார்த் தேடு கின்றீர்
தேவியை யதனைச் செவ்வே
பூண்டுநின் றுய்தற் பாலார்
நுங்கழல் புகுந்து ளோரும்.

'ஆண்டபோர் வாலி ஆற்றல்
மாற்றியது, அம்புஒன்று ஆனல்,
வேண்டுமோ துணைவர்? நும்பால்
வில்லினும் மிக்கது உண்டோ?
தேண்டுவார்த் தேடு கின்றீர்,
தேவியை ; அதனைச் செவ்வே
பூண்டுநின்று உய்தற் பாலார்,
நும்கழல் புகுந்து ளோரும்.

பொ :—போர்த்தொழில் வன்மையினை (த் தனக்கேயுரியதாக)க் கொண்டு ஆண்ட வாலியின் பேராற்றலை அறவே சிதைத்தது (நும்முடைய) பாணங்களுள் ஒன்றே யென்றால் (அத்தகைய பேராற்றல் படைத்த நுமக்குப் பகைவரை வெல்லுதற்குத்) துணைவர் பிறர் வேண்டப்படுவரோ ? நும்மிடத்துள்ள விற்படையைக் காட்டிலும் (பகையை வெல்லுதற்கு) மிக்க தொன்றுளதோ ? பிராட்டி இருக்குமிடத்தைத் தேடிக்காணுந் தகுதியுடையாரை (இப்பொழுது துணையாக) நாடுகின்றீர். நும் திருவடிகளைச் சரண் அடைந்துள்ள சுக்கிரீவன் முதலியோரும் (சீதையைத் தேடிக் காணுதலாகிய) அப்பணியினைச் செவ்விதாக மேற்கொண்டு செய்து (நுமது ஆணைவழி) நின்று ஈடேறுதற்குரியராவர்.

கு :—போர்த்தொழில் வன்மையினைத் தனக்கே யுரியதாகக் கொண்டு, அரக்கர் வேந்தனாகிய இராவணனையும் அடக்கிப் பணி கொண்ட பேராற்றல் படைத்தவன் என் ஆருயிர் நாயகனாகிய வாலி என்பாள், 'ஆண்டபோர் வாலி' என்றாள். போர் ஆண்ட வாலி என மாற்றிப் பொருள் கொள்க. இனி, 'இக் கிட்கிந்தையினை அரசாண்ட போர்வலிமிக்க வாலி' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். வெல்லுதற்கரிய பெருந்திறல் படைத்த வாலியின் பெருவன்மை, நும்பாலுள்ள அம்பொன்றினாலேயே சிதைந்து கெடுவதாயின், அவ்வாலிக்கு அஞ்சியொழுகிய இராவணனை வென்றடக்குதற்கு நீவிர் பிறர்துணையை நாடுவீரல்லீர், நும்பாலுள்ள விற்படையை யன்றிப் பிறர் எவர் துணையும் நுமக்கு வேண்டுவதில்லை என்பாள், 'வாலி ஆற்றல் மாற்றியது அம்பு ஒன்று ஆனல், துணைவர் வேண்டுமோ ? நும்பால் வில்லினும் மிக்கது உண்டோ ?'

என்றாள். 'கூட் டொருவரையும் வேண்டாக் கொற்றவ'ராகிய நீங்கள், குரக்கினத்தாராகிய எம்மவரது துணையை நாடியிருத்தலின் நோக்கம், சீதை இருக்குமிடத்தைத் தேடிக் கண்டு வந்து சொல்லுத லாகிய இப்பணியை நுமது அருளுக்கு இலக்காகிய எம்மவர்க்கே யுரியதாக்கி எம்மைப் பணிகொள்ளுதற் பொருட்டே என்பாள், 'தேவியைத் தேண்டுவார்த் தேடுகின்றீர்' என்றாள். தேண்டுதல்– தேடுதல். நும்மைச் சரண்புக்க சுக்கிரீவன் முதலியோரும் நும் கருத்தின்வண்ணமே இப்பணியை மேற்கொண்டு செய்து நிறை வேற்று முகமாகத் தாம் ஈடேறும் பேரார்வத்துடன் இதனைச் செய்யக் காத்திருக்கின்றார்கள்; ஆகவே அவர்கள் நின்னால் வெகு ளத்தக்கார் அல்லர் என்பாள், 'நும்கழல் புகுந்துளோரும் அதனைச் செவ்வே பூண்டு நின்று உய்தற்பாலார்' என்றாள். இவ்வாறு தாரை தம்மவராகிய சுக்கிரீவன் முதலியோர்பால் குற்றமில்லாமை யையும் தமக்குப் பேருதவி புரிந்த இராம இலக்குவர்பாற் பேரன் புடைமையையும் எடுத்துரைத்து இலக்குவனது சீற்றத்தைத் தணிவித்தாள் என்பதாம். (59)

**4433.** என்றவ ளுரைத்த மாற்றம்
யாவையு மினிது கேட்டு
நன்றுணர் கேள்வி யாள
னருள்வர நாணுக் கொண்டான்
நின்றன னிற்ற லோடு
நீத்தனன் முனிவென் றுன்னு
வன்றுணை வயிரத் திண்டோண்
மாருதி மருங்கின் வந்தான்.

என்று அவள் உரைத்த மாற்றம்
யாவையும் இனிது கேட்டு,
நன்றுஉணர் கேள்வி யாளன்,
அருள்வர, நாணுக் கொண்டான்,
நின்றனன்; நிற்ற லோடும்,
'நீத்தனன் முனிவு' என்று உன்னு,
வன்துணை வயிரத் திண்தோள்
மாருதி மருங்கின் வந்தான்.

பொ:—என்று தாரையென்னும் அவள் கூறிய மொழிகளை யெல்லாம் நற்பொருள்களைக் கூர்ந்து உணரவல்ல கேள்விச் செல்வ

ஞகிய இலக்குவன் இனிய செவ்வியுடையனுகிக் கேட்டு (அதனுல் தன்னுள்ளத்தே) கருணை பெருகித் தோன்ற (த் தம்பால் அன்புடை யாரை வெகுண்ட தன் செய்கைக்கு) நாணமுற்றவனுகி நின்ருன். (அங்ஙனம் இலக்குவன் நாணி) நின்ற அளவில், ('இவன்) வெகுளியை ஒழிந்தனன்' என்றெண்ணி, (போர்த்தொழிற்கு) வலிய துணையாந் தன்மையும் உறுதியும் திண்மையும் வாய்ந்த தோள்களை யுடைய அநுமன், (இலக்குவனது) அருகில் வந்து நின்ருன்.

கு :—நன்றுணர் கேள்வியாளன், அவள் உரைத்த மாற்றம் யாவையும் இனிது கேட்டு, அருள்வர, நாணுக்கொண்டான் நின்றனன் எனவும், நிற்றலோடும் 'முனிவு நீத்தனன்' என்று உன்னு, மாருதி, மருங்கின் வந்தான் எனவும் இருதொடராக இயைத்துரைக்க. நன்றுணர் கேள்வியாளன் என்றது, இலக்குவனை; யாதொரு பொருளை யாவர் சொல்லக்கேட்டாலும் சொல்வாரது இயல்பு நோக்காது அவர்கள் கூறிய சொற்பொருளின் பயனையே நோக்கி, அதன்கண் நன்றுண்டாயின் அதனை ஏற்றுக்கொள்ளு தற்கும் தீதுண்டாயின் அதனை ஏற்றுக்கொள்ளாது விலக்குதற்கும் வல்ல நுண்ணறிவுடையவன் இலக்குவன் என அறிவுறுத்தவாறு. தாரை கூறிய இன்னுரைகளை இலக்குவன் கேட்ட அளவில், சுக்கிரீவன் முதலியோர்பால் தான் முன் கொண்டிருந்த சீற்றந் தணிந்தவனுகி, அவர்கள் தன்னுல் வெகுளத்தக்கவரல்லர், அருளத் தக்கவர்களே என்னும் அருளுணர்வு பெருகித் தோன்றினமையால் அவர்களை வெகுண்ட தன் செயலுக்குப் பெரிதும் நாணி நின்ருன் என்பார், 'அருள்வர நாணுக்கொண்டான் நின்றனன்' என்ருர். நாணு - நாண்; உகரம் சாரியை. நாணுதலாவது, சால்பு, பண்பு முதலிய குணங்களால் உயர்ந்தோர், தம் தகுதிக்கு ஒவ்வாத செயல்களில் நாணுதலுடையராதல். நீத்தல் - ஒழித்தல். உன்னு - உன்னி. உன்னுதல் - நினைத்தல். மாருதி - வாயுவின் புதல்வனுகிய அநுமன்.

(60)

**4434.** வந்தடி வணங்கி நின்ற
மாருதி வதன நோக்கி
அந்தமில் கேள்வி நீயு
மயர்த்தனை யாகு மன்றே
முந்திய செய்கை யென்ருன்
முனிவினு முளைக்கு மென்றங்
கெந்தைகேட் டருளு கென்னு
வியம்பின னியம்ப வல்லான்.

வந்துஅடி வணங்கி நின்ற
மாருதி வதனம் நோக்கி,
'அந்தம்இல் கேள்வி நீயும்
அயர்த்தனை ஆகும் அன்றே,
முந்திய செய்கை?' என்றான் ;
'முனிவு இனும் முளைக்கும்' என்று அங்கு
'எந்தை! கேட்டு அருளுக' என்னா
இயம்பினன், இயம்ப வல்லான்.

பொ :—(இலக்குவன், தன் அருகில்) வந்து பாதங்களைப் பணிந்து நின்ற அநுமனுடைய முகத்தைப் பார்த்து, 'முடிவில்லா நூற்பொருள்களைக் கேட்டுணர்ந்த அறிஞனாகிய நீயும் முன்னர் நிகழ்ந்த செய்தியை மறந்துவிட்டாயல்லவா' எனக் கூறினான். (அது கேட்டு, சொல்லின் வகையறிந்து) மாற்றம் உரைத்தலில் வல்லவனாகிய அநுமன், அங்கு இலக்குவன் உள்ளத்தே வெகுளி மீண்டும் தோன்றும் என்று அஞ்சி, 'என் தலைவனே (அடியேன்) கூறுவதனைக் கேட்டு அருள் செய்வாயாக' என வேண்டி(ப் பின்வருமாறு) கூறினான்.

கு :—மாருதிவதனம் நோக்கி, 'அந்தம் இல் கேள்வி நீயும் முந்திய செய்கை அயர்த்தனையாகும் அன்றே' என்றான் எனவும், இயம்பவல்லான் 'அங்கு முனிவு இன்னும் முளைக்கும்' என்று, 'எந்தை! கேட்டு அருளுக' என்னா இயம்பினன் எனவும் இயைத்துப் பொருள்கொள்க. அந்தம் - முடிவு ; எல்லை. அயர்த்தல் - மறத்தல். முந்திய செய்கை என்றது, 'மழைப் பருவங்கழிந்தவுடன் சேனைகளோடு வருக' என இராமன் சுக்கிரீவனுக்குக் கட்டளையிட்ட திறத்தினை. 'முனிவு இ(ன்)னும் முளைக்கும்' என்பது, அநுமனது உட்கோள். இனி, 'முனிவினும் முளைக்கும் அன்பான்! எனப் பாடங்கொண்டு, 'தன்னுள்ளத்தே கோபம் பொங்கியெழுந்த நிலையிலும் (நண்பராயினாரிடத்துத் தான் கொண்டுள்ள) அன்பு மீதூர்ந்து தோன்றும் இயல்பினனாகிய இலக்குவன்' எனப் பொருள்கூறி, முனிவினும் முளைக்கும் அன்பான், மாருதி வதனம் நோக்கி, 'அந்தமில் கேள்வி நீயும் முந்திய செய்கை அயர்த்தனை யாகுமன்றே' என்றான் எனவும், இயம்பவல்லானாகிய அநுமன், 'எந்தை கேட்டு அருளுக' என்னா இயம்பினன் எனவும் இயைத்துரைத்தலும் உண்டு. இயம்ப வல்லான் என்றது, கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்பமொழியும் சொல்வன்மையுடையனாகிய அநுமனை. 'யார்கொல் இச் சொல்லின் செல்வன்' என அநுமனை இராமன் வியந்து பாராட்டியதாக இவ்வாசிரியர் குறித்துள்ளமை ஈண்டு நினைக்கத்தக்கதாகும். (61)

**4435.** சிதைவகல் காதற் றாயைத்
தந்தையைக் குருவைத் தெய்வப்
பதவியந் தணரை யாவைப்
பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கு முண்டா
மாற்றலா மாற்ற மாயா
உதவிகொன் றார்க்கொன் றானு
மொழிக்கலா முபாய முண்டோ.

'சிதைவு அகல் காதல் தாயை,
தந்தையை, குருவை, தெய்வப்
பதவி அந்தணரை, ஆவை,
பாலரை, பாவைமாரை
வதை புரிகுநர்க்கும், உண்டாம்
மாற்றலாம் மாற்றம்; மாயா
உதவி கொன்றார்க்கு ஒன்றானும்
ஒழிக்கலாம் உபாயம் உண்டோ?

பொ :—குற்றம் இல்லாத அன்பினையுடைய அன்னையையும் அப்பனையும் ஆசிரியனையும் தெய்வம் என உயர்நிலையில் வைத்துப் போற்றத்தகும் (அறவோராகிய) அந்தணர்களையும் பசுவையும் இளங்குழந்தைகளையும் மகளிரையும் கொலை செய்தவர்களாகிய கொடியோர்களுக்கும் (மிகக்கொடிய அக்கொலைப் பாவங்களை) நீக்குதற்குரிய (மாற்றுச் செய்கை யாகிய) பரிகாரம் உளதாகும். (பிறர், தமக்குச் செய்த) அழியாத பேருதவியைச் சிதைத்தவர்களுக்கு (செய்ந்நன்றிகோறலாகிய அப்பாவத்தை) ஒழித்தற்குரிய உபாயம் ஒன்றாயினும் உளதோ ? (இல்லை)

கு :—அன்பென்பது குற்றம் உணராமை என்பார், 'சிதைவகல் காதல்' என்றும், தாய், தன் மக்களிடத்துக் கொண்ட அன்பு தன் மக்களின் குற்றமுணராப் பெற்றியதாய்த் தன்னலங்கருதாத தூய்மையுடையது என்பார், 'சிதைவகல்காதல் தாய்' என்றும் சிறப்பித்தார். சிதைவு அகல் காதல் - குற்றம் இல்லாத பேரன்பு. 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பவாகலானும், தந்தை நிலையில் வைத்து வழிபடத் தக்கவன் ஆசிரியனாதலானும் 'தாயைத் தந்தையைக் குருவை' என இம்முறையில் வைத்து எண்ணினர். எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணராகிய அறவோர், பிறப்பால் மக்களேயாயினும் பல்லுயிரனைத்

தையும் ஒக்கப்பார்க்கும் பேரருளுடையராதலாகிய செயலால் இவ் வுலகிற் கண்கண்ட கடவுள் எனப் பேணத்தகும் பெருஞ்சிறப் புடையர் என்பார், 'தெய்வப் பதவி அந்தணர்' எனக் குறித்தார். பதவி - உயர்நிலை.

'கரிய மாலினுங் கண்ணுத லானினும்
உரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமொ ரைந்தினு மெய்யினும்
பெரியர் அந்தணர் பேணுதி யுள்ளத்தால்'
(மந்தரை-7)

என இராமனைநோக்கி வசிட்டமுனிவர் கூறுவதாக அமைந்த அறிவுரை இங்கு நினைக்கத்தக்கதாகும். தம்மைத் தாமே காத்துக் கொள்ளும் வலியின்மை பற்றி 'ஆவைப் பாலரைப் பாவைமாரை' என ஒருங்கு எண்ணினர். எத்தகைய இடர்நிலையினும், தாய், தந்தை, குரு, அந்தணர், பசு, பாலர், பாவையர் ஆகியோரைக் கொல்லுதல் கூடாது என்பது நூல்களில் விதிக்கப்பெற்ற நல்லற மாகவும், அவ்வறத்திற்கு மாறாக இன்னோரைக் கொலை செய்தல் என்பது, பேரறங்களைச் சிதைத்தலாகிய பெரும்பாவமாம் என்றும், இப்பாவங்களைச் செய்த கொடியோர்களும் தாம் அறியாமையினுற் செய்த பெரும்பிழையினை நினைந்து வருந்தித் தம்முடைய பாவங் களைத் தவிர்த்தல் கருதி அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் ஆகிய பெருமக்களைப் பணிந்து அவர்கள் அறிவுறுத்திய அறநெறி களில் ஒழுகுபவராயின், அவ்வொழுகலாறு அன்னோர் முன் செய்த கொலைப்பாவங்களைப் போக்கவல்ல மாற்றுச் செய்கையாகிய கழுவா யாக அமையும் என்றும் விளக்குவார், 'வதைபுரிகுநர்க்கும் உண்டாம் மாற்றலாம் மாற்றம்' என்றார். 'வதை புரிகுநர் - கொலை செய்வோ ராகிய கொடியோர். புரிகுநர்க்கும் என்புழி உம்மை இழிவுசிறப்பு. மாற்றல் ஆம் மாற்றம் - நீக்குதற்கு உரிய மாற்றுச் செய்கை; பரிகாரம்; கழுவாய். மாயா உதவி - (செய்வித்துக் கொண்டோரது மனத்தை விட்டு மறக்க ஒண்ணாமையால்) என்றும் அழியாத பேருதவி; செய்யப் பெற்றோராகிய அவர்கள் மறக்க முயன்றாலும் அவர்கள் மனத்து அழியாமல் நிலைபெற்ற பேருதவி. 'அறிந்து வைத்துச் செய்கின்ற பாவம் கழுவப்படாமையின்' செய்ந்நன்றி கோறல் உய்தியில் குற்றமாம் என்பார் 'மாயா உதவி கொன் றார்க்கு—ஒழிக்கலாம் உபாயம் ஒன்றனும் உண்டோ' என்றார். இனி, 'உதவிகொன்றார்க் கென்றேனும் ஒழிக்கலாம் உபாயம் உண்டோ எனப் பாடங்கொண்டு அதற்கேற்பப் பின்வருமாறு விளக்கங் கூறுதலும் பொருந்தும். ஊழி பெயருங் காலத்து யாவரும் செய்த இரு வினையும் நீங்கும் என்பது நூற்றுணிபாயினும் எல்லாப்

பாவங்களும் நீங்குதற்குரிய அக்காலத்தும் செய்ந் நன்றி கொல்லுத லாகிய இப் பாவம் நீங்காது பற்றிநிற்கும் கொடுமை வாய்ந்தது என்பார், 'என்றேனும் ஒழிக்கலாம் உபாயம் உண்டோ' என்றார். உபாயம் – வழி.

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (திருக்குறள் - 110)

எனவரும் திருவள்ளுவர் வாய்மொழியையும், இதன் விளக்கமாக,

'ஆன்முலை யறுத்த அறனிலோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத்தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயுமுளவென
நிலம் புடைபெயர்வதாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தியில்லென
அறம்பாடிற்றே' (புறம் - 134)

எனவரும் புறநானூற்றுச் செய்யுளையும் அடியொற்றிய நிலையில் இச்செய்யுள் அமைந்திருத்தல் ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும். (62)

**4436.** ஐயநும் மோடு மெங்க
ளரிக்குலத் தரச னோடும்
மெய்யுறு கேண்மை யாகி
மேலைநாள் விளைவ தான
செய்கையென் செய்கை யன்றோ
வன்னது சிதையு மாயின்
உய்வகை யெனக்கு முண்டோ
வுணர்வுமா சுண்ட தன்றோ.

'ஐய! நும்மோடும் எங்கள்
அரிக்குலத்து அரசனோடும்
மெய்உறு கேண்மை ஆகி,
மேலைநாள் விளைவது ஆன
செய்கை, என்செய்கை அன்றோ?
அன்னது சிதையு மாயின்,
உய்வகை எனக்கும் உண்டோ?
உணர்வு மாசுண்டது அன்றோ?

பொ :—வியக்கத்தக்க பெருமைக் குணம் உடையவனே! (மனு குலத் தலைவராகிய) உங்களோடும் எங்கள் வானரகுல மன்னனாகிய சுக்கிரீவனோடும் மெய்ம்மையாக நிலைபெற்ற நட்பு உண்டாகி (அதனால்) இனி எதிர் காலத்தில் முற்றுப் பெறுதற்குரிய செயல் எனக்குரிய (கடமையாக அமைந்த) பணியல்லவா? அச் செயல் (என்னால் நிறைவேற்றப்படாது) கெடுமானால் (நும்பால் நட்புக் கொண்டு உதவி பெற்ற சுக்கிரீவன் முதலியோர்க்கே யன்றி நும் இருதிறத்தாரையும் இடைநின்று நட்பாக்கிய) எனக்கும் (செய்ந் நன்றி கோறலாகிய பாவத்தினின்றும் நீங்கி) உய்யும் வழியுள தாகுமோ? (பெறுதற்கரிய நுமது நட்பினால் யாம் பெற்ற) நல் லுணர்வனைத்தும் குற்றத்துட்பட்டுச் சிதைந்தொழியும் அல்லவா?

கு :—எளிதிற் செய்து கொள்ளுதற்கு அரியதாய்ப் பகைவரை வெல்லுதலாகிய வினையிடத்துக் காவலாக உதவுவதாய், நும் இரு திறத்தாரிடையே நிலைபெற்ற இந் நட்பானது, நீர்ப்பூப் போன்று முன் மலர்ந்தும் பின் கூம்பியும் மாறுந்தன்மையதின்றிக் கோட் டுப்பூப் போன்று என்றும் ஒருநிலையே மாறாது நிற்கும் உள்ளம் ஒத்த உண்மையான நட்பு என்பான், 'மெய்யுறு கேண்மை' எனச் சிறப்பித்தான். மேலைநாள் விளைவதான செய்கை என்றது, இராம சுக்கிரீவரிடையே உளதாகிய நட்பின் விளைவாக இனி எதிர்காலத்தில் நிறைவேறுதற்குரியதாய் அமைந்த செயலை; அஃதாவது சீதையிருக்குமிடத்தை நாடிக் கண்டு மீட்டுக் கொணர்தலை. 'நும்மொடு செய்துகொண்ட நட்பின் பயனாகக் கிட்கிந்தையின் அரசாட்சியைப் பெற்று மகிழும் சுக்கிரீவன் முதலி யோர் ஒருகால் தம் கடமையை நிறைவேற்றுவதிற் காலத் தாழ்வு ஏற்படினும் நும் இரு திறத்தாரிடையே நட்புத் தோன்றி வளர் தற்குத் துணையாய் நடுநின்று பழகிய யானே அச் செய்கையினை நிறைவேற்றி வைக்கும் கடமையும் உறுதியும் உடையேன். எனக் குரியதாகிய இக் கடமையினின்று தவறுவேனாயின் செய்ந்நன்றி கோறலாகிய உய்தியில் குற்றத்துட்பட்டு மீளாநரகில் அழுந்தி யானும் வருந்துவேன்' என அநுமன் இலக்குவனை நோக்கி உறுதி கூறுமுகத்தால் அவனது சீற்றத்தைத் தணிவித்தான் என்ப தாம். 'பிறிதொன்றேனும் உற்றது செய்கென்றாலும் உரியன் இவ் அனுமன்' என வாலி இராமனை நோக்கிக் கூறிய சொல், அநுமனது கடமையில் வழுவாத் திறத்தையும் நினைத்தது முடிக்கும் பேராற்றலையும் இனிது புலப்படுத்தல் இங்கு உணரத்தக்க தாகும். (63)

**4437.** தேவருந் தவமுஞ் செய்யு
நல்லறத் திறமு மற்றும்
யாவரு நீரே யென்ப
தென்வயிற் கிடந்த தெந்தாய்
ஆவது நிற்க சேரு
மரணுண்டோ வருளுண் டன்றே
மூவகை யுலகுங் காக்கு
மொய்ம்பினீர் முனிவுண் டானல்.

'தேவரும், தவமும், செய்யும்
நல் அறத்திறமும், மற்றும்
யாவரும், நீரே என்பது,
என்வயின் கிடந்தது ; எந்தாய்!
ஆவது நிற்க, சேரும்
அரண் உண்டோ? அருள் உண்டு அன்றே
மூவகை உலகும் காக்கும்
மொய்ம்பினீர் !—முனிவு உண்டானல்?

பொ :—எம் தலைவனே ! (எம்மால் வழிபடப்பெறும்) தெய்வமும், (அத் தெய்வத்தின் அருளைப் பெறுதற்குச் சாதனமாகச் செய்யப் படும்) தவமும், (அத் தவத்தின் ஆற்றலால்) செய்து நிறை வேற்றுதற்குரிய நல்லறச் செயல்களும் (எம் வாழ்வுக்கு உறுதுணை யாகிய சுற்றத்தார் முதலிய) மற்றும் எல்லோரும் ஆக உதவுவோர் (இராம இலக்குவராகிய) நீங்களே என்னும் எண்ணம் என்னுள் ளத்தில் நன்ருகப் பதிந்து கிடக்கின்றது. (மேல் கீழ் நடு என்னும்) மூவகை யுலகங்களையும் (சிறிதும் இடையூறின்றிக்) காக்கவல்ல பெருவலி படைத்தவர்களாகிய நும் உள்ளத்தே சீற்றம் மூண்டெழுமானல் (வெகுளப்பட்டோர்) சென்று அடை தற்குரிய பாதுகாவலானதோர் இடம் உளதோ? (நுமது சீற்றத் தைத் தணித்து எம்மை உய்யக் கொள்ளுதற்கும்) நுமது பெருங் கருணையே துணையாக உள்ளதல்லவா?

கு :—தேவர் என்னுஞ் சொல் தெய்வம் என்னும் பொருளதாய் நின்றது. "யாவராயினும் நால்வரைப் பின்னிடிற், றேவரென்பது தேரு மிவ் வையகம்' (சீவக-249) என்புழித் தேவர் என்பதற்குப் 'பால்வரை தெய்வம்' எனப் பொருள் கொண்டார் நச்சினர்க்கினி யரும். இராம இலக்குவராகிய நீவிர் எல்லாமாகிய இறைவனது அமிசமே என்ற எண்ணம் நும்மைக்கண்ட அன்றே என்னுள்ளத் தில் தெளிவாகப் பதிந்துவிட்டது என்பான், 'தேவரும் தவமும்

செய்யும் நல்லறத் திறமும் மற்றும் யாவரும் நீரே என்பது என் வயிற் கிடந்தது' என்ருன். இராம இலக்குவரைக் கண்டபொழுதே 'துன்பினைத் துடைத்து மாயத் தொல்வினை தன்னை நீக்கித் தென் புலத்தன்றி, மீளா நெறியுய்க்குந் தேவரோதான் என்பெனக் குருகுகின்ற திவர்கின்ற தளவில் காதல் அன்பினுக் கவதியில்லை யடைவென்கொலறிதல் தேற்றேன்' (அனுமப். 15) என அநுமன் எண்ணியமை இங்கு உணரத்தக்கதாகும். மூவகை யுலகங்களையும் புரக்க வல்ல பேராற்றல் படைத்த நுமது வெகுளிக்கு இலக்கானேர் தமக்குப் பாதுகாவலாக எத்தகைய பெரிய அரண்களை நாடிச் சேர்ந்தாராயினும் தப்பி உய்வா ரல்லர்; நும்முடைய வெகுளியை மாற்றி அவர்களை உய்விக்கவல்லது நீவிர் யாவரிடத்தும் இயல் பாகக் கொண்டுள்ள பெருங் கருணையே யன்றிப் பிறிதில்லை என்பான், 'மூவகையுலகங் காக்கும் மொய்ம்பினீர் முனிவுண்டா ஞல், சேரும் அரண் உண்டோ அருளுன்டன்றே!' என்ருன். 'யாண்டுச் சென்றியாண்டும் உளராகார், வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர்' (திருக்குறள்-895) எனவரும் திருவள்ளுவர் வாய் மொழி ஈண்டு நினைக்கத்தக்கதாகும்.

நீவிர் எம்பாற்கொண்ட வெகுளியை நுமது அருட் பண்பால் நீங்களே தணித்து எம்மை உய்யக்கொண்டாலன்றி நுமது வெகுளியை மாற்றி உய்யும் ஆற்றலும் துணையும் எங்களுக்கு இல்லை என அநுமன் இலக்குவனை நோக்கிக் கூறியவாறு. (64)

**4438.** மறந்திலன் கவியின் வேந்தன்
வயப்படை வருவிப் பாரைத்
திறந்திற மேவி யன்னுர்
சேர்வது பார்த்துத் தாழ்த்தான்
அறந்துணை நுமக்குற் ருன்றன்
வாய்மையின் றழியு மாகில்
பிறந்தில னன்றே யொன்ருே
நரகமும் பிழைப்ப தன்ருல்.

'மறந்திலன், கவியின் வேந்தன் ;
வயப்படை வருவிப் பாரைத்
திறம்திறம் ஏவி, அன்னுர்
சேர்வது பார்த்து, தாழ்த்தான் ;

அறம்துணை நுமக்கு உற்ருன்தன்
வாய்மை, இன்று அழியுமாகில்,
பிறந்திலன் அன்றே? ஒன்ருே
நரகமும் பிழைப்பது அன்ருல்.

பொ :—வானரகுல மன்னனுகிய சுக்கிரீவன் (நுமது பணியை) மறந்தான் அல்லன்; வலிமை மிக்க தன் சேனைகளைத் திரட்டி வருபவராகிய தூதர்களைத் தொகுதி தொகுதியாக (ப் பல இடங்களுக்கும்) செல்லுமாறு அனுப்பிவிட்டு அவர்கள் (சேனைகளுடன்) வருவதனை எதிர்பார்த்துத் தாமதித்திருக்கின்ருன். அறமே துணையாக நும்பால் நட்புக் கொண்டவனுகிய சுக்கிரீவனது வாய்மொழி இந்நாளிற் சிதைந்து மாறுபடுமானுல் அவன் இவ்வுலகிற் பிறந்தும் பயனில்லாதவனேயாவன். அது மட்டுமா? (மறுமைக்கண்) நரகத் துன்பமும் (அவனுல்) தப்புதற்கு அரியதாகும்.

கு :—கவியின் வேந்தன்-சுக்கிரீவன். கவி-குரங்கு. வய என்பது வலிமை யென்னும் பொருளுடைய உரிச்சொல். படை-சேனை. வருவிப்பார் என்றது அழைத்து வருபவர்களாகிய தூதர்களை. திறம் திறம்-தொகுதி தொகுதியாக; கூறுகூருக. சுக்கிரீவன் தன் மேற் சினங்கொண்டு இலக்குவன் வருவதற்கு முன்னமே அநுமனுல் செவியுறுத்தப்பட்டுத் தன் சேனைகளையெல்லாம் திரட்டி வருமாறு நளன் என்ற வானரப் படைத் தலைவனுக்குக் கட்டளையிட்டு அனுப்பிவிட்டதாக வான்மீகம் கூறும். இச் செய்தியை 'வேறுவே றுலகமெங்குந் தூதரை விடுத்த வெல்லை, ஊறுமா நோக்கித் தாழ்த்தான்' எனத் தாரை கூற்றிலும், 'வயப்படை வருவிப்பாரைத் திறந்திறம் ஏவி அன்னுர் சேர்வது பார்த்துத் தாழ்த்தான்' என இவ்வாறு அநுமன் கூற்றிலும் வைத்துக் கம்பர் விளக்குகின்ருர். வாலியால் துன்புறுத்தப்பட்டு உய்யும் வழியறியாது அல்லலுற்றலைந்த சுக்கிரீவன், 'சரண் உனைப் புகுந்தேன் என்னைத் தாங்குதல் தருமம்' என அறமே துணையாக இராமனைச் சரண் புகுந்தவன் என்பான் 'அறந்துணை நுமக்கு உற்ருன்' என்ருன். இன்று-நுமது பேருதவியின் பயன் முழுவதனையும் பெற்று அவன் மகிழ்ச்சியுற்றிருக்கும் இவ் வின்பக்காலத்தில் என்பதாம்; இனி, அவனுக்கு அடைக்கலம் அருளிக்காத்த தன்னிகரற்ற பெரியோராகிய நீங்கள் அவனது உதவியை இன்றியமையாததாக எண்ணி எதிர்பார்க்கும் இத் துன்பக்காலத்தில் எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். சுக்கிரீவன் தனது வாய்மையினின்றும் தவறுதலுளதாயின் தான் பிறந்து பெற்றுள்ள பயன் அனைத்தையும் இப்பிறப்பிலேயே ஒருங்கு இழந்து செத்தாருள் வைத்து எண்ணப்படுவதுடன் மறுமையிலும் மீளா நரகில் வீழ்ந்து அல்லலுழத்தல்

திண்ணம் என்பான், 'பிறந்திலன் அன்றே? ஒன்றோ? நரகமும் பிழைப்பது அன்று' என்றான். ஆல்-அசை. அறமே துணையாக நும்மொடு நட்புக் கொண்ட சுக்கிரீவன் நீங்கள் செய்த உதவியை மறந்தான் அல்லன்; சீதையைத் தேடுதற் பொருட்டுத் தன் சேனை வீரர் அனைவரையும் விரைந்து அழைத்துவருமாறு தன் தூதர் களைப் பல இடங்களுக்கும் அனுப்பியுள்ளான்; தன் சேனை வீரர்கள் வருவதனை எதிர்பார்த்தே இங்குத் தாமதித்திருக்கின்றான். நீங்கள் செய்த உதவியை மறந்தானாயின் இம்மையிற் பிறவிப்பயனை இழத் தலோடு மறுமையிலும் மீளா நரகத்தில் வீழ்ந்து துன்புறுவான் அல்லனோ? என அநுமன் இலக்குவனுக்குக் கூறினான் என்பதாம். (65)

4439. உதவாம லொருவன் செய்த
வுதவிக்குக் கைம்மாறாக
மதயானை யனைய மைந்த
மற்றுமுண் டாக வற்றோ
சிதையாத செருவி லன்னான்
முன்சென்று செறுநர் மார்பில்
உதையானே லுதையுண் டாவி
யுலையானே லுலகின் மன்னோ.

'உதவாமல் ஒருவன் செய்த
உதவிக்குக் கைம்மாறு ஆக
மதயானை அனைய மைந்த!
மற்றும் உண்டாக வற்றோ—
சிதையாத செருவில் அன்னான்
முன்சென்று, செறுநர் மார்பில்
உதையானேல், உதையுண்டு ஆவி
உலையானேல், உலகில் மன்னோ?

பொ:—வலிமை வாய்ந்த யானையை ஒத்த வீரனே! (தான்) முன் ஒருதவியும் செய்யாதிருக்கும் நிலையில் (தனக்கு) ஒருவன் செய்த முன்னுதவிக்கு மாற்றுதவியாக, (பகைவரொடு ஏற்பட்ட) ஒழியாத பெரும் போரில் அவனுக்கு (த்துணையாக) முந்திச் சென்று பகைவர் மார்பின்கண் உதைத்து அழிக்காமற் போவானாயின், அன்றி (அப் பகைவர்களால்) அடிபட்டு உயிர் துறந்து மடியா னாயின், இவ் வுலகில் மற்றொன்றும் (மாற்றுதவியாக) உண்டாக வல்லதோ? (இல்லை).

கு :—உதவாமல் ஒருவன் செய்த உதவி-தான்முன் எந்த உதவி யையும் செய்யாதிருக்கும் நிலையில் தனக்கு ஒருவன் செய்த முன் னுதவி ; காரணம் இல்லாத உதவி என்றவாறு. கைம்மாறு-ஒருத விக்கு ஈடாகப் பின்னே செய்யும் மாற்றுதவி. மத யானை-வலி மிக்க யானை. மத என்னும் உரிச்சொல் வலிமை யென்னும் பொரு ளில் இங்கு ஆளப்பெற்றது. 'மதவே மடனும் வலியுமாகும்' (உரியியல்-79) என்பது தொல்காப்பியம். மைந்தன்-வீரன். கைம் மாருகச் செய்யப்படும் பின்னுதவிகள் யாவும், அவ்வாறு செய்யப் படுதற்கேற்ற காரணங்களை முன்னமே யுடையனவாதலின், காரண மில்லாத முன்னுதவிக்கு அவை ஈடாகமாட்டா. ஆயினும் காரண மில்லாத முன்னுதவியைப் பெற்றவன், அந் நன்றியினை மறவாது அதற்குக் கைம்மாருக ஒன்றை நாடிச் செய்ய முற்படுவானுயின், தனக்கு முன்னுதவி செய்வதன் பொருட்டுத் தான் போரில் முந்திச் சென்று பகைவரைப் பொருதழித்தலோ அஃது இயலாதாயின் பகைவர்களால் அடிபட்டுத் தன் இன்னுயிர் துறத்தலோ அவனுற் செய்யத்தக்கதாகும் ; அதுவன்றிக் கைம்மாருகச் சொல்லத்தக்க வன்மையுடையது மற்ருென்றுமில்லை என்பான், 'உதவாமல ஒருவன் செய்த உதவிக்குக் கைம்மாருக, சிதையாத செருவில் அன்னேன் முன் சென்று செறுநர் மார்பில் உதையானேல, உதையுண்டு ஆவி உலையானேல் உலகில் மற்றும் உண்டாக வற்ருே ?' என்ருன். செரு-போர். செறுநர்-பகைவர். உலைதல்-இறத்தல். "செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும், வானகமு மாற்றலரிது" (திருக்குறள்-101) எனவரும் தெய்வப் புலவர் வாய் மொழிப் பொருளை ஆசிரியர் இச் செய்யுளில் எடுத்தாண்டிருத்தல் அறியத்தக்கதாகும். (66)

**4440.** ஈண்டினி நிற்ற லென்ப
தினியதோ ரியல்பிற் றன்ருல்
வேண்டல ரறிவ ரேனுங்
கேண்மைதீர் வினையிற் ருமால்
ஆண்டகை யாளி மொய்ம்பி
னையநீ ரளித்த செல்வங்
காண்டியா லுன்முன் வந்த
கவிகுலக் கோனெ டென்ருன்.

'ஈண்டு, இனி நிற்றல் என்பது
இனியதுஓர் இயல்பிற்று அன்றால்;
வேண்டலர் அறிவரேல், நும்
கேண்மைதீர் வினையிற்று ஆமால்;
ஆண்தகை ஆளி மொய்ம்பின் ஐய!
நீர் அளித்த செல்வம்
காண்டியால் உன்முன் வந்த
கவிகுலக் கோனொடு' என்றான்.

பொ:—ஆண்மைத் திறத்திற்கேற்ற தகுதியும் சிங்க ஏற்றினை யொத்த பெருவன்மையும் வாய்ந்த தலைவனே! நீ இவ்விடத்தில் இப்பொழுது (இகல் கொண்டாரைப் போன்று வெகுண்டு) நிற்ப தென்பது இனிமை விளைக்கும் தன்மையினையுடையதாகாது. (இச் செய்தியைப்) பகைவர் அறிவராயின், அது (எங்களுக்குக் கிடைத்த) நும்முடைய நட்புக் கெடுதற்குரிய செயலாய் முடியும். உனக்கு முன் பிறந்த தமையன் எனத்தக்க வானரகுல மன்னன் சுக்கிரீவனோடு நீங்கள் (அவனுக்குத்) தந்தருளிய (அரச பதவி யாகிய) பெருஞ்செல்வத்தை (உள்ளே வந்து) பார்த்தருள்வாயாக எனக் கூறினான் (அநுமன்).

கு:—நீ இவ்விடத்திற் பகைவரைப் போன்று சினமுற்று நிற்றல் தீங்கு விளைதற்கு ஏதுவாகும் என்பான், அதனை வெளிப் படக் கூறாது 'ஈண்டு இனி நிற்றல் என்பது இனியதோர் இயல் பிற்றன்று' என மறைத்துக் கூறினான். வேண்டலர்-பகைவர். 'ஆண்டகை ஆளிமொய்ம்பின் ஐய' என்பது இலக்குவனை நோக்கிய விளியாகும். உன்முன் வந்த கவிகுலக் கோனொடு நீர் அளித்த செல்வம் காண்டியால் என இயைத்துரைக்க. ஆல்-அசை. இந் நகரிலுள்ள வானரங்கள் நினது வெகுளி மிக்க தோற்றத்தைக் கண்டு அஞ்சினமையால் நீ உள்ளே புகாதவாறு நகர வாயிலை அடைத்தன. இச் செயல் நின்னைப் பகைத்துச் செய்த செயலாகு மென்று நீ மாறுபடக் கருதினமையால் பெரிதும் வெகுண்டனை. எங்கள் பாற் பேரன்புடைய நீ இவ்வாறு வெகுளி மேற்கொண்டு இங்கு நிற்றல் இனிமை தருவதாகாது. நின் உள்ளத் தெழுந்த மாறு பாட்டினை நம்முடைய பகைவர் அறிவராயின் நும்முடைய சீற்றத்தை மிகுவித்து நம்மிடையே அமைந்த சிறந்த நட்பினைக் கெடுத்தற்கு முந்துவர். ஆதலால் நினது சினந்தணிந்து நின் தமையன் எனத் தக்க வானரகுல மன்னனையும் அவனுக்கு நீங்கள் கொடுத் தருளிய பெருஞ் செல்வத்தையும் பார்த்தருள்வாயாக என அநுமன் இலக்குவனை வேண்டினான் என்பதாம். 'உன்கிளை எனது, என் காவற் சுற்றம் உன் சுற்றம், நீ என் இன்னுயிர்த் துணைவன்"

என நின் தமையனாகிய இராம பிரானால் ஏற்றுக் கொள்ளப் பெற்ற அன்புரிமையுடையவன் சுக்கிரீவனாதலின், அம் முறையில் அவன் நினக்குத் தமையனாவான் என்பது தோன்ற, 'உன் முன் வந்த கவிகுலக் கோன்' என்றான். 'போந்து உன் தம் முனைச் சார்தி' எனப் பின்னர்க் கூறுதலும் ஈண்டு நோக்கத்தக்க தாகும். (67)

அநுமனது வாய்மொழி கேட்டு இலக்குவன் சீற்றந் தணிதல்

**4441.** மாருதி மாற்றங் கேட்ட
மலைபுரை வயிரத் தோளான்
தீர்வினை சென்று நின்ற
சீற்றத்தான் சிந்தை செய்தான்
ஆரிய னருளிற் றீர்ந்தா
னல்லன்வந் தடுத்த செல்வம்
பேர்வரி தாகச் செய்த
சிறுமையா னென்னும் பெற்றி.

மாருதி மாற்றம் கேட்ட
மலைபுரை வயிரத்தோளான்
தீர்வினை சென்று நின்ற
சீற்றத்தான், சிந்தை செய்தான் –
'ஆரியன் அருளின் தீர்ந்தான்
அல்லன்; வந்து அடுத்த செல்வம்
பேர்வு அரிதாகச் செய்த
சிறுமையான்' என்னும் பெற்றி.

பொ :—வாயுவின் புதல்வனாகிய அநுமன் கூறிய மறுமொழியினைச் செவிமடுத்த மலைபோலும் திண்ணிய தோள்களையுடையனாகிய இலக்குவன், (தான் கொண்டுள்ள) சீற்றம் நீங்குதலாகிய செய்கையிற் சென்று நிலைபெற்றவனாகி, மேலோனாகிய இராமனது அருட் பணியினின்றும் (சுக்கிரீவன்) நீங்கினான் அல்லன்; (தன் கண்ணே) வந்து பொருந்திய (அரச போகமாகிய) செல்வம் (தன்னை விட்டு அப்பாற்) பெயர்தல் அரிதாகச் செய்ததனால் உளதாகிய சிறுமையுடையவனாயினான் என்னுந் தன்மையினைத் தன் மனத்திற் கருதினான்.

கு :—மாருதி-மருத்தின் புதல்வன் ; அனுமன். மாற்றம்-மறு மொழி. மலை புரை வயிரத்தோளான் என்றது இலக்குவனை. புரை- உவம உருபு. தீர்வினை சென்று நின்ற சீற்றத்தான் என்பதனைச் 'சீற்றந்தீர் வினை சென்று நின்றான்' என மாற்றிப் பொருள் கொள்க. ஆரியன் - மேலோன் ; என்றது இராமனை. சுக்கிரீவன் இராமனது அருட்பணியினின்றும் நீங்கினனல்லன்; தன்னை வந் தடுத்த பெருஞ்செல்வ நுகர்ச்சியினை விட்டுப் பெயரும் உள்ளத் திண்மையின்றிச் சிறுமை விளைப்பதாகிய காம நுகர்ச்சியில் அழுந்தி விட்டான் என்பதனை இலக்குவன் தன் மனத்தால் உய்த்துணர்ந் தான் என்பார், "ஆரியன் அருளிற்றீர்ந்தானல்லன் வந்தடுத்த செல்வம் பேர்வரிதாகச் செய்த சிறுமையான் என்னும் பெற்றி சிந்தை செய்தான்" என்றார். சிறுமை-காமம். வானோர் தலைவ னாகிய இந்திரன் போல எல்லாப் பெருமையும் உடையராயினும் அவர்பால் அமைந்த பெருந்தன்மையினைக் கெடுத்துச் சிறுமைப் படுத்துவதாதலின் அளவிறந்த காமம் சிறுமையெனப்பட்டது. "சிறியோர் செயலாகலின், அளவிறந்த காமம் சிறுமை எனப் பட்டது" (திருக்குறள்-431) என்பர் பரிமேலழகர். (68)

## இலக்குவன் அனுமனை நோக்கிக் கூறுதல் 4442-4447

**4442.** அனையது கருதிப் பின்ன
ரரிக்குலத் தவனை நோக்கி
நினையொரு மாற்ற மின்னே
நிகழ்த்துவ துளது நின்பால்
இனையன வுரைத்தற் கேற்ற
வெண்ணுதி யிவைநீ யென்னு
வனைகழல் வயிரத் திண்டோண்
மன்னிளங் குமரன் சொல்வான்.

அனையது கருதி, பின்னர்,
அரிக்குலத்தவனை நோக்கி,
'நினை ஒரு மாற்றம் இன்னே
நிகழ்த்துவது உளது ; நின்பால்
இனையன உரைத்தற்கு ஏற்ற ;
எண்ணுதி இவை நீ' என்னு,
வனைகழல் வயிரத் திண்தோள்
மன் இளங்குமரன் சொல்வான் :

பொ :—அழகுறச் செய்யப் பெற்ற வீரக் கழலையும் திண்ணிய தோள்களையும் உடைய அரசகுமாரனாகிய இளையோன், (சுக்கிரீவன் தன்னை வந்து பொருந்திய செல்வ நுகர்ச்சியினின்றும் பெயர்தல் இயலாத சிறுமையாளனாயிருக்கும்) அத்தன்மையினைச் சிந்தித்து, வானரகுலத்தவனாகிய அநுமனைப் பார்த்து, 'நினக்கு இப்பொழுதே ஒரு வார்த்தை சொல்ல வேண்டுவதுளது. இவை போல்வன நின்பால் எடுத்துரைத்தற்கு ஏற்றவையாகும். இவற்றை நீ சிந்திப்பாயாக' என்று மேலும் கூறுவானாயினான்.

கு :—'மன் இளங்குமரன்' என்றது, தசரதச் சக்கரவர்த்தியின் புதல்வர்களுள் ஒருவனாய் இராமனுக்கு இளையோனாகிய இலக்குவனை. மன் இளங்குமரன், அனையது கருதி, அரிக்குலத்தவனை நோக்கி 'நி(ன்)னை ஒரு மாற்றம் நிகழ்த்துவது உளது; இனையன நின்பால் உரைத்தற்கு ஏற்ற; நீ இவை எண்ணுதி' என்னா, சொல்வான் என இயையும். நினை-நினக்கு; உருபு மயக்கம். இன்னே-இப்பொழுதே. (69)

4443. தேவியைக் குறித்துச் செய்த
சீற்றமும் மானத் தீயும்
ஆவியைக் குறித்து நின்ற
வையனை யதனைக் கண்டேன்
கோவியற் றரும நீங்கக்
கொடுமையோ டுறவு கூடிப்
பாவியர்க் கேற்ற செய்கை
கருதுவன் பழியும் பாரேன்.

**தேவியைக் குறித்துச் செய்த சீற்றமும் மானத் தீயும் ஆவியைக் குறித்து நின்ற ஐயனை; அதனைக் கண்டேன், கோ இயல் தருமம் நீங்க, கொடுமையோடு உறவு கூடிப் பாவியர்க்கு ஏற்ற செய்கை கருதுவன்; பழியும் பாரேன்.**

பொ :—சீதா பிராட்டியை (இராவணன் கவர்ந்து சென்ற தீச்செயல்) குறித்து மேற்கொண்ட வெகுளியும் மானமாகிய நெருப்பும் என் தலைவனாகிய இராமனது உயிரை (இலக்காக)ப் பற்றி நின்றன. அத் துன்ப நிலையினைக் கண்ட யான், வேந்தர்கட்குரிய இயல்பாகிய அறமுறை (என்னை விட்டு விலகி) ஒழிய (த் தீவினையாளர்க்கேயுரிய) கொடுந்தன்மையோடு உறவுகொண்டு கொடியோர்க்

குரிய கடுஞ்செயல்களைச் செய்யக் கருதுவேன்; (அதனால் வரும்) பழியையும் நோக்கமாட்டேன்.

கு:—சீற்றமும் மானத்தீயும் ஐயனை ஆவியைக் குறித்து நின்ற என இயையும்; பசுவைப் பாலைக் கறந்தான் என்புழிப் போல ஈண்டு இரண்டாம் வேற்றுமையாகிய செயப்படுபொருள் ஈருருபு இணைந்து வந்தது. ஐயனது ஆவியைக் குறித்து நின்ற என ஐயுருபை அது வுருபாகத் திரித்துக் கொள்ளுதலும் பொருந்தும். மானம்-என்றும் தம் நிலையிற் றுழாமையும் ஊழ்வயத்தால் தாழ்வு வந்துழி உயிர்வாழக் கருதாமையும் ஆகிய பெருமை. கோவியல் தருமம்-அரசர்க்குரிய அறமுறை. 'ஐயனது துயர் கண்டு ஆற்றாத யான், என்றும் பிரியாது உடன் பழகிய அரச நீதியாகிய நண்பு நீங்க, அறவே கூடத்தகாத கொடுமையோடு உறவு கூடியாயினும் எமக்கு இடர் செய்த வஞ்சகரையழித்தற்கு உறுதி பூண்டேன்' என்று இலக்குவன் அநுமனை நோக்கிக் கூறினான் என்பதாம். (70)

4444. ஆயினு மென்னை யானே
யாற்றிநின் றாவி யுற்று
நாயகன் றனையுந் தேற்ற
நாள்பல கழிந்த வன்றேல்
தீயுமிவ் வுலக மூன்றுந்
தேவரும் வீவ ரொன்றோ
வீயுநல் லறமும் போகா
விதியையார் விலக்கற் பாலார்.

'ஆயினும், என்னை யானே ஆற்றி நின்று, ஆவி உற்று, நாயகன்தனையும் தேற்ற நாள்பல கழிந்த; அன்றேல், தீயும், இவ் உலகம் மூன்றும்; தேவரும் வீவர்; ஒன்றோ? வீயும், நல் அறமும்; போகா விதியை யார் விலக்கற் பாலார்?"

பொ:—ஆனாலும் எனது வெகுளியை நானே தணித்துக்கொண்டு உயிர்தாங்கி நின்று, என் தலைவனையும் (ஆறுதல் கூறித்) தெளிவித்தலால் நாட்கள் பல கழிந்தன. இங்ஙனமன்றி யான் வெகுண்டெழுவேனாயின் இம் மூவுலகங்களும் எரிந்து (சாம்பராய்) ஒழியும்; தேவர்களும் இறந்தொழிவர்; அதுமட்டுமா? நல்ல அறமாகிய தெய்வமும் இறந்தொழியும். (இவ்வாறெல்லாம்) அழிவு நேராமல் நிலைத்திருத்தற்குக் காரணமாகிய ஊழின் வலியினை விலக்கும் பான்மையோர் யாருளர்?

கு :—என் தலைவனது துயர்நிலையைக் கண்டு ஆற்ருது வெகுண்டயான், எம்மவர்க்குரிய அரச நீதியையும் நீங்கிப் பழி பாராது கொடியோர் செய்யும் செயலை மேற்கொண்டேனும் எம்மை, வஞ்சித்த தீயோர்களைத் தண்டிக்க எண்ணினேன். ஆயினும் என் வெகுளியால் உலகிற்கு நேரும் தீமையினை எண்ணி என் கோபத்தை நானே ஒருவாறு அடக்கிக்கொண்டு, என் தலைவனையும் ஆறுதல் கூறித் தேற்றி வந்தமையால் இத்தனை நாட்களும் கழிந்தன. இங்ஙனம் அன்றி எனது வெகுளி தணியாது மூண்டெழுமாளுல் அதன் விளைவாக மூவுலகங்களும் எரிந்து சாம்பராய் அழியும்; விண்ணோர்களும் இறந்தொழிவர்; அறக்கடவுளும் தனக்குச் சார்பிடமின்றிக் கெட்டொழியும். இங்ஙனமெல்லாம் நிகழாதபடி நல்வினை இருந்தமையால் இவை தப்பி உய்ந்தன என்றவாறு. (71)

**4445.** உன்னைக்கண் டுங்கோன் றன்னை
யுற்றிடத் துதவும் பெற்றி
என்னைக்கண் டனன்போற் கண்டிந்
நாளிடை நெடிது வைகித்
தன்னைக்கொண் டிருந்தே தாழ்த்தா
னன்றெனிற் றனுவொன் ருலே
மின்னைக்கண் டனையா டன்னை
நாடுதல் விலக்கற் பாற்ருே?

'உன்னைக் கண்டு, உம்கோன் தன்னை,
உற்ற இடத்து உதவும் பெற்றி
என்னைக் கண்டனன் போல் கண்டு,
இந்நாளிடை நெடிது வைகி,
தன்னைக் கொண்டு இருந்தே தாழ்த்தான்;
அன்று எனில், தனு ஒன்ருலே
மின்னைக் கண்டனையாள் தன்னை
நாடுதல் விலக்கற் பாற்ருே?

பொ :—நின்னை முதலிற் கண்டு (உன் மூலமாக) உங்கள் மன்னவனுகிய சுக்கிரீவனை இடுக்கண் வந்துற்ற நிலையில் அப்பொழுதே களைந்து உதவிபுரியும் நட்பின் திறத்தால் (தம்பியாகிய) என்னை(த் தனக்குச் சிறந்தானுக)க் காணுமாறு போன்றே (தன் தம்பியாகக்) கருதி இத்துணை நாட்கள்வரை நெடிது தங்கித் (துன்பங்களைத்) தன் நிறையுடைமையாற் பொறுத்துக் கொண்டிருந்தே

காலந் தாழ்த்தான். அங்ஙனம் அல்லாவிட்டால், (தன்னுடைய) வில்லொன்றையே துணையாகக்கொண்டு, மின்னலைக் கண்டாற்போன்று ஒளிரும் மேனியளாகிய சீதாபிராட்டியைத் தேடிக்கண்டு மீட்டல் என்பது (பிறர் யாவராலும்) தடுக்குந் தன்மையதாகுமோ ?

கு :—இவ்வுலகுக்கெல்லாம் அச்சாணியென்னத்தக்க ஆற்றல் மிக்க பெரியோனாக நின்னை முதலிற் கண்டு (நின் மெய்யுரையின் மூலமாகவே) உங்கள் மன்னவனாகிய சுக்கிரீவனை உற்றுழியுதவும் நட்பினனாகவும் என்னைப் போன்ற தன் அன்புக்குரிய தம்பியாகவும் என் தலைவன் ஏற்றுக்கொண்டு நும்முடைய உதவி விரைவிற் பயன் தரும் என நம்பி இத்துணை நாட்கள் தன் துன்பங்களையெல்லாம் அரிதிற் பொறுத்துக்கொண்டிருந்தான். இவ்வாறு நும்மைஅன்பினால் நம்பி எதிர்பாராதிருந்திருப்பானாயின், தன் வில் ஒன்றையே துணையாகக்கொண்டு பகைவரைக் கொன்று தன் தேவியை மீட்டுக் கொண்டிருப்பான். நுமது கால நீட்டிப்பு என் தலைவன் நும்பாற் கொண்ட நம்பிக்கையைச் சிதைத்துவிட்டது என இலக்குவன் அநுமனுக்கு அறிவுறுத்தினான் என்பதாம். (72)

**4446.** ஒன்றுமோ வான மன்றி
யுலகமும் பதினா லுள்ள
வென்றிமாக் கடலு மேழேழ்
மலையுள்ள வென்ன வேயாய்
நின்றதோ ரண்டத் துள்ளே
யெனினது நெடிய தொன்றோ
அன்றுநீர் சொன்ன மாற்றந்
தாழ்வித்த றரும மன்றால்.

'ஒன்றுமோ, வானம் அன்றி
உலகமும் பதினால் உள்ள
வென்றி மாக் கடலும் ஏழ் ஏழ்
மலை உள்ள என்னவேயாய்
நின்றது ஓர் அண்டத்துள்ளே
எனின், அது நெடியது ஒன்றோ ?
அன்று நீர் சொன்ன மாற்றம்
தாழ்வித்தல் தருமம் அன்றால்.

பொ :—வானுலகம் ஒன்றுமட்டுமோ? அதுவேயன்றிப் பதினான்கு என எண்ணப்பட்டுள்ள உலகங்களும் வென்றியும் பெருமையும்

வாய்ந்த கடல்கள் ஏழும் குலமலைகள் ஏழும் (ஒருங்கே) உள்ளன என்று சொல்லுமாறு அமைந்து நின்றதாகிய இவ் ஓர் அண்டத் துள்ளே (ஓரிடத்தே சீதை சிறைவைக்கப்பட்டுள்ளாள்) என்றால், அவ்விடம் (அடைதற்கரிய) நெடுந்தூரத்தில் உள்ளதொன்றாகுமோ? (வாலியைக் கொன்று என் தலைவன் நுமக்கு அரசளித்த) அந்நாளில் நீங்கள் கூறிய உறுதிமொழியை (இதுகாறும்) நிறைவேற்றாமல் காலந் தாழ்த்தல் (நுமக்கு) அறமாகாது.

கு :—வானம் ஒன்றுமோ? அன்றிப் பதினால் உள்ள உலகமும் வென்றி மாக்கடல் ஏழும் மலை ஏழும் உள்ள என்னவேயாய் நின்றது ஓர் அண்டத்து உள்ளே எனின், அது நெடியது ஒன்றோ? என இயையும். இராவணன் சீதையைக் கவர்ந்துசென்று சிறை வைத் துள்ள இடம், வானுலகொன்றுமேயன்றிப் பதினாலுலகங்களும் ஏழு பெருங்கடல்களும் குலமலைகள் ஏழும் அடுத்தடுத்து அமைந்த ஓர் அண்டத்தின் எல்லைக்கு உட்பட்டு அடங்கிய மிக அணுகிய இடமே யாதலின் அதனை நாடிச் சென்று சீதையை மீட்டுக்கோடல் என்பது என் அண்ணலுக்கு அரியதொன்றன்றென்றும், நீங்கள் அன்று சொன்ன உறுதியை நிறைவேற்றாது காலந்தாழ்த்தல் அறநெறியன் றென்றும் இலக்குவன் அநுமனுக்கு அறிவுறுத்தினான் என்பதாம். ஊழிக்காலத்து மீதூர்ந்து உலகினைப் புறங்காணும் வலிமிக்க பெருங் கடல் என்பான் வென்றிமாக் கடல் என்றான். (73)

**4447.** தாழ்வித்தீ ரல்லீர் பன்னாட்
டருக்கிய வரக்கர் தம்மை
வாழ்வித்தீ ரிமையோர்க் கின்னல்
வருவித்தீர் மரபிற் றீராக்
கேள்வித்தீ யாளர் துன்பங்
கிளர்வித்தீர் பாவந் தன்னை
மூள்வித்தீர் முனியா தானை
முனிவித்தீர் முடிவி னென்றான்.

'தாழ்வித்தீர் அல்லீர்; பல்நாள்
தருக்கிய அரக்கர் தம்மை
வாழ்வித்தீர்; இமையோர்க்கு இன்னல்
வருவித்தீர்; மரபின் தீராக்

கேள்வித் தீயாளர் துன்பம்
　　கிளர்வித்தீர்; பாவம் தன்னை
மூள்வித்தீர்! முனியாதானை
　　முனிவித்தீர்' முடிவின்' என்றான்.

பொ :—(நீவிர், செய்யத்தகுவன செய்யாது) காலந்தாழ்த்தமை யாகிய ஒரு குற்றத்தை மட்டும் செய்த அளவில் நின்றீரல்லீர்; (அது காரணமாகச்) செருக்குற்றுத் (தீமை புரிந்து) திரியும் அரக்கர்களைப் பல நாட்கள் (நெடிது) வாழுமாறு செய்து விட்டீர்கள்; தேவர்கட்கு மேலும் துன்பங்களை வருவித்தீர்கள்; முறைமை வழுவாத மறை முறைப்படி தீயோம்பும் அந்தணாளராகிய முனிவர்களுடைய துன்பங் களை மேலும் கிளர்ந்து மிகும்படி செய்தீர்கள்; (அதனால், இவ்வுலகில்) பாவச் செயல்களை மேன்மேலும் மூளும்படி செய்தீர்கள்; முடிவாக எக்காலத்தும் வெகுளாத இயல்பினனாகிய என் தலைவனை வெகுளும் படி செய்துவிட்டீர்கள்.

கு :—நுமது காலதாமதம், கொடியோர்களாகிய அரக்கர்க்குப் பெருவாழ்வையும், நல்லோர்களாகிய தேவர் முனிவர் முதலியோர்க் குப் பெருந்துன்பங்களையும் உண்டாக்கி, உலகிற் பாவச் செயல்களை வளர்த்து, சினமே தோன்றாத நல்லியல்புடைய இராமனது தூய உள்ளத்தையும் வெகுளிக்கு இடமாக்கிவிட்டது என இலக்குவன் மனம் நொந்து கூறினான். (74)

## அநுமன் இலக்குவனுக்கு ஆறுதலும் உறுதியும் கூறி அவனைச் சுக்கிரீவன்பால் வருமாறு அழைத்தல்

**4448.** தோன்றலஃ துரைத்த லோடு
　　மாருதி தொழுது தொல்லை
ஆன்றநூ லறிஞ போய
　　பொருண்மனத் தடைப்பா யல்லை
ஏன்றது முடியே மென்னி
　　னிறத்துமித் திறத்துக் கெல்லாஞ்
சான்றினி யறனே போந்துன்
　　றம்முனைச் சார்தி யென்றான்.

தோன்றல் அஃது உரைத்தலோடும்,
　　மாருதி தொழுது, 'தொல்லை
ஆன்ற நூல் அறிஞ! போய
　　பொருள் மனத்து அடைப்பாய் அல்லை;

ஏன்றது முடியேம் என்னின்
இறத்தும்; இத்திறத்துக்கு எல்லாம்
சான்று இனி அறனே; போந்து
உன் தம்முனைச் சார்தி' என்றான்.

பொ:—(மனுகுலத்) தோன்றலாகிய இலக்குவன் அம்மொழியைக் கூறிய அளவில், அநுமன் (அவனை) வணங்கி, தொன்று தொட்டு மாறாதுவரும் நற்பொருள்கள் நிரம்பிய நூல்களைக் கற்றுணர்ந்த அறிஞனே! நிகழ்ந்துபோன செய்தியை நின் திருவுள்ளத்திற் கொள்ளாது தவிர்ப்பாயாக. (நாங்கள் செய்து நிறைவேற்றுவதாக) ஏற்றுக்கொண்ட காரியத்தைச் செய்து முடிக்காமல் இடையில் விட்டு விடுவோமானால் எம் உயிரைத் துறந்து விடுவோம். இனி இச்செயல் திறத்துக்கு எல்லாம் அறமே சாட்சியாகும். (ஆதலால் நின் சினம் தவிர்ந்து) என்னுடன் போந்து உன் தமையன் முறையினனாகிய சுக்கிரீவனைச் சேர்வாயாக.

கு:—ஏன்றது - (செய்து முடிப்பதாக) ஏற்றுக்கொண்ட காரியம் இறத்தும் - இறப்போம். இனி, இத்திறத்துக்கெல்லாம் அறமே சான்று என இயையும். இலக்குவன் கூறியவற்றைக் கேட்ட அநுமன், அவனது அடங்காச் சினத்திற்குக் காரணமாகிய உள்ளத் துயரை நன்குணர்ந்து, தங்களுடைய பிழையினைப் பொறுத்தருளுமாறு வணங்கி, 'கற்றுணர்ந்த அறிஞனே! சீதாபிராட்டியைத் தேடித் தருவதாக நாங்கள் ஏற்றுக்கொண்ட இக்காரியத்தைத் தவறாது செய்து முடிப்போம். அவ்வாறு செய்யத் தவறினோமாயின் எம் உயிரைத் துறப்போம் என்று அறத்தெய்வமே சாட்சியாக உனக்கு உறுதி கூறுகின்றேன்' எனச் சூளுறவு செய்து இலக்குவனது வெகுளியைத் தணித்து அவனைச் சுக்கிரீவன்பால் வருமாறு அழைத்தனன் என்பதாம்.

(75)

இலக்குவன், அநுமனது வார்த்தைக்கு இசைந்து
அவனொடும் சுக்கிரீவன்பாற் செல்லுதல்

4449. முன்னுநீ சொல்லிற் றன்றே
முயன்றது முற்றுங் காலை
இன்னுநீ யிசைத்த செய்வா
னியைந்தன மென்று கூறி

அன்னதோ ரமைதி யான்ற
　　னருள்சிறி தறிவா னேக்கிப்
பொன்னின்வார் சிலேயி னுனு
　　மாருதி யோடும் போனுன்.

'முன்னும், நீ சொல்லிற்று அன்றோ
　　முயன்றது? முற்றுங் காலே
இன்னும் நீ இசைத்த செய்வான்
　　இயைந்தனம்' என்று கூறி,
அன்னது ஓர் அமைதியான் தன்
　　அருள் சிறிது அறிவான் நோக்கி,
பொன்னின் வார் சிலேயினுனும்,
　　மாருதியோடும் போனுன்.

பொ :—அழகுடையதாய் நீண்ட வில்லினையுடையவனுகிய இலக்குவனும் (அநுமனை நோக்கி,) முன்னரும் (நாங்கள் வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு அரசளிக்க) முயன்ற செயல் அநுமனுகிய நீ சொல்லி நிகழ்ந்த நிகழ்ச்சியல்லவா? (அதன் பயனுகச் சுக்கிரீவன் முதலியோர் செய்தற்குரிய முயற்சி) நிறைவேறிப் பயனளித்தற்குரிய காலத்தில் இனியும் நீ சொல்லியதைச் செய்ய மனம் இசைந்துள் ளோம் என்று சொல்லி, அத்தகையதோர் அமைதித் தன்மையில் உள்ளவனுகிய சுக்கிரீவனது அருட்குணத்தைச் சிறிது அறியக் கருதி அநுமனுடனே சென்ருன்.

கு :—முன்னும் முயன்றது, நீ சொல்லிற்று அன்றோ? முற்றுங் காலே இன்னும் நீ இசைத்த செய்வான் இயைந்தனம் என இயையும் அன்னதோர் அமைதியான் என்றது, சுக்கிரீவனை; தன்னெடு நட்புக் கொண்டானுக்குப் பகையாயினுனைச் சினந்து விரைந்து புறப் படாது, தனக்குக் கிடைத்த அரச போகத்திலேயே அமைந்துள்ள வன் என்றவாறு. அருள் என்றது, தன்னைச் சார்ந்தாரது துன்பங் கண்டு அஞ்சிப் புன்கணீர் சொரியும் மென்கட் செல்வமாகிய அருட் குணத்தை. பொன்னின் வார்சிலேயினுன் என்றது, இலக்குவனை. பொன்னின் வார்சிலே - அழகுடையதாய் நீண்ட வில்; பொற்கட்டுக் களையுடைய நீண்ட வில் எனினும் அமையும். பொன்னின் வார்சிலே யினுனும், கூறி, அறிவான் நோக்கி, மாருதியோடும் போனுன் என முடிக்க. (76)

## தாரை, மகளிர்கூட்டத்துடன் திரும்பிச் செல்லுதல்

**4450.** அயில்விழிக் குமுதச் செவ்வாய்ச்
சிலைநுத லன்னப் போக்கின்
மயிலியற் கொடித்தே ரல்குன்
மணிநகைத் திணிவேய் மென்ருேட்
குயின்மொழிக் கலசக் கொங்கை
மின்னிடைக் குமிழேர் மூக்கின்
புயலியற் கூந்தன் மாதர்
குழாத்தொடுந் தாரை போனுள்.

அயில் விழி, குமுதச் செவ்வாய்,
சிலைநுதல், அன்னப் போக்கின்,
மயில் இயல், கொடித்தேர் அல்குல்,
மணி நகை, திணிவேய் மென்தோள்,
குயில் மொழி, கலசக் கொங்கை
மின் இடை, குமிழ் ஏர் மூக்கின்,
புயல் இயல் கூந்தல், மாதர்
குழாத்தொடும் தாரை போனுள்.

பொ :—வேற்படை போலும் கண்களையும் செவ்வாம்பல் மலர் போலும் சிவந்த வாயினையும் விற்போலும் புருவத்தினையும் அன்னத்தின் நடைபோலும் நடையினையும் மயிலினது சாயல்போலும் மென்மைத் தன்மையினையும் கொடியினைத் தன்னிடத்தே கொண்ட தேர் போலும் அல்குலினையும் முத்துப்போலும் பற்களையும் திணிந்த மூங்கில்போலும் மெல்லிய தோள்களையும் குயிலின் குரல்போலும் இனிய மொழியினையும் பொற்கலசம் போலும் நகில்களையும் மின்னற் கொடிபோலும் இடையினையும் குமிழ மலர்போலும் அழகிய மூக்கினையும் கருமுகில்போலும் கூந்தலினையும் உடைய மகளிர் கூட்டத்துடன் தாரை (அவ்விடத்தை விட்டுத் திரும்பிச்) சென்ருள்.

கு :—அயில் விழி என்பது முதல் புயலியற்கூந்தல் என்பது வரையுள்ள உவமைத்தொகைச் சொற்கள் மாதர் என்னும் சொல்லொடு வேற்றுமைப் பொருள்படத் தொக்குநின்றன. ஆதலின், வல்லெழுத்து மிகுதலும், ஈறுதிரிதலும், சாரியை பெறுதலுமாகிய வேற்றுமைப் புணர்ச்சிக்கேற்ற செய்கை பெற்றன. அயில் - வேல். குமுதம் - அல்லி. மணி - முத்து. ஏர் - அழகு. புயல் - மேகம். நெற்றி என்னும் பொருளுடைய நுதல் என்னுஞ் சொல் ஈண்டு அதனேடியையுடைய புருவத்தினை யுணர்த்திநின்றது. தாரை. மாதர்குழாத்தொடும் போனுள் என முடியும். (77)

### அங்கதன் இலக்குவனை வணங்கி, அவன் பணித்தவண்ணம் அவனது வருகையைச் சுக்கிரீவனுக்கு உணர்த்தச் செல்லுதல்

**4451.** வல்லமந் திரிய ரோடு
வாலிகா தலனு மைந்தன்
அல்லியங் கமல மன்ன
அடிபணிந் தச்சந் தீர்ந்தான்
வில்லியு மவனை நோக்கி
விரைவினென் வரவு வீர
சொல்லுதி நுந்தைக் கென்று
னன்றெனத் தொழுது போனான்.

வல்ல மந்திரியரோடு
வாலி காதலனும், மைந்தன்
அல்லி அம் கமலம் அன்ன
அடி பணிந்து, அச்சம் தீர்ந்தான்;
வில்லியும் அவனை நோக்கி,
'விரைவின் என் வரவு வீர!
சொல்லுதி நுந்தைக்கு' என்றான்;
'நன்று' எனத் தொழுது போனான்.

பொ :—வாலியின் மைந்தனாகிய அங்கதனும் (அரச நீதிகளில்) தேர்ந்தவர்களாகிய அமைச்சர்களோடும் (ஆற்றல்மிக்க) வீரனாகிய இலக்குவனுடைய அகவிதழ்களையுடைய அழகிய செந்தாமரை மலர் போலும் திருவடிகளை வணங்கி (த் தான் முன்கொண்ட) அச்சம் நீங்கப்பெற்றான். விற்றொழிலில் வல்லவனாகிய இலக்குவனும் அவ் அங்கதனைப் பார்த்து, 'வீரனே! எனது வருகையினை உன் (சிறிய) தந்தையாகிய சுக்கிரீவனுக்கு விரைவிற் (சென்று) கூறுவாயாக' எனப் பணித்தான். (அது கேட்டு அங்கதனும்) 'நல்லது (அவ்வாறே செய்வேன்') என்று கூறி (இலக்குவனை) வணங்கிச் சென்றான்.

கு :—வாலி காதலன் - வாலியின் புதல்வன்; அங்கதன். மைந்தன் என்றது மைந்துடையானாகிய இலக்குவனை. மைந்து - வலிமை; வீரம். வில்லி - விற்றொழிலில் வல்லவன்; இலக்குவன். வில்லியும் அவனை நோக்கி, 'வீர என் வரவு நுந்தைக்கு விரைவிற் சொல்லுதி' என்றான்; (வாலி காதலனும்) 'நன்று' எனத் தொழுது போனான் என இயையும். (78)

## இலக்குவன் சினத்துடன் வந்திருத்தலை அங்கதன் சுக்கிரீவனுக்குத் தெரிவித்தல்

4452. போனபின் தாதை கோயில்
புக்கவன் பொலங்கொள் பாதம்
தானுறப் பற்றி முற்றுந்
தைவந்து தடக்கை வீரன்
மானவற் கிளையோன் வந்துன்
வாயிலின் புறத்தான் சீற்றம்
மீனுயர் வேலை மேலும்
பெரிதிது விளைந்த தென்ருன்.

போனபின், தாதை கோயில்
புக்கு, அவன் பொலம்கொள் பாதம்
தான் உறப் பற்றி, முற்றும்
தைவந்து, தடக்கை வீரன்,
'மானவற்கு இளையோன் வந்து
உன் வாயிலின் புறத்தான்; சீற்றம்
மீன் உயர் வேலை மேலும்
பெரிது; இது விளைந்தது' என்ருன்.

பொ:—நீண்ட கைகளையுடைய வீரனுகிய அங்கதன், (இலக்குவனைத் தொழுது சென்ற பின்னர்த் தன் (சிறிய) தந்தையாகிய சுக்கிரீவனது அரண்மனையிற் புகுந்து அவனுடைய பொன்போலும் பொலிவினைக்கொண்ட அழகிய பாதங்களைத் தான் பொருந்தப்பற்றி முழுவதும் தடவி (த் துயிலெழுப்பி) 'இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன் வந்து உன் வாயிலின் புறத்தே நிற்கின்ருன். அவன் கொண்டுள்ள வெகுளி, மீன்கள் நிரம்பிய கடலினும் பெரிதாகவுளது. இது (இங்கு) நிகழ்ந்த செய்தியாகும்' என்று கூறினுன்.

கு:—தடக்கை வீரன், போனபின், தாதைகோயில் புக்கு, அவன் பாதம்பற்றித் தைவந்து 'மானவற்கு இளையோன் வந்து உன் வாயிலின் புறத்தான்; சீற்றம் வேலைமேலும் பெரிது; இது விளைந்தது' என்ருன் என இயையும். தைவருதல் - தடவுதல். தன்னிற்பெரியோரைத் துயிலெழுப்புங்கால் அவர்களுடைய பாதங்களைத் தீண்டி எழுப்புதல் மரபு. மானவன் - மனுகுலத் தோன்றலாகிய இராமன். வேலை - கடல். (79)

## இலக்குவன் வெகுண்டு வருதற்குரிய காரணம் யாது? எனச் சுக்கிரீவன் அங்கதனை வினவுதல்

**4453.** அறிவுற்று மகளிர் வெள்ள
மலமரு மமலை நோக்கிப்
பிறிவுற்ற மயக்கத் தான்முந்
துற்றதோர் பெற்றி யோரான்
செறிபொற்று ரலங்கல் வீர
செய்திலங் குற்ற நம்மைக்
கறுவுற்ற பொருளுக் கென்னோ
காரணங் கண்ட தென்றான்.

அறிவுற்று, மகளிர் வெள்ளம்
அலமரும் அமலை நோக்கிப்
பிரிவுற்ற மயக்கத்தான், முந்து
உற்றது ஓர் பெற்றி ஓரான்,
'செறி பொன் - தார் அலங்கல் வீர!
செய்திலம் குற்றம்; நம்மைக்
கறுவுற்ற பொருளுக்கு என்னோ
காரணம் கண்டது?' என்றான்.

பொ:—(அந்தப்புரத்திலுள்ள) மகளிர் கூட்டம், (சீற்றங்கொண்ட இலக்குவனது வருகையைக் கூறி அங்கதன் துயிலெழுப்புதலை) அறிந்து, மனங்கலங்கி வருந்தியெழுப்பிய ஆரவார ஒலியைக் கண்டு (அதனால்) மயக்கம் நீங்கப் பெற்றவனாகிய சுக்கிரீவன், இதற்குமுன் நிகழ்ந்த நிகழ்ச்சிகளில் ஒன்றையும் உணராதவனாய், (அங்கதனை நோக்கி,) 'செறிந்த பொன்மாலையை அணிந்த வீரனே! (இராம இலக்குவர் திறத்து நாம்) குற்றம் ஏதும் செய்தோம் அல்லோம். (அவ்வாறாகவும், இலக்குவன்) நம்மை வெகுளுதலாகிய இதற்குக் காரணமாக (நம்பாற்) கண்ட குற்றம் யாது' என வினவினான்.

கு:—'மகளிர் வெள்ளம், அறிவுற்று அலமரும் அமலை நோக்கிப் பிறிவுற்ற மயக்கத்தான்' என்றது, சுக்கிரீவனை. மயக்கம் பிறிவுற்றான் எனற்பாலது, பிறிவுற்ற மயக்கத்தான் என வந்தது. இத்தகைய சொல்வழக்கு, 'அருங்கேடன்' (திருக்குறள்-210) எனவும், 'சென்று சேக்கல்லாப்புள்ள' (அகநானூறு-42) எனவும் அருகிக் காணப்படுதல் இங்கு ஒப்பு நோக்கியுணர்தற்குரியதாகும். அலமரல்-சுழற்சி; மனக் கலக்கம். அமலை - ஆரவாரம்; பேரொலி. அந்தப்புர மகளிரொடு காமபரவசனாகி மயக்கமுற்று உறங்கிக்கிடந்த சுக்கிரீவன், தான்

இராமனிடம் படையொடு வருவதாகக் குறித்த காலஎல்லை கடந்தமையும், அதனால் இராமனது ஆணையினை மேற்கொண்டு இலக்குவன் வெகுண்டு கிட்கிந்தை நோக்கி வந்தமையும், அவனது வெகுளி கண்டு அஞ்சிய அங்கதன் முதற்கண் தன்னைவந்து துயில் எழுப்பினமையும், தான் துயிலுணராத நிலையில் அங்கதன் அநுமன் முதலியோரொடும் தாரையை அணுகி அவளது ஆலோசனையைக் கேட்டு நின்ற நிலையில், சினமுற்றுவரும் இலக்குவனைக் கண்டு அஞ்சிய குரங்குகள் அவன் உள்ளே நுழையாதவாறு கிட்கிந்தை நகர வாயிலைத் தாளிட்டு அடைத்தமையும், அதுகண்ட இலக்குவன் சினந்து உதைக்க வாயில் சிதைந்து இடிந்து விழுந்தமையும், அதனைக் கண்ட குரங்குகள் நாற்றிசைகளிலும் ஓடியொளிந்தமையும், அனுமன் வேண்டியவண்ணம் தாரை மகளிர் கூட்டத்துடன் சென்று குறுக்கிட்டு நின்று தக்க சமாதானங் கூறி இலக்குவனது சீற்றத்தைத் தணிவித்தமையும் ஆகிய நிகழ்ச்சிகளில் ஒன்றையும் அறிந்திலன் என்பார், 'முந்து உற்றதோர் பெற்றி ஓரான்' என்றார் ஆசிரியர். கறுவுறல் - வெகுளுதல். தார், அலங்கல் என்பன மாலை என்னும் பொருளுடைய சொற்கள். 'தார்குலாம் அலங்கல் மார்பன்' (51) என்ற தொடர்க்குக் கூறிய விளக்கம் நோக்கத்தக்கது. (80)

### அங்கதன், நிகழ்ந்தவற்றை எடுத்துரைத்தல் 4454-4459

**4454.** இயைந்தநா ளெந்தை நீசென்
றெய்தலை செல்வ மெய்தி
வியந்தனை யுதவி கொன்றாய்
மெய்யிலை யென்ன வீங்கி
உயர்ந்தது சீற்ற மற்றீ
துற்றது செய்கை முற்றும்
நயந்தெரி யனுமன் வேண்ட
நல்கின னம்மை யின்னும்.

"இயைந்த நாள் எந்தை நீ சென்று
எய்தலை; செல்வம் எய்தி
வியந்தனை; உதவி கொன்றாய்;
மெய் இலை" என்ன வீங்கி
உயர்ந்தது சீற்றம்; மற்று ஈது
உற்றது செய்கை; முற்றும்
நயம் தெரி அனுமன் வேண்ட,
நல்கினன், நம்மை இன்னும்.

பொ :—என் தந்தையே! நீ (சேனையுடன் வருவதாக முன்னர்) உடன்பட்டுரைத்த நாளிலே (இராமனைச்) சென்று அடைந்தாயல்லை; (பெறுதற்கு அரிய அரசபதவியாகிய) செல்வத்தினைப் பெற்றுச் செருக்குற்றாய்; செய்தநன்றியை மறந்துவிட்டாய்; (சொன்ன சொற் பொய்த்து) உண்மையில்லாதவன் ஆயினாய் என்று (இவ்வாறு இலக்குவன் உள்ளத்தே) சினம் பொங்கி மூண்டது. இதுவே (அவன் நம்மை வெகுண்டு) வந்தமைக்குரிய காரணமாகும். (இந்நிலையில்) நீதி நூல்களின் திறம் முழுவதும் (இனிதின்) உணர்ந்த அநுமன் (இன்சொற் கூறி இரந்து) வேண்டினமையால் (அவ் இலக்குவன்) நம்மை இன்னும் (உயிரோடிருக்குமாறு) அருள் செய்தனன்.

கு :—'வீர! நாம் குற்றம் செய்திலம்; அங்ஙனமாகவும் இலக்குவன் நம்மை வெகுளுதற்குரிய காரணம் யாது?' என வினவிய சுக்கிரீவனை நோக்கி, 'எந்தையே! நீ சேனையுடன் வருவதாகக் குறித்த கால எல்லைக்குள் இராமனைச் சென்றடையாமையால், நீ பெறற்கருஞ் செல்வம் பெற்றபின் சிந்தனை பிறிதாய்ச் செய்ந்நன்றி மறந்தனையென்றும் தன்னை வியந்து செருக்குற்றனை யென்றும் சொன்ன சொற்படி நடவாமற் பொய்த்தனை யென்றும் எண்ணித் தன் மனத்தே சீற்றம் கிளர்ந்தெழ இலக்குவன் நம்மை வெகுண்டு வந்தனன்; இந்நிலையில் நீதி நூல்களை நன்குணர்ந்த அநுமன் இலக்குவனது சீற்றந்தணிய இன்சொற் கூறியிரந்து வேண்டினமையால் அவன் சீற்றந்தணிந்து நம்மைக்கொல்லாது இன்னும் உயிருடன் வைத்துள்ளான்' என அங்கதன் அங்கு நிகழ்ந்தவற்றை முதற்கண் தொகுத்துக் கூறும் முறையில் இச் செய்யுள் அமைந்துளது. இதன்பின் வரும் ஐந்து செய்யுட்களும் இச் செய்தியை விரித்துரைக்கும் முறையில் அமைந்தன. வியத்தல் - மதத்தால் தன்னை நன்கு மதித்தல்; செருக்கடைதல். நயம் முற்றும் தெரி அநுமன் வேண்ட நம்மை இன்னும் நல்கினன் என இயையும். நயம் - நீதி. வேண்ட - வேண்டினமையால்; செயவென் எச்சம் காரணப் பொருளில் வந்தது. (81)

**4455.** வருகின்ற வேக நோக்கி
வானர வீரர் வானைப்
பொருகின்ற நகர வாயிற்
பொற்கத வடைத்துக் குன்றம்

அருகொன்று மில்லா வண்ணம்
வாங்கின ரடுக்கி மற்றும்
தெரிகின்ற சினத்தீப் பொங்கச்
செருச்செய்வான் செருக்கி நின்றார்.

• வருகின்ற வேகம் நோக்கி,
வானர வீரர், வானைப்
பொருகின்ற நகர வாயில்
பொற் கதவு அடைத்து, குன்றம்
அருகு ஒன்றும் இல்லா வண்ணம்
வாங்கினர் அடுக்கி, மற்றும்
தெரிகின்ற சினத் தீப் பொங்க,
செருச் செய்வான் செருக்கி நின்றார்.

பொ :—(இலக்குவன் நம்மேற் சீற்றங்கொண்டு) வரும் வேகத்தைக் கண்டு குரக்கினத்தாராகிய (நம்) வீரர்கள், ஆகாயமளவும் உயர்ந்தோங்கிய கிட்கிந்தை நகரத்தின் வாயிலில் அமைந்த பொன்னாற் செய்யப்பட்ட (திண்ணிய) கதவுகளைச் சாத்தி (த்தாளிட்டு)ப் பக்கங்களில் எங்கும் மலைகளே யில்லாதபடி (அங்குள்ள குன்றங்களை யெல்லாம்) பெயர்த்தெடுத்து (அவ்வாயிலை ஒட்டி அரணாக) அடுக்கி மேலும் மேலும் வெளிப்பட்டு எழும் இயல்பினதாகிய வெகுளித் தீ மூண்டெழ (அவ் இலக்குவனொடு) போர் செய்தற்குத் தருக்குற்று நின்றார்கள்.

கு :—வானர வீரர், (இலக்குவன்) வருகின்ற வேகம் நோக்கி, நகர வாயிற் பொற்கதவடைத்து, குன்றம் வாங்கினர் அடுக்கி, சினத் தீப் பொங்கச் செருச் செய்வான் செருக்கி நின்றார் என இயையும். வேகம் - வெகுளி; விரைவு. வானைப் பொருதல் ஆகாயத்தை ஊடுருவி உயர்தல். பொற்கதவு - பொன்னால் இயன்ற திண்ணிய கதவு. (82)

**4456.** ஆண்டகை யதனை நோக்கி
யம்மலர்க் கமலத் தாளாற்
றீண்டினன் றீண்டா முன்னந்
தெற்கொடு வடக்குந் தேய

நீண்டகன் மதிலுங் கொற்ற
வாயிலு நிரைத்த குன்றும்
கீண்டன தகர்ந்து பின்னைப்
பொடியொடுங் கெழீஇய வன்றே.

ஆண்தகை, அதனை நோக்கி,
அம் மலர்க் கமலத் தாளால்
தீண்டினன்; தீண்டா முன்னம்,
தெற்கொடு வடக்கும் தேய
நீண்ட கல் மதிலும், கொற்ற
வாயிலும், நிரைத்த குன்றும்,
கீண்டன தகர்ந்து, பின்னைப்
பொடியொடும் கெழீஇய அன்றே.

பொ:—ஆடவரிற் சிறந்தோனாகிய இலக்குவன், (வானர வீரர்களின்) அச்செய்கையைப் பார்த்து அழகிய தாமரை மலர்போலும் தன் பாதத்தினால் (அவ்வாயிற் கதவை) உதைத்தான்; (அவனது பாதம்) படுதற்கு முன்னமே தெற்கு வடக்கு என்னும் திசையெல்லை தேயுமாறு நீண்டுள்ள கல்லினாலாய (திண்ணிய) மதிலும் வெற்றித் திறம் விளங்கும் நகர வாயிலும் (அவ் வாயிலையடுத்து வானர வீரர்கள்) அடுக்கி அமைத்த மலையடுக்குகளும் உடைந்து துகளாய்ச் சிதறினவாகிப் பின் புழுதியொடு புழுதியாய்க் கலந்து போயின.

கு:—ஆண்டகை என்றது வீரருட் சிறந்தோனாகிய இலக்குவனை. தெற்கொடு வடக்கும் தேய நீண்ட கல்மதில் என்றது, தெற்கு வடக்கு எனப்படும் பூமியின் திசைகளும் குறுகித் தேயுமாறு தெற்கு வடக்காகிய அத்திசைகளையுங் கடந்து நெடிது நீண்டுள்ள கல்மதில் என அம்மதிலின் நீட்சியை மிகுத்துக் கூறியவாறு. அம்மலர்க் கமலத்தாள் என்பதனை அம்கமல மலர்த்தாள் என மாறிக் கூட்டுக. தாளின் தீண்டுதல் - காலால் உதைத்தல். பொருநர்த்தேய்த்த போரருவாயில் என்பான், 'கொற்ற வாயில்' என்றான். தீண்டா முன்னம் மதிலும் வாயிலும் குன்றும் கீண்டன; தகர்ந்து பின்னைப் பொடியொடும் கெழீஇய என முடிக்க. கீண்டன - பிளந்தன; உடைந்தன. கெழீஇய - கலந்தன; கெழுவுதல் - கலத்தல். (83)

4457. அந்நிலை கண்ட திண்டோ
ளரிக்குலத் தனிக மம்மா
எந்நிலை நின்ற தென்கேன்
யாண்டுப்புக் கொளித்த தென்கேன்
இந்நிலை கண்ட வன்னை
யேந்திழை யாயத் தோடு
மின்னிலை வில்லி ஞனை
வழியெதிர் விலக்கி நின்ருள்.

'அந்நிலை கண்ட திண்தோள்
அரிக்குலத்து அனிகம், அம்மா!
எந்நிலை நின்றது என்கேன்?
யாண்டு புக்கு ஒளித்தது என்கேன்?
இந்நிலை கண்ட அன்னை,
ஏந்து இழை ஆயத்தோடு,
மின்நிலை வில்லிஞனை
வழிஎதிர் விலக்கி நின்ருள்.

பொ:—(இலக்குவன் உதைத்தமையால் நேர்ந்த பேரழிவாகிய) அந்நிலைமையை நேரிற்கண்ட திண்ணிய தோள்களையுடைய குரக்கினச் சேனையானது எவ்விடத்தில் நிலைபெற்று நின்றதென்று கூறுவேன்? எவ்விடத்திற் புகுந்து மறைந்து கொண்டதென்று சொல்லுவேன்? (வானர சேனையின்) இத்துன்ப நிலையை நேரிற்கண்ட (என்) தாயாகிய தாரை, அணிகலன்களை யணிந்த மகளிர் கூட்டத்துடன் மின்னலைப் போன்று மிளிரும் ஒளி நிலைபெற்ற விற்படையினஞகிய இலக்குவனை (அவன்) வரும் வழியில் எதிர்சென்று மறித்து நின்ருள்.

கு:—அரிக்குலம் - குரங்கின் கூட்டம். அனிகம் - சேனை. அம்மா - வியப்பிடைச் சொல். இலக்குவன் தனது பாதத்தால் வாயிற்கதவை உதைத்த அளவில் மதிலும் வாயிலும் மலையடுக்குகளும் பிளந்து பொடியாய்ச் சிதர்ந்து வீழ்ந்ததனை நேரிற் கண்ட வானரங்கள் தாம் முன்பு நின்ற இடமும் பின் சென்று புக்கு மறைந்த இடமும் இவையெனக் கண்டோர் தெரிந்து கூறவொண்ணுதவாறு எட்டாத் திசைகளில் விரைந்து ஓடி மறைந்து உயிர்தப்பின என்பான், 'எந்நிலை நின்ற தென்கேன், யாண்டு புக்கொளித்த தென்கேன்' என்ருன்.

(84)

4458. மங்கையர் மேனி நோக்கான்
மைந்தனு மனத்து வந்து
பொங்கிய சீற்றம் பற்றிப்
புகல்கிலன் பொருமி நின்ருன்
நங்கையு மினிது கூறி
நாயக நடந்த தென்னே
எங்கள்பா லென்னச் சொன்ன
ளண்ணலு மினைய சொன்ருன்.

'மங்கையர் மேனி நோக்கான்,
மைந்தனும், மனத்து வந்து
பொங்கிய சீற்றம் பற்றிப்
புகல்கிலன்; பொருமி நின்ருன்;
நங்கையும் இனிது கூறி,
'நாயக! நடந்தது என்னே
எங்கள்பால்?' என்னச் சொன்னுள்;
அண்ணலும் இனைய சொன்ருன்.

பொ :—உரனுடையுள்ளத்தனுகிய இலக்குவனும் (தாரையுடன் வந்து வழிமறித்து நின்ற) மகளிரது மேனியைக் கண்ணெடுத்துப் பாராதவனுய்த் தன் மனத்திலே கிளர்ந்தெழுந்த மிக்க சினத்தினுல் வார்த்தையெதுவும் சொல்லமாட்டாதவனுகி, விம்மி நின்ருன். தாரையாகிய நங்கையும் (அவனது வெகுளி தணியுமாறு) இன்மொழி பகர்ந்து, 'தலைமைப் பண்பு வாய்ந்தவனே! (இராமனை அகலாதுடனுறையும் நீ அப்பெருமானைத் தனித்திருக்கச் செய்து நின் பாதங்கள் நோவ) எங்களிடத்தில் நடந்து வந்த காரியம் யாதோ' என வினவினுள். தலைமைக் குணமுடைய இலக்குவனும் (தான் வருதற்குக் காரணமாகிய) இவற்றை வெளியிட்டுரைத்தான்.

கு :—மனத்தைப் பொறிவழிச் செலுத்தாது தடுத்து நிறுத்திய உரவோன் இலக்குவன் என்பது தோன்ற அவனை 'மைந்தன்' எனக் குறித்தார் ஆசிரியர். நோக்கான், புகல்கிலன் என்பன முற்றெச்சங்கள். பொருமுதல் - தான் சொல்லக் கருதியவற்றை வார்த்தையால் வெளியிட ஒண்ணுது விம்மி வருந்துதல். எங்கள் பால் நடந்தது என்னே என இயையும். நடந்தது - கால்நோவ நடந்த செயல். 'இனைய' என்றது மேல் 55-ஆம் செய்யுளில், தாரையை நோக்கி இலக்குவன் கூறியனவாக அமைந்தவற்றை. (85)

**4459.** அதுபெரி தறிந்த வன்னை
யன்னவன் சீற்ற மாற்றி
விதிமுறை மறந்தா னல்லன்
வெஞ்சினச் சேனை வெள்ளம்
கதுமெனக் கொணருந் தூது
கல்லதர்ச் செல்ல வேவி
எதிர்முறை யிருந்தா னென்று
ளிதுவிங்குப் புகுந்த தென்றான்.

'அது பெரிது அறிந்த அன்னை,
அன்னவன் சீற்றம் மாற்றி,
"விதிமுறை மறந்தான் அல்லன்;
வெஞ்சினச் சேனை வெள்ளம்
கதுமெனக் கொணரும் தூது
கல் அதர்ச் செல்ல ஏவி,
எதிர்முறை இருந்தான்" என்றாள்;
இது இங்குப் புகுந்தது' என்றான்.

பொ:—(இலக்குவன் தான் வருதற்குக் காரணமாகக் குறித்த) அதனை நன்றாக உணர்ந்த என் தாயாகிய தாரை, அவ் இலக்குவனது கோபத்தைத் தணிவித்து (அவனை நோக்கி, இராமபிரானது) கட்டளையின் முறைமையினை (ச் சுக்கிரீவன்) மறந்தவன் அல்லன்; கடுஞ்சினமுடைய வானர சேனைகளின் தொகுதியை விரைவிற் கொண்டு வருதற்குரிய தூதர்களைக் கற்கள் நிரம்பிய வழியிலே செல்லுமாறு செலுத்தி (அச் சேனைகளை) எதிர்ப்பட்டு (த் தன்னுடன்) கொணரும் நோக்கத்துடன் (இந் நகரத்தே) தாமதித்திருந்தான்' என்று கூறினாள். இது இங்கு நிகழ்ந்த செய்தியாகும் என (அங்கதன்) கூறினான்.

கு:—அது - தான் வெகுண்டு வருதற்குரிய காரணமாக இலக்குவனாற் குறிக்கப்பெற்ற அது. பெரிது அறிதல் - நன்றாக அறிதல்; தெளிய உணர்தல். அன்னை - தாய்; என்றது, அங்கதனுக்குத் தாயாகிய தாரையை. கதுமென - விரைய. அதர் - வழி. (86)

‘இலக்குவனது வருகையை எனக்குத் தெரிவியாதது என்’ எனச் சுக்கிரீவன் அங்கதனை நோக்கி வினவுதல்

**4460.** சொற்குரித் தான வெல்லாஞ்
சொல்லலு மருக்கன் றோன்றல்
நிற்குரி யார்கள் யாவ
ரனையவர் சினத்தி னேர்ந்தால்
விற்குரி யானித் தன்மை
வெகுளியின் விரைவி னெய்த
வெற்குரை யாது நீரி
தியற்றிய தென்னை யென்றான்.

சொற்கு உரித்தான எல்லாம்
சொல்லலும், அருக்கன் தோன்றல்,
‘நிற்க உரியார்கள் யாவர்,
அனையவர் சினத்தின் நேர்ந்தால்?
விற்கு உரியான், இத்தன்மை
வெகுளியின், விரைவின் எய்த,
எற்கு உரையாது நீர் இது
இயற்றியது என்னை?’ என்றான்.

பொ :—(இவ்வாறு அங்கதன், தான்) சொல்லுதற்குரிய எல்லாவற்றையும் (விடாது) கூறவும், சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன், ‘(இராம இலக்குவராகிய) அவர்கள் வெகுண்டு எதிர்த்து வந்தால் அவர்களை (இடைமறித்து)த் தடுத்து நிற்கவல்லார் யாருளர்? விற்றொழிலிற் சிறப்புரிமை படைத்தவனாகிய இலக்குவன் இவ்வாறு கோபத்தால் விரைந்து வரவும் (அவனது வருகையை) எனக்குத் தெரிவியாமல் நீங்கள் இச்செயலைச் செய்தது ஏன்? என வினவினான்.

கு —அருக்கன் தோன்றல் - சூரியன் புதல்வன், என்றது சுக்கிரீவனை. அனையவர் - அத்தகைய பெருவீரராகிய இராம இலக்குவர்கள். அனையவர் சினத்தின் நேர்ந்தால் நிற்க உரியார்கள் யாவர்? என இயையும். நிற்க + உரியார்கள் = நிற்குரியார்கள் என வினையெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கது. விற்கு உரியான் என்றது விற்றொழிலில் வல்லவனாகிய இலக்குவனை. எற்கு - எனக்கு. ‘இது’ என்றது, இலக்குவன் கிட்கிந்தை நகரத்தினுள்ளே புக ஒண்ணாதவாறு குரங்குகள் வாயிற் கதவைத் தாளிட்டு மலைகளைப் பெயர்த்தடுக்கி வாயிலை அடைத்ததனை. (87)

## அங்கதன் மறுமொழி

4461. உணர்த்தினென் முன்ன நீயஃ
துணர்ந்திலே யுணர்விற் றீர்ந்தாய்
புணர்ப்பதொன் றின்மை நோக்கி
மாருதிக் குரைக்கப் போனேன்
இணர்த்தொகை யீன்ற பொற்று
ரெறுழ்வலித் தடந்தோ ளெந்தாய்
கணத்திடை யவனை நீயுங்
காணுதல் கரும மெனாருன்.

'உணர்த்தினென் முன்னம்; நீ அஃது
உணர்ந்திலை; உணர்வின் தீர்ந்தாய்;
புணர்ப்பது ஒன்று இன்மை நோக்கி,
மாருதிக்கு உரைக்கப் போனேன்;
இணர்த்தொகை ஈன்ற பொன்தார்
எறுழ்வலித் தடந்தோள் எந்தாய்!
கணத்திடை, அவனை, நீயும்
காணுதல் கருமம்' என்றான்.

பொ :—பூங்கொத்தின் தொகுதியோடுகூடிய பொன்னால் இயன்ற மாலையையணிந்த மிக்க வன்மை வாய்ந்த பெரிய தோளினையுடைய என் தந்தையே! (இலக்குவனது சினமிக்க வருகையை உன்பால் வந்து) முன்னரே தெரிவித்தேன். நீ உணர்வு மயங்கியிருந்தமை யால் அதனையுணர்ந்தாயல்லை. (அந்நிலையில் என்னாற்) செய்தற் குரிய வேருருபாயமில்லாமை கண்டு இச் செய்தியை வாயுகுமார னாகிய அனுமனுக்குச் சொல்லச் சென்றேன். (எங்கள் வேந்தனாகிய) நீயும் அவ் இலக்குவனை விரைவிற் (சென்று) காணுதல் செய்யத்தக்க செயலாகும் என்று (அங்கதன் சுக்கிரீவனை நோக்கிச்) கூறினான்.

கு :—உணர்விற்றீர்ந்தாய் (ஆதலின்) உணர்ந்திலை என்க. உணர்வின் தீர்தல் - அறிவு திரிந்து மயங்குதல். புணர்ப்பது - செய்யத்தக்க உபாயம். இணர் - பூங்கொத்து. எறுழ் - வலி. எறுழ்வலி - மிக்கவலி. யாங்கள் கண்டதோடன்றி எங்கள் தலைவனாகிய நீயும் கண்டு தக்க சமாதானம் கூறுதல் இன்றியமையாதது என்பான் 'நீயும் அவனைக் காணுதல் கருமம்' என்றான். நீயும் என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. கருமம் - செய்தற்குரிய செயல்.

(88)

## சுக்கிரீவன், மதுவுண்டு மதிமயங்கித் தன் கடமையினைமறந்த குற்றத்தினை எண்ணிக் கழிவிரக்கம் கொண்டு கூறுதல் 4462-4470

**4462.** உறவுண்ட சிந்தை யானு
முரைசெய்வா னொருவர்க் கின்னம்
பெறலுண்டே யவரா லீண்டியான்
பெற்றபே ருதவி யுற்ற
திறலுண்டோ வென்னிற் றீர்வா
னிருந்தபே ரிடரை யெல்லாம்
நறவுண்டு மறந்தேன் காண
நாணுவன் மைந்த வென்றான்.

உறவுண்ட சிந்தையானும்
உரைசெய்வான்: 'ஒருவர்க்கு இன்னம்
பெறல் உண்டே, அவரால் ஈண்டு
யான் பெற்ற பேர் உதவி? உற்றது
இறல் உண்டோ? என்னின் தீர்வான்
இருந்த பேர் இடரை எல்லாம்
நறவு உண்டு மறந்தேன்; காண
நாணுவன், மைந்த!' என்றான்.

பொ :—(இராமபிரான்பால்) நட்புறவினாற் பிணிக்கப்பட்ட மனத்தினனாகிய சுக்கிரீவனும் (அங்கதனை நோக்கிச்) சொல்வான்: மகனே! (இராம இலக்குவராகிய) அவரால் இங்கு யான் அடைந்துள்ள பேருதவி, இன்னும் மற்றொருவராற் பெறுதற்கு உளதாமோ? (அவரால் யான்) எய்திய பெருஞ் செல்வத்துக்கு (என்றேனும்) அழிவுண்டோ? (தன்னால் ஆதரிக்கப்பெற்ற) என்னைக்கொண்டு (அவ் இராமன்) நீக்கிக் கொள்ளுமாறு எண்ணியிருந்த பெருந் துன்பத்தை யெல்லாம் மதுவுண்ட மயக்கத்தினால் மறந்தொழிந்தேன். (ஆதலால், இப்போது இலக்குவனைப்) பார்த்தற்கும் நாணுகின்றேன் என்று கூறினான்.

கு :—அவரால் ஈண்டு யான் பெற்ற பேருதவி இன்னம் ஒருவர்க்குப் பெறலுண்டே? உற்றது இறல் உண்டே? என இயையும். பிறர் எவராலும் எளிதிற்பெற ஒண்ணாததும் என்றும் அழியாததுமாகிய பேருதவியை யான் இராமபிரானாற் பெற்றிருந்தும் அப்பெருமான் என்னைக்கொண்டு தான் நீக்கிக்கொள்ளக் கருதியிருந்த பெருந் துன்பத்தினை நீக்கும் முயற்சியில் யான் ஈடுபடாது மதுவுண்ட மயக்கத்தால் மதிமயங்கிச் செய்ந்நன்றி மறந்தவனாயினேன். இந்நிலையில்

சான்ருேனகிய இலக்குவனைக் காணுதற்கு மிகவும் நாணுகின்றேன் எனச் சுக்கிரீவன் தன் இழிநிலை நினைந்து இரங்கினன் என்பதாம். 'ஈன்ருள் முகத்தேயும் இன்னுதால் என்மற்றுச், சான்ருேர் முகத்துக் களி' (திருக்குறள்-923) எனவரும் தெய்வப் புலவர் வாய்மொழி ஈண்டு நினைக்கத் தக்கதாகும். பேரிடர் என்றது, சீதையைப் பிரிந் தமையால் இராமனுற்ற பெருந்துயரத்தை. பெரியோர் தமக்குச் செய்த நன்றியை மறந்தோர், செய்ந்நன்றி மறத்தலாகிய தம் குற்றத்தை யுணர்ந்த நிலையில் தமக்கு நன்றி செய்த பெரியோர் எதிர்ப்படின் அவரைக் காணுதற்கும் நாணி உளங் கூசுதல் இயல் பாதலின், 'நறவுண்டு மறந்தேன் காண நாணுவன்' என்ருன். 'தாணுவே யழிந்தேன் நின்னினைந்துருகும் தன்மையென் புன்மை களாற், காணும தொழிந்தேன் நீயினிவரினுங் காணவும் நாணு வனே' (திருவாசகம்–601) எனவரும் ஆன்ருேர் அருள்மொழி ஈண்டு நினைவுகூரத் தக்கதாகும். (89)

**4463.** ஏயின விதுவ லான்மற்
றேழமைப் பால தென்னே
தாயிவண் மனைவி யென்னுந்
தெளிவின்றேற் றரும மென்னுந்
தீவினை யைந்தி னென்றி
தன்றியுந் திருக்கு நீங்கா
மாயையின் மயங்கு கின்ரு
மயக்கின்மேல் மயக்கும் வைத்தாம்.

'ஏயின இது அலால் மற்று
ஏழமைப் பாலது என்னே?
"தாய் இவள், மனைவி' என்னும்
தெளிவு இன்றேல் தருமம் என் ஆம்?
தீவினை ஐந்தின் ஒன்று இது;
அன்றியும், திருக்கு நீங்கா
மாயையின் மயங்குகின்ரும்;
மயக்கின்மேல் மயக்கும் வைத்தாம்!

பொ :—(என்பால்) நேர்ந்த (கள்ளுண்டலாகிய) இக் குற்றத்தை யன்றி அறியாமையிற் புகுத்துவது பிறிதொன்றுளதோ? (இவ்வாறு கள்ளுண்டலால்) தாய் இவள், மனைவி இவள் என (மகளிரிடத்தே) முறையறிந்தொழுகும் நல்லுணர்வில்லாதொழியுமாயின் (அவ் வுணர்வை யடிப்படையாகக் கொண்டு நிகழ்தற்குரிய) அறம்

அனைத்தும் யாதாய் முடியும்? (கள்ளுண்டலாகிய இது) ஐம்பெரும் பாதகங்களுள் ஒன்றாகும். அதுவேயுமன்றிக் குற்றத்தின் நீங்காத பிறப்பென்னும் பொய்மைமிக்க வாழ்க்கையிற்பட்டு மதிமயங்கு மியல் புடைய யாம் (இயல்பாகிய) அம்மயக்கத்தின் மேலும் மிக்க மயக்கத் திற்குக் காரணமாகிய இக்கள்ளிடத்தே மோகத்தையும் கொண்டுள் ளோம்.

கு :—கள்ளுண்டலாகிய குற்றத்தை 'இது' எனச் சுட்டினான். ஏழைமைப்பாலது - அறியாமையின்பாற் படுத்துவது. இவள் என்பது இடைநிலை விளக்காய், தாய் இவள், மனைவி இவள் என ஈரிடத்தும் சென்றியைந்தது. தெளிவு - நன்றும் தீதும் பகுத்துணரும் நல்லுணர்வு. தீவினை ஐந்து - ஐம்பெரும் பாதகங்கள்; அவை யாவன: கொலை, களவு, கள், காமம், பொய் என்பன. திருக்கு - குற்றம். ஈண்டு மாயை என்னும் சொல் மயக்கஞ் செய்வது என்னும் பொருளில் மாயையின் காரியமாகிய பொய்ம்மைமிக்க வாழ்க்கையைச் சுட்டி நின்றது. மயக்கின்மேல் மயக்கு என்றது, பொய்மைமிக்க வாழ்க்கையாகிய மயக்கத்தின் மேலும் மிக்க மயக்கத்தை விளைக்கும் கள்ளில் உளதாகிய மோகத்தினை. (90)

**4464.** தெளிந்துதீ வினையைச் செற்றோர்
பிறவியிற் றீர்வ ரென்ன
விளிந்திலா வுணர்வி னோரும்
வேதமும் விளம்ப வேயும்
தெளிந்துறை புழுவை நீக்கி
நறவுண்டு நிறைகின் றேனல்
அளிந்தகத் தெரியுந் தீயை
நெய்யினா லவிக்கின் றாரின்.

"'தெளிந்து தீவினையைச் செற்றோர்
பிறவியின் தீர்வர்" என்ன,
விளிந்திலா உணர்வினோரும்,
வேதமும், விளம்பவேயும்,
நெளிந்து உறை புழுவை நீக்கி
நறவு உண்டு நிறைகின்றேனல்—
அளிந்து அகத்து எரியும் தீயை
நெய்யினால் அவிக்கின்றாரின்.

பொ :—(நன்ஞானத்தால் அறியாமையின் நீங்கி) உள்ளத் தெளிவு பெற்றுத் தீவினைகளைக் களைந்தோர் பிறவித் துன்பத்தி னின்றும் நீங்கி (வீடுபெற்று) இன்புறுவர் என்று, கெடாத நல்லுணர் வுடைய பெரியோர்களும் அறிவு நூல்களும் தெளிவாக எடுத்துரைக் கவும் (அந் நல்லுரையினை மனத்திற் கொள்ளாமல்) உள்ளே கனிந்து எரியும் நெருப்பினை நெய் சொரிந்து அவிக்கின்றாரைப் போன்று, நெளிந்துலவும் புழுக்களை (வடிகட்டி) ஒதுக்கிவிட்டு மதுவினைப் பருகி மன நிறைவு அடைகின்றேன்.

கு :—ஐயத்தினின்றும் நீங்கி மெய்யுணர்ந்து தீவினையை விலக்கிய தெளிவுடைய நல்லறிஞர்கள், பிறப்பிற்குக் காரணமாகிய அறியாமை நீங்கி வீட்டிற்கு நிமித்த காரணமாகிய செம்பொருளை உணர்வராதலின், அவ்வுணர்வினால் இருவினைகளும் பொன்றக் கெட்டுப் பிறவா நிலைபெற்று இன்புறுவர் என்பது தத்துவஞானி களும் வேதங்களும் கூறும் துணிபு என்பான், 'தெளிந்து தீவினை யைச் செற்றார் பிறவியிற் றீர்வரென்ன விளிந்திலா வுணர்வி னோரும் வேதமும் விளம்ப' என்றான். விளிந்திலா உணர்வினோர் - கெடாத நல்லுணர்வுடையோர்; தத்துவஞானிகள். 'ஐயத்தினீங் கித் தெளிந்தார்க்கு வையத்தின், வானம் நணிய துடைத்து' (353), எனவும், 'பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ், செம் பொருள் காண்பதறிவு' (358) எனவும் வரும் தெய்வப் புலவர் வாய் மொழிகள் இங்கு நினைக்கத்தக்கனவாகும். அறிவினை மயக்கும் இயல்பினதாகிய உலக வாழ்க்கையில் மயங்கிக் கிடக்கின்ற யான், மதுவுண்டு மனத்தெளிவு பெற விரும்பிய இந்நிலை, உள்ளே கனன் றெரியும் இயல்பினதாகிய நெருப்பினை நெய்யைச் சொரிந்து அணைக்க முயல்வோர் நிலைபோன்று துன்பத்திற்கு இடனாயிற்று என்பான், 'அளிந்தகத் தெரியுந் தீயை நெய்யினால் அவிக்கின்றாரின், .........நறவுண்டு நிறைகின்றேன்' என்றான். ஆல் - அசை. 'நெய் யால் எரிநுதுப்பேம் என்றற்றால்' (1148) எனவரும் திருக்குறள இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். (91)

4465. தன்னைத்தா னுணரத் தீருந்
தகையறு பிறவி யென்ப
தென்னத்தான் மறையு மற்றைத்
துறைகளு மிசைத்த வெல்லாம்
முன்னைத்தான் றன்னை யோரா
முழுப்பிணி யழுக்கின் மேலே
பின்னைத்தான் பெறுவ தம்மா
நறவுண்டு திகைக்கும் பித்தோ.

"'தன்னைத் தான் உணரத் தீரும்,
தகை அறு பிறவி" என்பது
என்னத்தான் மறையும் மற்றைத்
துறைகளும் இசைத்த, எல்லாம்,
முன்னைத்தான் தன்னை ஓரா
முழுப்பிணி அழுக்கின் மேலே,
பின்னைத்தான் பெறுவது, அம்மா'
நறவு உண்டு திகைக்கும் பித்தோ?

பொ :—பெருமையில்லாத பிறவிப் பிணிப்பானது (ஒருவன்) உயிராகிய தன்னியல்பினை (உள்ளவாறு) உணர்தலால் விட்டுநீங்கும் என்றே வேதங்களும் ஏனை அறிவு நூல்களும் ஆகிய எல்லாமும் கூறியுள்ளன. (அங்ஙனமாகவும்) முன்னமே உயிராகிய தன் இயல்பினை ஓர்ந்துணராமைக்குக் காரணமாகிய (அறியாமையென்னும்) முற்றிய நோயினுற் பற்றப்பட்ட அழுக்குடம்பிஞேடு மீண்டும் (தேடிப்) பெறக்கடவது கள்ளுண்டு மயங்கும் (இம்) மயக்கநோய்தானே?

கு :—தகையறு பிறவி என்பது, தன்னைத்தான் உணரத் தீரும் என்ன மறையும் மற்றைத் துறைகளும் எல்லாம் இசைத்த என இயையும். என்னத்தான் என்புழித் தான் என்னும் அசை தேற்றப் பொருள்தந்து நின்றது. உணர - உணர்தலால்; செயவெனச்சம் காரணப் பொருளில் வந்தது. பெருகிய துன்பத்திற்கு இடனுகிய இப்பிறவிநோய், மெய்ப்பொருள் அல்லாதவற்றை மெய்ப்பொருள் என்றுணரும் மயக்க வுணர்வால் உளதாவதாகலின், உயிரானது தன்னை இப்பிறவித் தளையினின்றும் பிரித்துணரும் தெளிவு பெற்றதாயின் அத் தெளிவுணர்வாகிய ஞானத்திஞல் இப்பிறவி நோய் அறவே நீங்கி உய்தல் ஒருதலை என்பான், 'தன்னைத்தான் உணரத் தீரும் தகையறு பிறவி' என்ருன். என்பது என்றது, எழுவாய் வேற்றுமைச் சொல்லுருபு. தகையறு பிறவி - பெருமையில்லாத பிறப்பு. 'மாணுப் பிறப்பு' என்ருர் தெய்வப் புலவரும். 'மருளான் ஆம் மாணுப் பிறப்பு' என அவ்வாசிரியர் கூறுதலால் மருள்நீங்கிய தெருளாற் பிறப்புத் தீரும் என்பது இனிது புலனும். 'தன்னையறிந்து சிவனுடன் தாஞக, மன்னு மலங்குண மாளும் பிறப்பறும்' (திருமந்திரம்–2331) என்ருர் திருமூலரும். தன்னைத்தான் உணர்தலாவது, ஆன்மாவாகிய தான் முழுமுதற் பொருளாகிய கடவுளுக்கு என்றும் அடிமையென வுணர்ந்து அம்முதல்வனது அருள்வழிநின்ருெழுகுதல்; ஆன்மாவாகிய தன்னியல்பும், தன்னை அடிமையாகவுடைய இறைவனியல்பும், இறைவனை யடைதலாற் பெறும் பயனும், இறைவனை யடைதற்குத் தடையாகவுள்ள பாசங்களின் இயல்பும், அவனை அடைதற்குரிய உபாயமும் ஆகிய ஐவகைப் பொருளியல்பினையும் உள்ள

வாறுணர்தல். இதனை அர்த்த பஞ்சகஞானம் என்பர். இவ் ஐவகைப் பொருள்களுள் ஒன்ருகிய தன்னை முதற்கண் ஓர்ந்துணராமையே இப் பிறவி நோய்க்குக் காரணமாய் அல்லல் மிக்க இவ் வழுக்குடம் பினைத் தந்தது என்பான், 'முன்னைத்தான் தன்னை ஓரா முழுப் பிணி யழுக்கு' என்ருன். 'தன்னையுணராமல் தானே கெடுகின்ருன்' (திருமந்–2355) என்ருர் திருமூலரும். பிறவித் தொடர்ச்சியறுதற்கு ஆன்மாவாகிய தன்னியல்பினைத் தெளிய வுணர்தல் இன்றியமையாத தாகவும் தன்னைத் தெளியவுணராமையாகிய அக்குற்றத்தின்மேலும் மதுவுண்டு மயங்கித் திகைக்கும் மற்ருெரு அறியாமைச் சுமையையும் யான் மேற்கொண்டு தாழ்வுற்றவாறென்னே எனச் சுக்கிரீவன் தனது பேதைமை நிலையினை நினைந்து இரங்கியவாறு. (92)

**4466.** அளித்தவ ரஞ்சு நெஞ்சி
னடைத்தவ ரறிவின் மூழ்கிக்
குளித்தவ ரின்ப துன்பங்
குறைத்தவ ரன்றி வேரி
ஒளித்தவ ருண்டு மீண்டிவ்
வுலகெலா முணர வோடிக்
களித்தவ ரெய்தி நின்ற
கதியொன்று கண்ட துண்டோ.

'அளித்தவர், அஞ்சும் நெஞ்சின்
அடைத்தவர், அறிவில் மூழ்கிக்
குளித்தவர், இன்ப துன்பம்
குறைத்தவர், அன்றி, வேரி
ஒளித்தவர், உண்டு, மீண்டு, இவ்
உலகு எலாம் உணர ஓடிக்
களித்தவர் எய்தி நின்ற
கதி ஒன்று கண்டது உண்டோ?

பொ :—(தம்மை அடைந்தாரை அஞ்சல்மின் என அடைக்கலந் தந்து) அருளாற் பாதுகாத்தவர்களும், ஐம்பொறிகளும் (தத்தம் புலங்கள்மேற் செல்லாது மனத்தின் வழி) அடங்கியொழுகுமாறு அவற்றை அடக்கியவர்களும், இன்பதுன்பத்திற்கு ஏதுவாகிய இரு வினை மரங்களை வேருடன் வெட்டி வீழ்த்தி ஒன்றிலும் விருப்பு வெறுப் பின்றி இருப்பவர்களும் ஆகிய இவர்களையன்றி, மதுவைப் பிறர் அறியாமல் மறைத்து உண்டு இவ்வுலகத்தாரனைவரும் உணரும்படி வெளிப்பட்டுக் களித்துத் திரியும் இயல்புடையோர் சென்று நிலை பெற்றதொரு நற்கதியை யாரேனும் பார்த்ததுண்டோ?

கு :—தம்மை அடைந்தோரை அடைக்கலம் அளித்துப் பாதுகாத்தவர்களும் ஐம்பொறியுணர்வுகளை அடக்கியவர்களும் மெய்யுணர்வு கைவரப் பெற்றவர்களும் வேண்டுதல் வேண்டாமையின்றி இருவினைப் பயன்களை ஒப்பக் கருதியவர்களும் ஆகிய பெரியோர்க்கே நற்கதிப் பேறுளதாம் அன்றிக் கள்ளுண்டு களிக்குமியல்பினராகிய கீழோர்க்கு எஞ்ஞான்றும் நற்கதிப் பேறில்லை என்பதாம். வேரி - கள். கள்ளுண்போர் பிறரறியாதவாறு அதனை மறைத்துண்டாலும் கள்ளினால் அவர்க்குளதாகிய களிப்பு அதனை உலகத்தாரனைவரும் உணர்ந்து இகழுமாறு அவரைப் பித்தேற்றிவிடும் என்பான், 'வேரி, ஒளித்தவர் உண்டு மீண்டு இவ்வுலகெலாம் உணரவோடிக் களித்தவர்' என்றான். 'உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங், கள்ளொற்றிக் கண் சாய்பவர்' (திருக்குறள்–927) எனவும் 'களித்தறியேனென்பது கைவிடுக நெஞ்சத், தொளித்ததூஉ மாங்கேமிகும்' (திருக்குறள்–928) எனவும் வரும் தெய்வப்புலவர் வாய்மொழிகள் இங்கு நினைக்கத்தக்கனவாகும். 'காணாமை யுண்ட கடுங்களை மெய்கூர, நாணாது சென்று நடுங்கவுரைத்தாங்கு' (கலித் - 115) என வரும் தொடர் களித்த வரியல்பை இனிது புலப்படுத்தல் காணலாம். அஞ்சு - ஐம்பொறிகள்; தொகைக் குறிப்பு. அடைத்தல் - செறித்தல்; அடக்குதல். அஞ்சும் அடக்குதலாவது பொறிகளாகிய யானை ஐந்தையும் தத்தம் புலங்கள்மேற் செல்லாதவாறு அறிவு என்னும் அங்குசத்தினால் அடக்கிக் காத்தல். 'உரனென்னுந் தோட்டியான் ஓரைந்தும் காப்பான், வரனென்னும் வைப்பிற்கோர் வித்து' (24) என்றார் திருவள்ளுவனாரும். குறைத்தல் - தறித்தல்; வெட்டுதல். இருவினைகளை 'இருவினை மாமரம்' (திருவாசகம் – திருவண்டப் பகுதி – 87) என உருவகிக்கும் மரபுண்மை பற்றிக் குறைத்தல் என்னும் வினை கொடுத்தோதினார் ஆசிரியர். இது குறிப்புருவகத்தின் பாற்படும். (93)

4467. செற்றதும் பகைஞர் நட்டார்
செய்தபே ருதவி தானுங்
கற்றதுங் கண்கூ டாகக்
கண்டதுங் கலைவ லாளர்
சொற்றது மானம் வந்து
தொடர்ந்ததும் படர்ந்த துன்பம்
உற்றது முணரா ராயி
னிறுதிவே றிதனி னுண்டோ.

'செற்றதும் பகைஞர், நட்டார்
செய்த பேர் உதவிதானும்,
கற்றதும், கண் கூடாகக்
கண்டதும், கலை வலாளர்
சொற்றதும், மானம் வந்து
தொடர்ந்ததும், படர்ந்த துன்பம்
உற்றதும் உணரார் ஆயின்,
இறுதி வேறு இதனின் உண்டோ?

பொ:—பகைவராயினர் தம்மைச் சினந்து ஒறுத்ததும் (அந்நிலையில்) நண்பராயினர் செய்த பேருபகாரமும் (தாம் நூல் வாயிலாகக்) கற்றுணர்ந்த கல்விப் பொருளும் (தாம்) நேரிற் கண்டுணர்ந்த அநுபவவுண்மையும் (மெய்ந்நூல்களைக்) கற்றுணர்ந்த கலைச்செல்வர்கள் சொல்லக்கேட்ட நற்பொருள்களும் (தம் இன்னுயிர் நீங்கத்தாம்) மானம் எய்தும் நிலைமை ஏற்பட்டதும், (அது காரணமாக) நீடு நினைந்து இரங்குதற்கு ஏதுவாகிய பெருந்துன்பம் தம்மை வந்தடைந்ததும் ஆகிய இவற்றை (மதுவுண்ட மயக்கத்தினால்) உணராதொழிவராயின் இம்மது மயக்கத்தைக் காட்டிலும் (அவர்க்கு) அழிவைத்தரும் தீமை பிறிதொன்றுளதோ? (இல்லை என்றவாறு.)

கு:—பகைஞர் செற்றதும் நட்டார் செய்த பேருதவி தானும் என இயைத்துரைக்க. நட்டார்-நண்பர்கள். பேருதவி-காலத்தினாற் செய்த நன்றி. கற்றது - நூலறிவு. கண்கூடாகக் கண்டது - அநுபவவுணர்வு. கண்கூடு - பிரத்தியட்சம். கலைவலாளர் சொற்றது - கேள்வியறிவு. மானம் - பெருமை. மானம் வந்து தொடர்தலாவது, மானமும் உயிரும் ஒருங்கு நில்லாத நிலையில் தம் இன்னுயிரை விட்டாவது மானம் எய்தும் நிலையுளதாதல். 'மானம்வரின்' என்ற தொடர்க்குப் பரிமேலழகர் எழுதிய உரை ஈண்டு நினைத்தற்குரியதாகும். படர்ந்த துன்பம் - நீடு நினைந்திரங்குதற்கேதுவாகிய பெருந்துன்பம். படர்தல் - உள்ளுதல். இனி, படர்ந்த துன்பம் என்பதற்கு ஒரு வழி நில்லாது பல விடங்களிலும் கிளைத்துப் பரவிய பெருந்துன்பம் எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். இதனின் இறுதி வேறுண்டோ என இயையும். இறுதி பயப்பதனை இறுதி என்றான். கள்ளுண்டல், பகைவர் நண்பர் ஆகியோர் செய்த நலந்தீங்குகளையும் நூலறிவு, அநுபவவுணர்வு, கேள்வியறிவு, மானம் ஆகிய எல்லாவற்றையும் பொன்றக் கெடுப்பதாகலின் ஒருவர்க்குக் கள்ளுண்டலின் மிக்க பகை பிறிதொன்றில்லை என்றவாறு. (94)

4468. வஞ்சமுங் களவும் பொய்யு
மயக்கமு மரபில் கொட்புந்
தஞ்சமென் றுரை நீக்குந்
தன்மையுங் களிப்புந் தாக்கும்
கஞ்சமெல் லணங்குந் தீருங்
கள்ளினு லருந்தி னுரை
நஞ்சமுங் கொல்வ தல்லா
னரகினை நல்கா தன்றே.

'வஞ்சமும், களவும், பொய்யும்,
மயக்கமும், மரபுஇல் கொட்பும்,
"தஞ்சம்" என்றுரை நீக்கும்
தன்மையும், களிப்பும், தாக்கும்;
கஞ்ச மெல் அணங்கும் தீரும்,
கள்ளினுல்; அருந்தினுரை
நஞ்சமும் கொல்வது அல்லால்,
நரகினை நல்காது அன்றே?

பொ:—மதுவினுல் வஞ்சனையும் திருட்டும் பொய்கூறலும் அறிவு பிறிதாதலாகிய மயக்கமும் (தொன்று தொட்டுவரும்) முறைமைக்கு மாருகிய கலக்கமும் (தம்மை) அடைக்கலமென்று அடைந்தவர்களை (அன்பினுற் போற்ருது) நீக்கும் (இழிந்த) தன்மையும் செருக்கும் ஆகிய குற்றங்கள் (பருகினுரைச்) சார்வனவாகும்; மெல்லிய தாமரை மலரில் வீற்றிருக்குந் தெய்வமாகிய திருமகளும் (அவர்களை வெறுத்து) விட்டு நீங்குவாள். நஞ்சு தானும் (தன்னைப்) பருகினுர் உயிரைக் கொன்று நீக்குதலாகிய அவ்வளவில் அன்றி (இம் மதுவைப் போன்று தன்னைப் பருகினுர்க்கு) நரகத்தினைத் தந்து வருத்தும் கொடுமை யுடையதன்ரும்.

கு:—கள்ளினுல் வஞ்சமும் களவும் பொய்யும் மயக்கமும் மரபுஇல் கொட்பும் தஞ்சம் என்றுரை நீக்கும் தன்மையும் களிப்பும் தாக்கும்; மென்கஞ்ச அணங்கும்தீரும் எனவும், நஞ்சமும் (தன்னை) அருந்தி னுரைக் கொல்வது அல்லால் நரகமும் நல்காது எனவும் இயைத்துப் பொருள் கொள்க. அன்று, ஏ என்பன அசை. மென்கஞ்ச அணங்கு - மெல்லிய செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் தெய்வம்; என்றது செல்வத்திற்கு அதிதெய்வமாகிய திருமகளை. 'தாமரையினுள்' (திருக் குறள் 617) என்ருர் தெய்வப்புலவரும். தீர்தல்-பற்றுவிடுதல்; நீங்கு தல். 'இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறும், திரு நீக்கப் பட்டார் தொடர்பு' (927) எனவரும் திருக்குறட் பொருள் ஈண்டு ஒப்புநோக்கி

யுணரத்தக்கதாகும். மதுவுண்டு உணர்விழந்து உறங்கினோர் உயிர்ப் புடையராயினும் உணர்வின்மையால் இறந்தவரேயாவர் ஆதலின் கள்ளுண்போர் நஞ்சினை உண்டாரையொத்து எக்காலத்தும் அழிந் தொழிதல் திண்ணம் என்பார், 'துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும், நஞ்சுண்பார் கள்ளுண்பவர்' (திருக்குறள்-926) என்றார் திருவள்ளுவனார். இவ்வாறு தன்னைப் பருகினரது நல்வாழ் வைச் சிதைக்குந் திறத்தில் நஞ்சமும் கள்ளும் ஒத்த தன்மையன வாயினும், நஞ்சானது உயிர் உடம்பினைவிட்டு நீங்கும் வரையிலும் அதனை வருத்துந் தன்மையதாக, கள்ளோ உடம்பைவிட்டு உயிர் நீங்கிய நிலையிலும் அதனைத் தொடர்ந்து உணர்வழியச் செய்து நரகத்திலுய்த்து வருத்துமியல்பினதாதல் பற்றி நஞ்சினும் கள் மிகவும் கொடுமையுடையதாகும் என வேற்றுமையணி தோன்றக் கூறியவாறு. (95)

**4469.** கேட்டனை னறவாற் கேடு
வருமெனக் கிடைத்த வச்சொல்
காட்டிய தனும னீதிக்
கல்வியாற் கடந்த தல்லால்
மீட்டினி யுரைப்ப தென்னே
விரைவின்வந் தடைந்த வீரன்
மூட்டிய வெகுளி யானுன்
முடிவதற் கைய முண்டோ.

'கேட்டனன், 'நறவால் கேடு
வரும்' என; கிடைத்த அச்சொல்
காட்டியது; அனுமன் நீதிக்
கல்வியால் கடந்தது அல்லால்,
மீட்டு இனி உரைப்பது என்னே?
விரைவின் வந்து அடைந்த வீரன்
மூட்டிய வெகுளியால் நான்
முடிவதற்கு ஐயம் உண்டோ?

பொ :—கட்குடியினாற் கெடுதியுண்டாகுமென்று (அறிவுடைய பெரியோர்) சொல்லக் கேட்டுள்ளேன். (அங்ஙனம் கேட்கப்பெற்றுப்) பொருந்திய அம்மொழி (மெய்ம்மை என்பதை என் செயலில் வைத்து) நேரிற் புலப்படுத்திவிட்டது. இனி (என் பேதைமை நிலை பற்றி) மீண்டும் சொல்லி இரங்குவதால் பயன் யாது? அநுமனது நீதி நூற் கல்வியின் துணையினால் (யான் இப்பேரிடரினின்றும்) தப்பி

உய்ந்ததே யன்றி (அவனது கல்வித் துணை இல்லா தொழியுமாயின்) விரைந்து வெகுண்டு வந்த வீரனாகிய இலக்குவன் (தன்னுள்ளத்தே) கிளர்ந்தெழச் செய்த கோபத் தீயினால் நான் இறந்தொழிதலிற் சிறிதும் சந்தேகம் உளதோ?

கு:—நறவாற் கேடுவரும் எனக் கேட்டனன் என இயையும். நறவு - கள். கிடைத்தல் - அடைதல்; பொருந்துதல். 'காட்டுதல் - பயனுன் உணர்த்துதல்' (திருக்குறள்—28. பரிமேலழகர் உரை நோக்குக). மூட்டுதல் - மூளச் செய்தல். முடிதல் - இறத்தல். மதி மயக்கும் கள்ளினைப் பருகிக் கெட்டழியும் நிலையினை எய்திய யான், அரசியல் நீதி நூல்களை நன்குணர்ந்த அநுமன் தக்க சமயத்தில் முன்வந்து தன் கல்வித் திறத்தால் இலக்குவனது கோபத்தீயைத் தணித்தமையால் சாதலினின்றும் தப்பியுய்ந்தேன். இல்லையேல் இலக்குவனது கோபத்தீயிற்கு இலக்காகி இறந்தொழிதல் திண்ணம் எனச் சுக்கிரீவன் மதுவுண்டு மயங்கிய தன் குற்றத்தினை எண்ணி இரங்கிக்கூறினன் என்பதாம். (96)

**4470.** ஐயநா னஞ்சி னேனிந்
நறவினி னரிய கேடு
கையினா லன்றி யேயுங்
கருதுதல் கரும மன்றால்
வெய்யதா மதுவை யின்னம்
விரும்பினே னென்னின் வீரன்
செய்யதா மரைக ளன்ன
சேவடி சிதைக்க வென்றான்.

'ஐய! நான் அஞ்சினேன், இந்
நறவினின் அரிய கேடு;
கையினால் அன்றியேயும்
கருதுதல் கருமம் அன்றால்;
வெய்யது ஆம் மதுவை இன்னம்
விரும்பினேன் என்னின், வீரன்
செய்ய தாமரைகள் அன்ன
சேவடி சிதைக்க' என்றான்.

பொ:—ஐயனே! இக் கள்ளினால் நேரும் விலக்குதற்கு அரிய பெருங் கேட்டிற்கு யான் மிகவும் அஞ்சினேன். (இம் மதுவினைக்) கையால் தொடுதலேயன்றி (மனத்தால்) நினைத்தலும் தகுதியுடைய

செயலாகாது. கொடுமையைச் செய்யும் கள்ளினை இனிமேலும் விரும்பும் இயல்புடையேனாயின் பெருவீரனாகிய இராமபிரானுடைய செந்தாமரை மலர்போலும் செவ்விய திருவடிகள் (என்னை) அழிப்பன வாகுக என்று (இராமனுடைய திருவடிகளின்மேல் ஆணையிட்டுக்) கூறினான்.

கு :—சுக்கிரீவன் தன் தமையன் புதல்வனாகிய அங்கதனை அன்பு பற்றி 'ஐய' என அழைத்தான். இந் நறவினின் அரியகேடு அஞ்சி னேன் ; (இதனைக்) கையினால் (தொடுதலே) அன்றிக் கருதுதலும் கருமம் அன்று என இயைத்துரைக்க. ஆல் - அசை. கேடு அஞ்சி னேன் - கேட்டிற்கு அஞ்சினேன் என நான்காமுருபு விரித்துரைக்க. கள்ளுண்டலால் உளவாம் தீமையினைத் தன் அநுபவத்திற் கண்டு ணர்ந்த சுக்கிரீவன், இராமபிரானுடைய திருவடி சாட்சியாக யான் இனி என்றும் மதுவினை விரும்பேன் எனச் சூளுறவு செய்தனன் என்பதாம். (97)

### சுக்கிரீவன், இலக்குவனை எதிர்கொண்டு அழைத்துவருமாறு அங்கதனை அனுப்பித் தான் சுற்றத்தொடும் அரண்மனை வாயிலில் வந்து நிற்றல்

**4471.** என்றுகொண் டியம்பி யண்ணற்
கெதிர்கொளற் கியைந்த வெல்லாம்
நன்றுகொண் டின்னு நீயே
நணுகென வவனை யேவித்
தன்றுணைத் தேவி மாருந்
தமரொடுந் தழுவத் தானும்
நின்றன னெடிய வாயிற்
கடைத்தலை நிறைந்த சீரான்.

என்று கொண்டு இயம்பி, அண்ணற்கு
எதிர் கொளற்கு இயைந்த எல்லாம்
நன்று கொண்டு, 'இன்னும் நீயே
நணுகு' என அவனை ஏவி,
தன் துணைத் தேவிமாரும்
தமரொடும் தழுவ, தானும்
நின்றனன், நெடிய வாயில்
கடைத்தலை, நிறைந்த சீரான்.

பொ :—குறைவின்றி நிரம்பிய சிறப்புடைய குணங்களையுடையவனாகிய சுக்கிரீவன், என்று இத்தகைய உறுதி மொழிகளை மேற்கொண்டு கூறி, (எனக்கு இனிய மைந்தனாகிய) நீயே தலைவனாகிய இலக்குவனை எதிர்கொண்டு அழைத்தற்குப் பொருந்துவன எல்லாவற்றையும் மிகுதியாக உடன் கொண்டு இனியும் அவ் இலக்குவனை அணுகி அழைப்பாயாக எனக் கூறி அங்கதனை (இலக்குவன்பாற் செல்லும்படி) அனுப்பிவிட்டுத் தன் வாழ்க்கைத் துணைவியரான மனைவிமார்களும் ஏனைச் சுற்றத்தார்களும் தன்னைச் சூழ்ந்துவர, நீண்டுயர்ந்த (அரண்மனையின்) தலைவாயிற் கடையில் தான் வந்து நின்றான்.

கு :—நிறைந்த சீரான், இயம்பி, ஏவி, நெடிய வாயிற் கடைத்தலை நின்றனன் என முடியும். அண்ணல் - தலைவன் ; என்றது இலக்குவனை. அண்ணற்கு - அண்ணலை ; உருபு மயக்கம். இவ்வாறு உருபு மயக்கமெனக் கொள்ளாது, அண்ணற்கு இயைந்த யாவும், எதிர் கொளற்கு இயைந்த யாவும் எனத் தனித்தனி இயைத்துப் பொருளுரைப்பினும் அமையும். அண்ணற்கு இயைந்த - தலைவனாகிய இலக்குவனது தகுதிக்கு ஒத்தன. எதிர் கொளற்கு இயைந்த - அன்பு, அருள், வீரம் முதலிய பண்புகளால் உயர்ந்த தலைவர்களை எதிர்கொண்டு அழைத்தற்குரிய அணி நலங்களாக அமைந்த குடை, சாமரம் முதலிய சின்னங்கள். நன்று, பெரிது என்னும் பொருளுடைய உரிச்சொல். இன்னும் - இனியும் ; நீ முன்னர்ச் சென்று கண்டது போலவே இப்பொழுதும் சென்று காணுக என்றமையால் உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. (98)

## இலக்குவனை வரவேற்கும் நிலையில் கிட்கிந்தை நகரம் பெற்ற அணிநலம் 4472, 4473

**4472.** உரைத்தசெஞ் சாந்தும் பூவுஞ்
சுண்ணமும் புகையு மூழி
னிரைத்தபொற் குடமுந் தீப
மாலையு நிகரின் முத்துங்
குரைத்தெழு விதானத் தோடு
தொங்கலுங் கொடியுஞ் சங்கும்
இரைத்திமிழ் முரசு முற்று
மியங்கின வீதி யெல்லாம்.

உரைத்த செஞ்சாந்தும், பூவும்,
சுண்ணமும், புகையும், ஊழின்
நிரைத்த பொற்குடமும், தீப
மாலையும், நிகர் இல் முத்தும்
குரைத்து எழு விதானத்தோடு
தொங்கலும், கொடியும், சங்கும்,
இரைத்து இமிழ் முரசும், முற்றும்
இயங்கின, வீதி எல்லாம்.

பொ :—அரைக்கப் பெற்ற செம்மையான சந்தனக் குழம்பும் நறுமலர்களும் நறுமணப் பொடிகளும் நறும்புகையும் முறைமைப்படி நிரலே அமைக்கப்பெற்ற பொன்னாலாகிய பூரண கும்பமும் மாலை போல் நிரல்பட அமைந்த விளக்குகளும் ஒப்பற்ற முத்து மாலைகளும் ஆரவாரித் தெழும் மேற்கட்டியுடன் கூடிய வாச மாலைகளும் கொடியும் சங்கும் இரைந்து பேரொலியைச் செய்யும் முரச வாத் தியமும் ஆகிய இவை (கிட்கிந்தை நகரத்தின்) வீதியெங்கும் (பரி சனங்களால் தாங்கப் பெற்றுச்) செல்வனவாயின.

கு:—உரைத்தல் - கல்லில் இட்டுத் தேய்த்து அரைத்தல். நிகர் இல் - ஒப்பு இல்லாத. குரைத்தல் - ஆரவாரித்தல். விதானம் - மேற்கட்டி. தொங்கல் - தொங்கும் இயல்பினதாகிய வாச மாலை; இதனைத் தூக்கம் எனவும் வழங்குப. இலக்குவனை வரவேற்றற் பொருட்டுக் கிட்கிந்தை நகரத்தார் சந்தனம் நறுமலர், சுண்ணம், நறும்புகை, பூரண கும்பம் முதலிய மங்கலப் பொருள்களுடன் நகரத்தை அணி செய்து வீதியெங்கும் வந்து குழுமினர்கள் என்பதாம்.
(99)

**4473.** தூயதிண் பளிங்கிற் செய்த
சுவர்களிற் றலத்திற் சுற்றி
நாயக மணியிற் செய்த
நனிநெடுந் தூணி னுப்பண்
சாயைபுக் குறலாற் கண்டோ
ரயர்வுறக் கைவி லோடும்
ஆயிர மைந்தர் வந்தா
ருளரெனப் பொலிந்த தவ்வூர்.

தூய திண் பளிங்கின் செய்த
 சுவர்களில், தலத்தில், சுற்றி
நாயக மணியிற் செய்த
 நனி நெடுந் தூணின் நாப்பண்,
சாயை புக்கு உறலால், கண்டோர்
 அயர்வுற, 'கை விலோடும்
ஆயிர மைந்தர் வந்தார்
 உளர்' எனப் பொலிந்தது, அவ்வூர்.

பொ :—(இவ்வாறு அணி செய்யப்பெற்ற கிட்கிந்தை நகரத்தின் உள்ளே இலக்குவன் புகுந்தபோது) மாசற்ற தூய திண்ணிய பளிங்குக் கற்களால் அமைக்கப்பட்ட மாளிகைச் சுவர்களிலும் அடித்தலமாகிய பளிங்குத் தரையிலும் சுற்றி (நாற் புறமும்) தலைமை வாய்ந்த நவமணிகளால் இழைக்கப் பெற்ற மிகப் பெரிய நீண்ட தூண்களின் நடுவிலும் (அவனது அழகிய மேனியின்) நிழலானது உள்ளே பொருந்தித் தோன்றுதலால் (அதனைக்) கண்டோர் யாவரும், கையில் ஏந்திய விற் படையோடும் போர் வீரர் ஆயிரவர் ஒருங்கு வந்தார் உளர் என (மாறுபடக் கருதி) வருந்துமாறு அக் கிட்கிந்தை நகரம் (இலக்குவனது திருமேனி யழகினாற்) பொலிவு பெற்று விளங்கியது.

கு :—அவ்வூர், சுவர்களில், தலத்தில், தூணின் நாப்பண் சாயை புக்கு உறலால், 'கை வில்லோடும் ஆயிரம் மைந்தர் வந்தார் உளர்' எனப் பொலிந்தது என வினை முடிவு செய்க. நனி நெடுந்தூண் - மிகப் பெரிய தூண். நாயகமணி - மணிகள் எல்லாவற்றிலும் ஒளியாற் சிறந்த நன்மணி. சாயை - நிழல்; பிரதி பிம்பம். மைந்தர் - வீரர். (100)

## தன்னை நோக்கிவந்த அங்கதனைக்கண்ட இலக்குவன், 'எங்கிருந்தான் நுங்கோமான்?' என வினவ, அவன் மறுமொழி பகர்தல்

**4474.** அங்கதன் பெயர்த்தும் வந்தாண்
 டடிதொழு தானை யையன்
எங்கிருந் தானுங் கோமா
 னென்றலு மெதிர்கோ ளெண்ணி

மங்குருேய் கோயில் கொற்றக்
கடைத்தலை மருங்கு நின்ருன்
சிங்கவே றனைய வீர
செய்தவச் செல்வ னென்ருன்.

அங்கதன், பெயர்த்தும் வந்து
ஆண்டு அடிதொழுதானை, ஐயன்,
'எங்கு இருந்தான் நும் கோமான்?'
என்றலும், 'எதிர்கோள் எண்ணி,
மங்குல் தோய் கோயில் கொற்றக்
கடைத்தலை மருங்கு நின்ருன் –
சிங்க ஏறு அனைய வீர!—
செய்தவச் செல்வன்' என்ருன்.

பொ:—வியக்கத்தக்க தலைவனுகிய இலக்குவன், அவ்விடத்தே மீளவும் வந்து (தன்னுடைய) பாதங்களை வணங்கினுனுகிய அங்கதனை (நோக்கி), 'உங்கள் மன்னவனுகிய சுக்கிரீவன் எவ்விடத்தே இருந்தனன்?' என வினவிய அளவில், 'ஆண் சிங்கத்தினை யொத்த (ஆற்றல் மிக்க) பெரு வீரனே! (நுமது நட்பினைப் பெற்று உய்யும் வண்ணம்) முன்னைப் பிறப்புக்களிற் செய்த தவமாகிய பெருஞ் செல்வத்தையுடைய சுக்கிரீவ மன்னவன் (நின்னை) எதிர்கொண்டழைத்தலைக் கருதி மேகம் தவழுமாறு ஓங்கிய அரண்மனையினது வெற்றித் திறம் விளங்கும் தலைவாயிலில் நின்றுள்ளான் எனக் கூறினுன் (அங்கதன்).

கு :—ஐயன், ஆண்டுப் பெயர்த்தும் வந்து அடிதொழுதான் (ஆகிய) அங்கதனை (நோக்கி), 'நும் கோமான் எங்கிருந்தான்?' என்றலும், 'சிங்க ஏறு அனைய வீர! செய்தவச் செல்வன், எதிர்கோள் எண்ணி, மங்குல் தோய் கோயில் கொற்றக் கடைத்தலை மருங்கு நின்ருன்' என்ருன் (அங்கதன்) என இயைத்துப் பொருள் கொள்க. பெயர்த்தும் - மீண்டும். ஐயன் - இலக்குவன். எதிர்கோள் - எதிர் கொள்ளுதல்; அன்பினுல் எதிர் கொண்டு வரவேற்றல். மங்குல் - மேகம். இராம இலக்குவராகிய நும்முடைய நட்பினைப் பெறுதற்கு முன்னைப்பிறப்புக்களில் ஈட்டிய பெருந்தவமாகிய செல்வத்தையுடையவன் என்பான் சுக்கிரீவனைச் செய்தவச் செல்வன் எனக் குறித்தான் அங்கதன். (101)

## சுக்கிரீவன் இலக்குவனை எதிர்கொள்ளுதல் 4475-4477

**4475.** சுண்ணமுந் தூசும் வீசிச்
சூடகத் தொடிக்கைம் மாதர்
கண்ணகன் கவரிக் கற்றைக்
காலுறக் கலைவெண் டிங்கள்
விண்ணுற வளர்ந்த தென்ன
வெண்குடை விளங்க வீர
வண்ணவிற் கரத்தான் முன்னர்க்
கவிக்குலத் தரசன் வந்தான்.

சுண்ணமும் தூசும் வீசி,
சூடகத் தொடிக் கைம் மாதர்,
கண் அகன் கவரிக் கற்றைக்
கால் உற, கலை வெண் திங்கள்
விண் உற வளர்ந்தது என்ன
வெண் குடை விளங்க, வீர
வண்ண வில் கரத்தான் முன்னர்,
கவிக் குலத்து அரசன் வந்தான்.

பொ :—கைவளையலையும் தோள் வளையலையும் அணிந்த மகளிர் நறுமணப் பொடியினையும் ஆடைகளையும் வீசி இடமகன்றசாமரைத் தொகுதிகளால் காற்றுண்டாகச் செய்யவும், கலைகள் நிரம்பப்பெற்ற வெண்மையான முழுமதி வானுற வுயர்ந்து விளங்கினாற் போன்று வெண்கொற்றக் குடை (குளிர்ந்த ஒளியினைப் பரப்பி) விளங்கவும், வானர குல மன்னவனாகிய சுக்கிரீவன், வீரத்தினை விளைவிக்கும் நிறந்தங்கிய விற்படையினை யேந்திய கையினனாகிய இலக்குவன் முன்னே வந்து சேர்ந்தான்.

கு :—சுண்ணம் - நறுமணப் பொடி. தூசு - ஆடை. தூய ஆடையினை மேலே வீசுதல் மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் அடையாளமாகும். சூடகம் - கைவளை. தொடி - தோள்வளை. 'சூடகம் தோள்வளை ஆர்ப்ப ஆர்ப்ப' (திருப்பொற்சுண்ணம் - 7) என்பது திருவாசகம். வளர்தல் - உயர்தல். (102)

**4476.** அருக்கிய முதல வாய
வருச்சனைக் கமைந்த யாவும்
முருக்கிதழ் மகளி ரேந்த
முரசின முகிலி னார்ப்ப

இருக்கின முனிவ ரோத
விசைதிசை யளப்ப யாணர்த்
திருக்கிளர் செல்வ நோக்கித்
தேவரு மருளச் சென்றான்.

அருக்கியம் முதல ஆய
அருச்சனைக்கு அமைந்த யாவும்
முருக்கு இதழ் மகளிர் ஏந்த,
முரசு இனம் முகிலின் ஆர்ப்ப
இருக்கு இனம் முனிவர் ஓத,
இசை திசை அளப்ப, யாணர்த்
திருக்கிளர் செல்வம் நோக்கித்
தேவரும் மருளச் சென்றான்.

பொ :—முருக்க மலரை யொத்த சிவந்த வாயினையுடைய மாதர்கள் (பெரியோர்களை வரவேற்று) வழிபடுதற்கு அமைந்த அர்க்கியநீர் முதலாக உள்ள உபசாரப் பொருள்கள் எல்லாவற்றையும் கைகளில் ஏந்தி வரவும், முரசு முதலிய வாத்தியங்களின் தொகுதி மழையின் முழக்கத்தைப் போன்று ஆரவாரிக்கவும், முனிவர்கள் வேதங்களின் பாடற்றொகுதிகளை முறைப்பட ஓதிவரவும் (இசைவல்லார் எழுப்பிய) இன்னிசையொலி திசைகளின் எல்லையை அளப்பதுபோன்று எங்குஞ் சென்று பரவவும், புதுமை வாய்ந்த திருத்தக்க சிந்தையின் நிறைவைக் கிளர்ந்து தோன்றச் செய்யும் அரச செல்வத்தைக் கண்டு விண்ணுலகத்தவராய தேவர்களும் வியக்கும் வண்ணம் (சுக்கிரீவன் இலக்குவனை நோக்கிச்) சென்றான்.

கு :—அருக்கியம் - அர்க்கிய நீர்; தெய்வத்தையும் பெரியோர்களையும் வழிபட்டு உபசரிக்கும் நிலையில் அன்னோர் தம் கைகளைக் கழுவிக் கொள்ளுதற் பொருட்டு அளிக்கப் பெறும் தூயநீர். அருக்கியம் முதலிய உபசாரங்களாவன: கைகழுவ நீர்தருதல், நீராட்டல், ஆடை சாத்தல், முப்புரிநூல் தருதல், சந்தனம் பூசுதல், மலர் சூட்டல், அக்ஷதை தூவுதல், நறும்புகையெடுத்தல், நல்விளக்குக் காட்டுதல், கர்ப்பூரம் ஏற்றுதல், அமுது படைத்தல், அடைக்காய் தருதல், மந்திர மலரால் அருச்சித்தல் என்பனவாம்; 'அருக்கிய முதலிய கடன்களாற்றி' (கம்பர்–திருவவதார–55) என முன்னருங் கூறினமை இங்கு நோக்கத்தக்கதாகும். முருக்கு - செம்முருக்கு; ஆகுபெயராய் அதன் மலரை யுணர்த்தி நின்றது. முனிவர் இருக்கினம் ஓத என இயையும். இருக்கு - வேதம். இனம் - தொகுதி. ஏந்த, ஆர்ப்ப, ஓத, அளப்ப, மருள என்னும் செயவென்னெச்சங்கள் சென்றான் என்னும் பிறகருத்தாவின் வினைகொண்டு முடிந்தன.
(103)

4477. வெம்முலை மகளிர் வெள்ள
மீனென விளங்க விண்ணிற்
சும்மைவான் மதியங் குன்றிற்
றேன்றிய தெனவுந் தோன்றிச்
செம்மலை யெதிர்கோ ளெண்ணித்
திருவொடு மலர்ந்த செல்வன்
அம்மலை யுதயஞ் செய்யுந்
தாதையு மனைய ஞனன்.

வெம் முலை மகளிர் வெள்ளம்
மீன் என விளங்க, விண்ணில்
சும்மைவால் மதியங் குன்றில்
தோன்றியது எனவுந் தோன்றிச்
செம்மலை எதிர்கோள் எண்ணித்
திருவொடு மலர்ந்த செல்வன்,
அம் மலை உதயஞ் செய்யும்
தாதையும் அனையன் ஆனன்.

பொ :—திருத்தகவிற்ருகிய பேரழகுடன் பொலிவு பெற்றுத் தோன்றும் அரசப் பெருஞ் செல்வத்தினனுகிய சுக்கிரீவன், பெருமையிற் சிறந்த இலக்குவனை எதிர்கொள்ளக் கருதி விருப்பத்தை விளைக்கும் அழகிய தனங்களையுடையராகிய (வானர) மகளிர் கூட்டம் விண்மீன்களைப் போன்று (தன்னைச் சூழ்ந்து) விளங்க, வானத்தின் கண்ணே உள்ள கலைகளின் நிறைவைக் கொண்ட வெண்மை வாய்ந்த சந்திரன் குன்றின் கண்ணேயும் தோன்றியது என்று சொல்லுமாறு தோன்றி அத்தகைய உதய மலையிலே தோன்றும் தன் தந்தையாகிய சூரியனையும் ஒத்து விளங்கினன்.

கு :—திருவொடு மலர்ந்த செல்வன், செம்மலை எதிர்கோள் எண்ணி, மகளிர் வெள்ளம் மீனென விளங்க விண்ணின் மதியம் குன்றிலும் தோன்றியது எனத் தோன்றி, அம்மலை உதயம் செய்யும் தாதையும் அனையன் ஆனன் என இயைத்துப் பொருள் கொள்க. வெம்மை - விருப்பம். மீன் - நட்சத்திரம். சும்மை - சுமை; (கலைகளின்) நிறைவு. வால் மதியம் - வெண்திங்கள். இராமனருளால் அடையத்தக்க செல்வங்களனைத்தையும் குறைவின்றிப் பெற்றவன் சுக்கிரீவன் ஆதலின், 'திருவொடு மலர்ந்த செல்வன்' எனச் சிறப்பிக்கப் பெற்றனன் என்க. செம்மல் - ஆடவரிற் சிறந்தோன்; என்றது ஈண்டு இலக்குவனை. அம்மலை - அவ் உதயமலை. உதயஞ் செய்தல் - தோன்றி விளங்குதல். தாதை - தந்தை; என்றது சுக்கிரீவனுக்குத் தந்தையாகிய சூரியனை.
([illegible])

### இலக்குவன் சுக்கிரீவனைக் கண்டவுடன் தன்மனத் தெழுந்த சீற்றத்தைத் தணித்துக் கொள்ளுதல்

**4478.** ★ தோற்றிய வரிக்குலத் தரசைத் தோன்றலும்
ஏற்றெதிர் நோக்கின னெழுந்த தவ்வழிச்
சீற்றமங் கதுதனைத் தெளிந்த சிந்தையால்
ஆற்றினன் தருமத்தி னமைதி யுன்னுவான்.

தோற்றிய அரிக்குலத்து அரசை, தோன்றலும்,
ஏற்று எதிர் நோக்கினன்; எழுந்தது அவ்வழிச்
சீற்றம்; அங்கு அதுதனை, தெளிந்த சிந்தையால்
ஆற்றினன், தருமத்தின் அமைதி உன்னுவான்.

பொ :—தலைவனாகிய இலக்குவனும், (தன் எதிரே) தோன்றிய குரக்கினத்தரசனாகிய சுக்கிரீவனை வரவேற்று எதிரே நோக்கினான். அந்நிலையில் (அவனுள்ளத்தே முன் தணிந்தடங்கிய) கோபம் (மீளவும்) மூண்டெழுந்தது. அறத்தின் இயல்பினை எண்ணுபவனாகிய அவ் இலக்குவன் அவ்விடத்து அவ்வெகுளியை ஞானத்தெளிவுடைய தன் மனத்தினால் தணித்துக் கொண்டான்.

கு :—தோன்றல் என்றது இலக்குவனை. தோன்றலும், தோற்றிய அரிக்குலத்தரசை ஏற்று எதிர் நோக்கினன்; அவ்வழிச் சீற்றம் எழுந்தது; தருமத்தின் அமைதி உன்னுவான் அங்கு அதுதனைத் தெளிந்த சிந்தையால் ஆற்றினன் என இயைத்துரைக்க. அரிக்குலத்தரசு - சுக்கிரீவன். தோற்றிய - தோன்றிய. ஆற்றுதல் - தணித்தல். தருமத்தின் அமைதியாவது, அறியாமையாற் பிழை செய்தோர் தமது பிழைக்கு நாணித் தன்னையடைந்தக்கால் அவர்களை வெகுளாது ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும் என்னும் அறநூல் விதி. (105)

### சுக்கிரீவனும் இலக்குவனும் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு, பரிவாரங்களுடன் அரண்மனையை அடைதல்

**4479.** எழுவென மலையென வெழுந்த தோள்களால்
தழுவின ரிருவருந் தழுவித் தையலார்
குழுவொடும் வீரர்தங் குழாத்தி னேடும்புக்
கொழிவில்பொற் கோபுரத் துறையு ளெய்தினர்.

எழு என மலை என எழுந்த தோள்களால்,
தழுவினர், இருவரும்; தழுவி, தையலார்
குழுவொடும், வீரர்தம் குழாத்தினேடும் புக்கு,
ஒழிவு இல் பொற் கோபுரத்து உறையுள் எய்தினர்.

பொ :—(இலக்குவன் சுக்கிரீவன் என்னும்) அவ் இருவரும் வலிய தூண் என்றும் மலை என்றும் (கண்டோர் கூறுமாறு) உயர்ந்து ஓங்கிய தோள்களால் (ஒருவரை யொருவர் நண்பினுல்) தழுவிக் கொண்டனர். அவ்வாறு தழுவிக்கொண்டு, வானர மகளிர் கூட்டத் தொடும் வீரர் குழாத்தினெடும் கெடுதல் இல்லாத பொன்னுல் இயன்ற கோபுரவாயிலின் வழியாக அரண்மனையினுள்ளே சென்று சேர்ந்தார்கள்.

கு :—எழு - தூண். என - என்று கூற; எழுந்த - உயர்ந்து ஓங்கிய. இனி 'என' என்பதனை உவமவுருபாகக் கொண்டு, 'எழுப் போலவும் மலை போலவும் பருத்துயர்ந்த தோள்களால்' எனப் பொருளுரைப்பினும் அமையும். (106)

## இலக்குவனைச் சிங்காதனத்தில் அமரும்படி சுக்கிரீவன் வேண்ட, இலக்குவன் அதற்கு உடன்படாமை 4480-4481

**4480.** அரியணை யமைந்தது காட்டி யையவீண்
டிருவெனக் கவிக்குலத் தரச னேவலும்
திருமக டலைமகன் புல்லிற் சேரவெற்
குரியதோ விஃதென மனத்தி னுன்னுவான்.

அரியணை அமைந்தது காட்டி, 'ஐய! ஈண்டு
இரு,' எனக் கவிக்குலத்து அரசன் ஏவலும்,
'திருமகள் தலைமகன் புல்லில் சேர, எற்கு
உரியதோ இஃது?' என மனத்தின் உன்னுவான்.

பொ :—வானரகுல மன்னனுகிய சுக்கிரீவன் (தன் அரசவையில்) அமைந்துள்ளதாகிய சிங்காதனத்தை (இலக்குவனுக்கு)க் காட்டி, 'ஐயனே! இதன்கண் அமர்ந்திருப்பாயாக' என (அன்பினுற்) பணித்த அளவில், (அதுகேட்ட இலக்குவன்) 'இலக்குமி நாயகனுகிய இராமபிரான் புல்லணையிலே தங்கியிருக்க (அவனது ஏவற்பணியாள னுகிய) எனக்கு (அரசு கட்டிலாகிய சிங்காதனத்தில் அமர்தலாகிய) இச்செய்கை தகுதியுடையதோ என்று தன் மனத்தில் எண்ணு பவனுகி.

கு :—'உன்னுவான்' என்னும் வினைமுற்று எச்சமாய் அடுத்த செய்யுளில் உள்ள 'என்றுன்' என்னும் வினைகொண்டு முடிந்தது. அரி - சிங்கம். அணை - தவிசு. அரியணை - சிங்கம் சுமந்த செழு மணித்தவிசு. திருமகள் தலைமகன் - இலக்குமி நாயகன்; என்றது திருமாலின் அவதாரமாகிய இராமனை. புல் - புல்லினுல் அமைந்த

ஆசனம். இஃது - இவ்வாறு சிங்காதனத்தில் அமர்தல். சுக்கிரீவன் தன் அரசவையிலிருந்த சிங்காதனத்தைக் காட்டி அதன்கண் அமரும்படி இலக்குவனை வேண்டினுனுக, அதுகேட்ட இலக்குவன், 'எல்லாச் செல்வங்களுக்கும் அதி தெய்வமாகிய இலக்குமிக்கு நாயகனுகிய எம்பெருமான் புல்லணையிலே தங்கியிருக்கவும் அவனது அடியவனுகிய யான் இச் சிங்காதனத்தில் அமர்தல் அடுக்குமோ' என எண்ணி வருந்தினுன் என்பதாம். (107)

4481. கல்லணை மனத்தினை யுடைக்கை கேசியால்
எல்லணை மணிமுடி துறந்த வெம்பிரான்
புல்லணை வைகயான் பொன்செய் பூத்தொடர்
மெல்லணை வைகலும் வேண்டுமோ வென்றுன்.

'கல் அணை மனத்தினையுடைக் கைகேசியால்,
எல் அணை மணிமுடி துறந்த எம்பிரான்
புல் அணை வைக, யான் பொன் செய் பூத்தொடர்
மெல் அணை வைகலும் வேண்டுமோ?' என்றுன்.

பொ :—கல்லின் தன்மை வாய்ந்த வன்னெஞ்சத்தினையுடையளாகிய கைகேசியின் சூழ்வினையால் ஒளிமிகுந்த மணிகள் பதிக்கப்பெற்ற அரசமுடியினைத் துறந்து (காட்டிற்) போந்த எம்பெருமானுகிய இராமன், புற்படுக்கையிலே தங்கியிருக்க, (அத்தலைவனது அடித்தொண்டனுகிய) யான், பொன்னினுற் செய்யப்பெற்று மலர்களால் அணிசெய்யப் பெற்ற மெல்லிய தவிசில் தங்குதலும் விரும்பத் தக்கதோ ? என்று (மனம் வருந்திக்) கூறினுன்.

கு :—கல் அணை மனம் - பிறரது துன்பங் கண்டவழி அன்பினுல் இளகுந் தன்மையின்றிக் கற்போன்று வல்லென்றிருக்கும் இயல்பினதாகிய ஈரமற்ற உள்ளம். 'கல்லில் வலிய மனத்தேன்' (தேவாரம் 7-73-3.) எனவும் 'கன்மனவீர்' (தேவாரம்-4-81-31) எனவும் 'கல் வகை மனத்தேன்' (திருவாசகம்-52) எனவும் வரும் தொடர்கள் இங்கு நினைக்கத்தக்கன. எல் - ஒளி. (108)

அது கேட்டுச் சுக்கிரீவன் வருந்திநிற்க, இலக்குவன், தரையில் இருத்தல்

4482. என்றவ னுரைத்தலு மிரவி காதலன்
நின்றனன் விம்மினன் மலர்க்க ணீருகக்
குன்றென வுயர்ந்தவக் கோயிற் குட்டிம
வன்றலத் திருந்தனன் மனுவின் கோமகன்.

என்று அவன் உரைத்தலும், இரவி காதலன்
நின்றனன்; விம்மினன், மலர்க்கண் நீர் உக;
குன்று என உயர்ந்த அக் கோயில் குட்டிம
வன்தலத்து இருந்தனன், மனுவின் கோமகன்.

பொ :—என்று இவ்வாறு அவ் இலக்குவன் கூறிய அளவில், சூரியன் மகனுகிய சுக்கிரீவன், தாமரை மலர்போலும் தன் கண்களி லிருந்து நீர் சொரியத் தேம்பியழுது நின்ருன். மனு மரபிற் பிறந்த மன்னவகுமாரனுகிய இலக்குவன், மலேபோன்று உயர்ந்த அவ் அரண்மனேயினுள்ளே கற்படுத்தி அமைக்கப்பட்ட வலிய தரையின் கண்ணே அமர்ந்திருந்தான்.

கு :—என்று அவன் உரைத்தலும் இரவிகாதலன், மலர்க்கண் நீர் உக விம்மினன் நின்றனன் எனவும், மனுவின் கோமகன், குன்றென உயர்ந்த அக்கோயிற் குட்டிம வன்தலத்து இருந்தனன் எனவும் இயைத்துப் பொருள் கொள்க. அவன் என்றது இலக்குவனே. இரவி காதலன் - சூரியன் மகன்; சுக்கிரீவன். விம்முதல் - தேம்பி யழுதல். மனுவின் கோமகன் - மனு மரபிற் பிறந்த அரசகுமாரன்; இலக்குவன். குட்டிமம் - கற்பாவிய தரை. (109)

### கண்டோர் வருந்துதல்

**4483.** மைந்தரு முதியரு மகளிர் வெள்ளமும்
அந்தமி னேக்கின ரழுத கண்ணினர்
இந்திய மவித்தவ ரெனவி ருந்தனர்
நொந்தனர் தளர்ந்தனர் நுவல்வ தோர்கிலார்.

மைந்தரும், முதியரும், மகளிர் வெள்ளமும்,
அந்தம் இல் நோக்கினர், அழுத கண்ணினர்,
இந்தியம் அவித்தவர் என இருந்தனர்;
நொந்தனர்; தளர்ந்தனர்; நுவல்வது ஓர்கிலார்.

பொ :—(அப்பொழுது அங்கு இருந்த வானரர்களில்) இளேய வரும் முதியவர்களும் பெருந்தொகையினராய்க் குழுமிய மாதர்களும் (சுக்கிரீவன், இலக்குவன் என்னும் இவ்விருவரது துயரக் கோலத் தைக் கண்டு) பொலிவிழந்த பார்வையினராய், அழுதமையால் நீர் மல்கும் கண்களேயுடையராய், மனம் வெதும்பி உடல் சோர்ந்து வருந்தியவர்களாய், இன்னது சொல்வதென்று ஒன்றும் சொல்லத் தோன்ருதவர்களாய், ஐம்பொறிகளே யடக்கிய முனிவர்களேப் போன்று (உயிர்ப்பு அடங்கப்பெற்று) அசைவற்று இருந்தார்கள்.

9

கு :—மைந்தரும் முதியரும் மகளிர் வெள்ளமும், நோக்கினர், கண்ணினர், நொந்தனர், தளர்ந்தனர், ஓர்கிலார், இருந்தனர் என முடிக்க. நோக்கினர் முதலிய முற்றுக்கள் எச்சப் பொருளில் வந்தன. இந்தியம் அவித்தவர் என - ஐம்பொறிகளையும் அடக்கிய முனிவர்களைப் போன்று. இந்தியம் - இந்திரியம்; மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள். அவித்தல் - அடக்குதல். (110)

## திருமஞ்சனம் ஆடி அமுது அருந்தும்படி இலக்குவனைச் சுக்கிரீவன் வேண்ட, இலக்குவன் அதற்கு உடன்படாது மறுத்துரைத்தல் 4484-4488

**4484.** மஞ்சன விதிமுறை மரபி னாடினை
எஞ்சலி லின்னமு தருந்தின் யாமெலாம்
உய்ஞ்சன மினியென வரசு ரைத்தலும்
அஞ்சன வண்ணனுக் கனுசன் கூறுமால்.

'மஞ்சன விதிமுறை மரபின் ஆடினை,
எஞ்சல் இல் இன் அமுது அருந்தின், யாம் எலாம்
உய்ஞ்சனம் இனி' என அரசு உரைத்தலும்,
அஞ்சன வண்ணனுக்கு அனுசன் கூறுமால்.

பொ :—அரசனாகிய சுக்கிரீவன் (இலக்குவனை நோக்கி) 'நூல்களில் விதித்த விதிமுறைப்படி நீராடினையாய், (சுவையிற்) குறைதல் இல்லாத இனிய அமுதினை (இங்கு) உண்டனையாயின், (நினது அருளுக்கு உரியராகிய) யாமெல்லாம் இப்பொழுது நல்வாழ்வு பெற்று உய்ந்தவர்களாவோம்' என்று கூறிய அளவில், மைபோலும் கரியநிறத் திருமேனியுடைய இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன் (சுக்கிரீவனை நோக்கிப்) பின்வருமாறு கூறுவானாயினன்.

கு :—விதிமுறை மரபின் மஞ்சனம் ஆடினை, எஞ்சல் இல் இன் அமுது அருந்தின் யாமெலாம் இனி உய்ஞ்சனம்' என அரசு உரைத்தலும் என இயைத்துரைக்க. மஞ்சனம் - நீராட்டு. ஆடினை - ஆடி; முற்றெச்சம். எஞ்சல் - குறைதல். உய்ஞ்சனம் - உய்ந்தனம் - உய்ந்தோம்; நகரத்திற்கு ஞகரமும் தகரத்திற்குச் சகரமும் மொழியிடையிற் போலியாய் நின்றன. அஞ்சனவண்ணன் - மைவண்ணத் திருமேனியுடைய இராமன். அனுசன் - தம்பி; இலக்குவன். (111)

4485. வருத்தமும் பழியுமே வயிறு மீக்கொள
இருத்துமென் றாலெமக் கினிய தியாவதோ
அருத்தியுண் டாயினு மவலந் தான்றழீஇக்
கருத்துவே றுற்றபி னமிழ்துங் கைக்குமால்.

'வருத்தமும் பழியுமே வயிறு மீக்கொள
இருத்தும் என்றால், எமக்கு இனியது யாவதோ?
அருத்தி உண்டு ஆயினும் அவலம்தான் தழீஇக்
கருத்து வேறு உற்றபின், அமிழ்தும் கைக்குமால்.

பொ :—துயரமும் பழியும் ஆகிய இவையே (எமது) வயிற்றை நிரப்பி மேலோங்க (உயிரைத்துறவாது) பிழைத்திருக்கின்றோம் என்றால், (இவ்வாறு வாழ்க்கையில் வெறுப்புற்ற) எங்களுக்கு இனிமை பயப்பது யாதுளது? (உணவு முதலியவற்றில்) விருப்பம் உளதாயினும் துயரத்தையே மேற்கொண்டு மனக்கருத்து மாறுபட்ட நிலைமைக்கண் வானோர் அமிழ்தமேயாயினும் கசப்புடையதாய் வெறுக்கப்படுமன்றோ?

கு :—வருத்தம் - சீதாபிராட்டியை இராவணன் வஞ்சனையாற் கவர்ந்து சென்றமையால் உளதாகிய பெருந்துயரம். பழி - இராவணனைக் கொன்று சீதையை விரைந்து மீட்காமையால் உண்டாகும் பழிச்சொல். மீக்கொளல் - நிரம்பி மேலோங்குதல். இருத்தும் - இருக்கின்றோம். 'விதிமுறை மரபின் மஞ்சனம் ஆடினை, எஞ்சலில் இன்னமுது அருந்தின் யாமெலாம் உய்ஞ்சனம்' எனச் சுக்கிரீவன் கூறியது கேட்ட இலக்குவன், 'வருத்தத்தையும் பழியையுமே வாழ்க்கை நுகர்ச்சியாகக் கொண்ட எங்களுக்கு இனிமைதரும் உணவாவது எதுவும் இல்லை' என மறுமொழி கூறினான் என்பதாம். இச்செய்யுளில் முன்னிரண்டடியின் பொருளை முடிக்கும் நிலையிற் பின்னிரண்டடியிற் பொதுப் பொருள் வைக்கப் பெற்றிருத்தலால் இது வேற்றுப் பொருள்வைப்பு என்னும் அணியமைந்ததாகும்.
(112)

4486. மூட்டிய பழியெனு முருங்கு தீயவித்
தாட்டினை கங்கைநீ ரரசன் தேவியைக்
காட்டினை யெனினெமைக் கடலி னாரமிழ்
தூட்டினை யாற்பிறி துயவு மில்லையால்.

'மூட்டிய பழி எனும் முருங்கு தீ அவித்து,
ஆட்டினை கங்கைநீர்—அரசன் தேவியைக்

காட்டினே எனின்—எமைக் கடலின் ஆர் அமிழ்து
ஊட்டினேயால்; பிறிது உயவும் இல்லையால்.

பொ :—வேந்தனுகிய இராமனது வாழ்க்கைத் துணைவியாகிய சீதாபிராட்டியை (இன்ன இடத்தில் உள்ளாள் என்று) தேடிக்கண்டு அறிவித்தாயானுல், (அரக்கராகிய கொடியோரால்) மூட்டப்பட்டு (எம்மை)ப் பற்றிய, அழிதற்குக் காரணமாகிய நெருப்பை அவித்து எங்களைத் தூய கங்கை நீரினுல் திருமஞ்சனம் ஆட்டியவன் ஆவாய்; திருப்பாற்கடலில் உண்டாகிய பெறுதற்கு அரிய அமிழ்தத்தை எங்களுக்கு அருத்தியவன் ஆவாய். (இதனுல்) எமக்கு எத்தகைய துன்பமும் இல்லாதொழியும்.

கு :—அரசன் தேவியைக் காட்டினே எனின், மூட்டிய பழியெனும் முருங்கு தீ அவித்து எம்மைக் கங்கைநீர் ஆட்டினே; கடலின் ஆர் அமிழ்து ஊட்டினே; பிறிது உயவும் இல்லை என இயையும். ஆல் - அசை. முருங்குதீ - (தன்னைச் சேர்ந்தார்) அழிதற்குக் காரணமாகிய நெருப்பு. முருங்குதல் - அழிதல். உயவு - துன்பம். 'சீதையிருக்கும் இடத்தைத் தேடிக்கண்டு எமக்கு அறிவித்தலாகிய இவ்வுதவியே, எனக்குரிய உபசாரங்களாக நின்னுற் குறிக்கப்பட்ட திருமஞ்சனமும் இன்னமுதும் ஆக அமைந்து எங்களுக்கு மகிழ்ச்சி விளைப்பதாகும்' என இலக்குவன் சுக்கிரீவனுக்கு அவனது கடமையின் இன்றியமையாமையினை அறிவுறுத்தினுன் என்பதாம். (113)

**4487.** பச்சிலை கிழங்குகாய் பரம னுங்கிய
மிச்சிலே நுகர்வது வேறு நானென்று
நச்சிலே னச்சினே னுயி னுயுண்ட
எச்சிலே யதுவிதற் கைய மில்லையால்.

'பச்சிலை, கிழங்கு, காய், பரமன் நுங்கிய
மிச்சிலே நுகர்வது; வேறு நான் ஒன்றும்
நச்சிலேன்; நச்சினேன் ஆயின், நாய் உண்ட
எச்சிலே அது; இதற்கு ஐயம் இல்லையால்.

பொ :—பசிய இலையும் கிழங்கும் காயும் என மேலோனுகிய இராமனுல் நுகரப்பெற்று எஞ்சிய மிகுதிப் பொருளே (அவனுக்கு அடியவனுகிய) என்னுல் நுகரப்படும் இனிய உணவாகும். (மிச்சிலாகிய அதனையன்றி) நான் வேறென்றையும் விரும்பமாட்டேன். (மாருக) விரும்பினேனுயின் (என்னுல் விரும்பப்பட்ட) அப்பொருள் நாய் தின்று எஞ்சிய எச்சிலெனவே கருதப்படும். இதற்குச் சிறிதும் சந்தேகமில்லை.

கு :—நுங்குதல் - உண்ணுதல். மிச்சில் - மிஞ்சியிருப்பது. நச்சுதல் - விரும்புதல், பரமன் - மேலோன்; இராமன். பரமன் திருமுன்னர்ப் படைக்கப் பெற்றுத் தூய்மையுருத உணவு, நாய் தின்றெஞ்சிய எச்சிலுக்குச் சமம் என்றவாறு. (114)

4488. அன்றியு மொன்றுள தைய யானினிச்
சென்றனன் கொணர்ந்தடை திருத்தி னலது
நுன்றுணைக் கோமக னுகர்வ தாதலான்
இன்றிறை தாழ்த்தலு மினிதன்று மென்ருன்.

'அன்றியும் ஒன்று உளது; ஐய! யான் இனிச்
சென்றனன் கொணர்ந்து' அடைதிருத்தினல், அது
நுன் துணைக் கோமகன் நுகர்வது, ஆதலான்,
இன்று, இறை தாழ்த்தலும் இனிது அன்ரும்' என்ருன்.

பொ :—ஐயனே! மேற்கூறியதல்லாமலும் மற்ருென்றும் கூற வேண்டியுளது. யான் இனிச்சென்று இலை முதலிய உணவினைத் தேடிக்கொண்டு வந்து (அவற்றைத் தூய்மைபெறத்) திருத்தி வைத்தால் (அங்ஙனம் திருத்தப்பெற்ற) அப்பொருளே நின் (அன்புக்கினிய) துணைவனுகிய இராமபிரானல் அமுது செய்யத்தகும் உணவாகும். ஆதலால் (அவன் என்னையின்றி அங்குப் பசித்திருக்க) இப்பொழுது நான் (இங்குச்) சிறிது நேரம் தாமதித்திருத்தலும் இனிமை தருவதாகாது எனக் கூறினன் (இலக்குவன்).

கு :—சென்றனன் - சென்று; முற்றெச்சம். அடை - இலை; கீரை. திருத்துதல் - உண்ணுதற்குரியவாக அமைத்துக் கொடுத்தல். நான் இங்குச் சிறிதுநேரம் தாமதித்திருத்தலும் இராமபிரான் பசியினல் துன்புறுதற்குரிய செயலாய் முடியும் என்பான், 'இன்று இறை தாழ்த்தலும் இனிது அன்ரும்' என்ருன். இறை - சிறிது. (115)

## சுக்கிரீவன் வருந்துதல்

4489. வானர வேந்தனு மினிதின் வைகுதல்
மானவர் தலைமக னிடரின் வைகவே
ஆனது குரக்கினத் தெமர்கட் காமெனு
மேனிலை யழிந்துயிர் விம்மி னனரோ.

வானர வேந்தனும், 'இனிதின் வைகுதல்,
மானவர் தலைமகன் இடரின் வைகவே
ஆனது; குரக்கினத்து எமர்கட்கு ஆம்' என,
மேல் நிலை அழிந்து, உயிர் விம்மினன் அரோ.

பொ :—(அது கேட்ட) குரக்கினத்தரசனாகிய சுக்கிரீவனும், "(யான் சீதையைத் தேடிக் கொணர்தலாகிய என் கடமையிற் கருத்தின்றி) இவ்வாறு இனிமையாகக் கழித்திருந்தமை, மனுகுலத் தார் கோமகனாகிய இராமபிரான் இவ்வாறு பெருந்துன்பத்துள் தங்கு தற்கே ஏதுவாயிற்று; (நன்றி மறந்த என் செயல்) உணர்வற்ற குரக்கினத்தாராகிய எம்போன்றார்க்கே தக்கதாகும்" என்று கூறித் தனது மேலாகிய பெருமைநிலை குலைந்து உயிர் விம்முதலுற்று வருந்தினன்.

கு :—வானரவேந்தன், என, மேல்நிலை அழிந்து உயிர் விம்மினன் என முடியும். சீதையைப் பிரிந்து தனித்துறையும் இந் நிலையில் இராமன் அடைந்த இத்துயரத்துக்கெல்லாம் காரணமா யமைந்தது, அவன் என்பாற் கொண்ட நம்பிக்கை சிதையாதவாறு உரிய காலத்திற்சென்று சீதையைத் தேடிக் கொணர்தலாகிய கடமையிற் கருத்தின்றி மதுவுண்டு மகளிருடன் இனிதின்வைகிய எனது பொறுப்பற்ற செயலே என்பான், 'இனிதின் வைகுதல், மானவர் தலைமகன் இடரின் வைகவே ஆனது' என்றான். எனக்கு உதவிபுரிந்த தலைவன் இடரில் வைக, அவனால் தலையளிக்கப்பெற்ற யான் அவனது இடுக்கண் களைதற்கு முயலாது செய்ந்நன்றி மறந்து இன்பத்துறையில் எளியனாய்த் தாழ்வுற்ற இச்செயல், ஒழுக்கமுடைய விழுத்திணைப் பிறந்தோர்க்கு ஒவ்வாததாய், ஒழுக்கமில்லாத இழிந்த குரங்கினத்தாராகிய எம்போன்றார்க்கே ஒத்ததாயிற்று' என்பான், 'குரக்கினத்தெமர்கட்கு ஆம்' என இரங்கிக் கூறினன். (116)

வருந்திய சுக்கிரீவன் அநுமனை நோக்கி ஒரு வார்த்தை கூறி இராமன் இருக்கும் இடத்திற்கு விரைந்து புறப்படுதல் 4490, 4491

**4490.** எழுந்தனன் பொருக்கென
விரவி கான்முளை
விழுந்தகண் ணீரினன்
வெறுத்த வாழ்வினன்
அழிந்தயர் சிந்தைய
னனுமற் காண்டொன்று
மொழிந்தனன் வரன்முறைப்
போதன் முன்னுவான்.

எழுந்தனன் பொருக்கென, இரவிகான்முளை ;
விழுந்த கண்ணீரினன், வெறுத்த வாழ்வினன்
அழிந்து அயர் சிந்தையன், அனுமற்கு ஆண்டு, ஒன்று
மொழிந்தனன், வரன்முறை போதல் முன்னுவான்.

பொ :—சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன் (அவ்விடத்தை விட்டு) விரைவாக எழுந்தான் ; நீர்மல்கிச் சொரியும் கண்களையுடையனாய் வாழ்க்கையை வெறுத்தவனாய் வருந்திச் சோரும் நெஞ்சத்தினனாய், (பெரியோனாகிய இராமபிரானிடம்) செல்லும் முறைப்படி செல்லுதலை எண்ணியவனாகி அவ்விடத்து அனுமனை நோக்கி ஒரு வார்த்தை கூறினான்.

கு :—இரவிகான்முளை, பொருக்கென எழுந்தனன், கண்ணீரினன் வாழ்வினன், சிந்தையன், முன்னுவான், ஆண்டு அனுமற்கு ஒன்று மொழிந்தனன் என முடிக்க. இரவி - சூரியன். கால்+முளை=கான் முளையென லகரம் னகரமாத் திரிந்தது. கால்முளை - மகன். இரவி கான்முளை - சூரியன் புதல்வன் ; சுக்கிரீவன். பொருக்கென - விரைவாக. நீர்விழுங் கண்ணினன், வாழ்வு வெறுத்தவன், சிந்தை அயர்ந்து அழிபவன் எனற்பாலன விழுந்த கண்ணீரினன், வெறுத்த வாழ்வினன், அழிந்தயர் சிந்தையன் என வந்தன. விழுதல் - சொரிதல். வரன்முறை - பெரியோர்களைப் பணிந்து உபசரிக்கும் முறை. 'வரன்முறை செய்திட' (பால. திருவவதாரப்–64) என்றார் முன்னரும். (117)

**4491.** போயின தூதரிற் புகுதுஞ் சேனையை
நீயுடன் கொணருதி நெறிவ லோயெனா
ஏயின னனுமனை யிருத்தி யீண்டெனா
நாயக னிருந்துழிக் கடிது நண்ணுவான்.

'போயின தூதரின் புகுதும் சேனையை,
நீ உடன் கொணருதி, நெறிவலோய் !' எனா,
ஏயினன், அனுமனை, 'இருத்தி ஈண்டு' எனா,
நாயகன் இருந்துழிக் கடிது நண்ணுவான்.

பொ :—'நீதி நெறியில் வல்லவனே ! (எனது ஏவலை மேற் கொண்டு) சென்ற தூதர்களால் (இக் கிட்கிந்தையினுள்ளே) வர இருக்கும் சேனைகளை நீ உன்னுடன் அழைத்துக்கொண்டு (இராமன் இருக்குமிடத்திற்கு) வருவாயாக' எனவும், ('அச்சேனைகள் இங்கு வந்து சேரும்வரை) இங்கேயே தாமதித்திருப்பாயாக எனவும்

அநுமனை நோக்கிக் கட்டளையிட்டு, யாவர்க்கும் தலைவனாகிய இராம பிரான் இருந்த இடத்திற்கு விரைந்து செல்வானாயினான் (சுக்கிரீவன்).

கு :—'நெறிவலோய்! தூதரிற் புகுதும் சேனையை நீ உடன் கொணருதி' என, 'ஈண்டு இருத்தி' என அனுமனை ஏயினன், நாயகன் இருந்துழிக் கடிது நண்ணுவான் (சுக்கிரீவன்) என முடிக்க. ஏயினன் - ஏவி; முற்றெச்சம். நாயகன் என்றது, எவ்வுயிர்க்கும் தலைவனாகிய இராமபிரானை. 'நாயகன் இராமன்' (வாலி-146) என முன்னர்க் கூறினமை காண்க. (118)

## சுக்கிரீவன், தன் பரிவாரங்கள் சூழச் சென்று இராமனை அடைதல் 4492-4497

**4492.** அங்கத னுடன்செல வரிகண் முன்செல
மங்கைய ருள்ளமும் வழியும் பின்செலச்
சங்கையி லிலக்குவற் றழுவித் தம்முனிற்
செங்கதி ரோன்மகன் கடிதிற் சென்றனன்.

அங்கதன் உடன்செல, அரிகள் முன்செல,
மங்கையர் உள்ளமும் வழியும் பின்செல,
சங்கை இல் இலக்குவன்—தழுவி, தம் முனின்
செங்கதிரோன் மகன், கடிதிற் சென்றனன்.

பொ :—சிவந்த ஒளிக்கற்றைகளையுடைய ஞாயிற்றின் மைந்தனாகிய சுக்கிரீவன், அங்கதன் தன்னைத் தொடர்ந்து உடன் வரவும், வானர வீரர்கள் தனக்கு முன்னே செல்லவும், (காதல்மிக்க) மகளிரது மனமும் செல்லும் வழியும் பின்னே செல்லவும், ஐயத்தின் நீங்கித் தெளிந்த நெஞ்சத்தினனாகிய இலக்குவனைத் தழுவிக்கொண்டு தமையனாகிய இராமபிரான் இருக்கும் இடத்தை விரைந்து அடைந்தான்.

கு :—செங்கதிரோன் மகன், அங்கதன் உடன்செல, அரிகள் முன்செல, மங்கையர் உள்ளமும் வழியும் பின்செல, இலக்குவற் றழுவித் தம்முன்இல் கடிதிற் சென்றனன் என இயையும். செங் கதிரோன் - செந்நிற வொளியினையுடைய சூரியன். அவன்மகன் - சுக்கிரீவன். அரிகள் - குரங்குகள்; வானர வீரர்கள். இராமன்பால் நீங்காத அன்புடையவன் சுக்கிரீவன் என்பதனை இலக்குவன் ஐய மின்றித் தெளியவுணர்ந்தான் என்பார் 'சங்கைஇல் இலக்குவன்' எனக் குறித்தார். சங்கை - ஐயம். இரண்டாம் வேற்றுமைத்தொகை

யாதலின், இலக்குவன்+தழுவி=இலக்குவற்றழுவி என நிலைமொழியீற்று னகரம் றகரமாகத் திரிந்தது. தம்முன் - தமையன்; என்றது இராமனை. இல் - தங்கியிருக்கும் இடம். பின்செல என்பது பின் தொடர்ந்து செல்ல எனவும் பிற்பட்டு ஒழிய எனவும் இரட்டுற மொழிதலாய் நின்று, மங்கையர் உள்ளம் பின்தொடர்ந்து செல்ல என்றும், செல்லும் வழி பின்னிட்டு ஒழிய என்றும் இருவகையாகப் பொருள் தந்தது. (119)

**4493.** ஒன்பதி னுயிர கோடி யூகந்தன்
முன்செலப் பின்செல ஞாங்கர் மொய்ப்புற
மன்பெருங் கிளைஞரு மருங்கு சுற்றுற
மின்பொரு பூணினன் செல்லும் வேலையில்.

ஒன்பதினுயிர கோடி ஊகம், தன்
முன் செல, பின் செல, ஞாங்கர் மொய்ப்புற,
மன் பெருங் கிளைஞரும் மருங்கு சுற்றுற,
மின் பொரு பூணினன் செல்லும் வேலையில்.

பொ :—ஒன்பதினாயிரகோடி என்னும் தொகையினவாகிய வானரங்கள் முன்னும் பின்னும் பக்கங்களிலும் நெருங்கிச் செல்லவும் அரசப் பெருஞ் சுற்றத்தினர்கள் தன்னருகே சூழ்ந்து வரவும் மின்னலையும் பொருது ஒளிமழுங்கச் செய்யும் (பேரொளி வாய்ந்த) அணிகலன்களை அணிந்தவனாகிய சுக்கிரீவன் (இராமனை நோக்கிச்) செல்லும் பொழுதில்,

கு :—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். ஊகம் - யூகம்; குரங்கு. ஞாங்கர் - பக்கம். மின்பொருபூண் - மின்னின் ஒளியையும் மேலடர்ந்து மழுங்கச் செய்யும் இயல்புடைய பேரொளிமிக்க அணிகலம். (120)

**4494.** கொடிவன மிடைந்தன குமிறு பேரியின்
இடிவன மிடைந்தன பணில மேங்கின
தடிவன மிடைந்தன தயங்கு பூணொளி
பொடிவன மெழுந்தன வானம் போர்த்தவே.

கொடி வனம் மிடைந்தன; குமிறு பேரியின்
இடி வனம் மிடைந்தன; பணிலம் ஏங்கின;
தடி வனம் மிடைந்தன, தயங்கு பூண் ஒளி;
பொடி வனம் எழுந்தன, வானம் போர்த்தவே.

பொ :—கொடிகளின் தொகுதிகள் செறிந்தன. முழங்குகின்ற பேரிகை வாத்தியங்களின் இடியை ஒத்த ஒலிகள் நெருங்கிப் பரவின. சங்க வாத்தியங்கள் முழங்கின. விளங்கும் அணிகலங்களின் ஒளித் திரள்கள் மின்னலின் தொகுதிகள் போன்று மிக்குத் தோன்றின. (இவற்றைத் தாங்கிய பரிசனங்கள் செல்லுதலால் நிலத்தினின்றும்) எழுந்தனவாகிய புழுதிப் படலங்கள் வானத்தை மறைத்தன.

கு :—காடு என்னும் பொருளினதாகிய 'வனம்' என்னும் சொல், இச்செய்யுளிற் சொற்பொருட் பின்வருநிலை என்னும் அணிநலம் அமையப் பலமுறை ஆளப் பெற்றிருத்தல் அறியத் தக்கதாகும். குமிறுதல் - முழங்குதல். பேரி - பேரிகை என்னும் வாத்தியம். தயங்கு பூணொளி தடிவனம் எழுந்தன என மாறிக் கூட்டுக. தடி - மின்னல். மிடைதல் - மிக்குச் செறிதல். போர்த்தல் - மூடுதல்; மறைத்தல். மின்பொரு பூணினன் செல்லும் வேலையில் கொடிவனம், முதலியன, மிடைந்தன, ஏங்கின, எழுந்தன போர்த்த என முடியும். (121)

4495. பொன்னினின் முத்தினிற் புனைமென் றூசினின்
மின்னின மணியினிற் பளிங்கின் வெள்ளியிற்
பின்னின விசும்பினும் பெரிய பெட்புறத்
துன்னின சிவிகைவெண் கவிகை சுற்றின.

பொன்னினின், முத்தினின், புனைமென் தூசினின்,
மின்னின மணியினின், பளிங்கின், வெள்ளியின்,
பின்னின; விசும்பினும் பெரிய; பெட்புறத்
துன்னின, சிவிகை; வெண் கவிகை சுற்றின.

பொ :—பொன்னாலும் முத்துக்களாலும் அழகுற அமைக்கப் பெற்ற மெல்லிய ஆடைகளாலும் ஒளிர்கின்ற நவ மணிகளாலும் படிகக் கற்களாலும் வெள்ளியாலும் பொருந்த அமைக்கப்பெற்றனவும் (தன்கண் அமர்வார்க்குப் பரந்து இடங்கொடுக்குந் தன்மையினால்) ஆகாயத்தினும் பெரியவாய் விரிந்தனவும் ஆகிய பல்லக்குகள் கண்டார் விரும்பும் தோற்றத்துடன் நெருங்கி வந்தன. (அவற்றின் இயல்புக்கு ஏற்ப அமைந்த) வெண்கொற்றக் குடைகளும் சூழ்ந்து விளங்கின.

கு :—பொன்னினின் முத்தினிற் புனைமென் தூசினின் மணியினிற் பளிங்கின் வெள்ளியிற் பின்னப் பெறுதலும், விசும்பினும் பெரியவாதலும், பெட்புற அமைதலும் ஆகிய இயல்புகளைச் சிவிகைக்கும் கவிகைக்கும் ஒப்பக் கொள்க. சிவிகை - பல்லக்கு. கவிகை - குடை. (122)

4496. வீரனுக் கிளையவன் விளங்கு சேவடி
பாரினிற் சேறலிற் பரிதி மைந்தனும்
தாரினிற் பொலங்கழ றழங்கத் தாரணித்
தேரினிற் சென்றனன் சிவிகை பின்செல.

வீரனுக்கு இளையவன் விளங்கு சேவடி
பாரினில் சேறலின், பரிதி மைந்தனும்,
தாரினின் பொலங்கழல் தழங்கத் தாரணித்
தேரினில் சென்றனன் சிவிகை பின்செல.

பொ :—இராமபிரானுக்குத் தம்பியாகிய இலக்குவனுடைய ஒளி விளங்கும் சிவந்த திருவடிகள் நிலத்தின்மீது நடந்து செல்லுதலால் சூரியகுமாரனாகிய சுக்கிரீவனும் (தான் அமர்ந்து செல்லுதற்குரிய சிவிகையில் ஏருது) சிவிகை தன்னைத் தொடர்ந்து பின்னே வர, (தன் காலில் அணியப்பெற்ற) பொன்னாலியன்ற வீரக்கழல்கள் (தான் அணிந்த) கிண்கிணி மாலையினைப் போன்று ஒலிக்க நிலமாகிய தேரிற் சென்ருன்.

கு :—வீரன் என்றது இராமனை. இளையவன் என்றது அவனுக்குத் தம்பியாகிய இலக்குவனை. இலக்குவன் கால்கள் வருந்தத் தரையில் நடந்து செல்லுதலால் அவனின்றித் தான்மட்டும் சிவிகையிற் செல்லுதல் முறையன்றென எண்ணிய சுக்கிரீவன், தான் அமர்ந்து செல்லுதற்குரிய சிவிகை வெறிதே தன்பின் வரத் தானும் அவனுடன் தரையில் நடந்து சென்ருன் என்பதாம். பரிதி - சூரியன். தார் - கிண்கிணி மாலை. தழங்குதல் - ஒலித்தல். தேவரது வேண்டுகோட்கிரங்கிச் சிவபெருமான் முப்புரங்களையும் அழிக்க எழுந்தருளிய போது அவருக்கு இப்பூமி தேராய் அமைந்தது எனப் புராணங் கூறுதலின் 'தாரணித் தேர்' என இப்பூமியைத் தேராக உருவகஞ் செய்தார் ஆசிரியர். பூமியைக் குறித்த 'வையம்' என்ற சொல்லுக்குத் 'தேர்' என்ற மற்ருெரு பொருளும் அமைந்திருந்தல் இங்குக் கூர்ந்துணரத்தக்கதாகும். சுக்கிரீவன், நாடாளும் வேந்தனாகத் திகழும் சிறப்புக்கேற்பத் தேரிற் செல்லுதலே மரபு என்றெண்ணிய ஆசிரியர், அவன் நிலத்திற் கால்கள் நோவ நடந்து சென்ருன் என்ற செய்தியைத் 'தாரணித் தேரினிற் சென்றனன்' என நயம்படக் கூறியதிறம் உணர்ந்து மகிழத் தக்கதாகும். (123)

4497. எய்தினன் மானவ னிருந்த மால்வரை
நொய்தினிற் சேனைபின் பொழிய நோன்கழல்

ஐயவிற் குமரனுந் தானு மங்கதன்
கைதுறந் தயல்செலக் காதன் முன்செல.

எய்தினன், மானவன் இருந்த மால்வரை,
நொய்தினின்—சேனை பின்பு ஒழிய, நோன்கழல்
ஐய வில் குமரனும், தானும், அங்கதன்
கை துறந்து அயல் செல, காதல் முன் செல.

பொ :—(சுக்கிரீவன்) முன்சென்ற சேனை (தனக்குப்) பின்னே நிற்கவும், (உடன்வந்த) அங்கதன் அருகிலிருந்து நீங்கிச் சிறிது தூரம் விலகிச் செல்லவும், (இராமனிடத்துத் தான் வைத்த) பேரன்பு (தனக்கு) முன்னே செல்லவும், வலிய வீரக்கழலையும் வியக்கத்தக்க விற்படையையும் உடைய இளையோனாகிய இலக்குவனும் தானும் ஆக மனுகுலத் தோன்றலாகிய இராமபிரான் தங்கியிருக்கும் பெரியமலையினை விரைந்து அடைந்தான்.

கு :—சேனை பின்பு ஒழிய, அங்கதன் அயல்செல, காதல் முன் செல, குமரனும்தானும் மானவன் இருந்த மால்வரை நொய்தினின் எய்தினன் என முடிக்க. மானவன் - மனுகுலத் தோன்றல்; இராமன். நொய்தினின் - விரைவாக. நோன்கழல் - வலிய வீரக் கழல். ஐய - வியக்கத்தக்க; அழகிய. கை - பக்கம். அயல் - தூரம். தன்னின் மேம்பட்டு விளங்கும் பெரியோரைக் காணச் செல்லும் பொழுது தன் பெருமை தோன்ற வியந்து செல்லாமல் அடக்கத் துடன் செல்லுதல் முறையாதலின், சுக்கிரீவன் தன் பரிசனங்களை யெல்லாம் பின்னே நிறுத்திவிட்டு அங்கதன் தன்னை அணுகிவராது அயலே விலகிச் செல்ல இலக்குவனையுடன் கொண்டு தான்மட்டும் இராமனைக் காணச் சென்றனன் என்க. இராமனைக் காணச்செல்லு தலாகியவினை சுக்கிரீவனுக்கே சிறப்புரிமையுடையதாக, இலக்கு வன் வினையாகிய வருதலும் அவன் வருகையில் அடங்கி நிற்றல் பற்றிக் 'குமரனும் தானும் எய்தினர்' என இருவர் வினையும் அமையப் பன்மையாற் கூறாது 'குமரனுந் தானும் எய்தினன்' என ஒருமையாற் கூறினர். (124)

## சுக்கிரீவன், இராமனிடத்துக்கொண்ட பேரன்பினால் பரதனை யொத்துத் தோன்றுதல்

**4498.** கண்ணிய கணிப்பருஞ் செல்வக் காதல்விட்
டண்ணலை யடிதொழ வணையு மன்பினால்
நண்ணிய கவிக்குலத் தரச னுடொறும்
புண்ணியற் றொழுகழற் பரதன் போன்றனன்

கண்ணிய கணிப்பு அரும் செல்வக் காதல் விட்டு,
அண்ணலை அடிதொழ அணையும் அன்பினால்,
நண்ணிய கவிக்குலத்து அரசன், நாள்தொறும்
புண்ணியன்-தொழு கழல் பரதன் போன்றனன்.

பொ :—(உலக மக்கள் பலராலும் உயர்ந்ததென) மதிக்கப்படும் அளவிடுதற்கரிய (அரசபதவியாகிய) செல்வத்தின்கண்ணே செல்லும் ஆசையைத் துறந்து பெரியோனாகிய இராமனைத் திருவடி தொழுது போற்றுதற்கு வந்துசேரும் பேரன்பினால் அங்கே வந்தடைந்த வானரகுல மன்னனாகிய சுக்கிரீவன், நாள்தோறும் அறத்தின் மூர்த்தியாகிய இராமனைத் (திருவடி) தொழுது போற்றும் நியமமுடைய வீரக்கழலணிந்த பரதனை ஒத்து விளங்கினான்.

கு :—கண்ணிய கணிப்பருஞ் செல்வக் காதல்விட்டு அண்ணலை அடிதொழ அணையும் அன்பினால், கவிக்குலத்தரசன், பரதன்போன் றனன் என இயையும். கண்ணுதல் - கருதுதல்; சிறப்புடையதாக மதித்தல். கணிப்பு அரும் - அளவிடுதற்கு அரிய. செல்வக் காதல் - செல்வத்தின் கண்ணேயுள்ள ஆசை. தனக்குக்கிடைத்த அரச செல்வத்திலுள்ள ஆசையைத் துறந்து இராமன் திருவடிகளை வணங்க அடைந்த சுக்கிரீவனுக்கு, தாயுரைகொண்டு தாதையுதவிய அரச பதவியினைத் தீவினையென்ன நீத்துப் பேரன்பினால் தன் தமையனாகிய இராமனையடைந்து வணங்கி அவன் இட்ட பணியினை மேற்கொண்டு செய்து நாள்தோறும் இராமன் திருவடிகளைத் தொழும் இயல்பினனாகிய பரதனை உவமை கூறினார். இஃது ஏது வுவமை. சுக்கிரீவன் இராமன்பாற் கொண்ட பேரன்பு பரதனது பேரன்பினைப் போன்றது என்பதாம். (125)

### சுக்கிரீவன், இராமன் திருவடிகளை இறைஞ்சுதல்

4499. பிறிவருந் தம்பியும் பிரியப் பேருல
கிறுதியிற் றானென விருந்த வேந்தலை
அறைமணித் தாரினோ டாரம் பார்தொடச்
செறிமலர்ச் சேவடி முடியிற் றீண்டினான்.

பிறிவு அருந் தம்பியும் பிரிய, பேர் உலகு
இறுதியில் தான் என இருந்த ஏந்தலை,
அறைமணித் தாரினோடு ஆரம் பார் தொட,
செறிமலர்ச் சேவடி முடியின் தீண்டினான்.

பொ :—என்றும் பிரிதலில்லாது உடனுறையும் இயல்புடைய தம்பியாகிய இலக்குவனும் (தனது ஏவல் மேற்கொண்டு) பிரிந்து சென்றமையால், மிகப் பெரிய உலகம் முழுவதும் அழிந்தொழியும் ஊழிக் காலத்திலே (அழிவின்றி எஞ்சி நிற்கும்) இறைவனாகிய தன்னைப் போன்று தனித்திருந்த தலைவனாகிய இராமனை(ச் சுக்கிரீவன், தன் மார்பில் அணிந்த) ஒலிக்கின்ற மணிமாலைகளுடன் முத்துமாலைகளும் நிலத்திற் பொருந்த (வீழ்ந்திறைஞ்சிச்) செறிந்த இதழ்களையுடைய செந்தாமரை மலர் போலும் திருவடிகளைத் தன் சென்னியினால் தீண்டி வணங்கினான்.

கு :—இராமபிரானை அவனது நிழல் போன்று என்றும் பிரியாது உறைபவன் இலக்குவன் ஆதலின் அவனைப் 'பிறிவருந்தம்பி' எனச் சிறப்பித்தார் ஆசிரியர். 'தம்பியும்' என்புழி உம்மை சிறப்புணர்த்தி நின்றது. பிரிய - பிரிதலால்; செயவென்னெச்சம் காரணப் பொருட்டு. 'ஐயநீ ஆழிவேந்தன் அடியிணை பிரிகலாதாய்' (கிட்கிந் தைப் படலம் - 50) என இலக்குவனை நோக்கித் தாரை கூறுவதாக அமைந்த பகுதி இங்கு நோக்கத்தக்கதாகும். எக்காலத்திலும் தன்னை விட்டுப் பிரியாதுடனுறையும் பேரன்பினனாகிய இலக்கு வனையும் பிரிந்து இராமன் தனித்துறைந்த இந்நிலைக்கு, உலகமெல் லாம் அழிந்த பேரூழிக் காலத்தில் திருமாலாகிய அவ்விறைவன் தான் மட்டும் தனித்துறைதலாகிய முன்னைய நிலையை உவமையாகக் கூறினார் ஆசிரியர். உலகமெல்லாம் அழியும் பேரூழிக் காலத்திலும் தானே தனித்துறையும் திருமாலாகிய முதல்வன், இராமாவதார மாகிய இந்நிலையில் தன்னை ஒரு போதும் பிரியா இயல்பினனாகிய தன் தம்பி பிரிதலால் இங்கேயும் தானே தனித்துறைந்தான் என அம்முதல்வனது அருமையும் எளிமையும் ஆகிய அருளின் இயல்பினை இனிது புலப்படுத்தியவாறு. (126)

## இராமபிரான், சுக்கிரீவனை அன்பினால் தழுவித் தன்னருகில் அமர்த்தி நலம் வினவுதல் 4500, 4501

**4500.** தீண்டலு மார்பிடைத் திருவு நோவுற
நீண்டபொற் றடக்கையா னெடிது புல்லினான்
மூண்டெழு வெகுளிபோ யொளிப்ப முன்புபோல்
ஈண்டிய கருணைதந் திருக்கை யேவியே.

தீண்டலும், மார்பிடைத் திருவும் நோவுற,
நீண்ட பொன் தடக்கையால் நெடிது புல்லினான்;
மூண்டு எழு வெகுளி போய் ஒளிப்ப, முன்புபோல்
ஈண்டிய கருணை தந்து இருக்கை ஏவியே;

பொ :—(இவ்வாறு சுக்கிரீவன் தன் முடியினால் இராமன் திருவடிகளைப்) பொருந்தி வணங்கிய அளவில் (இராமபிரான்) தன் திருமார்பில் அகலாதுறையும் திருமகளும் (மேனி) வருந்தும்படி நீண்டு தாழ்ந்த தன் அழகிய பெரிய கைகளினால் (சுக்கிரீவனை) ஆரத் தழுவிக் கொண்டான். (சொன்ன சொற்படி குறித்த காலத்தில் சுக்கிரீவன் வந்து சேராமையால் தன் மனத்தே) மூண்டெழுந்த சினமானது (அவன் வந்து தன்னை வணங்கியவுடனே) இருந்த இடந் தெரியாமல் நீங்கி மறைய, முன்போலவே அவனுக்குத் தனது நிறைந்த பேரருளை நல்கி அவனை ஆசனத்தில் அமரும்படி பணித்து.

கு :—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். இருக்கை ஏவி, அயல் இனிது இருத்தி, வினயினான் என முடியும். உயர்வற வுயர்ந்த திருமாலாகிய நிலையில் மட்டுமன்றி அம்முதல்வன் உலகம் உய்தற் பொருட்டு மேற்கொள்ளும் இராமன், கண்ணன் முதலிய அவதார நிலையின் கண்ணும் அவ்விறைவனது திருமார்பினை அகலாதுறைதல் எவ்வுயிர்க்குந் தாயாகிய திருமகளது இயல்பென்பார் 'மார்பிடைத் திரு' என்றார். 'அகலகில்லேன் இறையுமென் றலர் மேல் மங்கையுறைமார்பா' (திவ்ய - 3335.) என வரும் அருளிச் செயல் ஈண்டு உணரத் தக்கதாகும். தாளளவும் தாழ்ந்த நீண்ட பெரிய கைகள் என்பார் 'நீண்ட பொற்றடக்கை' என்றார். நெடிது புல்லுதல் - இறுகத் தழுவுதல். சுக்கிரீவன் குறித்த காலத்தில் வாராமையால் இராமனுள்ளத்தே மூண்டெழுந்த கோபமானது, அச்சுக்கிரீவன் தன் குற்றமுணர்ந்து விரைந்து வந்து இராமனை வணங்கியபோது இருந்த இடந் தெரியாது அகன்று மறைய, அந்நிலையில் இராமனது திருவுள்ளத்தே சுக்கிரீவன்பால் முன்பு போற் பேரருள் சுரந்து வெளிப்பட்டது என்பார், 'மூண்டெழு வெகுளி போய் ஒளிப்ப, முன்புபோல் ஈண்டிய கருணை தந்து' என்றார். 'வந்தடி பொருந்தி முந்தை நிற்பிற் றண்டமுந் தணிதிநீ பண்டையிற் பெரிதே' (புறநானூறு - 10) என்பது இங்கு ஒப்புநோக்குதற் குரியதாகும். (127)

**4501.** அயலினி திருத்திநின் னரசு மாணையும்
இயல்பினி னியைந்தவே யினிதின் வைகுமே
புயல்பொரு தடக்கைநீ புரக்கும் பல்லுயிர்
வெயிலில தேகுடை யெனவி னயினான்.

அயல் இனிது இருத்தி, 'நின் அரசும் ஆணையும் இயல்பினின் இயைந்தவே? இனிதின் வைகுமே,

புயல் பொரு தடக்கைநீ புரக்கும் பல் உயிர் ?
வெயில் இலதே குடை ?' என வினுயினுன்.

பொ :—(இராமபிரான், சுக்கிரீவனைத்) தன் பக்கத்தில் இனிதே இருக்கும்படி அமர்த்திக்கொண்டு, 'நினது அரசாங்கமும் நினது அரசியல் ஆணையாகிய கட்டளையும் (முரணின்றி) இயல்பாகப் பொருந்தி நிகழ்கின்றனவா ? மேகம் போன்று (கைம்மாறு கருதாது) வழங்கும் வண்மை வாய்ந்த பெரிய கையினையுடைய மன்னனுகிய நீ பாதுகாக்கும் பல்லுயிர்களும் (நினது ஆட்சியின்கீழ் இடையூறின்றி) இனிதின் வாழ்கின்றனவா ? நின் குடையானது வெயிலைத் தாராததாய் (இனிய நிழலைத் தருவதாக) அமைந்துளதா ? என(ச் சுக்கிரீவன்பால் அவனது நாட்டு நலங் குறித்து) வினவினுன்.

கு :—முன்னுள்ள செய்யுளிற் குறித்தவாறு சுக்கிரீவனை ஆசனத்தில் அமரும்படி பணித்த இராமன், சுக்கிரீவன் தன்பால் அன்பும் பணிவுமுடையனுய்த் தன் முன்னிலையில் ஆசனத்தமர்தல் முறையன்றென எண்ணி நிற்றலைக் கண்டு அவனை அன்பினுல் வற்புறுத்தித் தன்னருகே அமர்த்திக் கொண்டான் என்பார், 'அயல் இனிது இருத்தி' எனக் குறிப்பால் உணர்த்தினுர். அரசு என்றது, அரசர்க்கு அங்கமாகிய அமைச்சு, படை, குடி முதலிய அங்கங்களை. ஆணை - அரசனது கட்டளை. வாலியைக் கொன்று நீ கிட்கிந்தைக்கு அரசனுகிய இந்நிலையில் அவன் ஆட்சியிற் பணிபுரிந்த அமைச்சர் முதலிய அரசியலதிகாரிகளும் குடிமக்களும் நினது ஆணையின் வழி அமைந்து பணிபுரிகின்ருர்களா என வினவுவான், 'நின் அரசும் ஆணையும் இயல்பினின் இயைந்தவே' என்ருன். மன்னனுகிய நீ, நின்னையடைந்து வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தலாகிய வண்மையும், யாவர்க்கும் தலையளி செய்தலாகிய அருளும், யார்கண்ணும் விருப்பு வெறுப்பின்றி முறை செய்தலாகிய நீதியும், தளர்ந்த குடிகளைப் பேணுதலாகிய இனிய செயலும் உடையையாய் நின் குடிகளை இனிது பாதுகாத்தலால் நின் குடிகள் எல்லாம் இனிது வாழ்கின்ருர்களா என வினவுவான், 'புயல்பொரு தடக்கைநீ புரக்கும் பல்லுயிர் இனிதின் வைகுமே' என்ருன். நின் தண்ணளிக்கு அடையாளமாகிய வெண்கொற்றக்குடையானது நின் குடிகளைத் துன்பமாகிய வெயிலின் வெப்பந் தாக்காதவாறு இனிய நிழலைச் செய்கின்றதா என வினவுவான், 'குடை, வெயில் இலதே' என்ருன். உயிர்களுக்கு வெம்மை விளைத்தல் பற்றிக் கொடுந்துன்பத்தினை வெயில் எனக் குறித்தார். (128)

## சுக்கிரீவன் விடை பகர்தல்

**4502.** பொருளுடை யவ்வுரை கேட்ட போழ்துவான்
உருளுடைத் தேரினன் புதல்வ னூழியாய்
இருளுடை யுலகினுக் கிரவி யன்னநின்
அருளுடை யேற்கவை யரியவோ வென்முன்.

பொருளுடை அவ் உரை கேட்ட போழ்து, வான்
உருளுடைத் தேரினன் புதல்வன், 'ஊழியாய் !
இருளுடை உலகினுக்கு இரவி அன்ன நின்
அருளுடையேற்கு அவை அரியவோ ?' என்றான்.

பொ :—(இராமபிரான் கூறிய) பொருள் செறிந்த அம்மொழிகளைக் கேட்டபோது ஆகாயத்திற் செல்லும் ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரினையுடைய சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன், (இராமபிரானை நோக்கி,) ஊழிக் காலத்தும் அழிவின்றி விளங்கும் முதல்வனே ! (புறத்தே) இருளையுடைய இவ்வுலகத்திற்கு (அவ் இருளை நீக்கி ஒளி வழங்கும்) ஞாயிற்றை யொத்து நலஞ் செய்யும் (பெரியோனாகிய) நினது அருளை நிரம்பப் பெற்ற அடியேனுக்கு (முற்குறித்த) அச்செயல்கள் யாவும் (செய்து முடித்தற்கு) அருமையுடையனவாகுமோ' என(த் தன் அன்பும் நன்றியுணர்வும் தோன்ற) மறுமொழி பகர்ந்தான்.

கு :—இராமன் வினவிய அம்மொழிகள் யாவும் அரசியல் நெறிமுறையாகிய நற்பொருள்களை அறிவுறுத்தும் முறையில், பொருள் செறிந்தனவாக அமைந்தன என்பார், 'பொருளுடையவ்வுரை' என்றார். உலகத்தே படர்ந்த புறவிருளை நீக்கி ஒளிவழங்கத் தோன்றிய கதிரவனைப் போன்று உலகவுயிர்களாகிய எமது உள்ளத்தே படர்ந்த அகவிருளாகிய அறியாமையினையும் அதனால் வினையும் துன்பங்களையும் அறவே துடைத்து ஒளி வளர்க்கும் ஞானத்தினாலும் வீரத்தினாலும் நலம் விளைக்கத் தோன்றிய நின்னைச் சார்பாக அடையப் பெற்ற அடியேற்கு அரியனவெல்லாம் எளியனவாய் இனிது நிறைவேறின என்பான், 'இருளுடை யுலகினுக்கு இரவி யன்ன நின், அருளுடையேற்கு அவை அரியவோ' என்றான் சுக்கிரீவன். இரவி - சூரியன்.

(129)

## சுக்கிரீவன் தன் பிழையினை யெடுத்துரைத்து இரங்குதல் 4503-4505

**4503.** பின்னரும் விளம்புவான் பெருமை யோய்நின
தின்னரு ளுதவிய செல்வ மெய்தினேன்

மன்னவ நின்பணி மறுத்து வைகியென்
புன்னிலைக் குரக்கியல் புதுக்கினே னென்றான்.

பின்னரும் விளம்புவான், 'பெருமையோய்! நினது
இன் அருள் உதவிய செல்வம் எய்தினேன்;
மன்னவ நின்பணி மறுத்து வைகி, என்
புன்னிலைக் குரக்கு இயல் புதுக்கினேன்' என்றான்.

பொ :— (சுக்கிரீவன், இராமனை நோக்கி) மீண்டும் சில கூறுபவன், 'பெருமைக்குணமுடையோனே! நினது இனிய அருளால் அளிக்கப்பெற்ற அரச பதவியாகிய பெருஞ் செல்வத்தைப் பெற்ற யான், வேந்தர் வேந்தனாகிய நினது கட்டளையினை நிறைவேற்றாது சோம்பியிருந்து, (நினது நட்பின் திறத்தால் முன்னமே என்னைவிட்டு நீங்கி மறையும் நிலையினையடைந்த) என் அற்பத்தன்மையாகிய குரங்குக் குணத்தினை (என்பால்) மீண்டும் நிலைபெறச் செய்துவிட்டேன்' எனக் கூறினான்.

கு :—'எனது சாதற்றுன்பத்தினை நீக்கி நல்வாழ்வளித்த பேரருளாளராகிய நும் திறத்து, நான் மறவாது மேற் கொள்ளுதற்குரிய செய்ந் நன்றிக் கடனை மறந்தமையால், நுமது நட்பின் தொடர்பால் முன்னமே என்னை விட்டு நீங்கும் நிலையில் வலியழிந்தடங்கிய குரங்குக் குணத்தினை மீளவும் என்னிடமே நிலைபெறச் செய்துவிட்டேன்' எனச் சுக்கிரீவன் தன் பிழை நினைந்து இரங்கினான் என்பதாம். புதுக்குதல் - சிதைந்து மறையும் நிலையில் இருந்ததனைச் சிதைவு நீக்கி மீளவும் நிலைபெறச் செய்தல். (130)

**4504.** பெருந்திசையனைத்தையும் பிசைந்து நேடினேன்
தருந்தகை யமைந்துமத் தன்மை செய்திலேன்
திருந்திழை திறத்தினாற் றெளிந்த சிந்தைநீ
வருந்தினை யிருக்கயான் வாழ்வின் வைகினேன்.

பெருந்திசை அனைத்தையும் பிசைந்து நேடினேன்
தரும் தகை அமைந்தும், அத்தன்மை செய்திலேன்
திருந்திழை திறத்தினால், தெளிந்த சிந்தை நீ,
வருந்தினை இருக்க, யான் வாழ்வின் வைகினேன்.

பொ :—(சுக்கிரீவன், இராமபிரானை நோக்கி மீண்டும் கூறுபவன்) பெரிதும் சேய்மையுடையனவாகிய திசையிடங்கள் எல்லாவற்றையும் (அடைந்து அங்குள்ள கொடியோர்களைக்)கைகளால்

இறுகப்பற்றி வருத்தி(ச் சீதையிருக்கும் இடத்தை) ஆராய்ந்து கண்டு மீட்டுக் கொணரும் திறமையினைப் பெற்றிருந்தும் அவ்வாறு செய்தேன் அல்லேன்; ஞானத்தால் (இயல்பாகவே) தெளிந்த சிந்தையினையுடைய பெரியோனாகிய நீ, திருத்தமுற அமைந்த அணிகலன்களையுடையவளாகிய நின் தேவியைப் பிரிந்தமை காரணமாக வருத்தமுடையையாய் (மனங்கலங்கி) இருக்கவும் (நினது பேருதவியால் துன்பம் நீங்கி உய்ந்த அடியவனாகிய) யான் (நினது வருத்தத்தைப் போக்கும் பணியிற் சிறிதும் ஈடுபடாமல் எனது கடமையை மறந்து) அரச போகமாகிய வாழ்வில் திளைத்திருந்தேன்.

கு:—முற்செய்யுளில் வந்த 'பின்னரும் விளம்புவான்' என்ற தொடர் இச்செய்யுளிலும் வருவித்துரைக்கப்பட்டது. பெருந்திசை - தூரத்தால் நீண்டுள்ள திசையிடங்கள். பிசைந்து நேடுதல்-குறித்த இடங்களில் வாழும் கொடியோர்களைக் கைகளால் இறுகப் பற்றி வருத்தித் தண்டிக்குமாற்றால் சீதையிருக்குமிடத்தை அவர்கள் வழியாகத் தேடிக் காணுதல். (131)

**4505.** இனையன யானுடை யியல்பு மெண்ணமும்
நினைவுமென் றாலினி நின்றி யான்செயும்
வினையுநல் லாண்மையும் விளம்ப வேண்டுமோ
வனைகழல் வரிசிலை வள்ளியோ யென்றான்.

'இனையன, யானுடை இயல்பும், எண்ணமும்,
நினைவும் என்றால், இனி, நின்று யான் செயும்
வினையும், நல் ஆண்மையும், விளம்ப வேண்டுமோ?
வனைகழல், வரிசிலை, வள்ளியோய்!' என்றான்.

பொ:—அழகுறச் செய்து அணியப்பெற்ற வீரக் கழலையும் கட்டமைந்த விற்படையினையும் உடைய வண்மைக்குணம் வாய்ந்த பெரியோனே! (மேற் குறித்த) இவை போல்வனவே என்னுடைய இயற்கைக் குணமும் மனநிலையும் மனக்கருத்துமாக அமைந்தன என்றால், இனிமேல் (உறுதியில் வழுவாது) நிலைபெற நின்று யான் செய்து முடித்தற்குரிய காரியமாகிய தொழிலையும் (அதனை நிறைவேற்றுதற்கு வேண்டப்படும்) ஆண்மைத் திறத்தினையும் விரித்துக் கூறுதல் வேண்டுமோ? என (இராமபிரானை நோக்கித் தனது எளிமை நிலையினை எண்ணி) இரங்கிக் கூறினான் (சுக்கிரீவன்).

கு:—இச்செய்யுளில் 'நினைவு' என மனக் கருத்தினைப் பின்னர்க் குறித்தலால் முன்வந்த எண்ணம் என்பதற்கு மனநிலையெனப்

பொருளுரைக்கப்பட்டது. தான் பெற்றுள்ள அரச பதவியாகிய பெருஞ் செல்வமும் பிரிந்த தன் மனைவியைப் பெற்று மகிழும் போகமும் வீரக்கழலையணிந்த இராமனது விற்றொழிலால் தான் பெற்ற பெருவளமாதலின், 'வனைகழல் வரிசிலை வள்ளியோய்' என இராமனை விளித்துப் போற்றினான் சுக்கிரீவன். (132)

## இராமபிரான், சுக்கிரீவனது குணங்கொண்டு குற்றம் நீக்கிப் பாராட்டுதல்

**4506.** திருவுறை மார்பனுந் தீர்ந்த தேயும்வந்
தொருவருங் காலமுன் னுரிமை யோருரை
தருவினைத் தாகையிற் றாழ்விற் றாகுமோ
பரதனீ யினையன பகர்தியோ வென்றான்.

திருஉறை மார்பனும், தீர்ந்ததேயும் வந்து
ஒருவ அருங் காலம், உன் உரிமையோர் உரை,
தரு வினைத்து ஆகையின், தாழ்விற்று ஆகுமோ?
பரதன் நீ! இனையன பகர்தியோ?' என்றான்.

பொ:—திருமகள் அகலாதுறையும் திருமார்பினையுடைய இராமனும் (தன் பிழை நினைந்திரங்கிய சுக்கிரீவனை நோக்கி) யாவராலும் கடத்தற்கு ஒண்ணாத காலமாகிய எல்லை (நீ குறித்தவண்ணம் என்பால் வந்து சேராமையாற்) கழிந்ததாயினும், நினக்கு உரிமையுடைய பணியாளராகிய தூதர்கள் (நாற்றிசைகளிலும் சென்று) நின் ஆணைமொழியினை எடுத்துக் கூறி நின் சேனைகளை ஒருங்கு திரட்டித் தருதலாகிய வினைநிகழ்ச்சியைத் தன்பாற்கொண்டு நிகழ்ந்ததாதலால் (எனக்கு நலம் பயக்கும் உதவித் தொழில் உரிய காலத்தில் தொடங்கப் பெறுதலின்றிக்) காலந் தாழ்த்ததாகக் கருதப்படுவதோ? (யான் இட்ட பணியினை வழுவாது நிறைவேற்றுந் திறத்திற் பேரன்பிற் சிறந்த) பரதனாகத் திகழும் நீ (நின் பெருமையினை எண்ணாது) இவ்வாறு நின்னையே இகழ்ந்து கொள்கின்றாயோ? என (த் தன் அன்புடைமை தோன்றச் சுக்கிரீவனுக்குத் தேறுதல்) கூறினான்.

கு:—'ஒருவ அரும் காலம், வந்து தீர்ந்ததேயும், உன் உரிமையோர் உரை, தருவினைத்து ஆகையின், தாழ்விற்று ஆகுமோ?' என இயைத்துப் பொருள் கொள்க. ஒருவ அருங்காலம்-எத்தகைய ஆற்றலுடையோராலும் கருதிய வினைகளைச் செய்து கடக்க ஒண்ணாத நிலையில் அமைந்த-காலம். 'மழைக்காலம் கழிந்த பின்னர் என்பால் வருக என யான் குறித்த கால எல்லையில் நீ என்பால்

வாராது போயினும், எனக்கு உதவி செய்தலாகிய நின் கடமையினை மறவாது நின் உரிமைப் பணியாளராகிய தூதர்களை எல்லாத் திசைகளிலும் உள்ள நின் சேனைகளை ஒருங்கே அழைத்து வருமாறு அனுப்பிச் செய்தற்குரிய வினையினை உரிய காலத்திற் செய்து முடித்தாயாதலால், குற்றமற்ற நிலையிற் பரதனுகவே விளங்கும் நீ நின்னை இவ்வாறு இகழ்ந்து நொந்து கொள்ளுதல் கூடாது' என இராமன், தன் பிழைக்கு இரங்கி வருந்தும் சுக்கிரீவனை அன்பினுல் தேற்றினுன் என்பதாம். தீர்ந்ததேயும் - தீர்ந்ததாயினும். 'ஈன்ருள் முகத்தேயும்' (திருக்குறள் - 923) எனவரும் தொடர்க்குத் 'தாய் முன்பாயினும்' எனப் பரிமேலழகர் கூறிய உரையும், 'போயிருந்தேயும் போற்றுவார்' (திருவிசைப்பா-53) எனவரும் தொடரும் 'ஏயும்' என்னும் இச்சொல்லாட்சியை இனிது புலப்படுத்தல் காணலாம். (133)

இராமன் சுக்கிரீவனை நோக்கி 'அநுமன் எங்குள்ளான்' என வினவ, 'அவன், நாளை சேனையோடு வருவான்' எனச் சுக்கிரீவன் விடை கூறுதல் 4507-4508

**4507.** ஆரியன் பின்னரு மைய நன்குணர்
மாருதி யெவ்வழி மருவி ஞனெனச்
சூரியன் கான்முளை தோன்று மாலவன்
நீரிரும் பரவையி னெடிய சேனையான்.

ஆரியன், பின்னரும் 'ஐய! நன்கு உணர்
மாருதி எவ்வழி மருவினுன்?' என,
சூரியன் கான்முளை, 'தோன்றுமால், அவன்
நீர் இரும் பரவையின் நெடிய சேனையான்.'

பொ :—மேலோனுகிய இராமன், மறுபடியும் (சுக்கிரீவனை நோக்கி) 'ஐயனே! (செய்யத்தகும்) நல்லனவற்றை ஆராய்ந்துணர வல்ல வாயு குமாரனுகிய அநுமன் (இப்பொழுது) எவ்விடத்தில் தங்கியுள்ளான்?' என்று வினவ, (அது கேட்ட) சூரிய குமாரனுகிய சுக்கிரீவனும், 'அநுமனுகிய அவன், நீர் நிறைந்த கரிய பெரிய கடலைப் போலும் பெரிய சேனையையுடையனுய் (இங்கே வந்து) தோன்றுவான்.

கு :—இது முதல் மூன்று செய்யுட்கள் ஒரு தொடராய் அமைந்தன. இப்பாட்டில் வந்த 'சூரியன் கான்முளை' என்னும் எழுவாய் இதன்பின் 136-ம் செய்யுளில் வந்த 'என்ருன்' என்னும் வினையைக்

கொண்டு முடிந்தது. 'அவன், நீர் இரும் பரவையின் நெடிய சேனையான், தோன்றும்' என இயையும். ஆல் - அசை. இரும் - கரிய, பெரிய. பரவை - கடல். பரவையின் என்புழி இன், உவம உருபு. கிட்கிந்தைக்கு மன்னனாகிய நினக்குச் சூழ்ச்சித் துணைவனாய் எதிரதாக்காக்கும் நல்லுணர்வு படைத்த அறிஞனாகிய அநுமன் நின் செயலுக்குத் துணை செய்திலனோ என்னும் குறிப்புத் தோன்றவும், தன்பாற் பேரன்புடைய அநுமனைக் காணுதலில் தனக்குள்ள பேரார்வம் புலப்படவும், 'நன்குணர் மாருதி எவ்வழிமருவினன்?' என இராமன் சுக்கிரீவனை வினவினன் என்க. (134)

**4508.** கோடியோ ராயிரங் குறித்த தூதுவர்
ஓடினர் நெடும்படை கொணர்த லுற்றதால்
நாடரக் குறித்தது மின்று நாளையவ்
வாடலந் தானையோ டவனு மெய்துமால்.

'கோடி ஓர் ஆயிரம் குறித்த தூதுவர்,
ஓடினர்; நெடும்படை கொணர்தல் உற்றதால்:
நாள்தரக் குறித்ததும் இன்று, நாளை; அவ்
ஆடல் அம் தானையோடு அவனும் எய்துமால்.

பொ:—ஓராயிர கோடி எனக்குறித்த அளவினராகிய தூதர்கள் (நாற்றிசைகளிலும்) விரைந்து சென்றூர்கள். (அவர்களது முயற்சியால்) மிகப் பெரிய சேனைகளைத் திரட்டிக் கொணர்தலாகிய செயல் நிறைவேறியது. (சேனைகளைக்) கொணரும்படி குறித்தகால எல்லையும் இன்றோ நாளையோ (என மிக அண்மையில் உள்ளதே) ஆகும். (அநுமனாகிய) அவனும் அத்தகைய வெற்றித் திறம் வாய்ந்த அழகிய வானர சேனைகளுடன் (விரைவில் இங்கு) வந்து சேர்வான்.

கு:—தரக் குறித்தது (ஆகிய) நாளும், இன்று நாளை; அவனும் அவ் ஆடல் அம் தானையோடு எய்தும் என இயையும். அவன் என்றது அநுமனை. ஆடல் - வெற்றி. அம் - அழகு. தானை — சேனை. (135)

சேனைகள் யாவும் வந்தபின்னர்ச் செய்யத்தக்கது இது என ஆணையிடலாம் எனச் சுக்கிரீவன் கூறுதல்

**4509.** ஒன்பதி னாயிர கோடி யுற்றது
நின்பெருஞ் சேனையந் நெடிய சேனைக்கு

நன்குறு மவதிநா ளூளே நண்ணிய
பின்செயத் தக்கது பேசற் பாற்றென்ருன்.

'ஒன்பதிஞயிர கோடி உற்றது,
நின் பெருஞ் சேனே; அந் நெடிய சேனேக்கு
நன்கு உறும் அவதிநாள் நாளே; நண்ணிய
பின், செயத்தக்கது பேசற்பாற்று, என்ருன்.

பொ :—ஒன்பதிஞயிரகோடி என்னும் அளவினேயுடையது நினக்குரியதாகிய பெரிய சேனேயாகும். அப் பெரிய சேனேக்கு இனிதின் வந்து சேரும் தவணேயாகக் குறித்த நாள் நாளேயாகும். (அச்சேனே இங்கு) வந்து சேர்ந்த பின்னர் (அச் சேனேகள்) செய்யத்தக்க பணி இன்னதென்பது எடுத்துரைத்தற்குரியதாகும்.

கு :—ஒன்பதிஞயிர கோடி என்னும் அளவினதாகிய வானர சேனேயனேத்தும் நின் கருத்தின் வழி இயங்கும் நின்னுடைய சேனேயே என்பான், 'ஒன்பதிஞயிர கோடியுற்றது நின்பெருஞ் சேனே' என்ருன் சுக்கிரீவன். அவதி - கால எல்லே. (136)

'மீண்டு சென்று சேனேகள் வந்தபின் வருக' என
இராமன் சுக்கிரீவனேக் கிட்கிந்தைக்கு அனுப்புதல்

**4510.** விரும்பிய விராமனும் வீர நிற்கிதோர்
அரும்பொரு ளாகுமோ வமைதி நன்றெனுப்
பெரும்பக லிறந்தது பெயர்தி நின்படை
பொருந்துழி வாவெனத் தொழுது போயினுன்.

விரும்பிய இராமனும், 'வீர நிற்கு இது ஓர்
அரும் பொருள் ஆகுமோ? அமைதி நன்று' எனு,
'பெரும்பகல் இறந்தது; பெயர்தி; நின் படை
பொருந்துழி வா' என, தொழுது போயினுன்.

பொ :—(சுக்கிரீவனது அன்புரையினே) விருப்பமுடன் ஏற்றுக் கொண்ட இராமனும் (அவனே நோக்கி) 'வீரனே! (இங்ஙனம் நெடிய சேனேயை ஒருங்கு கொணர்தலாகிய) இச் செயல் நின்னுற் செய்தற்கரிய அரிய செயலாகுமோ? நினது அடக்கமாகிய இத் தன்மை மிகவும் நன்று என்று (உவந்து) கூறி, 'பகற்பொழுதில் நெடுநேரம் கழிந்துவிட்டது; (இனி நின் நகரத்திற்கு) மீண்டு செல்வாயாக. நின் சேனே அனேத்தும் வந்தபின்னர் (இங்கு)

வருவாயாக' என்று சொல்ல (க்கேட்ட சுக்கிரீவன், இராமனை)த் தொழுது சென்றான்.

கு :—பெரும்பகல் சென்றது - பகலிற் பெரும்பகுதி கழிந்து இரவுப்பொழுது தொடங்கும் எல்லை அணுகியது. (137)

## இராமன், அங்கதனுக்கு இன்மொழி கூறியனுப்பிவிட்டுத் தம்பியும் தானும் அவ்விடத்தில் தங்குதல்

**4511.** அங்கதற் கினியன வருளி யையபோய்த்
தங்குதி யுந்தையோ டென்று தாமரைச்
செங்கணன் தம்பியுந் தானுஞ் சிந்தையின்
மங்கையு மவ்வழி யன்று வைகினன்.

அங்கதற்கு இனியன அருளி, 'ஐய! போய்த்
தங்குதி உந்தையோடு' என்று, தாமரைச்
செங்கணன், தம்பியும், தானும், சிந்தையின்
மங்கையும், அவ்வழி, அன்று வைகினன்.

பொ :—செந்தாமரை மலர்போலும் சிவந்த கண்களையுடைய இராமன், (தன்னை அணுகி நின்ற) அங்கதனுக்கு இனிய மொழிகளைக் கூறி அருள் செய்து, 'ஐயனே! நீ சென்று நின் (சிறிய) தந்தையாகிய சுக்கிரீவனுடன் தங்குவாயாக' என்று சொல்லி (விடை கொடுத்து அனுப்பிவிட்டுத்) தம்பியாகிய இலக்குவனும் தானும் தன் சிந்தையிற் குடிகொண்டு தங்கிய சீதாபிராட்டியும் ஆக அவ்விடத்தில் அன்று தங்கியிருந்தான்.

கு :—இராமன், தன் ஆருயிர்த் தேவியாகிய சீதையைத் தன் மனத்தில் இடைவிடாது எண்ணிக்கொண்டிருந்தான் என்பார், 'தானும், சிந்தையின் மங்கையும் அவ்வழி அன்று வைகினன்' என்றார். தம்பியும் தானும் மங்கையும் வைகினர் எனற்பாலது வைகினன் எனவந்தது, தலைமை பற்றிய பால் வழுவமைதி. (138)

## இராமன் பணித்தவண்ணம், தான் கிட்கிந்தைக்குச் சென்றபோது அங்கு நிகழ்ந்தவற்றை இலக்குவன் எடுத்துரைத்தல்

**4512.** சேயுயர் கீர்த்தியான் கதிரின் செம்மல்பாற்
போயது மவ்வயிற் புகுந்த யாவையும்

ஓய்வுரு துணர்த்தென வுணர்த்தி ஞனரோ
வாய்மையா வுணர்வுறும் வலிய மொய்ம்பினன்.

சேய் உயர் கீர்த்தியான், 'கதிரின் செம்மல் பால்
போயதும், அவ்வயின் புகுந்த யாவையும்
ஓய்வுருது உணர்த்து' என, உணர்த்தினனரோ
வாய்மையா உணர்வுறும் வலிய மொய்ம்பினன்.

பொ :—(நில எல்லையைக் கடந்து) நெடிது உயர்ந்த பெரும் புகழாளனாகிய இராமபிரான், (இலக்குவனை நோக்கி) 'சூரியகுமாரனாகிய சுக்கிரீவனிடத்துச் சென்றதும், (அந்நிலையில்) அங்கு நிகழ்ந்த செய்திகள் எல்லாவற்றையும் (சிறிதும்) விடாது அறிவிப்பாயாக' என்று பணித்தருள, (எத்தகைய நிகழ்ச்சிகளிலும் புறத்தே காணப்படும் கற்பனைகளைக் கழித்து அவற்றின்) மெய்ம்மையினை உள்ளவாறு உணரவல்ல உணர்வு வலியும் உடல் வலியும் ஒருங்கேபெற்ற இலக்குவன் (தான் கிட்கிந்தைக்குச் சென்றபொழுது அங்கு நிகழ்ந்தவற்றை) உள்ளவாறு அறிவித்தான்.

கு :—சேய் உயர் கீர்த்தி - நில எல்லையைக் கடந்து வானுலகத்திலும் நெடிது உயர்ந்து செல்லும் இயல்பினதாகிய புகழ்; 'நிலவரை நீள்புகழ்' (திருக்குறள்-234) என்றார் தெய்வப் புலவரும். சேயுயர் கீர்த்தியான் என்றது இராமனை. இராமனது பெரும்புகழ் இந்நிலவுலகமெங்கும் பரவிய அளவில் அடங்கி நில்லாது, வானுலகம் முதலிய பிறவுலகங்களிலும் உயர்ந்து பரவிய பெருமையுடையது என்பதனை, 'இவ்வுலகங்கள் இராமன் பரக்குந் தொல்புகழமுதினைப் பருகுகின்றனவே' (அயோத்-மந்தரை-78) என இவ்வாசிரியர் முன்னர்க் கூறியுள்ளமை இங்கு நினைக்கத் தக்கதாகும். கதிரின் செம்மல் - சுக்கிரீவன். வலியமொய்ம்பினன் - இலக்குவன். (139)

இச் செய்யுளின் பின் இப் படலத்தின் இறுதிச் செய்யுளாக 2-ஆம் சுவடியில் பின்வருமாறு ஒரு பாடல் உளது :—

4512 (a) அன்றவண் வானரச் சேனை யாவையும்
வென்றிகொள் தலைவரு மெண்கின் வீரரும்
குன்றுக ளொருவழி கூடி னலென
வன்றிற லிராமனை வழுத்தி வந்தவே.

## கவிக்கூற்று

**4513.** அன்றவ ணிறுத்தன னலரி கீட்டிசைப்
பொன்றிணி நெடுவரை பொலிவு றுதமுன்

வன்றிறற் றூதுவர் கூவ வானரக்
குன்றுறழ் நெடும்படை யடைதல் கூறுவாம்.

அன்று அவண் இறுத்தனன்; அலரி கீழ்த் திசைப்
பொன் திணி நெடுவரை பொலிவு உருத முன்,
வன் திறல் தூதுவர் கூவ, வானரக்
குன்று உறழ் நெடும்படை அடைதல் கூறுவாம்.

பொ :—(இராமன்) அன்றை இரவு அங்குத் தங்கியிருந்தான்; சூரியன் கிழக்குத் திசையிலுள்ள பொன்மயமான பெரிய உதய மலையில் விளங்கித் தோன்ருத முன்னமே, வலிமையும் திறமையும் உடைய தூதுவர் சென்று அழைத்தமையினால் குன்றைப் போன்ற தோற்றத்தையுடைய பெரிய வானர சேனை வந்து சேர்ந்த தன்மையை இனிச் சொல்லுவோமாக.

கு :—இறுத்தல் - தங்குதல். அலரி - சூரியன். கீழ்த்திசை, கீட்டிசை என ழகரம் டகரமாய்த் திரிந்தது; 'திகட சக்கரம்' (கந்த புராணம்–கடவுள் வாழ்த்து–1) என்புழிப்போல. கீழ்த்திசை நெடு வரை என்றது உதயகிரியை. சூரியன் உதிப்பதற்கு முன்னமே வானரப்படை வந்தது என்றவாறு. கூவுதல் - அழைத்தல். குன்றுறழ் வானர நெடும்படை என இயையும். தானைகாண் படலத் திற்குத் தோற்றுவாயாகக் கவி இங்ஙனம் கூறியவாறு. (140)

இச் செய்யுளுக்குப் பின், 41, 45, 52 என்ற எண்ணுள்ள அச்சுப் புத்தகங்களில்.

4513 (a) இன்ன தாகிய திறத்தவ ரிருக்கமுன் போகச்
சொன்ன வாயிர கோடியிற் றூதர்தந் திறத்தால்
பன்ன வாறிரு வெள்ளமாங் கவிப்படை பயிலப்
பொன்னின் வார்கழ லிடபனக் கிட்கிந்தை புகுந்தான்.

4513 (b) தாமரைப் பெருந்தவிசுறை சதுமுகக் கடவுள்
ஓமபங்கியி லுதித்தன வுலப்பில கோடி
ஆமெனப்புகல் வானரத் தானையங்கணித்தா
மாவயப் புயத் தெறுழ்வலி மயிந்தன்வந் தடைந்தான்.

4513 (c) கங்கை சூடிதன் கருணைபெற் றுடைய முன்வாலி
பொங்கு மானையி னெண்டிசைப் பொருப்பினும் பொலியத்
தங்கி வாழ்கவித் தானையங் காறைந்து கோடி
வங்க வேலையிற் பரந்திட வசந்தன்வந் தடைந்தான்.

என்ற பாடல்கள் மிகைப் பாடல்களாகக் காணப்படுகின்றன.

## கிட்கிந்தைப் படலம் முற்றிற்று.

# 11. தானை காண் படலம்

சுக்கிரீவன் தன்னுடைய எழுபது வெள்ளம் வானர சேனை யையும் காட்ட இராம இலக்குவர் காண்கின்ற செய்தியைக் கூறும் பகுதியாகலின் இது 'தானை காண் படலம்' எனப் பெயர் பெறு கின்றது. இப்படலமே சில சுவடிகளில் 'வானரத் தானை காண் படலம்' என்ற பெயருடனும் காணப்படுகின்றது.

## படலப் பொருட் சுருக்கம்

பத்தாயிரங் கோடி வானரப் படையோடு சதவலியும், பத்து லட்சங் கோடிப் படையுடன் சுடேணனனும், நாற்பத்தெண்ணுயிரங் கோடி சேனையுடன் தாரனும், ஐம்பது லட்சங் கோடிப் படையுடன் கேசரியும், நான்காயிரங் கோடி சேனையுடன் கவாட்சனும், இரண்டா யிரங் கோடிப் படையுடன் துமிரனும், பன்னிரண்டாயிரங் கோடிப் படையுடன் பனசனும், ஐம்பது கோடிப் படையுடன் நீலனும், முப்பது கோடிப் படையுடன் தரீமுகனும், முப்பதிணுயிரங்கோடிப் படையுடன் கயனும், ஆயிரத்தறு நூறு கோடிப் படையுடன் சாம்பனும், இரண்டு கோடிப் படையோடு துன்முகனும், பலகோடி லட்சப் படையோடு துவிந்தனும், நூறுலட்சங் கோடிப் படையுடன் மயிந்தனும், கசகோ முகனும், ஒன்பதுகோடிப் படையோடு குமுதனும், பதினுன்குலட்சங் கோடிப் படையுடன் பதுமுகனும், தொள்ளாயிரங் கோடிப் படை யுடன் இடபனும், பலகோடிக்கணக்கான படையுடன் தீர்க்கபாதனும், வினதனும், சரபனும், இருபத்தையாயிரங் கோடிப் படையுடன் அனுமனும், லட்சங்கோடிப் படையுடன் நளனும், எண்ணில்லாத படையுடன் கும்பன், சங்கன் முதலிய படைத்தலைவர்களும் வந்து சுக்கிரீவனை அடைகின்றனர்கள்.

வந்த படைத்தலைவர்கள் அறுபத்தேழு கோடி என்ற அளவின ராவர். இப்படைத் தலைவர் யாவரும் சுக்கிரீவன் அடிகளை மலர்தூவி வணங்குகின்றனர். வந்த சேனையைக் கண்டு மகிழ்ந்த சுக்கிரீவன், இராமனை அணுகி வந்துள்ள சேனையைக் காணுமாறு வேண்டு கின்றான். இராமனும் அவ்வானரப் படையின் பெருக்கத்தைக் கண்டு சீதையைக் கண்டவன்போல அகமும் முகமும் மலர்ந்தவனாய், அப்படை முழுதும் நன்கு காண அங்குள்ள மலைச் சிகரத்தை அடை கின்றான். பதினைந்து யோசனை பரப்புடையதாக அப்படையை அணிவகுத்து வடக்கிருந்து தென்திசையில் செல்லுமாறு ஆணை யிட்டுவிட்டுச் சுக்கிரீவன், மீண்டும் இராமனை அடைந்து 'வீரனே!

நீ இப்படையினைக் காண்பாயாக' என்று கூறி அப்படையினை வரன் முறையாக வகுத்துக் காட்டுகின்றான். அச்சேனையின் பெருமையைக் கண்ட இராமன் முடிவறிய முடியாதது எனப் பாராட்டுகின்றான். இவ்வானர சேனையை எண்ணுங்கால் உறையிட்டு எண்ணுதற்காகவே பிரமன் மற்றைய உயிர்களை யெல்லாம் படைத்தான்போலும் என்று பாராட்டிவிட்டு இலக்குவன், தேடவேண்டியவர்களை ஆங்காங்கு விரைவாகத் தேடுமாறு விடுப்பதே செய்யத்தக்கது என்று இராமனுக்குக் கூறுகின்றான்.

## கம்பர், வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

வானர சேனையின் வருகையும், அச்சேனையை இராம இலக்குவர் காண்டலும் ஆகிய நிகழ்ச்சியைத் தெரிவிக்கும் இப் பகுதியில் வான்மீகத்திற்கும் கம்பராமாயணத்திற்கும் வேறுபாடு பெரும்பாலும் இல்லை. படைத்தலைவர்களின் பெயர்களைக் கூறுவதில் கூடுதல் குறைதல் காணப்படலாம்; அப்படையின் எண்ணிக்கை கூறுவதில் மிகுதலும் குறைதலும் இருக்கலாம் அவ்வளவே. படைகளின் எண்ணிக்கையும் ஆற்றலும் உயர்வு நவிற்சியாகவே கூறப்பட்டுள்ளன.

## படலப் பொருட் சிறப்பு

ஒரு பொருளின் இயல்பை முழுவதும் அறிந்துகொள்ள இயலாத நிலையிலும் முழுவதும் அறிந்து கொண்டதாக எண்ணி மன நிறைவு கொள்ளுதல் மக்கள் இயல்பு. பொது நோக்கால் நோக்கிச் சொல்லும்போது நேர்கின்ற இந்த அறியாமை யாவர்க்கும் பொதுவானதே. இப்பொருளைப்பற்றி எவ்வளவு நாம் அறிந்துள்ளோம்? என நம்மை நாமே கேட்டுக் கொள்ளும் போதோ அல்லது அப்பொருளின் இயல்பை அறிவிக்குமாறு பிறர் விழைகின்றபோதோ இவ்வறியாமை நமக்குத் தெற்றெனப் புலப்படும். கடலைப் பார்த்திருக்கின்றாயா? என்று நம்மை ஒருவர் வினவினால், 'எத்தனையோமுறை பார்த்ததுண்டு' என எளிதில் விரைந்து விடைகூறி விடுவோம். ஆனால், அக்கடலின் முழுப் பரப்பையும்—அதன் ஆழத்தையும்—அதில் அடங்கியுள்ள பொருள்களையும் நாம் கண்டோமா? என்ற வினா நம் உள்ளத்தில் எழுவதில்லை.

இத்தகைய வினாவைக் கம்பர் இந்தத் தானை காண் படத்தில் எழுப்பி விடையும் கூறி நம் மனநிறைவைச் சிதைத்துவிடுகின்றார். சுக்கிரீவனின் எழுபது வெள்ள வானர சேனையையும் இராம இலக்குவர் காண்கின்றனர். அச்சேனையின் நடுப்பகுதி வரையில் காண முடிந்ததே யொழிய முடிவு காண முடியவில்லை. இந்த உண்மை நிலையை இராமன் இலக்குவனுக்கு எடுத்துரைக்கின்றான்.

அடல்கொண் டோங்கிய சேனைக்கு நாமும்நம் மறிவால்
உடல்கண் டோமினி முடியுறக்காணுமா றுளதோ ?

என்று வியந்து கூறுகின்றான். இங்கு உடல் என்றது நடுப்பகுதியை. இச் சேனையின் கடைசிப் பகுதியைக் காண்டல் எளிதன்று என்பான், 'இனி முடியுறக் காணுமாறுளதோ ?' என்கின்றான். இச்சேனைக் கடலின் முடிவைக் காணவிட்டாலும் கண்டதாகவே மனநிறைவு கொள்ளலாம் என்று கூறவந்த இராமன், வேற்றுப்பொருள் வைப்பாக, "மண்ணிடை மக்கள், கடல்கண்டோ மென்பர் யாவரே முடிவுறக்கண்டார்" என வினவித் தன் கருத்தைப் புலப்படுத்து கின்றான். கடலின் பரப்பு முழுவதையும் காணாது கரையில் ஒருபுறத் திருந்து கொண்டு அக்கடலின் ஒரு சிறு பகுதியைத் தம் கண்ணுக்கு எட்டிய அளவுமட்டும் பார்த்துவிட்டுக் கடலைக் கண்டுவிட்டதாக இவ் வுலகத்து மக்கள் சொல்லவில்லையா? "இப்படைக் கடலின் நடுப்பகுதி வரையில் பார்த்துவிட்ட நாம் முழுவதையும் பார்த்ததாகவே எண்ணி மனநிறைவு கொள்வதில் யாது குறையுளது ?" என்பதைப் புலப்படுத்துகின்றான். அப்படை முழுவதையும் காணவியலாத தன்மாட்டாமையை உடன்பட்டு அத்தகையமாட்டாமை எல்லா மக்களுக்கும் உண்டு என்பதை இராமன் காட்டுவதாகச் சொல்லிக் கம்பர் அச்சேனையின் பெருமையைப் புலப்படுத்தும் பகுதி மிக்க நயமுடையதாகக் காணப்படுகின்றது.

மேலும், இச்சேனையின் பெருக்கம் அளவிலாதது என்பதை ஒப்புமைக்கூட்ட அணியில் வைத்து விளக்குவாராய்,

ஈசன் மேனியை யீரைந்து திசைகளை யீண்டிவ்
வாசில் சேனையை யைம்பெரும் பூதத்தை யறிவைப்
பேசும் பேச்சினைச் சமயங்கள் பிணக்குறும் பிணக்கை
வாச மாலையாய் ! யாவரே முடிவெண்ண வல்லார்.

என இராமன் கூறியதாகக் கம்பர் கூறியுள்ள இச்செய்யுள் ஆழ்ந்த கருத்துடையதாகும். முடிவு எண்ண முடியாதவை என்று இங்கு எண்ணும் பொருள்களுள் ஈசன் எங்கும் நிறைந்து யாவற்றையும் கடந்தும் நிற்பவனாகலின் அவன் திருமேனியை இத்துணைத்தென முடிவு செய்ய முடியாததேயாம். பத்துத் திசைகளும் ஐம்பெரும் பூதங்களும் அறிவும் பேச்சும் அங்ஙனமே முடிவெண்ண முடியா தனவே. இவற்றிற்கெல்லாம் கடைசியாகச் " சமயங்கள் பிணக்குறு பிணக்கை யாவரே முடிவெண்ண வல்லார் ?" என்று கூறும் பகுதியில் தான் கம்பர் கருத்து மிகப் பதிந்துளது. கம்பர் தம் காலத்திருந்த சமயக் கருத்துகளை யெல்லாம் அறிந்துகொள்ள ஆர்வங்கொண்டு

சமயவாதிகள் பலரிடம் சென்று கேட்டபோது, ஒவ்வொரு மதத்தினரும் தம் தம் மதமே சிறப்புடையது அமைவுடையது வீடு கொடுக்கும் விழுப்பமுடையது எனக்கூறிப் பிறமதங்களைத் தாழ்த்திப் பேசக் கேட்டுச் சமயங்களின் பிணக்கிற்கு முடிவு காண முடியாது என விடுத்த தம் அனுபவ உணர்வையே இங்கு இறுதியாக வைத்து உரைத்திருக்கின்றார் என்று கொள்ளலாம். இதனால் கம்பர், சமயப் பிணக்குகளில் கருத்தைச் செலுத்திக் காலத்தைக் கழிப்பதில் விருப்ப மற்றவர் என்பது பெறப்படும். இக்கருத்தாலேயே "அரனதிகன் உலகளந்த அரியதிகன் என்றுரைக்கும் அறிவிலார்க்குப் பரகதி சென்றடைவரிய பரிசேபோல் புகலரிய பண்பிற்றுமால்" என நாட விட்ட படலத்தும் (24) கூறியுள்ளார் என்பதை மனக்கொளல் வேண்டும். மணிவாசகரும், "சமயவாதிகள் தத்தமதங்களே யமைவதாக அரற்றி மலைந்தனர்" (போற்றித் திருவகவல்–52, 53) என்று இச்சமயப் பிணக்குகளைக் கூறியிருத்தல் இங்கு நினையத்தகும்.

---

# 11. தானை காண் படலம்

சதவலி வானர சேனையுடன் வந்து சேர்தல்

**4514.** ஆனை யாயிர மாயிரத் தெறுழ்வலி யமைந்த
வான ராதிப ராயிர ருடன்வர வகுத்த
கூனன் மாக்குரங் கையிரண் டாயிர கோடித்
தானை யோடுமச் சதவலி யென்பவன் சார்ந்தான்.

ஆனை ஆயிரம் ஆயிரத்து எறுழ்வலி அமைந்த
வான ராதிபர் ஆயிரர் உடன்வர, வகுத்த
கூனல் மாக் குரங்கு ஐ இரண்டு ஆயிர கோடித்
தானை யோடும்—அச்சதவலி என்பவன்—சார்ந்தான்.

பொ :—அந்தச் சதவலி என்பவன், பத்து நூறுயிரம் யானைகளின் மிக்க வலிமை பொருந்திய வானரத் தலைவர் ஆயிரவர் தன்னுடன் வர அணிவகுக்கப் பெற்ற பத்தாயிரங்கோடி அளவினதான வளைந்த உடம்பினையுடைய பெரிய குரங்குச் சேனையோடு வந்து சேர்ந்தான்.

கு :—அச்சதவலி என்புழி அகரம் உலகறிசுட்டு. சதவலி என்பது முகத்தில் நூறு மடிப்புகளையுடையன் என்ற காரணம் பற்றி வந்த பெயர். எறுழ் - வலிமை. எறுழ்வலி என்றது ஒரு பொருட் பன்மொழி. சதவலியுடன் வந்த வானரர் ஒவ்வொருவரும் பத்து இலக்கம் யானைகளின் வலிமை பெற்றவர்கள் என்றவாறு. கூனல்- வளைதல். குரங்குகள் மக்கள்போல் நிமிர்ந்து நடவாமல் குனிந்து நடக்கும் இயல்பு பற்றிக் கூனல் மாக்குரங்கு என்றுர். வகுத்த தானை என இயையும். (1)

சுடேணனன் வருகை

**4515** ஊன்றி மேருவை யெடுக்குறு
மிடுக்கினுக் குரிய
தேன்றெ ரிந்துண்டு தெளிவுறு
வானரச் சேனை
ஆன்ற பத்துநூ றுயிர
கோடியோ டமையத்
தோன்றி னன்வந்து சுடேணன
னெனும்பெயர்த் தோன்றல்.

ஊன்றி மேருவை எடுக்குறும் மிடுக்கினுக்கு உரிய
தேன் தெரிந்து உண்டு தெளிவுறு வானரச் சேனே
ஆன்ற பத்து நூறு ஆயிர கோடியோடு அமையத்
தோன்றினுன் வந்து–சுடேணனன் எனும் பெயர்த் தோன்றல்.

பொ :—சுடேணனன் என்ற பெயருடைய வானர வீரன் - மேரு மலேயைக் கைஊன்றிப் பெயர்த்து எடுக்கும் வலிமை பொருந்தியதும், நல்ல தேனே ஆராய்ந்து உண்டு (மயக்கமின்றித்) தெளிந்திருப்பது மாகிய, சிறந்த பத்து லட்சங் கோடி வானரப் படையுடனே பொருந்த வந்து சேர்ந்தான்.

கு :—மேருவை யெடுக்குறு மிடுக்கினுக்குரிய வானரச் சேனே என இயையும். தேன் தெரிந்துண்டு தெளிவுறும் என்பது இடையே சேனேக்கு அடையாய் நின்றது. மேருவின் அடிப்பகுதி தரையில் பதிந்து கிடத்தலின் அதைப் பெயர்த்தற்குக் கைகளேத் தரையில் ஊன்ற வேண்டிற்று. சுடேணனனேடு வந்த சேனேயிலுள்ள ஒவ்வொரு வானரவீரனும் மேருவைப் பறிக்கும் ஆற்ற லுடையவன் என்றவாறு. 'மேருவைப் பறிக்க வேண்டின்...... இராவணற்கரிதென்' (சடாயுவுயிர்நீத்த-62) என இராவணன் ஆற்றலேப் புலப்படுத்தவும் இதனேக் கூறியிருத்தல் காணலாம். உண்டாரை மயக்கவல்ல தேனும் அவ்வானரரை மயக்கவியலாமை தோன்றத் 'தேன் தெரிந்துண்டு தெளிவுறும் வானரச் சேனே' என்ருர். தேனே அறியாது உண்ணவில்லே என்பார், 'தெரிந் துண்டு' என்ருர், ''பாறை நெடுஞ்சுனே விளேந்த தேறல், அறியா துண்ட கடுவன் அயலது, கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது, நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்'' (அகநா-2) எனத் தேறலே அறியாதுண்ட கடுவன் தெளிவின்றிக், கண்படுக்கும் இயல்பு கூறப் படுதலே நோக்கின், தேன் தெரிந்துண்டு தெளிவுறும் வானரத்தின் சிறப்புப் புலனும். சுடேணனன் பத்து நூருயிரகோடி வானரச் சேனேயோடு அமைய வந்து தோன்றினுன் என இயையும். சுடேணனன் வாலியின் மனேவியாகிய தாரையின் தந்தை. (2)

உருமையின் தந்தை தாரன் வருகை

4516. ஈறில் வேலேயை யிமைப்புறு
மளவினிற் கலக்கிச்
சேறு காண்குறுந் திறல்கெழு
வானரச் சேனே

யாறெ ணுயிர கோடிய
துடன்வர வமுதம்
மாறு இலாமொழி யுருமையைப்
பயந்தவன் வந்தான்.

ஈறு இல் வேலையை இமைப்புறும் அளவினில் கலக்கிச்
சேறு காண்குறும் திறல் கெழு வானரச் சேனை
ஆறு எண் ஆயிர கோடியது உடன் வர,—அமுதம்
மாறு இலா மொழி உருமையைப் பயந்தவன்—வந்தான்.

பொ :—அமுதமும் ஒப்பாகாத (இனிமை மிக்க) சொல்லையுடைய உருமை என்பாளைப் பெற்ற தாரன் என்பவன் - முடிவு காண இயலாத கடலையும் இமைப்பொழுதில் கலக்கிச் சேருக்கும் திறமை பொருந்திய நாற்பத்தெட்டு ஆயிரங்கோடி வானரப் படை தன்னுடன் வர வந்து சேர்ந்தான்.

கு :—சுக்கிரீவன் மனைவியாகிய உருமைக்குத் தந்தை தாரன் எனப்படுவான். தாரனுடன் வந்த வானர வீரர் ஒவ்வொருவரும் இமைப்பொழுதில் கடலைக் கலக்கிச் சேருக்கும் ஆற்றலையுடைய வர்கள் என்றவாறு. "நீரினைக் கலக்கவேண்டின்......இராவ ணற்கு அரிதென்" (சடாயுவுயிர்நீத்த-62) என இராவணன் ஆற்றலை வேலை நீரினைக் கலக்குஞ் செயலால் புலப்படுத்தியுள்ளமை காணலாம். காலச் சிறுமை கூறுவார், 'இமைப்புறுமளவினில்' என்றார்; ஒரு மாத்திரை யளவில் என்றவாறு. மாறு - ஒப்பு. 'மாறன்மையின்' (சீவக-2261) என்புழியும் அப்பொருள்படுதல் காண்க. இனி, அமுதத்தின் இனிமை மாறாத மொழி எனலும் ஆம். (3)

## கேசரி வருகை

**4517.** ஐம்ப தாயநூ றுயிர கோடியெண் அமைந்த
மொய்ம்பு மால்வரை புரைநெடு வானர மொய்ப்ப
விம்பர் ஞாலத்தும் வானத்து மெழுதிய சீர்த்தி
நம்பனைத் தந்த கேசரி கடலென நடந்தான்.

ஐம்பது ஆய நூறுயிர கோடி எண் அமைந்த,
மொய்ம்பு மால்வரை புரை நெடு வானரம் மொய்ப்ப,—
இம்பர் ஞாலத்தும் வானத்தும் எழுதிய சீர்த்தி
நம்பனைத் தந்த கேசரி—கடல் என நடந்தான்.

பொ :—இந்த மண்ணுலகத்திலும் விண்ணுலகத்திலும் நிலை பெறுத்திய மிக்க புகழையுடைய அனுமனைப் பெற்ற கேசரி என்பவன் - ஐம்பது லட்சம் கோடி என்னும் தொகையமைந்த பெரிய மலைகளை யொத்த தோள்களையுடைய பெரிய வானர சேனை தன்னைச் சூழ்ந்து நெருங்கிவரக் கடல் போன்ற தோற்றத்துடன் வந்தான்.

கு :—நம்பன் என்றது அனுமனை; விரும்புதற்கு உரியவன் என்ற காரணம் பற்றிய பெயர். இனிச் சிவபிரான் எனப் பொருள் கொண்டு சிவன் அமிசமான அனுமான் என்றலும் ஆம். 'நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினன்' (ஆற்றுப் - 2) என முன்னும் அச்சொல்லால் சிவனைக் குறித்தது நினைக. "புராரி மற்றியானே வாத சே யெனப் புகன்றான்" (திருவவதாரம் - 28) எனக் கூறியுள்ளதும் காண்க. வாயு தேவனின் மகன் அனுமன் என்பதை "யான் காற்றின் வேந்தற்கு அஞ்சனை வயிற்றில் வந்தேன்" (அனுமப்-17) என முன் அனுமனே கூறியுள்ளான் ஆயினும் கேசரிக்கும் அனுமன் மகன் என்பதை இச்செய்யுள் அறிவிக்கின்றது. அஞ்சனையின் கணவன் கேசரி. அஞ்சனையை வாயுதேவன் பரிசித்தமையால் பிறந்தவன் அனுமன். 'சிவன் காண் அயன்காண் எனும் தூதனைப் பெற்ற செல்வன் அவன் காண் நெடுங் கேசரி' (உயுத்த - இராவணன் தானை கரண்-20) எனப் பின்னும் கூறப்படுதல் காணலாம் மால்வரை புரை மொய்ம்பு என இயையும். இம்பர் ஞாலம், ஒரு பொருட் பன்மொழி. கடல் போன்ற சேனையோடு வந்த கேசரியின் தோற்றம் நினைந்து 'கடலென நடந்தான்' என்றார். (4)

## தூமிரன் வருகை

**4518.** மண்கொள் வாளெயிற் றேனத்தின்
வலியன வாயிரத்
திண்கொண் மால்வரை மயிர்ப்புறத்
தனவெனத் திரண்ட
கண்கொ ளாயிர கோடியி
னிரட்டியிற் கணித்த
வெண்கி னீட்டங்கொண் டெறுழ்வலித்
தூமிர னிறுத்தான்.

**மண்கொள் வாள் எயிற்று ஏனத்தின் வலியன, வயிரத் திண் கொள் மால்வரை மயிர்ப் புறத்தன எனத் திரண்ட கண்கொள் ஆயிர கோடியின் இரட்டியின் கணித்த எண்கின் ஈட்டம் கொண்டு,—எறுழ்வலித் தூமிரன்—இறுத்தான்.**

பொ :—மிக்க வலிமையுடைய தூமிரன் என்னும் கரடி வீரன்,- பூமியைக் குத்தி யெடுத்த ஒளிபொருந்திய கொம்பினையுடைய (திருமாலின் அவதாரமான) வராகம் போன்ற வலிமையுடையன வாகி, வயிரத்தாலாகிய திண்மை கொண்ட பெரிய மலைகள் மயிர் அடர்ந்த புறத்தினையுடைய ஆயின, என்னுமாறு திரண்ட உடம் பினைக் கொண்ட ஈராயிரம் கோடியாகக் கணக்கிடப்பட்ட கரடிகளின் கூட்டத்தை உடன் கொண்டு வந்து சேர்ந்தான்.

கு :—தூமிரன் என்பவன் சாம்பவானின் தம்பி. இவனுடன் வந்த கரடிகளின் தொகை ஈராயிர கோடியாகும். ஒவ்வொரு கரடியும் வலிமையால் ஆதிவராகத்தை யொத்தும் உடம்பின் தோற்றத்தால் மயிர் அடர்ந்த புறத்தினவான வயிர மலைகளிருக்குமாயின் அவற்றை யொத்தும் விளங்கின என்றவாறு. மயிர் அடர்ந்த புறத்தினையுடைய கரடிகட்குப் பொருத்திய உவமையாகவேண்டி மயிர்ப்புறத்தனவாகிய மால்வரைகளை உவமை கூறினர்; இது இல்பொருள் உவமை. வலிமை மிகுதிக்கு ஆதிவராகத்தை உவமை கூறுவதுண்டு. வாலியின் வலிமை கூறும்போது "பாரிடந்த வெம்பன்றி பண்டை நாள் நீர் கிடந்த பேராமை நேருளான்" (நட்புக்கோட்-43) என உவமை கூறியிருத்தல் காணலாம். ஏனத்தின் வலியன என்புழி இன் ஒப்புப் பொருளது. உறழ்ச்சிப் பொருளதாகக் கொண்டு ஏனத் தினும் வலிமையுடையன எனக் கூறலும் ஆம். இனி, ஏனத்தினது வலிமையையுடையன என்றலும் ஒன்று. மயிர்ப்புறத்தனவாய திண்கொள் வயிரமால்வரை எனத் திரண்ட கண் கொள் எண்கு என மாற்றி இயைத்துக் கூறலும் ஆம். கண் – உடம்பு. 'பொன்கட் பச்பை பைங்கண் மாஅல்' (பரிபாடல் - 3: 82) என்புழிக் கண் இரண் டிற்கும் பரிமேலழகர் உடம்பு என்றே பொருள் எழுதியிருத்தல் காணலாம். வலியனவாய்த் திரண்ட கண்கொள் எண்கு என முற்றெச்சமாக்கி முடிக்க. எண்கு - கரடி. ஈட்டம் - கூட்டம். எறுழ்வலி என்பது ஒரு பொருட் பன்மொழி. (5)

இச்செய்யுட்குப்பின், 45 என்ற எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில்

4518 (a) தாமரைப் பெருந் தவிசுடைச் சதுமுகக் கடவுள்
ஓமவங்கியினுதித்தன வுலப்பிலகோடி
யாமெனப் புகல் வானரத் தானையங் கணித்தாய்
மாவயப்புயத் தெறுழ்வலி மயிந்தன்வந்தடைந்தான்.

என்ற மிகைப் பாடல் காணப்படுகின்றது.

## கவாட்சன் வருகை

4519. முனியு மாமெனி னருக்கனை
முரணற முருக்கும்
தனிமை தாங்கிய வுலகையுஞ்
சலம்வரிற் குமைக்கு
மினிய மாக்குரங் கீரிரண்
டாயிர கோடி
யனிக முன்வர வான்பெயர்க்
கண்ணன்வந் தடைந்தான்.

முனியும் ஆம் எனின் அருக்கனை முரண் அற முருக்கும்,
தனிமை தாங்கிய உலகையும் சலம்வரின் குமைக்கும்,
இனிய மரக்குரங்கு ஈர் இரண்டு ஆயிர கோடி
அனிகம் முன்வர—ஆன்பெயர்க் கண்ணன்—வந்து அடைந்தான்.

பொ :—கோபங் கொள்ளுமாயின் சூரியனையும் வலிமை கெடு மாறு அழிக்கும் ஆற்றலுடையதும், பெருங் கோபம் வந்தால் தம்மைத் தாங்கிக் கொண்டிருக்கின்ற உலகத்தையும் தனிமையாகவே குத்தியழிக்கவல்லதும், ஆய நாலாயிர கோடி என்னும் அளவுள்ள இனிய பெரிய குரங்குகளையுடைய சேனை தனக்கு முன்னே வரக் கவாட்சன் என்பவன் வந்து சேர்ந்தான்.

கு :—ஆன்பெயர்க் கண்ணன் - கவாட்சன். கோ - அட்சி என்ற இரு சொல்லும் இயையும்போது கவாட்சன் எனத் திரியும். இவன் கொண்டைமுசு என்ற குரங்கின் இனத்திற்குத் தலைவன் என்பர். அருக்கன் - சூரியன். முனிவு - கோபம். சலம் - பெருங்கோபம். கவாட்சன் சேனையிலுள்ள ஒவ்வொரு குரங்கும் கோபம் கொண்டால் விண்ணில் திரியும் சூரியனையும் வலிமை கெடச் செய்யும் ஆற்றலுடையவை; பெருங் கோபங் கொண்டால் தம்மைத் தாங்கியுள்ள பூமியையும் பிறர் துணை வேண்டாமல் தனியாகவே அழிக்க வல்லவை என அக்குரங்குகளின் ஆற்றலைப் புலப்படுத்தியவாறு. அத்தகைய ஆற்றல் இருந்தும் சூரியனையும் பூமியையும் முனிவாலும், சலத்தாலும் இதுவரையில் அழிக்காதிருக்கும் சிறப்புப்பற்றி 'இனிய மாக் குரங்கு' எனப் புகழ்ந்தவாறு. தனிமையாகவே குமைக்கும் என்க. அனிகம் - சேனை. குரங்கு அனிகம் என இயையும். தாங்கிய என்பதற்கு, மலை முதலிய எல்லாப் பொருள்களையும் தாங்கியுள்ள எனப் பொருள் கூறலும் ஆம். (6)

பனசன் வருகை

4520. தனிவ ருந்தடங் கிரியெனப்
பெரியவன் சலத்தால்
நினையு நெஞ்சிற வுருமென
வுறுக்குறு நிலையன்
பனச னென்பவன் பன்னிரண்
டாயிர கோடிப்
புனித வெஞ்சின வானரப்
படைகொடு புகுந்தான்.

தனிவரும் தடங்கிரி எனப் பெரியவன், சலத்தால்
நினையும் நெஞ்சுஇற உரும் என உறுக்குறு நிலையன்,
பனசன் என்பவன், பன்னிரண்டு ஆயிர கோடிப்
புனித வெஞ்சின வானரப் படைகொடு–புகுந்தான்.

பொ :—தனித்து நடந்து வருகின்ற பெரிய மலை என்னுமாறு பெரிய தோற்றமுடையவனும், கடுங் கோபத்தால் தன்னை நினைக்கின்ற பகைவர் நெஞ்சு முரியுமாறு இடிபோல அதட்டும் ஆற்றலுடையவனும் ஆன பனசன் என்ற வானர வீரன், பன்னிரண்டாயிர கோடிக்கணக்கான தூய கடுங் கோபத்தையுடைய வானரப் படையை யுடன் கொண்டு வந்து சேர்ந்தான்.

கு :—கிரிக்கு வருதல் தொழில் இன்மையின், 'தனிவருந் தடங்கிரியெனப் பெரியவன் என்றது இல்பொருளுவமை. மலை போன்ற தோற்றமுடையவன் என்றவாறு. தன்மேற்கொண்ட கோபத்தால் தன்னை நினையும் பகைவரையும் அறிந்து அதட்டி அச்சுறுத்துகின்றவன் என அவன் ஆற்றல் புலப்படுத்தியவாறு. இறுதல் - முரிதல்; அழிதல். உறுக்குதல் - அதட்டுதல். வெஞ்சினம் - கடுங்கோபம். ஒத்தாரோடன்றிப் போர் புரியாத மாண்புடைய சினமாதலின், 'புனித வெஞ்சினம்' எனச் சிறப்பித்தார். இனி, அறத்தைக் காத்தற்காகவே தோன்றும் வெஞ்சினம் ஆதல் தோன்றப் 'புனித வெஞ்சினம்' என்ருன் எனலும் ஆம். (7)

நீலன் வருகை

4521. இடியு மாக்கடன் முழக்கமும்
வெருக்கொள விசைக்கும்
முடிவில் பேர்முழக் குடையன
விசையன முரண

கொடிய கூற்றையு மொப்பன
பதிற்றைந்து கோடி
நெடிய வானரப் படைகொண்டு
புகுந்தன னீலன்.

இடியும், மாக்கடல் முழக்கமும் வெருக்கொள இசைக்கும்
முடிவு இல் பேர் முழக்கு உடையன, விசையன, முரண,
கொடிய, கூற்றையும் ஒப்பன, பதிற்றைந்து கோடி
நெடிய வானரப் படைகொண்டு புகுந்தனன்–நீலன்.

பொ :—இடியின் ஒலியும் கடலின் ஓசையும் அஞ்சுமாறு ஒலிக்கின்ற வரம்பில்லாத பெரிய முழக்கத்தையுடையனவும் வேகத்தையுடையனவும் வலிமையுடையனவும் கொடுமை பொருந்தியனவும் எமனைப் போன்றனவும் ஆகிய ஐம்பது கோடி நெடிய வானரப் படையை உடன் கொண்டு நீலன் என்னும் வானரத் தலைவன் வந்து சேர்ந்தான்.

கு :—முழக்கத்தில் சிறந்த இடியும் கடலும் வெருவுமாறு பெரு முழக்கம் செய்யும் வானரப் படை என்க. இடி என்றது அதன் முழக்கத்தை யுணர்த்தியது. வெருக்கொள - அஞ்ச. முரண் - வலிமை. முரண குறிப்பு வினைப் பெயர். கொடிய என்பதைக் கூற்றுக்கு அடையாக்கலும் ஆம். பதிற்றைந்து - ஐம்பது. ஏனைய வானரங்களினும் நீலனோடு வந்த வானரப்படை நெடிய வடிவின என்பார் 'நெடிய வானரப் படை' எனச் சிறப்பித்தார். புகுதல், வருதல் என்னும் பொருளது. நீலன் அக்கினியின் புதல்வன்; வானரப் படைகட்கெல்லாம் பெருந்தலைவன்; இவன் நீலநிற முடையன் என்பது இவன் பெயரால் புலப்படுகின்றது. (8)

## தரீமுகன் வருகை

4522. மாக ரத்தன வுரத்தன வலியன நிலைய
வேக ரத்தவெங் கண்ணுமிழ் வெயிலன மலையி
னாக ரத்தினும் பெரியன வாறைந்து கோடி
சாக ரத்தொடுந் தரீமுக னென்பவன் சார்ந்தான்.

மா கரத்தன உரத்தன, வலியன, நிலைய,
வேகரத்த, வெங்கண் உமிழ் வெயிலன, மலையின்
ஆகரத்தினும் பெரியன, ஆறு ஐந்து கோடி
சாகரத்தொடும் தரீமுகன் என்பவன் சார்ந்தான்.

பொ :—பெரிய கைகளையுடையனவும் பெரிய மார்பையுடையனவும், வலிமையுடையனவும், நிலையான நினைப்புடையனவும், கொடுமையுடையனவும், கொடிய கண்கள் வெளிப்படுத்துகின்ற ஒளி பொருந்திய நெருப்புப் பொறிகளையுடையனவும், மலையின் வடிவினும் பெரிய வடிவுடையனவும் ஆய முப்பது கோடி (வானரங்களைக் கொண்ட) படைக் கடலோடும் தரீமுகன் என்ற வானரத் தலைவன் வந்தான்.

கு :—மா உரத்தன எனப் பின்னும் இயையும். நிலைய என்றது நிலையான எண்ணம் உடைமையை; நிலைகெட்ட நெஞ்சினவல்ல என்றவாறு. வேகரம் - கொடுமை. கண்ணுமிழ் வெயில் என்றது கோபத்தால் கண்கள் சொரியும் நெருப்புப் பொறிகளை; வெம்மையும் ஒளியும் பற்றி அப்பெயரால் கூறினர். ஆகரம்–வடிவு, சாகரம் - கடல்; சகரரால் தோண்டப்பட்டது என்ற காரணத்தால் வந்த பெயர். முப்பதுகோடி வானரங்களைக் கொண்ட படைக்கடல் என்பார், ஆறைந்துகோடி சாகரம் என்றார். தரீமுகன் என்பது மலைக்குகை போன்ற முகமுடையவன் என்ற காரணம் பற்றி வந்த பெயர். (9)

## கயன் வருகை

4523. இளைத்து வேறொரு மாநிலம்
வேண்டுமென் றிரங்க
முளைத்த முப்பதி னாயிர
கோடியின் முற்றும்
விளைத்த வெஞ்சினத் தரியினம்
வெருவுற விழிக்கு
மளக்க ரோடுமக் கயனெனும்
பெயரன்வந் தடைந்தான்.

**இளைத்து வேறு ஒரு மாநிலம் வேண்டும் என்று இரங்க,**
**முளைத்த முப்பதினாயிர கோடியின் முற்றும்,**
**விளைத்த வெஞ்சினத்து அரி இனம் வெருவுற விழிக்கும்**
**அளக்கரோடும்–அக்கயன் எனும் பெயரன் வந்து அடைந்தான்.**

பொ :—(உலகம் அறிந்த) அந்தக் கயன் என்னும் பெயரையுடைய வீரன்,-(இடம் போதாமையால்) இளைப்புற்றுத்தாம் தங்குதற்கு வேறும் ஒரு பெரிய பூமி வேண்டும் என்று இரங்குமாறு தோன்றியதும் முப்பதினாயிரம் கோடி என்னும் அளவு நிரம்பியதும், வளர்த்த கொடிய கோபத்தையுடையதும், யாரும் அஞ்சுமாறு

விழித்துப் பார்க்கின்றதும் ஆகிய வானரங்களின் படைக் கடலோடு வந்து சேர்ந்தான்.

கு :—முளைத்த அரியினம், முற்றும் அரியினம், வெஞ்சினத் தரியினம், விழிக்கும் அரியினம் என எல்லாவற்றையும் அரியினத் துக்கு அடையாக்குக. அரி – குரங்கு. அரியினமாகிய அளக்கர் என்க. வானரப் படையின் பெருக்கால் பார்சிறுத்தலின் இடம் போதா இடர்ப்பாட்டால் உடம்பு இளைத்தது என்றவாறு. முப்பதி ஞயிரங்கோடி வானரம் தங்குதற்கு இப்பூமி போதாமையால் வேறு மோர் மாநிலம் வேண்டும் என்று இரங்க நேர்ந்தது, முளைத்தல் - தோன்றுதல். மக்கள் பெருகியுள்ள இக்காலத்தும் உலக முழுமையு முள்ள மக்கள் தொகை முந்நூறு கோடியே என்பதை நினையின் முப்பதிஞயிரங் கோடி வானரம் என்றது உயர்வு நவிற்சி யென்பது விளங்கும். முன் கூறியனவும் பின் கூறுவனவும் அன்னவே. அளக்கர் – கடல். சேனு சமுத்திரம் என்ற மரபு நோக்கி வானரப் படையை அளக்கர் என்றுர், அக் கயன் என்புழி அகரம் உலகறி சுட்டு. கஜன் என்பது கயன் எனத் தமிழில் திரிந்தது; யானை போன்றவன் என்ற காரணம் பற்றிய பெயர் போலும். வேண்டும் என்றே வளர்த்த சினம் என்பார், விளைத்த வெஞ்சினம் என்றுர். (10)

## சாம்பவான் வருகை

**4524.** ஆயி ரத்தறு நூறுகோ
டியிற்கடை யமைந்த
பாயி ரப்பெரும் படைகொண்டு
பரவையிற் றிரையிற்
ருயு ருத்துட னேவரத்
தடநெடு வரையை
ஏயு ருப்புயச் சாம்பனென்
பவனும்வந் திறுத்தான்.

ஆயிரத்து அறுநூறு கோடியின் கடை அமைந்த
பாயிரப் பெரும்படை கொண்டு பரவையின் திரையின்
தாய், உருத்து உடனே வர–தட நெடு வரையை
ஏய் உருப் புயச் சாம்பன் என்பவனும் வந்து இறுத்தான்.

பொ :—பெரிய நெடிய மலையை ஒத்த உருவத்தோடு கூடிய பெரிய புயத்தையுடைய சாம்பவான் என்பவனும்,-ஆயிரத்து அறு நூறு கோடி என்ற வரம்பு அமைந்த சிறப்பினையுடைய பெரிய படை,

கடலின் அலைகளைப் போலத் தாவி நடந்து கோபித்துத் தன்னுடனே பின் தொடர்ந்துவரக் கொண்டு, வந்து சேர்ந்தான்.

கு :—சாம்பவான் என்ற பெயர் சாம்பன் என மருவியது. இவன் பிரமன் கொட்டாவி விட்டபோது அவன் வாயிலிருந்துகரடி வடிவாகப் பிறந்தவன். திருமால் திருவிக்கிரமனாய் உலகளந்து மாவலிபால் உலகத்தைப் பெற்ற பொழுது பதினெட்டு முறை இவ்வுலகைச் சுற்றிப் பறையறைந்தவன் என்பர். சாம்பவன் என்பவனும், பெரும் படை தாய் உடனே வரக் கொண்டு, வந்திறுத்தான் என இயையும். தாய் - தாவி. படை தாவி நடந்து வருதற்குக் கடல் அலை உவமை. ஏய் - ஒத்த. இறுத்தல் - தங்குதல்; சேர்தல். (11)

## துன்முகன் வருகை

**4525.** வகுத்த தாமரை மலரய
 னிசிசரர் வாணா
ளுகுத்தி நீயெனப் பொருவரும்
 பெருவலி யுடையான்
பகுத்த பத்துநா ருயிரப்
 பத்தியி னிரட்டி
தொகுத்த கோடிவெம் படைகொண்டு
 துன்முகன் றொடர்ந்தான்.

வகுத்த தாமரை மலர் அயன்
 நிசிசரர் வாழ்நாள்
உகுத்தி நீயெனப் பொருவரும்
 பெருவலி உடையான்,
பகுத்த பத்து நூருயிரப்
 பத்தியின் இரட்டி
தொகுத்த கோடி வெம்படை கொண்டு-
 துன்முகன்—தொடர்ந்தான்.

பொ :—தாமரை மலரில் வாழும் பிரமன், ' நீ அரக்கர் தம் வாழ் நாளை ஒழிப்பாயாக ' எனக் கூறிப் படைத்தளித்த ஒப்பற்ற பெரு வலியையுடையவனாகிய துன்முகன், அணிவகுக்கப்பட்ட பத்து லட்சம் வரிசைகளையுடைய - இரண்டு கோடியாகத் தொகுத்து எண் ணப்பட்ட கொடிய வானரப் படையைக் கொண்டு வந்து சேர்ந்தான்.

கு :—அயன் 'நீ நிசிசரர் வாணாள் உகுத்தி' என வகுத்த பெரு வலியையுடையானாகிய துன்முகன் என இயையும். நிசிசரர், இரவில் சஞ்சரிப்பவர் என்ற காரணம்பற்றி அரக்கர்க்கு வந்த பெயர். பத்தி - வரிசை. இரண்டு கோடி என்ற எண்ணிக்கையுள்ள படையொடு துன்முகன் வந்து சேர்ந்தான் என்றவாறு. (12)

## துமிந்தன் வருகை

**4526.** கோடி கோடிநூ றாயிர
வெண்ணெனக் குவிந்த
நீடு வெஞ்சினத் தரியின
மிருபுடை நெருங்க
மூடு மும்பரு மிம்பரும்
பூழியின் மூழ்கத்
தோடி வர்ந்ததார்க் கிரிபுரை
துமிந்தனுந் தொடர்ந்தான்.

கோடி கோடி நூறாயிர எண் எனக் குவிந்த
நீடு வெஞ்சினத்து அரி இனம் இருபுடை நெருங்க
மூடும் உம்பரும், இம்பரும், பூழியில் மூழ்க-
தோடு இவர்ந்ததார்க் கிரிபுரை துமிந்தனும் தொடர்ந்தான்.

பொ :—இதழ்கள் செறிந்த மலர் மாலை யணிந்த, மலை போன்ற தோற்றத்தையுடைய துமிந்தன் என்ற வானரத் தலைவனும் பல கோடி லட்சக்கணக்காகக் குவிந்துள்ள நீண்ட கடுங் கோபத்தை யுடைய வானரங்கள் இருபுறத்தும் நெருங்கிவர, மேலே கவிந்துள்ள ஆகாயமும் இவ்வுலகமும் (மேலெழுந்த) புழுதியில் மறையுமாறு வந்து சேர்ந்தான்.

கு :—துமிந்தன், மயிந்தன் என்பவர்கள் அசுவனித் தேவர்களின் அமிசமாகப் பிறந்த வானர வீரர்கள். துமிந்தனுடன் வந்த படையின் நடையால் தரையில் எழுந்த புழுதி விண்ணையும் மண்ணுலகையும் மறைத்தது என்பார், 'உம்பரும் இம்பரும் பூழியின் மூழ்க' என்றார், துமிந்தனும் அரியினம் இருபுடை நெருங்கத் தொடர்ந்தான் என இயையும். தொடர்தல் வருதலை யுணர்த்தியது. (13)

## மயிந்தன் வருகை

**4527.** இயைந்த பத்துநூ ருயிரப்
பத்தெனுங் கோடி
உயர்ந்த வெஞ்சின வானரப்
படையொடு மொருங்கே
சயந்த னக்கொரு வடிவெனத்
திறல்கொடு தழைத்த
மயிந்தன் மற்கச கோமுகன்
றன்னொடும் வந்தான்.

இயைந்த பத்து நூருயிரப் பத்து எனும் கோடி
உயர்ந்த வெஞ்சின வானரப் படையொடும் ஒருங்கே—
சயம் தனக்கு ஒரு வடிவு எனத் திறல்கொடு தழைத்த
மயிந்தன்—மல் கசகோமுகன் தன்னொடும் வந்தான்.

பொ :—வெற்றிக்கு உரிய ஒரு வடிவே இவன் என்னுமாறு வலிமை கொண்டு வளர்ந்த மயிந்தன் என்ற வானர வீரன்,- மற்போரில் வல்ல கசகோமுகன் என்ற வீரனோடும், நூறு லட்சங் கோடிக் கணக்கான மிகக்கடிய கோபத்தையுடைய வானரப் படை யோடும் ஒருசேர வந்து சேர்ந்தான்.

கு :—சயம் - வெற்றி. சயமே தனக்கு ஒப்பற்ற வடிவம் என வலிமையுடன் வளர்ந்தவன் எனலுமாம். மல்லினுக்கு ஒருவன் ஆதலின், மற்கசகோமுகன் எனவே வழங்கப்படுதல் நினைந்து கசகோமுகனை மல் என்ற அடையோடு சேர்த்துப் பெயர் கூறினார்.

(14)

## குமுதன் வருகை

**4528.** கறங்கு போல்வன காற்றினுங்
கூற்றினுங் கடிய
பிறங்கு தெண்டிரைக் கடல்புடை
பெயர்ந்தெனப் பெயர்வ
மறங்கொள் வானர மொன்பது
கோடியெண் வகுத்த
திறங்கொள் வெஞ்சினப் படைகொடு
குமுதனுஞ் சேர்ந்தான்.

கறங்கு போல்வன காற்றினும் கூற்றினும் கடிய,
பிறங்கு தெண்திரைக் கடல்புடை பெயர்ந்தெனப் பெயர்வ,
மறம் கொள் வானரம் ஒன்பது கோடி எண் வகுத்த
திறம் கொள், வெஞ்சினப் படைகொடு—குமுதனும் சேர்ந்தான்.

பொ :—காற்றாடி போல் விரைந்து திரிவனவும், காற்றைக் காட்டிலும் எமனைக் காட்டிலும் கடுமையுங் கொடுமையு முடையனவும், விளங்குகின்ற தெளிந்த அலைகளையுடைய கடல் இயங்கினாற்போல இயங்குவனவும், ஒன்பதுகோடி என்று கணக்கிடப்பட்டனவும் ஆய திறமை மிக்க கடுங் கோபத்தையுடைய, வீரங்கொண்ட வானரப் படையை யுடன் கொண்டு குமுதன் என்பவனும் வந்து சேர்ந்தான்.

கு :—கறங்கு - ஓலைக் காற்றாடி. விரைந்து திரிதலால் வானரப் படைக்கு உவமையாயிற்று. கடல் போன்ற பரப்புடைமையால் வானரப் படையின் இயக்கம் கடலே எழுந்து இயங்குவதுபோலும் என்றவாறு. இல்பொருளுவமை. மறம் - வீரம். போல்வன, கடிய, பெயர்வ, வகுத்த, வெஞ்சின வானரப் படை என்க. கடிய என்பது கடுமையும் கொடுமையும் ஆய இருபொருளும் ஒருங்குணர்த்தியது; இரட்டுற மொழிதல். காற்றைப் போலக் கடுமையும் கூற்றைப் போலக் கொடுமையும் உடைய என்க. (15)

## பதுமுகன் வருகை

**4529.** ஏழி னேழுநூ றுயிர
கோடியென் றிசைந்த
பாழி நன்னெடுந் தோள்கிளர்
படைகொண்டு பரவை
ஊழி பேரினு முலைவில
வுலகினி லுயர்ந்த
பூழி விண்புகப் பதுமுக
னென்பவன் புகுந்தான்.

ஏழின் ஏழு நூறுயிர கோடி என்று இசைந்த
பாழி நல் நெடுந் தோள்கிளர் படைகொண்டு பரவை
ஊழி பேரினும் உலைவு இல உலகினில் உயர்ந்த
பூழி விண்புக—பதுமுகன் என்பவன்—புகுந்தான்.

பொ :—பதுமுகன் என்பவன்,-ஊழியிறுதியில் கடல் பொங்கி வந்தாலும். அதனால் அழிவுறாதனவும், உலகத்தில் மிகவுயர்வுடை

யனவும், பதினான்கு லட்சம் கோடி என்று கணக்கிடப் பெற்றனவும் ஆன வலிய நல்ல நீண்ட தோள்களோடு விளங்குகின்ற வானரப் படையை யுடன் கொண்டு-(அதன் நடையால் எழுந்த) புழுதி விண்ணில் புகுமாறு வந்து சேர்ந்தான்.

கு :—ஏழுடன் சேர்ந்த ஏழு என்க. பதினான்கு என்றவாறு. பாழி - வலிமை. பதுமுகன் படை ஊழியிறுதியிலும் வாழக்கூடிய படை என்பார், 'பரவை ஊழிபேரினும் உலைவில' என்றார். நீரால் அழியும் ஊழிக்காலத்துக் கடல் பொங்கிப் பரந்து உலகை அழிக்கும் என்பது புராண மரபு. அவ்வாறு கடல் அழிக்கும் ஊழியிறுதியிலும் அழியாதது என அப்படையின் பெருமை புலப்படுத்தியவாறு. உலைவில, உயர்ந்த, இசைந்த படை என்க. பூழி விண்புகுதல் கூறிப் படையின் விரைவும் பெருமையும் விளக்கியவாறு. உலைவு-அழிவு (16)

## இடபன் வருகை

**4530.** ஏழு மேழுமென் றுரைக்கின்ற
வுலகங்க ளெவையுந்
தாழுங் காலத்துந் தாழ்விலாத்
தடவரைக் குலங்கள்
சூழுந் தோற்றத்த வலிகொடொள்
ளாயிர கோடிப்
பாழி வெம்புயத் தரியொடு
மிடபனும் படர்ந்தான்.

ஏழும் ஏழும் என்று உரைக்கின்ற உலகங்கள் எவையும்
தாழும் காலத்தும் தாழ்வு இலாத் தடவரைக் குலங்கள்
சூழும் தோற்றத்த, வலிகொள் தொள்ளாயிர கோடிப்
பாழி வெம்புயத்து அரியொடும் –இடபனும்–படர்ந்தான்.

பொ :—இடபன் என்ற வானர வீரனும்,-பதினான்கு என்று சொல்லப்படுகின்ற உலகங்கள் யாவும் அழியும் காலத்தும் அழியா தனவாய பெரிய மலைகளின் கூட்டங்கள் சூழ்ந்தாற் போலும் தோற்றத்தையுடைய, வலிமை கொண்ட பெரிய விரும்பத்தக்க புயத்தை யுடைய, தொள்ளாயிர கோடிக்கணக்கான வானரப் படையோடும் வந்து சேர்ந்தான்.

கு :—உலகங்கள் எவையும் தாழுங் காலத்தும் தாழ்விலாமை வானரப் படைக்குக் கூறுபவர், அதற்கு உவமையாகக் கூறப்பட்ட

தடவரைக் குலங்கட்கு ஏற்றிக் கூறி வானரப் படைக்குப் பெறவைத்தார். உலகங்களழியவும் அழியாத வரைகள் இன்மையின் இல்பொருள் உவமையாகக் கொள்க. 'தாழ்வில' என்ற பாடம் இருப்பின் சிறக்கும். வானரம் ஒவ்வொன்றும் பெருமலை போன்ற தோற்றத்தன என்பார், 'தடவரைக் குலங்கள் சூழுந் தோற்றத்த' என்ருர். வலி கொள் பாழி வெம்புயத்து அரி, தொள்ளாயிரகோடி அரி என இயையும். பாழி - பெருமை. பதினுன்கு உலகங்கள் உண்மை காட்சி யளவைக்கு எட்டாமையின், 'ஏழும் ஏழுமென் றுரைக்கின்றவுலகங்கள்' என உரை அளவையாற் கூறினர். (17)

### தீர்க்கபாதன் முதலியோர் வருகை

**4531.** தீர்க்க பாதனும் வினதனுஞ்
சரபனுந் திரைக்கும்
மாற்க ருங்கடற் குயர்ந்துள
மைம்முகத் தனிக
மார்க்கு மெண்ணருங் கோடிகொண்
டண்டமும் புறமும்
போர்க்கும் பூழியின் மறைதர
முறையினிற் புகுந்தார்.

தீர்க்கபாதனும், வினதனும், சரபனும்–திரைக்கும்
மாற் கருங்கடற்கு உயர்ந்துள மைம்முகத்து அனிகம்
ஆர்க்கும் எண்ணருங் கோடி கொண்டு, அண்டமும் புறமும்,
போர்க்கும் பூழியில் மறைதர,–முறையினின் புகுந்தார்.

பொ :—தீர்க்கபாதன் என்பவனும், வினதன் என்பவனும், சரபன் என்பவனும்,-அலைவீசுகின்ற பெரிய கரிய கடலுக்கும் மேற்பட்டதாகிய, ஆரவாரிக்கின்ற, எண்ணிலடங்காத பலகோடிக்கணக்கான கருமுகக் குரங்குப் படைகளைக் கொண்டு இந்த அண்டமும் அதன்புறமும் (மேலெழுந்து) மூடிக் கொள்ளும் புழுதியில் மறையுமாறு ஒருவர் பின் ஒருவராக வந்து சேர்ந்தார்கள்.

கு :—நீண்ட அடிகளையுடையவன் என்ற காரணம் பற்றித் 'தீர்க்க பாதன்' எனப் பெயர் பெற்ருன். வினதன்,-பணிவுடையன் என்ற காரணம் பற்றி வந்த பெயர். சரபன், சரபம் போன்ற வலிமையுடையவன் என்ற காரணம் பற்றிய பெயர். சரபம், எண்காலும் சிங்க முகமும் கொண்டு பறக்கவும் நடக்கவும் ஆற்றல் பெற்றதாய்ச் சிங்கத்தையும் வெல்லவல்ல ஒருவகை உயிர். மால் – பெருமை.

மைம் முகத்தனிகம் - கருமுகக் குரங்குப் படை. மை - கருமை. குரங்குகளில் கருமுகக் குரங்கு என்பது ஒருவகை; இது மிகப் பெரிய வடிவும், நெடிய வாலும் உடையதாய் வேம்பின் பைந்தழையை விரும்பியுண்ணும் இயல்பினது. மைம்முகத்தனிகம் எனவே அந்த அனிகத்தைக் கொண்டுவந்தோரும் அவ்வினத்தைச் சேர்ந்த வீரரே என்பது புலனும். உயர்ந்துள, ஆர்க்கும் எண்ணருங் கோடி மைம் முகத்தனிகம் கொண்டு புகுந்தார் என இயையும். படை நடந்தமையால் எழுந்த புழுதியின் மிகுதி காட்ட 'அண்டமும் புறமும் போர்க்கும் பூழியில் மறைதர' என்றார், தீர்க்கபாதன், வினதன், சரபன் என்ற முறைப்படியே தீர்க்கபாதன் முதலில் வர அவனுக்குப் பின் வினதனும் அவனுக்குப் பின் சரபனும் வந்தனர் என்க. (18)

இப்பாடலின்பின் 12-ஆம் எண்ணுள்ள ஏட்டில் கீழ்வரும் பாடல்கள் காணப்படுகின்றன.

4531 (a) வட்ட விண்ணையு மண்ணையு மெடுக்குறும் வலிய
கெட்ட ராவினைச் சினத்தொடு பிடுங்குவ நிமிர்வ
வட்ட திக்கையு மறைப்பன வாயிரங் கோடி
துட்ட வெண்குவெம் படையொடுந் தூமிரன் வந்தான்.

4531 (b) ஓங்கு மேருவை வேரொடும் பறித்தொரு கையால்
வாங்கு மெண்ணருங் கோடிமேல் மந்தியின் சேனை
பாங்கு சூழ்தரப் பரவைய தாமெனப் படியில்
ஆங்கு யர்ந்திடு கபாடனு மக்கணத் துற்றான்.

4531 (c) வீரை யேழையுங் கலக்குறு மிடுக்கினர் விரிந்த
பாரை வேரொடும் பறித்திட வேண்டினும் பறிப்பர்
ஈரைஞ் ஞூற்றெழு கோடிவா னரப்படை யீண்டத்
தாரையைத் தந்த ததிமுகன் நொடியினிற் சார்ந்தான்.

## அனுமன் வருகை

**4532.** கையஞ் சாயுத முடையவக்
கடவுளைக் காண
மெய்யஞ் சாதன மாதிரஞ்
சிறிதென விரிந்த
வையஞ் சார்வரத் திரிதரு
வானர சேனை
ஐயஞ் சாயிர கோடிகொண்
டனுமன்வந் தடைந்தான்.

கை அஞ்சு ஆயுதம் உடைய
அக் கடவுளைக் காண
மெய் அஞ்சாதன மாதிரம்
சிறிது என விரிந்த,
வையம் சார்வரத் திரிதரு
வானர சேனை
ஐ-அஞ்சு ஆயிர கோடி கொண்டு—
அனுமன்—வந்து அடைந்தான்.

பொ :—கையின்கண் பஞ்சாயுதங்களையுடைய அக்கடவுளின் அவதாரமாயுள்ள இராமனைக் காண, மெய்நடுக்கங் கொள்ளாதனவும், திசைகள் சிறியன என்று எண்ணுமாறு விரிந்தனவும், நிலப் பரப்பு முழுமையும் பொருந்தத்திரியும் இயல்பினவுமான இருபத்தையாயிர கோடிக்கணக்கான வானர சேனையை யுடன் கொண்டு, அனுமன் வந்து சேர்ந்தான்.

கு :—விரிந்த சேனை, திரிதரு சேனை என இயையும். படை பெருத்தலின் நெடுந் திசையும் சிறிதாகக் குறுகித் தோன்றியது என்பார், மாதிரஞ் சிறிதென விரிந்த சேனை என்ருர். அனுமன் சுக்கிரீவன் பக்கத்தே உள்ளவனுயினும் மற்ற வானர வீரர்கள் தத்தம் படைகளைக் கொணர்ந்து சேர்ப்பதுபோலத் தானும் தன் படைகள் உள்ள இடத்திற்குச் சென்று தன் வானர சேனையோடு வந்தான் எனக் கொள்ளவேண்டும். அனுமன் கடவுளைக் காண வானர சேனை கொண்டு வந்தடைந்தான் என இயையும். (19)

நளன் வருகை

4533. நொய்திற் கூடிய சேனை நூ
றுயிர கோடி
யெய்தத் தேவரு மென்கொலோ
முடிவென்ப தென்ன
மையற் சிந்தையா லந்தகன்
மறுக்குற்று மயங்கத்
தெய்வத் தச்சன்மெய்த் திருநெடுங்
காதலன் சேர்ந்தான்.

நொய்தின் கூடிய சேனை, நூறுயிர கோடி
எய்த, தேவரும், 'என்கொலோ முடிவு?' என்பது என்ன

மையல் சிந்தையால் அந்தகன் மறுக்குற்று மயங்க,—
தெய்வத் தச்சன் மெய்த்திரு நெடுங் காதலன்–சேர்ந்தான்.

பொ:—தேவ தச்சனாகிய விசுவகருமாவின் உண்மையான திருமகனாகிய நளன் என்ற வானர வீரன், தேவர்களும் இப் படையின் முடிந்த எல்லை யாதோ என்பதைச் சிந்திக்கவும், எமனும் இப்படையைக் கண்டதனால் உண்டான மதிமயக்கத்தால் கலக்கங் கொண்டு திகைக்கவும், விரைவில் வந்து கூடிய லட்சம் கோடி யளவான வானர சேனை தன்னோடு வர, வந்து சேர்ந்தான்.

கு:—தெய்வத் தச்சன் என்றது விசுவகருமாவை. அவன் காதலன் என்றது நளன் என்ற வானர வீரனை. காதலன் – மகன். நெடுங் காதலன் என்றது, பேரன்புடைய மகன் என்றவாறு. நொய்து - விரைவு. தெய்வத் தச்சன் காதலன் சேனை நூறாயிர கோடி (தன்னோடு) எய்தச் சேர்ந்தான் என இயையும். 'என்கொலோ முடிவென்பது என்ன' என்பதற்கு இப்படையால் நிகழும் முடிவுதான் யாதோ என்று வியக்க எனப் பொருள் கூறலும் ஆம். சிந்தை மையலால் என மாறிக் கூட்டுக. அந்தகன், உயிர்கட்கு முடிவைச் செய்பவன் என்ற காரணம் பற்றி வந்த பெயர். எமனும் மறுக்குற்று மயங்குமாறு நளன் சேனை அமைந்திருந்தது என அச்சேனையின் பெருமையும் உரனும் புலப்படுத்தியவாறு. (20)

## கும்பன் சங்கன் முதலியோர் வருகை

**4534.** கும்ப னுங்குலச் சங்கனு
முதலினர் குரங்கிற்
றம்பெ ரும்படைத் தலைவர்க
டரவந்த தானை
யிம்பர் நின்றவர்க் கெண்ணரி
திராகவ னாவத்
தம்பெ னுந்துணைக் குரியமற்
றுரைப்பரி தளவே.

கும்பனும் குலச் சங்கனும் முதலினர், குரங்கின்
தம் பெரும்படைத் தலைவர்கள் தர வந்த தானை,
இம்பர் நின்றவர்க்கு எண்ணரிது ; இராகவன் ஆவத்து
அம்பு எனும் துணைக்கு உரிய; மற்று உரைப்பரிது அளவே

பொ :—கும்பனும் சிறந்த சங்கன் என்பவனும் முதலியவராகிய, குரங்கின் பெரிய படைக்குத் தலைவர்கள், கொணரவந்த அவர் தம் சேனை, இவ்வுலகத்தில் உள்ளவர்களுக்குக் கணக்கிட முடியாது; இராமனுடைய தூணியில் நிறைந்துள்ள அம்புகளின் அளவு என்று சொல்லுதற்கு உரியது; என்பதன்றி வேறு அளவு சொல்லுதற்கு அரிதாகும்.

கு :—முதலினராகிய தலைவர் எனவும் குரங்கின் பெரும்படை எனவும் தம் தானை எனவும் இயையும். இம்பர் - இவ்வுலகம். எண்ணுதலாவது, கணக்கிடல். ஆவம் - அம்புப்புட்டில்; அம்பறாத் தூணி. எண்ண முடியாத வலிமையுடைய வானர சேனைக்கு எண்ணமுடியாத இராமன் அம்புகளை உவமை கூறி அளவின்மை புலப்படுத்தியவாறு. 'துறந்தார் பெருமை துணைக் கூறின் வையத் திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று' (குறள்-22) என அளவிட முடியாமைக்கு உவமை கூறியுள்ளதும் நினைக. மற்று என்னும் இடைச் சொல் பிறிது என்னும் பொருளில் வந்தது. மற்று அளவு என இயையும், உரிய என்பது ஒருமைப் பன்மை மயக்கம். (21)

4534 (a) இன்ன ராதியர் படைத்தலை வீரர்க ளெங்கும்
சொன்ன வானரச் சேனையிற் றொகைத்தொகை துவன்றித்
துன்னி னார்களங் கெழுபது வெள்ளத்தின் தொகையாம்
மன்னுஞ் சேனைவந் திறுத்திடக் கிட்கிந்தை வரையின்.

என்ற பாடல் 45-ஆம் பிரதியில் இப்பாடலின்பின் மிகைப் பாடலாகக் காணப்படுகின்றது.

## வானரப் படையின் சிறப்பு 4535-4537

**4535.** தோயி னாழியோ ரேழுநீர் சுவறிவெண் டுகளாஞ்
சாயி னண்டமு மேருவு மொருங்குடன் சாயு
மேயின் மண்டல மெள்ளிட விடமின்றி இரியுங்
காயின் வெங்கனற் கடவுளு மிரவியுங் கரியும்.

தோயின், ஆழி ஓர் ஏழும் நீர் சுவறி வெண் துகளாம்;
சாயின், அண்டமும் மேருவும் ஒருங்குடன் சாயும்;
ஏயின் மண்டலம் எள் இட இடம் இன்றி இரியும்,
காயின் வெங்கனற் கடவுளும் இரவியும் கரியும்.

பொ :—(அங்கு வந்துள்ள வானரப் படை) சென்று மூழ்கினால் கடல்கள் ஏழும் நீர் வறண்டு வெண்மையான புழுதியாய் விடும்· அது ஒரு பக்கம் சாயுமானால் இவ்வுலக உருண்டையும் மேருமலையும்

ஒருசேர அப்பக்கமே சாயும்; அப்படை அணிவகுத்து நின்ருல் இந்தத் தரையிடம் எள் இடுதற்கும் வேறிடமின்றிப் போகும்; அது கோபிக்குமாயின் வெப்பமிக்க அங்கியங் கடவுளும் சூரியனும் வெப்பம் தாங்காமல் கரிந்து போவர்.

கு :—தோய்தல் - மூழ்குதல். எழுகடல் நீரும் இவ்வானரப் படைகள் மூழ்குதற்கும் போதாமையால் நீர்வற்றிப் பின் புழுதி பறக்கும் என்றவாறு. 'வெள்ளமேழு பத்துளதால் வீரன் சேனை இவ்வேலைப் பள்ளம் ஒருகைந் நீரள்ளிக் குடிக்கப் போதும் பான் மையதோ' (சுந்தர-604) எனப் பின் கூறுதலும் காணலாம். இம் மண் அண்டமும் அதில் உள்ள மேருமலையும் மிகப் பெரியன ஆயினும் அப்படை சாயும் வழிச் சாயும் இயல்பினவே அன்றி எதிர்த்து நிற்கும் ஆற்றலுடையன அல்ல என்றவாறு. ஏய்தல் - அணிவகுத்து நிற்றல். மண்டலம் இப்படை நிற்றற்குரியதாகுமேயன்றி எள் ளிடவும் வேறிடம் இல்லாது போகும் என்றபடி. வெப்ப மிக்க நெருப்புக் கடவுளும் சூரியனும் இப்படையின் கோபத் தீக்கு ஆற்ருது கரிந்துபோம் என்றபடி. இச்செய்யுள் அடிகளை எப்படி மாற்றிக் கூறினுலும் ஓசையும் பொருளும் வேறுபடா; பொருளிசை மாரு அடி மறி மாற்று எனலாம்.

(22)

**4536.** எண்ணி ளுன்முக ரெழுபதி
ளுயிரர்க் கியலா
வுண்ணி னண்டங்க ளோர்பிடி
யுண்ணவு முதவா
கண்ணி ளுேக்குறிற் கண்ணுத
லானுக்குங் கதுவா
மண்ணின் மேல்வந்த வானர
சேனையின் வரம்பே.

எண்ணின், நான்முகர் எழுபதினுயிரர்க்கு இயலா;
உண்ணின் அண்டங்கள் ஓர்பிடி உண்ணவும் உதவா;
கண்ணின் நோக்குறின் கண்ணுதலானுக்கும் கதுவா;
மண்ணின்மேல் வந்த வானர சேனையின் வரம்பே.

பொ :—தரையின் மீது திரண்டு வந்த வானரப் படையின் அளவினை எண்ணத் தொடங்கினுல் எழுபதினுயிரம் பிரமர்க்கும் முடி யாது; (இப்படை) உண்ணத் தொடங்கினுல் அண்டங்கள் யாவும் (ஒவ்வொரு வானரமும்) ஒருபிடி யளவு உண்ணுதற்கும் போதா; அப்

படை முழுமையையும் கண்ணால் பார்க்க வேண்டுமாயின் நெற்றிக் கண்ணையுடைய உருத்திரன் பார்வைக்கும் பற்றப் படா.

கு :—இவ்வானரப் படையைப் படைத்த பிரமனைப் போன்று எழுபதினாயிரம் பிரமர்கள் வந்து எண்ணினாலும் எண்ண இயலா தவை என அப்படையின் பெருக்கைப் புலப்படுத்தியவாறு. பிரமர் நான்குமுக முடையவர் ஆதலின் நான்கு முகத்தானும் எண்ணின் இரண்டு லட்சத்து எண்பதினாயிரம் முகங்களாகின்றன என்பதும் நினைப்பிக்க 'நான்முகர் எழுபதினாயிரர்' என்றார். மூன்று கண்ணுடையானுக்கும் அப்படை முழுமையும் பார்க்க இயலாது என்பார், 'கண்ணுதலானுக்கும் கதுவா' என்றார். கதுவுதல், பார்வையால் பற்றப்படுதல். வானர சேனையின் வரம்பு, இயலா, உதவா, கதுவா என இயையும். (23)

**4537.** ஒடிக்கு மேல்வட மேருவை
வேரொடு மொடிக்கு
மிடிக்கு மேனெடு வானக
முகட்டையு மிடிக்கும்
பிடிக்கு மேற்பெருங் காற்றையுங்
கூற்றையும் பிடிக்கும்
குடிக்கு மேற்கட லேழையுங்
குடங்கையின் குடிக்கும்.

ஒடிக்குமேல், வடமேருவை வேரொடும் ஒடிக்கும்;
இடிக்குமேல், நெடு வானக முகட்டையும் இடிக்கும்;
பிடிக்குமேல் பெருங்காற்றையும் கூற்றையும் பிடிக்கும்;
குடிக்குமேல், கடல் ஏழையும் குடங்கையின் குடிக்கும்.

பொ :—(அவ்வானரப்படை) ஒடிக்க வேண்டும் என்று விரும்பினால் வடக்கேயுள்ள மேருமலையை அடியோடும் ஒடித்துவிடும்; இடிக்க வேண்டும் என்று விரும்பினால் பெரிய விண்ணின் மேல் முகட்டையும் இடித்துவிடும்; பிடிக்க வேண்டும் என்று விரும்பினால் பெரிய காற்றையும் எமனையும் கையால் பிடித்துவிடும்; குடிக்கவேண்டும் என்று விரும்பினால் எழுகடலையும் உள்ளங்கையில் மொண்டு குடித்துவிடும்.

கு :—செயற்கருஞ் செயல்களையெல்லாம் செய்யவல்லன வானரப் படை என அதன் ஆற்றலைப் புகழ்ந்துரைத்தவாறு. குடங்கை - உள்ளங்கை. (24)

## படைத் தலைவர் வருகை

**4538.** ஆறு பத்தெழு கோடியாம்
வானரர்க் கதிபர்
கூறு திக்கினுக் கப்புறங்
குப்புறற் குரியார்
மாறில் கொற்றவ னினைத்தன
முடிக்குறும் வலிய
ரூறு மிப்பெருஞ் சேனைகொண்
டெளிதின்வந் துற்றார்.

ஆறு பத்து எழு கோடியாம், வானரர்க்கு அதிபர்,
கூறு திக்கினுக்கு அப்புறம் குப்புறற்கு உரியார்,
மாறு இல் கொற்றவன் நினைத்தன முடிக்குறும் வலியர்,—
ஊறும் இப்பெருஞ் சேனைகொண்டு—எளிதின் வந்துற்றார்.

பொ :—நெடிய வென்று சிறப்பித்துச் சொல்லப்படும் எட்டுத் திக்குகளுக்கும் அப்புறம் குதித்தற்கு ஏற்ற வல்லமையுள்ளவர்களும், ஒப்பில்லாத தம் அரசனாகிய சுக்கிரீவன் நினைத்த செயல்களை (விரைந்து) முடிக்கும் வலிமை பெற்றவர்களும் ஆகிய அறுபத்தேழு கோடி வானரப் படைத் தலைவர்கள், மேலும் மேலும் பெருகுகின்ற இந்தப் பெரிய வானர சேனையை உடன் கொண்டு எளிதில் வந்து சேர்ந்தார்கள்.

கு :—சதவலி முதல் சங்கன் ஈறாக இருபத்தைந்து படைத் தலைவர் பெயரைத் தனித்தனியே கூறியவர், அறுபத்தேழுகோடி படைத் தலைவர் பெயரையும் அவ்வாறே கூற இயலாமையின் இச் செய்யுளில் தொகுத்துக் கூறுகின்றார். திசையில் அடங்காத இடம் இல்லையாயினும் படைத் தலைவர் ஆற்றலைப் புலப்படுத்த வேண்டித் 'திக்கினுக்கு அப்புறம் குப்புறற்குரியார்' என்றார். குப்புறல் - குதித்தல். மாறு - ஒப்பு. கொற்றவன் என்றது சுக்கிரீவனை. அரசன் நினைத்தன முடிக்குறும் ஆற்றலவர்க்கு அவன் சொல்லியன முடித்தல் கூறவேண்டா என்றவாறு. ஊறுதல் - பெருகுதல். திக்கினுக்கு அப்புறம் குப்புறற்கு உரியராதலின் முயற்சியின்றி வந்தார் என்பார், 'எளிதின் வந்துற்றார்' என்றார். (25)

வந்த படைத் தலைவர் சுக்கிரீவனை வணங்குதல்

4539. ஏழு மாகடற் பரப்பினும்
பரப்பென விசைப்பச்
சூழும் வானரப் படையொடவ்
வீரருந் துவன்றி
ஆழி மாபரித் தேரவன்
காதல னடிகள்
வாழி வாழியென் றுரைத்தலர்
தூவினர் வணங்கி.

ஏழு மாகடல் பரப்பினும் பரப்பு என இசைப்பச்
சூழும் வானரப் படையொடு, அவ்வீரரும் துவன்றி,
'ஆழி மாபரித் தேரவன் காதலன் அடிகள்
வாழி! வாழி!' என்று உரைத்து அலர் தூவினர், வணங்கி.

பொ:—அந்த வானரப் படைத் தலைவர்களும்.-ஏழு பெருங் கடல்களின் பரப்பைக் காட்டிலும் மிக்க பரப்பை யுடையது என்று சொல்லுமாறு வந்து சூழ்ந்துள்ள வானரப் படையோடு நெருங்கி வந்து, 'ஒற்றைச் சக்கரத்தையும் பெரிய குதிரைகளையும் உடைய தேரையுடையவனாகிய சூரியனுக்கு மகனான சுக்கிரீவன் திருவடிகள் நன்கு வாழ்க! வாழ்க!' என்று வாழ்த்துரைத்து வணங்கி மலர்களை (அவனடியில்) தூவினார்கள்.

கு:—பரப்பெனச் சூழும் என இயையும். எழுகடற் பரப்பினும் வானரப் படைக் கடலின் பரப்புப் பெரியது என்றவாறு. முன்னைச் செய்யுளில் கூறப்பட்டவராதலின் அவ்வீரர் எனப் பண்டறி சுட்டாகக் கூறினார். துவன்றி - நெருங்கி. ஆழி என்றது தேர்ச் சக்கரத்தை. மாபரி என்றது பச்சைக் குதிரைகள் ஏழினை. ஆழிமா பரித்தேரவன், சூரியன். காதலன் - மகன்; சுக்கிரீவன். தம்பணிவு தோன்ற அடிகள் வாழி வாழி என ஏத்தினர் படைத் தலைவர்; சுக்கிரீவன் வாழி என்பதே கருத்து. அவ்வீரரும் படையொடு துவன்றிக் காதலன் அடி வாழி என்றுரைத்து வணங்கி அலர் தூவினர் என இயையும். (26)

சுக்கிரீவன் சேனையைக் காணுமாறு இராமனை வேண்டுதல்

**4540.** அனைய தாகிய சேனைவந்
திறுத்தலு மருக்கன்
தனைய னெய்தினிற் றயரதன்
புதல்வனைச் சார்ந்தான்
நினையு முன்னம்வந் தடைந்தது
நின்பெருஞ் சேனை
வினையின் கூற்றுவ கண்டரு
ணீயென விளம்ப.

அனையது ஆகிய சேனை வந்து இறுத்தலும் அருக்கன்
தனையன் நொய்தினின் தயரதன் புதல்வனைச் சார்ந்தான்;
'நினையும் முன்னம் வந்து அடைந்தது, நின்பெருஞ் சேனை;
வினையின் கூற்றுவ! கண்டருள் நீ' என விளம்ப.

பொ:—அத்தன்மையதான வானரப் படை வந்து தங்கிய அளவில், சூரியன் மகனாகிய சுக்கிரீவன், தயரதன் மகனாகிய இராமனை விரைவாக அடைந்து, 'இருவினைகட்கும் எமன் போன்றவனே! நின் பெரிய சேனை நினைப்பதற்கு முன்னே (மிகவிரைந்து) வந்து சேர்ந்து விட்டது; நீ அதனைக் காண்பாயாக' என்று சொல்ல.

கு:—அருக்கன் தனையன் - சூரியன் மகனாகிய சுக்கிரீவன். மிக விரைவாக வந்தது என்பான் நினையு முன்னம் வந்தடைந்தது என்றான். சுக்கிரீவன் தன் சேனையை 'நின் பெருஞ் சேனை' என இராமனுக்குரியதாகக் கூறியது நட்புரிமை தோன்றற்கு என்க. "உன்னோடு உற்றவ ரெனக்கு முற்றார்; உன் கிளை எனது" (நட்புக் கோட் - 27) என இராமன் கூறிச் சுக்கிரீவனோடு நட்புக் கொண்டமை நினைக. இராமனது கடவுள் நிலையை நினைத்து 'வினையின் கூற்றுவ' என விளித்தான். இறைவன் தான் வினையினீங்கி விளங்கிய அறிவனாக இருந்து, தன்னைச் சார்ந்தவர்தம் இருவினையையும் ஈடழிப்பவன் ஆதலின், வினையின் கூற்றுவன் என்றல் பொருந்துவதே ஆம். வினையென்றது இருவினையையும் உணர்த்தியது; நல்வினையும் பிறவிக்கு வித்தாகலின் அதனையும் சேர்த்துப் பொதுவாக 'வினையின்' என்றார். சார்ந்தான், முற்றெச்சம். (27)

## வானரப் படை காண இராமன் மலைச் சிகரத்தை யடைதல்

**4541.** ஐய னும்முவந் தகமென
முகமலர்ந் தருளித்
தைய லாள்வரக் கண்டன
ஞமெனத் தளிர்ப்பா
னெய்தி ஞனங்கொர் நெடுவரைச்
சிகரத்தி னிருக்கை
வெய்ய வன்மகன் பெயர்த்துமச்
சேனையின் மீண்டான்.

ஐயனும் உவந்து, அகம் என முகம் மலர்ந்தருளி,
தையலாள் வரக் கண்டனன் ஆம் எனத் தளிர்ப்பான்
எய்தினன் அங்கு ஓர் நெடுவரைச் சிகரத்தின் இருக்கை
வெய்யவன் மகன் பெயர்த்தும் அச்சேனையின் மீண்டான்.

பொ :—இராமனும் மகிழ்ந்து தன் மனம்போல முகமும் மலரப் பெற்றுச் சீதை தன்முன் வரக் கண்டவன்போலத் தளர்ச்சி நீங்கிப் பூரித்தவனாய், அங்குள்ள ஒரு பெரிய மலையின் உச்சி இடத்தை அடைந்தான்; சூரியன் மகனாகிய சுக்கிரீவன் மீண்டும் அச்சேனை யிடத்துச் சென்றான்.

கு :—வானரப் படையின் வருகை சீதையைக் காண்பதற்குக் காரணமாயமையும் என்ற உறுதியால் இராமன் அவ்வானர சேனை வரக் கண்டு, சீதைவரக் கண்டவன் போலப் பூரிக்கலானான். இதனால் இராமன் வானரப் படைவரக்கண்ட மகிழ்ச்சி மிகுதி புலப்படுத்திய வாறு. ஐயன், தையலாள் என்பன இராமனையும் சீதையையும் உணர்த்தி நின்றன. தளிர்த்தல் - பூரித்தல். தளிர்ப்பானாய்ச் சிகரத்தி னிருக்கை எய்தினன் என இயையும். படை முழுமையும் அமையப் பார்த்தற்கு மலைச் சிகரமே ஏற்ற இடமாதல் பற்றி அங்கு அடைந் தான். வெய்யவன், வெப்பமுடைமை பற்றிச் சூரியனுக்குக் காரணப் பெயராயிற்று. சுக்கிரீவன் மீண்டும் சேனையை அடைந்தது, இராமன் காணுங்கால் அச்சேனையை இயங்கச் செய்து அவ்விராமனுக்குப் பணிவு தெரிவிக்கச் செய்யவேண்டியேயாம். (28)

## சேனை இயங்குமாறு ஒழுங்குபடுத்திச் சுக்கிரீவன் படைத் தலைவரோடு மீளுதல்

**4542.** அஞ்சொ டையிரண்டி யோசனை
யகலத்த தாகிச்
செஞ்செ வேவட திசைநின்று
தென்திசை செல்ல
எஞ்ச லில்பெருஞ் சேனையை
யெழுகென வேவி
வெஞ்சி னப்படை வீரரை
யுடன்கொண்டு மீண்டான்.

அஞ்சொடு ஐ-இரண்டு யோசனை அகலத்தது ஆகி,
செஞ்செவே வடதிசை நின்று தென்திசை செல்ல,
எஞ்சல்இல் பெருஞ்சேனையை 'எழுக' என ஏவி,
வெஞ்சினப் படைவீரரை உடன் கொண்டு மீண்டான்.

பொ :—(சுக்கிரீவன்) தன் குறைவில்லாத பெரிய சேனையை - நோக்கி - '(அணிவகுப்பு) பதினைந்து யோசனை அகலமுடையதாய் நின்று நேரே வடதிசையிலிருந்து தென் திசைக்குச் செல்ல எழுவதாக' என்று கட்டளை யிட்டுவிட்டுக் கொடிய கோபமுடைய படை வீரரை யுடன் அழைத்துக் கொண்டு இராமனிடம் திரும்பினன்.

கு :—போர்வீரன் அணிவகுத்துக் கொண்டு போக்கு வரவு புரிந்து பெருந் தலைவர்கட்குப் பணிவு புலப்படுத்து முறையை இன்றும் காணலாம். எழுபது வெள்ளம் வானரப் படையும் பதினைந்து யோசனை அகலமுடையதாக அணிவகுத்து நின்று, இராமன் காணுமாறு வடதிசையிலிருந்து தெற்கு நோக்கிச் சென்று அவ்விராமனுக்குப் பணிவைப் புலப்படுத்த எழுதல் வேண்டும் என்பது சுக்கிரீவன் ஆணை. இராமனுக்குப் பணிவு புலப்படுத்தச் செய்யும் இப்படையியக்கத்தில் பின் தென்திசை நோக்கிச் சென்று சீதையைக் காணப்போகும் குறிப்பும் தோன்றவேண்டும் என்றே வடதிசை நின்று தென் திசை செல்ல ஏவினன் சுக்கிரீவன் என்னலாம். செஞ்செவே - நேராக. சுக்கிரீவன், சேனையை நோக்கி, அகலத்ததாகி நின்று செல்ல எழுக என ஏவி, மீண்டான் என இயையும். (29)

## சுக்கிரீவன் இராமனுக்கு வானரப் படையைக் காட்டுதல்

**4543.** மீண்டி ராமனே யடைந்திகல்
வென்றிவேல் வீர
காண்டி நீயென வரன்முறை
தெரிவுறக் காட்டி
யாண்டி ருந்தன ஞர்த்துருத்
தெழுந்ததை யன்றே
யீண்டு சேனைபா லெறிகட
னெறிபடர்ந் தென்ன.

**மீண்டு இராமனே அடைந்து 'இகல் வென்றிவேல் வீர!
காண்டி நீ' என வரன்முறை தெரிவுறக் காட்டி,
ஆண்டு இருந்தனன்; ஆர்த்து உருத்து எழுந்ததை அன்றே,
ஈண்டு சேனை, பால் எறிகடல் நெறி படர்ந்தென்ன.**

பொ.—அவ்வாறு மீண்டு, இராமனே அடைந்து, 'மாறுபாட்டை யுடைய வெற்றி வேல் தாங்கிய வீர! நீ காண்பாயாக' எனப் படையை வரன்முறையாக அவன் தெளியும்படி காட்டிக் கொண்டு (சுக்கிரீவன்) அங்கு (இராமனருகில்) இருந்தான்; திரண்டுள்ள அச் சேனை, அலைவீசுகின்ற பாற்கடல் எழுந்து வழி நடந்தாற்போல ஆரவாரித்துச் சினங் கொண்டு எழுந்தது.

கு:—இகல்வீர, வேல்வீர என இயையும், இகல் - மாறுபாடு. இராவணன் மேல் வைத்த பகைமை புலப்பட 'இகல்வீர' எனவும் அப்பகை தொலைத்தற்கு ஏற்ற கருவியுடைமை புலப்பட 'வென்றி வேல் வீர' எனவும் விளித்தான். வேல் கூறவே இனம்பற்றி வில் முதலிய போர்க் கருவிகள் உடைமையும் பெறப்படும். பெரும் படையில் ஒவ்வொரு பகுதியையும் சுட்டிக்காட்டி அது எங்கிருந்து வந்தது? அதனுற்றல் எத்தகையது? என்பன கூறித் தெளிவு படுத்திக் காட்டினமை தோன்ற 'வரன்முறை தெரிவுறக் காட்டி' என்ருர். சுக்கிரீவன் ஆணையை யேற்ற வானரப் படை மகிழ்ச்சி யால் ஆரவாரித்தது என்றும் வீரர் இயல்பு தோன்ற கோபித்தது என்றும் கொள்க. உருத்தல் - கோபித்தல். வீரர் காரணமின்றியும் சினக் குறிப்புடையராயிருப்பர் என்பது உளங்கொளல் வேண்டும். வெண்ணிறமுள்ள வானரப் படையின் இயக்கத்திற்குத்தக்க உவமை யாக வேண்டிப் பாற்கடல் நெறிபடர்தல் கூறினர். எறிபாற்கடல் என இயையும். எறிதல் - அலைவீசுதல். நெறிபடர்தலாவது வழி நடத்தல்; இயங்குதல். திருப்பாற்கடல் எழுந்து நடந்து செல்வது போல வானர சேனை புறப்பட்டு நடந்தது என்றவாறு. பாற்கடல்

நெறிபடர்ந்தென்ன சேனை ஆர்த்துருத்தெழுந்தது என்க. ஈண்டு சேனை - திரண்டுள்ள வானரப்படை. சேனையின் ஆர்ப்புக்குக் கடல், ஒலியால் உவமையாகும். பால் எறிகடல் நெறிபடர்ந்தென்ன என்பது இல்பொருளுவமை. (30)

## வானரப் படையின் இயக்கத்தால் புழுதி எழுதல்

**4544.** எட்டுத் திக்கையு மிருநிலப்
பரப்பையு மிமையோர்
வட்ட விண்ணையு மறிகட
லனைத்தையு மறைப்பத்
தொட்டு மேலெழுந் தோங்கிய
தூளியிற் பூழி
யிட்டுச் செம்மிய நிறைகுட
மொத்ததிவ் வண்டம்.

எட்டுத் திக்கையும் இருநிலப் பரப்பையும், இமையோர்
வட்ட விண்ணையும், மறிகடல் அனைத்தையும், மறைப்பத்
தொட்டு மேல் எழுந்து ஓங்கிய தூளியின் பூழி,
இட்டுச் செம்மிய நிறைகுடம் ஒத்தது இவ் அண்டம்.

பொ :—(படை செல்வதால்) எட்டுத் திசைகளையும், பெரிய நிலப் பரப்பையும், தேவர்கள் வாழும் வட்ட வடிவமுள்ள விண்ணுலகத்தை யும், அலைகள் மடங்கி வீசுகின்ற ஏழு கடல்களையும் மறைப்பதாய்த் தழுவிப் படிந்து மேல் எழுந்து உயர்ந்து சென்ற தூளியினால் இந்த அண்டமானது, புழுதியை இட்டு மூடிய நிறை குடத்தை ஒத்து விளங் கிற்று.

கு :—நிலமும் கடலும் விண்ணும் தோன்றாது புழுதியே தோன்று தலின் இந்த அண்டமாகிய உண்டை புழுதியடைத்த குடம் போன்றது என்றவாறு. வானரப் படையின் இயக்கத்தால் அத்தகைய புழுதி நிறைந்தது என்றமையால் அப்படையின் பெருமை புலப்படுத்தியவாறு. தொடுதல் என்றது தழுவிப் படிதலை. தூளி - புழுதி. செம்முதல் - மூடுதல்; நிறைத்தலும் ஆம். இவ் வண்டம் தூளியின், பூழி அட்டிச் செம்மிய நிறை குடம் ஒத்தது என இயையும். (31)

## படையின் அளவின்மை

**4545.** அத்தி யொப்பெனி னன்னவை
யுணர்ந்தவ ருளரால்
வித்த கர்க்கினி யுரைக்கலா
முவமைவே றியாதோ
பத்தி ரட்டிநன் பகலிர
வொருவலர் பார்ப்பா
ரெத்தி றத்தினு நடுவுகண்
டிலர்முடி வெவனே.

அத்தி ஒப்பு எனின் அன்னவை உணர்ந்தவர் உளரால்;
வித்தகர்க்கு இனி உரைக்கலாம் உவமை வேறு யாதோ?
பத்து இரட்டி நன்பகல் இரவு ஒருவலர் பார்ப்பார்,
எத் திறத்தினும் நடுவு கண்டிலர் முடிவு எவனே?

பொ:—இவ்வானரப் படைக்குக் கடல் ஒப்பாகும் என்றால், அக்கடலை இவ்வளவினது எனக் கண்டு அறிந்தவர்கள் இருக்கின்றார்கள்; (இப்படையினளவைக் கண்டறிந்தவர் எவருமிலர்) எனவே இனி அறிவுடையரால் இப்படைக்கு எடுத்துக்கூறத்தகும் உவமை வேறு யாது உளது? (யாதுமில்லை) இருபதுநாள் நல்ல பகலிலும் இரவிலும் இடைவிடாமல் பார்ப்பவராகிய இராம இலக்குவரும் எவ்வகையானும் அப்படையின் நடுவையும் காணாதவராயினர், என்றால் அதன் முடிவு காண்பது எப்படி? (இயலாது என்றவாறு)

கு:—அத்தி - கடல்; வடசொற்றிரிபு. எவராலும் முடிவு காண முடியாத வானரப் படைக்கு முடிவு காணத்தக்க கடலை உவமை கூறுதல் பொருந்தாது என உவமைக்கு ஒரு தாழ்வு தோன்றக் கூறினமையின் இது நிந்தை யுவமை எனப்படும். வித்தகர் என்றது புலவரை. வித்தகர்க்கு என்பதில் நான்கள் உருபு வினைமுதற் பொருளில் வந்துளது. உவமை வேறியாதோ என்ற வினா வேறு உவமை இன்மையை உணர்த்தியது. இராம இலக்குவர் இருபது நாள் காறும் அவ்வானரப் படையைப் பார்த்தார்கள் என்பதை இங்குக் குறிப்பிட்டவாறு. பார்ப்பார் என்றது வினையாலணையும் பெயர்; இராம இலக்குவரை யுணர்த்தியது. திறமை மிக்க இராம இலக்குவரே இருபதுநாள் வரையில் இடைவிடாது பார்த்தும் அப்படையின் நடுவையும் கண்டிலர் என்றால் அதன் முடிவெல்லையைக் காண முடியுமோ என அப்படையின் பெருக்கைப் புலப்படுத்திய வாறு. (32)

படையைப் பற்றி இராம இலக்குவர் உரையாடல் 4446-4450

**4546.** விண்ணிற் றீம்புன லுலகத்தி
 ஞகரின் வெற்றி
யெண்ணிற் ருனல தொப்பில
 னென நின்ற விராமன்
கண்ணிற் சிந்தையிற் கல்வியின்
 ஞானத்திற் கருதி
யண்ணற் றம்பியை நோக்கின
 னுரைசெய்வ தானுன்.

விண்ணின், தீம்புனல் உலகத்தின், நாகரின், வெற்றி
எண்ணின், தான் அலது ஒப்பு இலன் என நின்ற இராமன்,
கண்ணின், சிந்தையின், கல்வியின், ஞானத்தின், கருதி,
அண்ணல் தம்பியை நோக்கினன் உரை செய்வதானுன்.

பொ :—வெற்றி கொள்ளும் திறமை பற்றி ஆராய்ந்தால், தனக்குத் தானே உவமை யாவதன்றி-விண்ணுலகத்திலும் இனிய கடல் சூழ்ந்த நிலவுலகத்திலும், பாதலமாகிய நாகருலகத்திலும் வேறு ஒப்பாவாரை யில்லாதவன் என்று சொல்லும்படி நின்ற இராமன், தன் கண்ணினுலும் மனத்தினுலும் கல்வியாலாய அறிவாலும் தன் இயல்பாய அறிவாலும் (அப்படையின் பரப்பைப்பற்றி) நன்கு ஆராய்ந்து பெருமையுடைய தன் தம்பியைப் பார்த்துச் சொல்லுவானுனுன்.

கு :—தீம்புனல் என்புழித் தீம் என்றது புனலுக்கு இயற்கை யடையாகும். "வேங்கடங்குமரி தீம்புனற் பௌவமென் றிந்நான் கெல்லை தமிழது வழக்கே" (சிலப் - வேனிற்கதை -1 மேற்கோள்) எனச் சிகண்டியாரும் கூறியிருத்தல் காணலாம். உவர்க்கடல் நீர் இனிய நீராகாமை தெளிவு. புனல் என்றது இலக்கணையால் கடலை யுணர்த்தியது. நாகர் என்பது தானியாகுபெயராய் அவர் வாழ் கின்ற பாதலத்தை யுணர்த்தியது. வெற்றி கொள்வதில் இராமன் மூவுலகத்தும் தன்னிகர் அற்றவன் என்றவாறு. இத்தகு திறமை யுள்ள இராமன், வானரப் படையின் பெருக்கைக் கண்ணுற்கண்டு, மனத்தால் சிந்தித்துச் செயற்கை யறிவாலும் இயற்கையறிவாலும் ஆராய்ந்து தம்பிக்குச் சொல்லுவானுனுன் என்றமையால் அப்படை யின் அளவின்மை புலப்படும். கல்வி என்றது கல்வியாலாய செயற்கையறிவை; இதனை அபரஞானம் என்பர். (33)

**4547.** அடல்கொண் டோங்கிய சேனைக்கு
நாமுநம் மறிவா
லுடல்கண் டோமினி முடியுறக்
காணுமா ளறுதோ
மடல்கொண் டோங்கிய வலங்கலாய்
மண்ணிடை மாக்கள்
கடல்கண் டோமென்பர் யாவரே
முடிவுறக் கண்டார்.

'அடல் கொண்டு ஓங்கிய சேனைக்கு நாமும் நம் அறிவால் உடல் கண்டோம்: இனி முடியுறக் காணுமாறு உளதோ?– மடல் கொண்டு ஓங்கிய அலங்கலாய்!–மண்ணிடை மாக்கள், "கடல் கண்டோம்" என்பர், யாவரே முடிவுறக் கண்டார்?

பொ :—இதழ்களைக் கொண்டு சிறந்துள்ள மலர்மாலை யணிந்தவனே! நாமும் நம்முடைய அறிவினால் வலிமை கொண்டு சிறந்துள்ள இவ்வானரப் படையின் உடலை (நடுவிடத்தை)க் கண்டோம்; இனி அப்படையின் தலை எல்லையைக் காணும் வகைதான் உண்டோ? (இல்லை) இவ்வுலகத்தில் உள்ள மக்கள் 'கடலைக் கண்டோம்' என்று சொல்லுவார்கள்; ஆயின் அக்கடலை முடிவுற (முழுதும்) கண்டவர் யாருளர்? (எவருமிலர்; எனவே நாம் வானரப் படையை முடியுறக் காணாததாலுங் குறையில்லை என்றவாறு.)

கு :—உடல் என்றது இங்குப் படையின் நடுவிடத்தை. 'நடுவு கண்டிலர்' என மேற் கூறியதும் உடல் கண்டோம் என இங்குக் கூறியதும் முரணுவன அல்ல; இருபது நாள் வரையில் நடுவு காணாதவர் பின்பு அந்நடுவு கண்டு இவ்வாறு கூறுதல் பொருந்தும் ஆதலின் என்க. மண் என்றது நிலவுலகத்தை. மாக்கள் என்றது மக்கள் என்னும் பொருளது. கடலை முழுதும் காணாத மக்கள் 'கடல் கண்டோம்' என்பது போலவே படையை முடியுறக் காணாத நாமும் அதைக் கண்டோம் என்று கூறலாம் என்று மன நிறைவை வருவித்துக் கொண்டவாறு. இது வேற்றுப் பொருள் வைப்பு என்னும் அணியின்பாற்படும். (34)

**4548.** ஈசன் மேனியை யீரைந்து
திசைகளை யீண்டிவ்
வாசில் சேனையை யைம்பெரும்
பூதத்தை யறிவைப்

பேசும் பேச்சினைச் சமயங்கள்
பிணக்குறும் பிணக்கை
வாச மாலையா யாவரே
முடிவெண்ண வல்லார்.

'ஈசன் மேனியை ஈரைந்து திசைகளை, ஈண்டு இவ்
ஆசு இல் சேனையை, ஐம்பெரும் பூதத்தை அறிவை,
பேசும் பேச்சினை, சமயங்கள் பிணக்குறும் பிணக்கை,–
வாசமாலையாய்!–யாவரே முடிவு எண்ண வல்லார்?

பொ:—வாசனை பொருந்திய மாலையணிந்த இலக்குவ! கடவுளின் திருமேனியையும், பத்துத் திசைகளையும், ஐம்பெரும் பூதங்களையும், உலகவரின் அறிவையும், அவர் பேசும் பேச்சையும் சமயங்கள் ஒன்றோடொன்று மாறுபடும் மாறுபாட்டையும், இங்குள்ள இந்தக் குற்றமற்ற சேனையையும் இவ்வளவின என கணக்கிட்டு முடிவு எண்ணிச் சொல்லவல்லவர் யாருளர்? (யாருமிலர்.)

கு:—இச்சேனையின் அளவைக் கணக்கிட முடியாது எனச் சொல்ல வந்த இராமன், அச்சேனையோடொப்ப முடிவெண்ண முடியாத ஈசன் மேனி முதலிய பல பொருள்களையும் கூட்டிக் கூறினமையால் இது ஒப்புமைக் கூட்டவணி ஆகும். ஈசன் மேனி முதலியன முடிவெண்ண முடியாமை வெளிப்படை. பிணக்கு - மாறுபாடு. 'மதிவிகற்பால் பிணங்குஞ் சமயம்' (திருவிருத்தம்) என நம்மாழ்வார் கூறியுள்ளதும் நினைக. இராமன் கூறக் கருதியது சேனையின் முடிவெண்ண முடியாமையே யாதலின் அதனை இறுதியில் சேர்த்து உரை வரைய வேண்டிற்று. (35)

**4549.** இன்ன சேனையை முடிவுற
விருந்திவ ணோக்கிப்
பின்னைக் காரியம் புரிதுமே
னாள்பல பெயரு
முன்னிச் செய்கைமே லொருப்பட
லுறுவதே யுறுதி
யென்ன வீரனைக் கைதொழு
திளையவ னியம்பும்.

'இன்ன சேனையை முடிவுற இருந்து இவண் நோக்கி,
பின்னைக் காரியம் புரிதுமேல், நாள்பல பெயரும்;

உன்னிச் செய்கைமேல் ஒருப்படல் உறுவதே உறுதி'
என்ன—வீரனைக் கைதொழுது இளையவன் இயம்பும்.

பொ:—'இத்தன்மையுடைய இவ்வானர சேனையை இங்கு இருந்து முழுதும் பார்த்துவிட்டுப் பின்பு நம் மேற்கொண்ட செயலைச் செய்வோமாயின், பல நாட்கள் கழிந்துவிடும்; இந்நிலை நினைந்து செய்ய வேண்டிய செயல்மேல் மனம் ஒருமித்தலைப் பொருந்துவதே நன்மை தருவதாகும்' என்று கூற, வீரனாகிய இராமனை வணங்கி இளையவனாகிய இலக்குவன் சொல்வான்.

கு:—சேனையின் அளவை முழுதும் அறிந்த பின்னர்தான் நம் காரியத்தைச் செய்ய வேண்டும் என்றால் அதற்குள் பலநாள் கழியும் என்றதால் அச்சேனையின் மிகுதி புலப்படுத்தியவாறு. இந்நிலை உன்னி என ஒரு சொல் வருவிக்க. சேனையைக் கணக்கிடும் வேலையை விடுத்து அச்சேனையைக் கொண்டு செய்யவேண்டிய செயலில் கருத்தைச் செலுத்த வேண்டும் என்றவாறு. என்ன இளையவன் இயம்பும் என்று இயைத்து இச் செய்யுளை இலக்குவன் கூற்றாக்குவாருமுண்டு. (36)

4550. யாவ தெவ்வுல கத்தினி
னீங்கிவர்க் கியலா
தாவ தாகுவ தரியதொன்
றுளதென லாமே
தேவ தேவியைத் தேடுவ
தென்பது சிறிதால்
பாவந் தோற்றது தருமமே
வென்றதிப் படையால்.

யாவது எவ்வுலகத்தினின் ஈங்கு இவர்க்கு இயலாது
ஆவது; ஆகுவது அரியது ஒன்று உளது எனல் ஆமே?
தேவ!—தேவியைத் தேடுவது என்பது சிறிதால்;
பாவம் தோற்றது, தருமமே வென்றது, இப்படையால்.

பொ:—தேவனே! இங்குள்ள இவ்வானர வீரர்க்கு எந்த உலகத்தில் எந்தச் செயல் இயலாததாக இருப்பது? (இவர்க்குச்) செயற்கரிய செயல் ஒன்று உண்டு என்று சொல்லலாமே? (ஆகாது) ஆதலின், தேவியைத் தேடுவதாகிய செயல் (இவர் தகுதிக்கு) மிகச் சிறியதாகும்; (இப்படையின் துணையால்) பாவம் தோற்றுவிட்டது; தருமமே வெற்றி பெற்றது.

கு :—பாவம் செய்த இராவணன் தோற்பதற்கும் தருமத்தை மேற்கொண்ட இராமன் வெல்லுதற்கும் இவ்வானரப்படை உதவி செய்யும் என்பான், பாவம் தோற்றது; தருமமே வென்றது; எனத் துணிவு பற்றி இறந்த காலத்தாற் கூறினான். பாவம், தருமம் என்ற பண்புப் பெயர்கள் பண்பிகளை யுணர்த்தின. 'ஆகுவதரிய தொன்றுளதென லாமே' என எதிர்மறை முகத்தானும் கூறியது அவர் ஆற்றலைப் புலப்படுத்தற்கு என்க. "இடந்தா யுலகை மலையோடு மெடுத்தாய் விசும்பை யிவை சுமக்கும், படந்தாழரவை யொருகரத் தாற் பறித்தாயெனினும் பயனின்றால்" (சுந்தர - உருக்காட்டுப்-109) என்பதும் "பாழி நெடுந்தோள் வீரா நின் பெருமைக் கேற்பப் பகை யிலங்கை, ஏழு கடற்கு மப்புறத்த தாகாதிருந்த திழிவன்றோ?" (சுந்தர - உருக் - 110) என்பதும், இங்கு ஒப்புநோக்கத்தகும். (37)

**4551.** தரங்க நீரெழுந் தாமரை
　　நான்முகன் றந்த
வரங்கொள் பேருல கத்தினின்
　　மற்றைமன் னுயிர்க
ளுரங்கொண் மால்வரை யுயிர்படைத்
　　தெழுந்தன வொக்கும்
குரங்கின் மாப்படைக் குறையிடப்
　　படைத்தன கொல்லாம்.

தரங்கநீர் எழும் தாமரை நான்முகன் தந்த
வரம் கொள் பேர் உலகத்தினில், மற்றை மன்னுயிர்கள்,
உரம் கொள் மால்வரை உயிர் படைத்து எழுந்தன ஒக்கும்
குரங்கின் மாப்படைக்கு, உறை இடப் படைத்தன கொல்லாம்?

பொ :—அலைகளையுடைய நீரில் முளைக்கும் இயல்புள்ள தாமரை மலரில் வாழும் பிரமன் படைத்த மேன்மை பொருந்திய இப்பெரிய உலகத்தில் உள்ள மற்றைய நிலைபேறுடைய உயிர் வகைகள் யாவும்,-வலிமை கொண்ட பெரிய மலைகள் எல்லாம் உயிர் பெற்று எழுந்தாற்போன்று (பெரிய உருவினையுடைய) குரங்கின் பெரிய சேனைக்கு உறையிட்டு எண்ணவே படைக்கப் பட்டனவோ ?

கு :—வானரங்கள் அல்லாத பிறவுயிர்கள் அனைத்தும் என்பான், 'மற்றை மன்னுயிர்கள்' என்றான். வரம்-மேன்மை. நான்முகன் தந்த மற்றை மன்னுயிர்கள் என இயையும். தந்த - படைத்த. மற்றை மன்னுயிர்கள், குரங்கின் மாப்படைக்கு உறையிடப் படைத்தன

கொல்? என இயையும். கொல் ஐயப் பொருளில் வந்தது. ஆம் அசைநிலை. படைத்தன என்றது செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது; படைக்கப் பட்டன என்க. உறையிடுதலாவது, பேரள வுள்ள பொருள்களைக் கணக்கிடும்போது ஒவ்வொரு பெருந் தொகைக்கு ஒன்றாக ஏதேனும் ஒரு பொருளை இடுவது. வானரப் படையினை எண்ணுங்கால் ஒவ்வொரு பெருந் தொகைக்கும் ஒருயிரை உறையாக இட்டு எண்ணினால் இவ்வுலகத்துள்ள பிற உயிர் வகைகள் எல்லாம் அவ்வாறு உறையிடுதற்கே போதுமானது என அவ்வானர சேனையின் மிகுதியுணர்த்தியவாறு. பிரமன் படைத்த உயிர்களில் வானரங்களே மிகுதி என்றபடி. ஒவ்வொரு குரங்கும் மலைபோன்ற பெருவடிவினது என்பான், மால்வரை யுயிர் படைத் தெழுந்தன வொக்கும் குரங்கின் மாப்படை என்றான். இல்பொரு ளுவமை. "வயிரத் திண்கொள் மால்வரை மயிர்ப்புறத்தனவெனத் திரண்ட-எண்கினீட்டம்" (7) என முன் கூறியுள்ளதும் நினைக்க.

(38)

4552. ஈண்டு தாழ்க்கின்ற தென்னினி
யெண்டிசை மருங்கும்
தேண்டு வார்களை வல்லையிற்
செலுத்துவ தல்லால்
நீண்ட நூல்வலா யென்றன
னிளையவ னெடியோன்
பூண்ட தேரவன் காதலற்
கொருமொழி புகலும்.

'ஈண்டு தாழ்க்கின்றது என், இனி-எண் திசை மருங்கும், தேண்டுவார்களை வல்லையில் செலுத்துவது அல்லால்? நீண்ட நூல்வலாய்!' என்றனன் இளையவன்; நெடியோன், பூண்ட தேரவன் காதலற்கு, ஒருமொழி புகலும்.

பொ:—பெரிய நூல்களில் வல்லவனே! எட்டுத்திசையிலும் (சீதையைத்) தேடுதற்கு உரியவர்களை விரைவாகச் செலுத்துவதல் லாமல் இவ்விடத்து இனியும் காலம் தாழ்த்துவது ஏன்? என்று கூறினான் இளையவனாகிய இலக்குவன்; (அதுகேட்ட) இராமன், (பச்சைக் குதிரைகள் ஏழும்) பூட்டப்பெற்ற தேரையுடைய சூரியன் மகனாகிய சுக்கிரீவனுக்கு ஒரு வார்த்தை சொல்லலானான்.

கு :—நூல்வலாய்! செலுத்துவதல்லால் ஈண்டு இனித்தாழ்க்கின்றது என் என இயையும். இது காறும் வானரப்படை வாராமையால் தாழ்த்தது பொருந்தும்; அது வந்த பின்னும் தாழ்க்கின்றது என்? என்பான், 'தாழ்க்கின்ற தென்னினி' என்றான், நெடியோன் என்றது இராமனை. ஏனைத் தேர்கள் போலாது சூரியன் தேர் எப்பொழுதும் பூட்டப்பட்டு இயங்கும் தேர் ஆதலின், சூரியனைப் 'பூண்ட தேரவன்' எனச் சிறப்பித்தார். "காய் சினத்த கதிர்ச் செல்வன்; தேர்பூண்ட மாபோல, வைகறுறு மசைவின்றி" (பட்டினப் - 122-124) என்றதுங்காண்க. வல்லை-விரைவு. நீண்ட நூல் வலாய்! என்றது, செய்யவேண்டியவற்றைத் தப்பாது விரைந்து செய்தற்கேற்ற தகுதியுடைமை தோன்ற விளித்தது. "கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன் குத்தொக்க சீர்த்தவிடத்து" (குறள் - 490) என்றது நினைப்பித்தவாறு. (39)

தானைகாண் படலம் முற்றிற்று.

# 12. நாட விட்ட படலம்

இராமன் கட்டளைப்படி சுக்கிரீவன் வானர வீரர்களிடம் சீதையைத் தேடுமாறு சொல்லி எல்லாத் திசைகளிலும் விடுத்த செய்தியைக் கூறும் பகுதியாதலின் இது நாடவிட்ட படலம் என்று பெயர் பெறுகின்றது. இது, சில சுவடிகளில் "நாடவிடு படலம்" என்ற பெயருடன் காணப்படுகின்றது.

## படலப் பொருள் சுருக்கம்

சுக்கிரீவன், இராமனுக்குத் தன் எழுபது வெள்ளச் சேனையின் அளவைக் காட்டி அச்சேனைக்கெல்லாம் தலைவன் நீலன் என்று கூறி அவனை அறிமுகப்படுத்துகின்றான். இராமன், வானர சேனையின் பெருமை கண்டு மகிழ்ந்து 'இனிச் சீதையைத் தேடுவதில் சிந்தையைச் செலுத்துக' என்று கூறுகின்றான். சுக்கிரீவன் அவ்வாறே சிந்தை செய்து தென்திசைக்கண் இராவணன் நகரம் இருப்பதாக உய்த்துணர்ந்து அத்திசையில் செல்லவல்லவராக அனுமன், அங்கதன், சாம்பவன் முதலிய பெரிய வீரர்களைத் தேர்ந்தெடுத்து இரண்டு வெள்ளம் சேனையோடு செல்லுமாறு அவர்கட்குக் கட்டளையிடுகின்றான். இவ்வாறே மேற்குத் திசைக்குச் சுடேணனனையும் வடதிசைக்குச் சதவலியையும் கீழ்த்திசைக்கு வினதனையும் இரண்டிரண்டு வெள்ளம் சேனையோடு செல்லுமாறு பணித்து ஒரு மாதம் முடிவதற்குள் 'சீதையைத் தேடிவிட்டு வந்து சேரவேண்டும் என்று சொல்லி அனுப்புகின்றான்.

அவர்கள் தேட வேண்டிய இடங்களாகவும் காணவேண்டிய இடங்களாகவும் விந்தமலை, ஏமகூடமலை, வடபெண்ணை, விதர்ப்ப நாடு, தண்டகவனம், முண்டகத்துறை, பாண்டுமலை. கோதாவரி, சுவண நதி, சந்திரகாந்தமலை, கொங்கணதேயம், குலிந்த தேயம், அருந்ததிமலை, மரகதமலை, வேங்கடமலை, சோழநாடு, மலைநாடு, பாண்டிநாடு, அந்நாட்டிலுள்ள பொதியமலை, பொருநையாறு, மகேந்திரமலை என்பவற்றைக் கூறிக் கடலுக்கு அப்புறத்திலும் அவ்வாறே தேடிவிட்டு ஒரு மாதத் தவணைக்குள் வரவேண்டும் எனக் கட்டளையிட்டு விடைகொடுத்து அனுப்புகின்றான் சுக்கிரீவன்.

சுக்கிரீவன் சொல்லி முடித்தபின் இராமன் அனுமனை அருளால் நோக்கித் தனியே இருத்திச் சீதையின் அடையாளங்களைக் கூறுமுகத்தால் அவள் அடிமுதல் முடிவரையில் உள்ள உறுப்புக்களின் எழில் நலங்களை விளக்கி அவளுக்குச் சொல்லவேண்டிய அடையாள

மொழிகள் சிலவற்றையும் சொல்லித் தன் கைவிரலில் அணிந்திருந்த மணிமோதிரத்தையும் அடையாளமாகக் கொடுத்து, வினையெலாம் முடிக என்று வாழ்த்தி விடை கொடுக்க அவன் அருளாகிய துணை யோடு அனுமன் புறப்படுகின்ருன். அவனுடன் செல்லுதற்குரிய வானர வீரர்கள் தமக்குரிய சேனையோடு சுக்கிரீவனை வணங்கிக் கொண்டு முன்னமே புறப்பட்டுவிடுகின்ருர்கள்; இது இப்படலத்துக் கூறப்படும் பொருட் சுருக்கம்.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. சுக்கிரீவன் வானர வீரர்களைக் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்ற நான்கு திசைகளிலும் முறையே சென்று சீதையைத் தேடுமாறு அந்த நான்கு திசையிலுள்ள வழிகளையும், தனித்தனியே விரிவாகக் கூறி அனுப்புவதாக வான்மீகத்தில் காணப்படுகின்றது.

கிழக்குத் திசையில் நூருயிர வானரர்களோடு சென்று தேடுமாறு வினதன் என்ற படைத் தலைவனுக்குச் சுக்கிரீவன் கட்டளையிடு கின்ருன். அவன் சென்று தேடுதற்குரிய இடங்களாகக் கங்கை, சரயு, கௌசிகி, காளிந்தி, யமுனை, சரசுவதி, சிந்து, சோணம், முதலிய நதிகளும்,-மகி, காலமகி, பிரமமாலம், விதேகம், மாளவம், காசி, கோசலம், மகதம், புண்டரம், வங்கம் முதலிய தேயங்களும்,- மந்தரமலை, சிசிரமலை, முதலிய மலைகளும், மதுக்கடல், பாற்கடல், தூயநீர்க்கடல் என்ற கடல்களும்,-அக்கடலுக்கு அப்புறத்து ஆதி சேடன் இருக்கும் சாதரூபம் என்ற பொன்மலையும், கீழ்த்திசையின் எல்லையாகத் தேவர்களால் நிறுவப்பட்ட பனைக்கொடியும், அதற்கு அப்புறத்ததாய உதயமலையும் சிறப்பாகச் சுக்கிரீவனுல் விரிவாகக் கூறப்படுகின்றன.

கம்பர், இவற்றை யெல்லாம் விரிவாகக் கூருமல், "வாசவன் இட திசைக்கண் வினதன் விறற்றரு, படையொடுற்றுப் படர்கெனப் பன்னினுன்" எனச் சுருக்கமாகச் சொல்லி முடித்து விடுகின்ருர். இராவணன் இருக்கும் ஊர் தென்திசையில்தான் இருக்க வேண்டும் என்பது பல நிகழ்ச்சிகளால் உறுதியானமையால் ஏனைத் திசை களில் தேடவேண்டிய இடங்களைப்பற்றி விரிவாகக் கூறுதல் மிகை யென்று விடுத்தார் போலும்.

2. தென்திசைக்கண் அனுப்புதற்குரிய அனுமன் அங்கதன் முதலியோர்க்குச் சுக்கிரீவன் கூறியதாக வான்மீகி கூறியவற்றைப் பெரும்பாலும் தழுவியே கம்பர் கூறியுள்ளார். ஆனுல் வான்மீகி கூருத வேங்கடமலையைப் பற்றியும், தொண்டைநாட்டைப் பற்றியும் கம்பர் விரிவாகக் கூறியுள்ளார். அவை கம்பர் காலத்து உலகம்

புகழும் சிறப்புடன் விளங்கிய காரணத்தால் அங்ஙனம் கூறினர் போலும்.

வான்மீகி, தென்திசையில் பிதிரர் உலகமாகிய எமபட்டணம் வரையில் உள்ள இடங்களைச் சுக்கிரீவன் கூறுவதாகச் சொல்லுகின்றார். கம்பர், மகேந்திரமலைக்கு அப்பால் 'அலைகடலுக்கப்புறத்தும் ஒரு திங்கள் அவதியாகத் தேண்டியிவண் வந்தடைதிர்' என்று சுக்கிரீவன் கூறியதாகக் கூறியுள்ளார்.

வான்மீகத்தில் பிதிரர் உலகத்திற் சிறிது வடக்கே குஞ்சரமலை என்ற மலை இருப்பதாகவும் அம்மலையில் அகத்தியர் மாளிகை ஒரு யோசனை அகலமும் நூறு யோசனை உயரமும் உள்ளதாய்ப் பொன் மயமானதாய் நவமணிகள் பதிக்கப்பெற்றதாய் விளங்குவதாகவும் கூறுகின்றான் சுக்கிரீவன். அகத்தியர் இருப்பிடமாக மலயமலை ஒன்றையும் முன்னரே கூறியுள்ளான். தண்டகவனத்தில் இராமன் அகத்தியரைக் கண்டு வணங்கி வரம் பெற்று வந்ததாக ஆரணிய காண்டத்தில் கூறப்பட்டுளது. எனவே வான்மீகி மூன்று இடங்களில் அகத்தியர் இருப்பிடம் இருந்ததாகக் கூறியுள்ளார் என்பது தெளியலாம். அகத்தியர் ஒருவரே இம் மூன்று இடங்களிலும் இருந்திருப்பாரா? என்ற ஐயத்தால் அகத்தியர் என்ற பெயர் தாங்கிய மூவர் அம்மூன்றிடங்களிலும் இருந்திருக்கவேண்டும் என்று சிலர் கருதுகின்றனர். அகத்தியர் தெய்வ முனிவர் ஆதலால் நினைத்த இடத்திற்கு நினைத்த அளவில் செல்லத்தக்க தவத்தின் ஆற்றல் பெற்றவராவர். அவர் ஒருவரே தண்டகவனத்திலும், பொதியமலையிலும், பிதிரர் உலகிற்கு அருகிலும் ஆசிரமங்கள் அமைத்துக்கொண்டு அவர் விரும்பியாங்கு அம் மூன்று ஆசிரமங்களில் ஏதேனும் ஓரிடத்தில் தங்கித் தவஞ்செய்து கொண்டிருப்பவர் என்று கொள்ளுதல் பொருத்தமுடையதாகும்.

3. மேற்குத் திசையில் சென்று சீதையைத் தேடுமாறு சுடேணனன் என்பவனைத் தலைவனாகக் கொண்ட வானரப்படைகட்குச் சுக்கிரீவன் கட்டளையிட்டு வழி சொல்கின்றான். பாகலிக தேயம், சுராட்டிரதேயம் முதலிய தேயங்களிலும் பாலைவனங்களிலும் மேலைக்கடலிலும், ஏமகிரியிலும், கந்தருவர் தங்கியுள்ள பாரியாத்திர பர்வதத்திலும், வச்சிரமலையிலும், சக்கரவான்மலையிலும், வராகமலையிலும், மேகவான்மலையிலும், அத்தமனகிரியிலும், மேருவசாவர்ணி முனிவர் இருக்கும் மேருமலையிலும் சீதையைத் தேடுமாறு சுக்கிரீவன் சொல்வதாக வான்மீகி கூறியுள்ளார்.

கம்பர், 'குடதிசைக்கண் சுடேணன்......விறற்றரு படைபொடுற்றுப் படர்க' என்று மட்டும் சுக்கிரீவன் கூறியதாகச் சுருங்க உரைக்கின்றார்.

4. வடதிசையில் சென்று சீதையைத் தேடுமாறு சதவலியைத் தலைவனுகக் கொண்ட படைகட்குக் கட்டளையிட்டு வழிகூறுங்கால் புளிந்ததேயம், சூரசேனதேயம், பிரஸ்தவதேயம், இந்திரபிரஸ்தம், மத்ரதேயம், குருதேயம், காம்போஜதேயம், யவனதேயம், அரட்ட தேயம், பாகலீகதேயம், ருஷகதேயம், டங்கணதேயம், சீனதேயம், நிகாரதேயம், தரததேயம், இமயமலை, கந்தருவருக்கிடமான சோமாச்சிரமம், காலபர்வதம், அந்தக்காளம் என்னும் மாமலை, சுதரிசனமலை, தேவசகம் என்னும் மலை, பாலைவனம், கயிலாயமலை, கிரவுஞ்சமலை, (அதன் பிரிவாகிய அவுருக்ஷம் என்னும் குன்று, காம மலை, மாநசமலை) வைகாநசசரசு, சைலோதநதி, உத்தரகுரு என்னும் போகபூமி, வடகடல், அக்கடல் நடுவேயுள்ளதாய் மும் மூர்த்திகளுக்கு இடமான சோமகிரி என்பன சுக்கிரீவனுல் குறிக்கப் பெறுவதாக வான்மீகம் கூறுகின்றது.

கம்பர், இவ்வாறு விரிவாகக் கூருமல், 'குபேரன்வாழ் வட திசைக்கட் சதவலி......விறற்றரு படையொடுற்றுப் படர்க' என்று சுருக்கமாகச் சுக்கிரீவன் கூறியதாகச் சொல்கின்ருர்.

வான்மீகி, நான்கு திசையிலும் சீதையைத் தேடத்தக்க இடங் களைத் தனித்தனியே விரித்துக் கூறிய முறையில் கூருமல் கம்பர், சுருங்கச் சொல்லல் என்ற அழகு தோன்ற நான்கு திசையிலும் குறிப்பிடத்தக்க சில இடங்களை மட்டும் பொதுவகையால், கூறி யுள்ளார் என்று கொள்ளலாம். சுக்கிரீவன், நான்கு திசையிலும் சீதையைத் தேடத்தக்க இடங்களைச் சொல்லி ஆங்காங்குச் செல்லு மாறு வானரர்களுக்குக் கட்டளையிட்டபின் அனுமனை நோக்கிப் புகழ்ந்து, 'நீயே சீதையைக் காண்பதற்கு உரியவன்' என்று கூறி அனுப்புகின்ருன். பின் இராமன் அனுமனை அழைத்து 'அறிவு நுட்பமும் உடலின் திட்பமும் உயர் ஒழுக்கமுமுள்ள நீயே சீதையைத் தேடிக் காணவல்லவன்' என்று புகழ்ந்து சீதைக்குக் காட்ட வேண்டிய அடையாளமாகத் தன் கையில் அணிந்த மோதிரத்தை அந்த அனுமன் கையில் கொடுத்து 'இந்த மோதிரத்தால் நீ என் னிடமிருந்து சென்றதாகச் சீதை உணர்வாள்' என்று கூறி வாழ்த்தி விடை கொடுத்து அனுப்புவதாக வான்மீகத்தில் காணப் படுகிறது. சீதையின் பாதாதிகேச வருணனையோ, வேறு அடை யாள மொழிகளோ இராமனுல் கூறப்பட்டதாக வான்மீகத்தில் இல்லை.

அனுமனைத் தனியே அழைத்துச் சீதையின் அடிமுதல் முடி வரையில் உள்ள உறுப்புக்களின் வனப்பைப் பற்றித் தனித்தனியே சிறப்பித்து இராமன் கூறியதாக இருபத்து மூன்று செய்யுட்களால் கம்பர் கூறியுள்ள பகுதியும், சீதைக்குணர்த்துமாறு கூறியதாக

அவர் கூறும் அடையாள மொழிகளும் அவர்தம் உரிமைப்படைப்பே யாகும். இக்காலத்துப் பெருமக்களில் பலர் சீதையின் உறுப்புக்களைப் பற்றிய வருணனை தேவையில்லை என்று கருதுகின்றனர். ஆயினும் அப்பாடல்கள் எழுதப்பெருத ஏடுகள் கிடைக்கவில்லை ஆதலின், பாதாதிகேச வருணனை கூறுவது கவிஞரின் மரபு எனவும் காப்பியத் திற்கு இன்றியமையாத உறுப்பு எனவும் கம்பர் கருதிக் கூறியுள்ள தாகக் கொள்ளுதல் அமைவுடையதாகும்.

## படலப் பொருட் சிறப்பு

தண்டகவனத்துள்ள முண்டகத்துறையைப் பற்றிக் கூறும் பொழுது அத்துறையில் உள்ள பூம்பொழில்கள் காலமல்லாத காலத்தும் கனிந்து பிறர்க்குப் பயன்பட்டுப் பொலிகின்ற இயல்பைத் தெரிவிக்க வந்த கம்பர் “ஞாலநுங்குறு நல்லறத்தோர் பொருள் போல நின்று பொலிவது” என உவமை கூறி விளக்கியுள்ளார். ‘உலகத்தோரால் அநுபவிக்கப்படுகின்ற சிறப்புடையதாய நல்ல தரும சிந்தனையுடையவரின் பொருளைப் போலப் பலராலும் பாராட் டப்பெற்றுப் பொலியும் இயல்புடையது முண்டகத்துறையிலுள்ள பொழில்’ என்பது பொருள். “பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்ருற் செல்வம் நயனுடையான்கட் படின்” (குறள் - 216) என்ற குறளுக்கு விளக்கம் தருவதுபோல இப்பாடல் விளங்குவது காணலாம்.

அருந்ததி மலையைப் பற்றிக் கூறுங்கால் அம்மலை யாராலும் அணுக முடியாத அருமையுடையது என்பதை விளக்க வந்த கம்பர், இறைவனை நினைந்துருகுதல் இன்றிச் சமயவாதம் புரிந்து காலம் கழிக்கும் அறிவிலார்க்குப் பேரிடி போலத் தோன்றும் அரிய கருத்தைக் கூறுகின்ருர்.

“அரனதிக னுலகளந்த வரியதிக னென்றுரைக்கு மறிவிலோர்க் குப் பரகதிசென் றடைவரிய பரிசேபோல் புகலரிய பண்பிற்ருமால்” என்பது அது. இதனுல் கம்பரின் சமயப் பொதுமையும் விளங்கும். ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதித்துச் சமயப் போர் செய்துகொண்டு திரிவதால் ஞானமும் கிடைக்காது; அதன் பயனுய வீடும் கிடைக்காது என்பது கம்பர் கருத்தாதல் இவ்வுவமை யால் நன்கு விளங்குதல் காணலாம்.

தமிழ் நாட்டிற்கு வட எல்லையாகத் தொல்காப்பியர் முதலிய பெரும் புலவர்கள் பேசிச் சென்ற வேங்கடமலையை வான்மீகி கூருராயினும், திருமால் நின்ற திருக்கோலத்தோடு அன்பர்கட்குக் காட்சியளிக்கும் அவ்வேங்கடமலையைக் கம்பர், மறவாது போற்றி நான்கு செய்யுட்களால் புகழ்ந்து கூறும் பகுதி யாரும் மறக்கலாகா

மாண்புடையதாகும். இதனுல் கம்பரின் தமிழ் நாட்டுப் பற்றும் தெய்வ சிந்தனையும் தெளியலாம்.

இனி இராமன் சீதையின் உறுப்புக்களைப்பற்றிக் கூறுமிடங்களில் ஒவ்வோர் உறுப்பும் உவமையிலாதன என்றே கூறி முடிக்கின்ற அழகு பாராட்டத்தக்கதாகும். சீதை தன்னேரில்லாத் தலைவியாதலின் அவள் உறுப்புக்களும் தன்னேரில்லாதனவாகத் திகழ் தலே பொருத்தமாதல் காணலாம். இராமன் உறுப்புக்களைப் பற்றி அனுமன் சீதைக்குக் கூறும்போதும் இராமன் தன்னேரில்லாத் தலைவன் என்பதை மறவாது இங்ஙனமே அவை உவமையில்லாத பேரழகினையுடையன எனக் கூறுதல் காணலாம். தனக்குவமை யில்லாதான் எனக் கடவுளை வள்ளுவர் குறிப்பிடுதலும் காண்க.

---

# 12. நாட விட்ட படலம்

## இராமன் சுக்கிரீவனை வினவுதல்

**4553.** வகையு மானமு
✯ மாறெதிர்ந் தாற்றுறும்
பகையு மின்றி
நிரந்து பரந்தெழு
தகைவில் சேனைக்
கவதி சமைந்ததோர்
தொகையு முண்டுகொ
லோவெனச் சொல்லினான்.

'வகையும், மானமும், மாறு எதிர்ந்து ஆற்றுறும்
பகையும் இன்றி, நிரந்து, பரந்து எழு
தகைவுஇல் சேனைக்கு அவதி சமைந்தது ஓர்
தொகையும் உண்டு கொலோ?' எனச் சொல்லினான்.

பொ:—(இராமன் சுக்கிரீவனை நோக்கி, பல இனங்களாகப்படும்) பிரிவு வகுப்புகளும், உடற்பற்றும், (தமக்குள் ஒருவரோடொருவர்) மாறுபாடு கொண்டு எதிர்த்துப் போர் செய்யும் பகையும், இல்லாமல் பெருங் கூட்டமாகத் திரண்டு விரிந்துள்ள பிறரால் தடுக்கவியலாத இந்தப் படைக்கு எல்லை குறிக்கும் ஓர் எண்ணும் உளதோ? எனக் கேட்டான்.

கு:—தகைதல் - தடுத்தல். வகை என்றது, ஒற்றுமைக்கு மாறாகப் பிரிந்து நிற்கும் பல்குழுவினை. மானம் என்றது, அரசன் நலம் நோக்காத உடற்பற்று முதலிய தன்னல நோக்கங்களை. மாறெதிர்ந்தாற்றுறும் பகை என்றது உட்பகையினை. "பல்குழுவும் பாழ் செய்யு முட்பகையும் வேந்தலைக்குங் கொல் குறும்பு மில்லது நாடு" (குறள் - 735) என வள்ளுவர் இவற்றை விலக்கியுள்ளமை காணலாம். அவதி - எல்லை. (1)

சுக்கிரீவன் மறுமொழி 4554, 4555

**4554.** ஏற்ற வெள்ள
மெழுபதி னிற்றவென்
றுற்ற லாள
ரறிவி னமைத்ததோர்
மாற்ற முண்டது
வல்லது மற்றுமோர்
தோற்ற மென்றிதற்
கெண்ணுமுன் சொல்லுமோ.

'ஏற்ற வெள்ளம் எழுபதின் இற்ற' என்று
ஆற்ற லாளர் அறிவின் அமைத்தது ஓர்
மாற்றம் உண்டு; அது அல்லது, மற்றும் ஓர்
தோற்றம் என்று இதற்கு எண்ணும் முன் சொல்லுமோ?

பொ:—(இராமனை நோக்கிச் சுக்கிரீவன் கூறுகின்றான்:—இந்த வானரப் படையின் அளவு பற்றி) 'எண்களில் ஏற்றமுடையதான எழுபது வெள்ளம் என்னும் தொகையினால் முடிந்திருக்கிறது' என்று ஆற்றல் மிக்கவர்கள் அறிவினால் ஆராய்ந்து அமைத்த ஒரு சொல் உண்டு; அவ்வாறு அவர்கள் முடிவு கட்டியதன்றி, வேறும் தோன்றிய அளவு உள்ளது என்று எண்ணிச் சொல்லத்தக்க தொகையும் இனிச் சொல்லப்படுமோ?

கு:—ஆற்றலாளர் இப்படை எழுபது வெள்ளம் அளவினது என்று கூறிய சொல்லை நம்புதல் வேண்டுமேயன்றி எண்ணித் தொகை கூற முடியாது என்றவாறு. அறிவின் அமைத்ததோர் மாற்றம் என்றமையால் எழுபது வெள்ளம் என்ற அளவு வெறும் மதிப்பீடே அன்றி எண்ணிக் கூறியதன்று என்பது பெறப்படும். (2)

**4555.** ஆறு பத்தெழு கோடி யனீகருக்
கேறு கொற்றத் தலைவ ரிவர்க்குமுன்
கூறு சேனைப் பதிகொடுங் கூற்றையு
நீறு செய்திடு நீலனென் றோதினான்.

'ஆறு பத்து எழு கோடி அனீகருக்கு
ஏறு கொற்றத் தலைவர் இவர்க்குமுன்

கூறு சேனைப் பதி கொடுங் கூற்றையும்
நீறு செய்திடும் நீலன்' என்று ஓதினன்.

பொ :—'இச் சேனையில் உள்ளார்க்குச் சிறந்த வெற்றியையுடைய தலைவர்கள் அறுபத்தேழு கோடிக்கணக்கானவர்; இத் தலைவர்க்கெல்லாம் முதலாகச் சொல்லப்படும் சேனாதிபதி கொடிய எமனையும் தாக்கித் துகளாக்கவல்ல நீலனாவன்' என்று சொன்னான்.

கு :—இதனால் படைத் தலைவர்கள் இத்துணையர் என்பதையும் அப்படைத் தலைவர்க்கெல்லாம் பெரும் தலைவன் நீலன் என்பதையும் இராமனுக்குப் புலப்படுத்தியவாறு. உயிர்கட்கெல்லாம் இறுதியைச் செய்யவல்ல கூற்றையும் நீறு செய்யும் ஆற்றலன் நீலன் என அவன் வலிமை புலப்படுத்தினன். (3)

## இனிச் செய்வன சிந்திக்க என இராமன் கூறல்

**4556.** என்று ரைத்த வெரிகதிர் மைந்தனை
வென்றி விற்கை யிராமன் விருப்பினா
னின்றி னிப்பல பேசியென் னோநெறி
சென்றி ழைப்பன சிந்தனை செய்கென்றான்.

என்று உரைத்த எரிகதிர் மைந்தனை,
வென்றி விற்கை இராமன் விருப்பினால்,
நின்று இனிப் பல பேசி என்னோ? நெறி
சென்று இழைப்பன சிந்தனை செய்க என்றான்.

பொ :—என்று சொன்ன சூரியன் மகனாகிய சுக்கிரீவனை, வெற்றியைத் தரவல்ல வில்லையேந்திய கையையுடைய இராமன் விருப்பினால் (பார்த்து), 'இப்பொழுது இங்கு நின்றுகொண்டு பல பேசியதால் பயன் என்னை? பல வழிகளிலும் சீதையைத் தேடிச் சென்று செய்ய வேண்டியவற்றைச் சிந்திப்பாயாக' என்று கூறினான்.

கு :—எரி கதிர் - எரிக்கின்ற கிரணங்களையுடைய சூரியன். படையின் பெருமை பேசுவதை விடுத்துச் சீதையைத் தேடும் செயலில் ஈடுபடுக என்றவாறு. சீதையைக் கவர்ந்த இராவணனோடு போர் செய்து வெற்றிபெறத் துடிக்கும் இராமன் இயல்பு புலப்பட அவனை, 'வென்றி விற்கை இராமன்' எனச் சிறப்பித்தார். செய்க என்புழி அகரம் தொகுத்தல். விருப்பினால் பார்த்து எனச் சொல்லெச்சமாக ஒரு சொல் வருவிக்கப்பெற்றது. (4)

சுக்கிரீவன் அனுமனுக்குக் கூறுதல் 4557-4561

**4557.** அவனு மண்ண லனுமனை யையநீ
புவன மூன்றுநின் ருதையிற் புக்குழ
றவன வேகத்தை யோர்கிலை தாழ்த்தனை
கவன மாக்குரங் கின்செயல் காண்டியோ.

அவனும், அண்ணல் அனுமனை. 'ஐய! நீ,
புவனம் மூன்றும் நின் தாதையின் புக்கு உழல்
தவன வேகத்தை; ஓர்கிலை, தாழ்த்தனை;
கவன மாக்குரங்கின் செயல் காண்டியோ?

பொ:—அந்தச் சுக்கிரீவனும்,—பெருமை பொருந்திய அனுமனை (நோக்கி) ஐய! நீ மூன்று உலகத்திலும் நின் தந்தையாகிய வாயு தேவனைப் போலப் புகுந்து திரியத்தக்க மிக்க வேகத்தையுடையை; அங்ஙனமிருந்தும் உன் ஆற்றலை உணரமாட்டாதவனாய்க் காலம் தாழ்த்து இங்கு இருக்கின்றாய்; இங்கு இருந்துகொண்டு வேகத்தை யுடைய பெரிய மற்றைக் குரங்குகளின் செய்கையைக் காண விரும்பு கின்றாயோ?

கு:—அனுமன் காற்றின் புதல்வனாகலின் தந்தை போலவே விரைந்து மூவுலகங்களினும் புகுந்து திரியும் ஆற்றலையுடையவன் ஆவன். அங்ஙனமிருந்தும் அவன் விரைந்து சென்று திரிந்து சீதையைத் தேடிக் காணாதிருப்பது பொருத்தமன்று என்பது சுக்கிரீவன் கருத்து. அனுமன் தேடும் செயலில் முற்படாதிருப்பது மற்றை வானரங்களின், செய்கையைக் கண்காணிப்பதற்காக இருப்பது போலும் என்பான் 'கவனமாக் குரங்கின் செயல் காண் டியோ' என்றான். தவனவேகம், ஒருபொருட் பன்மொழி. கவனம்-வேகம். வேகத்தை, தாழ்த்தனை என்பன முன்னிலை வினைக்குறிப்பு முற்றுக்கள். ஓர்கிலையாய்த் தாழ்த்தனை என முற்றெச்சமாக்கி முடிக்க. (5)

**4558.** ஏகி யேந்திழை தன்னை யிருந்துழி
நாக நாடுக நானில நாடுக
போக பூமி புகுந்திட வல்லநின்
வேக மீண்டு வெளிப்பட வேண்டுமால்.

'ஏகி ஏந்திழை தன்னை, இருந்துழி
நாகம் நாடுக; நானிலம் நாடுக;

போக பூமி புகுந்திட வல்லநின்
வேகம் ஈண்டு வெளிப்பட வேண்டுமால்.

பொ :—(இங்கு நின்றும்) சென்று, அணிந்த அணிகலன்களை யுடைய சீதை இருந்த இடத்தை நாகர் உலகத்தில் சென்று தேடுக; அங்கு இல்லையாயின் இப்பூவுலகத்தில் தேடுக; போக பூமியாகிய சுவர்க்க உலகத்திற்கும் செல்லவல்ல நின் வேகம் இப்பொழுது நன்கு வெளிப்பட வேண்டும்.

கு :—இருந்துழி தன்னை என மாற்றுக. நாகம் என்றது தரைக்குக்கீழுள்ள நாகலோகத்தை. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நிலம் நான்காகப் பாகுபாடு செய்யப்பட்டமை பற்றிப் பூவுலகம் நானிலம் எனப் பெயர் பெற்றது. தவத்தால் எய்த வேண்டிய போக பூமியை அனுமன் தன் மெய்வலத்தால் எய்தற்குரியவன் என்பான், 'போக பூமி பொருந்திட வல்லநின் வேகம்' என்றான். அனுமனுக்குள்ள முழு வல்லமையையும் சீதையைத் தேடுவதில் பயன்படுத்த வேண்டும் என்பான், 'நின் வேகம் ஈண்டு வெளிப்பட வேண்டும்' என்றான். (6)

**4559.** தென்றி சைக்கணி ராவணன் சேணக
ரென்றி சைக்கின்ற தென்னறி வின்னணம்
வன்றி சைக்கினி மாருதி நீயலால்
வென்றி சைக்குரி யார்பிறர் வேண்டுமோ.

'தென் திசைக்கண் இராவணன் சேண் நகர்
என்று இசைக்கின்றது, என் அறிவு இன்னணம்;
வன் திசைக்கு இனி, மாருதி நீ அலால்
வென்றிசைக்கு உரியார் பிறர் வேண்டுமோ ?

பொ :—இராவணனுடைய உயர்ந்த இலங்கை நகர் (இருப்பது) தென்திசையில் என இவ்வண்ணம் என் அறிவு சொல்லுகின்றது; மாருதி! வலிய அத்திசைக்கு இப்பொழுது நீயேயன்றி வெற்றிப் புகழ்க்கே உரிய பிறரும் நினக்குத் துணை வேண்டுமோ ?

கு:—மாருதியோடு பிறரையும் அனுப்புங் குறிப்பினன் சுக்கிரீவன் ஆதலின், 'நீயலால் பிறர் வேண்டுமோ?' என்று வினவி அனுமனின் கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றத்தைப் புலப்படுத்தியவாறு. வருஞ் செய்யுளில் அங்கதன், சாம்பன் முதலிய இரண்டு வெள்ளம் சேனையை அனுமனுடன் அனுப்புதல் காணலாம். மாருதம்-காற்று.

மாருதத்தின் மகன் அனுமன் ஆகலின் மாருதி எனப்பட்டான். காற்றுப் போன்ற வேகத்தில் தேடிப் பார்த்தற்குரியவன் என்பது புலப்பட அப்பெயரால் குறித்தபடி. வென்றிசை - வெற்றியிலாய புகழ். என்று இன்னணம் என்னறிவு இசைக்கின்றது என இயையும். இராவணன் நகர் இருக்கும் திசையாகக் கருதப்படுதலின் தென்றிசை வன்றிசை எனப்பட்டது; எல்லா உயிரையுங் கவரும் வன்னெஞ்சனாகிய எமன் திசை என்னும் இயல்பு பற்றி அவ்வாறு கூறப்பட்டது எனலும் ஆம். (7)

**4560.** வள்ள றேவியை வஞ்சித்து வௌவிய
கள்ள வாளரக் கன்செலக் கண்டது
தெள்ளி யோயது தென்றிசை யென்பதோ
ருள்ள மும்மெனக் குண்டென வுன்னுவாய்.

'வள்ளல் தேவியை வஞ்சித்து வௌவிய
கள்ள வாள் அரக்கன் செலக் கண்டது
தெள்ளியோய்! "அது தென் திசை என்பது ஓர்
உள்ளமும் எனக்கு உண்டு" என உன்னுவாய்.

பொ :—தெளிந்த அறிவினையுடையவனே! வள்ளலாகிய இராமன் மனைவியை வஞ்சித்துக் கவர்ந்த கள்ளத்தன்மையுடைய கொடிய இராவணனாகிய அரக்கன் அச் சீதையுடன் போக நாம் கண்டது ஆகிய அத்திசை தென்திசையே என்பதொரு நினைவும் எனக்கு உண்டு என நினைவாயாக.

கு :—தான் கூறும் இறந்த கால நிகழ்ச்சியை மறவாது நினைவிற் கொள்ளுதற்குரியவன் என்பது தோன்ற, அனுமனை, 'தெள்ளியோய்!' என விளித்தான். குரங்கினத்தரசனாகிய தன்னையும் தம்பியாக ஏற்றுக்கொண்டு அரசு உதவிய அருட்குணத்தை நினைந்து வள்ளல் என இராமனைக் குறித்தான். இராவணன் கவர்ந்து செல்லுங்கால் சீதை தன் அணிகலன்களைப் பொதிந்து தமக்கு முன் போட்டபோது கண்டதை நினைந்து கூறுகின்றானாதலின் 'உள்ளமும் எனக்குண்டு' என்றான். என் அறிவு சொல்லுகின்றது என்று முன் கூறினதைத் தழுவி 'உள்ளமும்' என இறந்தது தழுவிய எச்ச உம்மை கொடுத்துக் கூறினான். சுக்கிரீவன் அறிவும் நினைவும் இராவணன் இருப்பிடம் தென்திசையில் இருப்பதாகவே கூறுகின்றன என்றவாறு. 'வஞ்சனையால் வந்த வரவென்ப தென்னுடைய நெஞ்சகமே முன்னம் நினைவித்தது. (சடாயுவுயிர்நீத்த-190) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (8)

**4561.** தாரை மைந்தனுஞ் சாம்பனுந் தாமுதல்
வீரர் யாவரு மேம்படு மேன்மையாற்
சேர்க நின்னொடுந் திண்டிறற் சேனையும்
பேர்க வெள்ள மிரண்டொடும் பெற்றியால்.

'தாரை மைந்தனும், சாம்பனும், தாம் முதல்
வீரர் யாவரும், மேம்படும் மேன்மையால்
சேர்க நின்னொடும்,' திண் திறல் சேனையும்
பேர்க வெள்ளம் இரண்டொடும் பெற்றியால்.

பொ :—தாரையின் மைந்தனாகிய அங்கதனும், சாம்பவானும், முதலாகிய வீரர் பலரும்,—மற்றை வீரரினும் மேம்பட்டு விளங்கும் மேன்மையுடைமையால்—நின்னோடு சேர்ந்து வருவார்களாக; இரண்டு வெள்ளம் என்னும் தொகையுடன் திண்மையும் திறமையும் உள்ள சேனையும் (நினக்குத் துணையாக) பெருமையோடு புறப்படுவதாக.

கு :—அங்கதன், சாம்பவன் முதலிய வீரர்களோடு இரண்டு வெள்ளம் வானரப்படை அனுமனுடன் செல்லச் சுக்கிரீவன் கட்டளையிட்டான் என்றவாறு. யாரினும் உயர்ந்த பண்பும் திறமையும் உடைய அனுமனுடன் செல்லுபவர்கள் மற்றவரினும் மேம்பட்டவர்களாகவே இருக்க வேண்டும் எனத் தேர்ந்து அனுப்பினமை தோன்ற 'மேம்படு மேன்மையால் சேர்க' என்றான். மேம்படும் மேன்மையுடைமையால் என்க. அங்கதன் முதலிய வீரரின் பெருமைக்கேற்ப 'நின்னொடும் பேர்க' என உடனிகழ்ச்சிப் பொருளில் கூறிய நயம் காண்க. பெற்றி - பெருமை; இயல்பு எனினும் ஒக்கும். பேர்க - புறப்படுக. (9)

45. குறிப்பு : இதன் பின் வரும் ஓர் அதிகப் பாடல்.

4561 (a) சாரும் வீரர் சதவலி தம்மொடும்
கூரும் வீரர்கள் யாவரும் கூடியே
நீரும் நும்பெருஞ் சேனையும் நின்றிடாப்
பேரும் பேதையைத் தேடுறும் பெற்றியால்.

## பிற திசைகளில் சுடேணனன் முதலியோரை அனுப்புதல்

**4562.** குடதி சைக்கண் சுடேணன் குபேரன்வாழ்
வடதி சைக்கட் சதவலி வாசவன்

இடதி சைக்கண் வினதன் விறற்றரு
படையொ டுற்றுப் படர்கெனப் பன்னினுன்.

'குட திசைக்கண் சுடேணன்; குபேரன் வாழ்
வட திசைக்கண் சதவலி; வாசவன்
இட திசைக்கண் வினதன்; விறல் தரு
படையொடு' உற்றுப் படர்கெனப் பன்னினுன்.

பொ :—'மேற்குத் திசையில் சுடேணனும் குபேரன் வாழ்கின்ற வடதிசையில் சதவலியும், இந்திரன் இடமாகிய கிழக்குத் திசையில் வினதனும் வெற்றி தரும் சேனேயோடு பொருந்திச் செல்க' என்று கூறினுன்.

கு :—குபேரன் விச்சிரவசு என்ற முனிவர்க்கு மூத்த மனேவியின் மகன்; பெருந்தவஞ் செய்து பிரமன் அருளால் வடதிசைக் காப்பும் பெருஞ் செல்வமும் எய்தினவன். வாசவன் - இந்திரன். வாசவன் இடமாகிய திசை என்க. எதுகை நோக்கி வலிமிகாதாயிற்று. படர்க என என்புழி அகரம் தொகுத்தல். படர்க - செல்க. பன்னுதல் - சொல்லுதல். சுடேணனன் என்பது ஓசை நோக்கிச் சுடேணன் என மருவியது. இவன் தாரையின் தந்தை; மிகுந்த வலிமையுடையவன். (10)

45. குறிப்பு : இதன் பின் சில சுவடிகளில் பின் வரும் அதிகப் பாடல் காணப்படுகின்றன.

4562 (a) குடதிசைப் படு பூமி குபேரன்வாழ்
வடதிசைப் படு மாநில மாறுமேற்
றிடுதிசைப் பரப் பெங்கணு மோர்மதி
தொடர வுற்றுத் துருவியிங் குற்றிரால்.

4562 (b) குடதிசைக் கணிடபன் குண திசைக்
கடலின் மிக்க பனசன் சதவலி
வடதிசைக் கணன்றே வினன் மானமாப்
படையின் வெள்ளத் துடன்செலப் பான்மையால்.

4562 (c) என்று கூறியாங் கேவினன் யாவரும்
நின்று வாழ்த்தி விடைகொடு நீங்கினுர்
அன்று மாருதி யாமுதல் வீரர்க்குத்
துன்று செங்கதி ரோன்மகன் சொல்லுவான்.

### சுடேணனன் முதலியோர்க்கும் சுக்கிரீவன் கட்டளை

**4563.** வெற்றி வானர வெள்ள மிரண்டொடுஞ்
சுற்றி யோடித் துருவி யொருமதி
முற்று ருதமுன் முற்றுதி ரிவ்விடைக்
கொற்ற வாகையி னீரெனக் கூறினன்.

'வெற்றி வானர வெள்ளம் இரண்டொடும்
சுற்றி ஓடித் துருவி, ஒருமதி
முற்றுருதமுன் முற்றுதிர் இவ் இடை;
கொற்ற வாகையினீர்!' எனக் கூறினன்.

பொ :—'வெற்றிக்குரிய வாகைமாலை சூடுதற்குரியவர்களே! வெற்றிபெறும் இரண்டு வெள்ளம் வானர சேனையோடும் நீங்கள் விரைந்து சென்று திரிந்து தேடிப் பார்த்துவிட்டு ஒரு மாதம் முடி தற்குமுன் இவ்விடத்தை யடையுங்கள்' என்று கூறினன்.

கு :—துருவுதல்-தேடுதல். முற்றுதல்-முடிதல்; சேர்தல். வாகை மாலை வெற்றி கொண்டோர்க்கே யுரியதாதல் தோன்றக் கொற்ற வாகையினீர்! என்ருன். பகைவரை வென்று வாகை சூடுதற்குரியர் என அவரைப் புகழ்ந்து கூறியனுப்பியவாறு. சந்திரனைக் கொண்டே கணக்கிடப்படுதலின் மாதம் மதி எனப்பட்டது. (11)

### சுக்கிரீவன் தென் திசையில் செல்வோர்க்கு வழி கூறல்
### 4564–4584

### விந்தமலை

**4564.** ஈண்டு நின்றெழுந் தீரைந்து நூறெழி
றூண்டு சோதிக் கொடுமுடி தோன்றலா
னீண்ட நேமி கொலாமென நேர்தொழ
வேண்டும் விந்த மலையினை மேவுவீர்.

'ஈண்டு நின்று எழுந்து ஈர் - ஐந்து நூறு எழில்
தூண்டு சோதிக் கொடுமுடி தோன்றலால்,
நீண்ட நேமிகொ லாமென நேர் தொழ
வேண்டும் விந்த மலையினை மேவுவீர்.

பொ :—இங்கு நின்றும் புறப்பட்டு, அழகுபெருகும் ஒளி நிறைந்த ஆயிரம் கிரகங்கள் தோன்றுதலால் நெடியோனுக வளர்ந்த

திருமாலோ என்று நேரே தொழுதற்குரியதாக விளங்கும் விந்த மலையை (முதலில்) சென்று சேருங்கள்.

கு :—விந்தமலை ஆயிரம் சிகரங்களையுடைமையால் ஆயிர மௌலியானைய திருமாலோ என வணங்கவேண்டிவரும் என்றவாறு. கொடுமுடி - சிகரம். திருமாலுக்கு ஆயிரமுடியுண்டு என்பதை. 'பதுமத்தாளும் ஆகத்தாளல்லள் மாயன் ஆயிர மௌலி மேலாள்' (சுந்தர - 1313) எனப் பின் கூறுதலாலும் அறியலாம். மாவலிபால் குறளனாகச் சென்று தானம் பெற்ற பின் நீண்ட உருவெடுத்த நிலையை நினைந்து 'நீண்ட நேமி' என்றார். அந்நீண்ட உருவே இவ்விந்திய மலைக்கு ஒப்பு என்றவாறு. திருமாலின் வடிவம் போன்றிருத்தலின் நேர்தொழத் தோன்றும் என்க. நேமி-சக்கரம்; அதனையுடைய திருமாலை ஆகுபெயராய் உணர்த்தியது. விந்தம் என்பது சூரிய சந்திரர் செலவைத் தடுப்பது என்ற காரணத்தால் வந்த பெயர்; அகத்தியரால் அடக்கப்பட்டது என்ற காரணமும் கூறுவர்.
(12)

நருமதையாறு

**4565.** தேடி யவ்வரை தீர்ந்தபின் றேவரு
மாடு கின்ற தறுபத மைந்தினைப்
பாடு கின்றது பன்மணி யாலிரு
ளோடு கின்ற நருமதை யுன்னுவீர்.

'தேடி, அவ்வரை தீர்ந்தபின், தேவரும்
ஆடுகின்றது, அறுபதம் ஐந்தினைப்
பாடுகின்றது, பல்மணியால் இருள்
ஓடுகின்ற நருமதை உன்னுவீர்.

பொ :—அந்த விந்த மலையில் (சீதையைத்) தேடித்தீர்ந்த பிறகு, தேவர்களும் விரும்பி வந்து நீராடப் பெறுகின்றதும், ஆறு கால்களையுடைய வண்டுகள் பஞ்சமம் என்னும் சுரத்தைப் பாடப் பெறுகின்றதும், அங்குள்ள பலவகை மணிகளால் இருள் ஓடப் பெறுகின்றதும் ஆய நருமதை என்னும் ஆற்றை நினைந்து, சேருங்கள்.

கு :—நருமதை என்பது மேற்கு நோக்கியோடும் ஓராறு. தேவரும் நீராடப் பெறுகின்றது என்பதால் நருமதையின் தூய்மையும், வண்டுகள் இசைபாடுகின்றது என்பதால் அதன் அழகும், மணிகளால் இருள் ஓடப்பெறுகின்றது என்பதால் அதன் வளனும் புலப்படுத்தியவாறு. தேவரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. ஆறு

கால்களை யுடைமையால் வண்டுக்கு அறுபதம் என்பது பெயராயிற்று. அவ்வாற்றிலுள்ள மலர்களில் நிறைந்த தேனையுண்ட களிப்பினால் வண்டுகள் பாடுவன ஆயின. ஐந்து என்றது பஞ்சமத்தை. சட்சம், ரிடபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்ற சுரம் ஏழில் பஞ்சமம் ஐந்தாவதாதல் காணலாம். ஆறு கொழித்து வீசும் உயர்ந்த மணிகளின் ஒளியால் இருள் அங்கு நில்லாது ஓடி விடும் என்க. உன்னுவீர் என்றது நினைந்து சேருங்கள் என்னும் கருத்தினது. (13)

## ஏமகூடமலை

**4566.** வாம மேகலை வானவர் மங்கையர்
காம வூசற் களியிசைக் கள்ளினாற்
றூம மேனி யசுணந் துயில்வுறு
மேம கூட மெனுமலை யெய்துவீர்.

'வாம மேகலை வானவர் மங்கையர்,
காம ஊசல் களி இசைக் கள்ளினால்,
தூம மேனி அசுணம் துயில்வுறும்
ஏம கூடம் எனும் மலை எய்துவீர்.

பொ :—அழகிய மேகலை அணிந்த தேவ மாதர்கள் விரும்பி யாடும் ஊசலிலிருந்து களிப்புமிக்குப் பாடும் இசைப் பாடலாகிய கள்ளினால், புகை போன்ற மேனியையுடைய அசுணம் என்னும் விலங்கு தூங்குதற்கு இடமான ஏமகூடம் என்னும் மலையை அடைவீர்களாக;

கு :—ஏமகூடம் என்னும் மலையில் தேவமாதர்கள் வந்து ஊசல் ஆடிக்கொண்டு பாடுவார்கள் என்பதும், அப்பாடலைக் கேட்டு அம் மலையில் உள்ள அசுணங்கள் மகிழ்ந்து உறங்கும் என்பதும் கூறி அம் மலையின் எழில் நலங்களைப் புலப்படுத்தியவாறு. அசுணம் உறங்கு தற்குக் காரணமாதல் பற்றி இசையைக் கள்ளாக உருவகம் செய் தார்; கள்ளையுண்டவர் அறிவு மயங்கி யுறங்குதல் இயல்பு. ஊசலா டுங்கால் களிப்பு மிகுதிப்படுதலும் அக்களிப்பால் அவ்வூசலாடுவோர் பாடுதலும் இயல்பாதல் தோன்ற 'ஊசற்களிஇசை' என்றார். அசு ணத்தின் நிறம் புலப்படுத்த 'தூமமேனி அசுணம்' என்றார். அசுணத்தைப் பறவை என்பாரும் உளர். 'மறையிற்றன் யாழ் கேட்ட மானை அருளாது' (கலி-143) என்புழி அசுணம் மான் என்றே கூறப்படுதலின் அது விலங்கு என்பது புலப்படும். துயில்வுறும

ஏமகூடம் என்புழிச் செய்யும் என்னும் பெயரெச்சம் நிலப்பெயர் கொண்டு முடிந்தது; துயிலுதற்கு இடமாகிய ஏமகூடம் என்க. ஏமகூடம் என்பது பொன்னிறமான சிகரங்களையுடையது என்னும் பொருளது. (14)

## வடபெண்ணை

**4567.** நொய்தி னம்மலை நீங்கி நுமரொடும்
பொய்கை யின்கரை பிற்படப் போதிராற்
செய்ய பெண்ணைக் கரியபெண் ணைச்சில
வைக றேடிக் கடிது வழிக்கொள்வீர்.

'நொய்தின் அம்மலை நீங்கி, நுமரொடும்
பொய்கையின் கரை பிற்படப் போதிரால்;
செய்ய பெண்ணைக் கரிய பெண்ணைச் சில
வைகல் தேடிக் கடிது வழிக் கொள்வீர்.

பொ :—அந்த ஏமகூட மலையை விரைவில் விட்டு நீங்கி நும் இனத்தவரோடும் அம்மலையை அடுத்துள்ள மடுவின்கரை பிற்படும் படி அப்பாற் செல்லுங்கள்; சிவந்த நிறமுடைய சீதையைக் கரிய (தெளிவான) நீரையுடைய வடபெண்ணை ஆற்றங்கரையில் சிலநாள் தேடிவிட்டு விரைவாகப் புறப்படுங்கள்.

கு :—தேவமாதர் ஆடும் தூய்மையுடையது ஏமகூடம் ஆதலின் அங்கு இராவணன் சீதையை வைத்திருக்கமாட்டான் என்ற துணி வால் அம்மலையிலும் அம்மலையை அடுத்துள்ள பொய்கைக் கரை யிலும் சீதையைத் தேடுமாறு கூறவில்லை போலும். அம்மலையின் எழில் நலங்கள் எத்தகையோர்க்கும் பலநாள் தங்கவேண்டும் என்ற விருப்பத்தைத் தரவல்லது ஆதலின், அங்ஙனம் தங்காது விரைந்து செல்க என்பான், 'நொய்தின் அம்மலை நீங்கி' என்றான், நொய்தின் - விரைவாக. சீதை செந்நிறத்தள் ஆதலின் அவளைச் செய்ய பெண் என்றார். செய்ய பெண்ணைக் கரிய பெண்ணை என்பது முரண் தொடை. தெளிவான நீர் கருநிறமாகத் தோற்றுதல் இயல்பு ஆதலின் தெளிந்த நீரையுடைய வடபெண்ணை நதியைக் கரிய பெண்ணை என்றார். தந்நிறம் போன்று கருத்துள்ள ஒற்றுமை பற்றி அப்பெண்ணை நதிக்கரையில் இராவணன் சீதையை வைத் திருத்தலும் கூடும் என்ற எண்ணத்தால் சில வைகல் தேடிப்பார்க்கு மாறு கூறினான்போலும். வைகல் - நாள்; கழியும் இயல்பினது என்ற காரணம்பற்றி வந்த பெயர். வழிக் கொள்ளுதல் - புறப் படுதல்; பயணமாதல். (15)

## தண்டகம்

**4568.** தாங்கு மாரகி றருவளர் சந்தனம்
வீங்கு வேலி விதர்ப்பமு மெல்லென
நீங்கி நாடு நெடியன பிற்படத்
தேங்கு வார்புனற் றண்டகஞ் சேர்திரால்.

'தாங்கும் ஆர் அகில் தருவளர் சந்தனம்,
வீங்கு வேலி விதர்ப்பமும், மெல்லென
நீங்கி நாடு நெடியன பிற்படத்
தேங்கு வார்புனல் தண்டகம் சேர்திரால்.

பொ :—நறுமணத்தைத் தாங்கியுள்ள அரிய அகில் மரங்களையும் ஓங்கி வளர்ந்துள்ள சந்தன மரங்களையும் பெரிய வேலியாகக் கொண்டுள்ள விதர்ப்ப நாட்டையும் நெடியனவாகிய பிறநாடுகளையும் பிற்படும்படி மெல்லக் கடந்து சென்று தேங்கிக் கிடக்கும் மிக்க நீரையுடைய தண்டகவனத்தைச் சேருங்கள்.

கு :—விதர்ப்ப நாட்டில் அகிலும் சந்தனமும் மிகுதியாக வளர்ந்து கிடக்கும் என்பார் அவற்றையே இங்கு வேலியாகக் கூறினர். விதர்ப்பமும் நெடியன நாடும் பிற்பட மெல்லென நீங்கித் தண்டகம் சேர்திர் என இயையும். நெடுந் தொலைவு செல்லவேண்டியிருத்தலின் 'மெல்லென நீங்கி' என்றார். தேங்குதல்-நிறைதல். தண்டகன் என்ற பெயரையுடைய அரசன் விந்திய மலைக்கும் கைலை மலைக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பைத் தன் ஆட்சிக்குள்ளாக்கி மதுமந்தம் என்கின்ற நகரை அமைத்து அங்கு அரசாண்டு வரும் போது ஒரு நாள் தன் குருவாகிய சுக்கிராச்சாரியின் ஆசிரமத்திற்குச் சென்று அவர் மகளாகிய அரசை என்பாளை விரும்பி வலியக் கற்பழித்தானாக, அதனை அறிந்த சுக்கிரன் சினந்து ஏழு நாட்களுள் அவன் குடும்பத்தோடும் அழிய நாடும் பாழாக வேண்டும் எனச் சபிக்க அவ்வாறே அந் நாடும் அவனும் மண்மழையால் அழிந்து காடாகியது. பின்பு அவ்வரசன் பெயரால் தண்டகவனம் என அக்காடு வழங்கப் பெற்றது. அவ்வனமே பின் பலகாலம் கழித்து நீர்வளம் முதலிய நிரம்பப் பெற்று முனிவர் தவஞ்செயும் இடமாயிற்று. (16)

## முண்டகத்துறை 4569-4571

**4569.** பண்ட கத்தியன் வைகிய தாப்பகர்
தண்ட கத்தது தாபதர் தம்மையுட்

கண்ட கத்துயர் தீர்வது காண்டிரான்
முண்ட கத்துறை யென்ருெரு மொய்பொழில்.

பண்டு அகத்தியன் வைகியதாப் பகர்
தண்டகத்தது, தாபதர் தம்மை உள்
கண்டு, அகத்துயர் தீர்வது காண்டிரால்
முண்டகத் துறை என்று ஒரு மொய்பொழில்.

பொ :—முண்டகத்துறை என்று மரங்கள் செறிந்த ஒரு பொழில்-முற்காலத்து அகத்தியன் தங்கியிருந்ததாகச் சொல்லப்படுகின்ற தண்டகவனத்தில்-உள்ளது; தவமுனிவர்கள் தம் ஆன்மாவை, பொறிகளினின்றும் பிரித்துக் கண்டு இறைவனை யடைந்து மனத் துயர் தீர்தற்கு இடமானது; அதனைக் காண்பீர்களாக.

கு :—பொழில் தண்டகத்தது, துயர்தீர்வது காண்டிர் என இயையும். அகத்தியன் வைகியதாகப் பகரப் பெற்றது தண்டகத்தில் உள்ள முண்டகத் துறையேயாம். அம்முண்டகத் துறையில் தாபதர்கள் தவஞ் செய்து கொண்டு துயர் இன்றி இருக்கின்ருர்கள் என்பார், 'தாபதர் தம்மை யுட்கண்டு அகத்துயர் தீர்வது என்ருர். தம்மை யுட்கண்டு என்பது தவத்தின் தன்மையைப் புலப்படுத்தியதாகும். தம்மைக் காண்டலும் அதன்பின் தம்முள் உறையும் இறைவனைக் காண்டலுமே தவமாதல் ஓர்க. '' தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார் '' (சிவஞான போதம் அவையடக்கம்) எனவும், " இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேருவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையு மென்றது, ஊசல் கயிறற்ருல் தாய் தரையே யாந் துணையான் '' (சிவபோதம் சூ. 8. அதி 4. வார்த்திகப் பொழிப்பு) எனவும் மெய்கண்டார் கூறியுள்ளதும் காணலாம். தம்மைக் காண்டலாவது ஆன்மாத் தன்னை இந்திரியத்தின் வேருக உணர்வது; அவ்வாறு உணர்ந்த ஆன்மா இறைவன் பாதத்தை அடைதல் திண்ணமாதலின் 'தம்மையுட் கண்டு அகத்துயர் தீர்வது' என்ருர். இறைவனை அணையாவழி அகத்துயர் தீராமை அறிக. இனி, முண்டகத்துறை தண்டகத்தது; அம்முண்டகத்துறையுள் தாபதர் தம்மை நீர் கண்டு, அக்காட்சி மாத்திரத்தால் உங்கள் அகத்துயர் தீர்வதை அநுபவத்தால் உணருங்கள் எனத் தாபதரைக் காண்டலால் வரும் பயனைக் கூறினன் எனலும் ஆம். (17)

**4570.** ஞால நுங்குற நல்லறத் தோர்பொருள்
போல நின்று பொலிவது பூம்பொழில்

சீல மங்கையர் வாயெனத் தீங்கனி
கால மின்றிக் கனிவது காண்டிரால்.

ஞாலம் நுங்குற நல் அறத்தோர் பொருள்
போல நின்று பொலிவது பூம்பொழில்
சீல மங்கையர் வாய் எனத் தீங்கனி
காலம் இன்றிக் கனிவது காண்டிரால்.

பொ :—முண்டகத்துறை என்கின்ற அப் பூம்பொழில் நல்லறத்தை மேற்கொண்ட அருளாளரின் பொருள் பலர்க்கும் பயன்படுமாறு போல இவ்வுலகத்து உயிர்கள் எல்லாம் உண்ணக்கனிந்து நின்று விளங்குவது; மேலும், ஒழுக்கத்திற் சிறந்த மங்கைப் பருவத்து நங்கையரின் வாயிதழ்போலத் தித்திக்கும் இனிய கனிகள் காலமல்லாத காலத்தும் கனிவதற்கு இடமாயிருப்பது, அதனைக் காணுங்கள்.

கு :—ஞால நுங்குற நின்று பொலிவது என இயையும். பொழில் பொலிவது; கனிவது; அதனைக் காண்டிரால் என்க. "பயன் மர முள்ளூர்ப் பழுத்தற்றூற் செல்வம் நயனுடையான்கட் படின்" (குறள்-216) என்பதில் உள்ள உவமையைப் பொருளாக்கிக் கூறியவாறு, நல்லறத்தோர் பொருள் என்றது; நயனுடையான்கண்பட்ட செல்வத்தை; பொழில் ஞாலம் நுங்குற நின்று பொலிவது என்றது, பயன் மரங்கள் பல்லுயிர்க்கும் பயன்படுமாறு பழுத்து நிற்றலை. பின் இரண்டடிகளால், அக்கனியின் சுவை மிகுதியும், காலமல்லாத காலத்தும் - எக்காலத்தும் அது பழுத்தலையும் புலப்படுத்தியவாறு. "பாலொடு தேன் கலந்தற்றே பணிமொழி வாலெயி றூறிய நீர்" (குறள்-1121) என்பதால் மங்கையரின் வாயிதழின் இனிமை புலப்படும்; வாயெனக் கனிவது என்ன அக்கனியின் இனிமை புலப்படுத்தியவாறு. நுங்குதல்-உண்ணுதல். (18)

**4571.** நயன நன்கிமை யார்துயி லார்நனி
யயன மில்லை யருக்கனுக் கவ்வழி
சயன மாதர் கலவித் தலைத்தரும்
பயனு மின்பமு நீரும் பயக்குமால்.

'நயனம் நன்கு இமையார்; துயிலார் நனி
அயனம் இல்லை அருக்கனுக்கு அவ்வழி;
சயன மாதர் கலவித் தலைத் தரும்
பயனும் இன்பமும், நீரும் பயக்குமால்.

பொ :—(அங்கு உள்ளவர்கள்) கண்களை நன்கு இமைக்கமாட்டார்கள்; மிகுதியாகத் தூங்கவும் மாட்டார்கள்; மரங்களின் செறிவால் சூரியன் நுழைதற்குரிய வழி அவ்விடத்தில் இல்லை. படுக்கையில் பெண்டிர் கலவியில் தருகின்ற போகம் போன்ற சுகத்தையும் மகிழ்ச்சியையும் இயல்பையும் (அது எப்பொழுதும்) உண்டாக்கும்.

கு :—முண்டகத்துறையில் வாழ்கின்றவர்கள் தேவர்களாக மாறும் நிலையை எய்துகின்ருர்கள் என்பார் "நயனம் நன்கு இமையார்; துயிலார் நனி" என்ருர். இமையாமையும் துயிலாமையும் தேவர்கள் இயல்பு. முண்டகத் துறையில் உள்ள போழ்தே மக்கள் அத்தேவர் இயல்பைப் பெறுகின்ருர்கள் என்றவாறு. இமையார் என்னுது நன்கிமையார் என்றதும், துயிலார் என்னுது துயிலார் நனி என்றதும் இவர்கள் தேவர்கள் அல்லர் என்பதைப் புலப்படுத்தவேயாம். அயனம்-வழி. அருக்கன்-சூரியன். சூரியன் கதிர் நுழைதற்கு வழியில்லாதபடி மரங்கள் செறிந்துள்ளமை புலப்படுத்தியவாறு. "வெயில் நுழைபறியாக் குயில் நுழை பொதும்பர்" (பெரும்பாண்-374) என்றதுங் காண்க. மூன்ருமடி, 'மடவாரோடும் பொருந்தணைமேல் வரும் பயனை (7-1-5) என்ற அப்பர் வாக்கை நினைப்பிக்கின்றது. நீர் - இயல்பு. இனிப் பயன் என்றது உடம்பிற்கு வரும் சுகத்தையும் இன்பம் என்றது மனத்துக்கண் நிகழும் மகிழ்ச்சியையும் நீர் என்றது பணிமொழியார் வாலெயிறு ஊறிய நீர் போன்ற சுவை மிக்க நீராற் பெறும் வாயின் சுவையையும் குறித்ததாகவும் கொள்ளலாம். நீரும் என்பதற்கு நீர்வளத்தையும் எனப் பொருள் கூறலும் ஆம். (19)

## பாண்டுவின் மலை

4572. ஆண்டி றந்தபி னந்தரத் திந்துவைத்
தீண்டு கின்றது செங்கதிர்ச் செல்வனு
மீண்டு றைந்தல தேகல மென்பது
பாண்டு வின்மலை யென்னும் பருப்பதம்.

'ஆண்டு இறந்தபின், அந்தரத்து இந்துவைத்
தீண்டுகின்றது ; செங்கதிர்ச் செல்வனும்
ஈண்டு உறைந்து அலது ஏகலம்' என்பது,
பாண்டுவின்மலை என்னும் பருப்பதம்.

பொ :—'அவ்விடத்தைக் கடந்த பிறகு, விண்ணில்திரியும் சந்திரனைத் தொடுவதும் சிவந்த கிரணங்களாகிய செல்வத்தையுடைய

சூரியனும் இங்குத் தங்கியன்றிச் செல்லமாட்டோம்' என்று எண்ணு தற்குரியதும் ஆகிய பாண்டுமலை என்னும் மலை (உளது; அதனைச் சேருங்கள்.)

கு :—பாண்டுமலையின் உயர்ச்சியைப் புலப்படுத்த இந்துவைத் தீண்டுகின்றது எனவும் 'செங்கதிர்ச் செல்வனும் ஈண்டுறைந்தலது ஏகலம் என்பது' எனவும் கூறினர். மாடத்தின் உயர்ச்சி கூற வந்த புலவர் "பருந்திருந் துகக்கும் பன்மாண் நல்லில்" (மதுரைக் காஞ்சி 502) என்று கூறியுள்ளது இங்கு ஒப்புநோக்கத்தகும். சூரியன் செல்லும் வழியில் உயர்ந்து தோன்றுதல் பற்றி அம்மலையில் இளைப் பாறி விட்டுப் பின் அதைக் கடந்து செல்வான் சூரியன் என்றவாறு. ஏகலம் என்றது. ஏகும் ஆற்றலை உடையேம் அல்லேம் எனத் தனித் தன்மைப் பன்மையாகச் சூரியன் எண்ணிய எண்ணமாகக் கொள்க. இனி அம்மலையிற் றங்கிப் பெறும் இன்பம் கருதி அங்ஙனம் எண்ணி னன் என்றும் கூறலாம். பருப்பதம் - மலை; வடமொழி தமிழாக்கம் பெற்றது. பருப்பதம் உளது; அதனை அடையுங்கள் என இசை யெச்சமாக வேண்டும் சொல் வருவிக்கப் பெற்றன. (20)

## கோதாவரி

**4573.** ★
முத்தீர்த்துப் பொன்றிரட்டி மணியுருட்டி
முதுநீத்த முன்றி லாயர்
மத்தீர்த்து மரனீர்த்து மலையீர்த்து
மானீர்த்து வருவ தியார்க்கும்
புத்தீர்த்திட் டலையாமற் புலவர்நா
டுதவுவது புனித மான
வத்தீர்த்த மகன்கோதா வரியென்ப
ரம்மலையி னருகிற் றம்மா.

முத்து ஈர்த்துப் பொன் திரட்டி மணி உருட்டி,
முது நீத்தம் முன்றில் ஆயர்
மத்து ஈர்த்து மரன் ஈர்த்து, மலை ஈர்த்து
மான் ஈர்த்து வருவது; யார்க்கும்
புத்து ஈர்த்திட்டு அலையாமல், புலவர் நாடு
உதவுவது; புனிதம் ஆன
அத் தீர்த்தம் அகன் கோதாவரி என்பர்;
அம்மலையின் அருகிற்று அம்மா!

பொ :—பெரிய வெள்ளம் (மலையிலிருந்து) முத்துக்களை யிழுத்துக் கொண்டும் பொன்னை வாரிக்கொண்டும் மாணிக்கம் முதலிய மணிகளை யுருட்டிக்கொண்டும், இடையரின் முற்றத்திலுள்ள மத்தினை யிழுத்துக்கொண்டும், மரங்களை யிழுத்துக்கொண்டும், குன்றுகளை இழுத்துக்கொண்டும், மான் முதலிய விலங்குகளை இழுத்துக்கொண்டும் வரும் இயல்புடையதும், (தன்பால் மூழ்கியவர்) யார்க்கும் நரகத்தை நீக்கி, தவம் செய்து அலையாமல் தேவர் உலகத்தை எளிதாகத் தரவல்லதும் ஆகிய புனிதத்தன்மையுடைய அந்தத் தீர்த்தம் விரிந்துள்ள கோதாவரி நதி என்பர்; அது அப் பாண்டுமலையின் அருகில் உள்ளது.

கு :—முது நீத்தம் என்புழி முதுமை பெருமையை யுணர்த்தியது. முன்னிரண்டடிகளால் கோதாவரியின் வளமும் வன்மையும் விரைவும் உணர்த்தி, மூன்ருமடியால் அதன் புனிதத்தன்மையை யுணர்த்திய வாறு. மலையில், மூங்கிலில் தோன்றும் முத்துக்களும் யானை மருப்பில் பிறக்கும் முத்துக்களும் இருத்தலின் அம்முத்துக்களையும் அங்குள்ள பொன்னையும் மணிகளையும் முல்லை நிலத்துள்ள ஆயர் முன்றில் மத்துக்களையும் மரங்களையும் விலங்குகளையும் அடித்துக்கொண்டு வரு கின்றது கோதாவரி என்றவாறு. மலையின் பகுதியாகிய சிறு குன்று களை அடித்து வருதலும் உண்டாதலின் ‘மலையீர்த்து’ என்றும் கூறினர். புத்து என்றது மகப் பேறற்ருேர் எய்தும் ஒரு நரக விசேடம்; அச் சொல் இங்குப் பொதுப் பொருளில் வந்துளது. கோதாவரியில் மூழ்கினோர் நரகம் எய்தார்; பிள்ளைப்பேறு பெற்றுச் சுவர்க்கம் எய்துவர் என்றவாறு. புத்தீர்த்திட்டு என்புழி ஈர்த்தல், அறுத்தல், நீக்குதல் என்ற பொருளில் வந்துளது. தேவர் உலகம் அடைதற்குத் தானமும் தவமும் செய்து அலையவேண்டி யிருத்தலின் அவ்வலைச்சல் வேண்டா என்பார் ‘அலையாமல்’ என்ருர். புலவர் என்றது தேவரை. (21)

## சுவண நதி

**4574.** அவ்வாறு கடந்தப்பா லறத்தாறே
யெனத்தெளிந்த வருளி னாறும்
வெவ்வாரு மெனக்குளிர்ந்து வெயிலியங்கா
வகையிலங்கும் விரிபூஞ் சோலை
யெவ்வாறு முறத்துவன்றி யிருளோட
மணியிமைப்ப திமையோர் வேண்டத்
தெவ்வாறு முகத்தொருவன் றனிக்கிடந்த
சுவணத்தைச் சேர்திர் மாதோ.

அவ் ஆறு கடந்து அப்பால், அறத்து ஆறே
எனத் தெளிந்த அருளின் ஆறும்,
வெவ் ஆறு ஆம் எனக் குளிர்ந்து, வெயில் இயங்கா
வகை இலங்கும் விரிபூஞ் சோலை,
எவ் ஆறும் உறத்துவன்றி, இருள் ஓட
மணி இமைப்பது, இமையோர் வேண்ட,
தெவ் ஆறு முகத்து ஒருவன், தனிக் கிடந்த
சுவணத்தைச் சேர்திர் மாதோ.

பொ :—அந்தக் கோதாவரி ஆற்றைக் கடந்து அப்புறம் - அற நெறியே என எல்லோராலும் தெளியப் பெற்ற அருளாகிய ஆறும் வெப்பமுடைய ஆறே ஆம் என்னுமாறு மிகக் குளிர்ந்து, வெயில் நுழையாதபடி விளங்கும் விரிந்த பூஞ்சோலைகள் எந்தப் பக்கத்தும் மிக நெருங்கப் பெற்று, (பூஞ்சோலையின் அடர்த்தியாய) இருள் ஓடுமாறு மணிகள் ஒளி வீசப் பெறுவதாகிய,—தேவர்கள் வேண்டிக் கொள்ளுதலால் கொண்ட ஆறுமுகங்களையுடைய ஒருவனாகிய முருகன் தனியே தங்கியிருந்த சுவணம் என்னும் ஆற்றைச் சேருங்கள்.

கு :—அப்பாற் சுவணத்தை சேர்திர் என்க. குளிர்ந்து துவன்றி இமைப்பது ஆகிய சுவணம், ஒருவன் கிடந்த சுவணம் எனத் தனித் தனி இயையும். அறநெறிக்குக் குளிர்ச்சியும் பாவ நெறிக்கு வெப்பமும் கூறல் மரபு. அறத்தாறே எனத் தெளிந்த அருளின் ஆறு மிகக் குளிர்ச்சியுடையதே ஆயினும் சுவண நதியின் குளிர்ச்சிக்குக் குறைந்திருத்தல் பற்றி 'அருளினாறும் வெவ்வாரும் எனக் குளிர்ந்து' என்றார்; 'கரும்பு கசக்கும் மொழிபெற்றாள்' (பிரபுலிங்கலீலை - 357) என்றாற்போல. அருளினாறு என்புழி இன் தவிர்வழிச் சாரியை. அருளாறு என்பது அருள் நெறி என்பதே பொருள் ஆயினும் அருள் வெள்ளம் என்றாற்போல அருள் நதி என்ற பொருளும் தோன்றக் கூறியுள்ளார். 'தெவுக்கொளற் பொருட்டே' (தொல்-சொல் - 345) என்றபடி இமையோர் வேண்டத் தெவு என்பதற்குப் பொருள் கூறப்பட்டது. தெவ்வாறு என்புழி வகரம் விரித்தல் விகாரம் பெற்றது எதுகை நோக்கி. தேவர்கள் வேண்டக் கொண்ட ஆறு முகங்களையுடைய முருகன் என்க. முருகன் சுவணத்தில் தனிக் கிடந்த வரலாறு புலப்படவில்லை. (22)

சந்திரகாந்தம், கொங்கவை, குலிந்தம்

**4575.** சுவணநதி கடந்தப்பாற் சூரியகாந்
தகமென்னத் தோன்றி மாதர்
கவணுமிழ்கல் வெயிலியங்குங் கனவரையுஞ்
சந்திரகாந் தகமுங் காண்டீ
ரவணவைநீத் தேகியபி னகனாடு
பலகடந்தா லனந்த னென்பா
னுவணபதிக் கொளித்துறையுங் கொங்கணமுங்
குலிந்தமுஞ்சென் றுறுதிர் மாதோ.

சுவணநதி கடந்து, அப்பால், சூரிய காந்தகம்
என்னத் தோன்றி, மாதர்
கவண் உமிழ்கல் வெயில் இயங்கும் கனவரையும்,
சந்திர காந்தகமும், காண்டீர்
அவண் அவை நீத்து ஏகியபின், அகல்நாடு
பல கடந்தால், அனந்தன் என்பான்
உவண பதிக்கு ஒளித்து உறையும் கொங்கணமும்,
குலிந்தமும், சென்று உறுதிர் மாதோ.

பொ :—சுவண நதியைத் தாண்டிச் சென்று அதன் பின்னர்,—(தினைப்புனம் காக்கும்) மகளிரின் கவண் வெளிப்படுத்தும் (மாணிக்கக்) கற்கள், சூரிய காந்தக் கல் என்று காண்போர் எண்ணுமாறு தோன்றி வெயில் வீசிக்கொண்டு செல்லுதற்கு இடமான பெரிய மலையாகிய சந்திர காந்தம் என்னும் மலையைக் காண்பீர்கள்; அவ்விடத்து அம் மலையையும் அம் மலைத் தொடர்களையும் கடந்து சென்ற பின் விரிவான நாடுகள் பலவற்றைக் கடந்து சென்றால், ஆதிசேடன் கருடனுக்கு அஞ்சி மறைந்து வாழ்கின்ற கொங்கண தேயத்தையும், அதன்பின் குலிந்த தேயத்தையும் சென்று அடைவீர்கள்.

கு :—மாது, ஓ அசைகள். சுவண நதியைக் கடந்து அப்பால் சந்திர காந்தகமும் காண்டிர் என்க. சந்திர காந்தம் என்பது மலையின் பெயர். அம்மலையில் தினைப்புனங் காக்கும் குறமகளிர் வீசும் கவணிலிருந்து வெளிப்படும் கற்கள் மாணிக்கக் கற்களே ஆதலின், அக்கற்கள் சூரியனைக் கண்டு வெயிலுமிழும் சூரிய காந்தக் கல்லைப் போல வெயில் வீசிக்கொண்டு அப் பெண்டிர் குறி பார்த்தெறிந்த இடத்திற்குச் செல்லுகின்றன என்றவாறு. கவணுமிழ்கல் வெயில் இயங்கும் என்றதால் அம்மலையின் வளம் புலப்படுத்தியவாறு; குழைகொண்டு கோழி யெறியும் வாழ்க்கையர் எனச்

செல்வச் சிறப்புக் கூறுவது காணலாம். வெயில் வீசி இயங்குதல் கூறினமையாலும் 'சூரியகாந்தகம் என்னத் தோன்றி' என்றமையாலும் கவணுமிழ் கல் மாணிக்கக் கல் என்பது பெறப்படும். "நாகத்தின் மேற் குறவர் நன்கெறிந்த மாணிக்கம் மேகத்தின் மின் புரையும் வேங்கடமே" (திருவேங்கடமாலை - 46) "ஊரும் வரியரவ மொண்குறவர் மால்யானை பேரவெறிந்த பெருமணியை—காருடைய மின்னென்று புற்றடையும் வேங்கடமே" (முதல் திருவந்தாதி - 38) என்றதும் காணலாம். சந்திரகாந்த மலையில் சூரியகாந்தத்தின் தோற்றமும் உண்டு என்று காட்டிய திறம் காணத்தக்கது. சந்திர காந்த மலையின் தொடர்களையும் குறிக்க 'அவை நீத்து' எனப் பன்மையால் கூறியவாறு. உவணபதி - கருடன்; பொற் சிறகுகளையுடையவன் பறவைகளுக்குப் பதி என்று பொருள். அனந்தன் - ஆதிசேடன். கொங்கண தேயத்து ஒரு தலத்தின் சிறப்புக் கூறியவாறு. (23)

## அருந்ததி மலை

4576. அரனதிக னுலகளந்த வரியதிக
னென்றுரைக்கு மறிவி லோர்க்குப்
பரகதிசென் றடைவரிய பரிசேபோற்
புகலரிய பண்பிற் றுமாற்
சுரநதியி னயலதுவான் றேய்குடுமிச்
சுடர்த்தொகைய தொழுதோர்க் கெல்லாம்
வரனதிகந் தருந்தகைய வருந்ததியா
நெடுமலையை வணங்கி யப்பால்.

"அரன் அதிகன், உலகு அளந்த அரி அதிகன்"
என்று உரைக்கும் அறிவு இலோர்க்குப்
பரகதி சென்று அடைவு அரிய பரிசே போல்
புகல் அரிய பண்பிற்று ஆமால்;
சுர நதியின் அயலது, வான் தோய் குடுமிச்
சுடர்த் தொகைய, தொழுதோர்க்கு எல்லாம்
வரன் அதிகம் தரும் தகைய அருந்ததி ஆம்
நெடுமலையை வணங்கி அப்பால்.

பொ :—சிவன் உயர்ந்தவன் என்றும், உலகத்தை அளந்த திருமால் உயர்ந்தவன் என்றும், ஒரு தன்மையராய அவ்விருவர்க்கும் ஏற்றத்தாழ்வுகள் கற்பித்து வாது செய்து திரியும் ஞானமில்லாத

வர்க்குச் சென்று புகுதற்கு அரிய பரகதியின் தன்மைபோல யாரும் புகுதற்கறிய இயல்பையுடையது; விண்ணில் ஓடுகின்ற தேவ கங்கையின் அருகில் உள்ளது; ஆகாயம் அளாவிய ஒளி மிக்க சிகரங்களின் தொகையையுடையதும், தன்னை வணங்கினவர்க்கெல் லாம் அதிகமாக வரம் தரும் தன்மையை யுடையதும் ஆகிய அருந்ததி என்னும் பெயருடைய உயர்ந்த மலையை (நீவிர்) வணங் கிப் பின்னர்—

கு:—அடுத்த செய்யுளில் 'அதன்புறஞ் சாரவேகிர்' என்பத ேடு முடியும். "அரியுஞ் சிவனு மொன்று; அதை யறியார் வாயில் மண்ணு" என்னும் பழமொழியை விளக்குவது இச் செய்யுளின் முதற் பகுதி. இதனால் கம்பரின் சைவ வைணவ சமரசக் கொள்கை புலனும் என்பர். வாது பேசித் தம் கருத்தை நிறுவுவதில் நோக்க முடையோர்க்குக் கடவுள் திருவடிகளை நீடு நினைந்துருகும் பேறு வாய்க்காமையால் அவர்க்கு வீடு புகல் இயலாது என்றவாறு. அறிவிலோர்க்குச் சென்றடைவரிய பரகதிப் பரிசேபோல் புகலரிய பண்பிற்று என இயைக்க. ஆம், ஆல் அசைநிலை. பண்பிற்று, அயலது. சுடர்க்குடுமித்தொகைய - தருந்தகைய - அருந்ததியாம் நெடுமலை என்க. தொகைய, தகைய என்புழி அகரம் குறிப்புப் பெயரெச்ச விகுதி. வேறு பல அடுக்கி வந்த குறிப்புப் பெயரெச் சங்கள், அருந்ததியாம் நெடுமலை என்ற ஒரு பெயரைக் கொண்டன. சுடர்க்குடுமித் தொகைய என இயைக்க. ஒளி மிக்க பல சிகரங்களை யுடையது அருந்ததி மலை ஆதலின் 'குடுமித் தொகைய' என்றார். தொகை என்பது பல என்னும் பொருளது. யாரும் புகலரிய பண் பிற்று என்றதால் அங்கு நீங்களும் புகல் வேண்டா என்னும் குறிப்பும் தொழுதோர்க்கு அதிகம் வரம் தருந்தகையது ஆகலின் நீங்களும் அம்மலையை வணங்கி அதிகம் வரம் பெறுங்கள் என்னும் குறிப்பும் பெறப்படும். அருந்ததி மலை யாரும் புகுதற்கு அரிதாகலின் அங்குத் தேடவேண்டுவதில்லை என்றவாறு. (24)

**4577.** அஞ்சுவரும் வெஞ்சுரனு மாறுமகன்
 பெருஞ்சுனையு மகிலோங் கார
மஞ்சிவரு நெடுங்கிரியும் வளநாடும்
 பிற்படப்போய் வழிமேற் சென்று
னஞ்சுவரு மிடற்றரவுக் கமிழ்துநனி
 கொடுத்தாயைக் கலுழ னண்ணு
மெஞ்சின்மர கதப்பொருப்பை யிறைஞ்சியதன்
 புறஞ்சார வேகிர் மாதோ

அஞ்சுவரும் வெஞ் சுரனும், ஆறும், அகன்
பெருஞ் சுனையும் அகில் ஓங்கு ஆரம்
மஞ்சு இவரும் நெடுங் கிரியும், வள நாடும்,
பிற்படப்போய் வழிமேல் சென்ருல்,
நஞ்சு வரும் மிடற்று அரவுக்கு, அமிழ்துநனி
கொடுத்து ஆயைக் கலுழன் நண்ணும்
எஞ்சு இல் மரகதப் பொருப்பை இறைஞ்சி, அதன்
புறம் சார ஏகிர் மாதோ.

பொ :—எல்லா உயிர்களும் அஞ்சுதற்குக் காரணமான வெப்பம் மிக்க பாலைவனமும், ஆறுகளும், அகன்ற பெரிய சுனைகளும், அகிலையும் உயர்ந்து வளர்ந்த சந்தன மரங்களையும் உடையதும் மேகங்கள் தவழ்கின்றதும் ஆகிய நீண்ட மலைகளும், வளப்ப மிக்க நாடுகளும், உங்களுக்குப் பிற்படுமாறு அவற்றைத் தாண்டிச் சென்று அதற்குமேல் உள்ள வழியில் நடந்து சென்ருல், விடம் பொருந்திய வாயினையுடைய பாம்புகளுக்கு அமிழ்தத்தை மிகுதியாகக் கொடுத்து விட்டு அடிமைப்பட்டிருந்த தன் தாயாகிய விநதையை விடுவித்துக் கருடன் கிட்டுதற்கு இடமாக இருந்த குறைவிலா வளமுடைய மரகத மலையை(க் காண்பீர்கள்; அதை) வணங்கி விட்டு அம்மலையின் பக்கத்தே பொருந்தச் செல்லுங்கள்.

கு :—அருந்ததி மலைக்கும் மரகதமலைக்கும் இடையில் பாலை வனமும் ஆறுகளும் மலைகளும் நாடுகளும் பல இருந்தன ஆதலின் அவற்றைக் கடந்து செல்ல வேண்டும் என்றவாறு. பிற்படப் போத லாவது கடந்து செல்லுதல். நாட்டைக் கடந்த பின்னரும் செல்ல வேண்டிய வழி இருத்தலின் 'வழிமேற்சென்ருல்' என மேலுங் கூறினர். சென்ருல் மரகதப் பொருப்பைக் காண்பீர் அதை இறைஞ்சி என வேண்டுஞ்சொல் இசையெச்சமாக வருவிக்கப் பட்டன. மரகதமலையின் வரலாற்றுச் சிறப்பு மூன்ருமடியில் விளக் கப்பட்டது. கருடனும் பாம்புகளும் காசிபர்க்கு விநதையினிடத்தும் கத்துருவினிடத்தும் பிறந்தவர்களாயினும் உச்சைச் சிரவம் என்ற தேவலோகத்துக் குதிரையின் வாலைப்பற்றி விநதைக்கும் கத்துரு வுக்கும் நிகழ்ந்த விவாதத்தில் கத்துரு சூழ்ச்சியால் வென்று விநதையை அடிமையாக்கினுள்; விநதையின் மகன் கலுழனும் அடிமையானுன். இந்த அடிமைத்தளையை அகற்றுவது எங்ஙனம் எனக் கருடன் ஏங்கியிருந்தபோது கத்துருவின் மக்களாகிய பாம்புகள், தேவர் உலகத்துள்ள அமுத கலசத்தைக் கொணர்ந்து கொடுத்தால் நும் அடிமைத்தன்மையிலிருந்து விடுதலை பெறலாம் எனக் கூறின. கருடன் தன் வலிமையும் திறமையுங் காட்டி அமுத

கலசத்தைக் கொணர்ந்து கொடுத்துத் தன் தாயை அடிமைத் தளையி னின்றும் விடுதலை செய்து கிட்டிய இடம் மரகதமலையாகும். அத்த கைய புனித மலையாதலின் அதனை இறைஞ்சிப் புறஞ்சார ஏகுமாறு கூறினன். ஏகுதிர் எனற்பாலது ஏகிர் என மருவிற்று. (25)

4578. வடசொற்குந் தென்சொற்கும் வரம்பிற்றாய்
நான்மறையு மற்றை நூலு
மிடைசொற்ற பொருட்கெல்லா மெல்லையதாய்
நல்லறத்துக் கீறாய் வேறு
புடைசுற்றுந் துணையின்றிப் புகழ்பொதிந்த
மெய்யேபோற் பூத்து நின்ற
வடைசுற்றுந் தண்சார லோங்கியவேங்
கடத்திற்சென் றடைதிர் மாதோ.

'வடசொற்கும் தென்சொற்கும் வரம்பிற்றாய்
நான்மறையும் மற்றை நூலும்
இடை சொற்ற பொருட்கு எல்லாம் எல்லையதாய்
நல் அறத்துக்கு ஈறாய் வேறு
புடை சுற்றுந் துணையின்றிப் புகழ் பொதிந்த
மெய்யேபோல் பூத்து நின்ற
அடை சுற்றும் தண்சாரல் ஓங்கிய
வேங்கடத்தில் சென்று அடைதிர் மாதோ.

பொ:—வடமொழிக்கும் தமிழுக்கும் எல்லையாகியும், நான்கு வேதங்களும் மற்றை நூல்களும் தம்மிடத்தில் குறித்த எல்லாப் பொருள்கட்கும் முடிவான பொருளாகிய திருமாலைத் தன்னிடத்தில் கொண்டுள்ளதாயும், நல்ல அறச் செயல்களுக்கு வரம்பாகியும், பக்கத்தில் வைத்துச் சொல்லத்தக்க உவமைப் பொருள் வேறு ஒன்றும் இல்லாமல் புகழ் நிறைந்த சத்தியம் (ஒப்பற்றுப் பொலிந்து நிற்றல்போல்) தனக்குவமையின்றிப் பொலிந்து நிற்கின்ற-தேன டைகள் சூழ்ந்துள்ள குளிர்ந்த தாழ்வரைகளையுடைய-உயர்ந்த வேங் கடமலையில் சென்று சேருங்கள்.

கு:—வேங்கடமலைக்கு வடக்கேயுள்ள தெலுங்கு மொழி முதலிய எல்லா மொழிகளும் வடமொழி வழிவந்தன ஆதலின் அவற்றையும் வடமொழியாகவே கொண்டு வடசொற்கு வரம்பாகி என்றார். வட சொல் வழங்கும் நாட்டிற்குத் தென் எல்லையாகி என்பது பொருள். தென் சொல் என்றது தமிழை. 'வட வேங்கடம் தென்குமரி

ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்து' (தொல் - பாயிரம்) என்புழி வேங்கடமலையைத் தமிழ் வழங்கும் நாட்டிற்கு வடவெல்லையாகக் கூறியுள்ளமை காணலாம். நான்கு வேதங்களும் அவற்றைத் தழுவி யெழுந்த மற்றை நூல்களும் கூறும் பொருள்கட்கெல்லாம் மேலான பொருளாகிய திருமாலைத் தன்பால் கொண்டுள்ளமையால் வேங்க டத்தை "நான் மறையும் மற்றை நூலும் இடை சொற்ற பொருட் கெல்லாம் எல்லையதாய்" என்றார். மற்றைநூலாவன சிட்சை முதலிய வேதாங்கங்களும் இதிகாசங்களும் புராணங்களும் ஆம். உயர்ந்த அறச் செயல்கள் எல்லாம் நிகழுமிடம் வேங்கடம் என்பார், நல்லறத்துக்கீறாய் என்றார். வாய்மை உலகத்தில் தனக்கு உவமை யின்றிப் பொலிந்து நிற்றல்போல் வேங்கடமும் புடை சுற்றும் துணை வேறு இன்றிப் பொலிந்து நிற்கின்றது என்க. "பொய்யாமையன்ன புகழில்லை" (குறள்-296) என்றல் நோக்கிப் "புகழ் பொதிந்த மெய்" என்றார். புகழ் நிறைதற்குக் காரணமான வாய்மை ஆதலின் அவ் வாறு கூறப்பட்டது. சாரல் என்றது தாழ்வரைகளை; அடைசுற்றுந் தண்சாரல் என்றது தேனடைகள் நிறைந்துள்ள அத்தாழ்வரை களின் வளம்புலப்படுத்தியவாறு. பூத்து நின்ற வேங்கடம், சார லோங்கிய வேங்கடம் என்க. (26)

**4579.** இருவினையு மிடைவிடா வெவ்வினையு
மியற்றாதே யிமையோ ரேத்துந்
திருவினையு மிடுபதந்தேர் சிறுமையையு
முறையொப்பத் தெளிந்து நோக்கிக்
கருவினைய திப்பிறவிக் கென்றுணர்ந்தங்
கதுகளையுங் கடையின் ஞானத்
தருவினையின் பெரும்பகைஞ ராண்டுளரீண்
டிருந்துமடி வணங்கற் பாலார்.

'இருவினையும் இடைவிடா எவ்வினையும்,
இயற்றாதே, இமையோர் ஏத்தும்
திருவினையும், இடுபதம் தேர் சிறுமையையும்,
முறை ஒப்பத் தெளிந்து நோக்கி,
"கருவினையது இப் பிறவிக்கு" என்று உணர்ந்து அங்கு
அது களையும் கடை இல் ஞானத்து
அருவினையின் பெரும் பகைஞர் ஆண்டு உளர்; ஈண்டு
இருந்தும் அடி வணங்கற் பாலார்.

பொ:—'நல்வினை தீவினை என்கின்ற இருவினைகளையும் நீங்காமல் தொடர்பு கொண்டுள்ள எந்தச் செயலையும் செய்யாமல் இருந்து கொண்டு-தேவர்கள் துதிக்கத்தக்க இந்திர செல்வத்தையும், பிறர் பிச்சையாக இடுகின்ற உணவை விரும்பித் தேடிச் செல்கின்ற வறுமையையும் முறைமையால் சமமானதாகத் தெளிந்து, 'இப்பிறவி உண்டாதற்கு மூலகாரணம் வினையே' என்று ஆராய்ந்து உணர்ந்து, அவ்வினையை நீக்குதற்குரிய வரம்பில்லாத தத்துவஞானத்தைப் பெற்றுள்ளமையால் போக்குதற்கு அரிய வினையின் பெரிய பகைவராய் அமைந்தவர்கள் அம்மலையில் உள்ளார்கள்; அவர்கள் இங்கு இருந்தேயும் திசை நோக்கி அடிவணங்கத்தக்க பெருமையுடையவர்கள்.

கு:—வேங்கடமலையில் உள்ள ஞானிகளின் இயல்பு கூறியவாறு. அவர்கள் வினையினீங்கி விளங்கிய அறிவினர் என்பார், எவ்வினையும் இயற்றுதே எனவும், திருவினையும் சிறுமையையும் முறை ஒப்பத் தெளிந்து எனவும், இப்பிறவிக்குக் கருவினை என்று நோக்கி உணர்ந்து கடையில் ஞானத்தால் அருவினையின் பெரும் பகைஞராய் அமைந்தவர் எனவுங் கூறினர். சீவன் முத்தர்கள் இறைவனேடொன்றி இன்புற்றிருப்பதன்றித் தமக்கென ஒரு செயலிலர் ஆதலின் எவ்வினையும் இயற்றுதே இருந்தனர் என்க. உயிர்கள் செய்யும் எச்செயலும் இருவினையில் அடங்கும் உண்மை புலப்பட 'இருவினையு மிடைவிடா எவ்வினையும்' என்றார். இடைவிடாமை யாவது நீங்காமல் தொடர்பு கொண்டிருத்தல். 'இமையோரேத்துந் திரு' என்றது இந்திர திருவினை; இந்திரன் போன்ற பெருஞ் செல்வமுடைமையை. பெருஞ் செல்வம் உடையாரை இந்திர திருவினர் என்று கூறல் உண்டு. "இந்திர திருவினைக் காண்குதுமென்றே" (சிலப்-26 : 94) என்றல் காணலாம். பதம்-உணவு. தேர்தல்-தேடுதல்; ஏற்றல். சிறுமை யென்றது வறுமையை. செல்வத்தில் சிறந்த இந்திர திருவினையும் வறுமையில் இழிந்த இரவையும் ஒப்பத் தெளிந்தவர் என்றது இருவினையின் பயனை ஒப்ப நோக்கும் இருவினை ஒப்புடையவர்; வேண்டுதல் வேண்டாமையிலாதவர்-என்பது விளக்கியவாறு. செல்வர்க்கும் வறியார்க்கும் இறைவன் ஒரு தன்மையனுய் அரும்பொருளாகும் முறைமையால் அவை இரண்டும் ஒப்பன எனத் தெளிந்து எனலுமாம். 'செல்வம் நல்குரவின்றி விண்ணோர் புழுப் புல்வரம்பின்றி யார்க்கும் அரும்பொருள்' (திருவாசகம் – சதகம் - 48.) என்றது காண்க. கரு என்றது மூலகாரணத்தை. வினையது என்புழி அது, பகுதிப் பொருளது. நோக்கி உணர்ந்து ஞானத்தால் வினையின் பெரும் பகைஞர் ஆனவர் என்க. அவர் திசை நோக்கி வணங்கத்தக்க பெருமையுடையவர் என்பார், 'ஈண்டிருந்து மடிவணங்கற் பாலார்' என்றார். (27)

**4580.** தோதவத்தித் தூய்மறையோர் துறையாடு
நிறையாறுஞ் சுருதித் தொன்னூல்
மாதவத்தோ ருறைவிடனு மழையுறங்கு
மணித்தடனும் வான மாதர்
கீதமொத்த கின்னரங்க ளின்னரம்பு
வருடுதொறுங் கிளக்கு மோதை
போதகத்தின் மழக்கன்றும் புலிப்பறழு
முறங்கிடனும் பொருந்திற் றம்மா.

'தோதவத்தித் தூய்மறையோர் துறை ஆடும்
நிறை ஆறும், சுருதித் தொல் நூல்
மாதவத்தோர் உறைவிடனும், மழை உறங்கும்
மணித்தடனும், வான மாதர்
கீதம் ஒத்த கின்னரங்கள் இன் நரம்பு
வருடு தொறும் கிளக்கும் ஓதை
போதகத்தின் மழக்கன்றும் புலிப் பறழும்
உறங்கு இடனும் பொருந்திற்று அம்மா.

பொ :—'நல்ல ஆடை உடுக்கும் இயல்புடையராய் மனந்தூயராய அந்தணர்கள் நீராடுகின்ற துறைகள் நிறைந்த ஆறும், வேதமாகிய பழைய நூலை யுணர்ந்த பெரிய தவத்தையுடைய முனிவர்கள் தங்கும் ஆசிரமங்களும், மேகங்கள் வந்து தங்குகின்ற மணிகளையுடைய தாழ் வரைகளும், தேவமாதர் தம் இசைப்பாட்டுக்கு இணங்க யாழ்களின் இனிய நரம்பைத் தடவும் தோறும் எழுகின்ற ஓசையினல் யானை களின் இளங்கன்றுகளும் புலிக் குட்டிகளும் பகையின்றி உறங்கு கின்ற இடங்களும் (அவ்வேங்கட மலையில்) பொருந்தியுள்ளன.

கு :—தோதவத்தி-நல்லாடை; அழுக்கு நீங்கத் தோய்ந்துலர்த் திய ஆடை. புறத்தூய்மை செய்ய நீராடச் செல்லுங்கால் தோய்த் துலர்த்திய ஆடையைப் பையில் எடுத்துச் செல்லும் அந்தணர் இயல்பு புலப்படுத்த, 'தோதவத்தித் தூய்மறையோர்' என்ருர். மறை யோர் என்றது அந்தணரை; அவர்கள் மறையோதுதலை இயல்பாகக் கொண்டவர்களாதலின் அப்பெயராற் குறித்தார். அவர் அகத் தூய்மையும் புலப்படுத்தத் தூய்மறையோர் என்ருர். "தோத வத்தித் தூய்மறையோர் துறைபடிய" (திவ்விய-பெரியாழ்வார்-402) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். ஏனையோரும் அங்கு நீராடுத லுண்டு எனினும் நீர் பல்கால் மூழ்குதலை விரதமாகக் கொண்டவர் மறையோரேயாதலின் மறையோர் ஆடுதுறையை நிறையாறு என்ருர். ஆடுதுறை யென மாற்றுக, ஆடுதல் என்றது நீரில் மூழ்கு

தலை; ஆறு என்றது பொன் முகலியை. சுருதி-வேதம்; சுருதியாகிய தொன்னூல் என்க. மாதவத்தோர் உறைவிடம் என்றது முனிவர் தவஞ்செய்யும் ஆசிரமங்களை. தேவமாதர்கள் தாம்பாடும் இசைப் பாட்டுக்கியையும்படி யாழ் நரம்பை வருடும்போது எழும் யாழோசை யைக் கேட்டு யானைக் கன்றும் புலிக் குட்டியும் பகைமை மறந்து ஓரிடத்தில் உறங்கும் என அம்மலையின் அமைதித்தன்மை புலப்படுத் தியவாறு. கின்னரம் - யாழ். "தந்தம் கின்னரந் தொடுகிலோ மென்றனரே" (திவ்-பெரியாழ்வார் 3-6-5) என்றது காண்க. இனிமையான ஓசையை யெழுப்புதலின் யாழ்நரம்பு இன்னரம்பு எனப்பட்டது. வருடுதல், விரல்களால் தடவுதல். கிளக்கும்—எழும். போதகம்-யானை. மழக்கன்று-இளங்கன்று. பறழ்-குட்டி, வேங்க டத்தில் ஆறும், முனிவர் தவக்குடிலும், தாழ்வரைகளும் தேவமாதர் யாழோடு பாடும் இடங்களும் உண்டு என்றவாறு. பொருந்திற்று என்பது பன்மை ஒருமை மயக்கம். வேங்கடம் ஆறு முதலியவற்றைத் தன்பால் பொருந்தப் பெற்றுள்ளது என முடித்தலும் ஆம், யாழோ சையின் இனிமை புலப்படுத்த யானைக் கன்றும் புலிக்குட்டியும் உறங்குதலைக் கூறினர். விலங்கினையும் இன்புறுத்தும் யாழோசை என்றவாறு. புலியும் யானையும் பகைமையுள்ளன ஆயினும் இசை யின்பத்தால் அப்பகையை மறந்து ஒன்ருய் உறங்குவனவாயின.(28)

**4581.** கோடுறுமால் வரையதனைக் குறுகுதிரே
  லுந்நெடிய கொடுமை நீங்கி
வீடுறுதி ராதலினுன் விலங்குதிரப்
  புறத்துநீர் மேவு தொண்டை
நாடுறுதி ருற்றதனை நாடுறுதி
  ரதற்பின்னை நளிநீர்ப் பொன்னிச்
சேடுறுதண் புனற்றெய்வத் திருநதியி
  னிருகரையுந் தெரிதிர் மாதோ.

'கோடு உறு மால் வரையதனைக் குறுகுதிரேல்,
  உம் நெடிய கொடுமை நீங்கி
வீடு உறுதிர் ; ஆதலினுல் விலங்குதிர் ;
  அப்புறத்து நீர் மேவு தொண்டை
நாடு உறுதிர் ; உற்று, அதனை நாடுறுதிர்
  அதன் பின்னை நளிநீர்ப் பொன்னிச்
சேடுஉறு தண்புனல் தெய்வத் திருநதியின்
  இருகரையும் தெரிதிர் மாதோ.

பொ :—சிகரங்களையுடைய பெரிய அத்திருவேங்கட மலையை நீவிர் அணுகுவீராயின் உம்முடைய நெடுங்காலத் தொடர்புடைய கொடும் பாவங்கள் எல்லாம் நீங்கி முத்தி அடைவீர்கள்; ஆதலால், அங்குச் செல்லாமல் விலகினீராய் அம்மலைக்கு அப்புறத்திலுள்ள நீர் வளம் பொருந்திய தொண்டை நாட்டை அடையுங்கள்; அடைந்து அந்நாட்டில் தேடுங்கள்; அதன் பிறகு பெருந்தன்மையுடைய பொன்னி என்னும் பேருடைய சிறப்பு வாய்ந்த குளிர்ந்த நீரையுடைய தெய்வத்தன்மை வாய்ந்த அழகிய காவிரியாற்றின் இரண்டு கரையின் கண்ணும் சென்று சீதையைத் தேடுங்கள்.

கு :—மாது, ஒ - அசைநிலை. கோடு - சிகரம். மால் - பெரிய. சங்கேந்திய திருமால் வீற்றிருக்கும் மலை என்ற பொருளும்படக் கோடுறு மால்வரை என்றார். அம்மலையின் பெருமை புலப்பட 'உந் நெடிய கொடுமை நீங்கி வீடுறுதிர்' என்றார். "வெறிகொளறை யருவி வேங்கடத்துச் செல்லின், நெறிகொள் படிவத்தோய் நீயும்—பொறிகட்கு இருளீயு ஞாலத் திடரெல்லா நீங்க, அருளீயு மாழியவன்" (பு. வெ - 9-42) என்பது இங்கு நினைக்கத்தகும். வீடுற்றால் சீதையைத் தேடும் பணி நிறைவேறாது ஆதலின் 'விலங்குதிர்' என்றான். தொண்டை நாட்டின் வளம் புலப்பட 'நீர் மேவு தொண்டை நாடு' என்றார். தொண்டைமான் இளந்திரையன் ஆட்சிக்குட்பட்டது என்ற காரணம் பற்றித் தொண்டை நாடு எனப் பெயர்பெற்றது. தொண்டைமான் என்ற பெயரின் காரணம் பெரும்பாணாற்றுப் படை உரையில் நச்சினார்க்கினியரால் கூறப்பட்டுளது. தொண்டை என்ற பெயருடைய கோவைக் கொடி சுற்றிவிடப்பட்டவன் என்ற காரணத்தால் தொண்டைமான் என்று பெயர் பெற்றான். தொண்டை நாட்டின் வடவெல்லை வேங்கடமாதலின் 'அப்புறத்து நீர் மேவு தொண்டை நாடு' என்றார். மேற்குப் பவளமலை வேங்கட நேர் வடக்காம், ஆர்க்கு முவரி யணிகிழக்குப்—பார்க்குளுயர், தெற்குப் பினாகி திகழிருவதின் காதம், நற்றொண்டை நாடெனவே நாட்டு, என்பது காண்க. புனல் தெய்வத்திருநதி எனப் பின் வருதலின் நளிநீர் என்பதற்குப் பெருந்தன்மை எனப் பொருள் கூற வேண்டிற்று. பொன் துகள் செறிந்து பொன்னிறமாகக் காணப்படும் நீருடைமையின் காவிரி பொன்னி எனப்பட்டது. "மலைத்தலைய கடற் காவிரி புனல் பரந்து பொன் கொழிக்கும்" (பட்டினப் - 6. 7) என்றது காண்க. நாடுறுதிர் உற்றதனை நாடுறுதிர் என்புழி மடக்கு என்னும் சொல்லணி பயின்றமை காண்க. தெரிதல் - தேடுதல். (29)

4582. துறக்கமுற்ருர் மனமென்னத் துறைகெழுநீர்
சோணுடு புகுந்தோர் தொல்லே
மறக்கமுற்ரு ரகமலர்ந்து மறைந்துறைவ
ரவ்வழிநீர் வல்லே யேகி
யுறக்கமுற்ருர் கனவுற்ரு ரெனவுணர்வி
ஞெடுமொதுங்கி மணியா லோங்கற்
பிறக்கமுற்ற மலேநாடு நாடியகன்
றமிழ்நாட்டிற் பெயர்திர் மாதோ.

துறக்கம் உற்ருர் மனம் என்னத் துறைகெழுநீர்
சோணுடு புகுந்தோர், தொல்லே
மறக்கம் உற்ருர் அகமலர்ந்து மறைந்து உறைவர்;
அவ்வழி நீர் வல்லே ஏகி,
உறக்கம் உற்ருர் கனவு உற்ருர் என
உணர்விஞெடும் ஒதுங்கி, மணியால் ஓங்கல்
பிறக்கம் உற்ற மலேநாடு நாடி, அகன்
தமிழ்நாட்டில் பெயர்திர் மாதோ.

பொ :—பல இறங்கு துறைகள் பொருந்திய காவிரியின் நீரை யுடைய சோழ நாட்டில் புகுந்தவர்கள், சுவர்க்கத்தை அடைந்தவர் தம் மன நிலே போலத் தம் பழைய உணர்வை மறந்தவராய் மனம் மகிழ்ச்சியால் மலரப் பெற்றுத் தம்முருக் கரந்து, (அந்நாட்டவர் போலவே வேடம் பூண்டு) அந்நாட்டில் தங்கிவிடுவர்; (அந்நாட்டின் வாழ்க்கை வளம் அத்தகையது) அவ்விடத்தில் நீங்கள் அங்ஙனம் செய்யாது, உறங்கிக் கனுக் கண்டவர் (அக் கனவைப் பொய்யாகக் கருதுதல்) போல அந்நாட்டின் இன்ப வாழ்வைப் பொய்யாக எண்ணிக் கழித்து விட்டுப் பழைய உணர்வினேடும் அவ்விடத்தை விட்டு மேற்கே ஒதுங்கி விரைந்து சென்று, மாணிக்கம் முதலிய மணி களின் ஒளி மிகுதியால் மலேகள் விளக்கம் பெற்றுத் தோன்றும் மலே நாட்டில் சீதையைத் தேடிப் பின்பு விரிந்துள்ள செந்தமிழ் நாட் டிற்குத் திரும்புவீர்களாக.

கு :—சோழ நாடு தன்பால் அடைந்தவரை இன்புறுத்திப் பழைய உணர்வை மறப்பித்துத் தன்னகத்தே தங்க விருப்பங் கொள்ளச் செய்யும் வளமுடையது ஆதலின், நீங்களும் அந்நாட்டின் வளத்தில் ஈடுபாடு கொண்டு பழைய உணர்வை—சீதையைத் தேடி வந்தோம் என்ற உணர்வை—மறந்து அங்குத் தங்கிவிடாமல், உறங்

கினவர் கனவிற் கண்ட இன்பக் காட்சியில் பற்றுச் செய்யாது பொய் யாக எண்ணி அதனை மறந்து பழைய உணர்வினராதல் போல, அச் சோழ நாட்டு வளத்தில் பற்றுக் கொள்ளாது மறந்து பழைய உணர் வினேடு அந் நாட்டை விட்டு மேற்கே ஒதுங்கி விரைந்து சென்று மலைநாட்டை யடைந்து அங்குத் தேடிப் பின் செந்தமிழ் நாட்டிற்குத் திரும்புங்கள் என்றவாறு. மனிதராயிருந்து புண்ணிய மிகுதியால் சுவர்க்கம் புகுந்தவர் பழைய மனித நிலையை மறந்து அங்கு மகிழ்ச்சி மிக்கு இன்பத்தில் தங்குதல் போலக் காவிரி பாயுஞ் சோணுடு புகுந்த வர்களும் மகிழ்ச்சியால் 'மனம் மலரப் பெற்றுத் தம் பழைய உணர்வை மறந்து தம் உருமாறி அச் சோணுட்டவராகவே தங்கி விடுவார்கள் என உவமையை விரித்துக் கொள்க. மனமென்ன அகம் மலர்ந்து என இயையும். மறைந்துறைதலாவது பிற நாட்டவர் என அறிய இயலாதபடி சோழ நாட்டவராகவே நடித்தல். 'சோணுடு சேணுடு ஒத்தது என்றவாறு. சிறிது தாழ்ப்பினும் அந் நாட்டில் தங்கும் ஆசை யுளதாமாதலின் 'வல்லையேகி' என்ருன். நேர் தெற்கே செல்லாது சோழ நாட்டிலிருந்து மேற்கே செல்ல வேண்டியிருத் தலின் 'ஒதுங்கி' என்ருன். சோழ நாட்டின் இன்ப வாழ்வைக் கனவுணர்வைப் போலப் பொய்யாக நினைந்து நீங்க வேண்டும் என் பான். 'கனவுற்ருரென வுணர்விஞெடும் ஒதுங்கி' என்ருன். "நீல வல்லிருள் நீங்கலும் நீங்குமம் மூலமில் கனவிற்றிரு முற்றுற ..... கதிரவன் தோன்றினன்" (அயோத்தி - கிளைகண்டு - 18) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். அங்குள்ள மாணிக்க முதலிய மணி களின் ஒளியால் இரவின்கண்ணும் மலைகள் நன்கு விளங்கித் தோன்றும் என்பான், 'மணியால் ஓங்கல் பிறக்க முற்ற மலை நாடு' என்ருன். வேங்கட முதல் குமரி வரை தமிழ்நாடே யாயினும் முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என முச் சங்கங்கள் நிலை பெற்றுத் தமிழ் வளர்த்து வந்த சிறப்புப் பற்றிப் பாண்டி நாடே இங்குத் தமிழ் நாடு எனப்பட்டது. சேக்கிழாரும் ஞானசம்பந்தர் பாண்டி நாட்டை யடைந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடும்போது, "பானல் வயல் தமிழ் நாடு பழி நாடும்படி பரந்த மானமிலா அம ணென்னும் வல்லிருள் போய் மாய்வதனுக்கு ஆன பெருகொளிப் பரப்பால் அண்டமெலாங் கொண்டதொரு ஞானமணி விளக் கெழுந்து வருவதென நலம் படைப்ப" (பெரியபு - திருஞா - 652) எனப் பாண்டி நாட்டைத் தமிழ்நாடு என்றே குறித்திருத்தல் காண லாம். தொல்லை - பழைமை; பழைய உணர்வை உணர்த்தியது. அவ்வழி நீர் உணர்விஞேடும் வல்லை ஒதுங்கி ஏகி, மலை நாடு நாடித் தமிழ் நாட்டிற் பெயர்திர் என இயையும். (30)

4583. தென்றமிழ்நாட் டகன்பொதியிற் றிருமுனிவன்
தமிழ்ச்சங்கஞ் சேர்கிற் றீரேல்
என்றுமவ னுறைவிடமா மாதலினு
னம்மலையை யிடத்திட் டேகிப்
பொன்றிணிந்த புனல்பெருகும் பொருநையெனும்
திருநதிபின் பொழிய நாகக்
கன்றுவளர் தடஞ்சாரல் மயேந்திரமா
நெடுவரையுங் கடலுங் காண்டிர்.

தென் தமிழ்நாட்டு அகன் பொதியில் திருமுனிவன்
தமிழ்ச் சங்கம் சேர்கிற் றீரேல்
என்றும் அவன் உறைவிடமாம் ஆதலினுன்
அம்மலையை இடத்திட்டு ஏகிப்,
பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை எனும்
திருநதி பின்பு ஒழிய, நாகக்
கன்று வளர் தடஞ்சாரல் மயேந்திர மா
நெடுவரையும், கடலும், காண்டிர்.

பொ :—தென்திசையிலுள்ள பாண்டி நாடாகிய தமிழ் நாட்டில், அகன்ற பொதிய மலையில் உள்ள சிறந்த அகத்திய முனிவன் தமிழ்ச் சங்கத்தைச் சேர்வீர்களாயின், எக்காலத்தும் அந்த அகத்திய முனிவன் தங்கும் இடம் ஆதலின், அந்தப் பொதிய மலையை இடப் பக்கத்தே இருத்திச் சென்று, அழகு நிரம்பிய நீர் பெருகுகின்ற தாமிரபரணி என்கின்ற திருநதி பிற்படுமாறு முற்பட்டுச் சென்று யானைக் கன்றுகள் மிகுதியாக வளர்கின்ற பெரிய சாரலையுடைய மயேந்திரம் என்கிற பெரிய மலையையும் கடலையும் காணுங்கள்.

கு :—பொதியிற்றிரு முனிவன் என்றது அகத்தியனை. தலைச் சங்கத்தில் அகத்தியனும், திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும் முதலாக ஐந்நூற்று நாற்பத்து ஒன்பதின்மர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு தலைச் சங்கத்தில் தமிழாராய்ந்தார் என்பதும் அவர் ஆராய்ந்த இடம் கடல் கொள்ளப்பட்ட மதுரை என்பதும் இறையனுர் களவியலுரையால் அறியலாம். இடைச் சங்கம் மூவாயிரத்தெழுநூற்றியாண்டு நிலவியது என்பதும் அவ் விடைச் சங்கத்தும் அகத்தியனுரே முதல்வராக இருந்தார் என்பதும் கடைச் சங்கம் ஆயிரத்தெண்ணூற்று ஐம்பதிற்றியாண்டு நிலைபெற் றிருந்ததென்பதும் அந்நூலால் அறியலாம். கடைச் சங்கம் முடிவுற்ற காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டு என்பது ஆராய்ச்

யாளர் பலர் கருத்தாகும். எனவே அகத்தியர் ஏறக்குறைய இற்றைக்குப் பன்னிரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னிருந்து பல்லாயிரம் ஆண்டுகாறும் கடல் கொண்ட தென் மதுரையிலும் கபாடபுரத்திலும் தமிழாராய்ந்தார் என்பது புலனாகும். இதனால் பொதியிற்றிரு முனிவன் தமிழ்ச் சங்கம் என்று இங்குக் குறித்தது கபாடபுரத்தையே என்னலாம். இராமாயண நிகழ்ச்சி நிகழ்ந்த காலம் ஆராய்ச்சியாளர் கருத்துப்படி கி. மு. மூவாயிரத்திற்கு முன்னதன்று ஆதலானும், வான்மீகத்தில் சுக்கிரீவன் முத்துக்களால் அலங்கரிக்கப் பெற்ற கதவையுடைய பாண்டியன் நகரம் என்று கபாடபுரத்தையே குறிப்பிட்டிருத்தலாலும், இங்குத் தமிழ்ச் சங்கம் என்று குறிப்பிட்டது கபாடபுரத்திருந்த இடைச் சங்கத்தையே என்பது உறுதியாதல் காணலாம். ஆரணிய காண்டத்து அகத்தியப் படலத்தில் குறிப்பிட்டஅகத்தியரும் இப் பொதிய மலையிலிருந்த அகத்தியரே என்பது கம்பர் கருத்து, இதனை "என்றுமுள தென்றமிழ் இயம்பியிசை கொண்டான்" (அகத்தியப் - 47) என்று அங்குக் கூறியுள்ளமையால் அறியலாம். இதனால் அகத்தியருக்குப் பொதியமலையிலும் தண்டகவனத்தின் அருகிலும் தவக்குடில்கள் இருந்தன என்பதும் இவ்வீரிடத்தும் அம்முனிவர் வேண்டியாங்குத் தங்கியிருப்பார் என்பதும் கம்பர் கருத்தாதல் தெளியலாம். அகத்திய முனிவன் தமிழ்ச் சங்கமிருந்த கபாடபுரத்தைச் சார்வீராயின் அதற்கு அண்மையிலுள்ள பொதியமலை இராவணனைக் கந்தருவத்தால் பிணித்த அகத்திய முனிவன் இருப்பிடமாதலின் அங்கு இராவணன் சீதையை வைத்திருக்க மாட்டான்; எனவே அம் மலையை இடப் பக்கத்தே விட்டு வலப்பக்கமாகச் சென்று பொருநை நதியைக் கடந்து மகேந்திர மலையையும் கடலையும் காண்பீர்களாக என்றவாறு. பொன் - அழகு. நாகம் - யானை. (31)

**4584.** ஆண்டுகடந் தலையுவரிக் கப்புறத்து
மொருதிங்க ளவதி யாகத்
தேண்டியிவன் வந்தடைதிர் விடைகோடிர்
கடிதென்னச் செப்பும் வேலை
நீண்டவனு மாருதியை நிறையருளா
லுறநோக்கி நீதி வல்லோய்
காண்டியெனிற் குறிகேட்டி யெனவேறு
கொண்டிருந்து கழற லுற்றான்.

'ஆண்டு கடந்து, அலை உவரிக்கு அப்புறத்தும்
ஒரு திங்கள் அவதி ஆகத்
தேண்டி, இவண் வந்து அடைதிர்; விடை கோடிர்,
கடிது' என்னச் செப்பும் வேலை,
நீண்டவனும், மாருதியை நிறை அருளால்
உற நோக்கி, 'நீதி வல்லோய்!
காண்டி எனின், குறி கேட்டி!' என, வேறு
கொண்டு இருந்து கழறலுற்ருன்.

பொ :—'அவ்விடத்தைக் கடந்து அலைகளையுடைய கடலுக்கு அந்தப் பக்கத்திலும் ஒரு மாத காலம் தவணையாகக் கொண்டு சீதையைத் தேடி இங்கு வந்து சேருங்கள்; விரைவாக விடை கொள்ளுங்கள்' என்று சுக்கிரீவன் வானரர்க்குச் சொல்லி முடித்தபோது, இராமனும் அனுமனை நிறைந்த அருளால் நன்கு நோக்கி, 'நீதி நூல்களில் வல்லவனே! சீதையைக் காண்பாயானால் (இவள் தான் சீதை என்று அறிதற்கு) அவளுடைய அடையாளங்களை யான் சொல்லக் கேட்பாயாக' என்று அவனைத் தனியே அழைத்துச் சென்று ஓரிடத்திலிருந்து (அச்சீதையின் அடையாளங்களைச்) சொல்லத் தொடங்கினன்.

கு :—உவரி-கடல். உவரிக்கு அப்புறத்தும் தேண்டி, ஒரு திங்கள் அவதியாகத் தேண்டி எனத் தனித்தனி இயையும். அவதி-எல்லை; தவணை. தேடி என்பது எதுகை நோக்கித் தேண்டி என விரித்தல் விகாரம் பெற்றது. உவரிக்கப்புறத்தும் என்றது, இலங்கையை நினைந்து. ஒருமதி "முற்றுருத முன் முற்றுதி ரிவ்விடை" (11) என முன் கூறியதையே இங்கு அனுவதித்தவாறு. நீண்டவன் என்றது திரிவிக்கிரமனுக ஓங்கி உலகளந்த திருமாலின் அவதாரமாகிய இராமனை. அனுமனை நிறையருளால் உறநோக்கியது அவனே சீதையைத் தேடிக் காண்டற்குரியவன் என்ற நம்பிக்கையாலாகும். மேலும், நீண்டவனுகிய தன் அருள் நோக்கத்தால் அனுமனும் நீண்டவனாய்க் கடல் கடந்து பகைவெல்லும் தகையுடையன் ஆக வேண்டும் என்ற நோக்கத்தாலும் அங்ஙனம் நோக்கினன் எனலாம். செல்லுமிடங்களில் செய்யத் தகுவனவும் தவிரத் தகுவனவும் நன்கறிந்தவன் அனுமன் என்பான் 'நீதி வல்லோய்' என விளித்தான். குறி-அடையாளம். பிறரறியத் தகாதனவும் அறிவிக்க வேண்டியிருத்தலின் அனுமனை வேறு கொண்டு கூறலானன். கழறல்-சொல்லுதல். (32)

## இராமன் சீதையின் அடையாளங்களை அனுமனுக்குக் கூறியது 4585-4617

### அடியின் அமைப்பு

**4585.** பாற்கடற் பிறந்த செய்ய
★ பவளத்தைப் பஞ்சி யூட்டி
மேற்பட மதியஞ் சூட்டி
விரகுற நிரைத்த வெய்ய
காற்றகை விரல்க ளைய
கமலமும் பிறவு மெல்லாம்
ஏற்பில வென்ப தன்றி
யிணையடிக் குவமை யுண்டே.

பாற்கடல் பிறந்த செய்ய பவளத்தைப் பஞ்சி ஊட்டி,
மேற்பட மதியம் சூட்டி, விரகுற நிரைத்த, வெய்ய;
கால் தகை விரல்கள்—ஐய !—கமலமும் பிறவும் எல்லாம்
ஏற்பில என்பது அன்றி, இணை அடிக்கு உவமை உண்டே ?

பொ :—திருப்பாற்கடலில் பிறந்த சிவந்த பவளத் துண்டங்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பை யூட்டி அப்பவளத் துண்டங்களுக்கு மேல் பொருந்துமாறு வெண்மையான சந்திரர்களை அணிந்து திறமை தோன்றுமாறு ஒழுங்காக வரிசைப்படுத்தினவும் வெம்மையுடையன; ஆதலின் உவமையாகா; சீதையின் கால்களில் உள்ள அழகிய விரல்கள் அவ்வளவு வியக்கத்தக்க சிறப்புடையவாம், அவ் விரல்களையுடைய இரண்டு பாதங்களுக்குச் செந்தாமரை மலரும் பிற உவமைப் பொருள்களும் எல்லாம் உவமையாதற்கு எற்புடையன அல்ல என்று கூறுவது அன்றி (ஏற்புடைய எனச் சொல்லத்தக்க) உவமையும் உண்டோ ? இல்லை.

கு :—சீதையின் அவயவங்களைப் பாதாதி கேசமாகக் கூறத் தொடங்கி அவள் கால்விரல்கட்கும் அடியிணைக்கும் உவமையின்மை காட்டியவாறு. பாற்கடலில் பிறந்த திருமகளின் அமிசமாகிய சீதையின் கால்விரல்கட்கு உவமையாக்க வேண்டிப் பாற்கடல் பிறந்த பவளத்தையே கூறினன். இயல்பாகவே சிவந்த பவளத்திற்கு மேலும் செந்நிறம் ஊட்ட பஞ்சியூட்டுதல் கூறினர். பஞ்சி என்றது செம்பஞ்சுக் குழம்பினை. விரல்களின் மேற்பகுதியிலுள்ள வெண்மையான நகங்களுக்கு உவமையாகவேண்டி மதியஞ்சூட்டுதல் கூறினன். சிவந்த பவளத் துண்டங்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பை யூட்டி ஒவ்வொரு துண்டத்தின் மேலும் வெள்ளிய சந்திரர்களை

அமைத்துத் திறமையாக வரிசைப்படுத்தி வைத்தால் சீதையின் கால் விரல்களுக்கு உவமையாகலாம்; ஆயின், அவை அவ்விரல்களைப் போலத் தண்மையுடையவன்றி வெம்மையுடையன ஆதலின் உவமையாகா என்றவாறு. செய்ய பவளத்தைப் பஞ்சியூட்டி மேற்பட மதியஞ் சூட்டி விரகுற நிரைத்த என்றது விகாரவுவமையின்பாற்படும். 'வெய்ய' என்று கூறியதால் விலக்குவமையாகும். நிரைத்த, வினைப்பெயர்; வரிசைப்படுத்தப்பட்டவை என்பது பொருள். பாதத்திற்கு உவமையாகத் தக்க பொருள்கள் யாவுமே சீதையின் பாதத்திற்கு உவமையாதற்கு ஏற்புடைய அல்ல என்று கூறலாமேயன்றி ஏற்புடையவான உவமையில்லை என்றவாறு. உண்டே என்புழி ஏகாரம் இன்மையுணர்த்தியது. (33)

புறவடி

**4586.** நீமெய்யா வுணர்தி யைய
நிரைவளை மகளிர்க் கெல்லாம்
வாய்மையா லுவமை யாக
மதியறி புலவர் வைத்த
ஆமையா மென்ற போது
மல்லன சொல்லி னுலும்
யாமயாழ் மழலை யாடன்
புறவடிக் கிழுக்கு மன்னே.

நீ மெய்யா உணர்தி—ஐய!—
நிரைவளை மகளிர்க்கு எல்லாம்
வாய்மையால் உவமையாக
மதியறி புலவர் வைத்த
ஆமை ஆம் என்ற போதும்,
அல்லன சொல்லினுலும்
யாம யாழ் மழலை யாள் தன்
புறவடிக்கு இழுக்கு மன்னே.

பொ :—ஐய !-வரிசையுற அணிந்த வளையல்களையுடைய பெண்டிரின் புறவடிக்கு எல்லாம், தம் நுண்மதியால் எல்லாவற்றையும் அறிகின்ற புலவர்கள் உவமையென உண்மையாகக் கூறிவைத்த ஆமை,—குறிஞ்சிப்பண் போன்ற இனிய மழலைச் சொற்களையுடைய சீதையின் புறவடிக்கு-உவமை ஆம் என்று சொன்னுலும் அஃதல்லாத புத்தகம் முதலியவற்றை உவமையாகச் சொன்னுலும் (அவள்

அடியின் பெருமைக்கு இழுக்காகும்; இதனை நீ (நேரில் கண்டு) மெய்ம்மையாக உணர்வாய்.

கு :—மகளிர்க்கு என்றது, மகளிரின் புறவடிக்கு என்றவாறு. புலவர் உவமையாக வாய்மையால் வைத்த ஆமை என இயையும். பெண்டிர் புறவடிக்கு ஆமையை உவமை கூறுவது புலவர் மரபு ஆதலின் மதியறிபுலவர் உவமையாக வைத்த ஆமை என்ருன். ஆமை பெண்டிரின் புறவடிக்கு உவமையாகும் என்று புலவர் கூறியது பொருத்தமேயாயினும் சீதையின் புறவடிக்கு அதைக் கூறுவது இழுக்காகும் எனச் சீதையின் பேரழகைப் புலப்படுத்தியவாறு. அல்லன என்றது புத்தகம் முதலியவற்றை. யாமயாழ் என்றது குறிஞ்சிப்பண்ணை. குறிஞ்சிக்குரிய சிறுபொழுது இடையாமம் ஆகலின் அப்பொழுது வாசித்தற்குரிய பண்ணை 'யாம யாழ்' என்ருன். 'யாமயாழ்ப் பெயர்க் குறிஞ்சி யாழும்' என்பது சேந்தன் திவாகரம். இடையாமத்தில் தலைவன் வரவேண்டும் என்ற குறிப்பைத் தலைவி ஒருத்தி குறிஞ்சிப்பண் பாடிப் புலப்படுத்திய நிகழ்ச்சி, (தண்டியலங்காரம்) நுட்பவணியில் கூறப்பட்டுளது காணலாம். பெண்டிரின் மொழிக்குப் பண்ணினை உவமை கூறுவதுண்டு; 'பண்ணினேர்மொழியாள்' (திருவாச-வாழாப்-5) என்றது காணலாம். புறவடி என்றது பாதத்தின் மேற்பகுதியை. இதனுல் சீதையின் புறவடிக்கு உவமையின்மை புலப்படுத்தியவாறு. (34)

## கணைக்கால்

4587. வினைவரா லரிய கோதைப்
பேதைமென் கணைக்கான் மெய்யே
நினைவரா லரிய வின்னு
நேர்படப் புலவர் போற்றும்
சினைவரால் பகழி யாவ
நெற்சினை யேனுஞ் செப்பம்
எனைவராற் பகரு மீட்டம்
யானுரைத் தின்ப மென்னே.

வினைவரால் அரிய கோதைப்
பேதை மென் கணைக்கால், மெய்யே
நினைவரால் அரிய; இன்னும்
நேர்படப் புலவர் போற்றும்

சினைவரால், பகழி ஆவம்,
நெற்சினை யேனும் செப்பம்;
எனைவரால் பகரும் ஈட்டம்,
யான் உரைத்து இன்பம் என்னே ?

பொ :—ஒப்பனை செய்யும் பணிப்பெண்டிரால் ஒப்பனை செய்தற்கு அரிதாம்படி நீண்டு அடர்ந்த கூந்தலையுடைய சீதையின் மெல்லிய கணைக்கால்கள் உவமை கூறவேண்டும் என்று நினைப்பவரால் உவமை சொல்லுதற்கு அரியவாம்; இது உண்மையாகும்; மேலும், புலவர்கள் பெண்டிரின் கணைக்காலுக்குப் பொருத்தமானதாகப் போற்றிச் சொல்கின்ற கருக்கொண்டுள்ள வரால்மீனும், அம்பறாத் தூணியும், சூல்கொண்டுள்ள நெற்பயிரும் (ஆகிய உவமைகள்) உளவேனும் அவற்றைச் சொல்லமாட்டோம்; (ஏனெனின் ? அவை) எல்லாப் பெண்டிர்க்கும் உவமையாகச் சொல்லும் தன்மையனவாகிய உவமைக் கூட்டம் (அவற்றைச் சீதையின் கணைக்காலுக்கும் உவமையாக) யான் சொல்லிப் பெறும் இன்பம் யாதோ ?

கு :—கணைக்கால் என்பது முழந்தாளுக்குக் கீழும் பாதத்திற்கு மேலும் உள்ள பகுதி; அது வடிவத்தால் வரால்மீனைப் போன்றது. "செங்கமலத்தோன் முதல் யாரும் எப்பெண்பாலும் கொண்டுவமிப் போருவமிக்கும் அப்பெண் தானே யாயின போதிங் கயல் வேறோர் ஒப்பெங்கேகொண் டெவ்வகை நாடி யுரை செய்வோம் (மிதிலைக்-24) எனச் சீதைக்கு உவமை கூற வியலாமை கூறப்பட்டிருத்தலின் அவள் உறுப்புக்களுள் ஒன்றாகிய கணைக்காலுக்கும் உவமைகூற வியலாது என்பது புலப்பட 'கணைக்கால் மெய்யே நினைவரால் அரிய' என்றான். ஆனால் அக்கணைக்காலுக்குப் பொருத்தமாகப் புலவர் கூறும் சினைவரால் போன்ற உவமைகளைச் சொல்லலாகாதோ எனின் அவ்வுவமைகள் உளவாயினும் யாம் சொல்ல மாட்டோம்' ஏனெனின் ? அவ்வுவமைகள் எல்லா மகளிரின் கணைக்காலுக்கும் உவமை சொலத்தக்க தன்மையன; அவ்வுவமைகளை எப்பெண்டிர்க்கும் உவமையாகத்தக்க பேரழகியாகிய சீதையின் கணைக்காலுக்கு யாம் சொல்லியதால் வரும் இன்பம் யாதுளது ? யாதும் இல்லை யாதலின் அவற்றைச் சொல்லமாட்டோம் என்றவாறு. செப்பாம் என்பது செப்பம் எனக் குறுகி நின்றது. 'எம்மா வீட்டுத் திறமும் செப்பம்' (திருவாய்மொழி. 2.9.1) என்புழிப்போல. எனைவர்க்கும் எனற்பாலது எனைவரால் என உருபு மயங்கி உம்மை தொக்கு நின்றது. சீதைக்குக் குறைந்த அழகினையுடைய மகளிரின் கணைக்காலுக்குச் சொல்லும் உவமையை அச் சீதையின் கணைக்காலுக்குச் சொல்வதால் யாதொரு சிறப்பும் இல்லை என்பான், 'யாமுரைத்தின்பமென்னே' என்றான். ஈடு - தன்மை.

(35)

## தொடை

4588. அரம்பையென் றளக மாதர்
குறங்கினுக் கமைந்த வொப்பின்
வரம்பையுங் கடந்த போது
மற்றுரை வகுக்க லாமோ
நரம்பையு மமிழ்த நாறு
நறவையு நன்னீர்ப் பண்ணைக்
கரும்பையுங் கடந்த சொல்லாள்
கவாற்கிது கருது கண்டாய்.

அரம்பை என்று, அளக மாதர்
குறங்கினுக்கு அமைந்த ஒப்பின்
வரம்பையும் கடந்த போது,
மற்று உரை வகுக்கல் ஆமோ?
நரம்பையும், அமிழ்தம் நாறும்
நறவையும், நல்நீர்ப் பண்ணைக்
கரும்பையும் கடந்த சொல்லாள்,
கவாற்கு இது கருது கண்டாய்.

பொ :—கூந்தலையுடைய பெண்டிரின் தொடைக்கு உவமை வாழை மரம் என்று பண்டு தொட்டு அமைந்துள்ள உவமையின் எல்லையையும் (சீதையின் தொடை) கடந்தன என்று சொல்லும் போது—நரம்புகளையுடைய யாழோசையையும் அமிழ்தம் என இனிமையுடன் விளங்குகின்ற தேனையும் நல்ல நீர் வளமிக்க கழனியில் விளைந்த கரும்பையும் வென்ற சொல்லினையுடைய சீதை யின் அத்தொடைகட்கு வேறு சொல்லும் சொல்லலாமோ? இதைச் சிந்திப்பாயாக.

கு :—கண்டால் முன்னிலை அசை. வேறு உவமை சொல்ல இயலாது என்றவாறு. குறங்கு-தொடை. அரம்பை-வாழை. குறங் கினுக்கு அரம்பை யென்று அமைந்த ஒப்பு என்றியையும். 'மங்கை யர் குறங்கென வகுத்த வாழைகள்' (அயோத்தி-மந்தரை–30) என் பதும் 'குறங்கென மால்வரை யொழுகிய வாழை' (சிறுபாண்-21) என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தக்கவை; மாதர் தொடைக்குப் பொருத்தமான உவமையாக அமைந்தது வாழைமரம்; சீதையின் தொடைகள் அவ்வாழை மரம் ஆகிய உவமையின் எல்லையையும் கடந்து பேரழகுடன் விளங்குவன ஆதலின் அவள் தொடைகட்கு மற்றுரை வகுக்கலாமோ ? இது கருதுவாயாக என்றவாறு. கவான்–

தொடை. நரம்பு ஆகுபெயராய் யாழோசையை யுணர்த்தியது. நாறுதல்-தோன்றுதல். நறவும் கரும்பும் நாவிற்குப் புலமாயவேனும் இனிமை மிகுதிபற்றிச் செவிக்குப் புலனுகும் சொல்லிற்கு உவமை யாக்கப்பட்டன. (36)

அல்குல்

**4589.** வாராழிக் கலசக் கொங்கை
வஞ்சிபோன் மருங்கு லாடன்
தாராழிக் கலேசா ரல்குற்
றடங்கடற் குவமை தக்கோய்
பாராழி பிடரிற் ருங்கும்
பாந்தளும் பனிவென் ருேங்கு
மோராழித் தேரு மொவ்வா
வுனக்குநா னுரைப்ப தென்னே.

'வார் ஆழிக் கலசக் கொங்கை
வஞ்சிபோல் மருங்குலாள் தன்
தார் ஆழிக் கலேசார் அல்குல்
தடங்கடற்கு உவமை—தக்கோய் !—
பார் ஆழி பிடரில் தங்கும்
பாந்தளும் பனி வென்று ஓங்கும்
ஓர் ஆழித் தேரும் ஒவ்வா
உனக்கு நான் உரைப்பது என்னே.'

பொ :—தகுதியுடையோனே! கச்சு அணிந்த, சக்கரவாகப் பறவையையும் கலசத்தையும் ஒத்த தனங்களேயும், வஞ்சிக்கொடி போன்ற இடையினேயும் உடைய சீதையின் ஒழுங்கான வட்டவடிவ மானதும் ஆடையைச் சார்ந்துள்ளதும் ஆகிய அல்குலாகிய பெரிய கடலுக்கு - பூமி வட்டத்தைப் பிடரியில் தாங்கிக் கொண்டிருக்கும் ஆதிசேடன் என்னும் பாம்பின் படமும் பனியை வென்று மேல் தோன்றுகின்ற ஒற்றைச் சக்கரத்தையுடைய சூரியனது தேர்த் தட்டும் உவமையாதற்கேலாவாம்; அங்ஙனமானபின் உனக்கு அதைப்பற்றி சொல்வது யாதுளது.

கு :—பாந்தளிற் சிறந்த ஆதிசேடன் படமும் தேரிற் சிறந்த சூரியனது தேரின் தட்டும் உவமையாதற்கேலா என்றபின் கூறு தற்கு யாதும் இல்லே என்றவாறு. 'பாந்தள் தேரிவை பழிபடப்

16

பரந்த பேரல்குல் !' (அயோத்தி - சித்திரகூடப்-31) என இராமன் சீதையை விளித்திருத்தல் காணலாம். வார் - கச்சு. ஆழி - சக்கர வாகப் புள். அல்குல் என்றது பிட்டத்தை. இடையில் வந்த ஆழி இரண்டும் வட்டம் என்னும் பொருளன. நான்காமடியில் வந்த ஆழி சக்கரம் என்னும் பொருளது. ஆழிப்பார் என மாற்றிக் கடல் சூழ்ந்த பூமி எனலும் ஆம். உவமை ஒவ்வா என்றது உவமையா தற்கு ஏலா என்றவாறு. (37)

## இடை

4590. சட்டகந் தன்னை நோக்கி
யாரையுஞ் சமைக்கத் தக்கா
ளிட்டிடை யிருக்குந் தன்மை
யியம்பக்கேட் டுணர்தி யென்னின்
கட்டுரைத் துவமை காட்டக்
கட்பொறி கதுவா கையிற்
றொட்டவெற் குணர லாமற்
றுண்டெனுஞ் சொல்லு மில்லை.

'சட்டகம் தன்னை நோக்கி,
யாரையும் சமைக்கத் தக்காள்
இட்டிடை இருக்கும் தன்மை
இயம்பக் கேட்டு உணர்தி என்னின்,
கட்டுரைத்து உவமை காட்ட,
கண் பொறி கதுவா; கையில்
தொட்ட எற்கு உணரலாம்; மற்று
உண்டு எனும் சொல்லும் இல்லை.'

பொ :—தன் வடிவழகை நோக்கி(ப் பிரமன்) எத்தகையோர்க்கும் வடிவம் செய்யத்தக்க பேரழகுடைய சீதையின் சிறிய இடை இருக்கும் தன்மையைச் சொல்ல நீ கேட்டு உணர்வாயாயின், (அது இயலாது; ஏன் என்றால்) உறுதியாகச் சொல்லி உவமை ஒன்றைக் காட்டுதற்கு (அந்த இடையைக் கண்ணாகிய பொறி பற்றுவது அல்ல; கண்ணால் காணமுடியாது என்றபடி) கையினால் தொட்டுப் பார்த்த எனக்கு மட்டுமே உண்டு என உணர்தல் கூடும்; வேறுவகையால் (கண்ணாற்) கண்டு உண்டு என்று கூறும் சொல்லும் இதுகாறும் நிகழ்ந்ததில்லை.

கு :—சட்டகம் - வடிவம். யாரையும் சட்டகம் சமைக்கத் தக்காள் என இயையும். சமைத்தல் - செய்தல். யாரையும் சமைக்கத் தக்கவன் பிரமன் ஆகலின், அவனே சீதையின் அழகை நோக்கிப் பிறபெண்டிர் எல்லோரையும் படைப்பான் என்றபடி. பிரமன் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. ''தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச் செய்த திருவே'' (அயோத்தி - சித்திரகூட - 34) என்பதும், 'கமலத்துக் கடவுள்தானே, ஒருதிறத் துணர நோக்கி யுருவினுக் குலக மூன்றின் இருதிறத்தார்க்குஞ் செய்த வரம்பிவர் இருவர்'' (ஆரணிய - சூர்ப்பணகைப் - 61) என்பதும் இக்கருத்தினவாதல் நினையலாம். யாரையும் என்புழி உம்மை முற்றும்மை. இட்டிடை - சிறிய இடை. இடை கண்ணால் காணக் கூடாதபடி மிக நுண்ணிதாயிருத்தலின் அதற்கு உவமை காட்டிக் கூறுதல் இயலாது, ஆகவே இடையிருக்கும் தன்மை கேட்டு நீ உணர்தலும் இயலாது என்றவாறு. கதுவுதல் - பற்றுதல். இடை என்ற உறுப்பு ஒன்று அவட்கு உண்டு என்பது அவளைத் தொட்டுப் பார்த்த எனக்கு மட்டுமே தெரியும்; கண்ணால் காண்பவர் யாரும் அவட்கு இடை உண்டு என்று சொல்லவே மாட்டார்கள் என்றவாறு. 'உண்டெனத்தமர் மதிப்பர்' (சீவக - 172) என்றது இங்கு ஒப்புநோக்கத் தகும். 'இடை கண்டில மல்லதெல்லாந் தெரிந்தாம்' (மாரீசன்வதைப் - 144) எனச் சீதையின் உருவெளித் தோற்றத்திலும் இவ்வாறே இருந்ததாக இராவணன் கூறியிருத்தலும், ''மருங்கிலா தவளோடு மன்றேநீ நெடுங்காலம் வாழ்ந்ததென்பாய்'' (சூர்ப்பணகைப்-141) எனச் சூர்ப்பணகை கூறியிருத்தலும் நோக்கினால் 'உண்டெனும் சொல்லுமில்லை' என்றது உண்மையாதல் புலனாம். இதனால் சீதையின் இடைக்கு உவமையின்மை புலப்படுத்தியவாறு. (38)

## வயிறு

**4591.** ஆலிலை படிவந் தீட்டு
மையநுண் பலகை நொய்ய
பால்நிறத் தட்டம் வட்டக்
கண்ணடி பலவு மின்ன
போலுமென் றுரைத்த போதும்
புனைந்துரை பொதுமை பார்க்கின்
ஏலுமென் றிசைக்கி னேலா
விதுவயிற் றியற்கை யின்னும்.

'ஆல் இலை, படிவம் தீட்டும்
ஐய நுண் பலகை, நொய்ய
பால் நிறத் தட்டம், வட்டக்
கண்ணடி, பலவும் இன்ன,
போலும் என்று உரைத்த போதும்,
புனைந்துரை; பொதுமை பார்க்கின்,
ஏலும் என்று இசைக்கின், ஏலா;
இது, வயிற்று இயற்கை; இன்னும்.'

பொ :—பொதுவகையாக (உலகத்துள்ள பெண்டிரின் வயிறுகளைப்) பார்த்தால் அவர் வயிறு ஆல் இலையையும் வடிவம் தீட்டுதற்குரிய அழகிய மெல்லிய ஓவியப் பலகையையும், மென்மையுடைய பால் போன்ற வெண்ணிறமுடைய, வெள்ளித் தட்டையும், வட்டமான கண்ணுடியையும் இவை போல்வன பலவற்றையும் ஒக்கும் என்று (புலவர்) சொன்னுலும்; அவை புனைந்துரையாகவே முடியும் (உண்மை கூறியதாகாது; சீதை வயிற்றின் தன்மையோ என்ருல்) அவ்வுவமைகளைப் பொருந்தும் என்று வலிந்து சொன்னுலும் அவ்வயிறறின் அழகிற்கு ஏற்புடைய அல்லவாம்; இதுவே அவர் வயிற்றின் தன்மை, மேலும்.

கு :—ஆல் இலை முதலிய உவமைகளினும் பிற பெண்டிரின் வயிறு அழகு குறைந்தது ஆகலின் அவ்வுவமை அவர்க்குப் புனைந்துரையாக முடியும்; ஆயின் சீதையின் வயிறு அவ்வுவமைகளினும் அழகு மிக்கதாகலின் அவ்வுவமைகளே பொருந்தும் என வலிந்து சொன்னுலும் ஏலாவாகும் என்றவாறு. இதனுல் சீதையின் வயிறு உவமையிலாதது என்பது கூறியவாறு. (39)

உந்தி

**4592.** சிங்கலில் சிறுகூ தாளி
நந்தியின் றிரட்பூச் சேர்ந்த
பொங்குபொற் றெளீயென் ருலும்
புல்லிது பொதுமைத் தாமா
லங்கவ ளுந்தி யொக்குஞ்
சுழியெனக் கணித்த துண்டால்
கங்கையை நோக்கிச் சேறி
கடலினு நெடிது கற்றேய்.

'சிங்கல் இல் சிறு கூதாளி,
நந்தியின் திரட்பூச் சேர்ந்த
பொங்கு பொன் துளை என்றாலும்
புல்லிது பொதுமைத்து ஆமால்;
அங்கு அவள் உந்தி ஒக்கும்
சுழி எனக் கணித்தது உண்டால்;
கங்கையை நோக்கிச் சேறி—
கடலினும் நெடிது கற்றோய்!'

பொ :—கடலினும் மிகுதியான நூல்களைக் கற்றுணர்ந்தவனே! (சீதையின் கொப்பூழுக்கு) கெடுதல் இல்லாத சிறுகூதாளியின் அடித் திரண்ட பூவும், நந்தியவட்டத்தின் அடித் திரண்ட பூவும், ஒளி மிக்க பொற்காசில் பொருந்திய துளையும் (உவமையாம்) என்று கூறினாலும் அவ்வுவமை, எல்லாப் பெண்டிரின் உந்திக்கும் கூறும் பொதுமையுடையது ஆகலின் அற்பமானதாகும்; அச்சீதையின் கொப்பூழை கங்கையின் நீர்ச்சுழி ஒக்கும் என்று (அக்கங்கையைக் கண்டபோது) அங்கு நான் எண்ணியதுண்டு: நீயும் கங்கையாற்றின் சுழியை மனத்தால் நோக்கிச் செல்க.

கு :—இதனால் சீதையின் உந்தி உவமையிலாப் பேரழகுடையது என்பது புலப்படுத்தியவாறு. சிறுகூதாளியின் பூவும், நந்தியா வட்டப் பூவும் மாற்றுயர்ந்த பொற்காசில் அமைந்த தொளையும் மகளிரின் கொப்பூழ்க் கெல்லாம் பொதுவாகக் கூறும் உவமை யாதலின் சிறப்புடைய சீதையின் கொப்பூழ்க்கு அவையேற்ற உவமையாகா; ஆகலின் 'புல்லிது' என்று இகழ்ந்தவாறு. கங்கை யின் நீர்ச்சுழி அச்சீதையின் உந்தியை ஒக்கும் எனக் கங்கையைக் கடந்த ஞான்று எண்ணியதை இங்குக் கூறியவாறு. அங்குக் கணித்த துண்டு எது இயையும். கங்கையெனப் பிற்கூறுதலின் சுழியென்றது கங்கையாற்றின் சுழியையே என்பது பெறப்படும். கங்கையின் சுழி அவள் உந்தியை ஒக்கும் என்றதால் சுழிக்கு உந்தி உவமையாவ தன்றி, உந்திக்குச் சுழி உவமையாகவில்லை என்பது தெளிக. இதனால் கங்கைச் சுழியினும் சீதையின் உந்தி உயர்ந்தது என்பது பெறப் படுதல் காணலாம். பொற்காசுகளில் தொளையிடுவது உண்டு; தொளைப் பொன் என்று அது வழங்கப்பட்டுளது. மாற்றுயர்ந்த பொன் என்பதற்கு அடையாளமாக இடப்பட்டதுளை, பெண்டிரின் கொப்பூழ்க்கு உவமையாகும். "சுழித்த செம்பொனின் தொளைபுரை வுந்தியின் துணையே" (அயோத்தி - சித்திரகூடப்-21) என்றது நினைக. 'திரள்பூ' என்றது, பூவின் அடிப்பகுதி திரண்டுள்ளமை புலப்படுத்த என்க. (40)

### வயிற்றிடை மயிரொழுங்கு

4593. மயிரொழுக் கெனவொன் றுண்டால்
வல்லிசேர் வயிற்றின் மற்றெ
னுயிரொழுக் கதற்கு வேண்டு
முவமையொன் றுரைக்க வேண்டின்
செயிரில்சிற் றிடையா யுற்ற
சிறுகொடி நுடக்கந் தீரக்
குயிலுறுத் தமைய வைத்த
கொள்கொம்பென் றுணர்ந்து கோடி.

மயிர் ஒழுக்கு என ஒன்று உண்டால்,
வல்லி சேர் வயிற்றில்; மற்று என்
உயிர் ஒழுக்கு; அதற்கு வேண்டும்
உவமை ஒன்று உரைக்க வேண்டின்,
செயிர் இல் சிற்றிடையாய் உற்ற
சிறு கொடி நுடக்கம் தீரக்
குயிலுறுத்து அமைய வைத்த
கொள் கொம்பு என்று உணர்ந்து கோடி.

பொ :—மூன்று மடிப்புச் சேர்ந்துள்ள வயிற்றில் மயிரின் ஒழுங்கு என்று ஒன்று உளது, அது என் உயிர் ஒழுக்கமேயாகும்; அதற்குத் தக்க உவமை ஒன்று சொல்ல விரும்பினுல் குற்றமற்ற சிறிய இடையாகிய சிறிய கொடியின் துவட்சி நீங்க (அது படர்தற்குப்) பொருத்தமாகச் செய்து வைத்த கொள்கொம்பு போன்றது என்று உணர்ந்து கொள்வாயாக.

கு :—வல்லி என்றது வயிற்றிலுள்ள மூன்று மடிப்புகளை ; வருஞ் செய்யுளில் அம்மடிப்புகள் தனியே சிறப்பிக்கப்படுகின்றன. மயிரொழுக்கு என்பது என் உயிர் ஒழுக்கு என அதன் அருமை புலப் படுத்தியவாறு. இனி, ஒழுக்கு என்பது நடத்தற்குரிய வழி எனக் கொண்டு (ஒழுகுதல் - நடத்தல்) அருவமாகிய தன் உயிர் நடத்தற் குரிய வழியே யாம் எனப் பொருள் கூறலுமாம். "மங்கலத் தொழில் ஆடவர் மனநடக்கிற்காக் குங்குமப் பெருஞ் சேற்றினைக் குறித்திடு கற்போல், மங்கையர்க்கொரு திலகமாகிய வெழின்மாயை, கொங்கை யிற்புனைந் தனளொரு பெண்மணிக் கோவை" (பிரபுலிங்க-மாயை பூசை - 15) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். இடையாயுற்ற சிறுகொடி என்ற உருவகம், மயிரொழுக்கு கொள்கொம்பு போலும் என்ற உவமையணிக்கு அங்கமாக வந்தது. உவமையொன்றுரைக்க

வேண்டின் என மேல் கூறினமையால் கொள்கொம்பு போன்றது எனச் சொல்லெச்சமாக ஒரு சொல் வருவித்துரைக்கப்பட்டது. அமையக் குயிலுறுத்து வைத்த என மாறுக. கொள் கொம்பு என்பது கொடியேறிக் கொள்ளுதற்குரிய கொம்பு. மயிர் ஒழுங்கும் உவமை யற்றது என்பதே கருத்து. அதற்கு வேண்டும் உவமையொன்று ரைக்கவேண்டின் கொள்கொம்பு என்று உணர்ந்து கோடி என்பதால் இது புலனும். (41)

### வயிற்று மடிப்பு

**4594.** அல்லியூன் றிடுமென் றஞ்சி
யரவிந்தந் துறந்தாட் கம்பொன்
வல்லிமூன் றுளவாற் கோல
வயிற்றின்மற் றவையு மார
வில்லிமூன் றுலகின் வாழு
மாதருந் தோற்ற மெய்ம்மை
சொல்லியூன் றியவாம் வெற்றி
வரையெனத் தோன்று மன்றே.

'"அல்லி ஊன்றிடும்" என்று அஞ்சி,
அரவிந்தம் துறந்தாட்கு, அம்பொன்
வல்லி மூன்று உளவால், கோல
வயிற்றில்; மற்று அவையும், மார
வில்லி, மூன்று உலகின் வாழும்
மாதரும் தோற்ற மெய்ம்மை
சொல்லி ஊன்றிய வாம் வெற்றி
வரையெனத் தோன்றும் அன்றே.'

பொ :—அகவிதழ்கள் உறுத்தும் என்று அஞ்சித் தாமரை மலரா கிய தவிசை விட்டு வந்து பிறந்தாளாகிய சீதைக்கு அழகிய வயிற்றில் அழகிய பொன்னிறமான கொடி வடிவாக மடிப்புகள் மூன்று உள்ளன; அம்மடிப்புக்களும் மன்மதனாகிய வில்வீரன், மூன்று உலகத்து வாழும் பெண்டிர் யாவரும் (சீதைக்குத்) தோற்றுவிட்ட உண்மை நிகழ்ச்சியைச் சொல்லி எழுதிவைத்த வெற்றிக்கு அறிகுறி யாகிய எழுத்துக்களின் வலி என்னுமாறு காணப்படும்.

கு :—அல்லி - அகவிதழ். ஊன்றுதலாவது உறுத்துதல். மென்மையான அகவிதழ்களை உறுத்தும் என்று அஞ்சினாள் என்றமை

யால் சீதை அடியின் மென்மை புலப்படும். தாமரைத் தவிசைத் துறத்தற்கு அல்லியூன்றிடும் என்று திருமகள் அஞ்சியதே காரணம் என்றது தற்குறிப்பேற்றமாகக் கூறியது. வயிற்றில் உள்ள வரிகள் பொன்னிறமுடையவாய்க் கொடிபோல் தோன்றுதலின் 'அம்பொன் வல்லி மூன்றுள' என்றார். மன்மதன் மூவுலகத்துப் பெண்டிர் எல்லோருடைய அழகு நலங்களை யறிவானாகலின் அவனே சீதைக்கு அப்பெண்டிர் யாரும் தோற்ற மெய்ம்மையை எழுதுதற்குரியவனானான். ஊன்றுதல் என்பது கல்லில் எழுத்துப் பதித்தலை யுணர்த்தியது. எழுதுங்கால் எழுதவேண்டியவற்றைச் சொல்லிக்கொண்டே எழுதும் மரபு புலப்படுத்தச் 'சொல்லியூன்றியவாம் வெற்றிவரை' என்றான். வரை என்றது, வரையப்பட்ட எழுத்துக்களை. எழுத்துக்களின் வரிசையாகிய வரிகள் போலச் சீதையின் வயிற்று மடிப்புக்கள் விளங்கின என்றவாறு. அவையும் வெற்றிவரை யெனத் தோற்றும் என்க. "படைப்புழி வேதன் கமலமென் மலரைப் பழிக்குமென் கரத்தினா னருவைப், படித்தலும் விரல்கள் அழுந்தியவரையோ பெட்புறு மங்கையம்பருவம், அடித்தலம் சேர்த்தியேறுதற்கமைத்த படி கொலோ அவ்வயிறணிந்த. மடிப்புறு வரையினழகினுக்குவமை மற்றுநா முரைக்குமாறெவனோ" (நைடதம் - அன்னத்தைத் தூது - 20) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். ஒருவர் அடைந்த வெற்றியைக் கல்லில் பொறித்தல் பழங்கால மரபாதலை நினைக. இங்கு எல்லோரும் தோற்றதை யெழுதிவைத்த எழுத்துவரி போலச் சீதையின் வயிற்று மடிப்புகள் தோன்றின என்றவாறு. (42)

### கொங்கை

**4595.** செப்பென்பென் கலச மென்பென்
செவ்விள நீருந் தேர்வென்
துப்பொன்று திரள்சூ தென்பென்
சொல்லுவென் றும்பிக் கொம்புந்
தப்பின்றிப் பகலின் வந்த
சக்கர வாக மென்பெ
னெப்பொன்று முலைக்குக் காணேன்
பலநினைந் துலைவெ னின்னும்.

'செப்பு என்பென்; கலசம் என்பென்;
செவ் இள நீரும் தேர்வென்;
துப்பு ஒன்று திரள் சூது என்பென்;
சொல்லுவென் தும்பிக் கொம்பும்;

தப்பு இன்றிப் பகலின் வந்த
சக்கர வாகம் என்பென்;
ஒப்பு ஒன்றும் முலைக்குக் காணேன்,
பல நினைந்து உலைவென் இன்னும்.'

பொ :—சீதையின் கொங்கைக்கு ஒப்பான பொருள் ஒன்றையும் காணுதேனுகிய யான், மணிச் செப்பு உவமையாமோ என்று நினைப்பேன்; பின்பு அதை விடுத்துப் பொற்கலசத்தை நினைப்பேன்; செவ்விள நீரையும் உவமையாமோ என்று ஆராய்வேன்; பவழத் திருல் செய்யப் பெற்ற திரண்ட சொக்கட்டான் காய் உவமையாமோ என்று நினைப்பேன்; யானையின் கொம்பையும் உவமையாகச் சொல் லிப்பார்ப்பேன் ; தவறுதல் இன்றிப் பகற்காலத்தே வெளிப்பட்டு வந்த சக்கரவாகப் பறவை உவமையாமோ என்று கருதுவேன் ; மேலும் இவை போன்ற பலவற்றை நினைந்து வருந்திக் கொண்டிருக் கின்றேன்.

கு :—செப்பு என்றது மணிகள் வைக்கும் சிமிழை. முலைக்கு ஒப்பு ஒன்றும் காணுதேனுகிய யான் என்பென், தேர்வென், என்பென், சொல்லுவென். என்பென்; இன்னும் பல நினைந்து உலைவென் என இயையும். சக்கரவாகம் என்பது சூரியன் கிரணங்களை அருந்தும் இயல்புடைய இணைபிரியாப் பறவை ஆகலின் 'பகலின் வந்த சக்கர வாகம்' என்றுர். இதனுல் சீதையின் நகிலுக்கு உவமையின்மை கூறியவாறு. (43)

## தோள்

**4596.** கரும்புகண் டாலு மாலைக்
காம்புகண் டாலு மாலி
யரும்புகண் டாரை சோர்வ
தன்றிவே றறிவ துண்டோ
சுரும்புகண் டாலும் கோதை
தோணினைந் துவமை சொல்ல
இரும்புகண் டனைய நெஞ்ச
மெனக்கிலை யிசைப்ப தென்னே.

'கரும்பு கண்டாலும் மாலைக்
காம்பு கண்டாலும் ஆலி
அரும்பு கண் தாரை சோர்வது
அன்றி வேறு அறிவது உண்டோ?

சுரும்பு கண்டு ஆலும் கோதை
தோள் நினைந்து உவமை சொல்ல
இரும்பு கண்டனைய நெஞ்சம்,
எனக்கு இலை; இசைப்பது என்னோ?'

பொ :—கரும்பினைப் பார்த்தாலும், ஒழுங்காக வளர்ந்த மூங்கிலைப் பார்த்தாலும், வண்டுகள் ஆரவாரித்து மொய்க்கும் கூந்தலையுடையாளாகிய சீதையின் தோளை நினைந்து, மழைத்துளி போலத் தோன்றும் கண்ணீர் தாரை தாரையாகச் சொரிவதல்லது வேறு ஒன்றை அறிகின்ற தன்மையும் என்பால் உளதாமோ? அங்ஙனமிருக்க அத் தோளுக்குத் தக்க உவமையை ஆராய்ந்து சொல்லுதற்கு இரும்பு போன்ற வலிய நெஞ்சம் எனக்கு இல்லையே! யான் உவமை சொல்வதுதான் எவ்வாறோ?

கு :—கரும்பும் மூங்கிலும் திரட்சியாலும் நீட்சியாலும் பளபளப்பாலும் பெண்டிர் தோள்களுக்கு உவமையாகத்தக்கவை. இராமன் அவ்விரண்டையும் கண்ட பொழுதே சீதையின் தோள்கள் நினைவுக்கு வருதலால் கண்ணீர் சோர்ந்து நிற்பதன்றிப் பிறிது ஒன்றை அறியும் ஆற்றல் இலனாகின்றான் என்றவாறு. இரும்பு போன்ற வலிய நெஞ்சம் இருந்தால் பிரிந்த சீதையின் தோள்கள் நினைவிற்கு வந்த பிறகும் அத்தோள்கட்கு இன்ன இன்ன பொருள்கள் உவமையாகலாம் என்று நினைந்து சொல்ல இயலும்; அத்தகைய நெஞ்சமும் இராமனுக்கு இல்லாமையால் அத்தோள்கட்கு உவமை சொல்லுதலும் இயலாதாயிற்று என்றவாறு. சீதையின் தோள்களை நினைத்தவுடன் துன்பம் பெருகுவதால் அவற்றிற்குரிய உவமையை நினைந்து சொல்லுதற்குரிய வலிமை நெஞ்சிற்கு இலதாயது என்க. "எல்லா நீ, உற்ற தெவனோ மற்றென்றீரேல் எற்சிதை, செய்தானிவனென உற்றதிதுவென எய்த உரைக்கும் கானகத்துண்டாயின், பைதலவாகிப் பசக்குவ மன்னோ என், நெய்தல் மலரன்ன கண்" (கலி–142) எனத் தலைவி ஒருத்தி கூறியது இங்கு ஒப்புநோக்கத்தகும். கரும்பு கண்டாலும் காம்பு கண்டாலும் கோதை தோள் நினைந்து கண் தாரை சோர்வதன்றி வேறு அறிவதுண்டோ? உவமை சொல்ல இரும்பு கண்டனைய நெஞ்சம் எனக்கிலை என்னே இசைப்பது? என இயையும். காம்பு - மூங்கில். ஆலி - மழைத்துளி. அரும்புதல் - உண்டாதல்; தோன்றுதல். கோதை என்பது சினையாகு பெயராய்ச் சீதையை யுணர்த்தியது, சுரும்பு கண்டு ஆலுதற்குக் காரணம் கூந்தலின் இயற்கை மணமேயாம். இரும்பு கண்டனைய என்புழி கண்டு என்பது அசைநிலையாய் நின்றது. வன்னெஞ்சிற்கு இரும்பை உவமை கூறுவதுண்டு. இரும்பு தருமனத்தேனை (திருவாசகம்-) என்றது காண்க.

(44)

முன்கை

4597. முன்கையே யொப்ப தொன்று
முண்டுமூன் றுலகத் துள்ளு
மென்கையே யிழுக்க மன்றே
யியம்பினுங் காந்த ளென்றல்
வன்கையாழ் மணிக்கை யென்றன்
மற்ருென்றை யுணர்த்த லன்றி
நன்கையா டடக்கை யாமோ
நலத்தின்மே னலமு முண்டோ.

'"முன்கையே ஒப்பது ஒன்றும்
உண்டு, மூன்று உலகத்துள்ளும்"
என் கையே இழுக்கம் அன்றே?
இயம்பினும், காந்தள் என்றல்,
வன் கை யாழ் மணிக்கை என்றல்,
மற்று ஒன்றை உணர்த்தல் அன்றி
நன் கையாள் தடக்கை ஆமோ?
நலத்தின்மேல் நலமும் உண்டோ?'

பொ :—மூவுலகத்திலும் சீதையின் முன்னங்கையை ஒப்பதாகிய ஒரு பொருளும் உண்டு என்று சொல்லுதலே குற்றமன்ருே? சொன்ஞலும், காந்தள் (உவமையாம்) என்று சொல்லுதலும் வலிய தன்மையுடைய யாழின் அழகிய கை (உவமையாம்) என்று சொல்லுதலும் வேறு ஒன்றை யுணர்த்தியதாகுமே யன்றி நல்லொழுக்கமுடைய சீதையின் வளைந்த முன்கைக்கு ஏற்ற உவமையாமோ? (ஆகாவாம், எல்லாவற்றிற்கும் வரம்பாக அமைந்த) அழகிற்கு மேலாக ஒரு அழகும் உளதாமோ?

கு :—சீதையின் முன்கை உவமையிலாதது என்றவாறு. நலம் என்றது எல்லாவற்றிற்கும் வரம்பாகத் திகழும் பேரழகை; பேரழகிற்கு மேலாக ஓரழகு இருத்தல் இயல்பன்று என்ற பொதுப் பொருளால் சீதையின் முன்கையின் அழகிற்கு மேலானதாய் உவமையாகத் தக்க பொருள் ஒன்றுமில்லை என்ற சிறப்புப் பொருள் நிறுவப்பட்டமையின் இது வேற்றுப் பொருள் வைப்பணி எனப்படும். என்கை - என்று சொல்லுகை. ஏனைமகளிர் முன்கைகட்கு உவமையாகத்தக்க காந்தள் மலரும் யாழ்க்கோட்டின் முனையும் சீதையின் முன்கைக்கும் அழகு குறைந்தன ஆதலின், வாளா வேறு ஒன்றை உணர்த்தியதாகக் கொள்வதன்றி அவள் முன்கைக்கு உவமையாவன அல்ல

என்றவாறு. வன்கை என்றது வலியதன்மை எனப் பண்புணர்த்தியது. யாழ்க்கோட்டின் முனை சிறுத்து வளைந்திருத்தல் பற்றி யாழின் கையாகக் கூறப்பட்டது. யாழ் மணிக்கை - யாழின் அழகிய கை. யாழ்க்கோட்டின் முனையில் அமைந்த வார்க்கட்டுகள் பெண்டிரின் முன் கையில் அணிந்த வளையல் போன்றிருத்தல் கண்டு, "நெடும்பணைத் திரள்தோள் மடந்தை முன்கைக் குறுந்தொடி யேய்க்கும் மெலிந்து வீங்கு திவவின், மணிவார்ந்தன்ன மாயிரு மருப்பின்" (பெரும்பாண் – 12-14) எனக் கூறியிருத்தல் காணலாம் திவவு முன்கைக் குறுந்தொடி ஒக்கும் என்றமையால் யாழ்க் கோட்டின் முனை மடந்தையின் முன்கை யொக்கும் என்பது பெறப் படுதலின் யாழ் மணிக்கையை மகளிர் முன்கைக்கு உவமை கூறும் மரபு உண்டாயது போலும். உவமை கூறவந்து உவமையல்லாத ஒன்றை யுணர்த்தியதாக முடியும் என்பான் 'மற்றென்றை யுணர்த்த லன்றி...ஆமோ' என்றான். நன்கை என்புழிக் 'கை' ஒழுக்கம் என்னும் பொருளது, தடக்கை - வளைந்தகை. "தடவென்கிளவி கோட்டமும் செய்யும்" (தொல் - சொல்-) என்பது காண்க. தடக்கை யாமோ என்றது தடக்கைக்கு உவமையாமோ? என்றவாறு. (45)

அகங்கை

**4598.** ஏலக்கொண் டமைந்த பிண்டி
யிளந்தளிர் கிடக்க யாணர்க்
கோலக்கற் பகத்தின் காமர்
குழைநறுங் கமல மென்பூ
நூலொக்கு மருங்கு லாட
னூபுரம் புலம்புங் கோலக்
காலுக்குத் தொலையு மென்றாற்
கைக்கொப்பு வைக்க லாமோ.

ஏலக் கொண்டு அமைந்த பிண்டி
இளந்தளிர் கிடக்க; யாணர்க்
கோலக் கற்பகத்தின் காமர்
குழை, நறுங் கமல மென்பூ,
நூல் ஒக்கும் மருங்குலாள் தன்
நூபுரம் புலம்பும் கோலக்
காலுக்குத் தொலையும் என்றால்,
கைக்கு ஒப்பு வைக்கலாமோ?

பொ :—(பெண்டிரின் கைக்கு உவமையாதற்குப்) பொருந்த அழகு கொண்டு அமைந்த அசோகத்தின் இளமையான தளிர் கிடக் கட்டும், புதிய அழகினையுடைய கற்பகத்தின் விரும்பத்தக்க தளிரும், நறுமண மிக்க தாமரைப் பூவும், நூலை ஒத்த நுண்ணிய இடையை யுடைய சீதையின் சிலம்பு ஒலிக்கும் அழகிய கால்களுக்கு ஒப்பாகாது தோற்கும் என்றால் அவள் கைகட்கு ஒப்பாக வைத்துக் கூறலாமோ?

கு :—கை என்றது அகங்கையினை. சீதையின் அகங்கையும் உவமையற்றது என்பது கூறியவாறு. பிண்டி - அசோகம். கற்பகத் தின் தளிரும் கமலப் பூவும் ஆகிய உயர்ந்த பொருள்களே உவம மாகா என்கின்றபோது அவற்றினும் தாழ்ந்ததாகிய அசோகத்தளிர் உவமையாகாமை தானே பெறப்படுதலின் "பிண்டியிளந்தளிர் கிடக்க" என்றான். இதனால் பிண்டியின் இழிதகவு புலனும். குழை - தளிர். காமர் – விருப்பம். உறுப்புக்களில் தாழ்ந்த காலுக்குத் தோற்ற கற்பகத் தளிரும் கமல மலரும் உயர்வுடைய கைகட்கு ஒப்பாகா என்பான். 'கைக்கொப்பு வைக்கலாமோ' என்றான். (46)

நகம்

**4599.** வெள்ளிய முறுவல் செவ்வாய்
விளங்கிழை யிளம்பொற் கொம்பின்
வள்ளுகிர்க் குவமை நம்மான்
மயர்வற வகுக்க லாமோ
எள்ளுதிர் நீரே மூக்கை
யென்றுகொண் டிவறி யென்றும்
கிள்ளைகண் முருக்கின் பூவைக்
கிழிக்குமே லுரைக்க லாமோ.

வெள்ளிய முறுவல், செவ்வாய்,
விளங்கு இழை இளம்பொற் கொம்பின்
வள் உகிர்க்கு உவமை நம்மால்
மயர்வு அற வகுக்க லாமோ?
"எள்ளுதிர் நீரே மூக்கை"
என்று கொண்டு, இவறி, என்றும்,
கிள்ளைகள், முருக்கின் பூவைக்
கிழிக்கு மேல், உரைக்கலாமோ?

பொ :—வெண்மையான பற்களையும் சிவந்த வாயையும் ஒளியொடு விளங்கும் அணிகலன்களையும் உடைய இளமையான அழகிய பூங்கொம்பு போன்றவளான சீதையின் கூரிய நகங்கட்கு உவமை நம்மால் மயக்கமில்லாமல் (தெளிவாகக்) கூறல் இயலுமோ? (இயலாது;) கிளிகள் முருக்கின் பூவைக் கண்டு (அதனைப் பெண்டிர் வாயென மயங்கி) 'நீரா எம்மூக்கைச் சீதையின் நகங்களுக்கு உவமையாகா என இகழ்கின்றீர்கள்? என்று வினவிக் கொண்டு (அது பூவென்பதை) மறந்து எக்காலத்தும் அப் பூவைக் கிழிக்குமாறல் அக்கிளியின் மூக்கை அவள் நகங்களுக்கு உவமையாகக் கூறலாமோ?

கு :—சீதையின் கைந்நகங்கள் உவமையில்லாத பேரழகின என்றவாறு. பெண்டிரின் விரல் நகங்களுக்கு உவமையாகக் கூறப் பெறும் கிளியின் மூக்கும் சீதையின் கைந்நகத்திற்கு உவமையாகக் கூறத்தக்கதன்று; என்னை? கிளிகள் தம் மூக்குச் சீதையின் கைந் நகங்கட்கு உவமையாகத் தக்கனவாகவும் பெண்டிரின் வாய் அது உவமையாகாது என இகழ்வதறிந்து, சினந்து முருக்கின்பூவை அப் பெண்டிரின் வாயாக மயங்கி அது பூவென்பதையே மறந்து நீரே மூக்கை யெள்ளுதிர்? என்று வினவிக் கொண்டு என்றும் அம் முருக்கின் பூவைக் கிழித்தலால் அக்கிளிகளே தம் மூக்குச் சீதையின் கைந்நகங்கட்கு உவமையாகாது என்பதை உணர்ந்திருந்தமை பெறப்படுதலின் என்க. அத்தகைய அதனை நாம் உவமையாக உரைக்கலாமோ? என்றவாறு. முருக்கின் பூவைக் கிளிகள் கிழித்த லாகிய இயல்பான நிகழ்ச்சியைச் சீதையின் நகத்திற்கு உவமையாகாது என்று இகழ்ந்த வாயாக அப்பூவை மயங்கிக் கிழித்ததாகக் கூறியது மயக்கவணியை அங்கமாகக் கொண்டுவந்த தற்குறிப்பேற்ற அணியாகும். முருக்கின் பூ பெண்டிரின் வாய்க்கு உவமையாகத் தகுவது. உவமையாகிய முருக்கின் பூவை உவமேயமாகிய மகளிரின் வாயாகக் கிளிகள் கருதிக் கிழித்தது என்பது மயக்கவணி. இவறி-மறந்து; அது பூவென்பதை மறந்து என்க. சீதையின் நகங்கட்கு உவமை நம்மால் மயர்வற வகுக்கமுடியாது என்பதும், தம் மூக்குச் சீதையின் நகங்கட்கு உவமையாகா என்பதை யுணர்ந்துள்ள கிளிகளின் மூக்கை அவள் நகங்கட்கு உவமை கூறப் பொருந்தாது என்பதும் இதனுல் புலப்படுத்தியவாறு. (47)

### கழுத்து

**4600.** அங்கையு மடியுங் கண்டா
லரவிந்த நினையு மாபோல்
செங்களி சிதறி நீலஞ்
செருக்கிய தெய்வ வாட்கண்
மங்கைதன் கழுத்தை நோக்கி
வளரிளங் கமுகும் வாரிச்
சங்கமு நினைதி யாயி
னவையென்று துணிதி தக்கோய்.

அங்கையும் அடியும் கண்டால்
அரவிந்தம் நினையு மாபோல்,
செங்களி சிதறி, நீலம்
செருக்கிய தெய்வ வாட்கண்
மங்கைதன் கழுத்தை நோக்கி,
வளர் இளங் கமுகும், வாரிச்
சங்கமும், நினைதி யாயின்,
நவை என்று துணிதி தக்கோய்!

பொ:—தகுதியுடையோனே! சீதையின் அகங்கையையும் அடியையும் கண்டால் யான் தாமரை மலரை உவமையாமென்று நினைப்பதுபோல, செவ்வரி படர்ந்து நீலநிறமுடையதாய் மதர்த்துள்ள தெய்வத்தன்மை வாய்ந்த வாள் போன்ற கண்ணையுடைய சீதையின் கழுத்தை நீ மனத்தால் பார்த்து (அதற்கு உவமையாம் என்று) வளர்ந்துள்ள இளங்கமுக மரத்தினையும் கடலில் தோன்றும் சங்கினையும் நினைப்பாயானல் அந்நினைவு தவருனதாகும் என்று தெளிவாயாக.

கு:—சீதையின் கழுத்துக்கு உவமையில்லை என்றவாறு. சீதையின் கழுத்தைப் பற்றிக் கூறும்போதே இராமன் அவள் கண்ணழகில் ஈடுபடுகின்றமை புலப்படுத்துவதாக இரண்டாமடி அமைந்துளது. அகங்கை இடையது கெட்டு அங்கை என நின்றது; உள்ளங்கை என்பது பொருள். சீதையின் அகங்கையினையும் அடியையும் இராமன் காணும்போது அவ்விரண்டிற்கும் உவமையாகுமோ என்ற எண்ணத்தால் தாமரை மலரை எண்ணுதல் உண்டு ஆதலின் ‘அரவிந்தம் நினையுமாபோல்’ என்ருன். யான் நினையுமாபோல் நீயும் சீதையின் கழுத்தை மனத்தால் நோக்கிக் கமுகமரத்தினையும் சங்கினையும் உவமையாக நினைந்தால் தவறு என்று துணிவாயாக

என்றமையால் அங்கையும் அடியுங் கண்டுதான் அரவிந்தத்தை நினைந்ததும் தவறுடையதே என்பது உடன்பட்டவாருதல் காண லாம். செங்களி என்றது செவ்வரியை; அது களிப்பு மிகுதியால் தோன்றுவதாகலின் அப்பெயரால் கூறினுன். சிதறுதல் - படர்தல். நீலநிறத்தோடு தேர்ந்த கண் என்பான் நீலஞ் செருக்கிய கண் என்ருன். தெய்வக் கண். வாட்கண் என்க. சீதையின் கண்ணிலும் தெய்வத்தன்மை புலப்படும் என்க. வாள் போன்று கூரிய கண் என்க. கமுகில் உயர்ந்ததும் சங்கில் உயர்ந்ததும் கூறவேண்டி வளரிளங்கமுகு எனவும் வாரிக் சங்கு எனவும் அடைகளால் சிறப்பித் தான். நோக்குதல் இங்கு மனத்தால் நோக்குதல். சீதையின் கழுத்தை அனுமன் மனத்தால் அன்றி நோக்குதல் இப்பொழுது கூடாமையறியலாம். நவை - குற்றம். வளரிளங்கமுகினும் வாரிச் சங்கினும் பேரழகுடையது சீதையின் கழுத்து ஆகலின் அவற்றை உவமையாக நினைதல் நவையாயிற்று. துணிதல் - தெளிதல். (48)

## வாயிதழ் 4601-4602

**4601.** பவளமுங் கிடையுங் கொவ்வைப்
பழனும்பைங் குமுதப் பூவும்
துவள்வில விலவங் கோப
முருக்கென்றித் தொடக்கஞ் சாலத்
தவளமென் றுரைக்கும் வண்ணஞ்
சிவந்துதேன் றதும்பு மாயிற்
குவளையுண் கண்ணி வண்ண
வாயது குறியு மஃதே.

'பவளமும், கிடையும், கொவ்வைப்
பழனும், பைங்குமுதப் பூவும்,
துவள்வில இலவம், கோபம்,
முருக்கு என்றித் தொடக்கம் சாலத்
தவளம்' என்று உரைக்கும் வண்ணம்
சிவந்து, தேன் ததும்பும் ஆயின்,
குவளை உண்கண்ணி வண்ண
வாய் அது; குறியும் அஃதே.

பொ :—'பவளத் துண்டமும், செங்கிடையும், கொவ்வைப் பழமும், பசுமையான குமுதக் கொடியின் பூவும், அசைதல் இல்லாத இலவமரத்தின் பூவும், இந்திர கோபமும், முருக்க மலரும் என்ற

இவை தொடக்கமான உவமைப் பொருள்கள் யாவும் தனக்கு முன்னே மிகவும் வெண்மையானவை' என்று சொல்லும்படி மிகச் சிவந்து தேன் ததும்பும் ஆயின் அது, குவளை மலர் போன்ற மையுண்ட கண்ணையுடைய சீதையின் அழகிய வாயாகும். அவளை அறிதற்குரிய அடையாளமும் அவ்வாயே யாகும்.

கு :—சீதையின் வாயிதழ் உவமையில்லாதபடி மிகச் சிவந்து தேன் ததும்பும் இயல்பினது என்பதும் அவ்வாயிதழே அவள் சீதை யென்று அறிதற்கு அடையாளமாகும் என்பதும் கூறியவாறு. பவள முதலியன செந்நிறத்தனவாயினும் சீதையின் வாயிதழை நோக்க அவை மிகவும் வெண்ணிறமுடையன என்று உரைக்க நேரும் சீதை யின் வாயிதழ் அவ்வளவு சிவந்திருக்கும். "நாயகன் றிருவடி குறித்து நாட்குறின் பாய்திசைப் பவளமும் குவளைப் பண்பினும்" (சுந்தர - உருக் - 39) எனப் பின் கூறுதலும் காண்க. இலவமும் கோபமும் முருக்கும் என உம்மை விரிக்க. கிடை - செங்கிடை; நெட்டி. தவளம்- வெண்மை. சிவந்து தேன் ததும்புமாயின் அது குவளையுண்கண்ணி வண்ணவாய்; என்க. குறி - அடையாளம் இவள்தான் சீதையென அறிதற்கு இத்தகைய வாயிதழே அடையாளம் என்றவாறு. (49)

**4602.** சிவந்ததோ ரமிழ்த மில்லை
தேனில்லை யுளவென் ருலும்
கவர்ந்தபோ தன்றி யுள்ள
நினைப்பவோர் களிப்பு நல்கா
பவர்ந்தவா ணுதலி னுடன்
பவளவாய்க் குவமை பாவித்
துவந்தபோ துவந்த வண்ண
முரைத்தபோ துரைத்த தாமோ.

'சிவந்தது ஓர் அமிழ்தம் இல்லை ;
தேன் இல்லை உள என்ருலும்,
கவர்ந்தபோது அன்றி, உள்ளம
நினைப்ப ஓர் களிபபு நல்கா ;
பவர்ந்த வாள் நுதலினுள் தன
பவள வாய்க்கு உவமை பாவித்து
உவந்தபோது. உவந்த வண்ணம
உரைத்தபோது, உரைததது ஆமோ ?

பொ :—(சீதையின் வாய்போலச்) சிவந்துள்ளதோர் அமிழ்தம் எங்கும் இல்லை ; மிகச் சிவந்த தேனும் இல்லை; உள்ளன என்று பாவனையாகக் கொண்டாலும், அவை வாயில் கவர்ந்து உண்டபோது அல்லாமல் உள்ளத்தால் நினைத்த அளவிலே ஒரு களிப்பை உண்டாக்க மாட்டாவாம் ; (ஆதலால்) நெருங்கிய ஒளியுள்ள நெற்றியையுடைய சீதையின் பவளம் போன்ற வாய்க்கு உவமையைப் பாவனை செய்து மகிழ்ந்த காலத்தும் மகிழ்ந்தபடி சொன்னபோதும் அவள் வாய்க்குப் பொருந்திய உவமை சொன்னது ஆமோ ? (ஆகாது.)

கு :—மேல் நிறம்பற்றி அவள் வாய்க்கு உவமையின்மை விளக்கி, இங்கு நிறமும் சுவையும் பயனும் பற்றி அவள் வாய் உவமையற்றமை விளக்குகின்றான். அமிழ்தம் என்றது பாலை. "பாலொடு தேன் கலந்தற்றே பணிமொழி வாலெயிறு ஊறிய நீர்" (குறள் - 1121) என்றதை நினைந்து இங்ஙனம் கூறினர் எனலாம். பாலைப் போலவும் தேனைப் போலவும் இனிதாகிய வாயிதழ் என்று கூறிய வழி இனிமைக்கு மட்டுமே பாலும் தேனும் உவமையாவதன்றி நிறத்திற்கு உவமையாகும் தன்மை அவ்விரண்டுக்கும் இல்லை ஆதலின், 'சிவந்ததோர் அமிழ்தம் இல்லை தேனில்லை' என்றான். சிவந்த நிறமுடைய பாலும் தேனும் இருந்தால் உவமையாகும்; அத்தகைய பாலும் தேனும் இல்லாமையால் பாவனையால் சிவந்த பாலும் தேனும் உள என்று கொண்டாலும் அவை உண்டபோதன்றி நினைத்த அளவில் மகிழ்ச்சியைத் தருவன அல்ல; சீதையின் வாயிதழோ நினைக்குந்தொறும் மகிழ்ச்சியைத் தரவல்லது. ஆதலின் அப்பாவனையாற் கொண்ட உவமையும் பயன் அளிக்காமல் தோல்வியுறுதலைக் காணலாம். சீதையின் வாய்க்குப் பொருத்தமான உவமை சொல்ல முடியாமையால் இல்லாத இயல்புகளை இருப்பதாகப் பாவித்து ஒரு பொருளை உவமையாக நினைந்து மகிழ்ந்தாலும் மகிழ்ந்த வண்ணம் உவமையைச் சொன்னாலும் அவ்வாய்க்கு ஏற்ற உவமையைச் சொன்னதாகக் கொள்ள முடியாது என்றவாறு. உளவென்றாலும் என்பது பாவித்துக் கூறியதாகும். பவர்தல் - நெருங்குதல். வாள் - ஒளி. உள்ளம் நினைப்பவோர் களிப்பு நல்கா என்று விலக்கினமையின் இது விலக்குவமை. (50)

பல்

4603\. முல்லையு முருந்து முத்து
முறுவலென் றுரைத்த போது
சொல்லையு மமிழ்தும பாலுந்
தேனுமென் றுரைக்கத் தோன்று

மல்லதொன் ருவ தில்லை
யமிழ்திற்கு முவமை யுண்டோ
வல்லையே லறிந்து கோடி
மாறிலா வாறு சான்ரேய்.

முல்லையும், முருந்தும், முத்தும்
முறுவல் என்று உரைத்தபோது,
சொல்லையும் அமிழ்தும் பாலும் தேனும்
என்று உரைக்கத் தோன்றும்,
அல்லது ஒன்று ஆவது இல்லை;
அமிழ்திற்கும் உவமை உண்டோ ?
வல்லையேல் அறிந்து கோடி
மாறு இலா ஆறு—சான்ரேய் !

பொ :—முல்லை அரும்பும் மயிலிறகின் அடிப்பகுதியும் முத்தும் அவள் பல்லுக்கு (உவமையாம்) என்று சொல்வோமாயின், அவள் சொல்லையும் அமிழ்தும் பாலும் தேனும் போலும் என்று சொல்ல எண்ணம் உண்டாகும்; அதுவல்லது வேறு ஒன்றும் பயனுண்டா காது ; (எல்லாவற்றினும் சிறந்ததாகிய) அமிழ்தத்திற்கும் உவமை கூறுவதுண்டோ? அதுபோலவே சீதையின் பல்லுக்கும் சொல்லுக்கும் உவமையில்லாத தன்மையைச் சான்ரேனே! நீ வல்லையேல் அறிந்து கொள்க.

கு :—சீதையின் பல் உவமையற்றது என்றவாறு. தன்னின முடித்தல் என்ற உத்தியால் சொல்லும் உடன் கூறினர். மற்றைப் பெண்டிரின் பல்லுக்கு உவமையாகத்தக்க முல்லை அரும்பையும் மயிலிறகின் அடியையும் முத்தையும் சீதையின் பல்லுக்கு உவமை யாம் என்று பொதுமை நோக்கிச் சொல்வோமாயின் அதே நெறியில் அவள் சொல்லுக்கும் அமிழ்தும் பாலும் தேனும் ஒப்பாம் என்று பொதுமை நோக்கிச் சொல்லத் தோன்றும் ; அந்த இழிதகவு அன்றிப பிறிதொரு பயனும் உண்டாகப் போவதில்லை. தேவர் அமிழ்துக்கு உவமை இல்லாததுபோல, அமிழ்தொடு பிறந்த சீதையின் உறுப்புக்களுக்கும் உவமையின்மையைச் சான்ரேய்! வல்லையேல் அறிந்து கொள்க என்றவாறு. உவமையிலாத சீதையின் பல்லுக்கு உவமை கூறும் ஒரு தவற்றினைச் செய்தோ மாயின் அத் தவறு அவள் சொல்லுக்கும் உவமைகூறும் தவற்றினை உண்டாக்குவதன்றிப் பிறிதொரு பயனுமில்லை என்றவாறு. அமிழ் திற்கும் உவமையுண்டோ? என்றது வேற்றுப் பொருள் வைப்பு. மாறிலாவாறு—உவமையிலாத்தன்மை. சான்ரேய்! வல்லையேல் அறிந்து கோடி என இயையும். (51)

மூக்கு

**4604.** ஓதியு மெள்ளுந் தொள்ளைக்
குமிழுமூக் கொக்கு மென்றாற்
சோதிசெய் பொன்னு மின்னு
மணியும்போற் றுளங்கித் தோன்றா
ஏதுவு மில்லை வல்லோ
ரெழுதுவோர்க் கெழுத வொண்ணா
நீதியை நோக்கி நீயே
நினைதியா னெடிது காண்பாய்.

ஓதியும் எள்ளும் தொள்ளைக் குமிழும்
மூக்கு ஒக்கும் என்றால்
சோதிசெய் பொன்னும் மின்னும்
மணியும்போல் துளங்கித் தோன்றா;
ஏதுவும் இல்லை; வல்லோர்
எழுதுவோர்க்கு எழுத ஒண்ணா
நீதியை நோக்கி நீயே
நினைதியால்,—நெடிது காண்பாய்!

பொ:—மிகுதியாகக் கற்றறிந்தவனே! சீதையின் மூக்கு, பச்சோந்தியையும் எள்ளின் பூவையும் துளையுடைய குமிழம்பூவையும் ஒக்கும் என்று கூறினால், அம் மூன்றும் ஒளி செய்கின்ற பொன்னும் மின்னுகின்ற மணியும் போல் ஒளியுடன் காணப்படா; (ஒளியுடன் விளங்குதற்குரிய) காரணமும் அப் பச்சோந்தி முதலியவற்றிற்கு இல்லை; வல்லவராய் ஓவியம் வரைபவர்க்கும் எழுத முடியாத அவள் மூக்கின் தன்மையை நீயே ஆராய்ந்து பார்த்து உணர்ந்து கொள்வாயாக.

கு:—சீதையின் மூக்கு உவமையிலாதது என்றவாறு. ஓதி - பச்சோந்தி. ஓந்தி இடை குறைந்து ஓதி என நின்றது. எள், குமிழ் என்பன முதலாகுபெயராய் அவற்றின் பூக்களை யுணர்த்தின. பச்சோந்தியும் எட்பூவும் குமிழம்பூவும் வடிவால் சீதையின் மூக்கிற்கு உவமையாகுமேனும் பொன்னென மணியென மூக்கு ஒளி வீசுதல் போல ஒளி வீசாமையின் அவை பொருந்திய உவமையாகா என்றவாறு. இது விலக்குவமை. மூக்கைப்போல் பச்சோந்தி முதலியன ஒளி வீசா என்றமையால் அவை யுவமையாகா என்பது பெறப்படுதல் காணலாம். துளங்குதல் - பிரகாசித்தல்; 'துளங்குமிளம் பிறையாளன்' (தேவா - 88, 10) என்றது காண்க. ஓந்தி முதலிய

வற்றிற்குப் பிரகாசிக்கும் தன்மை இனிமேல் உண்டாதற்குரிய காரணமும் இல்லை என்றவாறு. சீதையின் அழகு எழுத வொண்ணுதது என்பதை 'மதனற்கும் எழுத வொண்ணுச் சீதை' (மிதிலைக்-4) என முற்கூறியுள்ளமையாலும் தெளியலாம். நீதி - தன்மை. நோக்குதல் - ஆராய்தல். நெடிது காண்பாய் என்புழிக் காண்டல் அறிதலை யுணர்த்தியது. நெடிது கற்றறிந்தவனுதலின் மூக்கின் இயல்பை ஆராய்ந்து உணர்தற்குத் தகுதியுடையாய் என்பது கருத்து. (52)

காது

**4605.** வள்ளைகத் தரிகை வாம
மயிர்வினைக் கருவி யென்னப்
பிள்ளைக ளுரைப்ப தல்லாற்
பெரியவ ருரைக்கிற் பித்தாம்
வெள்ளிவெண் டோடு செய்த
விழுத்தவம் விளைந்த தென்றே
உள்ளுதி காதை யல்லால்
உவமைக்கு முவமை யுண்டோ.

'வள்ளை கத்தரிகை வாம
மயிர்வினைக் கருவி, என்ன,
பிள்ளைகள் உரைப்பது அல்லால்
பெரியவர் உரைக்கின் பித்தாம்;
வெள்ளிவெண் தோடு செய்த
விழுத்தவம் விளைந்தது என்றே
உள்ளுதி காதை; அல்லால்,
உவமைக்கும், உவமை உண்டோ?

பொ:—(சீதையின் காதிற்கு உவமை) வள்ளையிலையும் கத்தரிகையாகிய அழகிய மயிர்வினைக் கருவியும் ஆம் என்று அறிவு நிரம்பாதவர்கள் சொல்லுவதன்றிப் பெரியவர் அங்ஙனம் சொன்னல் அது பைத்தியமாகக் கருதப்படும்; மிக வெள்ளிதாகிய தோடு என்னும் காதணி செய்த சிறந்த முன்னைத் தவமே இவ்வாறு வடிவு கொண்டு விளைந்தது என்றே (சீதையின்) காதை நினைப்பாயாக: அங்ஙனமன்றி எல்லாவற்றிற்கும் உவமையாம் பொருளுக்கும் உவமை கூறுவதுண்டோ? (இல்லை.)

கு :—சீதையின் காது உவமையற்றது என்றவாறு. எல்லா மகளிர் காதுக்கும் வள்ளையிலையும் கத்தரிகைக் கோலும் உவமை கூறுவதுண்டு. அவ்வுவமையைச் சீதையின் காதுக்கும் கூறுவது பிள்ளைமைத்தன்மை அல்லது அறிவு மயங்கியதன்மையாம் என்றவாறு. அறிவதறியாப் பிள்ளைகள் சொன்னால் பேதைமையால் சொன்னதாகவும் கருதவேண்டும் என்றது அது பொருத்தமில்லாத உவமை என்பதையே விளக்கியவாறு. உவமைக்கும் உவமையுண்டோ என்றது வேற்றுப் பொருள் வைப்பு; அது, மகளிர் மூக்கிற்கெல்லாம் உவமையாகத்தக்க சீதையின் மூக்கிற்கு உவமை யில்லை என்பதை நிறுவுதல் காண்க. வெள்ளிவெண் தோடு என்பது மிக்க வெண்மையான கற்கள் பதித்த தோடு என்பதை விளக்கியவாறு. தோடு செய்த முன்னைத் தவமே காதாய் உருவு கொண்டு (அதனை அழகுபடுத்த) வந்தது என்பது தற்குறிப்பேற்றம். காதினால் தோடு சிறப்புறுதலின் இவ்வாறு கூறப்பட்டது. காதுக்கு வள்ளையும் கத்தரிகையும் உவமையாதலை, ''மயிரெறி கத்தரிகை யனையவாய் வள்ளை வாடுயிர் செருத்து.........வார்காதும்" (சீவக - 168) என்பதாலும் அறியலாம். (53)

கண்

4606. பெரியவாய்ப் பரவை யொவ்வா
பிறிதொன்று நினைந்து பேச
வரியவா யொருவ ருள்ளத்
தடங்குவ வல்ல வுண்மை
தெரியவா யிரக்கா னோக்கிற்
றெரிவில தெய்வ மென்னக்
கரியவாய் வெளிய வாகும்
வாட்டடங் கண்க ளம்மா.

பெரியவாய்ப் பரவை ஒவ்வா;
பிறிது ஒன்று நினைந்து பேச
அரியவாய், ஒருவர் உள்ளத்து
அடங்குவ அல்ல; உண்மை
தெரிய ஆயிரக்கால் நோக்கின்
தெரிவில; தெய்வம் என்னக்
கரிய ஆய், வெளிய ஆகும்
வாள்தடங் கண்கள் அம்மா.

பொ :—திருமாலாகிய தெய்வத்தைப் போலக் கரிய நிறம் உடையவாய் வெண்மை நிறமும் உடையவாகும் (சீதையின்) ஒளி வாய்ந்த பெரிய கண்கள்,—மிகப் பெரியவாய் அகன்று, கடலையும் உவமையாகப் பெருதன; வேறு ஒருவமை நினைந்து பேசுதற்கு அரியனவாய் நீண்டு ஒருவர் உள்ளத்து அடங்காதன; (அக் கண் களின்) நல்ல உண்மைத் தன்மைகள் தெரிந்து கொள்ள ஆயிரம் முறை நோக்கினுலும் ஒளி மிகுதியால் தெரிந்து கொள்ள இயலாதனவாம்.

கு :—சீதையின் கண்கள் உவமையில்லன என்றவாறு. "கண்ணிற் கியல்பு கசடறக் கிளப்பின், வெண்மை கருமை செம்மை யகலம் நீளமொளியென நிகழ்த்துவர் புலவர்" (திருக்கோவையார் உரை - 102) என்ற இலக்கணப்படி சீதையின் கண்கள் அமைந் துள்ளமை விளக்கியவாறு. பெரியவாய்ப் பரவையொவ்வா என்ற மையால் அகலமுடைமையும் பேச வரியவாய் ஒருவருள்ளத்தடங்குவ வல்ல என்றமையால் நீளமுடைமையும், ஆயிரக்கால் நோக்கிற் றெரிவில என்றமையால் ஒளியுடைமையும், தெய்வம் என்னக் கரிய வாய் வெளியவாகும் என்றமையால், கருமை நிறமும் வெண்மை நிறமும் உடைமையும் இனம் பற்றிச் செம்மை நிறமுடைமையும் சீதையின் கண்களுக்கு உண்டு என்பது புலப்படுத்தியுள்ளமை காண லாம். "ஈசற்கி யான் வைத்த வன்பி னகன்றவன் வாங்கியவென், பாசத்திற் காரென் றவன்றில்லை யின்னொளி போன்றவன் தோள், பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல் யாம் பேசத் திருவார்த்தையின் பெருநீளம் பெருங் கண்களே" (திருக்கோவை யார் - 109) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். தெய்வம் என்றது திருமாலை; அத்திருமாலுக்குக் கருமையும் வெண்மையும் செம்மையு மாய முந்நிறங்களும் உண்டு. "கரியனாய் வெளியனாகிச் செய்யனாய்க் காட்டுங் காண்டற்கரியனாய் எளியனாய்த் தன் அகத்துறை யழகனே போல்" (சுந்தர - ஊர்தேடு - 102) எனப் பின் கூறலும் காணலாம். இம் மூன்று நிறங்களில் செம்மை நிறம் இனம் பற்றிக் கொள்ள வைத்தார்; இதனால் சீதை கண்களுக்குச் செம்மை நிறமும் உண்டு என்பது புலப்படுத்தியவாறு. திருக்கோவையாரிலும் செம்மை நிற முடைமை இனம் பற்றியே கொள்ள வைத்துள்ளமையும் நினைக. இனி, 'தெய்வமென்ன' என்பதை இடைநிலை விளக்காகக் கொண்டு பெரியவாதலும், அரியவாதலும் உள்ளத்தடங்காமையும் ஆயிரக் கானோக்கில் தெரிவிலவாதலும் தெய்வத்திற்கும் உளவாகக் கூறி உவமையாக்கலும் ஆம். நோக்கினும் என்புழி உம்மை விகாரத்தால் தொக்கது. அம்மா என்பது கண்களை வியக்க வந்த வியப்பிடைச் சொல். (51)

## புருவம்

4607. கேளொக்கி னன்றி யொன்று
கிளத்தினூற் கீழ்மைத் தாமால்
கோளொக்கு மென்னி னல்லாற்
குறியொப்பக் கூறிற் றுமோ
வாளொக்கும் வடிக்க ணுடன்
புருவத்துக் குவமை வைக்கின்
தாளொக்க வளைந்து நிற்ப
விரண்டில்லை யநங்க சாபம்.

கேள் ஒக்கின் அன்றி ஒன்று
கிளத்தினுல் கீழ்மைத்து ஆமால்;
கோள் ஒக்கும் என்னின் அல்லால்
குறி ஒப்பக் கூறிற்று ஆமோ?
வாள் ஒக்கும் வடிக்கணுள் தன்
புருவத்துக்கு உவமை வைக்கின்,
தாள் ஒக்க வளைந்து நிற்ப
இரண்டு இல்லை, அநங்க சாபம்.

பொ:—வாள் போன்ற கூரிய கண்ணையுடையளாகிய சீதையின் புருவத்துக்கு உவமை கூற வேண்டுமாயின், இனமாக அமைந்த அவள் இரு புருவமும் ஒன்றை ஒன்று ஒத்தால் (ஒக்குமே) அன்றி வேறு ஒரு உவமையைச் சொன்னுல் இழிந்த உவமையாய்விடும்; ஓருவமையைச் சொல்லி இது என் கொள்கைக்கு ஒக்கும் என்று சொன்னுல் சொல்லலாமே யன்றி அது எல்லோர் கருத்துக்கும் ஒப்ப உவமை கூறியதாய் விடுமோ? (ஆகாது) (இனி மன்மதன் வில்லை உவமை கூறலாகாதோ எனின்?) இரண்டு முனையும் ஒப்ப வளைந்து நிற்பனவாகிய மன்மதன் வில் இரண்டு இல்லை; (ஆதலின், அதையும் இரு புருவத்திற்கு உவமை கூற வியலாது.)

கு:—சீதையின் புருவம் இணையற்றது என்றவாறு. கேள் - உறவு. புருவம் இரண்டு ஆகலின் அவற்றுள் ஒன்று மற்றென்றுக்கு உறவுடையது என்றவாறு. இரண்டு புருவங்களும் ஒன்றை ஒன்று ஒக்கும் என்று கூறலாம் அன்றி வேறு ஓருவமையைச் சொன்னுல் அவ்வுவமை இழிபுடைய தாகுமேயன்றி ஒப்புடையதாகாது என்றவாறு. சீதையின் புருவத்திற்கு இதுவே யேற்ற உவமை என்று ஒருவர் கூறினுல் அது அவர் கருத்திற்கு ஒத்தது என்று கூறுவதன்றி எல்லோர் கருத்திற்கும் ஒப்பக் கூறியதாகாது என்ற

படி. இதை இயம்புதல் வேட்கையுவமை என்பர். "நன்று தீதென் றுணரா தென்னுடைய நன்னெஞ்சம், பொன்றுதைந்த பொற் சுணங்கிற் பூங்கொடியே!—மன்றல், மடுத்ததைந்த தாமரை நின் வாண்முகத்திற் கொப்பென்று, எடுத்தியம்ப வேண்டுகின்ற தின்று" (தண்டி - உதாரணம். இயம்புதல் வேட்கையுவமம்) என்பது காண லாம். கோள் - கொள்கை. குறி - கருத்து. மன்மதன் கரும்பு வில் இரண்டு இல்லை; உள்ளது ஒன்றே யாதலின் அதைச் சீதையின் இரு புருவங்கட்கு உவமை கூற முடியாது; எனவே, அவள் புருவங் கட்கு ஏற்ற உவமையே யில்லை என்றவாறு. 'உருவிலாளன் ஒரு பெருங் கருப்பு வில், இரு கரும் புருவமாக வீக்க' (சிலப் - 2: 4, 5) என்றதும் நினைக. (55)

**4608.** நன்னாளு நளின நாணு
நளிரடி நுதலை நாடிப்
பன்னாளும் பன்னி யாற்ரு
மதியெனும் பண்ப தாகி
முன்னாளின் முளைவெண் டிங்கண்
முழுநாளுங் குறையே யாகி
எந்நாளும் வளரா தென்னி
னிறையொக்கு மியல்பிற் ருமால்.

நல்நாளும் நளினம் நாணும்
நளிர்அடி நுதலை நாடிப்,
பல் நாளும் பன்னி ஆற்ரு
மதி எனும் பண்பது ஆகி,
முன்நாளின் முளை வெண் திங்கள்
முழுநாளும் குறையே ஆகி,
எந்நாளும் வளராது என்னின்
இறை ஒக்கும் இயலபிற்று ஆமால்.

பொ:—(வளர்பிறை நாட்களுள்) முதல் நாளில் முளைக்கின்ற வெண்மையாகிய பிறைச்சந்திரன்,-தான் வீறுபெறுதற்குரிய நல்ல நாட் காலையிலும் தாமரை மலர் நாணுதற்குக் காரணமான குளிர்ந்த அடியையுடைய சீதையின் நெற்றி அழகை ஆராய்ந்து, பலநாளும் அதையே பலகால் சிந்தித்தும் தான் உவமையாதற்கு ஏலாததாய், மதி எனப்படுதற்கு ஏற்ற (ஆராய்ச்சிப்) பண்புடையதாகி. (அந்நெற் றிக்குப் பொருந்திய உவமையாமாறு) முழுமதியாதற்குரிய நாளிலும்

குறையுடையதாகவே ஆகி, எந்த நாளிலும் வளராது இருக்குமாயின் சிறிது ஒப்பாகும் தன்மையுடையதாகும்.

கு :—தாமரை மலர் வீறுபெறுதற்குரிய நாட்காலையை 'நன்னுள்' என்ருர். நாள் என்றது நாட்காலையை. அப்பொழுதலர்ந்த தாமரை மலரும் நாணுதற்குக் காரணமான அழகுமிக்க அடி என்க. நளிர் - குளிர்ச்சி. சீதையின் நெற்றியழகைக் கண்டு அதன் அழகுக்கு, 'யான் ஒப்பாவேனே' என்று பலநாள் ஆராய்ந்து பார்த்தும் தான் ஒப்பாதற்கு ஏலாமையால் மேலும் ஆராய்ந்து என்றும் வளராதிருத்தலே ஒப்பாதற்கு வழி என்று முடிவு செய்துகொண்டு பிறைமதியாகவே இருக்குமானல் சீதையின் நெற்றியைச் சிறிது ஒக்கும் என்றவாறு. இது அற்புத உவமை. பிறைமதி எந்நாளும் வளராதிராது ஆகலின் அது சீதையின் நெற்றிக்கு உவமையாகாது என்பதே கருத்து. இதனல் சீதையின் நெற்றிக்கு உவமையில்லை என்பது புலப்படுத்தியவாறு. மதி என்றது அமுத கிரணங்களையுடையது என்ற காரணம்பற்றி வந்த பெயர்; ஆராய்வது என அச்சொல்லுக்குப் பொருள் கொடுத்து 'மதியெனும் பண பதாகி' என்ருன். (56)

அளகம்

**4609.** வனைபவ ரில்லை யன்றே
வனத்துணும் வந்த பின்னை
அனையன வெனினு மந்த
வழகுக்கோ ரழிவுண் டாகா
வினைசெயக் குழன்ற வல்ல
விதிசெய விளைந்த நீலம்
புனைமணி யளக மென்றும்
புதுமையா முவமை பூண.

வனைபவர் இல்லை அன்றே
வனத்துள் நாம் வந்த பின்னை ?
அனையன எனினும் அந்த அழகுக்கு
ஓர் அழிவு உண்டாகா ;
வினை செயக் குழன்ற அல்ல ;
விதிசெய விளைந்த ; நீலம்
புனைமணி அளகம் என்றும்
புதுமையாம் ; உவமை பூண.

பொ :—நாம் வனத்தில் வந்த பின் (சீதையின் அளகத்தை) நெய் பூசி வாரி அலங்கரிப்பவர் இல்லை அன்றோ ? அவ்வாறு அலங் கரிக்கப் பெருவாயினும் அவ் அளகத்தின் அழகுக்குச் சிறிதும் குறைவு உண்டாகவில்லை ; (காரணம் என்னை எனின் ?) பணிப்பெண்டிர் ஒப்பனை செய்வதால் அவ்வளகம் சுரிந்தன அல்ல ; பிரமன் படைத்த தனுல் இயல்பாகவே சுரிந்தன ஆதலின் ; நீலமணி போன்று அழ குடன் விளங்கும் அவ்வளகம் என்றும் புதுமையாகவே தோன்று கின்றன; எனவே அவை ஒருவமையையும் ஏற்றுக்கொள்வன அல்ல.

கு :—சீதை அளகம் நிகரற்றது என்றவாறு. அளகம் என்பது நெற்றிக்கு மேல் முற்பகுதியில் சுரிந்து காணப்படும் கூந்தற் பகுதியே யாம். இதைத் தனியே பிரித்துச் சிறப்பிப்பது கவி மரபு. நாம் என்பது, இராமன் தன்னைத் தனித்தன்மைப் பன்மையாகக் கூறிக் கொண்டது. அனையன என்ற சுட்டு வனையப்படா நிலையைச் சுட்டி நின்றது. குழலுதல் என்பது சுரிந்து படி அமைத்ததுபோலத் தோன்றுதல். வனையப் படாத வழியும் அழகு கெடாதிருப்பதற்குக் காரணம் விதிசெய விளைந்தமையேயாம் என்று விளக்கியவாறு. பணிப்பெண்டிர் ஒப்பனைவினை செயக் குழன்றனவாயின் அவ்வொப் பனை யில்வழி அழகு கெடும் ; விதிசெய விளைந்த ஆதலின், வனையாத வழியும் அழகு கெடாமல் புதுமையாகவே தோன்றுகின்றன என்ற வாறு. என்றும் புதுமையாகத் தோன்றும் அளகத்திற்குக் கூறத்தக்க பொருத்தமான உவமை ஏதும் இல்லை என்பான் 'உவமை பூணு' என்ருன். அளகம் என்றது பல மயிரின் தொகுதியேயாகலின் அப்பன்மை நினைந்து அனையன எனப் பன்மை கூறினுன். விதி என்றது பிரமனை. சீதையின் அளகக் குழற்சி இயல்பாக அமைந்தது என்பது கருத்து; (57)

முகம்

**4610.** கொண்டலின் குழவி யாம்பல்
குனிசிலை வள்ளை கொற்றக்
கெண்டையொண் டரள மென்றிக்
கேண்மைய கிடந்த திங்கண்
மண்டலம் வதன மென்று
வைத்தனன் விதியே நீயப்
புண்டரீ கத்தை யுற்ற
பொழுதது பொருந்தி யோர்வாய்.

'கொண்டலின் குழவி, ஆம்பல்,
குனிசிலை, வள்ளை, கொற்றக்
கெண்டை, ஒண் தரளம், என்று
இக் கேண்மைய கிடந்த திங்கள்
மண்டலம் வதனம் என்று
வைத்தனன், விதியே; நீ அப்
புண்டரீகத்தை உற்ற பொழுது
அது பொருந்தி ஓர்வாய்'

பொ :—கரிய மேகத்தின் கொழுந்தும் செவ்வாம்பல் மலரும், வளைந்த வில்லும், வள்ளை இலையும், வெற்றி பெறும் கெண்டை மீன் களும், ஒளிவாய்ந்த முத்துக்களும் என்ற இத்தொடக்கத்தன பொருந்திய சந்திரமண்டலத்தைப் பிரமன் (சீதையின்) முகம் என்று படைத்துவைத்தான்; நீ,-(சீதையின் முகமாகிய) அத்தாமரை மலரை நெருங்கிக் காணும்போது அத்தன்மையை நன்ருக அறிவாய்.

கு :—சீதையின் முகம் உவமையற்றது என்றவாறு. என்னை? மேகக் குழவி முதலிய கிடந்த திங்கள் மண்டலம் இல்லையாதலின் என்க. கொண்டலின் குழவி முதலியன கிடந்த சந்திரமண்டலத் தைப் பிரமன் சீதையின் முகம் என்று பெயரிட்டுப் படைத்தான் என்பது வஞ்சவொழிப்பணி என்பர். கரிய அளகமும் செவ்வாயும் வளைந்த புருவமும் நெடுங் காதும் பிறழ் கண்ணும் வெண்முறுவலும் பொருந்திய சீதையின் முகம், கொண்டலின் குழவியும் ஆம்பல் மலரும் வளைந்த வில்லும் வள்ளையிலையும் கெண்டை மீனும் ஒள்ளிய முத்தும் கிடந்த சந்திரமண்டலம் போன்றது என்பதே கருத்து. கொண்டலின் குழவி என்றது மேகத்தின் கொழுந்தை. அது அளகத் திற்குவமை. அப்புண்டரீகம் என்று உவமை யாகுபெயராய் முகத்தை யுணர்த்தியவாறு. அது என்றது முன்கூறிய தன்மையை. 'திருவளர் தாமரை சீர்வளர் காவிகள் ஈசர் தில்லைக்; குருவளர் பூங்குமிழ் கோங்கு பைங் காந்தள் கொண்டோங்கு தெய்வ மருவளர் மாலை' (திருக் கோவையார்-1) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும். (58)

கூந்தல்

4611. காரினைக் கழித்துக் கட்டிக்
கள்ளினோ டாவி யூட்டிப்
பேரிருட் பிழம்பு தோய்த்து
நெறிவுறீஇப் பிறங்கு கற்றைச்

சோர்குழற் ௫ெருகுதி யென்று
சும்மைசெய் தனைய தம்மா
நேர்மையைப் பருமை செய்த
நிறைநறுங் கூந்த னீத்தம்.

'காரினைக் கழித்துக் கட்டி,
கள்ளினோடு ஆவி யூட்டி,
பேர் இருட் பிழம்பு தோய்த்து,
நெறிவு உறீஇப் பிறங்குகற்றைச்
சோர் குழல் தொகுதி என்று
சும்மை செய்தனையது அம்மா!-
நேர்மையைப், பருமை செய்த
நிறைநறுங் கூந்தல் நீத்தம்.

பொ :—நுண்ணியவற்றைக் கொண்டு பருமையாகச் செய்த (நுண்ணிய மயிரிழைகள் அடர்ந்து பருத்துக் காணப்படுகின்ற) அடர்ந்த நறுமணம் உள்ள (சீதையின்) கூந்தல் தொகுதி,-கரிய மேகத்தைக் கழிக்க வேண்டிய வெண்மை கலந்த பகுதிகளைக் கழித்து விட்டு (கரிய பகுதிகளை) ஒன்று சேர்த்துக் கட்டித் தேனோடு அகிற் புகையும் ஊட்டிப் பின்பு அம்மேகத்திரளைப் பெரிய இருட்குழம்பிலே தோய்த்து நெறிப்புத் தன்மையைப் பொருத்தி விளங்குகின்ற கற்றை யாகித் தொங்குகின்ற கூந்தல் தொகுதி என்று பேர் வைத்துச் சுமை யாகச் செய்து வைத்தாற் போன்றது.

கு :—சீதையின் கூந்தற்குப் பொருந்திய உவமையில்லை யென் பதே கருத்து. நேர்மை - நுண்மை; 'துடிகொள் நேரிடையாள்' (திருவாசகம் 29-5) என்றது காண்க. கரிய மேகத்தில் வெண்மை கலந்த பகுதியை யெல்லாம் கழித்துவிட்டு நல்ல கருநிறமுள்ள பகுதியை மட்டும் சேர்த்துக் கட்டி என்றவாறு. கள் - தேன். ஆவி நறும்புகை; அகில் புகை முதலியவை. இருட்பிழம்பு என்றது இருட் குழம்பினை. மேலும் கருநிறத்ததாக்குதற்காக இருட்பிழம்பில் தோய்த்தல் கூறினன். நெறிவு - வளைவு; சுருண்ட தன்மை. சோர்தல்-தொங்குதல்; தாழ்தல். சும்மை - சுமை. அம்மா, வியப் பிடைச் சொல். (59)

4612. புல்லிதழ் கமலத் தெய்வப்
பூவிற்கு முண்டு பொற்பி
னெல்லையின் மதிக்கு முண்டாங்
களங்கமென் றுரைக்கு மேத
மல்லவுஞ் சிறிது குற்ற
மகன்றில வன்ன மன்ன
நல்லிய லாளுக் கெல்லா
நலனன்றிப் பிறிதுண் டன்ருல்.

'புல்லிதழ் கமலத் தெய்வப்
பூவிற்கும் உண்டு; பொற்பின்
எல்லையின் மதிக்கும் உண்டாம்
களங்கம், என்று உரைக்கும் ஏதம்;
அல்லவும் சிறிது குற்றம்
அகன்றில; அன்னம் அன்ன
நல் இயலாளுக்கு எல்லாம்
நலன் அன்றிப் பிறிது உண்டன்ருல்.'

பொ:—தெய்வத் தன்மையுள்ள தாமரைப் பூவிற்கும் அழகற்ற புறவிதழாகிய குற்றம் உண்டு; அழகின் வரம்பாகிய சந்திரனுக்கும் களங்கம் என்று சொல்லுகின்ற குற்றம் உண்டு; இவையல்லாத சிறந்த பொருள்களும் சிறிதேனும் குற்றம் இல்லாதனவாக இருக்க மாட்டா; ஆனுல், அன்னப் பறவை போன்ற நல்ல நடையை யுடைய சீதைக்கு முழுவுறுப்புக்களும் நன்மையாக வமைந்துள்ள னவே அன்றிக் குற்றம் சிறிதேனும் உடையவாக அமைந்தில.

கு:—சீதையின் உறுப்புக்கள் யாவும் நல்லன; சிறிதேனும் குற்ற முள்ள பொருள்களே உலகத்தில் உள்ளன; சீதை அத்தகையள் அல்லள் என்றவாறு. பூவெனப்படுவது பொறிவாழ் பூவே என்ற படி திருமகள் தங்கும் தன்மையதாகலின் கமலத் தெய்வப் பூ என்ருன். தெய்வக் கமலப் பூவிற்கும் புல்லிதழ் உண்டு என்க. 'புல்லிதழ் பூவிற்கு முண்டு' (நாலடியார்-221) என்றது நினைக. அழகின் எல்லையில் திகழும் சந்திரன் என்றது, அழகிற்கு வரம்பாக விளங்கும் சந்திரன் என்றவாறு. அழகிற் சிறந்தன என்று கூறப்படும் பிற எல்லாப் பொருள்களும் சிறிது குற்றமுடையதாக இருக்குமேயன்றி எல்லா வகையானும் அழகு நலம் நிரம்பியவாக எப்பொருளும் இரா என்ப தற்குத் தாமரையும் சந்திரனுமாகிய எடுத்துக் காட்டுக் காட்டி விளக்

கியவாறு. சீதை ஒருத்தியே குற்றம் சிறிது மில்லாத உறுப்புக்களை யுடையவள் என்பது புலப்படுத்தியவாறு. பிறிது என்றது நன்மைக்கு மாருய குற்றத்தை. (60)

4613. மங்கையர்க் கோதி வைத்த
விலக்கணம் வண்ண வாசப்
பங்கயத் தவட்கு மையா
நிரம்பல பற்றி நோக்கின்
செங்கயற் கருங்கட் செவ்வாய்த்
தேவரும் வணங்குந் தெய்வக்
கொங்கையக் குயிலுக் கொன்றுங்
குறைவிலே குறியு மஃதே.

'மங்கையர்க்கு ஓதி வைத்த
இலக்கணம் வண்ண வாசப்
பங்கயத் தவட்கும்-ஐயா !-
நிரம்பல ; பற்றி நோக்கின்
செங்கயல் கருங்கண் செவ்வாய்த்
தேவரும் வணங்கும் தெய்வக்
கொங்கை அக்குயிலுக்கு ஒன்றும்
குறைவு இலே குறியும் அஃதே.

பொ :—ஐயா ! ஆழ்ந்து நோக்கினல் பெண்டிர்க்கு உரியதாகக் கூறியுள்ள உத்தம இலக்கணங்கள், யாவும் அழகிய வாசனையுள்ள தாமரை மலரில் வாழும் திருமகட்கும் நிரம்பவில்லை ; செவ்வரி படர்ந்த கயல்மீன் போன்ற கரிய கண்களையும் சிவந்த வாயையும் உடைய தேவப் பெண்டிரும் வணங்குதற்கு உரிய பேரழகுடைய தெய்வத்தன்மை மிக்க தனங்களோடு கூடிய குயில் போன்றவளான சீதைக்கு அவ்வுத்தம இலக்கணங்களில் ஒன்றேனும் குறைந்திலது; (நீ அவளை அறிதற்குரிய) அடையாளமும் அவ்விலக்கணமேயாகும்.

கு :—சீதை திருமகளைக் காட்டிலும் அழகு நிரம்பியவள் என்ற வாறு. அழகுக்கு இலக்கணம் கூறும் நூலில் பெண்டிர்க்கு உரிய வாகக் கூறப்பட்ட இலக்கணம் எல்லாம் சீதைபால் நிரம்பியுளது ; ஒன்றும் குறைந்திலது ; அவ்வுத்தம இலக்கணம் உடைமையே அவள் சீதை என்று அறிதற்கு அடையாளமாகும் என்றவாறு. குறி— அடையாளம். பற்றி நோக்குதலாவது, ஆழ்ந்து சிந்தித்தல். தேவர் என்றது தெய்வப் பெண்டிரை, தேவர் என்று பொது வகையாற்

கூறலும் ஆம். குயில் என்றது உவமை ஆகுபெயராய்ச சீதையை யுணர்த்தியது. செங்கயல் என்றது, செவ்வரியுடைமை கருதி; செம்மை இங்கு அழகை யுணர்த்தியது எனலும் ஆம். (61)

சொல்

**4614.** குழல்படைத் தியாழைச் செய்து
குயிலொடு கிளியுங் கூட்டி
மழலையும் பிறவுந் தந்து
வடித்தகைம் மலரின் மேலா
னிழைபொரு மிடையி ளுட
னின்சொற்க ளியையச் செய்தான்
பிழையில துவமை காட்டப்
பெற்றிலன் பெறுங்கொ லின்னும்.

'குழல் படைத்து யாழைச் செய்து
குயிலொடு கிளியும் கூட்டி,
மழலையும் பிறவும் தந்து
வடித்த கைம்மலரின் மேலான்,
இழைபொரும் இடையினுள் தன்
இன்சொற்கள் இயையச் செய்தான்;
பிழையிலது உவமை காட்டப்
பெற்றிலன்; பெறுங்கொல் இன்னும்?'

பொ :—புல்லாங்குழலின் இசையைப் படைத்து யாழின் இசையைப் படைத்து, குயிலின் குரலையும் கிளியின் சொல்லையும் படைத்து, மழலைச் சொல்லையும் மற்றும் இவைபோல்வனவற்றையும் படைத்துப் பழகித் தெளிந்த கையையுடைய, தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன், நூலிழையை ஒத்த இடையையுடைய சீதையின் இனிய சொற்களை நன்ருக அமையச் செய்தான்; ஆயின் அச்சொல்லுக்குக் குற்றமற்றதாகிய உவமைப் பொருளைப் படைத்திலன்; இனியேனும் படைப்பானே? (அறியேன்.)

கு :—சீதையின் சொல்லுக்குக் காட்டலாம் உவமையில்லை என்றவாறு. குழல் முதலியவற்றைப் படைத்துப் பழகிய பயிற்சி மிகுதியால் சீதையின் சொல்லை இனிமையுடையதாகச் செய்தான் என்றவாறு. "அயின் முகக் குலிசத் தமரர்கோ னகரும் அளகையுமென் றிவை யயனுர் பயிலுற வுற்றபடி பெரும்பான்மை பகர்திரு நகரிது படைப்பான்" (பால - நகர - 4) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும்.

பிறவும் என்றதனுல், பாகு, கரும்பு, பால், தேன், பழம் முதலியன கொள்க. இனி, வடித்தகைம்மலரின் மேலான், குழல் ஒலி, யாழொலி. குயிலின் குரல், கிளியின் மொழி மழலைச்சொல் முதலியவற்றைக் கூட்டிச் சீதையின் இன்சொற்களை இயையச் செய்தான் என்றும் பொருள் கூறலாம். இதனுல் குழல் முதலியவற்றின் இனிமை சீதையின் சொல்லில் உண்மை பெறப்படும். ''குழலும் யாழும் அமிழ்துங் குழைத்த நின் மழலைக் கிளவிக்கு'' (சிலப் - 1-2-58, 59) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். மிக இனிய சொல்லைப் படைத்த பிரமன் அச்சொல்லுக்கேற்ற உவமைப் பொருளைப் படைக்கவில்லை யாதலின் யான் எங்ஙனம் அச்சொற்கு உவமை கூற இயலும்? என்றவாறு. காட்டுதல், படைத்தலை யுணர்த்தியது. குழல், யாழ், குயில், கிளி என்பன ஆகுபெயராய் அவற்றின் ஒலிகளை யுணர்த்தின. மழலை என்றது குழந்தைகளின் குதலைச் சொல்லை; அது இனிமை மிக்கது என்பதை. ''குழலினிது யாழினி தென்ப தம் மக்கள், மழலைச் சொல் கேளாதவர்'' (குறள்—66) என்றதால் அறியலாம். (62)

**4615.** வானின்ற வுலக மூன்றும்
வரம்பின்றி வளர்ந்த வேனும்
நாநின்ற சுவைமற் றென்றே
வமிழ்தன்றி நல்ல தில்லை
மீனின்ற கண்ணி னுடன்
மென்மொழிக் குவமை வேண்டின்
தேனென்றே வமிழ்த மொன்றே
வவைசெவிக் கின்பஞ் செய்யா.

'வான் நின்ற உலகம் மூன்றும்
வரம்பு இன்றி வளர்ந்த வேனும்,
நா நின்ற சுவை மற்று ஒன்றே
அமிழ்து அன்றி நல்லது இல்லை;
மீன் நின்ற கண்ணினுள் தன்
மென்மொழிக்கு உவமை வேண்டின்,
தேன் ஒன்றே? அமிழ்தம் ஒன்றே?
அவை செவிக்கு இன்பம் செய்யா,'

பொ :—வானுலகம் முதலாகப் பொருந்திய உலகங்கள் மூன்றும் வரம்பு இல்லாமல் பரவியிருந்தாலும் அப்பரந்த உலகங்களில் நாவில் பொருந்திய மிகு சுவைக்குரியது தேவரமிழ்தம் அல்லது அதனோடு ஒப்ப நல்லது மற்றொரு பொருளோ இல்லை ; (அது போல இம்மூவுலகத்திலும் சீதையின் சொல் போன்ற சுவையுடைய பொருள் மற்றொன்று இல்லை;) மீனின் தன்மை பொருந்திய கண்களையுடைய சீதையின் மென்மையான மொழிக்குத் தேனையும் பாலையும் உவமை சொல்ல விரும்பினால் அவ்விரண்டும் (நாவிற்கன்றிச்) செவிக்கு இன்பம் செய்யா ; (ஆதலின் உவமையாகா.)

கு :—சீதையின் சொற்கு உவமையில்லை என்பதை மீண்டும் வற்புறுத்தியவாறு. முதலிரண்டடி ஒட்டணியாய் நின்று, இம்மூவுலகத்தும் சீதையின் சொலன்றி அதனோடொப்ப நல்லது மற்றொன்று இல்லை ; என்பதை நிறுவின. மூவுலகத்தும் நாச்சுவைக் குரியது அமிழ்தம் அல்லது அதனோடொப்ப நல்லது பிறிதொரு பொருள் இல்லையாயினாற்போலச் செவிக்கு இனிமை தரும் சீதையின் சொலன்றி அதனோடொப்ப நல்லது மற்றொன்று இல்லை என உவமேயம் வருவிக்கப்படும். இனிமையில் ஒப்புமையுடையனவேனும் செவிக்கின்பம் செய்யாமையால் தேனும் பாலும் உவமையாகா என விலக்கியவாறு; இது விலக்குவமை. 'ஒன்றோ' இரண்டும் எண்ணிடைச் சொல். நா நின்ற சுவை அமிழ்தன்றி நல்லது மற்றொன்றோ இல்லை என இயையும். (63)

நடை

**4616.** பூவரு மழலை யன்னம்
 புனைமடப் பிடியென் றின்ன
தேவரு மருளத் தக்க
 செலவின வெனினுந் தேறேன்
பாவருங் கிழமைத் தொன்மைப்
 பருணிதர் தொடுத்த பத்தி
நாவருங் கிளவிச் செவ்வி
 நடைவரு நடைய ணல்லோய்.

'பூ வரும் மழலை அன்னம்,
 புனைமடப்பிடி, என்று இன்ன,
தேவரும் மருளத் தக்க
 செலவின எனினும் தேறேன் ;

பாவரும் கிழமைத் தொன்மைப்
பருணிதர் தொடுத்த, பத்தி
நாவரும் கிளவிச் செவ்வி
நடைவரு நடையள் நல்லோய்!'

பொ :—நல்லியல்புடையோய்! தாமரை மலரில் தங்கும் இயல்புடைய இளமையான அன்னப் பறவை, அழகிய இளமையுடைய பெண் யானை என்கின்ற இவைகள், தேவரும் வியக்கத்தக்க நடையை யுடையன என்றாலும் அவற்றின் நடையைச் சீதையின் நடைக்கு ஒப்பாகும் என்று தெளியேன்; செய்யுள் இயல்பாக வருதற்குரிய கவியுரிமையுடைய பழமையான புலவர்கள் இயற்றிய ஒழுங்குள்ள நாவில் நின்று தோன்றுகின்ற சொற்களையுடைய காவியத்தின் அழகிய நடைபோன்ற (ஒப்பற்ற) நடையையுடையவள்.

கு :—சீதையின் நடை உவமையற்றது என்றவாறு. பழம் புலவர் செய்த காப்பிய நடை உவமையற்று விளங்குதல் போலச் சீதையும் ஒப்பற்று விளங்கும் சிறந்த நடையையுடையவள் என்க. பெண்டிர் நடைக்கு உவமையாகக் கூறப்படும் அன்னநடையும் பிடி நடையும் சீதையின் நடைக்கு உவமையாம் என்று துணிந்து கூறமாட்டேன் என்று கூறிச் சீதையின் நடைச் சிறப்பை விளக்கியவாறு. தொன் மைப் பருணிதர் - பழம் புலவர். இயல்பாகவே கவிபாடும் உரிமை யையே 'பாவருங்கிழமை' என்றார். கிளவி என்றது ஆகுபெயராய் அதன் காரியமாகிய காப்பியத்தை யுணர்த்தியது. நாவரும் என்பது கிளவிக்கு அடை. கிளவி - சொல். காப்பிய நடைக்கும் சீதை நடைக்கும் பொதுத் தன்மை உவமையின்மையேயாம். (64)

நிறம்

**4617.** எந்நிற முரைக்கேன் மாவி
னிளநிற முதிரு மற்றைப்
பொன்னிறங் கருகு மென்றான்
மணிநிற முவமை போதா
மின்னிற நாணி யெங்கும்
வெளிப்படா வொளிக்கும் வேண்டின்
தன்னிறந் தானே யொக்கு
மலர்நிறஞ் சமழ்க்கு மன்றே.

'எந்நிறம் உரைக்கேன் ?-மாவின்
இள நிறம் முதிரும் ; மற்றைப்
பொன் நிறம் கருகும் ; என்ருல்,
மணிநிறம் உவமை போதா ;
மின் நிறம் நாணி எங்கும்
வெளிப்படா ஒளிக்கும் ; வேண்டின்,
தன் நிறம் தானே ஒக்கும் ;
மலர் நிறம் சமழ்க்கும் அன்றே !'

பொ :—(சீதையின் நிறத்திற்கு உவமை கூறவேண்டுமாயின்) மாவின் இளந்தளிர் நிறம் முதிர்ந்து மாறும் இயல்பினது; பொன்னின் நிறம் அவள் நிறத்திற்கு முன் கருகித் தோன்றும் ; மாணிக்க மணியின் நிறம் அவள் நிறத்திற்குப் பொருந்திய உவமையாந் தன்மையுடையதன்று, மின்னலின் நிறம் அவள் நிறத்திற்கு நாணி எவ்விடத்தும் வெளிப்பட்டு நில்லாது ஒளித்துக் கொள்ளும் இயல் பினது; தாமரை மலரின் நிறம் அவள் நிறத்திற்கு முன் நிற்கமாட் டாது நாணும் தன்மையது; என்ருல், எந்த நிறத்தை உவமையாகச் சொல்வேன் ? அவள் நிறத்திற்கு உவமை சொல்லத்தான் வேண்டும் எனின், அவள் நிறம் தனக்குத் தானே ஒப்பாம்.(பிறிதுவமம் பெருது).

கு :—சீதையின் நிறம் உவமையற்றது என்றவாறு. தன்னிறந் தானே யொக்கும் என்றது பொது நீங்குவமை. சமழ்க்கும் என்ருல் எந்நிறம் உரைக்கேன் வேண்டின் தன்னிறந்தானே யொக்கும் என இயையும். பெண்டிர் மேனிக்கு உவமையாகத்தக்க மாந்தளிரும் பொன்னும் மணியும் மின்னும் மலரும் சீதையின் நிறத்திற்கு ஒப்பாகா மைக்குக் காரணங்கூறி விலக்கினமையால் இது விலக்குவமையும் ஆம். இயல்பாக ஒளிக்கும் மின்னலைச் சீதையின் நிறத்திற்கு நாணி யொளித்ததாகக் கூறியது தற்குறிப்பேற்றம். மலர் என்றது தாமரை மலரை. சமழ்க்கும் - நாணும். 'எந்நிறம் உரைக்கேன்' என்றது எந்நிறத்தையும் சீதையின் நிறத்திற்கு உவமை கூறமாட்டாத ஏக்கத்தை யுணர்த்துதல் காணலாம். (65)

### உவமையற்றவளே சீதை

**4618.** மங்கைய ரவளை யொப்பார்
மற்றுள ரல்ல ரென்னும்
சங்கையி லுள்ளந் தானே
சான்றெனக் கொண்டு சான்ருேய்

அங்கவ ணிலைமை யெல்லா
மளந்தறிந் தருகு சார்ந்து
திங்கள்வாண் முகத்தி னுட்குச்
செப்பெனப் பின்னுஞ் செப்பும்.

"மங்கையர் அவளை ஒப்பார்
மற்றுளர் அல்லர்" என்னும்
சங்கையில் உள்ளந் தானே
சான்று எனக் கொண்டு—சான்றோய்!-
அங்கு அவள் நிலைமை எல்லாம்
அளந்து அறிந்து, அருகு சார்ந்து,
திங்கள் வாள் முகத்தினுட்குச்
செப்பு எனப் பின்னும் செப்பும்.

பொ:—நற்பண்புகள் நிறைந்தவனே! 'அச்சீதையைப் போன்றவராகிய பெண்டிர் வேறு எவரும் உளரல்லர் என்கின்ற ஐயம் இல்லாத உன் மனத்தையே சான்றாகக் கொண்டு, அங்குள்ள அவள் நிலைமை எல்லாவற்றையும் நன்கு ஆராய்ந்து அறிந்து பின் அருகில் சார்ந்து சந்திரன் போன்ற ஒளியுள்ள முகத்தையுடையாளாகிய சீதைக்குச் சொல்லுக' என்று மேலும் சொல்கின்றான்.

கு:—இதுகாறும் அடி முதலிய உறுப்புக்கள் ஒவ்வொன்றும் உவமையிலாதன என்று கூறி முடித்தவன் இச்செய்யுளால் சீதை உவமையற்றவள் என்பதை விளக்குகின்றான். சீதையின் ஒவ்வோருறுப்பும் நிகரற்ற பேரழகுடையன என்பதைப் புலப்படுத்த அடி முதல் முடிவரையுள்ள உறுப்புக்களை இராமன் அனுமனுக்குக் கூறினனேயன்றி அனுமன் அவ்வுறுப்புக்களைப் பார்த்தல் வேண்டும் என்னும் கருத்தாலன்று என்பதை யுளங்கொளல் வேண்டும். பெண்டிரில் யாரும் ஒவ்வாத பேரழகுடையவளைக் கண்டால் அவளே சீதை என்று உணர்க என்பது முதல் மூன்றடிகளின் கருத்து. ஒப்பில்லாத பேரழகுடையவளைக் கண்டவுடன் அவள் தன்மைகள் எல்லாம் யான் கூறிய இயல்போடு ஒத்தனவாக உள்ளனவா என்று அளந்து அறிந்து ஒத்திருக்குமாயின் பின்பு அவள் அருகில் சென்று இதைச் சொல்க என்று கூறவேண்டிய அடையாள மொழிகளைச் சொல்லத் தொடங்குகின்றான். அனுமன் சீதையைக் கண்டபோது "எள்ளரு முருவினல் லிலக்கணங்களும் வள்ளறன்னுரையொடு மாறுகொண்டில" (சுந்தர - காட்சி - 66) என அளந்து அறிந்தமை கூறப்படுதல் காணலாம். "ஆவதே யையமி லரவிளிங்கிய தேவனே

யவனிவள் கமலச் செல்வியே '' (காட்சி-67) என சங்கையில் உள்ளந் தானே சான்றெனக் கொண்டு அனுமன் துணிகின்றமையும் காணலாம். (66)

## சீதைக்குக் கூறவேண்டிய அடையாளச் செய்திகள்

**4619.** முன்னை நாண் முனியொடு
★ முதியநீர் மிதிலைவாய்ச்
சென்னிநீண் மாலையான்
வேள்விகா ணியசெல
அன்னமா டுந்துறைக்
கருகுநின் ருளையக்
கன்னிமா டத்திடைக்
கண்டதுங் கழறுவாய்.

'முன்னை நாள் முனியொடும் முதிய நீர் மிதிலைவாய்ச்
சென்னிநீள் மாலையான் வேள்விகாணிய செல
அன்னம் ஆடுந் துறைக்கு அருகு நின்ருளை அக்
கன்னி மாடத்திடைக் கண்டதும் கழறுவாய்.

பொ :—முன்னை நாளில் கோசிக முனிவனேடும் பழமையான நீர்வளமுள்ள மிதிலை நகரத்தில், தலையில் அணிந்த நீண்ட மாலையை யுடைய சனகனது வேள்வியைக் காணுதற்காக யான் செல்லும் போது அந்தக் கன்னிமாடத்தில் அன்னங்கள் பேடையோடு ஆடு கின்ற துறைக்கு அருகில் நின்றவளாகிய சீதையைக் கண்ட செய்தி யையும் அவளுக்குச் சொல்லுவாயாக.

கு :—இராமன் மிதிலைக்கு விசுவாமித்திர முனிவரோடு சென்றது வேள்வி காணவே என்பதை 'மிதிலையர் கோமான் புரியும் வேள் வியும் காண்டு நாம் எழுகெனப் போனர்' (வேள்விப் - 59) என்ப தாலும் 'வேள்வி காணிய வந்தார் வில்லுங்காண்பார்' (மிதிலைக் காட்சி - 157) என்பதாலும் அறியலாம். மிதிலை இடையருத நீர்வள முடையது என்பான் 'முதியநீர் மிதிலை' என்ருன். கன்னிமாடத்தின் உம்பரில் அன்னங்கள் தத்தம் பேடையோடு ஆடிக் களிக்கின்ற செயற்கையான நீர்த்துறை யிருந்தது. மிதிலையின் பல்வகைக் காட்சி களையும் கண்டு வருகின்ற இராம இலக்குவரும் முனிவரும் சீதை தங்கியுள்ள கன்னிமாடத்தின் மேல் உள்ள நீர்த்துறையில் அன் னங்கள் களித்து விளையாடும் காட்சியைக் கண்டு வியந்து நின்ருர் களாக, அப்பொழுது அச் சீதையும் அவ்வன்னங்களின் விளையாட்

டைக் காண உள்ளிருந்து வெளிப்போந்து முற்றத்தில் நிற்க, இராமனும் நோக்கினன் சீதையும் இராமனை நோக்கினள் என்பது பாலகாண்ட நிகழ்ச்சி. அதுவே முதற்காட்சி யாகலின் அதனைத் தெரிவிக்குமாறு இராமன் அனுமனுக்குக் கூறுகின்றான். "கன்னிம் மாடத் தும்பரின் மாடே களிபேடோடு அன்னம் ஆடும் முன் துறை கண்டு அங்கு அயல் நின்றார்" (மிதிலைக் - 23) என்பதால் மூவரும் கன்னிமாடத்தருகில் நின்றமையும், 'பூவினை துங்கில் பொலிகின்றாள்' (மிதிலைக் - 30) என்றமையால் சீதை உள்ளிருந்து வெளிப்போந்த மையும், மின் சேவிக்க மின்னரசென்னும்படி நின்றாள், "கல்லும் புல்லுங் கண்டுருகப் பெண்கனி நின்றாள்" (32) என்றதால் அவள் நின்றமையும், "எண்ணரு நலத்தினள் இனையள் நின்றுழி...... அண்ணலும் நோக்கினன் அவளும் நோக்கினாள்" என்றதால் இராமனும் சீதையும் நோக்கினமையும் முன் கூறியுள்ளமை காணலாம். (67)

**4620.** வரைசெய்தாள் வில்லிறுத்
தவனமா முனியொடும்
விரசினா னல்லனேல்
விடுவல்யா னுயிரெனக்
கரைசெயா வேலையிற்
பெரியகற் பினடெரிந்
துரைசெய்தா ளஃதெலா
முணரநீ யுரைசெய்வாய்.

' "வரை செய்தாள் வில் இறுத்தவன் அ மாமுனியொடும்
விரசினான் அல்லனேல் விடுவல்யான் உயிர்" எனக்
கரைசெயா வேலையிற் பெரிய கற்பினள் தெரிந்து
உரை செய்தாள்; அஃது எலாம் உணர, நீ உரை செய்வாய்.'

பொ:—'மலைபோன்ற சிவதனுசின் தண்டினை வளைத்து ஒடித்தவன் அந்தச் சிறந்த முனிவரோடு சேர்ந்து சென்றவனாகவே இருத்தல் வேண்டும்; அவன் அல்லனாயின் யான் உயிர் விடுவேன்' என்று, கரையில்லாத கடலினும் பெரிய கற்புடையவளாய் (முன்னரே) தெரிந்து சொன்னாள்; அஃது எல்லாவற்றையும் அவள் உணருமாறு சொல்லுவாய்.

கு:—இராமன், வில் வளைத்தற்கு முன்னமே கன்னிமாடத் தருகில் அன்னமாடுந்துறை கண்டு நின்றபோது சீதை கண்டு

காதல் கொண்டு அவனையே கணவனாக நினைந்து கற்புக் கடம் பூண்டாளாகலின் வில்லை வளைத்தவன் அவனாக இல்லையானால் தன் கற்புக்கு இழுக்கு நேரும்; 'அது நேரா வண்ணம் உயிர் விடுவேன்' என்று அவள் நினைந்ததும் சொல்லியதும் அவள் பெருங் கற்பின் திறத்தை யுணர்த்தும் என்பான், 'கரைசெயா வேலையிற் பெரிய கற்பினள்' என்றான். வில்லை வளைத்த நிகழ்ச்சியைப் பணிப் பெண்டிர் வந்து சொன்னபோது, "சொல்லிய குறியினத் தோன் றலே யவன் அல்லனேல் இறப்பனென் றகத்து ளுன்னினாள்" (கார் முகப் - 63) என்பதால் சீதை அவ்வாறு நினைந்தமை முன் கூறப்பட் டிருத்தல் காணலாம். திருமணம் நிகழ்ந்த பின் இராமனோடு உரை யாடுகையில் சீதை தான் எண்ணியதைக் கூறியிருக்கலாம் ஆகலின் பெருங் கற்பிற்கு அடையாளமாகிய இக் கருத்தை இராமன் சீதைக்குக் கூறுமாறு அனுமானிடம் சொல்லலானான். விரசுதல் - சேர்தல்; வருதல். (68)

**4621.** சூழிமால் யானையின்
றுணைமருப் பிணையெனக்
கேழிலா வனமுலைக்
கிரிசுமந் திடைவதோர்
வாழிவான் மின்னிளங்
கொடியின்வந் தாளையன்
றாழியா னரசவைக்
கண்டதும் மறைகுவாய்.

'சூழிமால் யானையின் துணை மருப்பு இணை எனக்
கேழ் இலா வனமுலைக்கிரி சுமந்து இடைவது ஓர்
வாழி வான் மின் இளங் கொடியின் வந்தாளை, அன்று,
ஆழியான் அரசவைக் கண்டதும் அறைகுவாய்.

பொ :—முகபடாம் அணிந்த பெரிய யானையின் ஒன்றோடொன்று ஒத்துள்ள இரண்டு கொம்புகள் என்னுமாறு ஒப்பிலாத அழகிய முலைகளாகிய மலைகளைச் சுமந்துகொண்டு ஒதுங்குகின்ற விண்ணில் உள்ள ஒரு இளமின்னற்கொடிபோல வந்த சீதையை அன்றைக்குச் சனகனுடைய அரச சபையில் கண்டதையும் அவட்குச் சொல் வாயாக.

சூழி - முகபடாம். கேழ் - ஒப்பு. முலைக்கிரி - உருவகம். கிரிசுமந் திடைவதோர் மின்னிளங் கொடியின் என்றது இல் பொருளுவமை.

வாழி - அசை. வான் மின் என்றது மின்னல் இயங்கும் இடத்தை யுணர்த்தியவாறு; மின்னுக்கு அடை. ஆழியான் என்றது ஆணைச் சக்கரத்தையுடைய சனகனை. அரசவையில் சீதை நுழையும்போது தன் ஐயம் நீங்க இராமனைப் பார்த்தது போலவே இராமனும் தன் ஐயம் நீங்கச் சீதையைப் பார்த்தானாகலின் 'அரசவைக் கண்டதும்' என்றான். (69)

4622. முன்புநா னறிகிலா
முனிநெடுங் கானிலே
என்பினே போதுவா
னினைதியோ வேழைநீ
யின்பமா யாருயிர்க்
கினியையா யினையினித்
துன்பமாய் முடிதியோ
வென்றதுஞ் சொல்லுவாய்.

' "முன்புநான் அறிகிலா முனிநெடுங் கானிலே,
என்பினே போதுவான் நினைதியோ, ஏழை நீ?
இன்பம் ஆய், ஆருயிர்க்கு இனியை ஆயினை, இனித்
துன்பம் ஆய் முடிதியோ?" என்றதும், சொல்லுவாய்.'

பொ:—"மடமைக் குணமுடையவளே! இதுவரையில் நான் சென்று அறியாத வெறுக்கத்தக்க காட்டிலே என் பின்னே நீ வருதற்கு எண்ணுகின்றாயோ? (இதுகாறும்) மகிழ்ச்சிக்குக் காரண மாய் என் அரிய உயிர்க்கு இனியையாக இருந்தாய்; இனிமேல் எனக்குத் துன்பஞ் செய்பவளாக முடிகின்றாயோ?" என்று யான் சீதையை நோக்கிக் கடிந்து சொன்னதையும் அவட்குச் சொல்லு வாய்.

கு:—முனிதல் - வெறுத்தல். இன்பத்திற்குக் காரணமாக இருந்த சீதை தன்னோடு காட்டுக்கு வருவதால் துன்புறற்குக் காரண மாவாள் என்பதை முன்னமே இராமன் அறிந்து தன்னோடு காடு புகாமல் சீதையைத் தடுத்து, "வெண்ணகையாய் விளைவுன்னுவாய் அல்லை போத வமைந்தனை யாதலின் எல்லையற்ற இடர்தருவாய்" (அயோத்தி - நகர்நீங்கு - 231) எனக் கடிந்து கூறியதை நினைந்து கூறியவாறு. (70)

**4623.** ஆனபே ரரசிழந்
தடவிசேர் வாயுனக்
கியானலா தனவெலா
மினியவோ வினியெனு
மீனுலா நெடுமலர்க்
கண்கணீர் விழவிழுந்
தூனிலா வுயிரின்வெந்
தயர்வது முரைசெய்வாய்.

' " ஆன பேர் அரசு இழந்து அடவி சேர்வாய்; உனக்கு யான் அலாதன எலாம் இனியவோ? இனி " எனு மீன் உலாம் நெடுமலர்க் கண்கள் நீர் விழ, விழுந்து, ஊன் இலா உயிரின் வெந்து, அயர்வதும் உரை செய்வாய்.'

பொ :—(உனக்கு) உரியதான பேரரசை இழந்து காட்டிற்குச் செல்வோய்! உனக்கு யான் அல்லாத மற்றைப் பொருள்கள் எல்லாம் இன்பந்தருவனவோ? (என்னால் மட்டுமே யுனக்குத் துன்பமோ?) என்று அவள் ஆற்ருது கூறி மீன் போன்று பிறழ்கின்ற நீண்ட மலர் போன்ற கண்களில் நீர் பெருகக் கீழே விழுந்து உடம்பில் நிற்க வியலாது தத்தளிக்கும் உயிர் போல வாடிச் சோர்ந்ததையும் அவட்குச் சொல்லுவாயாக.

கு :—'பேரரசை யிழந்து பெருங்கான் அடைதலாகிய பெருந்துன்பத்தை ஏற்றுக்கொள்ளும் உனக்கு என்னால் ஏற்படும் சிறு துன்பம் ஒன்றுதான் பெரிதாகத் தோன்றுகின்றதோ?' என்பது சீதையின் கருத்து. இராமனேடு உடன் செல்ல இயலாதோ என எண்ணித் துடிக்கின்ற சீதையின் துன்பத்திற்கு உடம்பில் நிலைபெற இயலாது தத்தளிக்கும் உயிரின் துன்பம் உவமையாயது. இதனால் இராமனும் சீதையும் உடலும் உயிரும் போல் இருந்தனர் என்பதும் புலனும். 'உனக்கு யானலாதனவெலா மினியவோ' என்று சீதை வினவியதாகக் கூறியது, 'உற்று நின்ற துயரமிதொன்றுமே எற்றுறந்தபின் இன்பங்கொலாம்" (நகர்நீங்கு - 232) என்ற சீதையின் சொல்லை வாங்கிக் கூறியது. அன்று சீதை இங்ஙனம் வெந்தயர்ந்த செயல் இராமனுக்கு இன்றும் அகக்கண்ணில் காட்சியளிப்பதால் அயர்ந்ததும் என இறந்த காலத்தாற் கூருமல் அயர்வதும் என நிகழ்காலத்தால் கூறினன். (71)

4624. மல்லன்மா நகர்துறந்
தேகுநாண் மதிதொடுங்
கல்லின்மா மதின்மணிக்
கடைகடந் திடுதன்முன்
எல்லைதீர் வரியவெங்
கானம்யா தோவெனச்
சொல்லினு ளஃதெலா
முணரநீ சொல்லுவாய்.

'மல்லல் மாநகர் துறந்து ஏகும் நாள், மதி தொடும் கல்லின் மாமதில் மணிக்கடை கடந்திடுதன்முன், "எல்லை தீர்வு அரிய வெங்கானம் யாதோ" எனச் சொல்லினுள்; அஃது எலாம் உணர, நீ சொல்லுவாய்.'

பொ :—வளம் நிறைந்த அயோத்தி நகரை விட்டு நீங்கிக் காட்டிற்குச் செல்லும்போது சந்திரனைத் தொடுகின்ற கல்லால் இயன்ற மதிலின் அழகிய வாயிலைக் கடப்பதற்கு முன்னமே, 'கடத்தற்கரியதாய் எல்லையில்லாத கொடுமையுடைய கானம் எவ்விடத்துள்ளது ?' என்று சொன்னுள்; அஃது எல்லாவற்றையும் அவள் உணருமாறு நீ சொல்லுவாயாக.

கு :—மல்லல் - வளன். மாநகர் என்றது அயோத்தியை அயோத்தி நகரின் மதில் வாயிலைக் கடப்பதற்கு முன்னமே 'கானம் யாதோ' என்றது சீதையின் மென்மைத் தன்மையையும் பேதைமையையும் உணர்த்தும். காவிரிப்பூம்பட்டினம் நீங்கி மதுரைக்குச் செல்லப் புறப்பட்ட கண்ணகியும் இவ்வாறே காவதம் கடந்தவுடன், 'இறுங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்து, முதிராக் கிளவியின் முள்ளெயிறிலங்க' 'மதுரை மூதூர் யாது?' எனக் கோவலனை வினவிய தன்மையை (சிலப் - 10. 38-41) இளங்கோவடிகள் அழகுற எளிக்கியிருத்தல் காணலாம். மதிலின் உயர்ச்சி புலப்படுத்த மதிதொடும் மதில் என்ருர். மதிலின் உறுதியையும் பெருமையையும் புலப்படுத்த 'கல்லின் மாமதில்' என்ருர். கடைகடந் திடுவதன்முன் என்பது விகாரப்பட்டு 'கடந்திடுதன் முன்' எனவாயிற்று. மணிக்கடை - அழகிய வாயில்: மணிகள் பதித்துள்ள வாயில் எனலும் ஆம். கானம் யாதோ என்றது கானம் எவ்விடத்ததோ என்னும் கருத்தினது. எல்லை அரிய வெங்கானம்; தீர்வு அரிய கானம் என இயையும். (72)

## இராமன் மோதிரம் அளிக்கப்பெற்று அனுமன் போதல்

**4625.** இனையவா றுரைசெயா
வினிதினே குதியெனு
வனையுமா மணிநன்மோ
திரமளித் தறிஞநின்
வினையெலா முடிகெனு
விடைகொடுத் துதவலும்
புனையும்வார் கழலினு
னருளொடும் போயினுன்.

'இனையவாறு உரைசெயா, 'இனிதின் ஏகுதி' எனு, வனையும் மாமணி நல் மோதிரம் அளித்து, 'அறிஞ! நின் வினை எலாம் முடிக!' எனு விடைகொடுத்துதவலும், புனையும் வார்கழலினுன் அருளொடும், போயினுன்.'

பொ :—இராமன் அனுமனுக்கு இவ்வாறு அடையாளச் செய்திகளைச் சொல்லிவிட்டுச் சிறந்த மணிகள் பதித்து அழகு செய்யப்பெற்ற நல்ல மோதிரத்தையும் அடையாளப் பொருளாகக் கொடுத்து, 'அறிவிற் சிறந்தோனே! நின் செயல் முழுதும் வெற்றியுடன் முடிவதாக' என வாழ்த்தி 'இடையூறின்றி இனிதாகச் செல்வாயாக' என விடை கொடுத்தருளுதலும், கட்டப்பட்ட நீண்ட வீரக்கழலினையுடைய இராமனுடைய அருளாகிய துணையோடும் அனுமன் புறப்பட்டான்.

கு :—உரை செயா மோதிரம் அளித்து, வினையெலா முடிகெனு, ஏகுதியெனு விடை கொடுத்துதவலும் என இயையும். மாமணி வனையும் நன் மோதிரம் என்க. சீதைக்கு உயிர் கொடுக்கும் நன்மையுடைமை பற்றி 'நன் மோதிரம்' எனச் சிறப்பிக்கப் பெற்றது. 'ஆழி காட்டி யென்னுருயிர் காட்டினுய்' (சுந்தர - 1076) எனச் சீதை கூறுதல் காணலாம். 'நின் வினையெலாம் முடிக' என்றது 'நீ மேற்கொண்டுள்ள சீதையை நாடும் செயல் வெற்றியுடன் முடிவதாக' என்று வாழ்த்தியவாறு. அச் செயலுக்குத் துணையான செயல்களுமடங்க எல்லாம் என்ருன். வழியனுப்புங்கால் இங்ஙனம் வாழ்த்தியனுப்புதல் மரபு என்பதை: "வலனுக வினையென்று வணங்கி நாம் விடுத்தக்கால்" (கலி - 35) என்று தலைவி கூறுவதால் அறியலாம். இராமன் அவ்வாறு கூறும்போது அதுவே அனுமனுக்கு வரமாகவும் வாழ்த்தாகவும் அமைந்து பயனளிக்கும் பான்மையது. 'இனிதினேகுதி' என்றது வழியில் நேரும் இடையூறுகள் நீங்கி இனிதாகச் செல்லுக என வாழ்த்தி வழியனுப்பியவாறு. கொடுத்துதவலும் என்பது ஒரு சொல் நீர்மைத்து. கழலினுன் என்றது இராமனை.

இராமனருளாகிய துணையொடும் போயினுன் என்பார், 'அருளொடும் போயினுன்' என்ருர். இலங்கை செல்லும் வழியில் அனுமனுக்கு நேர்ந்த இடையூறுகள் யாவும் இராம நாமத்தில் நீங்கியதாக அவ்வனுமனே கூறுவதை : வேறுவகை யாண்டைய இராமனென வெல்லாம் மாறுமதின் மாறுபிறிதில்லென வலித்தான்" (சுந்தர-89) என்பதால் அறியலாம். இராமன் அருள் அனுமனுடன் சென்றது என்பது இதனுல் புலனுதல் காணலாம். (73)

**4626.** அங்கதக் குரிசிலோ
டடுசினத் துழவராம்
வெங்கதத் தலைவரும்
விரிகடற் படையொடும்
பொங்குவிற் றலைவரைத்
தொழுதுமுன் போயினர்
செங்கதிர்ச் செல்வனைப்
பணிவுறுஞ் சென்னியார்.

அங்கதக் குரிசிலோடு, அடுசினத்து உழவராம்
வெங்கதத் தலைவரும் விரிகடற் படையொடும்,
பொங்குவில் தலைவரைத் தொழுது, முன்போயினர்-
செங்கதிர்ச் செல்வனைப் பணிவுறும் சென்னியார்.

பொ :—அங்கதனுகிய தலைவனேடு பகைவரைக் கொல்லும் கோபத்தையுடைய வீரராகிய மிக்க வலிமையுள்ள சாம்பவன் முதலிய படைத் தலைவரும் விரிந்த கடல்போன்ற (இரண்டு வெள்ளம்) சேனையோடும் சிவந்த கிரணங்களையுடைய சூரியன் புதல்வனுகிய சுக்கிரீவனைப் பணியும் தலையையுடையராய்ச், சிறந்த வில் வீரராகிய இராம இலக்குவரைத் தொழுதுகொண்டு (தென் திசை நோக்கி முன்னதாகச்) சென்ருர்கள்.

கு :—குரிசில் - தலைவன். அனுமனை இராமன் தனியே யழைத்துச் சொல்லியதால் அங்கதன் முதலியோர் அனுமனுக்கு முன் போயினர் என்பார், 'முன் போயினர்' என்ருர். வீரரைச் சினத் துழவர் என்றது, 'அஞ்சுவருதானை அமரென்னும் நீள்வயலுள், வெஞ்சினம் வித்திப் புகழ் விளைக்கும்' (பு. வெ - வாகை - 5) தன்மை கருதியாம். கதம் என்றது இங்கு வலிமையை யுணர்த்தியது. குரிசிலோடு தலைவரும் பணிவுறுஞ் சென்னியராய் விற்றலைவரைத் தொழுது முன் போயினர் என இயையும். (74)

நாட விட்ட படலம் முற்றும்.

# பிலம் புக்கு நீங்கு படலம்

தென் திசை நோக்கிச் சென்ற அனுமன் முதலிய வானரர்கள் ருட்ச பிலம் என்னும் பிலத்துள் புகுந்து பின் அனுமன் உதவியால் அதை விட்டு நீங்கிய செய்தியைத் தெரிவிக்கும் பகுதியாதலின் இது, பிலம் புக்கு நீங்கு படலம் எனப் பெயர் பெறுகின்றது. இப்படலம், சில சுவடிகளில் பிலம் புகு படலம் எனவும் வேறு சில சுவடிகளில் பிலம் நீங்கு படலம் எனவும் பெயர் பெற்றுளது.

## படலப் பொருட் சுருக்கம்

சுக்கிரீவன் கட்டளைப்படி தென்திசையில் சீதையைத் தேடப் புறப்பட்ட அங்கதனைத் தலைமையாகக் கொண்ட வானர வீரர்கள் முதலில் விந்திய மலையை அடைகின்றனர்கள். அம்மலையின் தாழ்வரைகளிலும் பக்க மலைகளிலும் குகைகளிலும் சிகரங்களிலும் எல்லாம் ஒரு பகலில் விரைந்து தேடுகின்றனர்கள். அங்கு அயன் படைத்த உயிர் வகைகளை யெல்லாம் காண்கின்றனர்கள்; ஆனால் சீதையை மட்டும் காண்கிலராய் மீள்கின்றனர்கள். பின் தரையில் நாற்பத்தொன்பது யோசனை தொலைவு நடக்கின்றனர்கள். நருமதை யாற்றை அடைந்து தேடுகின்றனர்கள், பின் அந்நதியைக் கடந்து பொன்னொளி வீசும் ஏமகூடம் என்னும் மலையை அடைகின்றனர்கள். சீதையைக் கவர்ந்த இராவணன் இருக்கும் இடம் இம்மலையாகத்தான் இருக்கவேண்டும் என்று எண்ணி, நூறுகாவதப் பரப்புடைய அந்த ஏமகூட மலை முழுவதையும் ஒரு பகலில் தேடிப் பார்க்கின்றனர்கள். அங்கும் சீதை காணப் பெறாமையால் மீண்டு இரண்டு வெள்ளம் வானரர்களில் மிகு சிறப்புடைய போர்வீரர்கள் மட்டும் ஒன்றுகூடிப் பிறரையெல்லாம் பிரிந்து வேறு பல இடங்களில் தேடுமாறு அனுப்பிவிட்டுப் புறப்படுகின்றனர்கள். நீர் எனும் பெயரும் இல்லாத வெம்மை மிக்க ஒரு பாலைவனத்தை அடைகின்றனர்கள். அப்பாலைவனத்தின் வெம்மையைப் பொறாது கொப்புளித்த காலினராய், வறட்சியால் நீட்டிய நாவினராய்ச் சோர்வுற்று ஒதுங்க நிழலும் காணாது துடிதுடித்துக் கொண்டு செல்லும்போது ஒரு பிலம் காணப்படுகின்றது. நிழலாக உள்ள இப்பிலத்தில் நுழைந்து வெம்மை தணியலாம் எனத் துணிந்து உள் நுழைகின்றனர்கள், இறுகாக உறைந்த நெய்போன்று திணிந்த இருள் நிறைந்த பிலவழியில் வழிகாண மாட்டாராய் இருளின் செறிவால் மூச்சுவிடவும் முடியாமல் திகைக்கின்றனர்கள். 'இந்த இருள் பிலத்தினின்றும் எங்களைக் காப்பாற்ற வேண்டும்' என அனுமனை வேண்டிக்கொள்ள, அனுமன் பன்னிரண்டு யோசனை

யளவு பரவிய பெரு வடிவு கொண்டு காதில் அணிந்த குண்டலங்கள் ஒளிவீசி வழி காட்ட அவ்வானரர்களை அழைத்துக் கொண்டு விரைந்து உள் நுழைகின்ருன்.

அங்கு ஓர் அழகிய நகரம் காணப்படுகின்றது. இருள் செறிந்த பிலத்தில் இருக்கும் அந்நகரம் மாளிகைகளில் பதித்த மணி களாலும் பொன்ஞெளியாலும் ஒளிவீசிக் கொண்டிருக்கின்றது. இந்திரன் பொன்னகரமும் ஈடாகமாட்டாத அந்நகரத்தில் உயிர் வகைகள் ஏதும் காணப்படவில்லை. எழில் நிறைந்த பொழி லிருந்தும் அங்குக் குயில்கள் பயிலவில்லை. பூவையும் கிளியும் பொருந்தி விளையாடவில்லை. வாவிகள் இருந்தும் தூவிமட அன்னங்கள் அங்குத் தாவி நீந்திச் செல்லவில்லை. தேவர்கள் வடிவிலும் மனிதர் வடிவிலும் ஓவியங்கள் மட்டும் காட்சியளிக்கின்றன. இத்தகைய அதிசயமான நகரத்தைக் கண்டு வானரர்கள் 'இது அரக்கர் மாயையால் விளைத்த தோற்றமோ? என மயங்குகின்றனர். அப்பொழுது அனுமன் அவ்வானரர்களை நோக்கி, 'இப்பிலம் கடத் தற்கு அரிது என்ருல் கடலைத் தோண்டிய சகரர்போல இதன் மேல் தட்டை இடித்துக் கொண்டு மேல் செல்வோம்; இல்லையேல் வஞ்சனை செய்த அரக்கரைக் கொன்று விட்டு மேற்செல்வோம்; அஞ்சாதீர்கள்' என்று துணிவு கூற மேலும் உட்செல்கின்ருர்கள். அந்நகரின் நடுவில் தவம் எலாம் திரண்டு ஓர் வடிவு கொண்டாற்போன்ற ஒளி மிக்க உருவத்தையுடைய ஒரு தவ மகளைக் காண்கின்ருர்கள். வான ரர்கள் அவளைச் சீதையோ என ஐயுற்று அனுமனை ஊன்றிப் பார்க்கச் சொல்கின்ருர்கள். அனுமன் 'இவள் சீதையல்லள்' சீதையின் இலக்கணங்கள் இவள்பால் சிறிதும் இல்லை எனத் தெளிவுபடுத்துகின்ருன். அந்நிலையில் தவமகளும் தவம் கலையப் பெற்று இவர்கள் வருகையை யுணர்கின்ருள். இந்நகரத்திற்கு உரிய ரல்லாத நீங்கள் இங்கு ஏன் வந்தீர்கள்? நீவிர் யார்? என்று சினந்து வினவுகின்ருள். தாம் இராம தூதர் என்பதையும் இராமன் மனைவியாகிய சீதையைத் தேடி உலகெலாம் சுற்றி வருவதையும் வானரர் கூறுகின்ருர்கள். அதைக் கேட்டவுடன் தவமகள் எழுந்து நின்று கண்ணீர் வார மகிழ்ந்து ஆடுகின்றவள், இப்பொழுது இராமன் எங்குளான்? என வினவுகின்ருள்.

இராமனைப் பற்றிய செய்திகளை முதலிலிருந்து கடைசி வரையில் எல்லாவற்றையும் அனுமன் விரித்துச் சொல்லுகின்ருன். அதைக் கேட்ட தவ மகளாகிய சுயம்பிரபை மகிழ்ந்து இராமன் தூதராகிய அவ்வானரர்களின் கால்களில் நீராட்டி இனிய உணவை அன்போடு ஊட்டி இனிய சொற்களைச் சொல்லி உபசரிக்கின்ருள். அனுமனும் அத் தவமகள் பாதங்களை வணங்கி, 'நும் பெயர் என்ன? இந் நகர்க்குத் தலைவர் யார்? என்று வினவுகின்ருன். சுயம்பிரபை கூறு

கின்றாள் : "மயன் என்னும் அசுரர் தச்சன் சிற்ப நூல் நுட்பங்களை யெல்லாம் எளிதில் தெளிந்து பயனடைய வேண்டிப் பிரமனை நோக்கிப் பல ஆண்டுகள் தவங் கிடந்தானாக அவன் தவத்திற்கு மகிழ்ந்து பிரமன் எதிர்ப்பட்டு அச் சிற்பநூல் நுட்பங்களை எளிதில் புலனாகுமாறு வரங்கொடுத்துச் சென்றான். பிரமன் கொடுத்த அவ் வரத்தைக் கொண்டு மயனால் செய்யப் பட்ட நகரம் இது. மயன் என் உயிர்த் தோழியாகிய ஏமை என்னும் அரம்பையின் இன்பத்தை விரும்பி என்னை வேண்டினானாக; யான் அவன் விரும்பிய வண்ணம் அந்த ஏமையை இந்நகரத்தில் அம்மயனோடு இருக்கச் செய்து ஏமையைப் பிரியாத அன்பினால் யானும் இங்குத் தங்கியிருந்தேன். ஏமையும் மயனும் அளவில் காலம் இங்கு இன்புற்றிருந்தார்கள். பல நாள் கழிந்தபின் இந்திரன் ஏமையைக் காணாது தேடி வருகின்றவன் இந்நகரத்தில் அவள் மயனோடு இருக்கக் கண்டு மயனை வெகுண்டு தன் வச்சிரப்படையால் கொன்றுவிட்டு ஏமையைப் பார்த்து 'நீ செய்தது பிழையாகும்' என்று வெகுண்டானாக, ஏமை அஞ்சினவளாய், என்னைச் சுட்டிக் காட்டி, 'இது இவளால் விளைந்தது' என்றாளாக இந்திரன் என் செயலை நினைந்து அதற்குத் தண்டனையாக 'இந்நகரத்தைக் காத்துக் கொண்டு இங்குத் தனியே இருக்கக் கடவாய்' என்றானாக, யான் வருந்தி 'இப்பிலத்தினின்று விடுதலை பெறும் நாள் என்றைக்கு? என்று வினவ, 'இங்கு இராமன் அருளால் வானரர்கள் வருங்காலத்தில் இங்கு நின்று விடுதலை பெறுவாய்' என்று இந்திரன் கூறிச் சென்றான். இங்கு உண்ண உள; பூச உள; சூட உள; ஒன்றானும் குறைவில்லை; ஆயினும் அவற்றையெல்லாம் விட்டு என் விடுதலைக்காக உங்களை நோக்கிப் பல ஆண்டுகளாகத் தவங்கிடந்தேன். நூறு யோசனைப் பரப்பு அமைந்த பிலம் இது. இதினின்றும் ஏறி மேற்செல்லும் வழி காணாது வருந்துகின்றேன். நீங்கள் உதவினால் யான் உய்யும் வழியுண்டு அதற்குரிய உபாயத்தைச் சிறிது சிந்தியுங்கள்" என்று வேண்டுகின்றாள்.

அனுமன் அச் சுயம்பிரபையின் அடிவணங்கி 'நீர் பொன்னுலகம் சேருமாறு செய்கின்றேன்' என்கின்றான். மற்றை வானரரும் தம்மைப் பிலத்திலிருந்து வெளியில் அழைத்துச் செல்லுமாறு வேண்டுகின்றனர். அனுமன் குறுநகையுடன் பெரிய வடிவு கொண்டு தன் கைகளால் அப்பிலத்தின் மேல் தட்டைப் பெயர்த்து மேல் கடலில் எறிந்து விடுகின்றான். பிலமும் தரையுலகமும் ஒன்றாய் விடுகின்றது. வானரரும் சுயம் பிரபையுடன் தரையுலகிற்கு வருகின்றார்கள். சுயம் பிரபை அங்கு நின்று விண்ணுலகிற்கு மகிழ்ச்சியுடன் செல்கின்றாள். வானரர்கள் அனுமன் ஆற்றலைப் புகழ்ந்து கொண்டு அவனைப் பின்பற்றி அன்று பகல் முழுவதும் நடந்து சென்று மாலையில் ஒரு பொய்கைக் கரையை அடைகின்றார்கள்.

## கம்பர், வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

வானர வீரர்கள், கொடிய பாலைவனத்தை அடைந்து வருந்திய பின் பிலம் ஒன்றைக் கண்டு அதில் புகுந்தார்கள் என்பதை வான்மீகி போலவே கம்பரும் கூறியுள்ளார்.

1. பிலத்துள் காணப்பட்ட நகரத்தைப் பற்றிக் கூறுகையில் வான்மீகி அந்நகரத்தில் உள்ள தாமரை ஓடையில் பொன் மயமான மீன்களும் ஆமைகளும் பறவை இனங்களும் இருந்தன எனக் கூறியுள்ளார்.

கம்பர், அப்பில நகரத்திலும் அங்குள்ள பொழில்களிலும் பொய்கைகளிலும் எந்த உயிர்களும் இல்லை எனக் கூறியுள்ளார். "வானுலகின் வையத்தொக்கவுறை வோருருவ மோவிய மலான் மற்று எக்குறியி னுள்ளவு மெதிர்ந்திலர் திரிந்தார்" எனவும், கூவுமிள மென்குயில்கள் பூவைகிளி கோலத் தூவிமட அன்னமிவை யுள்ள சுவடில்லை" எனவும் வருதல் காணலாம்.

2. அயனை நோக்கிச் செய்த கடுந்தவத்தின் பயனாகப் பெற்ற சிற்பநூல் நுட்பங்களைக் கொண்டு இப்பில நகரத்தை மயன் அமைத்தான் என்பதிலும் மயன் ஏமை என்னும் அரம்பைபால் காதல் கொண்டமைக்காக இந்திரன் அம்மயனைக் கொன்றான் என்பதிலும் வான்மீகியும் கம்பரும் வேறுபடவில்லை.

மயன் இறந்தபின் அவன் படைத்த பிலநகரத்தை அயன் ஏமைக்குக் கொடுத்தான் என்றும் ஏமையின் விருப்பிற்கிணங்கி அந்நகர்க்காவலைச் சுயம்பிரபை ஏற்றுக் கொண்டு அங்குத் தவஞ் செய்து கொண்டிருந்தாள் என்றும் வான்மீகம் கூறுகின்றது.

அயன் கொடுத்த வரத்தால் பெற்ற சிற்ப நூல் நுட்பங்கள் தோன்ற மயன், பிலநகரத்தைப் படைத்தபின் சுயம்பிரபையின் உதவியால் ஏமை என்னும் அரம்பையை அடைந்து இப்பில நகரத்தில் நெடுங்காலம் இன்புற்றான் எனவும், பின்பு ஏமையைத் தேடிவந்த இந்திரன் இங்கு ஏமையுடன் மயன் இருக்கக் கண்டு வெகுண்டு அவனைக் கொன்றான் எனவும் ஏமை மயனோடு தங்கியதற்குக் காரணம் சுயம்பிரபையே என்பதை ஏமையால் இந்திரன் அறிந்து அக்குற்றத்திற்குத் தண்டனையாக அச்சுயம்பிரபையை இந்நகரத்தில் தனியே யிருந்து காவல் செய்யுமாறு கட்டளையிட்டான் எனவும், அது கேட்டுச் சுயம்பிரபை திடுக்கிட்டு இப்பிலத்திலிருந்து விடுதலையடையும் நாள் என்று?' என வினவ இந்திரன் இராமன் அருளால் வானரர் இப்பில நகர்க்குள் வரும்போது நீ விடுதலை

பெற்றுப் பொன்னுலகுக்கு வருவாய் என்று கூறிச் சென்றான் எனவும், கம்பர் கூறுகின்றார்.

3. 'சுயம்பிரபை தவஞ் செய்து கொண்டிருந்த இடத்தை அடைந்த வானரர்கள், அவளால் கொடுக்கப்பட்ட பழ முதலிய உணவுகளை உண்டு பசி தணிந்த பின், தங்கள் வரலாற்றைக் கூறி, இப்பிலத்திலேயே திரிந்து ஒரு மாதத்தைக் கழித்து விட்டதையும் இப்பிலத்தில் நின்று வெளியேறத் தம்மால் இயலாததையும் தெரிவித்துத் தம்மைப் பிலத்திலிருந்து வெளியேற்றுமாறு அவளை வேண்டினார்களாக, சுயம்பிரபை அவர்களைக் கண்ணை மூடிக் கொள்ளுமாறு செய்து தன் தவத்தின் ஆற்றலால் அவ்வானரர் அனைவரையையும் வெளியில் கொண்டு வந்து நிறுத்தி, 'இது விந்திய மலை; இது பிரசிரவணம் என்னும் மலை ; இது 'கடல்' என்று சுட்டிக் காட்டிவிட்டு வாழ்த்துக் கூறி யனுப்பிவிட்டு மீண்டும் பிலத்துள் தவஞ் செய்யப் புகுந்தாள்' என்று வான்மீகம் கூறுகின்றது.

கம்பர், இந்தச் சுயம்பிரபையின் வரலாற்றில் பெரிய மாறுதலைச் செய்துள்ளார். சுயம்பிரபை அப்பிலத்திலிருந்து விடுதலையடைய இராம தூதர்களாகிய வானரர்கள் வருவர் என இந்திரன் விதித்தான் எனவும், அதன்படி சுயம்பிரபை அவ்வானரர் வருகையை எதிர் நோக்கித் தவங் கிடந்தாள் எனவும், வானரர்கள் வந்தவுடன் அவர்கள் இராம தூதர்கள் என்பது அறிந்து மகிழ்ந்து உணவளித்து உபசரித்துத் தன்னைப் பிலத்திலிருந்து வெளியேற்ற உதவ வேண்டும் எனக் கேட்டுக் கொண்டாள் எனவும், அவள் வேண்டுகோளின்படி அனுமன் பெரிய உருவெடுத்து அப்பிலத்தின் மேல் தட்டைக் கையால் பெயர்த்து எடுத்து மேல் கடலில் எறிந்து பிலத்தையும் தரையையும் ஒன்றாக்கினான் எனவும், இவ்வாறு அனுமன் செய்த உதவியால் சுயம்பிரபை விண்ணுலகிற்கு விருப்பத்தோடு எளிதில் போனாள் எனவும் கம்பர் கூறியுள்ளார்.

எல்லா ஆற்றலும் நிறைந்த அனுமன் முதலிய வானரர்கள் ஒரு தவப் பெண்டின் உதவியால் பிலத்திலிருந்து விடுதலை யடைந்தார்கள் என்பது இராமன் பெருமைக்கும் வானரரின் ஆற்றலுக்கும் இழுக்காம் என்ற எண்ணத்தால் இவ்வாறு இவ்வரலாற்றை மாற்றி அமைத்தார் போலும். மேலும், இலங்கையில் அசோக வனத்தில் சிறையிருந்த செல்வியாய்த் தவங்கிடக்கும் சீதையின் விடுதலைக்குக் காரணமாகப் போகும் அனுமன் அச் சீதையைத் தேட முயன்ற தொடக்க காலத்திலேயே ஒரு தவமகளுக்குப் பிலத்திலிருந்து விடுதலை தந்து அவள் தன் உயிர்த் தோழியாகிய ஏமையோடு வாழக் காரணமாயிருந்தான் என்று கூறியுள்ள பகுதி, நாடகக் காப்பியத்திற்கு நல்லுறுப்பாய்ப் பின்னிகழ்வதை முன்னறிவிக்கும் நன்னிமித்த

மாய் அமைந்து அழகு செய்யும் என்ற கருத்தால் மாற்றப்பட்டது போலும் என நினையவும் இடமுண்டு.

4. வான்மீகத்தில் இப்பிலம் விந்திய மலையில் இருப்பதாக உள்ளது; விந்திய மலையும் நருமதையாறும் ஏமகூடமலையும் கடந்த பின் இந்தப் பிலத்தை வானரர் கண்டு, புகுந்ததாகக் கம்பர் கூறுகின்றார்.

## படலப் பொருட் சிறப்பு

இப்படலத்தில் ஏமகூட மலையின் சிறப்பைக் கூறுங்கால் அம் மலையிலுள்ள பொன் துகள் கலந்த அருவிகள், சிவந்த மாணிக்க மணிகளின் கூட்டத்திற்கு இடையில் விழுகின்ற தோற்றம் எரியும் நெருப்பில் உருகுகின்ற பொன் பாய்ந்து ஓடுவதுபோல் இருப்பதாகக் கூறும் பகுதி மிக்க சிறப்புடன் விளங்குகின்றது. சிவந்த மாணிக்க மணிகளின் கூட்டம் நெருப்புப் போல விளங்கா நிற்கப் பொன்னணுக்கள் செறிந்தமையால் பொன்னிறம் வாய்ந்த அருவி, அம்மணிகளின் திரளுக்கு இடையில் செல்லுங்கால் நெருப்பில் உருகுகின்ற பொன்போலக் காட்சி யளிக்கின்றது என்ற உவமை படிப்பவர் உள்ளத்தில் படமாக அமைந்து மகிழ்ச்சியூட்ட வல்லதாக வுள்ளமை காணலாம்.

அனுமன் முதலிய வானரர்கள் ஒரு பாலைவனத்தின் வழியாகச் செல்ல நேர்ந்தபோது அப்பாலையின் வெம்மை தாங்காது அவர்கள் துடிக்கும் இயல்பை,

> 'தென்புலந் தங்கெரி நரகில் சிந்திய
> என்பில்பல் உயிர்என வெம்மை யெய்தினர்'

என்ற உவமையால் புலப்படுத்தியுள்ளமை சாலச் சிறப்புடையதாகக் காணப்படுகின்றது. புழுக்கள் வெயிலில் பட்டவுடன் உயிர் நீங்கும் மென்மைத்தன்மை யுடையவை. அவை அதற்கு மேலும் எரிகின்ற நரகில் விழுமாயின் அவற்றின் துன்பத்திற்கு எல்லை ஏது? அந்த என்பு இல்லாத புழுவின் துன்பத்தைப் போன்றதே பாலைவானத்தில் வானரர் படுந் துன்பம் என்ற விளக்கம் பொருத்த மிக்கதாக அமைந்துள்ளமை காணலாம். 'என்பிலதனை வெயில் போலக் காயுமே' என்று வள்ளுவர் கூறிய உவமையைச் சிறப்பித்துள்ளமையும் இங்கு நினைதல் தகும்.

பாலைவனத்திலிருந்து உய்ய வானரர்கள் புகுந்த பிலத்திலுள்ள நகரத்தைப் பற்றிக் கூறுங்கால் அந்நகரத்தில் மாதரும் மைந்தரும் இயங்காமையால் உயிரிலாத ஓவியம் போன்று விளங்குவது எனவும், "ஓவியமலால் மற்று எக்குறியினுள்ளவும் எதிர்ந்திலர் திரிந்தார்"

எனவும் கூறி அங்கு உயிர் இனங்கள் எவையும் வாழவில்லை என்பதைக் கம்பர் புலப்படுத்தியுள்ளார். அவர் கருத்திற்கு மாருகப் பின்வரும் பாடலை அமைத்து உரையும் எழுதியுள்ளார்கள்.

வாவியுள பொய்கையுள வாசமலர் நாறும்
காவுமுள காவிவிழி யார்கள்மொழி யென்னக்
கூவுமிள மென்குயில்கள் பூவைகிளி கோலத்
தூவிமட வன்னமுள தோகையர்க ளில்லை.

இப் பாடத்தையே உண்மைப் பாடம் என்று கொள்வோமாயின், அப்பில நகரத்தில் குயிலும் பூவையும் கிளியும் உள்ளன எனக் கொளல் வேண்டும். அங்ஙனம் கொள்ளின் 'எக்குறியினுள்ளவும் எதிர்ந்திலர் திரிந்தார்' என்று முன் கூறியதோடு முரண்படக் கம்பர் கூறினர் என்ற குற்றம் உண்டாகும். "பயில்குரற் கிண்கிணி பதத்த பாவையர் இயல்புடை மைந்தர்கள் இயக்கிலாமையால்......உயிரிலா ஓவியம் என்ன ஒப்பது" என்று முன் கூறியதால் அங்குத் தோகையர்கள் இல்லை என்பது பெறப்படவும் இங்கு மீட்டும் 'தோகையர்கள் இல்லை' எனக் கூறின், கூறியது கூறல் என்னும் குற்றத்தைக் கம்பர் செய்தார் என அத் தெய்வப் புலவர்மேல் பெருங் குற்றத்தைச் சுமத்த வேண்டி வரும்.

கம்பர் இத்தகைய குற்றங்கள் உண்டாகுமாறு செய்யுள் செய்திருப்பாரா என்பதைச் சிந்தித்துப் பல ஏடுகளிலுள்ள பாடங்களை யெல்லாம் நுணுகி நோக்கியபோது அக் குற்றங்களை உண்டாக்காத நல்ல பாடமும் காணப்பட்டது. இறுதியடியில்தான் மாற்றம்.

'தூவிமட வன்ன மிவை யுள்ளசுவ டில்லை' என்பதே அப் பாடம். இப் பாடமே முன் கூறிய கருத்துக்களோடு முரண்படாததாய்க் கம்பரால் இயற்றப் பெற்ற தூய பாடம் என்பது ஒரு முறை நோக்குவார்க்கும் புலனுகும். அங்கு வாசமலர் நாறும் சோலைகளிருந்தும் அங்குக் குலாவி விளையாடிக் களிக்கக் குயிலும் பூவையும் கிளியும் இல்லை; வாவியும் பொய்கையுமிருந்தும் அங்குத் தாவி நீந்தி இன்புறத்தக்க அன்னப் பறவை இல்லை என்பது பொருளாகும். குயில் முதலிய பறவைகள் முன்னிருந்தன என்பதற்கும் அங்கு அடையாளமில்லை என்பது கருத்து. எனவே இப்பாடமே சிறந்த பாடம் என்று கொண்டு இப்பதிப்பில் சேர்த்து உரை வரையலாயிற்று.

இனி இந் நகரத்தை இயற்றியவன் மயன் என்பதைச் 'சிற்பியாம் மயன் மனம் வருந்திச் செய்தது' என்ற அடியால் முன் புலப்படுத்திய கம்பர் பின், சுயம்பிரபையின் சொல்லாகக் கூறும்பொழுது 'நான்முகன் அளித்துளது இம்மாநகரம் நல்லோய்' என்று கூறி

யுள்ளார். அங்கு 'மயன் செய்தது இந்நகரம்' என்று உரை வரைந்தவர்கள் இங்கு, "நான்கு முகங்களையுடைய பிரம தேவனால் (அம் மயனுக்கு) அளிக்கப்பட்டுளதாகும்" என்று உரை வரைந்துள் ளார்கள். இங்குக் கூறியவாறு மயனுக்கு இந் நகரம் பிரமதேவனால் கொடுக்கப்பட்டிருக்குமாயின் முன் காட்டிய பாடலில் "சிற்பியாம் மயன் மனம் வருந்திச் செய்தது" என்பது பொருத்தமில் கூற்றாய் முடிதலை அவ்வுரையாசிரியர்கள் சிந்தித்ததாகத் தெரியவில்லை. கம்பர் முன்னுக்குப் பின் முரணாக இவ்வாறு பாடியிருப்பரா? என்று ஊன்றி நோக்கினால் அவர் பாடியதில் குறையின்மையும் உரையா சிரியர் கருத்தில் குறையுண்மையும் புலனாம்.

அந்தப் பிலநகரத்தைச் செய்தவன் மயனே. மயன் எவ்வாறு இத்தகைய பேரெழில் வாய்ந்த நகரத்தைச் செய்தான் என்றால் அம் மயன் அயனை நோக்கிப் பல்லாயிர ஆண்டுகள், சிற்ப நூல் நுட் பங்கள் தனக்கு எளிதாகப் புலனாக வேண்டும் என்று வேண்டித் தவங் கிடந்தான். அத்தவத்திற்கிரங்கி அயன், அச் சிற்ப நூல் நுட்பங்கள் எளிதில் புலனாகிப் பலனளிக்குமாறு வரங் கொடுத்தான். அவ்வாறு அயன் கொடுத்த வரத்தினைக் கொண்டு மயன் அந்த நகரத்தைச் செய்தான் என்பதையே கம்பர், "மயன் செய்த தவத் தால், நான்முகன் அளித்துளது இம்மாநகரம் நல்லோய்" எனச் சுயம்பிரபையின் வாயிலாக உணர்த்தியுள்ளார். மயன் செய்த தவத்தின் பெருமையால் அயன் மனமிரங்கி அவன் வேண்டிய சிற்ப நூல் நுட்பங்களைக் கொடுத்தமையால் இந்தப் பெருமை வாய்ந்த நகரம் உளதாயிற்று என்பதே பொருள். அயன் வரமாகக் கொடுத்த சிற்ப நூல் நுட்பங்களைக் கொண்டு மயன் வருந்திச் செய்த நகரம் இது என்க. மயன் இந்நகரைச் செய்வதற்கு அயன் கொடுத்த வரம் காரணம் ஆயிற்று ஆதலின் 'நான்முகன் அளித்தலால் உளதாயிற்று' என்றார்.

இவ்வாறே பல இடங்களிலும் உண்டாகும் ஐயங்களையும் முரண் பாடுகளையும் நீக்கிச் செவ்விய பொருளை விளக்கவல்லது இப்பதிப்பு என்பதை அறிஞர்கள் ஆய்ந்துணர்வார்களாக.

---

# 13. பிலம் புக்கு நீங்கு படலம்

**4627.** போயினூர் போயபின் புறநெடுந் திசைகடோ
றேயினு னிரவிகா தலனுமே யினபொருட்
காயினு ரவருமங் கன்னநா ளவதியிற்
ருயினு ருலகினைத் தகைநெடுந் தானையார்.

போயினுர்; போயபின் புறநெடுந் திசைகள்தோறு
ஏயினுன், இரவி காதலனும்; ஏயின பொருட்கு
ஆயினுர், அவரும்; அங்கு அன்ன நாள் அவதியில்
தாயினுர் உலகினைத், தகைநெடுந் தானையார்.

பொ :—(அங்கதன் அனுமான் முதலிய வீரர்கள் தென்திசை நோக்கிப்) போனுர்கள், அவர்கள் போனபிறகு தென்திசையல்லாத பிற நீண்ட திசைகள் தோறும் செல்லவேண்டியவர்களைச் சூரியன் மகனுகிய சுக்கிரீவன் ஏவினுன்; அவன் ஏவலுக்கு இசைந்தவர் களாகிய வானா வீரரும் உலக முழுவதையும் தமது ஆற்றலால் தடுக்கவல்ல சேனையையுடையவராய் ஒரு மாத எல்லேக்குள் (தேடி வருவதாக) அங்கிருந்து தாவிச் சென்ருர்கள்.

கு :—தென்திசையல்லாத பிற திசைகளில் செல்லவேண்டியவர் இன்னுர் என்பதை நாடவிட்ட படலத்தில் 10-ஆஞ் செய்யுளில் காண லாம். 'ஒருமதி முற்றுருத முன் முற்றுதிரிவ்விடை' என அங்குக் கூறியதையே இங்கு அன்ன நாள் அவதியின்' என்ருர். தகைதல் - தடுத்தல். தகை பெருமை யென்று கொண்டு தானைக்கு அடை யாக்கி உலகினைத் தாயினுர் என இயைத்து உலக முழுமையினும் பரவிச் சென்ருர் என்று பொருள் கூறலும் ஆம். (1)

**4628.** குன்றிசைத் தனவெனக்
குலவுதோள் வலியினுர்
மின்றிசைத் திடுமிடைக்
கொடியைநா டினர்விராய்
வன்றிசைப் படருமா
ருெழியவண் டமிழுடைத்
தென்றிசைச் சென்றுளார்
திறனெடுத் துரைசெய்வாம்.

குன்று இசைத்தன எனக் குலவுதோள் வலியினுர்
மின் திசைத்திடும் இடைக்கொடியை நாடினர் விராய்
வன்திசைப் படரும் ஆறு ஒழிய, வண்தமிழுடைத்
தென் திசைச் சென்றுளார் திறன் எடுத்து உரை செய்வாம்.

பொ :—மலைகளே பொருத்தப்பட்டுள்ள என்னுமாறு விளங்குகின்ற தோள்களின் வலிமையுடைய வானர வீரர்கள், மின்னலும் திகைக்கும்படியான இடையையுடைய கொடி போன்றவளான சீதையைத் தேடினவர்களாய்க் கலந்து வலியதாகிய கிழக்கு மேற்கு வடக்கு என்ற மூன்று திசைகளிலும் செல்லும் வழிகளில் நீங்கினுர்களாக, வளம் வாய்ந்த தமிழ் மொழியை யுடைய தென்திசைக்கண் சென்றவர்களின் தன்மையை யெடுத்துச் சொல்லுவோம்.

கு :—குன்றிசைத்தன என என்றது தற்குறிப்பேற்றவுவமை. இடைக்கு ஒப்பாக இயலாமையால் மின்னல் திகைக்கலாயிற்று. கொடி ஆகுபெயராய்ச் சீதையை யுணர்த்தியது. நாடினராய் விராய் ஒழிய என இயையும். ஒழிதல் - நீங்குதல்; செல்லுதல். ஏனைத் திசைகள் மூன்றையும் வன்றிசை யென்ருர், மென்மையான தமிழ் மொழி வழங்காமையின்; அங்ஙனம் கூறவே தமிழ் வழங்கும் தென் திசை மென்றிசை என்பது பெறவைத்தவாருயிற்று. இலக்கிய இலக்கணங்களால் வளம்பெற்ற மொழியாதலின் வண்டமிழ் எனச் சிறப்பித்தார். தென்திசைக்கண் சென்றவர்களே சீதையைக் காணும் சிறப்புடையராய்க் கதைக்கு இன்றியமையாதவர்களாக இருத்தலின் அவர்களைப்பற்றி முதற்கண் விரிவாகக் கூறத் தொடங்குகின்ருர். இது நுதலிப் புகுதல். (2)

## விந்தியமலையில் தேடுதல் 4629-4632

**4629.** சிந்துரா கத்தொடுந் திரள்மணிச் சுடர்செறிந்
தந்திவா னத்தினின் றவிர்தலா னரவினே
டிந்தியா றெய்தலா னிறைவன்மா மௌலிநேர்
விந்தநா கத்தின்மா டெய்தினுர் வெய்தினுல்.

சிந்து ராகத்தொடும் திரள் மணிச் சுடர் செறிந்து
அந்தி வானத்தின் நின்று அவிர்தலான் அரவினேடு
இந்து யாறு எய்தலான், இறைவன் மாமௌலிநேர்
விந்த நாகத்தின் மாடு எய்தினுர் வெய்தினுல்.

பொ :—சிந்துரம் என்னும் செம்பொடியும் திரண்ட மாணிக்க மணிகளின் சிவந்த ஒளியும் நெருங்கி அந்தியில் தோன்றும் செவ்வானத்தைப் போலச் சிவந்து நின்று விளங்குதலாலும், பாம்புகளும் சந்திரனும் ஆறும் பொருந்தி யிருத்தலாலும் சிவபிரானுடைய சடை முடியை ஒத்துவிளங்குகின்ற விந்த மலையின் பக்கத்தில் விரைவாகச் சென்று சேர்ந்தார்கள்.

கு :—இறைவன் மௌலி என்றது சிவபிரானுடைய சடை முடியை. அது ஒளியும் செந்நிறமுமுடையதாதலை "மின்னார் செஞ் சடைமேல் மிளிர் கொன்றை யணிந்தவனே" (சுந்தரர் தேவாரம் - 24-1) என்றதால் அறியலாம். அந்திவான் என்றது மாலைக் காலத்தில் தோன்றும் செவ்வானத்தை. விந்த மலை சிந்துராகப் பொடியும் மாணிக்க மணிகளின் ஒளியும் நெருங்கி செவ்வானத்தைப் போல விளங்குதலாலும், அம்மலையில் பாம்புகளும் வாழ்தலாலும், அம்மலை முடியில் சந்திரன் வந்து பொருந்துதலாலும், ஆறுகள் அங்குத் தோன்றிப் பெருகுதலாலும் பாம்பும் பிறையும் கங்கையும் சூடிய சிவபிரானின் செஞ்சடை முடியை ஒத்துள்ளது என்றது செம்மொழிச் சிலேடையணி ஆகும். சிவபிரான் சடைமுடியில் பாம்பு முதலியன சூடியிருத்தலை 'கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் முடிமேல் வைத்த அங்கணர்' (பெரியபு-தடுத்தாட்கொண்ட-1) என்பதால் அறியலாம். "பாணி பிறை கொன்றை பணிசூடி மானேந்தி, வேணியரனைப் பொருவும் வேங்கடமே" (திருவேங்கடமாலை-5) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். இந்து - சந்திரன். இந்தி என்பதில் இகரம் யகரம் வரக்குறளுத்திரி இகரம் ஆகும். நாகம் - மலை. வெய்து - விரைவு. எய்தினர் என்பதற்கு எழுவாய் முன் பாடலில் உள்ள 'தென்றிசைச் சென்றுளார்' என்பதையே கொள்க.

(3)

**4630.** அந்நெடுங் குன்றமோ டவிர்மணிச் சிகரமும்
பொன்னெடுங் கொடுமுடிப் புரைகளும் புக்குமுன்
நன்னெடுந் தோகையை நாடினர் நவையிலார்
பன்னெடுங் காலமா மென்னவோர் பகலிடை.

அந்நெடுங் குன்றமோடு அவிர் மணிச் சிகரமும்
பொன்நெடுங் கொடுமுடிப் புரைகளும் புக்குமுன்
நல்நெடுந் தோகையை நாடினர்—நவைஇலார்—
பல் நெடுங் காலம் ஆம் என்ன ஓர் பகலிடை.

பொ :—குற்றமற்றவர்களாகிய அவ்வானரவீரர், அந்த உயர்ந்த குன்றத்தில் ஒளிவிளங்கும் மணிகள் நிறைந்துள்ள சிகரங்களிலும், பொன் நிறைந்த நெடிய மலையுச்சியிலுள்ள குகைகளிலும் முதல் முதலாகப் புகுந்து நல்ல நீண்ட தோகையையுடைய மயில் போன்ற வளாகிய சீதையை ஒரு பகற்பொழுதிற்குள் பல நீண்ட காலம் தேடிப் பார்ப்பதுபோலத் தேடினார்கள்.

கு :—விந்த மலையின் சிகரங்களிலும் குகைகளிலும் ஒரு நாள் முழுதும் சீதையைத் தேடினார்கள் வானர வீரர் என்றவாறு. குன்ற மோடு என்புழி ஒடு இடப்பொருள் உணர்த்தியது; வேற்றுமை மயக்கம். பொன்துகள் செறிந்திருத்தலின் 'பொன்னெடுங்கொடு முடி' என்றார். கொடுமுடி - மலையுச்சி. புரை - குகை. சீதையை முதல் முதலில் விந்த மலையில்தான் தேடத் தொடங்கினார்கள் என் பார் 'புக்கு முன் - நாடினார்' என்றார். தோகை என்பது சினையாகு பெயராய் மயிலை யுணர்த்திற்று; பின் அது உவமை ஆகுபெயராய்ச் சீதையை யுணர்த்தியது; இருமடியாகு பெயர். மயில் போன்ற சாயலுடைமையாலும் தோகை போன்று நீண்ட கூந்தல் உடைமை யாலும் சீதையைத் தோகை என்றார். நவையிலார் என்றது வானர வீரரை; தலைவன் சொல்லைத் தலைமேற்கொண்டு வஞ்சனையின்றி எல்லா இடங்களிலும் தவறாது தேடும் இயல்புடையார் என்பது புலப்பட அப்பெயரால் கூறினார். பலர் கூடி விரைந்து தேடியதால் பலநாள் தேடவேண்டிய இடங்களை ஒரே நாளில் தேடி முடித்தார் என்பார், 'பல் நெடுங் காலமா மென்ன வோர் பகலிடை'' என்றார். (4)

**4631.** மல்லன்மா ஞாலமோர் மறுவுரு வகையினச்
சில்லலோ தியையிருந் துறைவிடந் தேடினார்
புல்லினா ருலகினைப் பொதுவிலா வகையினா
லெல்லைமா கடல்களே யாடுமா றேகினார்.

மல்லல் மாஞாலம் ஓர் மறுஉரு வகையின், அச்
சில்அல் ஓதியை இருந் துறைவிடம் தேடினார்,
புல்லினார் உலகினைப் பொதுஇலா வகையினால்,
எல்லை மாகடல்களே ஆடுமாறு ஏகினார்.

பொ :—(பூமியைச் சுற்றி) எல்லையாக அமைந்துள்ள பெரிய கடல்களே தமக்கு ஒப்பாகுமாறு சென்றவர்களாகிய வானர வீரர்கள் அந்த விந்த மலையாகிய பரந்த இடத்தை வேறெவரும் தொடர்பு கொள்ளாதபடி முழுவதும் தாமேயாகப் பரவினராய், வளம் வாய்ந்த

பெரிய இவ்வுலகத்து உயிர்கட்கு ஒரு பழுதும் உண்டாகாதபடி (எவ்வுயிர்க்கும் துன்பம் செய்யாது) அந்தத் தகட்டணியை யணிந்த இருள்போன்ற கூந்தலையுடைய சீதை இருந்த இடத்தைத் தேடினார்கள்.

கு :—உலகு என்றது இங்கு விந்த மலையாகிய உலகத்தை. உலகத்தின் ஒரு பகுதியையும் உலகம் என்று கூறுவதுண்டு 'சேயோன் மேய மைவரை யுலகமும்' (தொல் - பொருள்.) என்றது காண்க. விந்த மலையில் மற்றவர்க்கு இடமின்றி எங்கும் வானர வீரரே பரவி யிருந்து தேடினார்கள் என்பார் உலகினைப் பொதுவிலா வகையினால் புல்லினார் என்றார். வானர சேனையின் பெருக்கிற்குக் கடல்களே ஒப்பாகும் என்று சொல்லுமாறு சென்றவர்கள் அவ்விந்த மலை முழுதும் தாமேயாய்ப் பரவியிருந்து ஒருயிர்க்கும் ஊறு நேராத வகையில் சீதையைத் தேடினார்கள் என்றவாறு. ஏகினாராகிய வானரர் புல்லினாராய் மறுவுருவகையின் உறைவிடந் தேடினார் என இயையும். ஞாலம் இடவாகு பெயராய் ஞாலத்து வாழும் உயிர்களை யுணர்த்தியது. பெருங் கூட்டமாகத் திரண்டு செல்லும் வானரங்கள் பிறவுயிர்க்குத் தீங்கு செய்து கொண்டு போதலே இயல்பாதலின் அக்குற்றம் இராமன் ஏவலை மேற்கொண்டு செல்லும் வானரர்பால் இல்லை என்பார், 'ஞாலமோர் மறுவுருவகையின்......தேடினார்' என்றார். மறு - ஊறுபாடு; துன்பம். சில்–தலையில் அணியும் தகட்டணி. அல் - இரவு; இருள். ஓதி – கூந்தல்; ஆகுபெயராய்ச் சீதையை யுணர்த்தியது. இருந்த உறைவிடம் என்புழி அகரம் தொக்கது சீதையை யுறைவிடத்தை என இரண்டு செயப்படு பொருள் தோன்ற ஈரிடத்து இரண்டனுருபு வந்தது. (5)

4632. விண்டுபோ யிழிவமே னிமிர்வவிண் படர்வவே
ருண்டமா மரனினம் மலையின்வா யுறையுநீர்
மண்டுபா ரதனின்வா ழுயிர்களம் மதியினோர்
கண்டிலா தனவயன் கண்டிலா தனகொலாம்.

விண்டு போய் இழிவ, மேல் நிமிர்வ விண்படர்வ, வேர்
உண்ட மாமரனின் அம்மலையின்வாய், உறையுநீர்
மண்டு பார் அதனின், வாழ் உயிர்கள் அம்மதியினோர்
கண்டிலாதன, அயன் கண்டிலாதன கொலாம்.

பொ :—நிலத்தை விள்ளச் செய்து கீழே போய் இறங்கும் பாம்பு முதலிய ஊர்வனவும், நிலத்தின்மேல் நிமிர்ந்து நடப்பனவாகிய சிங்கம் முதலிய விலங்குகளும், விண்ணில் பறப்பனவாகிய கருடன்

முதலிய பறவைகளுமாய், வேரினல் நீர் முதலிய உணவுகளை யுண்ணுகின்ற பெரிய மரங்களிலும், அம்மலைப் பரப்பிலும் எப் பொழுதும் தங்கியுள்ள நீர் நிரம்பிய நீர்நிலைகளாகிய இடங்களிலும் வாழ்கின்ற உயிர்வகைகளில், அந்த நல்லறிவுடைய வானரர்களால் பார்க்கப்படாதவை, பிரமனல் படைக்கப் படாதனவேயாம்.

கு :—சீதையைத் தேடும் வானரர்கள் அவ்விந்திய மலையில் பிரமன் படைத்த அனைத்துயிர்களையும் கண்டார்கள் என்பது கருத்து. உயர்ந்த இனத்துப் பாம்புகள் தம் உயிர்ப்பால் நிலத்தைப் பிளக்கச் செய்து அப்பிளவில் தங்கும் இயல்புடையவாகலின் அவற்றை 'விண்டு போயிழிவ' என்ருர். இழிவ, நிமிர்வ, படர்வவாய், மரங் களிலும் மலைப்பரப்பிலும் நீர்நிலைகளிலும் வாழுயிர்கள் என்க. எழுவகைப் பிறப்பினுள் ஊர்வனவும் நடப்பனவும் பறப்பனவும் கூறி ஏனையவற்றை இனம் பற்றிக் கொள்ள வைத்தார். கண்டிலாதன முன்னது பார்க்கப்படாதவை எனவும் பின்னது படைக்கப்படாதன எனவும் பொருள்பட்டன. அயன் படைத்த அனைத்துயிரையும் அவர்கள் அங்குக் கண்டார் என்பதை வற்புறுத்த "மதியினேர் கண்டிலாதன அயன் கண்டிலாதன" என்ருர். "இல்லாத உலகத் தெங்கு மீங்கிவன் இசைகள் கூரக் கல்லாத கலையும் வேதக் கடலுமே யென்னும் காட்சி" (அனுமப் படலம் - 20) என்றது இங்கு ஒப்பு நோக்கத்தகும். உயிர் வகைகளில் மூன்று வகையினைக் கூறியது போலவே மரமும் மலைப்பரப்பும் நீர்நிலையும் ஆகிய வாழிடங்கள் மூன்றையும் கூறியவாறு. நீர்நிலைகளாகிய இடம் கூறவே நீர்வாழ் உயிர்களும் கூறியவாரும். கொல், அசைநிலை. மதியினேர் என்றது வானரரை. (6)

## நருமதையாற்றை யடைந்து தேடுதல் 4633-4636

4633. ஏகின ரோசனை யேழொ டேழுபார்
☆ சேகரத் தென்றிசைக் கடிது செல்கின்ருர்
மேகமா லையினெடும் விரவி மேதியின்
நாகுசேர் நருமதை யாறு நண்ணினர்.

ஏகினர் ஓசனை ஏழொடு ஏழு; பார்
சேகரத் தென்திசைக் கடிது செல்கின்ருர்,
மேக மாலையினெடும் விரவி மேதியின்
நாகு சேர் நருமதை யாறு நண்ணினர்.

பொ :—(விந்தமலையை விடுத்து) பூமிக்கு மணிமுடிபோற் சிறந்த தென்திசைக்கு விரைந்து செல்கின்றவராகிய வானர வீரர்.

பதினன்கு யோசனை தொலைவு கடந்து சென்று, மேகங்களின் வரிசையோடு கலந்து பெண் எருமைகள் படியும் நருமதையாற்றை அடைந்தார்கள்.

கு :—நருமதையாற்றின் பரப்புக் கடற் பரப்புப்போல் தோன்று தலின் மேகங்கள் அங்கு வந்து நீர் பருகுகின்றன எனவும், அம் மேகங்களை ஆண் எருமைகளாகக் கருதிப் பெண் எருமைகள் அம் மேகங்களோடு கலந்து தங்கியுள்ளன எனவும், நருமதையாற்றின் சிறப்புக் கூறியவாறு. மேகங்களோடு எருமை நாகுகள் சேர்தற்குக் காரணம் உய்த்துணர வைப்பு என்ற உத்தியால் பெற வைத்தார். பெண் எருமை மேகத்தை ஆணெருமை என மயங்கியது என்பது மயக்கவணி ஆம். சேகரம் - முடி. தென்திசையைப் பார்க்கு மணி முடியாகக் கூறியதால் கம்பரின் நாட்டுப் பற்றுப் புலனும். "திசை யனைத்தின் பெருமையெலாந் தென்திசையே வென்றேற" (பெரிய-திருஞானசம்பந்த - 24) என்பது இங்கு நோக்கத்தகும். கடிது செல் கின்ருர் வினைப் பெயர். செல்கின்ருர், ஏகினராய் நருமதையாறு நண்ணினர் என முடிக்க. நாகு - பெண் எருமை. ஆண், போத்து எனப்படும், மாலை - வரிசை. (7)

**4634.** அன்னமா டிடங்களு மமரர் நாடியர்
துன்னியா டிடங்களுந் துறக்க மேயவர்
முன்னியா டிடங்களுஞ் சுரும்பு மூசுதேன்
பன்னியா டிடங்களும் பரந்து சுற்றினர்.

அன்னம் ஆடு இடங்களும், அமரர் நாடியர்
துன்னி ஆடு இடங்களும், துறக்கம் மேயவர்
முன்னி ஆடு இடங்களும், சுரும்பு மூசுதேன்
பன்னி ஆடு இடங்களும், பரந்து சுற்றினர்.

பொ :—(வானரர்கள், நருமதையாற்றங்கரையில்) அன்னங்கள் விளையாடும் இடங்களையும் தேவருலகத்து வாழும் அரம்பையர் நெருங்கி வந்து நீராடுகின்ற இடங்களையும், சுவர்க்கலோகத்தில் பொருந்தியுள்ள தேவர்கள் (அந்நதியின் சிறப்பைக்) கருதி வந்து நீராடும் இடங்களையும் மலரில் மொய்க்கின்ற சுரும்புகளும் தேன் வண்டுகளும் பாடிக்கொண்டு மகிழ்ச்சியுடன் திரிகின்ற இடங்களையும் பரவிச் சுற்றித் தேடினர்கள்.

கு :—நருமதை யாற்றங்கரையில் அழகு மிக்குள்ள சோலையும் துறையுமாய இடங்களில் சீதையை இராவணன் வைத்திருத்தல்

கூடும் என்ற கருத்தால் அன்னம் ஆடிடங்கள் முதலியவற்றில் வானரர் தேடினர் என்க. அமரர் நாடியர் என்பது பெண்பாற் பன்மைப் பெயர். மேல் பெண்பாலைப் பிரித்தமையின் துறக்கமே யவர் என்றது தேவரில் ஆடவரையே கொள்க. முன்னுதல் - கருது தல். ஆர்வத்தால் முற்பட்டு வந்து ஆடும் இடம் எனலுமாம். மூசு என்பது இடைநிலை விளக்காய்ச் சுரும்புக்கும் இயையும். சுரும்பு எல்லா மணத்திலும், தேன் நன்மணத்தில் மட்டும் மொய்க்கும். பன்னுதல் இங்குப் பாடுதலை யுணர்த்தியது. ஆடுதல்-திரிதல். (8)

**4635.** பெறலருந் தெரிவையை நாடும் பெற்றியா
ரறனறுங் கூந்தலு மளக வண்டுசூழ்
நிறைநறுந் தாமரை முகமு நித்தில
முறுவலுங் காண்பரால் முழுதுங் காண்கிலார்.

பெறல் அருந் தெரிவையை நாடும் பெற்றியார்,
அறல் நறுங் கூந்தலும் அளக வண்டு சூழ்
நிறைநறுந் தாமரை முகமும் நித்தில
முறுவலும் காண்பரால் முழுதுங் காண்கிலார்.

பொ :—பெறுதற்கு அரிய சீதையைத் தேடும் தன்மையராய வானரர், கருமணலாகிய நறுமணமுடைய கூந்தலையும், அளகம் போல வண்டுகள் மொய்க்கின்ற நிறைந்த நறுமணமுடைய தாமரை மலராகிய முகத்தையும், (அலைகொழிக்கும்) முத்துக்களாகிய பற்களையும் மட்டும் காண்பாராய்ச் சீதையின் உருவமுழுமையும் காணாராயினர்.

கு :—சீதையைத் தேடச் சென்ற வானரர்கள், சீதையைக் காண வில்லை; சீதையின் சில உறுப்புக்களுக்கு உவமையாகும் அறலையும், தாமரையையும் முத்தையுமே கண்டார்கள் என்றவாறு. பெறலருந் தெரிவை என்றது சீதையை. அவள் பெறலருந் தெரிவை என்பதை 'பெண்ணிவளொப்பாள் ஒரு பெண்ணைத் தருந்தான் என்றால் நான் முகன் இன்னும் தரலாமே' (மிதிலைக் - 27) என முன்னரே விளக்கி யுள்ளமை காணலாம். அறல் - கருமணல், அறனறுங்கூந்தல், தாமரை முகம், நித்திலமுறுவல் என்பன உருவகங்கள். அளக வண்டு சூழ் என்பது அளகம் போன்று வண்டுகள் சூழப்பெற்ற என்று பொருள் தருதலின் உவமையணியாம். பம்பைப் பொய்கை யைக் கண்ட இராமன், "வண்ண நறுந் தாமரை மலரும் வாசக்குவளை நாண்மலரும் புண்ணினெரியு மொரு நெஞ்சம் பொதியு மருந்திற் றரும் பொய்காய்! கண்ணுமுகமுங் காட்டுவாய் வடிவு மொருகாற்

காட்டாயோ, ஒண்ணுமென்னி னஃதுதவா துலோவினுரு முயர்ந் தாரோ? (பம்பைப் - 25) என்று வினவியது இங்கு ஒப்புநோக்கத் தகும். நருமதையாற்றின் அறல், சீதையின் கூந்தலையும், வண்டுகள் மொய்க்கும் தாமரை மலர், அவள் அளகம் பொருந்திய முகத்தையும், அலைகள் எறிந்த முத்துக்கள் அவள் பற்களையும் நினை வுறுத்தின என்றவாறு. (9)

**4636.** செருமத யாக்கையர் திருக்கில் சிந்தையர்
தருமத யாவினைத் தழுவுந் தன்மையர்
பொருமத யானையும் பிடியும் புக்குழல்
நருமதை யாகிய நதியு நீங்கினர்.

செருமத யாக்கையர், திருக்குஇல் சிந்தையர்,
தரும தயாவினைத் தழுவும் தன்மையர்
பொரு மதயானையும் பிடியும் புக்கு உழல்
நருமதை ஆகிய நதியும் நீங்கினர்.

பொ:—போர் செய்தற்குரிய செருக்கு வாய்ந்த உடம்பினை யுடையவர்களும், மாறுபாடு இல்லாத மனமுடையவர்களும், தரும மாகிய அருள் நெறியைத் தழுவி நடக்கும் தன்மையுடையவர்களும் ஆகிய வானரர்கள் போர் செய்யும் மதத்தையுடைய யானைகளும் பெண் யானைகளும் புகுந்து விளையாடுகின்ற நருமதை என்கின்ற ஆற்றையும் கடந்து சென்றார்கள்.

கு:—செருச் செய்தற்குரிய உடம்பு இருந்தும் மாறுபாடற்ற மனமும் அருள் நெறியைத் தழுவும் தன்மையும் இருந்தமையால் எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாமல் நருமதையைக் கடந்து சென்றார்கள் என்றவாறு. வானரம் என்ற நிலைக்குரிய திருக்கு அவர்கள் பால் இல்லை; மக்கள் தழுவுதற்குரிய அருள் நெறியே அவர்கள்பால் விளங்கிற்று என வானரர்களின் பெருந்தன்மை விளக்கியவாறு. தருமதயா என்றது அருள் அறத்தை; அறமாகிய அருள் என்க; வட சொல்லாதலின் இயல்பாயிற்று. யானைகள் புகுந்து விளையாடும் நருமதை என்றமையால் அவ்வாற்றின் அகலமும் ஆழமும் புலப் படுத்தியவாறு. (10)

**4637.** தாமகூ டத்திரைத் தீர்த்த சங்கம
நாமகூ டப்பெருந் திசையை நல்கிய

வாமகூ டச்சுடர் மணிவ யங்குறு
மேமகூ டத்தடங் கிரியை யெய்தினர்.

தாம கூடத் திரைத் தீர்த்த சங்கம,
நாம கூடப் பெருந்திசையை நல்கிய,
வாம கூடச் சுடர்மணி வயங்குறும்,
ஏமகூடத் தடங்கிரியை எய்தினர்.

பொ :—ஒளிமிக்க சிகரங்களிலிருந்து தோன்றும் அலைகளோடு கூடிய தீர்த்தங்களின் கூட்டுறவையுடையதும், மரச்செறிவால் அச்சந்தருமாறு மறைபட்டுக் கிடக்கின்ற பெரிய திசையைப் பாது காக்கின்றதும், அழகுமிக்க தொகுதியான ஒளியையுடைய மாணிக்க மணிகள் விளங்குவதும் ஆகிய ஏமகூடம் என்னும் பெரிய மலையை அடைந்தார்கள்.

கு :—தீர்த்த சங்கம ஏமகூடம், நல்கிய ஏமகூடம், வயங்குறும் ஏமகூடம் என மூன்றடியும் ஏமகூடத்தையே சிறப்பிக்க வந்தன. கூடம் மூன்றனுள் முதலது சிகரம் என்ற பொருளிலும் இரண்டாவது மறைவு என்ற பொருளிலும், மூன்ருவது தொகுதி என்ற பொரு ளிலும் வந்தது. தாமம் - ஒளி, சங்கமம் - கூட்டுறவு, நாம - அச்சம் தரும் தன்மையுடைய. அட்டகுலாசலங்களில் ஒரு மலையின் பெயர் ஏமகூடம் ஆக இருத்தலின் பெயரொப்புமை கருதிப் பெருந் திசையை நல்கியதாகக் கூறப்பட்டது. வாமம் - அழகு. ஏமகூட மலைச்சிகரங் களில் பல தீர்த்தங்கள் தோன்றிக் கூடுகின்ற இடங்களும் மாணிக் கங்கள் ஒளிவீசும் இடங்களும் உள என்றவாறு. (11)

4638. மாடுறு கிரிகளு மரனு மற்றவுஞ்
சூடுறு பொன்னெனப் பொலிந்து தோன்றுறப்
பாடுறு சுடரொளி பரப்பு கின்றது
வீடுறு முலகினும் விளங்கு மெய்யது.

மாடுஉறு கிரிகளும் மறனும் மற்றவும்
சூடுஉறு பொன் எனப் பொலிந்து தோன்றுறப்
பாடுஉறு சுடர் ஒளி பரப்புகின்றது ;
வீடுஉறும் உலகினும் விளங்கும் மெய்யது.

பொ :—(அம்மலை) தன் பக்கத்திலுள்ள மலைகளும் மரங்களும் மற்றைப் பொருள்களும் சுடச்சுடரும் பொன்போல விளங்கித் தோன்றுமாறு பெருமை பொருந்திய மிக்க ஒளியைப் பரப்பும்

தன்மையது ; யார்க்கும் வீடாகப் பொருந்திய பரமபதத்தினும் ஒளி விளங்கும் உடம்பின் தோற்றத்தையுடையது.

கு :—ஏமகூடமலை, தன் ஒளியால் தன் பக்கத்தில் உள்ள மலைகளும் மரங்களும் பிறபொருள்களும் புடம் வைத்த பொன்போல விளங்கச் செய்கின்றது என்பதும், இருளற்று ஒளிரும் பரம பதத்தினும் விளக்கமுடைய உடம்பையுடையது என்பதும் அம்மலையின் பொன்னிறத்தையும் ஒளியுடைமையையும் உயர்வு நவிற்சியாகப் புலப்படுத்தியவாறு. வீடுறு முலகம் என்றது பரம பதத்தை; அது என்றும் ஒளியுடன் திகழ்வது. (12)

இப்பாடலுக்குப் பின் சில அச்சுப் புத்தகங்களில் கீழ்வரும் பாடல் மிகைப் பாடலாகக் காட்டப்பட்டுளது.

4638 (a) இந்நெடுங் கிரிகொலோ வெதுகொ லோவென
வன்னெடு மேருவோ டயிர்க்க லாவது
தொன்னெடு நிலமெனு மங்கை சூடிய
பொன்னெடு முடியெனப் பொலியும் பொற்பது.

**4639.** பறவையும் பல்வகை விலங்கும் பாடமைந்
துறைவன கனகநுண் டூளி யொட்டலான்
நிறைநெடு மேருவைச் சேர்ந்த நீரவாய்ப்
புறநெடும் பொன்னொளி மிளிரும் பொற்பது

பறவையும் பல்வகை விலங்கும் பாடு அமைந்து
உறைவன கனகநுண் தூளி ஒட்டலால்
நிறைநெடு மேருவைச் சேர்ந்த நீரவாய்ப்
புறம்நெடும் பொன்ஒளி மிளிரும் பொற்பது.

பொ :—தன்னிடத்துப் பொருந்தித் தங்குவனவாகிய பறவைகளும் பலவகையான விலங்குகளும், (தன்னிடத்துள்ள) நுண்ணிய பொன் துகள் சென்று ஒட்டிக்கொள்வதால் நல்ல தன்மைகள் நிறைந்த மேருமலையைச் சேர்ந்தாற்போன்ற தன்மையையுடையவாய்த் தத்தம் உடம்புகள் நெடிய பொன்னொளியுடன் விளங்குதற்குக் காரணமான பொன்னிற மிகுதியை யுடையது (அவ்வேமகூடம்.)

கு :—ஏமகூடமலை, தன்பால் தங்கும் பறவைகளும் விலங்குகளும் பொன்னிறம் பெறுதற்குக் காரணமாய்ப் பொன்னிறமிக்கதாக இருக்கின்றது என்றவாறு. மேருவைச் சேர்ந்தவை பொன்னிறமாகும்

என்பதை "இமயப் பொருப்பகஞ் சேர்ந்த பொல்லாக் கருங் காக்கையும் பொன்னிறமாயிருக்கும்" (காரிகை அவையடக்கம்) என்றதால் அறியலாம். பாடு - பக்கம். உறைவனவாகிய பறவையும் விலங்கும் தூளி ஒட்டலான் புறம் பொன்ஞெளி மிளிரும் என இயையும். ஏமகூடம் பொற்பது என எழுவாய் வருவித்து முடிக்க. மிளிருதற்குக் காரணமான பொற்பது எனச் செய்யுமெனெச்சத்தைக் காரணப் பொருட்டதாக்குக. தூளி - துகள், ஏமகூடத்தில் உள்ள பொன்துகள் அம்மலையில் தங்கும் பறவைகள்மேலும் விலங்குகள் மேலும் ஒட்டிக் கொள்வதால் அவற்றின் உடம்பு பொன் ஒளியுடன் மிளிர்கின்றன என அம்மலையின்-பொன் மிகுதி புலப்படுத்தியவாறு. மேல் உயிரில் பொருள்கள் பொன்னிறம் பெறுவதைக் கூறி இச் செய்யுளில் உயிருடைப் பொருள்கள் அம்மலையால் பொன்.னிறம் பெறுதலை யுணர்த்தினர். (13)

**4640.** பரவிய கனகநுண் பராகம் பாடுற
எரிசுடர்ச் செம்மணி யீட்டத் தூடுவீழ்
அருவியு நதிகளு மலங்கு தீயிடை
யுருகுபொன் பாய்வபோன் றொழுகு கின்றது.

பரவிய கனகநுண் பராகம் பாடு உற
எரிசுடர்ச் செம்மணி ஈட்டத்து ஊடு வீழ்
அருவியும் நதிகளும் அலங்கு தீ இடை
உருகு பொன் பாய்வ போன்று ஒழுகுகின்றது.

பொ :—(ஏமகூடமலை,) பரவியுள்ள நுண்ணிய பொன் துகள் தம்பால் பொருந்தியிருக்க, நெருப்புப் போன்ற ஒளியினையுடைய சிவந்த மாணிக்க மணிகளின் கூட்டத்துக்கு இடையிலே வீழ்கின்ற அருவிகளும் நதிகளும், அசைந்தெரியும் தீயினுக்கு நடுவே உருகுகின்ற பொன் பாய்வனபோல ஒழுகுதற்கு இடமாக இருப்பது.

கு :—பொற்றுகள் கலந்த அருவிகளும் நதிகளும் மணிகளின் கூட்டத்துக்கு இடையே வீழ்கின்ற தோற்றம் நெருப்பிடை யுருகும் பொன் பாய்வது போன்றுளது என்றவாறு. ஒழுகுகின்றது என்றது ஏமகூடம். அருவியும் நதிகளும் உருகுபொன் பாய்வது போன்று ஒழுகுதற்கு இடமாகத் திகழ்கின்றது என்றவாறு; பராகம் - துகள். மணியின் ஈட்டம் அலங்கு தீப்போன்றது ; பொன் துகள் கலந்த அருவியும் நதிகளும் உருகுபொன் பாய்வன போன்றுளது என உவமையை விரித்துக் கொள்க. அலங்குதல் - அசைதல். (14)

**4641.** விஞ்சையர் பாடலும் விசும்பின் வெள்வளைப்
பஞ்சின்மெல் லடியின ராடற் பாணியுங்
குஞ்சர முழக்கமுங் குமுறு பேரியின்
மஞ்சின முரற்றலு மயங்கு மாண்பது.

விஞ்சையர் பாடலும், விசும்பின் வெள்வளைப்
பஞ்சின்மெல் அடியினர் ஆடல் பாணியும்,
குஞ்சர முழக்கமும் குமுறு பேரியின்
மஞ்சு இனம் உரற்றலும் மயங்கும் மாண்பது.

பொ :—(அங்கு வந்துள்ள) வித்தியாதரரின் பாடல் ஓசையும், விண்ணுலகத்திலிருந்து வந்தவரான வெண்மையான சங்கவளையணிந்துள்ள பஞ்சு போன்ற மெல்லிய அடிகளையுடைய தேவமாதரின் ஆடலோடு கூடிய தாளத்தின் ஓசையும், யானைகளின் முழங்கொலியும் முழங்குகின்ற முரசம்போல மேகக் கூட்டங்கள் முழங்கும் இடியோசையும் கலந்து ஒலிக்கும் சிறப்பினையுடையது.

கு :—பல்வகை ஒலிகளும் ஏமகூட மலையில் உண்டு என்றவாறு. ஏனை விலங்குகளின் ஒலியினும் யானை பிளிறும் ஒலி பெரிதாகலின் அதைக் கூறி ஏனை விலங்குகளின் ஒலிகளை இனம்பற்றிக் கொள்ள வைத்தவாறு. மலைபடுகடாத்துள் மலையில் உண்டாகும் ஓசைகளையெல்லாம் தொகுத்துக் கூறும்வழி, "அருவி நுகரும் வானரமகளிர் வருவிசை தவிராது வாங்குபு குடைதொறும் தெரியிமிழ்கொண்ட நும் இயம்போலின்னிசை, இலங்கேந்து மருப்பின் இனம்பிரியொருத்தல் விலங்கல் மீமிசைப் பணவைக் கானவர் புலம்புக் குண்ணும் புரிவளைப் பூசல்" முதலாகப் பல ஓசைகளைக் கூறி "அலகைத் தவிர்த்த எண்ணருந்திறத்த மலைபடு கடாஅம் மாதிரத்தியம்ப" என்று விளக்கியிருத்தலும் முதற்கண் வான் அரமகளிரின் ஓசையையும் யானைகளின் ஓசையையும் கூறியிருத்தலும் இங்கு ஒப்புநோக்கத்தகும். பாணி - தாளம். பேரி - முரசு. உரற்றுதல் - முழங்குதல். முன் இரண்டடிகளில் மெல்லோசையாகிய பாடல் ஓசையினையும் ஆடல் ஓசையினையும் கூறிப், பின்னிரண்டடிகளில் வல்லோசையாகிய யானை முழக்கமும் இடி முழக்கமும் கூறியவாறு. மயங்குதல் - கலத்தல். இனி, பாணி என்பதற்குப் பாடல் என்று பொருள் கொண்டு விஞ்சையர் பாடலும் தேவமாதர் ஆடற்பாடலும் ஒப்புமை யுடைமையால் ஒன்றை மற்றொன்றாக மயங்குதற்குரிய சிறப்புடையது எனவும், குஞ்சர முழக்கமும் மஞ்சின முரற்றலும் தம்முள் ஒப்புமையுடைமையின் ஒன்றை மற்றொன்றாக மயங்கியுணர்தற்குரிய மாண்புடையது எனவும் பொருள் கொள்ளலாம். (15)

அம்மலையை வானரர் இராவணன் இடம் என அயிர்த்தல்

4642. அனையது நோக்கின ராமி தாமயில்
வினையின னிராவண னிருக்கும் வெற்பெனும்
நினைவின ருவந்துவந் தோங்கு நெஞ்சினர்
சினமிகக் கனற்பொறி சிந்துஞ் செங்கணர்.

அனையது நோக்கினர், 'ஆம்; இதுஆம் அயில்
வினையினன் இராவணன் இருக்கும் வெற்பு' எனும்
நினைவினர், உவந்து உவந்து ஓங்கும் நெஞ்சினர்,
சினம் மிகக் கனல்பொறி சிந்தும் செங்கணர்.

பொ :—(வானரர்) அந்த ஏமகூட மலையை நோக்கி, 'வேல் முதலிய படைகளைக் கொண்டு செய்யும் போர்த் தொழிலில் வல்லவனாகிய இராவணன் இருக்கும் மலை இது ஆம்; ஆம்;' எனும் நினைவினராய் மகிழ்ந்து மகிழ்ந்து பூரிக்கும் நெஞ்சினராய்(ப் பின் அவ்விராவணன்மேல்) கோபம் மிகுதலால் நெருப்புப் பொறி சிந்துகின்ற சிவந்த கண்களை யுடையராயினர்.

கு :—செங்கணர் ஆயினர் என ஆக்கச் சொல் கொடுத்து முடிக்க; செங்கணர் என்பது ஆக்கவினைக் குறிப்பு ஆதலின் ஆக்கமின்றி அது இயலாமை யறிக. அயில் வினையினன் இராவணன் என்றது வேல் முதலிய படைகளைக் கொண்டு போர் செய்து பிறரை வருத்துதலையே தொழிலாகக் கொண்டவன் என அவன் கொடுமை புலப்படுத்தியவாறு. ஏமகூட மலையின் வளத்தைக் கண்டவுடன் அது இராவணன் இருப்பிடமாக இருக்கலாம் என்ற எண்ணம் வானரர்க்கு உண்டாயது; நாடிவந்த இடத்தைக் கண்டுவிட்டோம் என்பதால் மகிழ்ச்சியும், தீங்கு செய்த இராவணனை நினைந்த அளவில் அவன் மேல் சினமும் அடுத்து அடுத்துத் தோன்றின என்றவாறு. இராவணன் இருக்கும் வெற்பு இது ஆம் ஆம் எனும் நினைவினர், நெஞ்சினர் செங்கணர் ஆயினர் என இயையும். ஆம் ஆம் என்பது தெளிவு பற்றி வந்த அடுக்கு. அயில் கூறினமையால் ஏனைப் படைக் கலங்களும் இனம் பற்றிக் கொள்ளப்படும். நெஞ்சிற்கு ஓங்குதலாவது மகிழ்ச்சியால் கிளர்ச்சி பெறுதல். உவந்து உவந்து என்பது மகிழ்ச்சி மிகுதி யுணர்த்தவந்த அடுக்கு. உள்ளத்தில் இராவணன் கொடுமை நினைந்து எழுந்த சினங் காரணமாகக் கண்களில் சிவப்பும் கனற் பொறிகளும் உண்டாயின.

(16)

4643. இம்மலை காணுது மேழை மானையச்
செம்மலை நீக்குதுஞ் சிந்தைத் தீதென
விம்மலுற் றுவகையின் விளங்கு முள்ளத்தா
ரம்மலை யேறினு ரச்ச நீங்கினுர்.

'இம்மலை காணுதும், ஏழை மானை, அச்
செம்மலை நீக்குதும் சிந்தைத் தீது' என
விம்மல் உற்று உவகையின் விளங்கும் உள்ளத்தார்
அம்மலை ஏறினுர், அச்சம் நீங்கினுர்.

பொ :—இந்த மலையில் பேதையாகிய மான் போன்ற சீதையைக் காண்போம் ; (அங்ஙனம் கண்டு சென்று கூறி) இராமனுடைய மனத்திலுள்ள துன்பத்தை நீக்குவோம் என்று பூரிப்புக் கொண்டு மகிழ்ச்சியினுல் விளங்குகின்ற மனத்தையுடையவராய், அச்சம் நீங்கப் பெற்று அம்மலைமேல் ஏறினுர்கள்.

கு :—ஏழை மான் என்றது சீதையை. பேதைமைப் பண்பும் மான் போன்ற பார்வையும் உடையளாதல் பற்றி அங்ஙனம் கூறினுர். அச் செம்மல் என்றது கிட்கிந்தையிலுள்ள இராமனை. செம்மலது சிந்தைத் தீது நீக்குதும் என இயையும். செம்மலை என்றது வேற்றுமை மயக்கம். விம்மல் - உளம்பூரித்தல். இம்மலை மானைக் காணுதும் அதனுல் செம்மலின் சிந்தைத் தீது நீக்குதும் என்ற துணிவால் வானரர்க்கு உவகை மேலிட்டது. குறவருமருளுங் குன்றமாயினும் வானரர் அச்சம் நீங்கினராய் அம்மலை ஏறினுர் என அவர் வீரச் சிறப்பு விளக்கியவாறு. (17)

4644. இரிந்தன கரிகளும் யாளி யீட்டமும்
விரிந்தகோ ளரிகளும் வெருவி நீங்கின
திரிந்தன ரெங்கணுந் திருவைக் காண்கிலார்
பரிந்தன சிந்தனை பரிகின் றுமென.

இரிந்தன, கரிகளும், யாளி ஈட்டமும்
விரிந்த கோளரிகளும் வெருவி நீங்கின
திரிந்தனர், எங்கணும் திருவைக் காண்கிலார்,
பரிந்தன சிந்தனை பரிகின்றும் என.

பொ :—(வானரர்கள் மலையேறுவதுகண்டு) யானைகளும் யாளிகளின் கூட்டமும் அஞ்சி ஓடின ; பரந்த முகத்தையுடைய வலிய சிங்கங்களும் அஞ்சி (இருந்த இடத்தை விட்டு) நீங்கின; (இதுகாறும்

தேடிய) எவ்விடத்தும் சீதையைக் காணாதவர்களாகிய வானரர்கள் "நம் மனங்கள் விரைவதுபோல நாம் விரைகின்றோம்' என்று சொல்லிக் கொண்டு (அம்மலை முழுதும்) திரிந்தனர்.

கு :—யாளி என்பது சிங்கம் போன்ற தோற்றமுடையதாய்த் துதிக்கையுடன் விளங்கும் ஒரு விலங்கு. சிங்கத்தின் முகம் விரிந்திருப்பது நினைந்து 'விரிந்த கோளரி' என்றார். கோள் - வலிமை; கொல்லுந்தன்மை எனலும் ஆம். அரி - சிங்கம். காண்கிலார் வினைப் பெயர். காண்கிலார், பரிகின்றாம் எனத் திரிந்தனர். வானரர் தம் வேகத்திற்குத் தம் மனங்களையே, யுவமையாக்கி 'சிந்தனை பரிந்தன பரிகின்றாம்' என்றனர், மனோ வேகமாக விரைகின்றோம் என்று கூறிக்கொண்டே திரிந்தனர் என்க. இனி நம் சிந்தனையும் விரைகின்றன; நாமும் விரைகின்றோம் எனக் கூறலும் ஆம். வானரர்கள் மலையேறுங்கால் அம்மலை விலங்குகளின் நிலைமையும் அவ் வானரர்களின் வேகமும் இதனால் புலப்படுத்தியவாறு. திருஎன்றது திருமகளின் அமிசமாகிய சீதையை. (18)

## சீதையைக் காணாராய் இறங்குதல்

**4645.** ஐம்பதிற் றிரட்டி காவதத்தி னலகன்
றும்பரைத் தொடுவதொத் துயர்வி னோங்கிய
செம்பொனற் கிரியையோர் பகலிற் றேடினர்
கொம்பினைக் கண்டிலர் குப்புற் றேகினர்.

ஐம்பதிற்று இரட்டி காவதத்தினால் அகன்று
உம்பரைத் தொடுவது ஒத்து, உயர்வின் ஓங்கிய
செம்பொன் நல்கிரியை ஓர் பகலில் தேடினர்;
கொம்பினைக் கண்டிலர் குப்புற்று ஏகினர்.

பொ :—நூறு காவத அளவு பரப்புடையதாய் விண்ணுலகத்தைத் தொடுவது போன்று மிகவும் உயர்ந்துள்ள சிவந்த பொன்மயமான அழகிய அந்த ஏமகூட மலையை ஒரு பகற்காலத்திற்குள் விரைந்து தேடினர்கள்; பூங்கொம்பு போன்ற சீதையைக் கண்டிலர்; (ஆதலால் அம்மலையினின்று) இறங்கிச் செல்லலானர்கள்.

கு :—ஏமகூட மலையின் பரப்பு நூறு காவதம்; உயரம் விண்ணை எட்டுவது போன்றது என்க. உம்பர் என்றது விண்ணுலகத்தை. 'உம்பரைத் தொடுவதொத்து' என்றது தற்குறிப்பேற்றம். நூறு காவதப் பரப்புடைய மலையை வானரர்கள் தம் வேகத்தால் ஒரு பகலுக்குள் தேடி முடித்தார்கள் என்க. பலநாள் தேட வேண்டிய

மலையை ஒரு பகலில் தேடியது வியப்புடைச் செயல் என்றவாறு. கொம்பு உவமையாகு பெயராய்ச் சீதையை யுணர்த்தியது; பூங் கொம்பு போன்றவள் என்றவாறு. குப்புறுதல் - பாய்தல். மலையி னின்று இறங்குங்கால் பாய்ந்து செல்லுதலே இயல்பாதலின் 'குப்புற் றேகினர்' என்றார். (19)

அங்கதன் முதலியோர், சீதையைத் தேடுமாறு
சேனையைத் தனியே அனுப்புதல்

**4646.** வெள்ளமோ ரிரண்டென விரிந்த சேனையைத்
தெள்ளுநீ ருலகெலாந் திரிந்து தேடிநீர்
எள்ளரு மகேந்திரத் தெம்மிற் கூடுமென்
றுள்ளின ருயர்நெடு மோங்க னீங்கினர்.

வெள்ளம் ஓர் இரண்டு என விரிந்த சேனையைத்
'தெள்ளுநீர் உலகுஎலாம் திரிந்து தேடி நீர்
எள்அரும் மகேந்திரத்து எம்மில் கூடும்' என்று
உள்ளினர் உயர்நெடும் ஓங்கல் நீங்கினர்.

பொ:—(அங்கதன் முதலிய வானரத் தலைவர்கள்) இரண்டு வெள்ளம் என்று சொல்லுமாறு பரவியுள்ள தம் சேனையை (நோக்கி) 'நீங்கள் தெளிவான நீர் நிறைந்த தென்திசைப் பகுதி யெல்லாம் திரிந்து (சீதையைத்) தேடிப் பார்த்துவிட்டு குற்றம் இல்லாத மகேந்திர மலையில் எங்களோடு வந்து சேருங்கள்' என்று சங்கேதம் செய்துகொண்டவராய் அந்த உயர்ந்த நீண்ட ஏமகூட மலையை விட்டு நீங்கினர்கள்.

கு:—ஓரிரண்டு என்புழி 'ஓர்' பொருளின்றி வந்தது. சேனையை நோக்கி என ஒரு சொல் வருவிக்க. உலகு என்றது இங்குத் தென் திசைப் பகுதியை. நீர் கூடும் என்புழிக் கூடுமின் என்பது கூடும் எனத் திரிந்து நின்றதாகக் கொள்க; உள்ளினர் என்றது தமக்குள் சங்கேதம் செய்து கொண்டமையை. உள்ளி உரைத்தார் என வரு வித்து முடித்தலும் ஆம். ஓங்கல் - மலை; ஓங்கியிருத்தல் பற்றி மலைக்குக் காரணப் பெயர். குறித்த காலத்திற்குள் தென் திசை முழுவதையும் கூட்டமாகச் சென்று தேடுதல் அரிதாக இருத்தலின், பல பகுதிக ளாகப் பிரிந்து தேடினால் விரைந்து முடியும் என எண்ணி இவ்வாறு பிரித்து அனுப்பினர் என்க. (20)

அனுமன் முதலியோர் ஒரு சுரத்தை அடைதல்

4647. மாருதி முதலிய வயிரத் தோள்வயப்
போர்கெழு வீரரே குழுமிப் போகின்றூர்
நீரெனும் பெயருமந் நெறியி னீங்கலால்
சூரியன் வெருவுமோர் சுரத்தைத் துன்னிஞர்.

மாருதி முதலிய வயிரத் தோள் வயப்
போர்கெழு வீரரே குழுமிப் போகின்றூர் ;
நீர் எனும் பெயரும் அந் நெறியின் நீங்கலால்,
சூரியன் வெருவும் ஓர் சுரத்தைத் துன்னிஞர்.

பொ :—அனுமன் முதலிய உறுதி மிக்க தோள்களையுடைய வலிய போர்த்தொழில் பழகிய வீரரே ஒருங்குகூடிப் போகின்றவராய், தண்ணீர் என்ற பெயரும் அவ்வழியில் இல்லாது நீங்கியதால் வெம்மை செய்கின்ற சூரியனும் கண்டு அஞ்சுதற்குக் காரணமாய ஒரு பாலைவனத்தைச் சென்று சேர்ந்தார்கள்.

கு :—போகின்றூராய்த் துன்னிஞர் என்க. அங்கதன் தலைவனு யினும் அறிவும் திறமையும் பற்றி இங்கு மாருதி முதலிய வீரர் என்று அனுமனைச் சிறப்பித்தவாறு. வயிரம் இங்கு உறுதியை உணர்த் தியது. போர் கெழு வீரர் என்றது போரில் பழகிய வீரரை. சிறிதும் நீரில்லாத சுரம் என்பார், 'நீரெனும் பெயரும் அந் நெறியின் நீங்கலால்' என்றூர். சூரியனும் எனல் வேண்டும் உம்மை விகாரத் தால் தொக்கது. வெம்மை யுண்டாக்குகின்ற சூரியனும் கண்டு அஞ்சும் சுரம் என அச்சுரத்தின் வெம்மையைச் சிறப்பித்தவாறு. 'விடியுமேல் வெயிலும் வேம்' (தாடகை - 6) 'சூரியன் தேரு மோடாது' (தாடகை - 9) என்பன இங்கு ஒப்புநோக்கத்தகும். (21)

சுரத்தின் வெம்மை

4648. புள்ளடை யாவிலங் கரிது புல்லொடும்
கள்ளுடை மரனில கல்லுந் தீந்துகு
முள்ளிடை யாவுநுண் பொடியொ டோடிய
வெள்ளிடை யல்லதொன் றரிதவ் வெஞ்சுரம்.

புள் அடையா ; விலங்கு அரிய ; புல்லொடும்
கள் உடை மரன் இல ; கல்லும் தீந்து உகும் ;
உள்ளிடை யாவும் நுண்பொடியொடு ஓடிய
வெள்ளிடை அல்லது ஒன்று அரிது—அவ்வெஞ்சுரம்.

பொ :—அந்த வெம்மை மிக்க பாலைவனத்தில் பறவைகள் வந்து தங்க மாட்டா; ஒரு விலங்கும் அங்கு வாழ்தல் அரிதாகும்; புல்லும் தேனையுடைய மரங்களும் அங்கு இல்லை; அங்குள்ள கற்களும் தீய்ந்து பொடியாகும்; அவ்வனத்து உள்ளிடத்துள்ள யாவும் நுண்ணிய பொடியாக மாறி ஓடிய பின் உள்ள வெற்றிடம் அல்லது வேறு ஒரு பொருள் காண்டல் அரிதாகும்.

கு :—ஓரறிவுயிராகிய புல் மரம் முதலியனவும் ஐயறிவுடைய விலங்கும் பறவையும் அங்குத் தோன்றுதலும் வாழ்தலும் இல்லை என்க. அங்குள்ள கற்களும் வெப்பத்தால் தீந்து இயல்பு மாறிப் பொடியாகும் என்பார், கல்லுந் தீந்துகும் என்றார். அவ்விடம் பாலைவனமாதற்கு முன் அதற்குள்ளிருந்த பொருள்கள் யாவும் வெந்து பொடியாம் தன்மை பெற்று ஓடி விட்டமையால் அங்கு வெற்றிடம் அல்லது பிறிதொரு பொருளைக் காண்டல் அரிதாயிற்று. பொடியொடு ஓடிய - பொடியாம் தன்மையோடு ஓடிய. ஓடிய வெள்ளிடை என்றது எல்லைப் பொருளில் வந்த பெயரெச்சம்; பழம் உதிர்ந்த கோடு; குடிபோன ஊர்; என்பனபோல. வெள்ளிடை - வெற்றிடம். பாலைவனத்தில் முன்னுள்ள பொருள்கள் யாவும் தீந்து பொடியாக மாறி ஓடிவிட்டமையால் அங்கு ஒரு பொருளும் காணப் படவில்லை; வெற்றிடமே காணப்படுகின்றது என்றவாறு. (22)

## சுரத்தில் வானரர் படும் அல்லல் 4649, 4650

**4649.** நன்புல னடுக்குற வுணர்வு நாமுறப்
பொன்பொலி யாக்கைகள் புழுங்கிப் பொங்குவார்
தென்புலந் தங்கெரி நரகிற் சிந்திய
வென்பில்பல் லுயிரென வெம்மை யெய்தினர்.

நன்புலன் நடுக்குற உணர்வு நாம் உறப்,
பொன்பொலி யாக்கைகள் புழுங்கிப் பொங்குவார்,
தென்புலம் தங்கு எரி நரகில் சிந்திய
என்பு இல்பல் உயிர் என வெம்மை எய்தினர்.

பொ :—(அங்குச் சென்ற வானர வீரர்கள் தமது) நல்ல ஐம் பொறிகளும் நடுங்கவும், உணர்வு அச்சம் அடையவும், பொன்போல் விளங்குகின்ற தம் உடம்புகள் வேர்க்கப் பெற்றுத் துடிப்பவராய், தென்திசையில் இருக்கின்ற எரியும் தன்மையுள்ள நரகத்தில் வீழ்ந்த என்பு இல்லாத உடம்பையுடைய பல புழுக்களைப் போல வெப்ப முற்றார்கள்.

கு :—புலன் என்பது மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளை. வானரர்களின் பொறிகள் கோளில் பொறியல்ல என்பார், நன்புலன் எனச் சிறப்பித்தார்; தத்தம் புலன்களைக் கொள்ளுந் தன்மையுடைய பொறிகள் என்றவாறு. அத்தகைய நன்புலன்களும் அந்தச் சுரத்தின் வெம்மையால் நடுக்கமுற்றன என்க. உணர்வு என்றது மனவுணர்வினை. நாம் - அச்சம். மனவுணர்வு அஞ்ச என்க. புழுங்கி என்ற செய்து என் எச்சம் பொங்குவார் என்ற முதல் வினை கொண்டது. வானர வீரர்களின் யாக்கை அவர்தம் சினையாகக் கருதப்படும். பொங்குதலாவது துடிதுடித்தல். வானரர்கள் நெருப்பில் வீழ்ந்த புழுப்போலப் பாலைவனத்தில் அகப்பட்டுக் கொண்டு துடித்தார்கள் என்றவாறு. எரியில் சிறந்தது காட்ட எரிநரகு கூறினார். என்பு இல்லாத உயிர் என்றது புழுவை. "என்பிலதனை வெயில் போலக் காயுமே, யன்பிலதனை யறம்" (திருக்குறள் - 77) என்பது காண்க. எரிநரகு என்றது நெருப்பையுடைய தப்தகும்பம், கும்பீபாகம் போன்றவற்றை. 'எரிவாய் நிரயம்' (நாலடி - 58) என்றே பெயர் கூறியிருத்தலும் காண்க. தென்திசை எமன் திசையாதலின் அவன் ஆட்சிக்குட்பட்ட நரகினைத் 'தென்புலந் தங் கெரிநரகு' என்றார். சிந்திய என்பது வீழ்தல் என்னும் கருத்தினது. என்பில் பல்லுயிர் என்றார் வானரர் பலர்க்கும் உவமையாக வேண்டி. எரிநரகில் வீழ்ந்த புழுக்களை யுவமை கூறியதனால், வானரர்கள் பாலைவனத்திலுற்ற பெருந்துயர் புலனும். (23)

**4550.** நீட்டிய நாவினர் நிலத்தில் தீண்டுதோ
றூட்டிய வெம்மையா லுலையுங் காலினர்
காட்டினுங் காய்ந்துதங் காயந் தீதலால்
சூட்டகன் மேலெழு பொரியிற் றுள்ளினர்.

நீட்டிய நாவினர்; நிலத்தில் தீண்டு தோறு
ஊட்டிய வெம்மையால் உலையுங் காலினர்;
காட்டினும் காய்ந்து தம் காயம் தீதலால்,
சூட்டு அகல்மேல் எழு பொரியின் துள்ளினர்.

பொ :—(பின்னும் அவர்கள் நீர் வேட்கையால்) வெளியில் நீட்டிய நாக்கினை யுடையவர்களாய், தரையில் அடிவைக்குந்தோறும் அத் தரைதந்த வெப்பத்தால் கொப்புளித்து வருந்தும் காலினராய், தம் உடம்பு அந்தப் பாலைவனத்தினும் மிகுதியாக வெப்பம் அடைந்து தீந்து போனதால், சூடேறிய சட்டியிலிருந்து மேலெழுகின்ற நெற்பொரிபோலத் துடித்துத் துள்ளினர்கள்.

கு :—பாலைவனத்தில் வானரர் உடம்பில் ஏற்பட்ட மெய்ப்பாடு புலப்படுத்தியவாறு. வறட்சி மிகுதியால் நாக்கை வெளியில் நீட்டு தலும், தரை வெப்பம் தாங்காது காலடி கொப்புளித்தலும், அவ் வெப்பம் தாங்காமல் துள்ளுதலும் இயல்பு. வானரர் தரையினும் மென்மையராதலின் காட்டினும் அவர் காயம் காய்ந்து தீந்ததாகக் கூறினர். காடு என்றது பாலைவனத்தை. காயம் - உடம்பு. அகல் - சட்டி. பாலைவனத்தின் வெம்மையாற்றாது மேலெழுந்து துள்ளும் வானரர்க்கு நெருப்பினால் சூடேறிய சட்டியில் வறுக்கும் நெற்பொரி மேல் எழுந்து சிதறுதல் உவமை. நாவினராய், காலினராய்த் துள்ளினர் என இயையும். (24)

## வானரர் பிலத்தில் புகுதல் 4651-4653

**4651.** ஒதுங்கலா நிழலிறை காண்கி லாதுயிர்
பிதுங்கலா முடலினர் முடிவில் பீழையார்
பதங்கடீப் பருகிடப் பதைக்கின் றார்பல
விதங்களா னெடும்பில வழியின் மேவினார்.

ஒதுங்கல் ஆம் நிழல் இறை காண்கிலாது உயிர்
பிதுங்கல் ஆம் உடலினர், முடிவில் பீழையார்,
பதங்கள் தீப்பருகிடப் பதைக்கின்றார் பல
விதங்களால், நெடும்பில வழியின் மேவினார்.

பொ :—(வானர வீரர்கள் வெப்பம் நீங்க) ஒதுங்குதற்குரிய நிழல் சிறிதும் காணப் பெருமையால் உயிர் வெளிப்படத்தக்க; (நீங்கத்தக்க) உடம்பையுடையவர்களும், முடிவு காண முடியாத துன்பத்தையுடைய வர்களும், பாதங்களில் அந்நிலத்தின் வெப்பம் தாக்குதலால் பதைக் கின்றவர்களும் ஆய், பலவிதத் துன்பங்களால் வருந்தி (அத்துன் பங்கள் நீங்க) நீண்ட பிலத்துவாரத்தின் வழியை அடைந்தார்கள்.

கு :—இறை - சிறிது. உயிர் பிதுங்கலாம் உடலினர் என்றது உயிர் நீங்குதற்கு ஏற்ற துன்ப உடம்பினர் என்றவாறு. பீழை - துன்பம். பாலைவனத்து வெப்பத்தைப் பாதங்கள் ஏன்று கொள்ளும் நிலையை நினைந்து பதங்கள் தீப்பருகிட என்றார். இது சமாதி அணி. தரையின் வெப்பம் பாதங்களைத் தாக்க என்பதே கருத்து. பலவிதத் துன்பங்களால் பிலத்தில் நுழைய வேண்டியதாயிற்று என்க. பிலவழியில் செல்லவேண்டும் என்ற விருப்பம் வானரர்க்கு இல்லா திருந்தும் பாலைவனத்தில் அவர்கட்கு நேர்ந்த பலவகைத் துன் பங்கள் காரணமாக அப்பிலத்தில் நுழையவேண்டியதாயிற்று என்ற வாறு. (25)

4652. மீச்செல வரிதினி விளியி னல்லது
தீச்செல வொழியவுந் தடுக்குந் திண்பில
வாய்ச்செல னன்றென மனத்தி னெண்ணினர்
போய்ச்சில வறிதுமென் றதனிற் புக்கனர்.

'மீச் செலவு அரிது: இனி விளியின் அல்லது;
தீச் செலவு ஒழியவும் தடுக்கும் திண் பில
வாய்ச் செலல் நன்று' என மனத்தின் எண்ணினர்;
'போய்ச் சில அறிதும்' என்று, அதனில் புக்கனர்.

பொ :—இனிமேல் (இப்பாலைவனத்தில்) இறப்பதல்லாமல் இவ்விடத்திற்கு அப்பால் செல்லுதல் அரிதாகும்; (ஆதலால்) இப்பாலைவனமாகிய தீயில் செல்லுதலை நாம் மேற்கொள்ளாது ஒழியவும் தடுத்தற்குரியதாகிய திண்மையுடைய இந்தப் பிலவழியில் செல்லுதலே நன்று' என்று மனத்தில் எண்ணினர்கள் ; (எண்ணியவாறே) சிறிது போய்ப் பார்ப்போம் என்று அப்பிலத்தில் புகுந்தார்கள்.

கு :—வானரர்கள் வெப்பத்தால் துன்புறுகின்ற இடத்திற்கு அப்பால் செல்லுதல் இறத்தற்கு ஏதுவாகும் என்பார், 'மீச்செல வரிதினி விளியினல்லது' என்றார். மீ என்பது அப்பால் என்ற பொருளது. இனி பாலைவனத் தரைப் பரப்பின்மேல் எனப் பொருள் கூறலும் ஆம். பிலம் இப்பொழுது நமக்குப் புகலிடமாய் உதவுவதேயன்றிப் பிறிதொரு வழியாய் நின்று இத்தீச்செலவை நாம் ஒழியவும் தடுக்கும் தன்மையது என்று பொருள் படுதலின் செலவு ஒழியவும் என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மையாம். தீ என்றது தீப்போன்ற வெப்பமுடைய பாலைவன வழியை; உவமையாகுபெயர். சில என்பது சிறிது என்னும் பொருளது. சிறிதுபோய் அறிதும் என்க. எண்ணினவர் எண்ணியாங்கே செய்தனர் என்பார், எண்ணினர் அதனில் புக்கனர் என்றார். பிலவழி மென்னிலமாக இருப்பின் அதில் நுழைவது கேடு தரும் ; இது திண்பில மாதலின் நுழையத்தக்கதே என்பார், 'திண்பிலவாய்' எனச் சிறப்பித்தார். பிலம் இருண்டிருத்தலின் அதன் இயல்பு முற்றும் அறிதல் கூடாமையின் சிறிது போய்ப் பார்ப்போம் என்று துணிந்து புகுந்தார் என்க. (26

4653. அக்கணத் தப்பிலத் தகணி யெய்தினர்
திக்கினே டுலகுறச் செறிந்த தேங்கிரு

ளெக்கிய கதிரவற் கஞ்சி யேமுறப்
புக்கதே யனையதோர் புரைபுக் கெய்தினர்.

அக்கணத்து அப் பிலத்து அகணி எய்தினர்
திக்கினோடு உலகுஉறச் செறிந்த தேங்கு இருள்
எக்கிய கதிரவற்கு அஞ்சி ஏமுறப்
புக்கதே அனையது ஓர் புரை புக்கு எய்தினர்.

பொ :—(வானரவீரர்கள்) அந்தக் கணத்தில் அப்பிலத்தின் உள்ளிடத்தை அடைந்தவர்களாய் - எட்டுத் திக்கோடு இவ்வுலகத்து நெருங்கியுள்ள பேரிருள், தன்மேல் வீசுகின்ற ஒளிக்கதிர்களையுடைய சூரியனுக்கு அஞ்சிப் பாதுகாப்புப் பொருந்த அங்குப் புகுந்தது போன்று இருள் நிறைந்து தோன்றும் ஒரு குகையில் புகுந்து சென்றார்கள்.

கு :—அகணி - உள்ளிடம். எக்குதல் – வீசுதல். ஒளிக் கதிர்களால் தன்னை அழிப்பதற்கு வீசுகின்ற கதிரவன் புகமுடியாத இடம் பார்த்து உலகெலாம் செறிந்த இருள் புக்கது போன்று தோன்றும் இருள் செறிந்த குகை என்றது தற்குறிப்பேற்றம். "தூங்கிருள் வெய்யோற் கொதுங்கிப் புக்கிருந்தா லன்ன பொழில்" (நள வெண்பா - 24) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். ஏமம் - காப்பு; ஏம் எனக் குறைந்தது விகாரம். புரை - இடம்; இங்குக் குகையையுணர்த்தியது. உலகெலாம் செறிந்த இருள் ஒருவழித் தொக்காற் போன்று செறிவு மிக்க இருளையுடைய குகை என அங்குள்ள இருள் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. (27)

## வானரர் இருளில் வருந்துதல்

4654. எழுகிலர் காலெடுத் தேகு மெண்ணிலர்
வழியுள தாமெனு முணர்வு மாற்றினர்
இழுகிய நெய்யெனு மிருட்பி ழம்பினுள்
முழுகிய மெய்யரா யுயிர்ப்பு முட்டினர்.

எழுகிலர்; கால் எடுத்து ஏகும் எண்ணிலர்;
வழி உளது ஆம் எனும் உணர்வு மாற்றினர்,
இழுகிய நெய் எனும் இருள் பிழம்பினுள்,
முழுகிய மெய்யர் ஆய், உயிர்ப்பு முட்டினர்.

பொ:—(அவ்வானரர்கள் அவ்விடத்தைவிடுத்து அப்பாற் செல்ல) எழுதற்கு வலிமை யில்லாதவராய், அடியெடுத்து வைத்து நடக்கும்

எண்ணமும் இல்லாதவராய், அப்பாற் செல்ல வழி உள்ளது என்கின்ற உணர்வையும் மாற்றிக் கொண்டவராய் உறைந்த நெய் போன்ற இருளின் தொகுதியில் முழுகிய உடம்பை யுடையராய் மூச்சுத் தடுமாறினுர்கள்.

கு :—பிலத்துள் உள்ள இருட்குகையில் அகப்பட்டுக் கொண்டமையால் ஒரு செயலும் செய்ய வியலாதவராய் மூச்சு விடவும் முடியாமல் வானரர்கள் தவித்தார்கள் என்றவாறு. பிலவாயில் நுழையும் போது வழியுளதாம் என எண்ணிப் புகுந்தவர்கள் இப்போது இருட்பிழம்பில் அகப்பட்டுக் கொண்ட வருத்தத்தால் அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டார்கள்; வழி இல்லை என்று முடிவு செய்தார்கள் என்றவாறு. இழுகுதல் - உறைதல். இருட் பிழம்பின் செறிவு புலப்பட 'இழுகிய நெய் எனும் இருட் பிழம்பு' என்ருர்; உறைந்த நெய் போன்ற இருட் பிழம்பினுள் முழுகியதால் உயிர்ப்பு முட்டுவதாயிற்று. (28)

## வானரர் தம்மைக் காக்குமாறு அனுமனை வேண்டல்

**4655.** நின்றனர் செய்வதோர் நிலைமை யோர்கிலர்
பொன்றினம் யாமெனப் பொருமு புந்தியர்
வன்றிறன் மாருதி வல்லையோ வெமை
யின்றிது காக்கவென் றிரந்து கூறினர்.

நின்றனர், செய்வது ஓர் நிலைமை ஓர்கிலர்,
பொன்றினம்யாம் எனப் பொருமு புந்தியார்,
'வன்திறல் மாருதி! வல்லையோ எமை
இன்று இது காக்க?' என்று இரந்து கூறினர்;

பொ :—தாம் செய்யத் தக்கதொரு செயல் ஏதும் அறியாதவராய்த் திகைத்து நின்றவர்களும், 'நாம் இறந்தோம் என்று எண்ணி வருந்துகின்ற மனமுடையவருமாய் - (அனுமனை நோக்கி) மிக்க வலிமையுடைய அனுமனே! இப்பொழுது இந்தத் துன்பத்திலிருந்து எங்களைக் காக்க வல்லமையுடையையோ? என்று வேண்டிக் கொண்டனர்.

கு :—வல்லையேல் காக்க என்பதே கருத்து. செயற்கரிய செயல் செய்யும் அனுமனுலும் இத்துன்பத்தினின்று காக்க இயலுமோ என்ற ஐயமுடையராதலின் 'காக்கவல்லையோ?' என வினவினர். இருளில் சிக்கி மீளமுடியாத நிலையில் இனி உய்தி இல்லை என்ற முடிபு கொண்டு 'பொன்றினம் யாம்' எனப் பொருமுவாராயினர். பொரு

முதல் - வருந்துதல். இரந்து கூறுதலாவது வேண்டிக் கொள்ளுதல். அனுமனின் ஆற்றல் தோன்ற 'வன்றிறல் மாருதி!' என விளித்த வாறு. காக்க வல்லையோ என இயையும். இனி, வல்லையோ? வல்லையாயின் எமை இன்று இது காக்க எனக் கூறலும் ஆம். (29)

4656. உய்வுறுத் துவென்மன முலையி ரூழின்வால்
மெய்யுறப் பற்றுதிர் விடுகி லீரென
ஐயனக் கணத்தினி லகலு நீணெறி
கையினிற் றடவிவெங் காலி னேகினன்.

'உய்வுறுத்துவென், மனம் உலையிர்; ஊழின் வாய்
மெய்யுறப் பற்றுதிர்; விடுகிலீர்' என
ஐயன் அக்கணத்தினில் அகலும் நீள்நெறி
கையினில் தடவி வெங்காலின் ஏகினன்.

பொ:—அந்தக் கணத்தில் அனுமன், (மற்றவர்களைப் பார்த்து) 'உங்களை உய்யுமாறு செய்வேன்; நீங்கள் வருந்தாதீர்கள்; முறையாக வாலின் பகுதியை அழுத்தமாகப் பற்றிக் கொள்ளுங்கள்; விடாதீர்கள்' எனக் கூறிக்கொண்டே அந்த விசாலமான நீண்ட வழியைக் கையால் தடவிக்கொண்டு வேகத்தையுடைய காலினல் நடந்து முன்னே போனன்.

கு:—ஐயன் என்றது அனுமனை. அக் கணத்தினில் ஐயன், உய்வுறுத்துவென் உலையிர் வால் உறப்பற்றுதிர், விடுகிலீர் என நெறி கையில் தடவிக் காலின் ஏகினன் என இயையும். உலையலீர் என்பது உலையிர் என மருவிற்று. வாலும் உடம்பின் பகுதியே யாதலின் வால் மெய் எனப்பட்டது. வாலின் பகுதி என்றவாறு. உறப்பற்றுதல், அழுந்தப்பற்றுதல். மற்றவர்கள் தன் வாலினைப் பற்றினலன்றி அவர்களை உய்வித்தல் இயலாதாகலின் 'பற்றுதிர்' என உடன்பாட்டாலும் விடுகிலீர் என எதிர்மறையாலும் கூறியவாறு. இருள் செறிந்த நெறியாகலின் கையால் தடவாமல் காலில் நடந்தால் ஊறு உண்டாதல் நினைந்து 'கையினிற்றடவி வெங் காலின் ஏகினன்' என்ருர். இதில் முரண்தொடை அமைந்துள்ளமை காண்க. வேகமாகச் செல்லுங் கால் ஆதலின், 'வெங்கால்' எனச் சிறப்பித்தவாறு. இனிக் கடுங்காற்றுப் போல விரைந்து சென்ருன் எனலுமாம். நமை யுய்வுறுத்த இயலாதா என ஐயுற்று மனம் வருந்தல் வேண்டா என்றவாறு. இருள் கடக்க இருக்கும் வழியின் இயல்பை விளக்க 'அகலும் நீள்நெறி' என்ருர். (30)

4657. பன்னிரண் டியோசனை
படர்ந்த மெய்யினன்
மின்னிரண் டனையகுண்
டலங்கள் வில்லிடத்
துன்னிரு டொலைந்திடத்
துரிதத் தேகினன்
பொன்னெடுங் கிரிகள்போற்
பொலிந்த தோளினன்.

பன்னிரண்டு யோசனை படர்ந்த மெய்யினன்,
மின் இரண்டு அனைய குண்டலங்கள் வில் இடத்,
துன் இருள் தொலைந்திடத் துரிதத்து ஏகினன்-
பொன் நெடுங் கிரிகள் போல் பொலிந்த தோளினன்.

பொ :—பொன்மயமான நீண்ட மலைகளைப் போல விளங்கும் தோள்களையுடையவனான அனுமன், பன்னிரண்டு யோசனை தொலைவு பரவிய உடம்பை யுடையவனாய், மின்னற்கொடி இரண்டு விளங்கினாற் போன்று விளங்கும் (காதில் அணிந்த) குண்டலங்கள் ஒளி வீசுதலால் அங்கு நெருங்கியிருந்த இருள் நீங்க விரைவாகச் சென்றான்.

கு :—பன்னிரண்டு யோசனை தொலைவு பரவிய உடம்பையுடைய வனாய் அனுமன் வளர்ந்தவுடன் அவன் குண்டலங்களும் பெரிய வாய் ஒளி வீசுதலால் அப்பிலத்துள்ள இருள் நீங்கியது; இருள் நீங்கியவுடன் விரைந்து செல்லலாயினன் என்க. குண்டலங்கள் இரண்டாதலின் மின் இரண்டனைய குண்டலம் என்றார். வில் - ஒளி. வில்லிடலால் இருள் தொலைந்திடவே துரிதத்து ஏகினன் என்க. துரிதம் - விரைவு. பொன்னெடுங்கிரி என்றது மேருமலை யெனக் கொண்டு கிரிகள் போல் என்பதை இல்பொருள் உவமையாக்கலும் ஆம். அனுமன் பேருருவத்தில் குண்டலம் வில் வீசும் நிகழ்ச்சியை,- "கண்டிலனுலக மூன்றுங் காலினாற் கடந்து கொண்ட புண்டரிகக் கணழிப் புரவலன் பொலங்கொள் சோதிக் குண்டல வதனமென்றால்" (அனுமப் - 35) என்புழியும் விளக்கியுள்ளமை காணலாம். (31)

## வானரர் அங்கு ஒரு நகரைக் காணுதல்

4658. கண்டனர் கடிநகர் கமலத் தொண்கதிர்
மண்டல மறைந்துறைந் தனைய மாண்பது

விண்டல நாணுற விளங்கு கின்றது
புண்டரி கத்தவள் வதனம் போன்றது.

கண்டனர், கடிநகர், கமலத்து ஒண்கதிர்
மண்டலம் மறைந்து உறைந்தனைய மாண்பது;
விண்தலம் நாணுற விளங்குகின்றது;
புண்டரிகத்தவள் வதனம் போன்றது.

பொ :—(அனுமன் முதலியோர் அப்பிலத்தினுள்) விளக்கம் பொருந்திய நகரம் இருப்பதைக் கண்டார்கள்; (அது) தாமரை மொட்டுக்குள் ஒளி வாய்ந்த கதிர்களையுடைய சூரிய மண்டலம் மறைந்து தங்கி யிருந்தாற் போன்ற சிறப்பினையுடையது; விண்ணுலகம் வெட்கப்படுமாறு (பொன் மயமாய்) விளங்கும் தன்மையது; தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளின் முகம் போல அழகுடன் பொலிவது.

கு :—கடி - விளக்கம். இருள் நிறைந்த பிலக்குகைக்குள் விளங்குகின்ற ஒளி நகரத்திற்குத் தாமரை முகைக்குள் மறைந்துறையும் சூரியனை இல்பொருள் உவமையாகக் கூறினர். இதனால் அந்நகரின் ஒளியுடைமை புலப்படுத்தியவாறு. அந்நகரம் செல்வச் சிறப்புடைமையாலும் பொன் மயமாக விளங்குதலாலும் விண்ணுலகத்தினும் சிறப்புடையதாயிற்று. பொலிவினால் திருமகள் முகம் போன்று அழகு மிக்கதாக வுள்ளது என்க. (32)

### அந் நகரின் சிறப்பு 4659-68

**4659.** கற்பகக் கானது கமலக் காடது
பொற்பெருங் கோபுரப் புரிசை புக்கது
அற்புத மமரரு மெய்த லாவது
சிற்பியா மயன்மனம் வருந்திச் செய்தது.

கற்பகக் கானது; கமலக் காடது;
பொன் பெருங் கோபுரப் புரிசை புக்கது;
அற்புதம் அமரரும் எய்தலாவது;
சிற்பியாம் மயன் மனம் வருந்திச் செய்தது.

பொ :—(அந்நகரம்) கற்பகச் சோலை போன்ற (பொன் மயமான) மரங்களின் செறிவை யுடையது. தாமரை மலர்களின் மிகுதியை யுடையது; பொன் மயமான பெரிய கோபுரங்களையுடைய மதிலுக்குள்

இருப்பது; தேவர்களும் (கண்டு) வியப்படையத் தகுவது; அசுரச் சிற்பியாகிய மயன் தன் மனத்தினால் முயன்று எண்ணி அமைத்தது.

கு:—மேலைச் செய்யுளில் உள்ள 'கடிநகர்' என்பதே இச் செய்யுளுக்கும் எழுவாயாகும். கற்பக மரங்களைப் போன்ற பொன் மயமான மரங்களின் செறிவு அங்குக் காணப்படுதலின் 'கற்பகக் கானது' என்றார். நீரில்வழித் தோன்றாத கமலக் காடு கூறியதால் நீர் நிலைகள் அங்கு நிறைந்துள்ளமை புலப்படுத்தியவாறு. தாமரைப் பொய்கைகள் மிக்குள்ளன என்றவாறு. நகரத்தைச் சுற்றி மதிலும் நாற்றிசையிலும் நான்கு கோபுரங்களும் இருத்தல் சிறந்த நகரங் களுக்கு இலக்கணமாதலின் 'கோபுரப் புரிசை புக்கது' என்றார். கோபுரங்களோடு கூடிய மதிலினுள் இருப்பது என்க. புகுதல் என்பது இங்கு உள்ளிடத்துத் தங்கியிருத்தலை யுணர்த்தியது. எல்லா வகையானும் சிறந்த பொன்னுலகத்துள்ள தேவர்கள் வியக்கத் தகுவது என்றமையால் இந்நகரம் பொன்னகரினும் சிறந்து தோன் றினமை புலப்படுத்தியவாறு. அற்புதம் - வியப்பு. மயன் என்பவன் அசுரர் தச்சன். பலநாள் மனத்தால் நினைத்து அவ் அழகிய நகரத்தை யுண்டாக்கினான் என்பது தோன்ற 'மயன் மனம் வருந்திச் செய்தது' என்றார். இதனால் அந்நகரின் எழில் மிகுதி புலப்படும். வருத்தம் - முயற்சி. 'ஆற்றின் வருந்தா வருத்தம்' (குறள் - 468) என்புழியும் அப் பொருளதாதல் காணலாம். (33)

**4660.** இந்திர நகரமு மிணையி லாதது
மந்திர மணியினிற் பொன்னின் மண்ணினி
லந்தரத் தெழுசுட ரவையின் றாயினு
முந்தரு மிருடுரந் தொளிர நிற்பது.

இந்திர நகரமும் இணை இலாதது;
மந்திர மணியினின் பொன்னின், மண்ணினில்
அந்தரத்து எழுசுடர் அவை இன்று ஆயினும்,
உந்தரும் இருள் துரந்து ஒளிர நிற்பது.

பொ:—இந்திரனுடைய அமராவதி என்னும் பொன் நகரமும் (தனக்கு) ஒப்பாக மாட்டாத தகுதி மிக்கது; (அப்பிலத்தில்) தரையில் உள்ளவாறு போல இருளை ஒட்டிக்கொண்டு விண்ணில் எழுகின்ற ஞாயிறு திங்கள் என்கின்ற ஒளி மண்டலங்கள் இல்லையாயினும், போக்குதற்கு அரிய பேரிருளை அங்குள்ள மாளிகைகளில் பதித் துள்ள நவமணிகளின் ஒளியாலும் வேய்ந்துள்ள பொன்னின் ஒளி யாலும் போக்கி விளங்கி நிற்பது.

கு :—இந்திர நகரம் என்றது அமராவதியை. 'அற்புதம் அமரரும் எய்தலாவது' என மேற்கூறியவர் இங்கு அவ் வற்புதத் திற்குக் காரணம் காட்டுவாராய் 'இந்திர நகரமு மிணையிலாதது' என்றார். இந் நகரம் இந்திரன் நகரத்தினும் சிறந்து காணப்பட்ட மையால் அமரரும் அற்புதம் எய்தலாயினர் என்றவாறு. மணியினின் பொன்னின் என்புழி இன் ஏதுப் பொருளன. மண்ணினில் என்புழி இல் உவமப் பொருளது. இருளைப் போக்கி ஒளியை யுண்டாக்கும் சூரிய சந்திரர்கள் தரைமேல் விண்ணில் எழுவதுபோல அப்பிலத்தில் எழுதல் இல்லாமற் போயினும், அங்குள்ள மாளிகைகளே தம்பால் உள்ள மணி ஒளியாலும் பொன்னொளியாலும் இருளைப் போக்கி விளக்கந்தந்து நிற்கின்றன என்றவாறு. இதனால் அந் நகரின் ஒளி மிகுதி புலப்படுத்தியவாறு. மந்திரம் - மாளிகை. சுடரவை என்புழி அவை பகுதிப்பொருள் விகுதி. உந்த அரும் என்பது அகரம் தொக்கு 'உந்தரும்' என நின்றது. உந்தல் - தள்ளல்; போக்குதல் துரத்தல் - போக்குதல்; ஓட்டுதல். (34)

**4661.** புவிபுகழ் சென்னிபே ரமலன் றோள்புகழ
கவிகட மனையெனக் கனக ராசியும்
சவியுடைத் தூசுமென் சாந்து மாலையு
மவிரிழைக் குப்பையு மளவி லாதது.

புவிபுகழ் சென்னி பேர் அமலன் தோள்புகழ்
கவிகள்தம் மனை எனக் கனக ராசியும்
சவியுடைத் தூசும் மென் சாந்தும் மாலையும்
அவிர் இழைக் குப்பையும் அளவு இலாதது.

பொ :—(மேலும் அந் நகரம்,) உலகத்தவரால் புகழப்படுகின்ற சோழன் ஆகிய அமலன் என்ற பெயர்க்குரியவனின் தோளைப் புகழ் கின்ற புலவர்களுடைய வீடு போலப் பொற்குவியலும் ஒளியுடைய பட்டாடைகளும் மென்மையான சந்தனமும் பூ மாலைகளும் விளக்க முடைய அணிகலன்களின் குவியலும் அளவில்லாமல் நிறையப் பெற்றது.

கு :—கம்பர் தம்மை யாதரித்த சோழனுடைய கொடைப் புகழை இப் பாடலில் விளக்கியுள்ளார் என்பர். சென்னி - சோழன்; இது பொதுப் பெயர். அமலன் என்பது கம்பர் காலத்திருந்த சோழ னுக்குச் சிறப்புப் பெயராய் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். அமலன் என்ற சிறப்புப் பெயருடைய சோழன் யாவன் என்பது தெளிவாக வில்லை. உத்தம சோழன் என்பதின் பரியாயப் பெயரே 'அமலன்'

என்பது எனக் காலஞ்சென்ற திரு. சதாசிவ பண்டாரத்தார் எழுதியுள்ளார்கள். அச்சோழன் தன் வீரத் தோள்களைப் புகழ்கின்ற விழுமிய புலவர்களுக்கு அளவிலாத பொற்றிரளையும் பட்டாடைகளையும் ஒளிமிக்க அணிகலன்களையும் வண்ணச் சந்தனத்தையும் வாச மலர் மாலைகளையும் கொடுக்கின்றமையால் அப்புலவர்களின் வீடுகளில் பொற்றிரள் முதலியன அளவிலாதிருந்தன என்பதும் அப்புலவர்களின் வீடுகள் போல இந் நகரத்திலும் பொற்றிரள் முதலியன அளவில்லாமல் இருக்கின்றன என்பதும் புலப்படுத்திய வாறு. இதனுல் கம்பரின் செய்நன்றி மறவாத பண்பு புலனும். கவிகள் - புலவர்கள். சவி - ஒளி. தூசு - ஆடை. சாந்து-சந்தனம். அவிர்தல் - விளங்குதல். இழை - அணிகலன். குப்பை - குவியல். (35)

4662. பயில்குரற் கிண்கிணி பதத்த பாவைய
ரியல்புடை மைந்தர்க ளியக்கி லாமையால்
துயிலவு நோக்கவுந் துணைய தன்றியே
யுயிரிலா வோவிய மென்ன வொப்பது.

பயில்குரல் கிண்கிணி பதத்த பாவையர்,
இயல்புடை மைந்தர்கள், இயக்கு இலாமையால்,
துயிலவும் நோக்கவும் துணையது அன்றியே
உயிர்இலா ஓவியம் என்ன ஒப்பது.

பொ :—(மேலும் அந்நகரம்) ஒலிக்கின்ற கிண்கிணி பொருந்திய பாதங்களையுடைய பெண்டிரும், நல்ல இயல்புடைய ஆடவரும் போக்குவரவு செய்தல் அங்கு இல்லாமையால் (மக்கள்) தங்கி இன்புறவும், பார்த்து இன்புறவும் தகுதியற்றதாய், உயிர் இல்லாத ஓவியம் போன்றது என்று சொல்லத்தக்கதாக உள்ளது.

கு :—கிண்கிணி பயில் பதம் என இயையும். கிண்கிணி - காலணி; ஒலி பற்றி வந்த காரணப் பெயர். பாவை போன்ற எழிலுடைய பெண்டிர் 'பாவையர்' எனப்பட்டனர்; உவமையாகு பெயர். இயக்கு தொழிற் பெயர். இயங்குதலாவது, இங்குமங்குமாய்ப் போக்குவரவு புரிதல். அழகிய நகரம் உடம்பு போன்றது; அந்நகரத்து மக்களே உயிர் போன்றவர்கள் என்பதும் உயிர் போன்ற மக்கள் இல்வழி நகரம் உயிரிலாத உடம்பாக - ஓவியமாக மதிக்கப்படும் என்பதும் இதனுல் விளக்கியவாறு. அழகிய நகரத்தின் சிறப்பு மக்களுக்கு இடமாய் இன்புறுத்தலிலும் அவர்கள் காட்சிக் கினிதாய் இன்புறுத்த லிலுமே உள்ளது ஆகலின், 'துயிலவும் நோக்கவும் துணையதன்றியே

உயிரிலா ஓவியம் என்ன ஒப்பது' என்றார். துணை - தகுதி; 'விருந்தின் துணைத்துணை வேள்விப் பயன்' (குறள்-87) என்புழியும் துணை அப்பொருளது ஆதல் காணலாம். ஓவியம் அழகுடையதாயினும் உயிர் இல்லாமையால் சிறப்புறுதவாறுபோல இந்நகரம் அழகுடையதாயினும் மைந்தரும் மகளிரும் தங்கியும் கண்டும் போக்குவரவு புரிந்தும் இன்புறாமையால் சிறப்பிழந்து தோன்றியது என்றவாறு. ஒப்பு இங்குத் தகுதியை யுணர்த்தியது. (36)

**4663.** அமிழ்துற ழயினியை யடுத்த வுண்டியும்
தமிழ்நிகர் நறவமுந் தனித்தண் டேறலு
மிமிழ்கனிப் பிறக்கமும் பிறவு மின்னன
கயழ்வுறத் துவன்றிய கணக்கில் கொட்பது.

அமிழ்து உறழ் அயினியை அடுத்த உண்டியும்,
தமிழ்நிகர் நறவமும், தனித்தண் தேறலும்,
இமிழ்கனிப் பிறக்கமும், பிறவும் இன்னன
கமழ்வுறத் துவன்றிய கணக்கு இல் கொட்பது.

பொ:—(மேலும் அந்நகரம்) தேவர் அமிழ்தை ஒத்த சோற்றோடு அடுத்திருப்பதற்குரிய பிற உணவுப் பண்டங்களும், தமிழ் மொழியை ஒத்து இனிக்கின்ற தேனும், ஒப்பற்றதாய்க் குளிர்ந்துள்ள கள்ளும், இனிய பழங்களின் குவியலும் இவைபோன்ற பிற பொருள்களும் மணங்கமழ நெருங்கியுள்ள அளவிலாத பெருமையையுடையது.

கு:—அயினி - சோறு. "பால்விட்டு அயினியும் இன்று அயின்றனனே" (புறநா-77) என்புழி அப்பொருளில் பயின்றுள்ளமை காணலாம். அயினியை யடுத்த உண்டி என்றது காய்கறி வகைகளை. நறவம் - தேன். தமிழ் இனிமையுடையதாகலின் இனிமை மிக்க தேனுக்கு உவமை கூறிக் கம்பர் தமிழின்பால் தமக்குள்ள பெரு மதிப்பைப் புலப்படுத்தியுள்ளார். தேறல் என்றது கள்ளினை. இமிழ் - இனிமை. பிறக்கம் - மலை; இங்கு மலைபோன்று தோன்றும் பழக் குவியலை யுணர்த்தியது. துவன்றிய – நெருங்கிய. கோள்-பெருமை; அது முதல் குறுகிக் 'கொட்பு' என ஆயது. இதனால் அந்நகரத்தில் உணவுப் பொருள் மலிந்திருந்தமை புலப்படுத்தியவாறு. (37)

## வானரர் அந்நகரத்துப் புகுதல்

4664. கன்னிநெடு மாநகர மன்னதெதிர் கண்டா
☆ ரிந்நகர மாமிக லிராவணன தூரென்
றுன்னியுரை யாடின ருவந்தனர் வியந்தார்
பொன்னினெடு வாயிலத னூடினிது புக்கார்.

கன்னிநெடு மாநகரம் அன்னது எதிர்கண்டார் ;
'இந்நகரமாம் இகல் இராவணனது ஊர்' என்று,
உன்னி உரை ஆடினர், உவந்தனர், வியந்தார்,
பொன்னின், நெடு வாயில் அதன் ஊடு இனிது புக்கார்.

பொ :—அத்தன்மையான புதுமை வாய்ந்த நீண்ட பெரிய நகரத்தை எதிரே கண்டவர்களாகிய அனுமன் முதலியோர், 'இந் நகரமே பகைமையுடைய இராவணனது ஊராகும்' என்று எண்ணி(த் தமக்குள்) உரையாடிக் கொண்டு, மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்தவராய்ப் பொன்னாலியன்ற அந்நகரத்து நீண்ட வாயில் வழி உள்புகுந்தார்கள்.

கு :—கன்னி - புதுமை. கன்னி நீலக்கட் கன்னி (சீவக-900) என் புழியும் அப்பொருள் படுதல் காணலாம். அன்னதாகிய நகரம் என்க. உரையாடினர், உவந்தனர், வியந்தார் என்ற முற்றெச்சங்கள் 'புக்கார்' என்ற வினைகொண்டு முடிந்தன. கண்டார் என்பது வினையாலணையும் பெயராய் அனுமன் முதலிய வானரரை உணர்த் தியது. பிலத்துள் இருத்தலானும் புதுமையான தோற்றத்தோடு செல்வச் சிறப்புடையதாய் இருத்தலாலும் அந்நகரை இராவணனது ஊர் என வானரர் எண்ணலாயினர். தாம் தேடப்புக்க இடம் அண்மையிலேயே கிடைத்து விட்டது என்பதால் உவகையும், அந் நகரின் செல்வப் பெருமை கண்டமையால் வியப்பும் அவ்வானரர்க்கு உண்டாயின. இருளில் நடந்து வருந்தினவராகலின் ஒளிமிக்க நகரில் புகும்போது துன்பம் நீங்கி யின்பத்தோடு புகுந்தார் என்பார் 'இனிது புக்கார்' என்றார். அந்நகரத்து வாயில் பொன்னாலியன்று கொடியொடு யானை புகத் தக்கவாறு நெடிதாக அமைந்திருந்தமை புலப்படப் 'பொன்னினெடு வாயில்' என்றார். (38)

## அந்நகரத்தின் தன்மை 4665, 4666

4665. புக்கநக ரத்தினிது நாடுதல் புரிந்தார்
மக்கள்கடை தேவர்தலை வானுலகின் வையத்

தொக்கவுறை வோருருவ மோவிய மலான்மற்
றெக்குறியி னுள்ளவு மெதிர்ந்திலர் திரிந்தார்.

புக்க நகரத்து இனிது நாடுதல் புரிந்தார்;
மக்கள்கடை, தேவர்தலை, வான் உலகின் வையத்து,
ஒக்க உறைவோர் உருவம் ஓவியம் அலால், மற்று
எக்குறியின் உள்ளவும், எதிர்ந்திலர் திரிந்தார்.

பொ:—(வானர வீரர்) தாம் புகுந்த நகரத்தில் (சீதையை) நன்றாகத் தேடினவர்களாய், தேவர் முதல் மானிடர் ஈறாக விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும் ஒருங்கே தங்கியுள்ளோரின் உருவங்களாக எழுதப்பெற்ற சித்திரங்களை யல்லது மற்றை எப் பிறவியில் பிறந்த உயிரையும் அங்கு எதிர்ப்படாதவர்களாய் ஊர் முழுவதும் திரிந்தார்கள்.

கு:—அந்நகரத்தில் ஓருயிரையும் வானரர் பார்க்கவில்லை என்றவாறு. தேவர் முதல் மக்கள் ஈறாகவுள்ளோரின் உருவங்களாக எழுதப்பெற்ற உயிரற்ற ஓவியங்களை எதிர்ப்பட்டாரேயன்றி எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனி பேதங்களில் உயிருள்ள ஒன்றையும் கண்டிலர் என்க. பிறப்பை யுணர்த்தும் யோனி என்ற வடசொல்லின் பொருளில் குறியென்ற சொல் இங்கு ஆளப்பட்டுளது. 'எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்' (திவ்-இயற்-திருவிருத்தம் - 1) என்புழி யோனி, பிறப்பு என்ற பொருளில் பயின்றுள்ளமை காணலாம். எக் குறியினுள்ளவும் - எந்தப் பிறப்பில் பிறந்துள்ள உயிர்களையும். எதிர்தல் - சந்தித்தல். அந்நகரத்தில் ஓவியங்களாகத் தேவர்களையும் மக்களையும் எழுதியிருந்தார்கள் என்பது இதனால் உணரலாம். தேவர் தலை மக்கள் கடை என்றமையால் அசுரர் நாகர் முதலியோர் உருவங்களும் அங்கு எழுதப் பெற்றிருந்ததாகக் கொள்ளலாம். தேவர் தலை மக்கள் கடை என்ற முறை எதுகை நோக்கி மாற்றப்பட்டது. எதிர்ந்திலராய்த் திரிந்தார் என முற்றெச்சமாக்குக. (39)

**4666.** வாவியுள பொய்கையுள வாசமலர் நாறும்
காவுமுள காவிவிழி யார்கள்மொழி யென்னக்
கூவுமிள மென்குயில்கள் பூவைகிளி கோலத்
தூவிமட வன்னமிவை யுள்ளசுவ டில்லை.

வாவிஉள; பொய்கைஉள; வாசமலர் நாறும்
காவும்உள; காவி விழியார்கள்மொழி என்னக்

கூவும் இளமென் குயில்கள், பூவை, கிளி, கோலத்
தூவிமட அன்னம் இவை உள்ள சுவடு இல்லை.

பொ:—(அந்நகரத்துள்) நடைவாவிகள் உள்ளன; தடாகங்கள் உள்ளன; மணம் மிக்க மலர் மணம் வீசும் சோலைகளும் உள்ளன; நீல மலர் போன்ற கண்களையுடைய பெண்டிரின் இனிய மொழி போலக் கூவுகின்ற இயல்புள்ள இளமையும் மென்மையுமுடைய குயில்கள், நாகணவாய்ப் பறவைகள், கிளிகள், அழகிய தூவியை யுடைய இளமையான அன்னப் பறவைகள் இவை அங்கு வாழ் கின்றன என்பதற்குரிய அடையாளமே காணப்படவில்லை.

கு:—மேல் 'எக்குறியின் உள்ளவும் எதிர்ந்திலர்' எனப் பொது வகையாற் கூறியதை இங்குச் சிறப்பு வகையானும் விளக்கியவாறு. வாச மணம், ஒரு பொருட் பன்மொழி. காவி - நீலமலர்; மகளிர் விழிக்கு உவமையாகத் தகுவது. பெண்டிரின் இனிய மொழிபோலக் கூவும் இயல்பு குயில், பூவை, கிளி என்ற மூன்றற்கும் கொள்க. கூவுதல் என்ற வினை குயிலுக்குரியதாகக் கூறல் மரபாயினும் பூவைக்கும் கிளிக்கும் பேசுதல் என்ற பொருளில் இனம் பற்றி வந்த தாகக் கொள்ளலாம். தாமரை மலர்கள் நிறைந்த வாவியும் பொய் கையும் அந்நகரத்துள் இருந்தும் அம்மலரில் தங்கியும் நீரில் நீந்தியும் விளையாடத்தக்க தூவி மட அன்னங்கள் அங்குக் காணப்படவில்லை. குயில் முதலிய பறவைகள் கூவி விளையாடத்தக்க மணமிக்க மலர்ப் பொழில்கள் அங்கிருந்தும் அப்பறவைகள் அங்குக் காணப்படவில்லை என்க. இவை யுள்ள சுவடு இல்லை என்றது, அப்பறவைகள் அங்கு இருந்தன என்பதற்கு அடையாளந்தானும் காணப்படவில்லை என்றவாறு. (40)

## அந்நகரைப் பற்றி வானரர் பல எண்ணித் திகைத்தல் 4667, 4668

**4667.** ஆயநக ரத்தினியல் புள்ளுற வறிந்தார்
மாயைகொ லெனக்கருதி மற்றுநினை வுற்றார்
தீயபில னுட்பிறவி சென்றவிது வன்றோ
தூயது துறக்கமென நெஞ்சுதுணி வுற்றார்.

ஆய நகரத்தின் இயல்பு உள் உற அறிந்தார்;
'மாயைகொல்' எனக்கருதி மற்றும் நினைவுற்றார்,
'தீய பிலனுள் பிறவி சென்ற, இது அன்றோ
தூயது துறக்கம்?' என நெஞ்சு துணிவுற்றார்.

பொ :—(வானரர்கள்) அந்த நகரத்தின் தன்மையை உள் நுழைந்து நன்கு அறிந்தவர்களாய், இது மாயையின் தோற்றமோ ?' என ஐயுற்று மேலும் சிந்தித்தவர்களாய்த் தீயதாகிய இப்பிலத்தினுள் நுழைந்தபோதே நம் பிறவிகள் நீங்கின ; (பிறவி நீங்கியபின் நாம் அடைந்த) தூயதாகிய வீட்டுலகம் இதுவே என மனம் துணிந்தார்கள்.

கு :—உயிர்கள் எவையும் இல்லாத செல்வ நகரமாக இருத்தலின் 'மாயை கொல்' என ஐயுறலானுர். பொன் மயமான நகரமாக இருத்தலின் துறக்கம் எனத் துணியலாயினர். இது துறக்கமே என்ற துணிவு பிறந்தமையால் 'தீயபிலனுள் பிறவி சென்ற' என்பதை அருத்தாபத்தியால் கொள்ளலாயினர். பிறவி நீங்காமல் வீட்டுலகின்கண் செல்லுதல் கூடாமையின் வீட்டுலகை அடைந்துள்ள நாம் பிறவி நீங்கப் பெற்றவர்களே என்று கொள்வது அருத்தாபத்தி அளவை ஆகும். தூயது துறக்கம் இதுவே என்பார் 'இதுவன்றோ ?' என்றார். தூயதாகிய துறக்கம் என்க. தேவருலகமும் துறக்கம் எனப்படுதலின் அதை விலக்குதற்குத் தூயது துறக்கம் என்றார். தூயது - வீடு. "தூஉய்மை யென்ப தவாவின்மை" (குறள் - 124) என்புழித் தூஉய்மை என்பதற்கு வீடு என்று பரிமேலழகர் பொருள் வரைந்திருத்தலும் காணலாம். (41)

**2668.** இறந்தில மிதற்குரிய
தெண்ணரியில மேது
மறந்தில மயிர்ப்பினெ
டிமைப்புள மயக்கம்
பிறந்தவர் செயற்குரிய
செய்தபிழை யின்றால்
திறந்தெரிவ தென்னென
விசைத்தனர் திகைத்தார்.

"இறந்திலம் ; இதற்குரியது எண்ணியிலம், ஏதும்
மறந்திலம் ; அயிர்ப்பினெடு இமைப்பு உளம் ; மயக்கம்
பிறந்தவர் செயற்கு உரிய செய்த பிழை இன்றால் ;
திறம் தெரிவது என் ?" என இசைத்தனர் திகைத்தார்.

பொ :—(வானரர் துணிந்தபின் மீண்டும் சிந்தித்து, "நாம் பிறவி நீங்கினேம் என்றால் இறந்திருக்க வேண்டுமே ?) நாம் இறக்கவில்லை ; இவ்வீட்டிற்குரிய ஞான நெறியைப் பற்றி எண்ணவுமில்லை ;

முன்னைய செய்திகளில் எதையும் மறவாதிருக்கின்றோம்; (வீடு பெற்றோர்க்குப் பொருந்தாத) ஐயமும் கண்ணிமைப்பும் நம்பால் இருக்கின்றன; (ஒருகால் மாயையால் நாம் மயங்கியதால் இவ்வாறு தோன்றுகின்றதோ எனின்?) மயக்கம் தோன்றியவர்கள் செய்தற்குரிய மயங்கிய செயல்களைச் செய்த குற்றம் நம்பால் இல்லையே; இதன் தன்மையை ஆராய்வது எவ்வாறு?'' எனச் சொல்லிக் கொண்டு ஒன்றும் விளங்காமல் திகைத்து நின்றார்கள்.

கு:—'பிறவி சென்ற' என்று மேல் துணிந்தது உண்மையாயின் நாம் இறந்திருக்க வேண்டும்; இறந்திருந்தால் சீதையைத் தேடுதல் முதலிய முன்னைய நிகழ்ச்சிகளை மறந்திருக்க வேண்டும். ஏதும் மறந்திலம் ஆதலின் நாம் இறந்திலம்; இறந்திலம் ஆதலின் நம் பிறவி நீங்கவில்லை என்பது உறுதி. இது வீட்டுலகமாக இருக்குமாயின் இதனை யடைதற்குரிய ஞான நெறியை நாம் பலகால் பயின்றிருக்க வேண்டும்; அது செய்திலம்; அதனை நாம் அடைந்தது உண்மையாயின் தெளிந்த அறிவும் இமையா நாட்டமும் நாம் பெற்றிருக்க வேண்டும்; அயிர்ப்பும் இமைப்பும் நம்பால் நீங்காது இருத்தலின் நாம் எய்தியுள்ள இந்நகரம் தூயது எனப்படும் துறக்கம் அன்று என்பது உறுதி. இனி 'மாயை கொல்' என்று முன்னர் ஐயுற்றபடி நாம் மாயையில் மயங்கியதால் இங்ஙனம் தோன்றுகின்றது என்று கொள்வோம் என்றாலோ மாயையில் மயங்கியவர்கள் செய்யும் குற்றமான செயல்கள் எவையும் நம்பால் நிகழவில்லை. ஆதலால் நாம் பிறவி நீங்கவுமில்லை; நாமடைந்துள்ள இந்நகரம் வீட்டுலகமும் அன்று; மாயையில் மயங்கினவர்களாகவும் நாம் இல்லை; என முன் எண்ணியவற்றை மறுத்துக் கூறி, இந்நகரத்தின் தன்மையை எப்படி ஆராய்ந்தறிவது? என்று சொல்லிக் கொண்டு வானரர் திகைத்தனர் என்க. (42)

### சாம்பன் கலங்கிக் கூறுதல்

**4669.** சாம்பனவ னென்றுரைசெய்
வானெழு சலத்தால்
காம்பனைய தோளியை
யொளித்தபடு கள்வன்
நாம்புக வமைத்தபொறி
நன்றுமுடி வின்றால்
ஏம்பலினி மேலைவிதி
யான்முடியு மென்றான்.

சாம்பன் அவன் ஒன்று உரை செய்வான், 'எழுசலத்தால்,
காம்பு அனைய தோளியை ஒளித்த படு கள்வன்,
நாம் புக அமைத்த பொறி நன்று; முடிவு இன்றால்;
ஏம்பல் இனி மேலை விதியால் முடியும்' என்றான்.

பொ :—சாம்பன் என்பவன் ஒன்று சொல்கின்றான்; 'மனத்தில் எழுந்த வஞ்சனையால், மூங்கிலை ஒத்த தோளையுடைய சீதையைக் கவர்ந்த பெரிய கள்வனாகிய இராவணன், சீதையைத் தேடிவருகின்ற நாம் அகப்படுமாறு அமைத்த இயந்திரமே இது, நல்லது! நமக்கு நேர்ந்துள்ள வருத்தத்திற்கு முடிவில்லை; முன்னைய ஊழின்படி எல்லாம் முடியும்' என்றான்.

கு :—இயற்பெயரும் சுட்டுப் பெயரும் சேர்ந்து சாம்பனவன் என வந்தது. சலம் - வஞ்சனை. 'சலத்தால் பொருள் செய்து' (குறள்-660) என்புழியும் அப்பொருள்படுதல் காணலாம். எழுசலத்தால் எனவே இராவணன் உள்ளத்தில் பேலோங்கி நிற்பது வஞ்சனையே என்பது பெறப்படும். படு என்பது மிகுதியை உணர்த்தும் உரிச்சொல். ஏனைக்களவினும் மெல்லியலைக் கவர்ந்த களவு மிகக் கொடிய களவாதல் தோன்ற 'படுகள்வன்' என்றான். மாய வல்ல ரக்கன் ஆதலின் சீதையைத் தேடிவருகின்ற நாம் சிக்கித் திகைக்குமாறு இத்தகைய பொறியை அமைத்திருக்கின்றான் என்பது சாம்பவன் கருத்து. அப்பொறியின் கொடுமை தோன்ற 'நன்று' என்று குறிப்புச் சொல்லால் கூறியவாறு. ஏம்பல் முடிவின்றால் என்க. ஏம்பல் - வருத்தம், "மத்திசை தாக்க ஏம்பலுற்றனம்" (திருவிளை - பரிகரி - 12) என்புழியும் இப்பொருள்படுதல் காணலாம். பிலத்தில் புக்கதாலாகிய வருத்தத்திற்கு முடிவு இல்லை என்றவாறு. அவ்வருத்தம் இவ்வாறே நீடிப்பதோ அன்றி நீங்குவதோ பழவினையின்படியே நடைபெறும்; இனி நம் செயலால் ஆவதொன்றுமில்லை எனச் செயலற்றுக் கூறியவாறு. சாம்பவன், கரடிகட்கு அரசன். (43)

## அனுமன் கூறும் ஆறுதல் மொழி

**4670.** இன்றுபில னீதிடையி னேறரி தெனிற்பார்
தின்றுசக ரர்க்கதிக மாகிநனி சேறும்
அன்றதெனின் வஞ்சனை யரக்கரை யடங்கக்
கொன்றெழுது மஞ்சலென மாருதி கொதித்தான்.

'இன்று, பிலன் ஈது இடையின் ஏற அரிது எனின் பார்
தின்று, சகரர்க்கு அதிகம் ஆகி, நனி சேறும்;

அன்று அது எனின், வஞ்சனை அரக்கரை அடங்கக்
கொன்று எழுதும்; அஞ்சல்' என மாருதி கொதித்தான்.

பொ :—(அவ்வாறு கூறிய சாம்பவனைப் பார்த்து) அனுமன் 'இன்றைக்கு இந்தப் பிலத்தின் நடுவே ஏறிச் செல்லுதல் அரிது என்றால், (கடலைத் தோண்டிய) சகரர்களைக் காட்டிலும் சிறப்புடைய வர்களாய்ப் பூமியைத் தோண்டியுண்டு மேலே ஏறி எளிதாகச் செல்வோம்; அஃது பிலமன்று என்றால் இவ்வாறு வஞ்சனை செய்த அரக்கர்களை முழுதும் கொன்று மேல் எழுந்து செல்வோம்; சிறிதும் அஞ்சவேண்டாம் என்று மனம் கொதித்துக் கூறினான்.

கு :—பிலம் உள்ள அளவும் நெடிது சென்று வழிகண்டு ஏறு தற்குக் காலம் தாழ்க்கும் ஆதலின் 'இடையின் ஏறுதல்' பற்றிக் கூறினான். பிலத்தின் நடுவே ஏறுதல் அரிதாக இருக்குமாயின், மேலுள்ள மண்ணைத் தோண்டி யுண்டு வழியாக்கிக் கொண்டு எளி தாகச் செல்லலாம் என்றவாறு. சகரர் யாகக் குதிரையை நாடிப் பூமியைத் தோண்டி யுண்டு கொண்டு பாதலம் சென்றார்கள் என்பது பாலகாண்டத்து அகலிகைப் படலத்தில் கண்ட வரலாறு. 'நானிலந் தடவித் தோட்டு நுங்கினர்புவியினை' (அகலிகைப்-37) மேலிருந்து கீழே தோண்டிச் செல்வதினும் கீழிருந்து மேலே தோண்டிக் கொண்டு செல்லுதல் கடினமான செயல் ஆதல் நினைந்து, 'பார் தின்று சகரர்க்கு அதிகமாகி' என்றான். சேறும் - செல்லுதும்; உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. அது அன்றெனின் என மாறுக. இயல்பான பிலமாக ..இல்லாமல் அரக்கரின் மாயையால் தோன்றும் தோற்றமாக இருந்தால் அந்த மாயையைச் செய்த அரக்கர்களை அடங்கக் கொன்றுவிடின் இம்மாயைத் தோற்றமாகிய பிலமும் மறையுமாகலின் 'வஞ்சனை அரக்கரைக் கொன்றெழுதும்' என்றான். வஞ்சனை செய்த அரக்கருடன் அவர் வஞ்சனையும் மாய்ந்தொழியின் பிலத்தின் தோற்றமே மறைதல் நினைந்து பிலத்தைக் கடத்தலைக் கூறாது ' எழுதும், என்று மட்டும் கூறினான். இயல்பான பிலமாயினும் வஞ்சனையாலான பிலமாயினும் கடத்தற்குத் துணிவிருத்தலின் 'அஞ்சல்' என மாருதி கூறலானான். (44)

## நகர நடுவில் சுயம்பிரபையைக் காணுதல்

4671. மற்றவரு மற்றது மனக்கொள வலித்தார்
உற்றனர் புரத்தினிடை யொண்சுடரி னுள்ளோர்
நற்றவ மனைத்துமுரு நண்ணியொளி பெற்ற
கற்றைவிரி பொற்சடையி னாளையெதிர் கண்டார்.

மற்றவரும் மற்று அது மனக்கொள வலித்தார்;
உற்றனர், புரத்தின் இடை; ஒண்சுடரின் உள் ஓர்
நற்றவம் அனைத்தும் உரு நண்ணி, ஒளி பெற்ற
கற்றைவிரி பொன் சடையினாளை எதிர் கண்டார்.

பொ:—சாம்பன் முதலிய மற்றவர்களும் அனுமன் கூறிய கருத்துத் தம் மனத்திற்கு இசைவாக இருத்தலால் அவ்வாறே செய்யத் துணிந்தவர்களாய், அந்நகரத்தின் நடுவிடத்தை அடைந்தார்கள்; (அங்கு) ஒளி வட்டத்திற்குள் நல்ல தவம் முழுவதும் ஒரு வடிவு பெற்றாற்போன்று ஒளி பெற்றுள்ள, கற்றையாகி விரிந்துள்ள அழகிய சடையையுடைய சுயம்பிரபையைக் கண் முன்னே கண்டார்கள்.

கு:—மற்று, அசை. அது என்றது அனுமன் கூறிய கருத்தை. வலித்தார் - துணிந்தார். புரம் - நகரம். புரத்தினிடை யுற்றனர் என்க. அரக்கர்களை நாடிக் கொல்லும் துணிவுடையராய் அந்நகரத்தின் நடுவிடத்தை அடைந்தார்கள். ஓர் உரு நண்ணி என இயையும். 'நண்ணினாற் போன்று ஒளி பெற்ற' என வேண்டுஞ் சொல் வருவித்துத் தற்குறிப்பேற்ற அணியாக்குக. 'பிரிவெனுந் துயர் உருவு கொண்டாலன்ன பிணியாள்' (சுந்தர-காட்சி-7) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். சுயம்பிரபையின் ஒளிமிக்க தவ வேடம், நற்றவம் அனைத்தும் ஒரு பெண்ணுருக் கொண்டாற் போன்று தோன்றுகின்றது என்க. இதனால் அவள் தவக்கோலத்தின் சிறப்புக் கூறியவாறு. சுயம்பிரபை என்ற பெயர்க்கு ஏற்ப அவள் வடிவைச் சுற்றி ஓர் ஒளிவட்டம் காணப்பட்டமையின் 'ஒண்சுடரின் உள் ஓர்...சடையினாளை!' என்றார். ஒளிபெற்ற என்ற அடையைச் சடையினாட்கு ஏற்றுக. அப்பிலத்தினுள் எவ்வுயிரையும் காணாத அவர்கள் பொற்சடையினாளைக் கண்முன் கண்டார்கள் என்பார் 'எதிர் கண்டார்' என்றார். பொய்த் தோற்றமன்று என்றவாறு.

(45)

## சுயம்பிரபையின் தோற்றம் 4672-4676

**4672.** மருங்கலச வற்கலை வரிந்துவரி வாளம்
பொருங்கலச மொக்குமுலை மாசுபுடை பூசப்
பெருங்கலை மதித்திரு முகத்தபிறழ் செங்கேழ்
கருங்கயல்க ளிற்பிறழ்கண் மூக்கினுதி காண.

மருங்கு அலச வற்கலை வரிந்து, வரிவாளம்
பொரும், கலசம் ஒக்கும், முலை மாசு புடை பூசப்
பெருங் கலை மதித்திரு முகத்தபிறழ் செங்கேழ்
கருங் கயல்களின் பிறழ் கண் மூக்கின் நுதி காண.

பொ :—வரிகளையுடைய சக்கரவாகப் புட்களையும் இணைக் கலசங்களையும் ஒக்கும் முலையுடையளாகிய சுயம்பிரபை, இடை வருந்துமாறு மரவுரியை இறுக்கிக் கட்டிக்கொண்டு, உடம்பில் புழுதி படிய, பெருமையுடைய கலைகள் நிறைந்த பூரணச் சந்திரனைப் போன்ற அழகிய முகத்தில் உள்ளனவாகிய, பிறழும் இயல்பினவாய்ச் செந்நிற வரிகளையுடைய கரிய கயல் மீன்களைப்போல், பிறழ்கின்ற கண்கள், பிறழாமல் மூக்கின் முனையையே நோக்கிக் கொண்டிருக்க.

கு :—வரி - இரேகை. வாளம் - சக்கரவாளப்புள். சக்கரவாகம் எனவும் இது வழங்கப்படுவதுண்டு. இணைபிரியாத் தன்மையாலும் திரண்ட வடிவத்தாலும் மகளிர் கொங்கைகட்கு உவமை கூறப்படுவது. பொருங்கலசம் - இணைக்கலசம். வாளமும் கலசமும் ஒக்கும் முலையுடையாள் எனச் சினையாகு பெயராக்குக. மாசு என்றது புழுதியை. நெடு நாட்களாக நீராடாமல் இருந்த இடம் பெயராது தவத்தில் அமர்ந்திருத்தலின் சுயம்பிரபையின் உடம்பு முழுதும் புழுதி படிந்துளது என்பார் 'மாசு புடைபூச' என்றார். புடை என்றது உடம்பின் புறத்தை. மாசு, தானே படிய என்க. வரிந்து, பூச, காண என்ற எச்சங்கள் 'இருந்தனள்' என்ற 50-ஆம் செய்யுளின் வினை கொண்டு முடியும்; குளகம். முகத்தவாகிய பிறழ் கண் என இயையும். பிறழ் செங்கேழ் கருங்கயல்கள் என்பது உவமை. கயல் போல் பிறழுங் கண்கள், இப்போது பிறழாமல் மூக்கின் முனையையே நோக்கிக் கொண்டிருக்க என்றவாறு. யோகத்தில் இருப்போர் மனம் ஒருமைப்பட மூக்கு நுனியையே நோக்கியிருத்தல் மரபு. வற்கலை - மரவுரி. (46)

**4673.** தேரனைய வல்குல்செறி திண்கதலி செப்பும்
ஊருவி னொடுங்குற வொடுக்கியுற வொல்கும்
நேரிடை சலிப்பற நிறுத்திநிமிர் கொங்கைப்
பாரமு ளொடுக்குற வுயிர்ப்பிடை பரிப்ப.

தேர் அனைய அல்குல், செறிதிண் கதலி செப்பும்
ஊருவின் ஒடுங்குற ஒடுக்கி உற ஒல்கும்
நேர் இடை சலிப்பு அற நிறுத்தி, நிமிர் கொங்கைப்
பாரம் உள் ஒடுக்குற உயிர்ப்பு இடை பரிப்ப.

பொ :—தேர்த்தட்டைப் போன்ற அல்குலானது நெருங்கிய திண்ணிய வாழைத்தண்டே என்று சொல்லுதற்குரிய தொடையில் அடங்குமாறு (உள்ளங்கால்களால்) ஒடுக்கிக்கொண்டு, மிகவும் துவளுகின்ற நுண்ணிய இடையானது சிறிதும் அசையாதபடி நிறுத்திக்கொண்டு, சாயாது நிமிர்ந்துள்ள தனபாரங்கள் உள்ளே அடங்குதலைச் செய்யுமாறு, உயிர்ப்பினைச் சுழுமுனை நாடியானது தாங்கி நிற்க.

கு :—சுயம் பிரபை பதுமாசனத்திருந்து சுழுமுனையில் உயிர்ப்பை நிறுத்திக்கொண்டு அசைவற்று இறைவனோடு ஒன்றியிருந்தமை புலப்படுத்தியவாறு. ஒடுக்கி, நிறுத்தி, ஒடுக்குற, இடை பரிப்ப என்ற எச்சங்கள் 50-ஆம் செய்யுளில் 'இருந்தனள்' என்ற வினை கொண்டு முடியும். கதலி எனச் செப்பும் ஊரு என்க. என என்பதைச் சொல்லெச்சமாக வருவிக்க. ஊரு - தொடை. நேரிடை - நுண்ணிய இடை. 'துடிகொணேரிடையாள்' (திருவாசகம் - 29-5) என்பதும் காண்க. சலிப்பு - அசைவு. மூச்சுக் காற்றை மேலேற்றி நடு நாடியாகிய சுழுமுனையில் நிறுத்துங்கால் நகில்கள் சிறிது உள் அடங்குதல் இயல்பாதல் தெளியலாம். இடை என்றது சுழுமுனை என்னும் நடு நாடியினை. உயிர்ப்பை நடு நாடி தாங்கி நிற்க இருந்தனள் என்க. மூச்சுக் காற்றை யேற்றி யிறக்காமல் நடு நாடியில் நிறுத்தியிருத்தல் கும்பகம் எனப்படும். பரித்தல் - தாங்குதல். (47)

**4674.** தாமரை மலர்க்குவமை சால்வுறு தளிர்க்கைப்
பூமருவு பொற்செறி குறங்கிடை பொருந்தக்
காமமுத லுற்றபகை காறளர வாசை
நாமமழி யப்புலனு நல்லறிவு புல்ல.

தாமரை மலர்க்கு உவமை சால்வுறு தளிர்க்கை,
பூமருவு பொன் செறி குறங்கிடை பொருந்த
காமம் முதல் உற்ற பகை கால்தளர, ஆசை
நாமம் அழிய, புலனும் நல் அறிவு புல்ல.

பொ :—தாமரை மலர்க்கு உவமையாகப் பொருந்தத்தக்க தளிர் போன்ற மெல்லிய கைகள் அழகு பொருந்திய பொன்னிறமுடைய நெருங்கிய தொடைகளில் பொருந்த, காம முதலாகப் பொருந்திய உட்பகை ஆறும் நிலையின்றி ஒழிய, ஆசை என்னும் பெயரும் அழிய, ஐம்பொறிகளும் நல்ல ஞானத்திற்குத் துணையாகப் பொருந்த.

கு :—பொருந்த, தளர, அழிய, புல்ல இருந்தனள் என மேல் இயையும். தாமரை மலரினும் சிறந்த கை என்பார் 'தாமரை மலர்க்குவமை சால்வுறு ..கை' என்ருர். யோகத்திருப்பார் கைகளைத் தொடைமேல் வைத்திருத்தல் மரபு ஆதலின் சுயம்பிரபை தளிர்க்கை குறங்கிடை பொருந்த இருந்ததாகக் கூறினர். காமம் முதலிய உட்பகையாவன: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்ற ஆறுமாம். கால் தளர என்றது நிலைபேறின்றிக் கெட்டொழிய என்றவாறு. ஆசை என்றது காமம் முதலிய குற்றங் களுக்குக் காரணமாய் நிற்கும் அவாவினை. அவா வென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந் தவாஅப் பிறப்பீனும் வித்து (குறள் - 361) எனப் பிறப்பீனும் வித்தாகக் கூறப்படுதலின் பிறப்பறுக்க நோற் பார்க்கு அவாவின் பெயரும் கெட வேண்டுவதாயிற்று. "காமம் வெகுளி மயக்கமிவை மூன்றன் நாமங் கெடக்கெடு நோய்" (குறள் 360) என்பது காணலாம். புலன் என்றது இங்குப் பொறிகளை. அவை நல்லறிவு புல்லுதலாவது, கண்ணவனைக் கண்டும் காதவனைக் கேட்டும் வாயவனை வாழ்த்தியும் ஞான நெறிக்குத் துணையாய் நிற்பது. முன் மாருக நின்று தீய நெறிக்கு உயிரைச் செலுத்தி வந்த பொறிகள், யோகத்தில் இருந்த பின் நன்னெறிக்குத் துணை யாயின என்க. "வாயு நிற்ப மன நின்று மனந்தானிற்பப் பொறி நின்று பாய பொறிகணிற்ப விடர்படுபுன் புலன்கள் நின்றனவால், ஆய புலன்கணின்றமையால் அகிலந்தோன்ரு துள்ளத்தே, தூய பரமானந்த பரஞ்சோதி தோன்றக் கண்டிருந்தார்" (பிரபுலிங்க-விமலை - 26) என்றது இங்கு ஒப்புநோக்கத்தகும். (48)

**4675.** நெறிந்துநிமிர் கற்றைநிறை யோதிநெடு நீலம்
செறிந்துசடை யுற்றது தலத்தினெறி செல்லப்
பறிந்துவினை பற்றற மனப்பெரிய பாசம்
பிறிந்துபெய ரக்கருணை கண்வழி பிறங்க.

நெறிந்துநிமிர் கற்றை நிறை ஓதி நெடு நீலம்
செறிந்து சடை உற்றது தலத்தின் நெறி செல்லப்,
பறிந்து வினை பற்றுஅற மனப் பெரிய பாசம்
பிறிந்து பெயரக் கருணை கண்வழி பிறங்க.

பொ :—நெறிப்புக் கொண்டு நிமிர்ந்த தொகுதியாக நிறைந்த நீண்ட கரிய தன் கூந்தலானது, நெருங்கிச் சடையாகப் பொருந்திய தாய்த் தரையினிடத்தில் புரளாநிற்க, இருவினைகளும் தன்னைவிட்டு நீங்கி அடியோடு ஒழிய, தன் மனத்தில் தோன்றிய பெரிய பாச

யானது, தன்னை விட்டுப் பிரிந்துபோக, கண்வழியே (அவள் மனக்) கருணையானது விளங்கா நிற்க.

கு:—செல்ல, அற, பெயர, பிறங்க இருந்தனள் என மேல் முடியும். நீல ஓதி என மாறுக. கரிய கூந்தல் சடையாகத் திரண்டு தரையில் புரள என்று சுயம்பிரபையின் சடை நீளத்தைப் புலப்படுத்தியவாறு. இடையருத ஞான யோகங்களின் முன்னர் ஆகாமியமும் சஞ்சிதமும் ஆகிய வினைகள் கெட்டொழிதல்பற்றி "வினை பறிந்து பற்றற' என்றார். பாசம் என்பது தொடர்புடையாரிடத்துக் கொள்ளும்பற்று. பிறபற்றுகளை நீக்கியவர்க்கும் நீக்க வியலாதது ஆதலின் 'பெரிய பாசம்' எனச் சிறப்பித்தார். தவத்திற்கு அருள் இன்றியமையாததாதலின் அது அவள் கண்வழியே விளங்குதல் கூறினர். உள்ளத்தின் இயல்பு தோன்றுவது கண் வழியே யாதலின் 'கருணை கண்வழி பிறங்க' என்றார். (49)

### சுயம்பிரபையைச் சீதையோ என ஐயுறல்

**4676.** இருந்தன ளிருந்தவளை
யெய்தின ரிறைஞ்சா
அருந்ததி யெனத்தகைய
சீதையவ ளாகப்
பரிந்தனர் பதைத்தனர்
பணித்தகுறி பண்பிற்
றெரிந்துணர்தி மற்றிவள்கொ
றேவியென லோடும்.

இருந்தனள்—இருந்தவளை எய்தினர் இறைஞ்சா
அருந்ததி எனத்தகைய சீதை அவள் ஆகப்
பரிந்தனர்; பதைத்தனர்; பணித்த குறி, பண்பின்
தெரிந்து உணர்தி; மற்று இவள் கொல் தேவி?' எனலோடும்.

பொ:—அமர்ந்திருந்தாள்; அவ்வாறு அமர்ந்திருந்தவளை வானரர் நெருங்கி வணங்கி, அருந்ததி என்று சொல்லத்தக்க கற்பினையுடைய சீதை அவளே என அவள்பால் அன்பு கொண்டவர்களாய்ப் பதைபதைத்து (அனுமனை நோக்கி) 'இவள் தானோ சீதை?' இராமன் குறித்த அடையாளங்களால் ஆராய்ந்து உணர்வாயாக; என்று கூறியவுடன்.

கு:—குளகம் அடுத்த செய்யுளில் முடியும். சுயம் பிரபையின் நகரைக் கண்டவுடன் அதை இராவணன் நகரமாகக் கருதினவர்

ஆதலின் அந்நகரத்தில் அழகு மிக்க தோற்றத்துடன் தவஞ் செய்யும் சுயம்பிரபையைச் சீதையோ என ஐயுறலாயினர். சீதையின் அடையாளங்கள் இவையென இராமன் சொல்லக் கேள்வியுற்றவன் அனுமன் ஆகலின், அனுமனிடம் 'இவள்கொல் தேவி? பணித்த குறிபண்பின் தெரிந்துணர்தி' என்று வானரர் வினவினர். பரிதல் - அன்பு கொள்ளுதல். தவக்கோலமும் இளமை வனப்பும் உடைமையால் சுயம்பிரபையைச் சீதையென ஐயுற நேர்ந்தது. விரைவு காரணமாகப் பதைத்தனர் என்க. மற்று - அசை. 'மாருதியுரைத்தான்' என மேல் வருதலின் இங்கு வினவியது அனுமனையே என்பது பெறப்படும்.

(50)

## அனுமன் கூறுகின்றான்

**4677.** எக்குறியொ டெக்குண மெடுத்திவ ணுரைக்கேன்
இக்குறி யுடைக்கொடி யிராமன்மனை யாளோ
அக்குவட முத்தமணி யாரமத னேர்நின்
றொக்குமெனி னொக்குமென மாருதி யுரைத்தான்.

'எக்குறியொடு எக்குணம் எடுத்து இவண் உரைக்கேன்?
இக் குறியுடைக் கொடி இராமன் மனையாளோ?
அக்குவடம், முத்தமணி ஆரம் அதன் நேர் நின்று
ஒக்கும் எனின் ஒக்கும்' என, மாருதி உரைத்தான்.

பொ:—அனுமன், (வானரர்களை நோக்கி) (சீதையின் அடையாளங்களிலும் குணங்களிலும்) எந்த அடையாளம், எந்தக் குணம் இவள்பால் இருப்பதாக இங்கு எடுத்துச் சொல்வேன்? (சீதையின் அடையாளமும் குணமும் சிறிதும் இவள்பால் இல்லை) இந்த அடையாளமுடைய கொடி போன்ற இவள் இராமன் மனையாள் ஆய்விடுவாளோ? சங்குமணி மாலை முத்துமாலையின் நேர்நின்று உவமையாகும் என்றால் இவள் சீதையை ஒப்பாள்' என்று சொன்னான்.

கு:—சீதைக்கு உரியதாகக் கூறப்பட்ட அடையாளங்களும் குணங்களும் சுயம்பிரபையின்பால் சிறிதும் இல்லை ஆதலின், இவள் சீதையல்லள் என்பது கருத்து. குறி - அடையாளம். 'காண்டியெனின் குறிகேட்டி' (நாடவிட்ட - 32) என முன்னும் வந்துள்ளது காணலாம். அக்குவடம் - சங்கு மணிமாலை. சங்குமணிமாலையும் முத்துமாலையும் நிறத்தால் ஒக்குமேனும் முத்துமாலைக்கும் சங்கு மணிமாலை தாழ்ந்ததாதல் போல இவள் சீதைக்கு ஒப்பாகாள்; தாழ்ந்தவளே யாவள் என்றவாறு. நவமணிகளுள் ஒன்றுதல் நினைந்து

முத்தினையும் மணி என்றார். அக்குவடம் முத்தமணி யாரமதன் நேர் நின்றெக்கு மெனின் இவள் இராமன் மனையாளை ஒக்கும் என்றது, பொய்த்தற்குறிப்பணி என்பர். "நெல்லொக்கும் புல்லென்றாலும் நேருரைத்தாகவற்றே" (ஆரணிய - மாரீசன்வதைப் - 74) என முன்னும் இவ்வாறே கூறியுள்ளது காணலாம். (51)

## சுயம்பிரபை வானரரை யார் என வினவுதல்

4678. அன்னபொழு தின்கணவ்
வணங்குமறி வுற்றாள்
முன்னனையர் சேறன்முறை
யன்றென முனிந்தாள்
துன்னரிய பொன்னகரி
யின்னுறைவி ரல்லீ
ரென்னவர வியாவருரை
செய்கென விசைத்தாள்.

அன்ன பொழுதின்கண் அவ்அணங்கும் அறிவுற்றாள்;
முன் அனையர் சேறல் முறை அன்று, என முனிந்தாள்;
'துன்னரிய பொன் நகரியின் உறைவிர் அல்லீர்;
என்ன வரவு? யாவர்? உரைசெய்க' என இசைத்தாள்.

பொ:—அந்தச் சமயத்தில் அந்தச் சுயம்பிரபை என்கின்ற தேவ மாதும் (யோகம் கலைந்து அவர்கள் வரவை) அறிந்தவளாய் (தவஞ் செய்கின்ற தெய்வமகளாகிய) தன் முன் அவ்வானரர் வருதல் முறை அன்று என்று கோபங்கொண்டு, 'எவ்வுயிரும் எய்தற்கரிய இப் பொன் நகரத்தில் வசித்தற்குரியரல்லாத நீங்கள் இங்கு வருதற்குக் காரணம் என்ன? நீங்கள் யாவர்? சொல்லுங்கள்' என்று வினவினாள்.

கு:—அறிவுற்றாள் என்றது, வானரரின் பேச்சரவத்தால் யோகங் கலையப்பெற்று அவர் வரவை யறிந்தாள் என்றவாறு. அணங்கு - தேவமாது. தனித்துத் தவஞ் செய்யும் பெண்பாலாகிய தன்முன் வானரராகிய ஆடவர் வருதல் முறையன்று ஆதலின் முனிவு கொண் டாள். எவ்வுயிரும் நெருங்க முடியாத இயல்புள்ள இப்பொன்னக ரத்தில் தங்கும் உரிமையில்லாத வானரர்கள் வரக் காரணம் இல்லை யாதல் நினைந்து பொன்னகரியின் உறைவிரல்லீர் என்ன வரவு? எனவும், நுழைய முடியாத பிலத்திலும் நுழைந்து வந்த அவர் ஆற்றல் நினைந்து 'யாவர்' எனவும் வினவினாள். இந்திரன் அந்

நகரைச் சுயம்பிரபைக்கு உரிமையாக்கிக் காவல் செய்து கொண்டிருக்குமாறு செய்துளானுகலின் பிறர் யாரும் அங்குத் தங்குதற்குரியரல்லர் என்பது அவள் கருத்து. 'இவணிருத்தி நகர் காவனினது என்ருன்' (62) எனப் பின் அவளே கூறுதல் காணலாம். அறிவுற்ருள் முனிந்தாள் என்ற முற்றெச்சங்கள் அறிவுற்ருளாய் முனிந்து இசைத்தாள் என முடியும். உறைவிரல்லீர் என்பது வினையாலணையும் பெயர். உறைவிரல்லீராகிய நீங்கள் வருதற்குக் காரணம் என்ன என்று வினவியவாறு. செய்க என்பதில் அகரந் தொக்குச் 'செய்கென' என நின்றது. (52)

வானரர் கூறுகின்றனர்

4679. வேதனை யரக்கரொரு மாயைவிளை வித்தார்
சீதையை யொளித்தனர் மறைத்த புரைதேர்வுற்
றேதமி லறத்துறை நிறுத்திய விராமன்
றூதருல கிற்றிரிது மென்னுமுரை சொன்னூர்.

'வேதனை அரக்கர் ஒரு மாயை விளைவித்தார்;
சீதையை ஒளித்தனர்; மறைத்த புரை தேர்வுற்று
ஏதம் இல் அறத்துறை நிறுத்திய இராமன்
தூதர் உலகில் திரிதும்' என்னும் உரை சொன்னூர்.

பொ:—'குற்றம் அற்ற தரும நெறியை நிலைநிறுத்திய இராமனுடைய தூதர் நாங்கள்; பிற உயிர்கட்குத் துன்பம் செய்யும் இயல்புடைய அரக்கர்கள் ஒரு வஞ்சனையைச் செய்தவர்களாய்ச் சீதையைக் கவர்ந்து சென்று மறைத்து விட்டார்கள்; அவர்கள் சீதையை ஒளித்துவைத்த இடத்தைத் தெரிந்துகொள்ளத் தொடங்கி இவ்வுலகத்தில் திரிகின்ரேம்' என்னும் சொல்லை அவள் வினவிற்கு விடையாக வானரர்கள் கூறினர்கள்.

கு:—'யாவர்' என்ற சுயம்பிரபையின் வினவிற்கு விடையாக 'இராமன் தூதர்' எனவும், 'என்ன வரவு' என்ற வினவிற்கு விடையாகச் 'சீதையை மறைத்தபுரை தேர்வுற்று உலகில் திரிதும்' எனவும் வானரர் விடை கூறியவாறு. ஏதமில் அறத்துறை நிறுத்திய இராமன் தூதராதலின் 'எங்களால் நினக்கு எந்தத் தீங்கும் நிகழாது' என்பதையும், இராமன் ஆணை மேற்கொண்டு சீதையைத் தேடி உலகில் திரியும் நாங்கள் நினக்கேயுரிமையுடைய இந்நகரில் புகுந்ததும் தவறன்று என்பதையும் புலப்படுத்தியவாறு. வேதனை - துன்பம். மாயை - வஞ்சனை. விளைவித்தாராய் ஒளித்தனர் என

முற்றெச்சமாக்கி முடிக்க. புரை - மறைவான இடம். இராமன் அறத் துறை நிறுத்தும் இயல்பினன் என்பதை, ''ஆரறத்தினெ டன்றி நின்ருரவர் வேரறுப்பன்'' (ஆரணிய - அகத்தியப்-22) என்பதாலும், ''மூவர்க்குந் தலைவராய மூர்த்தியா ரறத்தை முற்றும் காவற்குப் புகுந்து நின்ருர் காகுத்த வேடங்காட்டி'' (உயுத்த - கும்பகர்ணன் - 149) என்பதாலும் முன்னும் பின்னும் அறிவித்தல் காணலாம். தம்பியின் மனையாளைக் கவர்ந்து அறத்துறையில் திறம்பிய வாலி யைக் கொன்று சுக்கிரீவனுக்கு அரசளித்த நிகழ்ச்சியை வானரர் நேரில் கண்டவராதலின் 'அறத்துறை நிறுத்திய இராமன்' என இறந்த காலத்தால் கூறலாயினர். இராமன் எதிர்காலத்தும் அறத்தை நிறுத்துபவனே ஆவன் என்க. (53)

## சுயம்பிரபையின் மகிழ்ச்சி

**4680.** என்றலு மிருந்தவ ளெழுந்தன ளிரங்கிக்
குன்றனைய தாயதொரு பேருவகை கொண்டாள்
நன்றுவர வாகநட னம்புரிவ லென்னு
நின்றன ணெடுங்கணிணை நீர்கலுழி கொள்ள.

என்றலும்; இருந்தவள் எழுந்தனள், இரங்கிக்
குன்று அனையது ஆயது ஒரு பேருவகை கொண்டாள்;
'நன்று வரவு ஆக! நடனம்புரிவல்' என்னு,
நின்றனள்; நெடுங்கண் இணை நீர் கலுழி கொள்ள.

பொ :—என்று வானர வீரர் கூறிய அளவில் யோகத்தில் அமர்ந் திருந்த சுயம்பிரபை (இராமதூதர்பால் நன்மதிப்புடையளாய்) எழுந்து, அவர்கள்பால் அன்பு கொண்டு, மலையை ஒத்ததாய ஒப்பற்ற பெரிய மகிழ்ச்சியுடையளாய், 'உங்கள் வரவு நல்வரவாகுக யான் ஆனந்தக் கூத்து ஆடுவேன்' என்று கூறிக்கொண்டு நீண்ட தன் இரண்டு கண்களும் உவகைக் கண்ணீராகிய வெள்ளத்தைக் கொள்ளா நிற்க நின்றனள்.

கு :—இரங்குதல் இங்கு அன்பால் உளங்குழைதலை யுணர்த் திற்று. உவகை மிகுதியைப் புலப்படுத்த 'குன்றனையதாயதொரு பேருவகை' என உவமை கூறினர். அருவப் பொருளாகிய மகிழ்ச் சிக்கு உருவப் பொருளாகிய குன்றினை உவமை கூறல் பெருமை யென்னும் பொதுத் தன்மை பற்றியே யாதலின் பொருந்தும். இராம தூதர்களை வரவேற்கும் பேறு கிடைத்ததுபற்றியும் தன் சாபம் நீங்குங் காலம் நெருங்கியது நினைந்தும் மகிழ்ச்சியால் 'நடனம்

புரிவல்' எனக் கூறினள். மகிழ்ச்சி மேலோங்கியபோது ஆடுதல் உண்டு. தண்டகவனத்து முனிவர்கள் இராமன் தம் துயர் தீர்ப்பதாக வாக்களித்தவுடன், ஆடிப்பாடி மகிழ்ந்தார்கள் என்பதை, "திரித்த கோலினர் தேமறை பாடினர், நிருத்தமாடினர் நின்று விளம்புவார்" (அகத்தியப் - 23) என்பதால் அறியலாம். இராமனுடைய பெருங்கருணையை நினைந்து உருகினமையால் அவள் கண்கள் கண்ணீர் வெள்ளத்தைச் சொரிந்தன. நீர்கலுழி கொள்ளுதல் என்றது கண்ணீராகிய ஆற்றைப் பெருக்குதல் என்றவாறு. கலுழி கொள்ள நின்றனள் என இயையும். (54)

## சுயம்பிரபை வினவும் அனுமன் விடையும்

**4681.** எவ்வுழை யிருந்தன னிராமனென யாணர்ச்
செவ்வுழை நெடுங்கணவள் செப்பிடுத லோடும்
அவ்வுழை நிகழ்ந்ததனை யாதியினோ டந்தம்
வெவ்விழைவில் சிந்தைநெடு மாருதி விரித்தான்.

'எவ் உழை இருந்தனன் இராமன்?' என, யாணர்ச்
செவ் உழை நெடுங் கண் அவள் செப்பிடுதலோடும்,
அவ் உழை நிகழ்ந்ததனை ஆதியினோடு அந்தம்,
வெவ் விழைவு இல் சிந்தை நெடு மாருதி விரித்தான்.

பொ :—இராமன் எந்த இடத்தில் இருக்கின்றான்? எனப் புதுமையான அழகுடைய, மான் போன்ற நீண்ட கண்களையுடைய அச் சுயம்பிரபை வினவியவுடன்,-கொடுமையான ஆசை இல்லாத உள்ளத்தையுடைய நெடியவனாகிய அனுமன், இராமன் பக்கல் நிகழ்ந்த வரலாற்றை முதலிலிருந்து கடைசி வரையில் விரித்துச் சொன்னான்.

கு :—உழை - மான். மருண்ட பார்வையுடைமையால் மகளிர் கண்கட்கு மான் கண்களை உவமை கூறல் மரபு. செப்புதல் இங்கு வினவுதலை யுணர்த்தியது. அவ்வுழை என்றது அந்த இராமனிடத்து என்ற பொருளில் வந்தது. பெண்பாலோடு பேசுதல் பிரமசாரியாகிய அனுமனுக்கு அடுக்குமோ? என்ற ஐயத்தை நீக்கவேண்டி 'வெவ் விழைவு இல் சிந்தை நெடுமாருதி' எனச் சிறப்பித்தார். கொடிய விருப்பங்களை ஒழித்தவன் ஆதலின், பெண்ணொடு பேசுவதால் மனம் மாறுபடான் என்றவாறு. ஏனை வானரங்களினும் நெடியன் ஆதல் பற்றியும் மிக நெடியனாக உருக்கொள்ள வல்லனாதல் புலனாகவும் 'நெடு மாருதி' எனச் சிறப்பித்தார். இராமனைப் பற்றிய செய்தியைச் சுயம்

பிரபை மிக்க விருப்பத்தோடு கேட்டாளாதலின் அவ்வரலாற்றில் ஈடுபாடுமிகவுடைய அனுமனும் அதை விரிவாகவே சொன்னான் என்பது புலப்பட 'விரித்தான்' என்றார். (55)

## சுயம்பிரபை வானரர்க்கு விருந்தளித்தல்

4682. கேட்டவளு மென்னுடைய கேடிறவ மின்னே
காட்டியது வீடென விரும்பிநனி கானீ
ராட்டியமிழ் தன்னசுவை யின்னடிசி லன்போ
டூட்டிமன னுள்குளிர வின்னுரை யுரைத்தாள்.

கேட்டு அவளும், 'என்னுடைய கேடில்தவம் இன்னே
காட்டியது வீடு!' என விரும்பி நனி கால் நீர்
ஆட்டி அமிழ்து அன்ன சுவை இன் அடிசில் அன்போடு
ஊட்டி மனன் உள் குளிர இன் உரை உரைத்தாள்.

பொ :—(அனுமன் கூறிய இராமன் செய்திகளைக்) கேட்டு, அச் சுயம்பிரபையும் 'என்னுடைய கெடுதல் இல்லாத நல்ல தவம் இப் பொழுதே எனக்குத் தண்டனையிலிருந்து விடுதலையை உண்டாக்கியது, என்று மிக விரும்பி இராமதூதர்களுக்கெல்லாம் காலில் நீராட்டிப் பூசித்து, அமிழ்தம் போன்ற சுவையுடைய இனிய உணவை அன்போடு உண்பித்து, அவர்கள் உளங்குளிர இனிய சொற்களைச் சொன்னாள்.

கு :—கேட்டவளும் என ஒரு சொல்லாக்கலும் ஆம். தவம் பயனீதல் தப்பாது ஆதலின் கேடில் தவம் எனப்பட்டது. 'என்னுடைய கேடில் தவம் இன்னே காட்டியது வீடு' என்றது, சுயம் பிரபை தனக்குள் சொல்லிக் கொண்டது. நனி விரும்பி எனவும் வீடு காட்டியது எனவும் மாறுக. இராமனுக்குத் தூதர்கள் ஆதலாலும் தான் தண்டனையினின்றும் விடுபடுதற்குக் காரணராதலாலும் அவ்வானரர்க்குக் காலில் நீராட்டிப் பூசித்தாள்; அடியார்க்குச் செய்யும் பூசை ஆண்டவனுக்கு உவப்பைத் தருதல் நோக்கி. வீடு காட்டியது என்றது, தண்டனை விடுதலையை உண்டாக்கியது என்றவாறு. மனனுள் குளிர என்றது மனத்துள் மகிழ என்றவாறு. கானீர் ஆட்டுதல் பாத்தியம் எனக் கொண்டு அருக்கியம், ஆசமனம் என்பன இனம்பற்றிக் கொள்ளவைத்தார் என்றலும் ஆம். இன்னுரை யாவது கேள்வியானும் பயனானும் இனிதாகிய சொல். (56)

## அனுமன் வினவச் சுயம்பிரபை தன் வரலாறு கூறுதல் 4683-4690

4683. மாருதியு மற்றவண் மலர்ச்சரண் வணங்கி
யாரிநக ருக்கிறைவர் யாதுநி னியற்பேர்
பார்புகழ் தவத்தினை பணித்தருளு கென்றான்
சோர்குழலு மற்றவனொ டுற்றபடி சொன்னாள்.

மாருதியும், மற்று அவள் மலர்ச்சரண் வணங்கி,
யார் இ(ந்) நகருக்கு இறைவர்? யாது நின் இயற்பேர்?
'பார்புகழ் தவத்தினை! பணித்தருளுக' என்றான்;
சோர்குழலும் மற்று அவனொடு உற்றபடி சொன்னாள்.

பொ :—அனுமனும் அந்தச் சுயம்பிரபையின் தாமரை மலர் போன்ற பாதங்களை வணங்கி, உலகத்தார் புகழத்தக்க தவமகளே! இந்நகருக்குத் தலைவர் யார்? நின் இயற்பெயர் யாது? சொல்லி யருளுக! என்று வினவினான்; சடையாகித் தாழ்ந்த கூந்தலையுடைய சுயம் பிரபையும் அந்த அனுமனோடு நடந்தபடியே சொல்லலானாள்.

கு :—மற்று இரண்டும் அசைநிலை. இந்நகர் எனற்பாலது ஓசை நோக்கி இநகர் எனத் தொக்கது. அருளுக என்புழி அகரம் விகாரத் தால் தொக்கது. பிலத்தினுள் ஒருநகர்க்கு ஒருத்தியாய் இருந்து தவஞ்செய்த பெருமை உலகெலாம் புகழத்தக்க சிறப்புடையது என் பான் 'பார்புகழ் தவத்தினை' என்றான். தவத்தினை என்பது விளி. பணித்தல் - சொல்லுதல். சோர்குழல் - தாழ்ந்த கூந்தல். "நெறிந்து நிமிர் கற்றை நிறையோதி நெடு நீலஞ் செறிந்த சடை யுற்றது தலத்தினெறிசெல்ல" (49) என முன்னும் இவள் கூந்தல் சடை யாய் நிலத்தில் புரளுந் தன்மையைக் கூறியிருத்தல் காணலாம். சோர்குழல் என்பது வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்ச் சுயம்பிரபையை யுணர்த்தியது. (57)

இச்செய்யுளின்பின் 45 ஆம் பிரதியில் காணப்படும் மிகைப் பாடல்:-

4683. (a) வச்சிர முடைக் குரிசில் வாளமரின் மேனாள்
மெச்சவுண ரியாவரும் விளிந்தனர்க ளாக
அச்சமுறு தானவர்கள் கம்மியனு மஞ்சி
வைச்சபில மூடிதன் மறைந்தய விருந்தான்.

**4684.** நூன்முக நுனித்தநெறி நூறுவர நொய்தா
மேன்முக நிமிர்த்துவெயில் காலொடு விழுங்கா
மான்முக நலத்தவன் மயன்செய்த தவத்தால்
நான்முக னளித்துளதி மாநகர நல்லோய்.

'நூன் முகம் நுனித்த நெறி நூறுவர, நொய்தா
மேல் முகம் நிமிர்த்து, வெயில் காலொடு விழுங்கா,
மான் முக நலத்தவன், மயன் செய்த தவத்தால்,
நான்முகன் அளித்துளது, இ(ம்) மாநகரம்-நல்லோய் !

பொ :—நல்ல பண்புடையவனே ! மயன், சிற்ப நூலில் நுட்பமாகக் கூறப்பட்ட நூற்றுக்கணக்கான துறைகள் எளிதாகத் தனக்குப் புலனாக வேண்டும் என்ற கருத்தோடு மேலே முகத்தை நிமிர்த்துக் கொண்டு, மானின் முகம் போன்ற இயல்புள்ளவனாய் வெயிலையும் காற்றையும் உண்டு கடுமையாகச் செய்த தவத்தினால் பிரமன் மகிழ்ந்து அச்சிற்ப நூல் துறைகளை அம்மயனுக்கு அளித்ததால் இந்தப் பெருமை வாய்ந்த நகரம் உளதாயிற்று.

கு :—அசுரதச்சனாகிய மயன் சிற்ப நூலின் நுட்பங்கள் பலவும் தனக்கு எளிதாகப் புலனாகி நினைத்த அளவில் பலனளிக்க வேண்டும் என்று பிரமனை நோக்கிக் கடுந்தவஞ் செய்ய, அத்தவத்தினுக்கு மகிழ்ந்து பிரமன், அவன் விரும்பியுவாறே அச்சிற்பநூல் நுட்பங்கள் பலவும் புலனாகச் செய்தானாக, அச்சிற்ப நூல் நுட்பங்களைக்கொண்டு மயன் மனத்தால் படைத்த நகரம் இது என்றவாறு. நான்முகன் அளித்தலால் உளது என மூன்றுவது விரிக்க. உளதாயிற்று என ஆக்கச்சொல் வருவிக்க. நான்முகன் அளித்தது சிற்ப நூல் நுட்பங்கள் என்றும், அந்நுட்பங்களைக் கொண்டு மயன் மனம் வருந்திச் செய்தது இந்நகரம் என்றும் கொள்க. மயன் படைத்தது இந்நகரம் எனின் தன் தோழியின் காதலனது பெருமை கூறியதாக முடியும் என்ற கருத்தால் அங்ஙனம் கூறாது அம்மயன் இந்நகரைச் செய்தற்குக் காரணமாயிருந்த பிரமன் வரத்தை யெடுத்தோதினாள். இந்நகரமே நான்முகனால் அளிக்கப்பட்டது என்று பொருள் கொள்வோமெனின், முன்னர் "சிற்பியா மயன்மனம் வருந்திச் செய்தது" (33) எனக் கூறியதோடு மாறுபடும் என்க. மயன் இந்நகரை நினைத்துப் படைத்ததற்குப் பிரமன் அளித்த வரமே காரணமாதலின், நான்முகன் அளித்தலால் உளதாயிற்று என்றாள். மேன்முகம் நிமிர்த்தலும் வெயிலும் காற்றும் புசித்தலும் அவன் செய்த தவத்தின் இயல்பு. மயன் மேல் முகம் நிமிர்த்திருந்த தோற்றம் மானின் முகம் போல் காணப்பட்டமையால் 'மான்முக நலத்தவன்' என்றாள். இம்

மா நகரம் என்புழி மகரம் விகாரத்தால் தொக்கது. நூல் என்றது சிற்ப நூலை. நுனித்த நெறி நூறு நொய்தாவர என மாறுக. நூறு என்பது பல என்னும் கருத்தினது. நொய்தா வருதலாவது, சிற்ப நூலின் நுட்பங்கள் யாவும் நினைத்த வண்ணம் உடனே எளிதாகத் தோற்றம் பெறுதல் - நினைப்பினாலேயே படைத்தல் என்க. (58)

4685. அன்னதிது தானவ
னரம்பையரு ளாங்கோர்
நன்னுதலி னுண்முலை
நயந்தனன நல்லா
ளென்னுயிர னுளவளை
யானவ னிரப்பப்
பொன்னுலகி னின்றொளிர்
பிலத்திடை புணர்த்தேன்.

'அன்னது இது; தானவன் அரம்பையருள், ஆங்கு ஓர்,
நல் நுதலினாள் முலை நயந்தனன்; அ(ந்)நல்லாள்
என் உயிர் அனாள்; அவளை யான், அவன் இரப்ப,
பொன்னுலகில் நின்று, ஒளிர் பிலத்திடை புணர்த்தேன்.'

பொ :—அவ்வாறாகத் தோன்றியது இந்நகரம்; அம்மயன் என்னும் அசுரன் தேவ மாதருள் ஒரு நல்ல நெற்றியையுடையவளின் போகத்தை விரும்பினான்; அழகின் நல்லாளாகிய அப்பெண் என்னுயிரனைய தோழியாவள்; அம்மயன் என்னைக் குறையிரந்து வேண்ட அவ்வரம்பையை இந்திர உலகத்தினின்றும் கொணர்ந்து ஒளி வீசுகின்ற இந்தப் பிலத்தில் அவனோடு சேர்த்தேன்.

கு :—ஆங்கு - அசை. தானவன் என்றது மயனை; காசிபன் மனைவியருள் தனு என்பவளின் வழிவந்தவன் என்ற காரணம் பற்றி வந்தது. முலை நயந்தனன் என்றது மெய்யுறு புணர்ச்சியை விரும்பினான் என்ற குறிப்பினது. மயன் என்னும் அசுர சிற்பி தனது தவவலிமையால் பிரமதேவனிடத்தினின்றும் சுக்கிராச்சாரியின் பொருள் முழுவதையும் வரமாகப் பெற்றுப் பொன் மயமான வனத்தைப் படைத்தனன் என்றும், பின்னர் அவனால் காதலிக்கப் பெற்ற ஏமை என்னும் தேவமாதுக்கு உரியதாயிற்று என்றும் வான்மீகம் கூறுகின்றது. ஆதலின், இங்கு 'ஓர் நன்னுதலி' என்றது, ஏமை என்னும் அரம்பையையே என்று கொள்ளலாம். தலைவியின் இன்பத்தைப் பெற விரும்பும் தலைவன், அத்தலைவியின்

உயிர்த் தோழியைக் குறையிரத்தல் மரபு. இதனை அகப்பொருள் நூல்களில் காணலாம். 'பொன்னுலகினின்றியல் பிலம்' என்பதற்குப் பொன்னுலகம் போல நின்று விளங்குகின்ற பிலம் எனப் பொருள் கூறலும் ஆம். (59)

4686. புணர்ந்தவளு மன்னவனு
மன்றில்விழை போகத்
துணர்ந்திலர் நெடும்பகலிம்
மாநக ருறைந்தார்
கணங்குழையி னுளொடுயர்
காதலொரு வாதுற்
றிணங்கிவரு பாசமுடை
யேனுட னிருந்தேன்.

'புணர்ந்து, அவளும் அன்னவனும், அன்றில் விழைபோகத்து
உணர்ந்திலர், நெடும்பகல் இம் மாநகர் உறைந்தார்;
கணங்குழையினுளொடு உயர்காதல் ஒருவாது உற்று,
இணங்கிவரு பாசமுடையேன் உடன் இருந்தேன்.'

பொ:—அவ்வரம்பையும் மயனும் தம்மில் புணர்ந்து அன்றில் பறவை விரும்புகின்ற (ஒருவரை யொருவர் பிரியாத) இன்பத்தில் ஆழ்ந்து காலக்கழிவை யுணராதவர்களாய் இந்தப் பெருமை வாய்ந்த நகரத்தில் நெடுங்காலம் தங்கி யிருந்தார்கள்; திரண்ட குழையணிந்த ஏமை என்பவளோடு உயர்ந்த அன்பு நீங்காது பொருந்தி நண்புபூண்டு ஒழுகும் பாசம் உடையவளாகிய யான் அவளோடு (இங்கு) இருந்தேன்.

கு:—ஆணும் பெண்ணும் இணைபிரியா இயல்பின அன்றில் ஆதலின், மயனும் ஏமையும் பிரியகில்லாது நுகரும் போகத்தை அன்றில் விழை போகம் என்றுள். உணர்ந்திலர் என்றது காலம் நெடிது கழிந்தது என்பதை உணர்ந்திலராய் என்றவாறு. உண்மையான இன்பந் துய்ப்பவர்க்குக் காலக் கழிவு தெரிதல் கூடாமையின் இங்ஙனம் கூறினர். "காலையும் பகலும் கையறு மாலையும், ஊர்துஞ் சியாமமும் விடியலும் என்றிப் பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்" (குறுந் - 32) என அள்ளூர் நன்முல்லையார் கூறியிருத்தலும் காணலாம். ஏமை உயிர்த் தோழியாதலின் அவளைப் பிரியகில்லாப் பாசத்தால் பிணிப்புண்டு சுயம்பிரபையும் ருட்சபிலத்துள்ள மயன் நகரத்தில் தங்கியிருந்தாள் என்றவாறு.

ஏமையோடு தனக்குள்ள அன்பின் பெருமையைப் புலப்படுத்த 'கணங்குழையினுளொடு உயர்காதல் ஒருவாதுற்று இணங்கிவரு பாசம் உடையேன்' எனப் பல சொல்லால் விரித்தாள் சுயம்பிரபை. இச் செய்யுள் முதலாக நான்கு செய்யுட்கள் அந்தாதித் தொடையாக அமைந்தமை நோக்கற்குரியது. (60)

4687. இருந்துபல நாள்கழியு
மெல்லையினில் வல்லோய்
திருந்திழையை நாடிவரு
தேவரிறை சீறிப்
பெருந்திறலி னுனையுயி
ருண்டுபிழை யென்றம்
முருந்துநிகர் மூரனகை
யாளையு முனிந்தான்.

'இருந்து, பல நாள் கழியும் எல்லையினில், வல்லோய்!
திருந்திழையை நாடிவரு தேவர் இறை சீறிப்,
பெருந்திறலினுனை உயிர் உண்டு, "பிழை" என்று, அம்
முருந்து நிகர் மூரல் நகையாளையும், முனிந்தான்.'

பொ:—வல்லமையுடையவனே! அவ்வாறு இங்குக் கூடி இருந்து பல நாட்கள் கழியும்பொழுதில் திருத்தமான அணிகலன் களை அணிந்த ஏமையைத் தேடிக்கொண்டு வந்த தேவேந்திரன், (அவள் இங்கு இருக்கக் கண்டு) கோபித்துப் பெரிய வல்லமை யுடையனுய மயனைக் கொன்றுவிட்டு, மயில் இறகின் அடியை ஒத்த பற்களையும் புன்னகையையும் உடைய அவ் ஏமையையும் (நீ செய் தது) பிழையாகும்' என்று வெகுண்டான்.

கு:—திருந்திழை என்பது வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய் ஏமைக்குப் பெயராயிற்று. திருந்திய அணிகலன்களை அணிந்தவளாகிய ஏமை என்க. தன் ஆட்சியிலிருந்த ஏமை பல நாட்களாகக் காணுமற் போகவே தேவேந்திரன் அவளைத் தேடலானுன் எனவும், பிலத்திலுள்ள இந்நகரில் வந்து தேடியபோது மயனுடன் ஏமை இருக்கக் கண்டு சீறி அவளைக் கவர்ந்து வந்த கள்வனுகிய மயனைக் கொன்ருன் எனவும் கொள்க. வலியவனுகிய மயன்பால் அகப்பட்டு மீளுதற் குரிய வல்லமையில்லாத ஏமையின் நிலைமையுணர்ந்து அவளைக் கொல்லுதல் செய்யாது வெகுளுதல் மட்டும் செய்தான். வலியவன்

கையில் அகப்பட்டாலும் அவன் சோர்வு நோக்கி மீளாது அவனோடு இயைந்து இன்புற்றது அவள் தவறு ஆதலின், இந்திரன் அத்தவற்றிற்காக முனிந்தான். தன்னை முனிபவரையும் முனிவு நீக்கும் முறுவலுடையாள் ஏமை என்பாள், 'மூரல் நகையாளையும் முனிந்தான்' என்றாள். (61)

இச்செய்யுளுக்குப் பின் பல சுவடிகளில் பின்வரும் அதிகப் பாடல்கள் காணப்படுகின்றன.

4687 (a) மாதவ ளுயிர்த்தமக வோரிருவர் வாசப்
போதுறை நறைக்குழ லொருத்திபுகழ் மேலோய்
ஏதமவண் மைந்தர்தவ மெய்தி யயல் போனர்
சீதளமுலைச் சிறுமி தாதையொடு சென்றாள்.

4687 (b) மத்தநெடு மாகளிறு கைக்குலிச வன்றாள்
சித்தமொடு மான்முகன் வணங்கி யயல் சென்றான்
வித்தகனு மாயிரவி லோசனனு மென்மேல்
முத்தநகை யாளை நனி நோக்கினன் முனிந்தான்.

4688. முனிந்தவளை யுற்றசெயன்
முற்றுமொழி கென்னக்
கனிந்ததுவர் வாயவளு
மென்னையிவள் கண்ணா
வனைந்துமுடி வுற்றதென
மன்னனுமி தெல்லாம்
நினைந்திவ ணிருத்திநகர்
காவனின தென்றான்.

'முனிந்து அவளை, "உற்ற செயல் முற்றும் மொழிக" என்ன, கனிந்த துவர் வாயவளும் என்னை, இவள் கண்ணா வனைந்து முடிவுற்றது என மன்னனும் இது எல்லாம் நினைந்து 'இவண் இருத்தி நகர் காவல் நினது' என்றான்.'

பொ :—(இந்திரன் அவ்வாறு) வெகுண்டு (அவளை நோக்கி), 'நடந்த செயல் முழுவதையும் சொல்லுக' என்று கேட்க, நன்கு முதிர்ந்த பவழம் போன்ற வாயையுடையளாகிய ஏமையும், என்னைச் சுட்டிக்காட்டி 'இவள் கண்ணாக நின்று எம்மிருவரையும் சேர்த்த லால் (இப்பழிபடு செயல்) நிகழ்ந்தது' என்று கூற இந்திரனும் இவற்றை யெல்லாம் சிந்தித்து (என் பிழைக்குத் தண்டனையாக)

'நீ இவ்விடத்திலேயே (தனித்து) இருப்பாயாக, இந்நகரின் பாதுகாவல் நின்னுடையதாகும்' என்று சொன்னன்.

கு :—என்னைச் 'சுட்டி' என ஒரு சொல் வருவிக்க. இனி என் ஐ எனப் பிரித்து என் தலைவனே! என இந்திரனை ஏமை விளித்த தாகவும் கொள்ளலாம். 'இவள் கண்ணு வனைந்து' என்புழிக் 'கண்ணு' என்பது காட்டாக என்னும் பொருளது; "சொன்ன சிவன் கண்ணு வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்காண்" (சிவஞான போதம்-5-2-1) என்புழிப்போல. காட்டாக என்பது ஒருவர் காதலை ஒருவர்க்கு உணர்த்துபவளாக என்னும் பொருளது. வனைந்து என்பது காரணப் பொருளின் வந்த வினையெச்சம்; 'மழை பெய்து நெல் விளைந்தது' என்புழிப் போல. வனைதலாவது ஏமையையும் மயனையும் அன்பால் பிணிப்புண்ணச் செய்தல். மயனேடு தன்னைச் சேர்ப்பித்தவள் சுயம்பிரபையே என்ற உண்மையை ஏமை இந்திரனுக்கு உணர்த்தினுள் என்க. 'வேந்தன் மேய தீம்புனலுலகமும்' (தொல். பொருள். 5) என்புழி இந்திரன், 'வேந்தன்' எனக் குறிப்பிடுதல் நோக்கி இங்கு அவனை 'மன்னன், என்ற சொல்லால் குறித்தார். சுயம்பிரபையின் இத்தவற்றுக்குத் தண்டனையாகவே இந்நகரத்தில் அவளைத் தனித்திருந்து காவல் புரியுமாறு இந்திரன் செய்தான் என்றவாறு. (62)

4689. என்றலும் வணங்கியிரு
ளேகுநெறி யெந்நாள்
ஒன்றுரை யெனக்குமுடி
வென்றுரை செயாமுன்
வன்றிறல வானரமி
ராமனருள் வந்தால்
அன்றுமுடி வாகுமிட
ரென்றவ னகன்ருன்.

என்றலும்; வணங்கி, "இருள் ஏகும் நெறி எந்நாள்?
ஒன்று, உரை, எனக்கு முடிவு" என்று உரை செயாமுன்,
"வன்திறல வானரம் இராமன் அருள் வந்தால்
அன்று முடிவாகும் இடர்" என்று, அவன் அகன்ருன்.

பொ :—என்று இந்திரன் கூறியவுடன் (யான் அவனை) வணங்கி, 'இத்துன்பம் நீங்கும் வழி எந்நாள் உளதாகும்? என் துன்பத்திற்கு முடிவு காலம் ஒன்று சொல்வாயாக' என்று வினவுவ

தற்கு முன்னமே, 'வலிமையும் திறமையுமுடைய வானரங்கள் இராமன் அருளால் (இங்கு வரும்) வந்தால் உன் துன்பம் முடிவு அடையும்' என்று கூறிவிட்டு அத்தேவேந்திரன் சென்றான்.

கு :—இருள் என்றது இங்குத் துன்பத்தை. "அச்சற்றேம மாகி யிருள் தீர்ந்து" (பதிற்றுப் பத்து. 90, 2) என்புழியும் இருள் இப் பொருளதாதல் காணலாம். எந்நாள் உளதாகும் என வருவித்து முடிக்க. எனக்கு முடிவொன்று உரை என இயையும். எனக்கு என்றது என் துன்பத்திற்கு என்றவாறு. விரைவுணர்த்த 'உரை செயாமுன்' என்றார்; உரை செய்த உடனே என்பதே பொருள். திறல வானரம் என்புழி அகரம் பெயரெச்ச விகுதி. திறமையுடைய வானரங்கள் என்க. வன்மை உடம்பிற்குரியது; திறல் அறிவின் மேற்று. இராமன் அருளால் வந்தால் என மூன்றனுருபு விரிக்க. இடர் அன்று முடிவாகும் என இயையும். சுயம்பிரபைக்குத் தண்டனை விதித்த இந்திரன் அத்தண்டனை முடிவடையும் காலமுங் கூறினான் என்க. (63)

4690. உண்ணவுள பூசவுள சூடவுள வொன்றோ
வண்ணமணி யாடையுள மற்றுமுள பெற்றே
னண்ணலவை விட்டுமை யடைந்திடுதல் வேண்டி
யெண்ணரிய பல்பக லிருந்தவ மிழைத்தேன்.

'உண்ண உள; பூச உள; சூட உள; ஒன்றோ?
வண்ண மணி ஆடை உள; மற்றும் உள பெற்றேன்;
அண்ணல்! அவை விட்டு, உமை அடைந்திடுதல் வேண்டி
எண் அரிய பல்பகல் இருந்தவம் இழைத்தேன்.'

பொ :—பெருமையுடையோனே! இங்கு உண்ணுதற்குரிய சுவை மிக்க கனி முதலிய பொருள்கள் உள்ளன; உடம்பில் பூசிக் கொள்ளு தற்கு உரிய சந்தனம் முதலிய வாசப் பொருள்கள் உள்ளன; கூந்தலில் சூடுதற்கு உரிய மண மலர் மாலைகள் உள்ளன; அவை மட்டுமா? பலவண்ணங்களையுடைய அழகிய பட்டாடைகள் இருக் கின்றன; மற்றும் உள்ளனவாகிய அணிகலன்கள் முதலியவற்றையும் பெற்றிருக்கின்றேன்; ஆயினும் அவற்றை யெல்லாம் அநுபவிக் காமல் விட்டு, (என் விடுதலைக்காக) உம்மை அடைய விரும்பி (உங்கள் வரவை யெதிர் நோக்கி) எண்ணுதற்கு அரிய மிகப் பல நாளாகப் பெருந்தவம் செய்தேன்.

கு :—'உண்ணவுள' என்பதை முன்னர், "அமிழ்துறழ் அயினியை அடுத்த வுண்டியும், தமிழ்நிகர் நறவமும் தனித்தண் தேறலும் இமிழ்கனிப் பிறக்கமும் பிறவும் இன்னன, கமழ்வுறத் தோன்றிய கணக்கில் கொட்பது" (37) எனவும், 'வண்ணமணி யாடையுள, பூசவுள, சூடவுள, மற்றுமுள' என்பவற்றை "கனக ராசியும், சவியுடைத்தூசும் மென்சாந்தும் மாலையும் அவிரிழைக் குப்பையும் அளவிலாதது" (35) எனவும் முன்னரே விளக்கியுள் ளமை காணலாம். உணவுப் பொருள்கள் இயல்பாக அங்கு விளையும் கனிகள் முதலியனவே யன்றிச் செயற்கையாலும் சுயம்பிரபை செய்து கொண்டிருக்கலாம் என்க. இருள் செறிந்த நகரத்தில் தனித் துயர் எய்தி வாடுபவள் ஆதலின், அங்குள்ள உணவு முதலியவற்றில் எல்லாம் பற்றுக் கொள்ளாமல், அங்கு நின்று விடுதலையடைதற்குத் துணையாக நிற்றற்குரிய இராமதூதராகிய வானரர் வருகையையே எதிர்நோக்கித் தவங்கிடந்தாள் சுயம்பிரபை என்றவாறு. உமை யடைந்திடுதல் வேண்டி என்றது விடுதலைக்குத் துணையாக நீங்கள் வருதலை வேண்டி என்றவாறு. ஒழிவில் காலமெல்லாம் உண்டும் பூசியும், சூடியும் உடுத்தும் அணிந்தும் மகிழ்ந்து தங்குதற்குரிய பொருள்களால் குறைவிலாத நகரமாயினும், தன் அன்பிற்குரிய துணை அங்கு இலாமையால் அத்துணையைப் பெற்று மகிழ அங்கு நின்று விடுதலையடைந்து விண்ணுலகடைய விரும்பினுள் சுயம்பிரபை என்க.

(64)

4391. ஐயிருப தோசனை
யமைந்தபில மையா
மெய்யுளது மேலுலக
மேறுநெறி காணே
னுய்யுநெறி யுண்டுதவு
வீரெனி னுபாயம்
செய்யும்வகை சிந்தையி
னினைத்திர்சிறி தென்ருள்.

'ஐ - இருபது ஓசனை அமைந்தபிலம், ஐயா!
மெய் உளது; மேல் உலகம் ஏறும் நெறி காணேன்;
உய்யும் நெறி உண்டு, உதவுவீர் எனின்; உபாயம்
செய்யும் வகை சிந்தையில் நினைத்திர், சிறிது' என்ருள்.

பொ :—ஐயா, நூறு யோசனை பரப்பமைந்த பிலமாக (இது) உண்மையாகவே உளது; ஆதலால் விண்ணுலகத்திற்கு ஏறிச்

செல்லும் வழி கண்டிலேன்; நீங்கள் உதவுவீர்களாயின் யான் உய்தி பெறும் வழியுண்டாகும்; அதற்குரிய உபாயம் செய்யும் வகையைச் சிந்தையால் சிறிது ஆராயுங்கள் என்றுள்.

கு :—நூறு யோசனை பரப்புடையதாக இப்பிலம் இருக்கின்றது என்பதை நம்பமாட்டார்களோ என்ற ஐயத்தால் 'மெய்யுளது' என்றுங் கூறினுள். "உதவுவீர் எனின் உய்யு நெறியுண்டு" எனவும், 'சிறிது நினைத்திர்' எனவும் இயையும். இந்திரன் 'இராம தூதர்களாகிய வானரங்களால் விண்ணுலகடைவாய்' என்று கூறிச் சென்றமையால் 'உதவுவீரெனின் உய்யு நெறியுண்டு; சிந்தையிற் சிறிது நினைத்திர்' என்று உறுதியாகக் கூறினுள். உபாயம் - தந்திரம்; சூழ்ச்சி. ஓசனை என்பது நாற்காதம் கொண்டது. காதம் என்பது ஏழரை நாழிகை தொலைவு. முப்பதுகல் தொலைவு ஒரு யோசனை என்னலாம். நூறு யோசனை பரப்புள்ள இருள் செறிந்த பிலத்தைக் கடந்து வழிகாண்டல் அரிதாகலின் சுயம்பிரபை உபாயம் செய்யும் வகை சிந்தையில் சிறிது நினைக்கச் சொன்னுள். ஐயா என அனுமானை விளித்தவள் ஏனை வானரரையும் உளப்படுத்தி 'உதவுவீரெனின்' எனப் பன்மையாகக் கூறினுள்; ஒருமைப் பன்மை மயக்கம்; கலம்பெறு கண்ணுளரொக்கற் றலைவ! (மலைபடுகடாம் - 50) என்று ஒருமையால் விளித்து "இரும்பேரொக்கலொடு பதமிகப் பெறுகுவிர்" எனப் பன்மைச் சொல்லால் முடித்திருத்தலும் காணலாம், (65)

### அனுமனின் மறுமொழி

4692. அன்னது சுயம்பிரபை
  கூறவனு மானும்
மன்னுபுலன் வென்றுவரு
  மாதவள் மலர்த்தாள்
சென்னியின் வணங்கிநனி
  வானவர்கள் சேரும்
பொன்னுலக மீகுவ
  னினக்கெனல் புகன்றுன்.

அன்னது சுயம்பிரபை கூற, அனுமானும்
மன்னுபுலன் வென்றுவரும் மாது அவள் மலர்த்தாள்
சென்னியின் வணங்கி, 'நனி வானவர்கள் சேரும்
பொன்னுலகம் ஈகுவல், நினக்கு' எனல் புகன்றுன்.

பொ :—அவ்வாருன சொல்லைச் சுயம்பிரபை சொல்ல,-அனுமானும் - உடம்பில் நிலைபெற்ற ஐம்பொறிகளையும் வென்று அடக்கிய பெண்டாகிய சுயம்பிரபையின் தாமரை மலர் போன்ற பாதங்களைத் தலையால் வணங்கி, 'நினக்குத் தேவர்கள் மிகுதியாகக் கூடியுள்ள பொன்னுலகத்தைக் கொடுக்கின்றேன்' என்பதைத் தெரிவித்தான்.

கு :—ஆறுமைம்பொறியுடைய அனுமானுல் வணங்கத்தக்க தகுதி சுயம்பிரபைக்கு உண்டு என்பது தோன்ற, 'மன்னுபுலன் வென்றுவரும் மாது' என அவளைச் சிறப்பித்தார். வானவர்கள் நனி சேரும் பொன்னுலகம் என இயையும். தேவர் குழுவிலிருந்து பிரிந்து தனித்து வருந்துபவளுக்கு ஆறுதல் தோன்ற வானவர்கள் நனி சேரும் பொன்னுலகம் ஈகுவல், என்ருன். பொன்னுலகம் ஈகுவல் என்றது, பொன்னுலகம் செல்ல வழி காட்டுவேன் என்ற கருத்தினது. (66)

## அவ்வாறே செய்ய அனுமனை வானரரும் வேண்டல்

**4693.** முழைத்தலை யிருட்கடலின் மூழ்கிமுடி வேமைப்
பிழைத்துயி ருயிர்க்கவருள் செய்தபெரி யோனே
யிழைத்திசெய லாயவினை யென்றனரி ரந்தார்
வழுத்தரிய மாருதியு மன்னது வலிப்பான்.

**'முழைத்தலை இருட் கடலின் மூழ்கி முடிவேமைப்**
**பிழைத்து உயிர் உயிர்க்க அருள்செய்த பெரியோனே!**
**இழைத்தி, செயலாயவினை' என்றனர் இரந்தார்;**
**வழுத்தரிய மாருதியும் அன்னது வலிப்பான்.**

பொ :—(வானரர்கள் அனுமனை நோக்கி) 'பிலத்தில் இருளாகிய கடலில் மூழ்கி இறப்பதற்கிருந்த எங்களை உயிர் பிழைத்து மூச்சு விடுமாறு அருள் செய்த பெரியவனே! இனிச் செய்யத் தக்கதாகிய செயலைச் செய்வாயாக' என்று சொல்லி வேண்டினர்; புகழ்ந்து சொல்ல இயலாத பெருமையுடைய அனுமனும் அவ்வாறே செய்வதாக மனத்தில் உறுதி கொள்வான் ஆயினன்.

கு :—முழை என்றது பிலத்தை. இருளின் மிகுதி தோன்ற இருட்கடல் என உருவகம் செய்தவாறு. 'பொன்றினம்யாமெனப் பொருமுபுந்தியர், வன்றிறல் மாருதி வல்லையோ வெமை இன்றிது காக்க' (29) என முன் வானரர்கள் வேண்டியபோது பேருருத் தாங்கி அனுமன் அவர்களை இருள் வழியினின்று கடக்கச் செய்த உதவியை நினைந்து 'பிழைத்துயிர் உயிர்க்க அருள் செய்த பெரியோனே! என

விளித்தனர். இவ்விளியால் இப்பிலத்தை விடுத்துத் தம்மையும் சுயம்பிரபையும் மேலேற்றுதற்கும் அனுமன் வல்லவன் என்பதையும் புலப்படுத்தினர் வானரர். இழைத்தி - செய்வாயாக; முன்னிலை ஏவல். மாருதியின் புகழ் சொல்ல இயலாத பெருமையது ஆதலின் 'வழுத்தரிய மாருதி' என்றார். வலித்தல், உறுதியாகக் கொள்ளுதல். (67)

## அனுமன் பேருருக் கொண்டு பிலத்தைப் பிளத்தல்

**4694.** நடுங்கன்மி னெனுஞ்சொலை
நவின்றுநகை நாற
மடங்கலி னெழுந்துமழை
யேறரிய வானத்
தொடுங்கலில் பிலந்தலை
திறந்துலகொ டொன்ற
நெடுங்கைகள் பெயர்த்துநெடு
வானுற நிமிர்ந்தான்.

**'நடுங்கன்மின்' எனும் சொலை நவின்று, நகை நாற**
**மடங்கலின் எழுந்து, மழை ஏறு அரிய வானத்து**
**ஒடுங்கல்இல் பிலம் தலை திறந்து உலகொடு ஒன்ற**
**நெடுங்கைகள் பெயர்த்து, நெடுவான் உற நிமிர்ந்தான்.**

பொ:—(மற்றையோரை நோக்கி) நடுங்காதீர்கள், என்னும் அஞ்சல் சொல்லைச் சொல்லிவிட்டுப் புன்னகை தோன்ற ஆண் சிங்கம்போல் எழுந்து, மேகங்களும் ஏறுதற்கு அரிய உயர்ந்த வான வட்டத்தில் ஒடுங்குதலின்றி(ப் பூமிக்குள் மறைத்து கிடந்த) பிலத்தின் மேலிடம் திறக்கப் பெற்றுப் பூவுலகத்தோடு ஒன்றுருமாறு, தன் நீண்ட கைகளை மேலே உயர்த்திக் கொண்டு அனுமன் நீண்ட ஆகாய முகட்டில் பொருந்துமாறு உயர்ந்து வளர்ந்தான்.

கு:—பூவுலகம் முழுமையும் வான வெளியில் ஒடுங்கியிருத்தலே இயல்பாகவும் இப்பிலம் வான வெளியில் ஒடுங்காது பூமிக்குள் ஒடுங்கியிருந்தமை புலப்பட 'வானத்தொடுங்கலில்பிலம்' என்றார். மழையேறரிய என்பது வானத்திற்கு அடை; வானத்தின் உயர்ச்சி புலப்படுத்தியவாறு. பிலத்தின் மேலிடம் இங்குத் தலை எனப்பட்டது. பூவுலகினின்றும் பிலத்தை வேறுபடுத்திக் காட்டிக் கொண்டிருந்தது பிலத்தின்மேல் மூடியிருந்த மண்ணேயாதலின் அம்மண் அனுமன் கைகளால் சிதைந்து போகவே பிலத்திற்கும் பூவுலகிற்கும் வேறு

பாடு நீங்கிற்று என்பார், 'பிலந்தலை திறந்து உலகொடொன்ற' என்றார். நெடுங்கைகள் பெயர்த்தலாவது நீண்ட கைகளை மேலே உயர்த்தல். இனி, பிலத்தலையை நெடுங்கைகளால் பெயர்த்துத் திறந்து என இயைத்துப் பொருள் கூறலுமாம்; அதற்குப் 'பிலத்தலை' என்பது பாடமாதல் வேண்டும். 'வானுற நிமிர்ந்தான்' என்றது, அனுமன் பேருருக் கொண்டு நிமிர்ந்தமை விளக்கியவாறு. 'பன்னிரண்டி யோசனை படர்ந்த மெய்யினன்' (31) என முன் இருள்வழியில் பேருருக் கொண்டமை கூறப்பட்டிருத்தல், காணலாம். நாறுதல் - தோன்றுதல். நகைநாற என்றமையால், இப்பிலத்தைப் பிளத்தல் அனுமனுக்கு அரிய செயலன்று என்பது குறிப்பிட்டவாறு. (68)

4695. எருத்துயர் சுடர்ப்புய மிரண்டுமெயி றென்ன
மருத்துமக னிப்படி யிடந்துற வளர்ந்தான்
கருத்துநிமிர் கண்ணினெதிர் கண்டவர் கலங்க
உருத்துல கெடுத்தகரு மாவினையு மொத்தான்.

எருத்து உயர் சுடர்ப்புயம் இரண்டும் எயிறு என்ன,
மருத்து மகன் இப்படி இடந்து, உற வளர்ந்தான்;
கருத்து நிமிர் கண்ணின் எதிர் கண்டவர் கலங்க
உருத்து உலகு எடுத்த கருமாவினையும் ஒத்தான்.

பொ :—வாயுவின் மகனாகிய மாருதி இவ்வாறாகப் பிடரியின் இருபுறத்திலும் உயர்த்தியுள்ள ஒளிமிக்க தோள்கள் இரண்டும் கோரப் பற்கள் போல் தோன்ற(ப் பிலத்தின் தலையை) இடித்துக் கொண்டு மிகுதியாக வளர்ந்தவனாய்க், கருத்து நன்கு ஊன்றிய கண்ணெதிரில் கண்டவர்கள் கலங்குமாறு பேருருவம் கொண்டு கடலில் மறைந்திருந்த பூமியைக் கோரப் பல்லினால் பெயர்த்தெடுத்த கரிய வராகத்தினையும் ஒத்து விளங்கினான்.

கு :—வளர்ந்தவனாய்க் கருமாவினையும் ஒத்தான் என்க. கருமா என்றது திருமாலின் வராக அவதாரத்தினை. இது, உவமையணி. அனுமனுக்குக் கருமாவினை உவமை கூறக் கருதியவர், அனுமனுக்குக் கோரப்பல் இன்மை நினைந்து 'புயமிரண்டும் எயிறென்ன' என்று உவமித்து அக்குறையை நீக்கியவாறு. எருத்து - பிடரி. வளர்ந்தவனாய் ஒத்தான் என முற்றெச்சமாக்கி முடிக்க. இனி, இப்படி யிடந்துற வளர்ந்தானாகிய மருத்துமகன், புயமிரண்டும் எயிறென்னக் கருமாவினையும் ஒத்தான் என்று மாற்றிப் பொருள் கூறலும் ஆம். மருத்து - வாயுதேவன். இடத்தல் - பிளத்தல். வராகத்தின் பேருருவம் தோன்றக் கண்ணினெதிர் கண்டவர்

கலங்குதல் கூறினர். கருத்தூன்றாத கண்களுக்கு யாதும் காணப் படாமையின் 'கருத்து நிமிர் கண்' என்று சிறப்பித்தார். கருத்து நிமிர்தலாவது மனம் கண்வழியில் ஊன்றி நிற்றல்; வராகத்தின் பேருருவத்தைக் கண்டவர்கள் அச்சத்தால் கலங்குவார்கள் என்ற வாறு. உருத்து - உருவுகொண்டு; கோபித்து எனலும் ஆம். அனுமன், தன் இரு கைகளும் கோரப் பற்கள்போல் விளங்கப் பிலத்தின் தலையைப் பிளந்து கைக்கொண்டு எழுந்த தோற்றம், கடலில் அழுந்திக் கிடந்த பூமியைக் குத்தி யெடுத்துவந்த வராகம் போல் இருந்தது என்றவாறு. உம்மை எதிரது தழுவியது. (69)

**4696.** மாவடி வுடைக்கமல
நான்முகன் வகுக்கும்
தூவடி வுடைச்சுடர்கொள்
விண்டலை தொளைக்கும்
மூவடி குறித்துமுறை
யீரடி முடித்தான்
பூவடி வுடைப்பொருவில்
சேவடி புரைந்தான்.

மா வடிவுடைக் கமல நான்முகன் வகுக்கும்
தூ வடிவுடைச் சுடர் கொள் விண் தலை தொளைக்கும்
மூ அடி குறித்து முறை ஈர் அடி முடித்தான்
பூ வடிவுடைப் பொருவு இல் சேவடி புரைந்தான்.

பொ :—சிறந்த வடிவையுடைய (திருமாலின் உந்திக்) கமலத்தில் வாழ்கின்ற பிரமன் படைத்த தூய தோற்றமுடைய சூரியன் முதலிய சுடர்களைத் தன்னிடங் கொண்டுள்ள, விண்ணின் மேல் முகட்டைத் தொளைத்துக் கொண்டு சென்ற, (மாவலியின்பால்) மூவடி மண் வேண்டிப் பெற்று (உடனே) முறையாக விண்ணுலகையும் மண்ணுல கையும் இரண்டடியால் அளந்து முடித்த திருவிக்கிரமனின் அழகிய வடிவையுடைய ஒப்பில்லாத சிவந்த திருவடியையும் ஒத்துத் தோன்றினன்.

கு :—நான்முகன் வகுக்கும் விண் எனவும் தொளைக்கும் சேவடி எனவும் இயையும். விண்ணின் முகட்டைத் தொளைக்கும் திருமாலின் திருவடி போலப் பிலத்தின் முகட்டைப் பிளந்து கொண்டு அனுமன் எழுந்தமையால் 'சேவடி புரைந்தான்' என்று உவமை கூறினர். திருவடி என்னும் பெயர்க்குரிய அனுமன் அத்திருவடி செய்தாற்

போன்ற செயலையும் செய்தான் என்றவாறு. "மூவடி குறித்து முறை யீரடி முடித்தான்" என்பது, "மூவுலகு மீரடியால் முறை நிரம்பா வகை முடியத் தாவிய சேவடி" (சிலப் - ஆய்ச்சியர் குரவை-35) என்ற பகுதியை நினைப்பித்தல் காணலாம். முடித்தான் என்றது பெயர்; திருவிக்கிரம அவதாரத்தை உணர்த்தியது. முன் செய்யுளில் திருமாலின் வராக அவதாரத்தை உவமை கூறியவர் இச்செய்யுளில் அவன் திருவிக்கிரம அவதாரத்தை உவமை கூறினர்.

பொருவரு வேலை தாவும் புந்தியான் - புவனந்தாய
பெருவடி வுயர்ந்த மாயோன் மேக்குறப் பெயர்ந்த தாள்போல்
உருவறி வடிவி னும்ப ரோங்கின னுவமையானும்
திருவடி யென்னுந் தன்மை யாவர்க்குந் தெரிய நின்றான்.

(மயேந்திரப் - 26) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (70)

### அனுமன், பிலத்தின் மேற்பகுதியை மேல் கடலில் எறிதல்

4697. ஏழிருப தோசனை யிடந்துபடி யின்மே
லூழுற வெழுந்ததனை யும்பரு மொடுங்கப்
பாழிநெடு வன்பிலனு ணின்றுபடர் மேல்பா
லாழியி லெறிந்தனுமன் மேகமென வார்த்தான்.

ஏழ் - இருபது ஓசனை இடந்து, படியின்மேல்
ஊழ் உற எழுந்ததனை உம்பரும் ஒடுங்கப்
பாழிநெடு வன் பிலனுள் நின்று, படர்மேல்பால்
ஆழியில் எறிந்து அனுமன், மேகம் என ஆர்த்தான்.

பொ :—(பிலத்தின் மேற்றட்டை) நூற்று நாற்பது யோசனை அளவு பெயர்த்துப், பூமியின்மேல் (சிதைவுருமல்) ஒழுங்குற வட்டமாக மேற்கிளம்பிய அம்மேற்றட்டினைத் தேவர்களும் (தம்மேலே விழுமோ என அஞ்சி) ஒடுங்குமாறு அனுமன் பெருமையுடைய நெடிய வன்மை வாய்ந்த அப்பிலனுள் நின்று, பரவிய மேலைக் கடலுள் வீசி எறிந்து மேகம் போல ஆரவாரித்தான்.

கு :—ஏழிருபது - நூற்று நாற்பது. இனி ஏழும் இருபதும் என உம்மைத் தொகையாகக் கொண்டு இருபத்தேழு யோசனை எனப் பொருள் கொள்ளலும் ஆம். என்னை? முன் "ஐயிருபதோசனை அமைந்த பிலமையா" (65) எனக் கூறியுள்ளமையால் அனுமன் பெயர்த்த அளவு நூறு யோசனைக்குக் குறைந்ததாக இருத்தலே பொருத்தமாதல் காணலாம். நூற்று நாற்பது யோசனை என்றே

பொருள் கொள்ளின், நூறு யோசனை பரப்புள்ள பிலத்திற்கு அப்பா லுள்ள இடமும் அனுமனால் பெயர்க்கப்பட்டது என்றும், அவன் ஆற்றலைப் புலப்படுத்த இங்ஙனம் செய்தான் என்றும் கொள்ளல் வேண்டும். அனுமன் தோள்களால் தூக்கியதால் அப்பிலத்தின் மேற்றட்டுப் பூமியின்மேல் சிதையாமல் ஒரே வட்டமாக மேலெழுந் தது என்றதும் அவ்வாறு எழுந்ததனை அனுமன் பிலத்தில் நின்று கொண்டே மேல்பால் கடலில் வீசி யெறிந்தான் என்றும் கொள்க. அனுமன் அம்மேற்றட்டை வீசத் தொடங்கியபோது தேவர்கள் தம் மேல் விழுமே என அஞ்சி ஒடுங்கலாயினர் என்றவாறு. பாழி - பெருமை. வானுற ஓங்கி வளர்ந்த அனுமன் ஆரவாரத்திற்கு வானில் இயங்கும் மேகத்தின் ஆரவாரமே ஏற்ற உவமையாதல் காணலாம். பிலம் ஆழ்ந்துள்ளதாயினும் அனுமன் பேருருக் கொண்டமையால் அப்பிலத்துள் நின்றே பெயர்த்த மேற்றட்டை மேல் கடலில் எறிதல் எளிதாயிற்று. உம்பரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு; அஞ்சத் தகாத தேவர்களும் அஞ்சி ஒடுங்கினர்கள் என்பது பொருளாதலின் என்க. (71)

## சுயம்பிரபை பொன்னுலகம் போதல்

4698. இன்றுமது மேல்கட
லியக்கில்பில தீவா
நின்றுநிலை பெற்றுளது
நீணுதலி யோடும்
குன்றுபுரை தோளவ
ரெழுந்துநெறி கொண்டார்
பொன்றிணி விசும்பினிடை
நன்னுதலி போனாள்.

இன்றும் அது மேல்கடல் இயக்குஇல் பில தீவா
நின்று நிலை பெற்றுளது; நீள் நுதலியோடும்
குன்று புரை தோளவர் எழுந்து நெறி கொண்டார்;
பொன் திணி விசும்பினிடை நன்னுதலி போனாள்.

பொ :—(அனுமனெறிந்த) அப்பிலத்தின் மேற்பகுதி, மேலைக் கடலில் மக்கள் இயக்கம் இல்லாத 'பிலத்தீவு' என்ற பெயருடைய தாக இன்றும் நின்று நிலைபெற்றுள்ளது; நீண்ட நெற்றியையுடைய சுயம்பிரபையோடும் குன்றை ஒத்த தோளையுடைய வானரர்கள் அப்பில நகரத்திலிருந்து எழுந்து தரையுலகிற்குப் போனார்கள்;

(பின்பு) அந்த நல்ல நெற்றியையுடைய சுயம்பிரபை பொன்னொளி செறிந்த விண்ணுலகிற்குப் போனாள்.

கு :—அது என்றது அனுமனால் பெயர்த்து எறியப்பட்ட பிலத்தின் மேற்பகுதியை. பிலத்தின் மேற்பகுதி மேலைக்கடலில் திட்டாகக் கிடந்ததாலும், பிலத்தின் மேற்றட்டு வீழ்ந்த இடமாதலாலும் 'பிலத்தீவு' எனப் பெயர் பெற்றது. 'அது இன்றும் நின்று நிலை பெற்றுளது' என இயையும். மக்கள் யாரும் அங்கு வாழாமையால் 'இயக்கு இல் பிலத்தீவு' என்றார். பிலத்தை மறைத்திருந்த மேற்பகுதி அனுமனால் கடலில் எறியப்பட்டவுடன் பிலம் இருணீங்கி வெளியாகி ஒளிபெற்றமையால் வானரர், சுயம்பிரபையுடன் எளிதில் அப்பில நகரத்திலிருந்து எழுந்து தரையுலகிற்கு வந்து சேர்ந்தார்கள் எனவும், தரையுலகிற்கு வந்தவுடன் சுயம்பிரபை விண்ணுலகிற்கு வழி தெரிந்தவளாய்த் தனியே அவ்வுலகிற்குச் சென்றாள் எனவும் கொள்க. பொன்னுலகமாதலின் 'பொன்திணி விசும்பு' எனப்பட்டது. பொன் அணுக்கள் செறிந்த - பொன் மயமான - விண்ணுலகம் என்க. தோள்கள் திரண்டிருத்தல்பற்றி அதற்குக் குன்று உவமையாயிற்று. தோளவர் என்றது வானரரை. (72)

இச்செய்யுளுக்குப்பின் - சில சுவடிகளிலும், 46ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்திலும,

4698. (a) மேருவரை மாமுலையண் மென்சொலினள் விஞ்சு
மாருதியி னைப்பலவு வந்து மகிழ் வுற்றே
ஏருறு சுயம்பிரபை யேம நெறி யெய்தத்
தாருவளர் பொற்றல னிடைக்கடிது சார்ந்தாள்.

என்ற பாடல் காணப்படுகின்றது. அது மேலைச் செய்யுளோடு இயையாமையின் மிகைப் பாடலாகக் கொள்ளப்பட்டது.

## வானரர் ஒரு பொய்கைக் கரையை அடைதல்

4699. மாருதி வலித்தகையை பேசிமற வோரும்
பாரிடை நடந்துபக லெல்லைபட ரப்போய்
நீருடைய பொய்கையினி னீள்கரை யடைந்தார்
தேருடை நெடுந்தகையு மேலைமலை சென்றான்.

மாருதி வலித்தகையை பேசி, மறவோரும்,
பாரிடை நடந்து, பகல் எல்லை படரப் போய்,
நீருடைய பொய்கையினின் நீள்கரை அடைந்தார்
தேருடை நெடுந்தகையும் மேலைமலை சென்றான்.

பொ :—வானர வீரர்களும் அனுமனது வலியின் பெருமையைப் புகழ்ந்து பேசிக் கொண்டு அன்றைப் பகல் முழுவதும் பூமியில் நடந்து சென்று, நீர் நிறைந்த ஒரு பொய்கையின் நீண்ட கரையை அடைந்தார்கள் ; (விண்ணில் செல்லும்) தேரையுடைய சூரியனும் மேற்கு மலையை அடைந்தான் ; (மறைந்தான்)

கு :—மறவோர் என்றது வானர வீரரை. பகல் எல்லை படரப் பாரிடை நடந்துபோய் என மாறிக் கூட்டுக. தேருடை நெடுந்தகை என்றது, சூரியனை. விண்ணில் ஓய்வின்றித் திரியும் சிறப்புச் சூரியன் தேருக்கே இருத்தலின் இங்குத் தேர் என அடைமொழியின்றிக் கூறப்பட்டது. சூரியனுக்குத் தேர் இருப்பதாகக் கூறுவது கவி மரபு. "காய்சினத்த கதிர்ச் செல்வன் தேர்பூண்ட மாபோல வைகறுெறு மசைவின்றி" (பட்டினப்-122-124) எனக் கடியலூர் உருத்திரங் கண்ணனர் கூறுதலும் காண்க. சூரியன் மாலையில் மேற்கு மலையில் மறைவதாகக் கூறுவதும் கவிமரபே. "பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலை சேர" (கலி - 118) என்றதும் காண்க. பிலத்தில் தம் துயர் துடைத்த மாருதியைப் புகழ்ந்து கொண்டே வானரவீரர்கள் தரையிடை நடந்து சென்று மாலையில் ஒரு பொய்கைக் கரையை அடைந்தார்கள் என்றவாறு. மறவோரும் அடைந்தார் என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளது ; சுயம்பிரபை விண்ணுலகடைந்ததேயன்றி மறவோரும் கரையடைந்தார் என்று பொருள் படுதலால் என்க. (73)

பிலம்புக்கு நீங்கு படலம் முற்றிற்று

# 14. ஆறுசெல் படலம்

அங்கதன் அனுமன் முதலிய வானரவீரர், சுக்கிரீவன் கூறிய வழியே (தென் திசையில் சீதாபிராட்டியைத் தேடிச்) சென்ற செய்தி பேசுதலின், இப்பகுதி ஆறுசெல் படலம் என்று பெயர் பெற்றது. இப்பகுதி, 13, 16-20, 28, 40, 47, 53, 56 என்னும் குறியீடுள்ளவற்றில் ஆற்றுப்படலம் என்றும், 1, 12, 15, 22, 24, 27, 33, 44 என்னும் குறியீடுள்ளவற்றில் வழி நடைப் படலம் என்றும் தலைப்பிட்டு வரையப்பட்டுளது. இதனுள் அடங்கிய பாடல்கள் 55. சந்தம் 4.

சீதாபிராட்டியைத் தேடிச் சென்ற வானரர் வழியிடையே ஒரு பொய்கைக் கரையை யடைந்து, வழி நடந்த இளைப்புத் தீர நன்னீர் பருகி, அப்பொய்கையை அடுத்திருந்த சோலையில் காயும் கனியும் தேனும் உண்டு உறங்குவாராயினர். அது கண்ட துமிரன் என்பான் ஓர் அசுரன், 'என் ஆட்சியில் உள்ள இப்பொய்கைச் சூழலில் வந்தடைந்த இவர்கள் யார்?' என்று சினந்து, உறங்கும் அங்கதன் மார்பில் ஓங்கியறைந்தான். அதனால் உறக்கம்' நீங்கிய அங்கதன், தன்னைத் தாக்கிய அசுரனை 'இவன் இலங்கை வேந்தன் போலும்' என்று நினைந்து, தானும் தாக்கினன். அசுரன் அலறிவீழ்ந்து இறந்தனன். அவன் அலறல்கேட்டு விழித்தெழுந்த அனுமன் முதலிய வானரர், 'இவன் யார்' என்று அங்கதனை வினவ, அவன் 'அறியேன்' என்றான். அது கேட்ட சாம்பன், 'இவனை யான் நன்கறிவேன்; இவன் இந்தப் பொய்கையை ஆள்பவன்; துமிரன் என்னும் பெயர் பூண்ட அசுரன்' என்றனன்.

அதன்பின், வானரவீரர், தண்டகம் முதலிய வனங்களிலும், பெண்ணை, கோதாவரி முதலிய ஆறுகளை அடுத்த இடங்களிலும், முண்டகத்துறை சுவணகத்துறை முதலிய நீர் நிலைகளிலும், அவற்றை அடுத்த சூழல்களிலும், பாண்டு, மரகதம், அருந்ததி, திருவேங்கடம் முதலிய மலைகளிலும், குகைகளிலும், தாழ்வரைகளிலும், தசநவம், விதர்ப்பம், குலிந்தம், எழுவகைக் கொங்கணம், தொண்டை நாடு பொன்னி நாடு, மலைமண்டிலம், தென் தமிழ்நாடு முதலியவற்றிலும் தேடிச் சீதாபிராட்டியைக் காணாராய்த் தென் கடலை அடுத்துள்ள மகேந்திர மலையை அடைந்தனர் என்பது இப் படலத்தின் நுவல்பொருட் சுருக்கம்.

வான்மீகத்துள், சீதாதேவியைத் தேடுமாறு தெற்குத்திசைக்கு வானர வீரரை அனுப்புங்கால், தேடவேண்டிய இடங்களாகச்

சுக்கிரீவன் குறித்தவற்றுள் பலவற்றையும், நாடவிட்ட படலத்திலும் இவ்வாற்றுப் படலத்திலும் பேசிய கம்பர், வான்மீகத்திற் கூறப் படாத திருவேங்கட மலையையும் தொண்டைநாட்டையும் அவற்றின் பெருமையும் சிறப்பும் புலப்பட இப்படலத்துள் பல பாடல்களால் விரித்துப் பேசியுள்ளார்.

பரம் வியூகம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சை என்னும் திருமாலின் ஐவகை நிலையுள், விபவ நிலையான இராமாவதாரம் பற்றிப் பேசும் இந்நூலுள், அப்பெருமானுடைய பிற நிலைகளைப் பற்றியும் மற்றை அவதாரங்களைப்பற்றியும் சந்தர்ப்பம் வாய்த்த இடமெல்லாம் பேசுவது ஆசிரியர் இயல்பு. அம்முறையில், வைணவர், கோயில் என்றும், 'திருமலை' என்றும் பாராட்டும், அர்ச்சாவதாரத்தலங்களுள்,

" பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாங்காண
அணியரங்கந் தந்தானை அறியாதார் அறியாதார் "
(பால. குலமுறை. 2)

என்று முன்னே கோயிலைப் பேசிய ஆசிரியர், இங்கு திருமலையின் (திருவேங்கடமலையின்) பெருமை பேசுவதும் அமைவுடையதாகும்.

'தொண்டை நன்னாடு சான்றோருடைத்து' என்பர் ஆன்றோர். வீடுபேற்றுக்குக் காரணமான ஞானநிறைவுடைய சான்றோர் தங்கிய தொண்டை நாட்டினை ஆசிரியர் இப்படலத்துள் (46) வீட்டுலகத் தோடு உவமித்து முற்றுவித்திருப்பது உளங்கொளற்கு உரியதாகும்.

சோழநாட்டைக் கூறுமிடத்து, 'நாறு வளர்க்குறும் சேறுநாறுவ செங்கழுநீர்' என்றும், பாண்டிநாட்டைக் கூறுமிடத்து. அத்திருத்தகு நாட்டினை யண்டர்நா, டொத்திருக்குமென் றுலுரை யொக்குமோ ?, எத்திறத்தினும் ஏழுலகும் புகழ், முத்தும் முத்தமிழும் தந்து முந்துமோ ?' என்றும் ஆசிரியர் அந்நாடுகளுக்குத் தனித்தனி சிறப்பாக அமைந்த வளங்களைப் பேசி முற்றுவித்திருப்பதும் படித்துப் படித்து இன்புறும் பான்மைத்து.

முன்னே பல இடங்களிலும் சீதாபிராட்டியைத் தேடிப் பின் பிலத்துட்புக்கு மீண்ட வானரர், சம்பாதியிருந்த விந்தியமலையின் தென்பகுதியை அடைந்தனர் என்று வான்மீகம் கூறுகிறது.

பிலம்புக்கு மீண்ட வானரர், பின் பல இடங்களிலும் சீதாதேவி யைத் தேடி, முடிவில் சம்பாதியிருந்த தென்கடலையடுத்த மகேந்திர மலையை அடைந்தனர் என்பது கம்பர் கூற்று.

இபபடலத்துத் தொண்டை நாட்டின் பெருமை கூறுவதாயமைந்த 'செல்வரென்றும்' என்று தொடங்கும் 46-ஆம் பாடலும், சோழநாட்டு வளம் கூறுவதாயமைந்த 'தாறுநாறுவ' என்று தொடங்கும் பாடலும், 45, 52 என்னும் குறியிடுள்ள புத்தகங்களுள், பாட மாற்றத்தால், இடைச் செருகல் என்று கொண்டு விலக்கப்பட்டன. அவற்றுக்குக் கிடைத்த பாட வேறுபாடுகளை யெல்லாம் நன்கு ஆராய்ந்ததில், அவற்றின் உண்மைப் பாடம் புலனாயிற்று; அவற்றை நீக்கிவிட்டால் அந்நாடுகளின் சிறப்பு முற்றும் பேசியதாகாது என்பதும் தோன்றியது. ஆதலால் எல்லாச் சுவடிகளிலும் உள்ள அவ்விரண்டு பாடல்களையும் இப்படலத்துள் உரிய இடத்தில் அமைத்துக் கொள்ளல் ஆயிற்று.

---

# 14. ஆறுசெல் படலம்

பொய்கையை அடைந்த வானரர் கனியும் காயும் தேனும் உண்டு உறங்கத் துமிரன் என்னும் அசுரன் அங்கே வருதல்

4700. கண்டார் பொய்கைக் கண்ணக
☆ னன்னீர்க் கரைகாமுற்
றுண்டார் தேனு மொண்கனி
காயு மொருசூழற்
கொண்டா ரன்றே யின்றுயில்
கொண்ட குறியுன்னித்
தண்டா வென்றித் தானவன்
வந்தான் றகவில்லான்.

கண்டார் பொய்கைக் கண் அகல் நல்நீர்க்கரை ; காமுற்று உண்டார் தேனும் ஒண் கனி காயும், ஒரு சூழல் கொண்டார் அன்றே இன் துயில் ; கொண்ட குறி உன்னித் தண்டா வென்றித் தானவன் வந்தான் தகவு இல்லான்.

பொ :—பரவிய மிக்க நல்ல நீரையுடைய பொய்கையின் கரையைக் கண்ட வானரர் (அயலிலுள்ள சோலையில் பொருந்திய) தேனையும் நல்ல கனிகளையும் காய்களையும் விரும்பி உண்டு, ஓரிடத்து அப்பொழுதே இனிய உறக்கத்தை மேற்கொண்டனர் ; அவர் துயில் கொண்டதைக் குறிகளால் அறிந்து, தகுதியற்றவனும், தடைபடாத வெற்றியையுடையவனுமான (துமிரன் என்னும்) அசுரன் (அங்கு) வந்தான்.

கு :—உண்டார் என்பது முற்றெச்சம். சூழல் - இடம். துயில் என்பது, துயில்கொண்ட குறி எனப் பின்னும் கூட்ட நின்றது. தகவு—தகுதி = நடுநிலை.
(1)

துமிரன் உருவத் தோற்றமும் ஆற்றலும்

4701. மலையே போல்வான் மாகட
லொப்பான் மறமுற்றக்
கொலையே செய்வான் கூற்றை
நிகர்ப்பான் கொடுமைக்கோர்

நிலையே போல்வா னீர்மை
யிலாதா னிமிர் திங்கட்
கலையே போலுங் கால
வெயிற்ருன் கனல்கண்ணுன்.

மலையே போல்வான்; மா கடல் ஒப்பான்; மறம் முற்றக்
கொலையே செய்வான்; கூற்றை நிகர்ப்பான்; கொடுமைக்கு ஓர்
நிலையே போல்வான், நீர்மை இலாதான்; நிமிர் திங்கள்
கலையே போலும் கால எயிற்ருன் கனல் கண்ணுன்.

பொ:—(அவ்வசுரனை துமிரன் சலியா நிலையால்) மலையை ஒத்தவன், (பெரிய வுருவுடைமையால்) கடலினை ஒப்பான்; தீவினை முதிரும்படி கொலைத் தொழிலைச் செய்பவன்; (கொலைத் தொழிலே செய்தலால்) எமனை ஒப்பான்; கொடுமைக்கு நிலைக்களமானவன்; நல்லியல்பு இல்லாதவன்; வளர்ந்த பிறையின் கோடு போன்ற நஞ்சுள்ள கோரப் பற்களையுடையவன்; காந்துகின்ற கண்களை யுடையான்.

கு:—இச்செய்யுளில் மலையே போல்வான் என்பது தொடங்கி அடுத்த செய்யுளில் குன்றமேயனுன் என்பதுவரையுள்ளவற்றைப் பெயரடுக்காகக் கொண்டு, மலைபோல்பவனும் குன்றுபோல்பவனும் தகவில்லாதவனும் ஆன தண்டார் வென்றித்தானவன், அவர் துயில் கொண்ட குறி உன்னி வந்தான் என முதற் செய்யுளுடன் இணைத்து முடித்தலும் ஆம். மறம் - தீவினை. கொலையே செய்வான் என்றமை யால் பிறிது தொழில் அறியாமை பெறப்படும். கூற்று - எமன். நீர்மை - நல்லியல்பு. காலம்—காளம் = நஞ்சு. (2)

**4702.** ★ கருவி மாமழை கைக டாவிமீ
துருவி மேனிசென் றுலவி யொற்றலாற்
பொருவின் மாரிமே லொழுகு பொற்பினு
லருவி பாய்தருங் குன்ற மேயனுன்.

கருவி மா மழை, கைகள் தாவி, மீது
உருவி, மேனி சென்று உலவி, ஒற்றலால்,
பொரு இல் மாரி மேல் ஒழுகு பொற்பினுல்,
அருவி பாய்தரும் குன்றமே அனுன்.

பொ :—கூட்டமான சிறந்த மேகங்கள், கைகளைக் கடந்து மேற் போய் உடலிற் சென்று சஞ்சரித்துப் படிதலாலும், ஒப்பற்ற மழைநீர் மேலே வழியும் தன்மையாலும், அருவி பாயும் மலையினை ஒப்பான்.

கு :—கருவி - தொகுதி. மழை - மேகம். மலைமேற் செல்லுங் கால் கைகள் பக்கவரைகளாகக் கொள்ளல்தகும். உருவி - போய். மேனி - உடல். ஒற்றல் - தழுவுதல் = படிதல். பொரு - ஒப்பு. மாரி - மழைநீர். பொற்பு - தன்மை ; 'அகமலரில் வைத்துப் போற்றும் பொற்பினர்' (பெரியபுராணம், பெருமிழலை. 3) என்பதனுள் பொற்பு தன்மை என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். (3)

**4703.** வான வர்க்குமற் றவர்வ லிக்குநேர்
தான வர்க்குமே யரிய தன்மையா
னுன வர்க்கலா லவனொ டாடவே
றேன வர்க்குமொன் றெண்ண வொண்ணுமோ

வானவர்க்கும் மற்று அவர் வலிக்கு நேர்
தானவர்க்குமே அரிய தன்மையான் ;
ஆனவர்க்கலால் அவனொடு ஆட, வேறு
ஏனவர்க்கும் ஒன்று எண்ண ஒண்ணுமோ ?

பொ :—தேவர்களுக்கும் அவராற்றலை யொத்த ஆற்றலுடைய அசுரர்களுக்கும் வெல்லுதற்கரிய தன்மையுடையான்; அத்தேவரும் அசுரருமான அவர்க்கன்றி அத்தீயவனுடன் பொருதற்கு மற்றும் எத்தன்மையுடையவராலும் சிறிதும் நினைக்க முடியுமோ ? (முடியாது).

கு :—ஆடல் - போர் செய்தல். ஒன்றும் என உம்மை விரிக்க. இரண்டு மூன்றும் அடியில், 'தன்மையானன புட்கலன் மகனொடாட' என்று பாடங் கொண்டு, தன்மையுடைய புட்கலன் என்பான் 'மகனோடு பொர' என்று பொருளுரைத்தலும் ஆம். (4)

துமிரன் உறங்குகின்ற வானரரை அடைதல்

**4704.** பிறங்கு பங்கியான் பெயரும் பெட்பினிற்
கறங்கு போன்றுளான் பிசையுங் கையினு
னறங்கொள் சிந்தையார் நெறிசெ லாய்வினு
லுறங்கு வாரைவந் தொல்லை யெய்தினுன்.

பிறங்கு பங்கியான், பெயரும் பெட்பினில்
கறங்கு போன்றுளான், பிசையும் கையினன்,
அறம் கொள் சிந்தையார் நெறி செல் ஆய்வினால்
உறங்குவாரை வந்து ஒல்லை எய்தினான்.

பொ :—விளங்குகின்ற (செம்பட்டை) உரோமங்களையுடையவனும் இடம் மாறும் விரைவால் காற்றாடியை ஒத்தவனும், பிசைகின்ற கைகளையுடையவனும் ஆகிய (துமிரன் என்னும்) அவ்வசுரன், அறமூர்த்தியான இராமனை உள்ளத்தே கொண்டவர்களும், வழி நடந்த இளைப்பால் உறங்குகின்றவர்களுமான வானர வீரரை விரைந்து வந்தடைந்தான்.

கு :—பிறங்குதல் - விளங்குதல். பங்கி - உரோமம். பெட்பு - தன்மை. கறங்கு - காற்றாடி. கை பிசைதல்; தினவு தீர்தற்குரிய செயல். அறம் என்றது இராமனை. நெறி செல் ஆய்வு - வழி நடையால் உண்டாகிய இளைப்பு. ஒல்லை - விரைவு. (5)

### துமிரன் அங்கதன் மார்பில் அடித்தல்

**4705.** பொய்கை யென்னதென் றுணர்ந்தும் புல்லியோ
ரெய்தி னார்கள்யா ரிதுவெ னோவெனா
வைய னங்கத னலங்கன் மார்பினிற்
கையின் மோதினான் கால னேயனான்.

'பொய்கை என்னது என்று உணர்ந்தும், புல்லியோர்
எய்தினார்கள் யார்? இது எனோ?' எனா,
ஐயன் அங்கதன் அலங்கல் மார்பினில்
கையின் மோதினான்; காலனே அனான்.

பொ :—இயமனை ஒத்தவனான (துமிரன் என்னும்) அவ் வசுரன், இப் பொய்கை எனக்கே உரியது என்பதை அறிந்திருந்தும், இங்கு வந்தடைந்த அற்பர்கள் யாவர்? பிறரிடத்துப் புகும் இது என்ன அறியாமை என்று வியக்கத்தக்க (குணஞ் செயல்களையுடைய)வனான அங்கதனுடைய விளக்கம் மிக்க மார்பில் கையால் அறைந்தான்.

கு :—காலனே அனான் மோதினான் என இயையும். பொய்கை என்னதென்று உணர்ந்தும் எய்தினார்கள் (ஆகிய) புல்லியோர் யார் என்க. பொய்கை என்னது என்று அறிந்தும் என்றது இப் பொய்கை எனக்குரியது என்பது உலகறிந்த செய்தி என்றவாறு. அலங்குதல் - விளங்குதல். (6)

## அங்கதன் மோதத் துமிரன் இறத்தல்

4706. மற்ற மைந்தனு முறக்க மாறினு
னிற்றி வன்கொலா மிலங்கை வேந்தெனு
வெற்றி னானைநே ரெற்றி னானவன்
முற்றி னுயிர்க் கந்த முற்றினன்.

மற்று அ மைந்தனும் உறக்கம் மாறினன்,
'இற்று இவன் கொல் ஆம் இலங்கை வேந்து' எனு
எற்றினனை நேர் எற்றினன், அவன்
முற்றினன் உயிர்க்கு அந்தம் முற்றினன்.

பொ:—அந்த அங்கதனும், துயில் நீங்கினவனாய், இத்தன்மையுடைய இவன் இலங்கை வேந்தனோ என்று ஐயுற்றுத் தன்னை அறைந்த துமிரனைத் தானும் நேர் நின்று அறைந்தான், வாழ்நாள் முடியும் காலம் எய்தியவனான அத் துமிரன் முடிந்தான்.

கு:—மற்று அம் மைந்தனும், 'இற்று இவன் இலங்கை வேந்து கொல்' எனு எற்றினனை நேர் எற்றினன்; உயிர்க் கந்தம் முற்றினன் அவன் முற்றினன்; என இயைந்து முடியும். கொல் ஐயப் பொருளது. ஆம் அசை. எற்றுதல் - அறைதல். அவன் என்றது துமிரனை. முற்றுதல் - முடிதல்; இறத்தல். (7)

இதன்பின், பின்வரும் மிகைபபாடல்கள் 45 என்னும் குறியீடுள்ள புத்தகத்தில் காணப்படுகின்றன.

4706 (a) இருவ ருங்கத மெய்தி யங்கையில்
செருமலைந்திடும் பொழுது திண்டிறல்
நிருதன் வெஞ்சினங் கதுவ நின்றதோர்
பரும ராமரம் பறித்து வீசினன்.

4706 (b) வீசு மாமரஞ் சிந்த வென்றிசேர்
ஆசி லங்கத னங்கை யான்மலைந்
தோசை கொண்டுறக் குத்தி னுடல்
கூசு ருதவன் குன்றென் றேந்தினன்.

4706 (c) குன்று கையிடைக் கொண்டெ ழுந்தமுன்
நின்ற வங்கதன் நெடும ராமரம்
ஒன்று வாங்கிமற் றவனெ டிந்திடச்
சென்று தாக்கினன் றேவர் வாழ்த்தவே.

## துமிரன் அலறி விழுதலும் வானரர் துயினீங்கி எழுதலும்

**4707.** இடியுண் டாங்கணோ ரோங்க லிற்றதொத்
தடியுண் டான்றளர்ந் தலறி வீழ்தலுந்
தொடியின் றோள்விசைத் தெழுந்து சுற்றினர்
பிடியுண் டாரெனத் துயிலும் பெற்றியார்.

இடியுண்டு ஆங்கண் ஓர் ஓங்கல் இற்றது ஒத்து
அடியுண்டான் தளர்ந்து அலறி வீழ்தலும்,
தொடியின் தோள் விசைத்து எழுந்து சுற்றினர்,
பிடியுண்டார் எனத் துயிலும் பெற்றியார்.

பொ :—ஒரு மலை இடியால் தாக்கப்பட்டு அழிந்ததுபோல அவ்விடத்தே அங்கதனல் தாக்கப்பட்ட துமிரன் நிலை சோர்ந்து அலறி விழுந்த அளவில், உறங்கிய வானர வீரர், பேய்பிடிக்கப் பட்டவர் போலக் கைகளை ஆட்டிக்கொண்டு எழுந்து அங்கதனைச் சூழ்ந்து கொண்டனர்.

கு :—ஓர் ஓங்கல் இடியுண்டு இற்றதொத்து, ஆங்கண் அடியுண்டான் தளர்ந்து அலறி வீழ்தலும், துயிலும் பெற்றியார், பிடியுண்டார் எனத் தோள்விசைத் தெழுந்து சுற்றினர் என இயையும். இடியுண்ணல் - இடியால் தாக்கப்படுதல். ஆங்கண் - அவ்விடம். ஓங்கல் - மலை. தொடி - தோள்வளை. இன் அல்வழிச் சாரியை. விசைத்தல் - வீசுதல். பிடியுண்டார், பேயால் பிடிக்கப்பட்டவர். அங்கதன் அடிக்கு இடியும், அங்கதன் அடியால் தளர்ந்து வீழ்ந்த துமிரனுக்கு இடியால் சிதறி விழுந்த மலையும் உவமை. துமிரன் அங்கதன் மார்பிலறைந்தமையாலும் அங்கதன் துமிரனை அடித்தமையாலும் எழுந்த பேரொலியால் அதிர்ச்சியுற்று உறக்கம் நீங்கிய வானரர் நிகழ்ந்தது அறியாது கலங்கியவராய்ப் பேய் பிடித்தவர்களைப் போலக் கைகளை ஆட்டிக்கொண்டு அங்கதனைச் சூழ்ந்தனர் என்றவாறு. இனி, பிடியுண்டாரெனத்துயிலும் பெற்றியார் என உள்ளவாறே கொண்டு, பேயறையப் பட்டவர்போல் உணர்வின்றி யுறங்கிய வானர வீரர் என்று உரை கூறுவாரும் உளர். (8)

## அனுமன் வினவும் அங்கதன் விடையும்

**4708.** யார்கொ லாமிவ னிழைத்த தென்னெனத்
தாரை சேயினைத் தனிவி னயினன்

மாரு தேயன்மற் றவனும் வாய்மைசா
லாரி யாதெரிந் தறிகி லேனென்ருன்.

'யார் ? கொல் ஆம் இவன் ; இழைத்தது என் ?' எனுத்
தாரை சேயினைத் தனி வினுயினுன்
மாருதேயன் ; மற்று அவனும், 'வாய்மை சால்
ஆரியா ! தெரிந்து அறிகிலேன்' என்ருன்.

பொ :—காற்றின் மகனுன அனுமன், தாரையின் மகனுன அங்கதனை (நோக்கி) 'இவன் யார் ? இவன் செய்தது என்னை ? என்று தனியே வினவினுன்' (ஆக) அங்கதனும், (அனுமனை நோக்கி) 'வாய்மையான் மிக்க பெரியோனே! (இவனைப் பற்றி) ஒன்றும் அறிகிலேன்' என்ருன்.

கு :—மாருதேயன், தாரை சேயினை 'இவன் யார் ? இவன் இழைத்தது என் ?' என்று வினுயினுன்; அவனும், 'ஆரியா' தெரிந் தறிகிலேன்' என்ருன் என இயையும். மாருதம் - காற்று. மாரு தேயன் - காற்றின் மகனுன அனுமன். தாரை சேய் - தாரையின் மகனுன அங்கதன். வினுயினுன் - வினவினுன். அவனும் என்றது அங்கதனை. இவன் என்பது, இவன் யார் ? இவன் இழைத்தது என்? என முன்னும் பின்னும் இயைத்துக் கொள்ள நின்றது. தெரிந்தறிகிலேன் என்றது ஒன்றும் அறியேன் என்றவாறு. (9)

## சாம்பவான் துமிரன் வரலாறு கூறல்

**4709.** யானி வன்றனைத் தெரிய வெண்ணினேன்
றூநி வந்தவேற் றுமிர னென்னும்பே
ரானிவ் வாழ்புனற் பொய்கை யாளுமோர்
தான வன்னெனச் சாம்பன் சாற்றினுன்.

'யான் இவன்றனைத் தெரிய எண்ணினேன்,
தூ நிவந்த வேல் துமிரன் என்னும் பே
ரான் ; இவ் ஆழ் புனல் பொய்கை ஆளும் ஓர்
தானவன்' எனச் சாம்பன் சாற்றினுன்.

பொ :—(அதுகேட்ட) சாம்பவான், (அனுமனை நோக்கி) 'யான் இவன் இன்னுன் என்று தெரியுமாறு நன்கு எண்ணினேன் ; இவன் ஊனெடு விளங்கும் வேற்படையுடைய துமிரன் என்னும் பெயரினன்; ஆழமான நீரையுடைய இப்பொய்கையை ஆளும் ஓர் அசுரன்' என்று கூறினுன்.

கு :—தூ - ஊன். நிவத்தல் - விளங்குதல். தானவன்-அசுரன். சாம்பன் - சாம்பவான் என்னும் கரடித் தலைவன்; இவன், ஊழி பல கண்ட பெருவாழுளுடையனுதலின் உலகில் அவனறியாதன இல்லை; ஆதலால் துமிரன் வரலாறு கூறினான் என்க. (10)

## சூரியனுதித்தலும் வானரர் சீதையைத் தேடிச் செல்லுதலும்

**4710.** வேறு மெய்துவா ருளர்கொ லாமெனுத்
தேறி யின்றுயிற் செலவு தீர்ந்துளார்
வீறு செஞ்சுடர்க் கடவுள் வேலைவாய்
நாற நாண்மலர்ப் பெண்ணை நாடுவார்.

'வேறும் எய்துவார் உளர்கொல்? ஆம், எனுத்
தேறி இன் துயில், செலவு தீர்ந்துளார்,
வீறு செஞ்சுடர்க் கடவுள் வேலைவாய்
நாற நாள் மலர்ப் பெண்ணை நாடுவார்.

பொ :—'மேலும் வருவார் பிறரும் உண்டோ' என்று இனிய உறக்கம் நீங்கித் தெளிந்து வழி நடத்தல் தவிர்ந்திருந்த வானர வீரர் பெருமை மிக்க செவ்விய ஒளியினையுடைய கடவுளாகிய சூரியன் (கீழ்) கடலிற் ரேன்றலும், அப்பொழுதலர்ந்த தாமரைப் பூவில் வாழும் திருமகளின் அமிசமான சீதாபிராட்டியைத் தேடுவாராயினர்.

கு :—துயில் தேறுதல் - துயில் (நீங்கித்) தெளிதல். (11)

## வானரர் பெண்ணையாற்றை அடைதல்

**4711.** புண்ணை வெம்முலைப் புளின மேய்தடத்
துண்ண வாம்பலி னமுத மூறுவாய்
வண்ண வெண்ணகைத் தரள வாண்முகப்
பெண்ணை நண்ணினர் பெண்ணை நாடுவார்.

புள் நை வெம் முலைப் புளினம் ஏய் தடத்து
உண்ண ஆம்பல் இன் அமுதம் ஊறு வாய்
வண்ண வெள் நகைத் தரள வாள் முகப்
பெண்ணை நண்ணினர் பெண்ணை நாடுவார்.

பொ :—சீதையென்னும் பெண்ணைத் தேடிச் செல்லும் வானரர், சக்கரவாளப்புள் வருந்துதற்குக் காரணமான - விருப்பத்தை விளைக்

கின்ற - புளினங்களான தனங்களையும், நீர் நிலைகளில் உள்ள பருகு தற்கு இனிய அமுதம் ஊறுகின்ற ஆம்பலாகிய வாயினையும், அழகிய வெண்மையான முத்துக்களாகிய பற்களையுடைய ஒளி வாய்ந்த தாமரை மலராகிய முகத்தினையும் உடைய பெண்ணையாற்றை அடைந்தனர்.

கு :—பெண்ணை நாடுவார், புள் நை வெம்முலைப் புளினம், தடத்து ஏய், உண்ண இன் அமுதம் ஊறுவாய் ஆம்பல், வண்ண வெண் நகைத்தரள வாள் முகப் பெண்ணை நண்ணினர் என இயையும். இதனுள் பெண்ணையாறு ஒரு பெண்ணாக உருவகிக்கப் பட்டது. பெண்ணையை நண்ணினர் என இரண்டன் உருபு விரிக்க. பெண்ணை நாடுவார் பெண்ணை நண்ணினர் என்ற நயம் நோக்கத் தகும். பிற வுறுப்புக்களை உருவகித்தமைக் கேற்ப முகமும் முகமாகிய தாமரை என உருவக வாய்பாடு விரித்துக்கொள்ள நின்றது, மகளிர் தனத்துக்குச் சக்கரவாளப் புள்ளை உவமை கூறுதல் மரபு. சக்கர வாளப் புள், தன் உருவப் பொலிவினும் சிறந்த மகளிர் தனத்தின் உருவப் பொலிவு கண்டு வருந்துவதாயிற்று. புள் என்றது சக்கர வாளப் பறவையினை. நைதல் - வருந்துதல். வெம்மை - விருப்பம். புளினம் - மணற்குன்று. தடம் - நீர்நிலை. நகை - பல். தரளம் - முத்து. (12)

## பெண்ணையாற்றைச் சார்ந்த இடங்களில் வானரர் சீதையைத் தேடுதல்

**4712.** துறையுந் தோகைநின் றாடு சூழலுங்
குறையுஞ் சோலையுங் குளிர்ந்த சாரனீர்ச்
சிறையுந் தெள்ளுபூந் தடமுந் தெண்பளிக்
கறையுந் தேடினா ரறிவி னீடினர்.

துறையும் தோகை நின்று ஆடு சூழலும்
குறையும் சோலையும் குளிர்ந்த சாரல் நீர்ச்
சிறையும் தெள்ளு பூந்தடமும் தெண் பளிக்கு
அறையும் தேடினர் அறிவின் நீடினர்.

பொ :—அறிவின் மிக்கவராகிய அவ்வானர வீரர், அப் பெண்ணை யாற்றின் நீர்த்துறைகளிலும், மயில்கள் நின்று ஆடும் இடங்களிலும், ஆற்றிடைக் குறையிலும், சோலைகளிலும், குளிர்ச்சிவாய்ந்த - அடுத் துள்ள நீர்த் தேக்கங்களிலும், தெளிந்த பூக்களையுடைய வாவி

களிலும், அழுக்கற்ற பளிங்கினாலாய அறைகளிலும் (சீதாபிராட்டியைத்) தேடுவாராயினர்.

கு:—அறிவின் நீடினர், துறையும்......பளிக்கறையும் தேடினர் என இயையும். தோகை - மயில். சூழல் - இடம். குறை - ஆற்றிடைத் திட்டு. நீர்ச்சிறை - நீர்த்தேக்கம். தெள்ளு தடம் பூந்தடம் என்க. சோலைகளிலும் ஆற்றையடுத்த இடங்களிலும் மலைச் சூழலிலும் இன்ப விளையாட்டுக்காகப் பளிக்கறைகள் அமைக்கப்படுவது உண்டு. "பளிக்கறைச் சில பரிமுக மாக்களைப் பாராய்" (2145) என்று முன் கூறியதும் காணலாம். பளிக்கறை என்பதற்குப் பளிக்குப் பாறை என்று பொருள் கொள்ளலும் ஆம். (13)

## வானர வீரர் பெண்ணையாற்றின் கரையில் தங்குதல்

**4713.** அணிகொ ழித்துவந் தெவரு மாடினர்
பிணிகொ ழித்துவெம் பிறவி வேரின்வன்
றுணிகொ ழித்தருஞ் சுழிக டோறுநன்
மணிகொ ழிப்பதன் கரையின் வைகினர்.

அணி கொழித்து வந்து, எவரும் ஆடினர்
பிணி கொழித்து, வெம் பிறவி வேரின் வன்
துணி கொழித்து, அரும் சுழிகள்தோறும் நன்
மணி கொழிப்பதன் கரையின் வைகினர்.

பொ:—(தேடிய வானரர்), அழகு மிகுவித்து வந்து, எவரேயாயினும் தன் கண் முழுகினருடைய நோய்களைப் போக்கி, அவருடைய பிறவியாகிய மரங்களின் வேரின் வலிய துண்டங்களை ஒதுக்கி, அகப்பட்டார் மீளுதற்கரிய சுழிதோறும் நல்ல இரத்தினங்களை வீசுவதாகிய அப் பெண்ணையாற்றின் கரையிலே தங்கினர்.

கு:—தேடினர் வைகினர் என இயைந்து முடியும். தேடினர் என்னும் எழுவாய் முன் பாட்டினின்று கொள்ளப்பட்டது. அணி கொழித்து வருதல் பெண்ணையாற்றின் வினை. வற்றாத நீர் வளம் தந்து கரை மருங்கிற் செடியும் கொடியும் மரங்களும் செழித்து வளர்ந்து தளிரும் பூவும் பல்கி நிலைத்து நிற்கச் செய்தலாலும், பல நிற மலர்களைத் தன் மேற்பரப்பிற் கொண்டு சித்திரச் செய்கைப் படாம் போர்த்தது போலத் தோன்றலாலும் பெண்ணையாறு அழகு கொழித்து வருவதாயிற்று. எவரும் என்றது, எத்தகைய இழி நிலையுடையோராயினும் என்றவாறு. பிணி - நோய். பிறவியாகிய மரத்தின் இருவினையாகிய வலிய வேர்களைத் துண்டித்து அத்

துண்டங்களை ஒதுக்கி என்று உருவக வாய்பாடு அமைய விரித்துக் கொள்ளத்தகும். வைகுதல் - தங்குதல். கொழித்தல் என்பது மிகு வித்தல், போக்குதல், ஒதுக்குதல், வீசுதல் எனப் பல பொருள் தந்து நின்றது. இனி, 'ஆடினர் பிணி கொழித்து அகிற்பிளவொடு ஆரவன் துணி கொழித்து' என்று பாடங்கொண்டு, 'முழுகினவரு டைய பிணியைப் போக்கி, அகிற் கட்டைகளின் பிளவுகளோடு, சந்தனக் கட்டையின் வலிய துண்டங்களையும் ஒதுக்கி' என்று பொருளுரைத்தலும் ஆம். இப்பாடத்தில், 'பிணி' என்பது உடல் நோய் பிறவியாகிய நோய் என்னும் இரு பொருளும் கொள்ள நின்றது. ஆரம் - சந்தனம். (14)

## வானரர் பெண்ணையாறு கடந்து, காடும் மலையும் தேடித் தசார்ண நாடடைதல்

**4714.** ஆடு பெண்ணை நீ ராறு மேறினர்
காடு நண்ணினர் மலைக டந்துளார்
வீடு நண்ணின ரென்ன வீசு நீர்
நாடு நண்ணினர் நவையி னண்ணலார்.

ஆடு பெண்ணை நீர் ஆறும் ஏறினர்,
காடு நண்ணினர் மலை கடந்துளார்,
வீடு நண்ணினர் என்ன வீசும் நீர்
நாடு நண்ணினர்; நவையின் நண்ணலார்.

பொ :—தீநெறிக்கட் செல்லாத வானரர், யாவரும் விரும்பி நீராடுதற்குரிய பெருமையினையுடைய பெண்ணையாற்றையும் தாண்டி, வனங்களையடைந்து, மலைகளைக் கடந்து, வீட்டுலகுற்றூர் போல அலையெறிகின்ற நீர்ப் பெருக்கினையுடையதொரு நாட்டினை அடைந் தனர்.

கு :—நவையின் நண்ணலார், ஆறும் ஏறினர், காடு நண்ணினர், மலை கடந்துளார் வீடு நண்ணினர் என நீர் நாடு நண்ணினர்; என இயையும். நவை - குற்றம்; தீநெறி. ஆடுதல் - முழுகுதல். ஆறும் என்பதனுள் உம் உயர்வு சிறப்புணர நின்றது. ஏறுதல் - ஏறிக் கடத்தல். ஏறினர் நண்ணினர் கடந்துளார் என்பவை எச்சப் பொருள்பட நின்றன. வீடு - வீட்டுலகு. பலப்பல ஆறுகளும் மலை களும் வனங்களுங் கடந்து நீர் நாடடைந்த வானரர்க்குப் பல பிறப்பும் பிறந்து கடந்து வீட்டுலகுற்றூர் உவமை. வானர வீரர் சென்றடைந்த நீர் நாடு வீட்டுலகுபோல எல்லா நலங்களும்

நிறைந்து விளங்கிய தென்றவாறு. வீசுதல் - அலையெறிதல். நாடு நண்ணினர் நவையின் நண்ணலார் என்று முரண்பட அமைந்த நயம் காணத்தகும். (15)

## வானரர் விதர்ப்ப நாடடைந்து சீதையைத் தேடுதல்

**4715.** தசந வப்பெயர்ச் சரள சண்பகத்
தசந வப்புலத் தகணி நாடொரீஇ
யுசந வப்பெயர்க் கவியு தித்தபே
ரிசைவி தர்ப்பநா டெளிதி னெய்தினர்.

தச நவப் பெயர்ச் சரள சண்பகத்து
அசந அப்புலத்து அகணி நாடு ஒரீஇ
உசநவப் பெயர்க் கவி உதித்த பேர்
இசை விதர்ப்பநாடு எளிதின் எய்தினர்.

பொ:—(நாடு நண்ணினர்) அழகிய சண்பக மரங்களோடு உணவுப் பொருள்களும் உள்ள விளைபுலங்கள் பொருந்திய மருத நிலமாகிய 'தசார்ணம்' என்னும் பெயர் வாய்ந்த அந் நாட்டைக் கடந்து, உசனன் என்னும் அப் பெயரையுடைய சுக்கிரன் தோன்றிய மிக்க புகழ் உள்ள விதர்ப்ப நாட்டை எளிதாக அடைந்தனர்.

கு:—வானரர் என்னும் எழுவாய் முன் செய்யுளிலிருந்து கொள்ளத்தகும். சரள சண்பகத்து அசநப்புலத்து அகணித் தசநவப் பெயர் அ நாடு என இயைக்க. தசநவம் உசனன் என்பவை தசார்ணம் உசநஸ் என்ற வடசொற்களின் திரிபு. சரளம் - அழகு. அசநம் - உணவுப்பொருள். புலம் - நிலம். அகணி - மருதம். ஒருவுதல் - நீங்குதல். உசனன், கவி என்பவை சுக்கிரன் பெயர்கள். இச் செய்யுளால் சுக்கிரன் விதர்ப்ப நாட்டிற் பிறந்தவன் என்று தெரிகிறது. முன் செய்யுளில், 'நீர் நாடு நண்ணினர்' என்றவர், அந் நாட்டின் பெயரும் வளமும் இச் செய்யுளின் முன்னிரண்டிகளிற் பெற வைத்தமை காணலாம். (16)

**4716.** வைத ருப்பமண் டலனில் வந்துபுக்
கெய்த ருப்பமத் தலையு மெய்தினர்
பெய்த ருப்பநூல் பிறழு மேனியார்
செய்த வத்துளார் வடிவிற் றேடினர்.

வைதருப்ப மண்டலனில் வந்து புக்கு,
எய்து அருப்பம் அத்தனையும் எய்தினர்,
பெய் தருப்பம் நூல் பிறழும் மேனியார்,
செய் தவத்துளார் வடிவின் தேடினர்.

பொ :—விதர்ப்ப நாட்டுள் வந்து புகுந்து, அங்குள்ள ஊர்களை யெல்லாம் அடைந்து, பூண்ட தருப்பையும் முப்புரி நூலும் விளங்கும் உடலுடையவரும், மேற்கொண்ட தவநெறி நிற்பவரும் ஆன முனிவர் வடிவுகொண்டு தேடினர்.

கு :—மண்டலம் என்பது மண்டலன் எனப் போலியாயிற்று. அருப்பம் - ஊர் (பிங்); அரணும் ஆம். எய்தினர் என்பது முற்றெச்சம். பெய்தல் - பூணுதல். பிறழுதல் - விளங்குதல். மேனி - உடல். வடிவு - வேடம். முனிவர் வடிவு கொண்டது பிறர் ஐயுரு திருத்தற் பொருட்டு. (17)

## வானரர் தண்டகவனம் புகுதல்

**4717.** அன்ன தன்மையா லறிஞர் நாடியச்
செந்நெல் வேலிசூழ் திருநன் ஞடொரீஇத்
தன்னை யெண்ணுமத் தகைபு குந்துளார்
துன்னு தண்டகங் கடிது துன்னினர்.

அன்ன தன்மையால் அறிஞர் நாடி; அச்
செந்நெல் வேலி சூழ் திரு நல்நாடு ஒரீஇத்
தன்னை எண்ணும் அத்தகை புகுந்துளார்
துன்னு தண்டகம் கடிது துன்னினர்.

பொ :—அறிவாளிகளான வானர வீரர், அத்தன்மையால் தேடி, அந்தச் சிறந்த நெல் விளை நிலம் சூழ்ந்த அழகிய நல்ல (விதர்ப்ப) நாட்டினின்று நீங்கி உயிரின் இயல்பினை யறியும் பேரறிவெய்திய முனிவரர் தங்கிய தண்டகவனத்தை விரைந்து அடைந்தனர்.

கு :—அறிஞர், அன்ன தன்மையால் நாடி என மாறுக. அன்ன தன்மையால் நாடுதலாவது (முன் பாட்டிற் கூறியவாறு) முனிவர் வேடத்தோடு தேடுதலாகும். ஒருவுதல் - நீங்குதல். தன்னை எண்ணுதலாவது சீவாத்துமாவின் நிலையினையறிதல்; பரமாத்துமாவாகிய இறைவனியல்பினை நினைதல் என்று உரைத்தலும் ஆம். இப்பொருள் கொள்ளுங்கால், தன்னையே என்னும் ஏகாரம் விரித்துக் கொள்ளல் தகும். எண்ணுதல் - இடைவிடாது நினைதல். (18)

வானரர் தண்டக வனத்தில் தேடி முண்டகத்துறை யடைதல்

4718. உண்ட கத்துளா யுறையு மைம்பொறிக்
கண்ட கர்க்கருங் கால ஞயினர்
தண்ட கத்தையுந் தடவி யேகினர்
முண்ட கத்துறை கடிது முற்றினர்.

உண்டு அகத்துள் ஆய் உறையும் ஐம்பொறிக்
கண்டகர்க்கு அருங் காலன் ஆயினர்
தண்டகத்தையும் தடவி ஏகினர்,
முண்டகத்துறை கடிது முற்றினர்.

பொ :—புலன்களை நுகர்ந்து உள்ளே தங்கி வசிக்கின்ற ஐந்து பொறிகளாகிய தீயவர்க்குக் கடக்க அரிய இயமனயினவர்களான முனிவர்கள் தங்கிய தண்டகவனத்தையும் தேடிச் சென்று, முண்டகம் என்னும் நீர்த்துறையினை விரைந்தடைந்தனர்.

கு :—உண்டு அகத்துளாய் உறையும் ஐம்பொறிக் கண்டகர் என்றது, உயிர்களைச் செந்நெறிச் செல்லவிடாது புலனுகர்ச்சியிலே புகுத்தும் ஐம்பொறிகளாகிய உட்பகைவர் என்றவாறு. ஐம்பொறிகள் உட்பகையாய் அமைந்தன என்பதும், அடக்குதற்கரிய பேராற்ற லுடையன என்பதும் 'உண்ணிலாவிய ஐவர்', 'விண்ணுளார் பெரு மாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலன்' (திருவாய்மொழி-7. 1. 1, 6.) என்னும் அருளிச் செயல் முதலியவற்றால் புலனகும். ஐம்பொறிக் கண்டகர்க்கு அருங்காலன் ஆயினர் என்றது, ஐம்பொறிகளாகிய உட்பகைவர்க்குரியக் கடத்தற்கரிய இயமனய் அவராற்றலை அழித்தொடுக்கிப் பற்றற்றவரான முனிவர் என்ற வாறு. எனவே, தண்டகவனத்துறை முனிவர் பொறிகளைப் புலன் வழிச் செல்லவிடாது அடக்கி இறை யுணர்ச்சியிற் செலவிடுபவர் என்பது புலனகும். கண்டகர் - தீயவர். தண்டகத்தையும் என் பதனுள் உம்மை உயர்வு சிறப்புணர நின்றது. தடவுதல் - தேடுதல். கடுமை - விரைவு. முற்றுதல் - அடைதல். (19)

முண்டகத்துறைப் பெருமை

4719. அள்ள னீரெலா மமரர் மாதரார்
கொள்ளை மாமுலைக் கலவை கோதையிற்
கள்ளு நாறலிற் கமல வேலிவாழ்
புள்ளு மீனுமு புலவு தீர்தலால்.

அள்ளல் நீர் எலாம், அமரர் மாதரார்
கொள்ளைமா முலைக் கலவை, கோதையில்
கள்ளும் நாறலின் கமல வேலி வாழ்
புள்ளும் மீன் உணா; புலவு தீர்தலால்.

பொ :—சேற்றொடு கூடிய நீர் முழுவதும் தேவமாதர்களுடைய அழகிய தனங்களிற் பூசப்பட்ட மிகுதியான கலவைச் சாந்தும் அவர் அணிந்த மாலையினின்று பெருகும் தேனும் ஆகியவற்றின் நறுமண முடையதாயினமையின் புலால் நாற்றம் நீங்குதலால் அத்துறையில் வசிக்கின்ற பறவைகளும் மீன்களை உண்பதில்லை.

கு :—நீரெலாம் கலவையும் கள்ளும் நாறலின், புலவு தீர்தலால் கமலவேலி வாழ் புள்ளும் மீன் உணா என இயையும். அம் முண்டகத்துறை நீர் முழுதும் அதில் நீராடும் தேவ மாதர் மார்பிற் சந்தனக் கலவையும் மாலையில் தேனும் விரவி நறுமணம் கமழ்தலால், அந் நீரிலுள்ள மீன்களும் புலால் நாற்றம் நீங்கினவாகவே, அத் துறையிற் புட்கள் மீனை உண்ணா தொழிந்தன என்றவாறு. இச் செய்யுளுடன், 'தேனும் சாந்தமும் மான்மதச் செறி நறுஞ்சேறும், வான நாண்மலர் கற்பக மலர்களும் வயமாத், தான வாரியு நீரொடு மடுத்தலிற்றழீஇய மீனும் தானும் ஓர் வெறிமணம் கமழுமால் வேலை' சுந்தர. 112) என ஆசிரியர் பின்னே கூறியதும் நோக்கத்தகும். அள்ளல் - சேறு. கொள்ளை - மிகுதி. கோதை - மாலை. கள்-தேன். நாறுதல் - நறுமணமுடையதாதல். கமலவேலி என்றது முண்டகத் துறையினை. புள்ளு பறவை; புள்ளும் என்றது, மீனை விரும்பி உண்ணும் இயல்புடைய பறவைகளும் என்றவாறு. புலவு - புலால் நாற்றம். தீர்தல் - நீங்குதல். (20)

**4720.** குஞ்ச ரங்குடைந் தொழுகு கொட்பதால்
விஞ்சை மன்னர்பால் விரக மங்கைமார்
நஞ்சு வீணையி னடத்து பாடலா
லஞ்சு வார்கணீ ரருவி யாறரோ.

குஞ்சரம் குடைந்து ஒழுகு கொட்பது ஆல்—
விஞ்சை மன்னர்பால் விரக மங்கைமார்
நஞ்சு வீணையின் நடத்து பாடலால்
அஞ்சுவார் கண்நீர் அருவியாறு அரோ.

பொ :—வித்யாதர வேந்தர்மீது கொண்ட காதலால் எழுந்த விரக வெம்மையினையுடைய மகளிர், அக் காதல் நோயால் மெலிந்து,

வீணையினல் எழுப்புகின்ற இசைப் பாடல் கேட்டு அஞ்சுகின்றவராய் அழுத கண்ணீரருவியாறு யானைகள் திளைத்து முழுகிச் செல்லும் தன்மையினை யுடையது.

கு :—மங்கைமார் அஞ்சுவார் கண்ணீரருவியாறு குஞ்சரம் குடைந் தொழுகு கொட்பது என இயையும். விரகம் - காம வெப்பம். நஞ்சு-நைந்து; மெலிந்து. கொட்பு - தன்மை. அது பகுதிப்பொருளது ஆல் - அசை. யாழிசை காமத்தை மிகுவிக்கும் என்பது, 'நாம யாழ்த் தேளினுற்றிகைப் பெய்துகின்ருர் சிலர்' (சுந்தர. 271) என் பதனுலும் புலனும். (21)

**4721.** கமுக வார்நெடுங் கனக ஊசலிற்
குமுத வாயினர் குயிலை யேசுவார்
சமுக வாளியுந் தனுவும் வாழ்முகத்
தமுத பாடலார் மருவி யாடுவார்.

கமுக வார் நெடுங் கனக ஊசலில்,
குமுத வாயினர், குயிலை ஏசுவார்
சமுக வாளியும் தனுவும வாழ் முகத்து
அமுத பாடலார் மருவி யாடுவார்.

பொ :—ஆம்பல் மலர்போலும் வாயினையுடையவர்களும் (இனிய இசையால்) குயிலினிசையைப் பழிப்பவர்களும் கூட்டமான அம்புகள் போன்ற கண்களும் விற்போன்ற புருவமும் தங்கிய முகத்தினையுடைய வர்களும், அமுதம்போலும் இனிய பாடலைப் பாடுபவருமான மகளிர், கமுகமரத்திற் பிணித்த மிக நெடிய பொன்னூசலிலிருந்து ஆடுவர்.

கு :—வாயினர் ஏசுவார் பாடலார் (ஆனமகளிர்) ஊசலில் மருவி ஆடுவர் என இயையும். கனகவூசல்-பொன்னூசல், குயில் என்றது குயிலிசையினை. சமூகம் - தொகுதி. சமூகம் என்பது, எதுகை நோக்கிச் சமுகம் எனக் குறுகி நின்றது. மகளிர் கண்களுக்கு அம்பு களும் புருவத்துக்கு வில்லும் உவமையாவன. சமுகவாளி என்பதற்கு மன்மதனுடைய அம்புகள் என்று, பொருள் கொண்டு, அதற் கிசையத் தனு என்பதற்கு அவன் வில்லாகிய கரும்பு என்று பொருள் கூறலும் ஆம். மகளிர் கண்கள், மன்மதனுடைய பஞ்சபாணங்களும் செய்யும் செயல்களை யெல்லாம் செய்யவல்லன என்றவாறு. இது தொழில் பற்றிய உவமை. 'கரும்புருவம் பொரும் புருவம்' (திருவரங் கக் கலம்பகம். 55) என்று மகளிர் புருவத்துக்குக் கரும்பு உவமை கூறப்பட்டது காணலாம். (22)

வானர வீரர் முண்டகத்துறையிற் சீதையைத் தேடி நீங்குதல்

**4722.** இனைய வாயவொண் டுறையை யெய்தினர்
நினையும் வேலைவாய் நெடிது தேடுவார்
வினைய வார்குழற் றிருவை மேவலார்
புனையு நோயினர் கடிது போயினர்.

இனைய ஆய ஒண் துறையை எய்தினர்
நினையும் வேலைவாய் நெடிது தேடுவார்,
வினைய வார்குழல் திருவை மேவலார்,
புனையும் நோயினர், கடிது போயினர்.

பொ:—இப்படிப்பட்ட பெருமைகளையுடைய சிறந்த முண்டகத் துறையை அடைந்த வானர வீரர், நினையுமளவில் நெடுந்தூரம் தேடுபவராய், வேலைப்பாடுகள் அமைந்த நீண்ட கூந்தலையுடைய சீதாபிராட்டியைக் காணுமல் துன்புற்றவராய் அத்துறையை நீங்கி விரைந்து சென்றனர்.

கு:—குழல் பலவகையாக அழகுற முடிக்கப்படுதலின், 'வினைய வார்குழல்' என்றார். வினையம் - வேலைப்பாடு. திரு என்றது சீதா பிராட்டியை. (23)

வானர வீரர் பாண்டுமலையினை அடைதல்

**4723.** நீண்ட மேனியா னெடிய தாளினின்
றீண்டு கங்கைவந் திழிவ தென்னலாம்
பாண்டு வம்மலைப் படர்வி சும்பினைத்
தீண்டு கின்றதண் சிகர மெய்தினர்.

நீண்ட மேனியான் நெடிய தாளின் நின்று
ஈண்டு கங்கை வந்து இழிவது என்னல் ஆம்
பாண்டு அம் மலைப் படர் விசும்பினைத்
தீண்டுகின்ற தண் சிகரம் எய்தினர்.

பொ:—ஓங்கிய திருமேனியனை திரிவிக்கிரமனுடைய நீண்ட திருவடியினின்று விரைகின்ற கங்கை வந்து இறங்குவதுபோலும் என்று சொல்லத்தக்க தோற்றத்தினையுடையதாகிய பாண்டு என்னும் அழகிய மலையின் பரவிய ஆகாயத்தைத் தீண்டி நிற்கின்ற குளிர்ந்த சிகரத்தை அடைந்தனர்.

கு :—நீண்டமேனியான் என்றது உலகளந்த பெருமானை. ஈண்டுதல் - விரைதல். இழிதல் - இறங்குதல். பாண்டுவம்மலை என்பதனுள் அம் சாரியை எனலும் ஆம். வெண்மை நிறம் உடைய மலையாதலின் பாண்டு என்று பெயர் பெற்றது. வெண்ணிறத்தொடு வானளாவிய சிகரங்களையும், அடிப்பரப்பினையும் உடைய பாண்டு மலை, உலகளந்த பெருமானுடைய மேலுலகளந்த திருவடியினின்று விரைந்து மண்ணுலகடைந்த வெள்ளிய கங்கை நீர்ப்பெருக்குப் போன்றிருந்தது என்றவாறு. கங்கை, திரிவிக்கிரமனுடைய மேலுலகளந்த திருவடியிலிருந்து வந்தமை, 'அண்டகோளுகைப் புறத்ததாய கிலமன்றளந்த, புண்டரீகமென்பதத்திடைப் பிறந்து' (537) என ஆசிரியர் முன்னே கூறினமையான் அறியலாம். (24)

## பாண்டு மலையின் தோற்றம்

**4724.** இருளு றுத்துமீ தெழுந்த தெண்ணிலா
மருளு றுத்துவண் சுடர் வழங்கலா
லருளு றுத்திலா வடல ரக்கன்மே
லுருளு றுத்துதிண் கயிலை யொத்ததால்.

இருள் உறுத்து மீது எழுந்த தெள் நிலா
மருள் உறுத்து, வண் சுடர் வழங்கலால்,
அருள் உறுத்திலா அடல் அரக்கன்மேல்
உருள் உறுத்து திண் கயிலை ஒத்ததால்.

பொ :—அந்தப் பாண்டு மலையானது, இருளைச் சினந்து வானின் மீது தோன்றிய தெளிந்த நிலவினையுடை சந்திரனை மயங்கும்படி செய்து, மிக்க ஒளியை வீசுதலால், அருளிற்பதியாத கொலைத் தொழிலையுடைய இராவணன்மேல் அவன் வலி அழிய அழுத்திய வலிய கயிலை மலையை ஒத்தது.

கு :—உறுத்தல் என்பது முறையே சினத்தல், அடைவித்தல், பதித்தல், அழுத்தல் என்னும் பொருளிற் பயின்றது. நிலா என்றது சந்திரனை நிலாவையும் மருளுறுத்து என்க, அருள் உறுத்திலா அடலரக்கன் என்றது இராவணனை, உருள வுறுத்து என்பது உருளுறுத்து என்றானது விகாரம்; உருளுதல் - அழிதல். வெள்ளொளி வீசுதலும் மேற்சென்றவனைச் செல்லவொட்டாது மயங்கச் செய்தலும் கயிலைக்கும் பாண்டு மலைக்கும் பொதுவான தன்மைகள், முன் ஒரு காலத்து இராவணன், குபேரனுடைய புட்பக விமானத்தினைப் பறித்துக் கொண்டு, இலங்கை நோக்கி அதனை ஊர்ந்து செல்லு

கையில், கயிலை மலை மீது பறக்க, விமானம் செல்லமாட்டாது தடைப் பட்டது; அதனல் இராவணன் திகைத்த நிலையில், சிவகணநாத ரான நந்தி என்பவர் இராவணன் முன் தோன்றி 'இது சிவபெரு மான் எழுந்தருளியுள்ள கயிலை மலையாகும். இதன்மீது பறத்த லாகாது; விலகிச் செல்க' என, இராவணன் அதற்கு இசையாது சினந்து, கயிலையைப் பேர்த்தெறிந்து செல்ல நினைந்து பேர்க்க முயன்று, அதன் கீழகப்பட்டு வருந்திய வரலாறு இங்குக் குறிக்கப் பட்டது. (25)

## பாண்டுமலையிற் றேடிச் சீதையைக் காணது வானர வீரர் வருந்துதல்

**4725.** விண்ணுற நிவந்த சோதி
★ வெள்ளியங் குன்ற மேவிக்
கண்ணுற நோக்க லுற்ருர்
களியுறக் கனிந்த காமர்
பண்ணுறு கிளவிச் செவ்வாய்ப்
படையுறு நோக்கி ஞளை
யெண்ணுறு திறத்துங் காணு
ரிடருறு மனத்த ரெய்த்தார்.

விண் உற நிவந்த சோதி வெள்ளியங்குன்றம் மேவிக்
கண் உற நோக்கல் உற்ருர், களிஉறக் கனிந்த காமர்
பண் உறு கிளவிச் செவ்வாய்ப் படை உறு நோக்கிஞளை,
எண் உறு திறத்தும் காணர், இடர் உறும் மனத்தர் எய்த்தார்.

பொ :—வானுற வோங்கிய வொளிப்பெருக்குடைய பாண்டு மலையை அடைந்து நன்கு தேடத்தொடங்கிய வானர வீரர், மகிழ்ச்சி மிகும்படி முதிர்ந்த அழகிய இசையுடைய சொற்களைச் சொல்லும் சிவந்த வாயினையும் வேல்போலும் கண்ணினையும் உடைய சீதா பிராட்டியைத் தாம் நினைத்த வழியெங்கும் காணமல் துன்புற்ற மனத் தினராய்த் தளர்வுற்றனர்.

கு :—நிவத்தல் - உயர்தல். வெள்ளியங்குன்றம் என்றது பாண்டு மலையினை. கிளவி - சொல். நோக்கு - கண். நோக்கிஞள் என்றது சீதையினை. திறம் - வழி; (29)

### வானர வீரர் கோதாவரியாற்றை அடைதல்

**4726.** ஊதைபோல் விசையின் வெங்க
ணுழுவைபோல் வயவ ரோங்க
லாதியை யகன்று செல்வா
ரரக்கனல் வஞ்சிப் புண்ட
சீதைபோ கின்றாள் கூந்தல்
வழீஇவந்து புவனஞ் சேர்ந்த
கோதைபோற் கிடந்த கோதா
வரியினைக் குறுகிச் சென்றார்.

ஊதை போல் விசையின் வெம் கண்
உழுவைபோல் வயவர், ஓங்கல்
ஆதியை அகன்று செல்வார்,
அரக்கனல் வஞ்சிப்புண்ட
சீதை போகின்றாள் கூந்தல்
வழீ இவந்து, புவனம் சேர்ந்த
கோதைபோல் கிடந்த கோதாவரியினைக்
குறுகிச் சென்றார்.

பொ :—அஞ்சாமை வாய்ந்த புலியினை யொத்த வீரராகிய வானரர், காற்றினை ஒத்த விரைவொடு, மலைகளுள் முதன்மையுடைய தான பாண்டுமலையினை நீங்கிச் செல்லுபவர், இராவணனால் வஞ்சிக்கப்பட்ட சீதை போகின்றவளுடைய கூந்தலினின்றும் நழுவி வந்து பூமியை அடைந்த மாலைபோலக் கிடந்த கோதாவரியாற்றினைச் சென்று கிட்டினார்.

கு :—ஊதை - காற்று. வெங்கண் - அஞ்சாமை. உழுவை - புலி. வயவர் - வீரர் ; வானரர். ஓங்கல் - மலை. ஆதி - முதன்மை. அரக்கன் என்றது இராவணனை. வழீஇ - வழுவி, நழுவி. புவனம் - பூமி, கோதை - மாலை. சென்று குறுகினார் என மாறுக. (27)

### கோதாவரியாற்றின் தோற்றம்

**4727.** எழுகின்ற திரையிற் றாகி
யிழிகின்ற மணிநீர் யாறு
தொழுகின்ற சனகன் வேள்வி
தொடங்கிய சுருதிச் சொல்லா

லுழுகின்ற பொழுதி னீன்ற
வொருமகட் கிரங்கி ஞால
மழுகின்ற கலுழி மாரி
யாமெனப் பொலிந்த தன்றே.

எழுகின்ற திரையிற்ருகி இழிகின்ற மணி நீர் யாறு,
தொழுகின்ற சனகன், வேள்வி தொடங்கிய, சுருதிச் சொல்லால்
உழுகின்ற பொழுதின் ஈன்ற ஒருமகட்கு இரங்கி, ஞாலம்
அழுகின்ற கலுழி மாரி ஆம் எனப் பொலிந்தது அன்றுஏ.

பொ :—உயர்ந்து வருகின்ற அலைகளையுடையதாய்ச் செல்லு கின்ற அழகிய (தெளிந்த) நீரையுடைய கோதாவரி, (உலகத்தார்) வணங்குகின்ற சனகன் வேள்வி தொடங்குதற்காக, வேதமந்திரங்க ளோடு நிலத்தை உழுதபொழுது, நிலமகள் ஈன்ற ஒப்பற்ற மகளாகிய சீதையின் (தற்கால) நிலைக்கு இரங்கி, அந்நிலமகள் அழுகின்ற கண்ணீர்ப் பெருக்கு என்று சொல்லும்படி விளங்கியது.

கு :—யாறு - ஆறு. சனகன், அறிவும் ஒழுக்கமும் வாய்ந்து விளங்கினனாதலின், உலகம் தொழுகின்ற தகுதியுடையனாயினன். சுருதி - வேதம். சொல் - மந்திரம். சொல்லால் என்பதனுள் ஆல் உருபு ஒடு என்னும் பொருளில் பயின்றது. சுருதிச் சொல்லால் நிலம் உழுதலாவது வேதமந்திரங்களைச் சொல்லிக் கொண்டு நிலத்தை உழுதலாம், சொல் என்பது மந்திரம் என்னும் பொருளிற் பயிலுதல், 'சொல்லுங்காற் சொல்லும் பலவுள (புறப். வெண்பா மாலை. 12. வென்றிப். 9.) என்பதனாலும் அறியலாம். சனகன் வேள்வி தொடங்க நிலத்தினை உழுதபொழுது படைச்சாலில் சீதா பிராட்டி தோன்றினமை பாலகாண்டத்தும் (765, 766-ஆம் பாடல் களில்) பேசப்பட்டது, கலுழிமாரி என்றது கண்ணீர்ப்பெருக்கினை. முன் சூர்ப்பநகைப் படலத்து இவ்வாற்றை வருணிக்கப்புக்க ஆசிரியர், 'இராமலக்குவர் வனத்திலுறைய நேர்ந்ததனை நினைந்து இவ்வாறு அழுவது போன்றிருந்தது' என்ற பொருள் அமைய, 'வழுவிலா வாய்மை மைந்தர் வனத்துறை வருத்தம் நோக்கி, அழுவதும் ஒத்தது' (2831) என்று கூறிய அடிகளும், 'வையை யென்ற பொய் யாக் குலக்கொடி, தையற்குறுவது தானறிந்தனள்போல், புண்ணிய நறுமலராடை போர்த்துச், கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கி' (13. 170-173) என்னும் சிலப்பதிகார அடிகளும் இங்கே ஒப்பு நோக்கத்தகும். (28)

4728. ஆசில்பே ருலகிற் காண்போ
ரளவைநூ லெனலு மாகிக்
காசொடு கனகந் தூவிக்
கவினுறக் கிடந்த கான்யா
றேசுபோ ரரக்கன் மார்பி
னிடைபறித் தெருவைவேந்தன்
வீசிய வடக மீக்கோ
ளீதென விளங்கிற் றன்றே.

ஆசு இல் பேர் உலகில், காண்போர்
அளவை நூல் எனலும் ஆகிக்
காசொடு கனகம் தூவிக்
கவின் உறக் கிடந்த கான் யாறு,
ஏசு போர் அரக்கன் மார்பின்
இடைபறித்து, எருவை வேந்தன்
வீசிய வடக மீக்கோள்
ஈது என விளங்கிற்று அன்று ஏ.

பொ :—மணியொடு பொன்னும் (அலைக்கரங்களால் வாரித்)தூவி அழகு பொருந்தக் கிடந்த நறுமணம் வாய்ந்த கோதாவரியாறானது குற்றமற்ற பெரிய நிலவுலகில் பார்ப்போர் (நிலத்தை) அளவிடுதற் குரிய நூல் (இது) என்று சொல்லத்தக்கதுமாகி, பழிக்கத்தக்க போரை மேற்கொண்ட அரக்க (னாகிய இராவண)னுடைய மார்பி னின்று கழுகரசனான சடாயு பறித்து வீசிய வடகமாகிய போர்வை இதுவென்று சொல்லும்படியும் விளங்கியது.

கு :—யாறு, அளவை நூல் எனலுமாகி, எருவை வேந்தன் அரக்கன் மார்பினிடை பறித்து வீசிய வடகமீக்கோள் இது எனவும் விளங்கிற்று என இயைக்க. எனவும் என உம்மை விரிக்க. ஆசு - குற்றம். அளவை நூல் - அளவு காண்பதற்குப் பயன்படுத்தும் நூல். காசு - மணி. கனகம் - பொன். கான் - நறுமணம். ஏசுபோர் - பழிக்கத்தக்க போர். அறத்தொடும் வீரத்தொடும் பொருந்தா மையின் ஏசு போர் என்றார். ஏசுதல் - பழித்தல். 'பேடிப் போர் வல்லரக்கர்' (2951) என்றார் முன்னும். அரக்கன் என்றது இராவணனை. எருவை வேந்தன் - கழுகரசன்; சடாயு. எருவை - கழுகு. வடகமாகிய மீக்கோள் என்க. வடகம் - உடைவகையுள் ஒன்று. மீக்கோள் - உடலின்மீது அணிந்து கொள்ளப்படுவது; போர்வை. 'வடகமும் துகிலும்' என்னும் சீவக சிந்தாமணிச் செய்

யுளில், (462) வடகம் என்பதற்கு 'அத்தவாளம்; உடைவிசேடம்' என்பது நச்சினார்க்கினியருரை. 'வடகப் போர்வையை வனப்பொடு திருத்தி' (1-45-10) என்பது பெருங்கதை. (29)

கோதாவரிச் சூழலிற் சீதாபிராட்டியைக் காணாமையால்
வானர வீரர் சுவணகத் துறையிற் புகுதல்

4729. அந்நதி முழுது நாடி
யாய்வளை மயிலை யாண்டுஞ்
சந்நிதி யுற்றி லாதார்
நெடிதுபின் றவிரச் சென்றா
ரின்னதீ திலாத தீதென்
றியாவையு மெண்ணுங் கோளார்
சொன்னதீ வினைக டீர்க்குஞ்
சுவணகத் துறையிற் புக்கார்.

அந்நதி முழுதும் நாடி,
ஆய் வளை மயிலை யாண்டும்
சந்நிதி உற்றிலாதார்,
நெடிது பின்தவிரச் சென்றார்-
இன்னதீது, இலாதது ஈது என்று
யாவையும் எண்ணும் கோளார்,
சொன்ன தீவினைகள் தீர்க்கும்
சுவணகத் துறையில் புக்கார்.

பொ:—தீயது இது தீயதல்லாதது இது என்று எல்லாவற்றையும் ஆராயும் அறிவாற்றலுடைய வானர வீரர், அந்தக் கோதாவரி யாற்றின் மருங்கெல்லாம் தேடியும், சிறந்த வளையணிந்த மயில்போல்வாளான சீதையை எங்கும் எதிர்ப்படாதவராய், நெடு நிலம் பின்னே கழியக் கடந்து சென்று, சுக்கிரீவனால் முன்பு சொல்லப்பட்டதும், கொடிய பாவங்களைப் போக்கவல்லதும் ஆன சுவணகம் என்னும் ஆற்றின் துறையை அடைந்தார்.

கு:—இன்ன(து) தீது, (தீது) இலாதது ஈது என்று யாவையும் உணரும் கோளார், மயிலை யாண்டும் நாடிச் சந்நிதி உற்றிலாதார், சென்றார், சுவணகத்துறையிற் புக்கார் என இயையும். இன்னது என்பது ஈறுகெட்டு இன்ன என நின்றது. தீது என்பது மீட்டும் கூட்டப்பட்டது. கோள் - ஆற்றல். யாவையும் எண்ணும் கோளார்

என்றது, தென்திசையில் சீதையைத் தேடிவந்த அனுமன் முதலிய வானர வீரர் மதிநலம் கூறியவாறு. ஆய்வளை மயில் என்றது சீதா பிராட்டியை. சந்நிதி - முன்பு. உற்றிலாதார், சென்ருர் என்பவை எச்சப் பொருளிற் பயின்றன. (சுக்கிரீவன்) சொன்ன சுவணகத்துறை தீவினைகள் தீர்க்கும் சுவணகத்துறை என்க. சொன்ன என்பதற்கு நூல்கள் கூறிய என்று பொருள்கொண்டு தீவினைகளுக்கு அடையாக் கலுமாம். சுவணகத்துறையின் பெருமை முன் நாடவிட்ட படலத்துள் அவ்வாறு கடந்து என்று தொடங்கும் பாடலால் அறியத்தகும். (30)

சுவணகத் துறையிலும் குலிந்த தேசத்திலும் தேடி நீங்குதல்

**4730.** சுரும்பொடு தேனும் வண்டு
மன்னமுந் துவன்று புள்ளுங்
கரும்பொடு செந்நெற் காடுங்
கமலவா விகளு மல்கிப்
பெரும்புனன் மருதஞ் சூழ்ந்த
கிடக்கைபின் கிடக்கச் சென்ருர்
குரும்பைநீர் முரஞ்சுஞ் சோலைக்
குலிந்தமும் புறத்துக் கொண்டார்.

சுரும்பொடு தேனும் வண்டும்
அன்னமும் துவன்று புள்ளும்
கரும்பொடு செந்நெல் காடும்
கமல வாவிகளும் மல்கிப்
பெரும் புனல் மருதம் சூழ்ந்த
கிடக்கை பின் கிடக்கச் சென்ருர்,
குரும்பை நீர் முரஞ்சும் சோலைக்
குலிந்தமும் புறத்துக் கொண்டார்.

பொ :—தும்பிகளும் தேனீக்களும் வண்டுகளும் அன்னங்களும் நிறைந்த (நாரை முதலிய பிற) பறவைகளும், கருப்பஞ் சோலைகளும் நல்ல நெல்விளை கழனிகளும் தாமரைத் தடாகங்களும் மிக்குப் பெரிய நீர்வளமுள்ள மருதஞ்சூழ்ந்த (சுவணகத்துறை) நிலப்பரப்புப் பின்னே கிடக்கச் சென்றவராகிய வானர வீரர், இளநீர் நிறைந்த தென்னஞ் சோலைகளையுடைய குலிந்த நாட்டையும் கடந்து போயினர்.

கு :—சுரும்பு தேன் வண்டு என்பவை வண்டின் வகைகள். துவன்றுதல் - நிறைதல். மருதநிலத்துக்குரியவான நாரை கொக்கு முதலிய பிற பறவைகளும் அடங்கத் துவன்றுபுள் என்றார். கிடக்கை - நிலப்பரப்பு. குரும்பை - தெங்கு பனை என்பவற்றின் இளங்காய். இங்கே குரும்பை நீர் என்றது தெங்கின் இளநீரை. முரஞ்சுதல் - நிறைதல். முதிர்தலுமாம். இதன் முதன் மூன்றடிகளில், நிலமும் நீரும், புள்ளும் பூவும் விளை பொருளும் முதலியவற்றால் மருதத்திணை வளம் கூறப்பட்டது. (31)

## கொங்கணம் முதலியவற்றைக் கடந்து அருந்ததிமலையினை அடைதல்

**4731.** கொங்கண மேழு நீங்கிக்
குடகடற் றரளக் குப்பைச்
சங்கணி பான னெய்தற்
றண்புன றவிர வேகித்
திங்களின் கொழுந்து சுற்றுஞ்
சிமயநீள் கோட்டுத் தேவ
ரங்கைகள் கூப்ப நின்ற
வருந்ததிக் கருக ரானார்.

கொங்கணம் ஏழும் நீங்கிக் குடகடல் தரளக் குப்பைச்
சங்கு அணி பானல் நெய்தல் தண்புனல் தவிர ஏகித்
திங்களின் கொழுந்து சுற்றும் சிமய நீள் கோட்டுத் தேவர்
அங்கைகள் கூப்ப நின்ற அருந்ததிக்கு அருகர் ஆனார்.

பொ :—(குலிந்தநாட்டைக் கடந்த வானர வீரர்,) ஏழு பிரிவான கொங்கண நாட்டைத் தாண்டி, மேலைக்கடலையடுத்த, முத்துக் குவியல்களும், சங்குகளும், அழகிய கருங்குவளை மலர்களும் நெய்தற் பூக்களும் உள்ள குளிர்ந்த நீர்ப்பரப்பாகிய நெய்தனிலம் பின் ஒழியச் சென்று, இளநிலாத் தவழும் சிகரங்களுடனும் நீண்ட கொடுமுடிகளோடும், தேவர்கள் தம் அழகிய கைத்தலங்களைக் குவித்து வணங்கும்படி நின்ற அருந்ததி மலையை அணுகினார்கள்.

கு :—குடகடல் - மேலைக்கடல். தரளம் - முத்து. தரளக்குப்பை - முத்துக் குவியல். சிமயம் - சிகரம். கோடு - கொடுமுடி. அருந்ததி மலையின் தெய்வத்தன்மை நோக்கித் தேவர் வணங்குவாராயினர். இம்மலையின் பெருமை முன், நாடவிட்ட படலத்து அரனதிகன் என்று தொடங்கும் பாடலிற் பேசப்பட்டது. (32)

## அருந்ததிமலையையும் மரகதமலையையும் தேடிக் கடந்து வேங்கடமலை யடைதல்

4732. அருந்ததிக் கருகு சென்றுண்
டழகினுக் கழகு செய்தா
ளிருந்ததிக் குணர்ந்தி லாதா
ரேகின ரிடையர் மாதர்
பெருந்ததிக் கருந்தேன் மாறு
மரகதப் பெருங்குன் றெய்தி
யிருந்ததிற் றீர்ந்து சென்றார்
வேங்கடத் திறுத்த வெல்லை.

அருந்நதிக்கு அருகு சென்று ஆண்டு
அழகினுக்கு அழகு செய்தாள்
இருந்த திக்கு உணர்ந்திலாதார்,
ஏகினர், இடையர் மாதர்
பெருந் ததிக்கு அருந்தேன் மாறும்
மரகதப் பெருங்குன்று எய்தி
இருந்து அதில் தீர்ந்து சென்றார்
வேங்கடத்து இறுத்த எல்லை.

பொ :—அருந்ததி மலையைக்கிட்டி, அங்கே அழகுக்கு அழகு செய்தவளாகிய சீதை இருந்த இடம் அறியாதவராகிய வானரர், மேலும் சென்று, இடையர் மகளிர் மிக்க தயிருக்கு நல்ல தேனைப் பண்ட மாற்றாகப் பெறும் மரகத மலையை அடைந்து, அதில் தங்கி, அதினின்று நீங்கிச் சென்று திருவேங்கட மலையில் தங்கியபொழுது.

கு :—வேங்கடத்திறுத்த வெல்லை, 'தூய நற்றவர் பாதங்கள் சூடினர்' என 37-ஆம் செய்யுளில் முடியும். இடையிலுள்ள செய்யுள் மூன்றும் திருவேங்கடமலையின் பெருமை பேசுவன. அழகினுக்கு அழகு செய்தாள் என்றது சீதாபிராட்டியை. பிறர்க்குப் பெருமை தரும் அழகுக்கும் அழகு தருபவள்; அதாவது பிறரெல்லாம் அழகினை யடைந்து சிறப்புற, அழகு நல்லியல்பெல்லாம் ஒருங்குடைய சீதா பிராட்டியை அடைந்து சிறப்புடையதாயிற்று என்றவாறு. 'இப் பாவை தோன்றலால் அழகெனுமவையுமோரழகு பெற்றவே' (பால. மிதிலைக். 34) என்றார் முன்னும். ஏகினர், சென்றார் என்பவை எச்சப்பொருளிற் பயின்றன. 'இடையர் மாதர் பெருந்ததிக்கு அருந்தேன் மாறும் மரகதப் பெருங்குன்று' என்றது, முல்லையும் குறிஞ்சியுமாகிய இரண்டு திணை மயங்கினமை கூறியவாறு. முல்லை

நிலத்து இடையர் மகளிர் தம் தயிரை அடுத்துள்ள குறிஞ்சிநிலத்துக் கொடிச்சியரிடம் தந்து, தம் தயிருக்கு மாற்ருக அக்கொடிச்சியரிட முள்ள தேனைப் பெறுவர் என்றவாறு. ததி - தயிர். மாறுதல் - மாற்றிக்கொள்ளுதல். தீர்தல் - நீங்குதல். இறுத்தல் - தங்குதல். எல்லே – பொழுது. (33)

## திருவேங்கடமலையின் பெருமை 4733-4735

4733. முனைவரு மறைவ லோரு
முந்தைநாட் சிந்தை மூண்ட
வினைவரு நெறியை மாற்று
மெய்யுணர் வோரும் விண்ணோ
ரெனைவரு மமரர் மாதர்
யாவருஞ் சித்த ரென்போ
ரனைவரு மருவி நன்னீர்
நாளும்வந் தாடு கின்ருர்.

முனைவரும் மறை வ(ல்)லோரும்
முந்தைநாட் சிந்தை மூண்ட
வினைவரும் நெறியை மாற்றும்
மெய் உணர்வோரும் விண்ணோர்
எனைவரும் அமரர் மாதர்
யாவரும் சித்தர் என்போர்
அனைவரும் அருவி நல்நீர்
நாளும் வந்து ஆடுகின்ருர்.

பொ :—முனிவர்களும், வேதம் வல்லாரும், பண்டு மனத்தால் விளைந்த வினைகள் தம்மைத் தேடிவரும் வழியை அடைத்த தத்துவ ஞானியரும், தேவர் யாவரும், தேவமகளிரெல்லாரும், சித்தர்கள் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவோரனைவரும், அத்திருவேங்கட மலையிலுள்ள நல்ல அருவி நீரில் நாள்தோறும் வந்து நீராடு கின்றனர்.

கு :—முனைவர்-முனிவர்; இருடிகள். 'முனைத்திறத்து மிக்க சீர் முனைவர் தம் முனைவனுர்' (சீவகசிந்தாமணி. 707) என்பதனுள், முனைவர் என்பது முனிவர் என்னும் பொருளிற் பயின்றமை காண லாம். சிந்தை-மனம். எல்லாச் செயல்களுக்கும் மனமே காரண மாதலின் சிந்தை மூண்ட வினை என்ருர். வினை என்றது வினைப்பயன்

களாகிய இன்பதுன்பங்களை. வினைவரும் நெறி என்றது காமம் வெகுளி மயக்கங்களை. மெய்யுணர்வுடையார் மாட்டுக் காம வெகுளி மயக்கங்கள் நிகழா ; காரணமாகிய குற்றங்கள் அறவே, காரியமாகிய இருவினைகளும் நிகழாமையின் அவற்றால் வினையும் இன்பதுன்பங்களும் அவர்பால் வாராமை பெறப்படும். சித்தர் என்பார் தேவ கணத்துள் ஒரு பிரிவினர். அருவி நன்னீர் என்றது ஆகாச கங்கை, குமார தாரை முதலியவற்றை. திருவேங்கடமலையிலுள்ள அருவிகள் மண்ணவரேயன்றி விண்ணவரும் வந்து நீராடும் சிறப்புடையன என்றவாறு. (34)

4734. பெய்த வைம்பொறி யும்பெருங் காமமும்
★ வைத வெஞ்சொலின் மங்கையர் வாட்கணி
னெய்த வஞ்சக வாளியு மெண்ணறச்
செய்த வம்பல செய்குநர் தேவரால்.

பெய்த ஐம்பொறியும் பெருங் காமமும்
வைத வெம் சொலின் மங்கையர் வாள்கணின்
எய்த வஞ்சக வாளியும் எண் அறச்
செய்தவம் பல செய்குநர் தேவரால்.

பொ :—தோன்றும்போதே பிரமனால் உடலில் அமைத்துவைத்த ஐம்பொறிகளும், அவற்றால் விளையும் ஆசையும், முனிவருடைய கொடிய சாபச் சொற்போல விடாதுபற்றி வருத்தவல்ல, மகளிருடைய வாள்போன்ற கண்களால் எய்த, ஏமாற்றும் இயல்புள்ள நோக்கமாகிய அம்புகளும் வலியழியும்படி, (வென்று) பல சிறந்த தவங்களைத் தேவர்கள், (அத்திருவேங்கடமலையில்) செய்கின்றனர்.

கு :—பெய்தல்-அமைத்தல். ஐம்பொறி-மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவை. பெருங்காமம் என்றது அப்பொறிகளால் உண்டாகும் விடய இச்சைகளை. அவை அடக்கற்கரியவாகலின், பெருங் காமம் என்றார். வைதல் என்பது சபித்தல் என்பது பட நின்றது. ‘வைதவைவின்’ என்றார் முன்னும் (தற்சிறப்பு 5). வைத வெம் சொல்-சபித்த கொடுஞ்சொல். ‘முனிவர் என்பது வருவித்துரைக்கப் பட்டது. கணின் எய்தவாளி’ என்றது உருவகம் ; கண்ணாற் செலுத்தப்படும் நோக்கமாகிய அம்பு என்றவாறு எய்தல்-செலுத்துதல். வாளி என்பதற்கிசைய எய்த என்றார். எண்-வலிமை; மதிப்புமாம். அம்மலையில், தேவர், தம் அகப் பகையாகிய பொறிகளை யடக்கி, முனிவர் சாபமொழிபோல விடாது பற்றிக் கெடுக்கவல்ல மகளிர் நோக்கினையும் வென்று, பல அரிய தவங்களைச் செய்வர் என்றவாறு.

மகளிர் நோக்குக்கு முனிவர் சாபமொழி உவமை. விடாதுபற்றி வருத்துதல் பொதுத்தன்மை. மகளிர் நோக்கம் இனியதுபோலத் தோன்றி வருத்தம் விளைத்தலின் 'வஞ்சகவாளி' என்றார். இதனால், திருவேங்கடமலை, தவஞ்செய்வார்க்கு அகப்பகையும் புறப்பகையும் போக்கியுதவும் தலமான்மியமும் தீர்த்தமான்மியமும் உடைய தென்பது கூறப்பட்டது. இச்செய்யுளுடன், 'ஆசலம்புரி ஐம்பொறி வாளியும், காசலம்பு முலையவர் கண்ணெனும் பூசலம்பும் நெறியின் புறஞ்செலாக் கோசலம்' (பால, ஆற்றுப்.) என ஆசிரியர் முன் கூறியதும் இங்கு நோக்கத்தகும். வைதவெம் சொலும் என்று பாடங்கொண்டு முனிவர் சபித்த கொடிய சாபமொழியும் என்று பொருள் கூறுதலுமாம். இதனால் பகைகடிதலோடு, சாபநீக்கமும் தரவல்லது அம்மலை என்பது பெறப்படும். (35)

**4735.** வலங்கொ ணேமி மழைநிற வானவ
னலங்கு தாளிணை தாங்கிய வம்மலை
விலங்கும் வீடுறு கின்றன மெய்ந்நெறிப்
புலங்கொள் வார்கட் கனையது பொய்க்குமோ.

வலம் கொள் நேமி மழைநிற வானவன்
அலங்கு தாளிணை தாங்கிய அம்மலை,
விலங்கும் வீடு உறுகின்றன ; மெய்ந்நெறிப்
புலம் கொள்வார்கட்கு அனையது பொய்க்குமோ ?

பொ :—வலக்கரத்தே தாங்கிய சக்கரப் படையினையும் மேகம் போலும் நிறத்தையும் உடைய தேவனான ஸ்ரீநிவாஸப்பெருமானுடைய விளக்கமுள்ள இரண்டு திருவடிகளையும் தாங்கிய அம்மலையில் உள்ள விலங்குகளும் வீட்டுலகிற் புகுகின்றன; (எனில்) அங்கு மெய்ந்நெறியின்கண் நிலைத்த அறிவினையுடையார்கட்கு அவ்வீடுறுதல் தவறுமோ ?

கு :—வலம் என்றது வலக்கையினை. வெற்றி என்று கொண்டு நேமிக்கு அடையாக்கலும் ஆம். நேமி-சக்கரம். சக்கரப்படை திருமாலின் வலக்கரத்தது. 'வலக்கையாழி இடக்கைச் சங்கம் இவையுடை மால்வண்ணன்' (6. 4. 9) என்பது திருவாய்மொழி, அலங்குதல்-விளங்குதல். திருவேங்கடத்துள் இறைவன் நின்ற திருக்கோலத்தோடு காட்சிதருதலின், 'மழைநிறவானவன் அலங்கு தாளிணை தாங்கிய அம்மலை' என்றார். விலங்கும் என்பதனுள் உம்மை இழிவு சிறப்புணர நின்றது. மெய்ந்நெறி-உண்மையானநெறி. மெய்ந்நெறி என்றது, இறைவனை அடைதற்கு வேறு சாதனம்

(உபாயம்) வேண்டாது. அவனடியிணைகளையே சாதனமாகப் (உபாய மாகப்) பற்றும் பிரபத்திமார்க்கத்தினை. தவருமல் பயன் அளித்தலின் அதனை மெய்ந்நெறி என்ருர். 'மெய்ந்நெறி நன்மையின்' (தற்சிறப்புப். 3) என்ருர் முன்னும். புலம்-அறிவு. திருவேங்கடமலை வீடுதரும் இயல்புடையதென்பது, 'திருவேங்கடம் நங்கட்குச் சமன் கொள் வீடுதரும் தடங்குன்றமே' (திருவாய்மொழி. 3.3.7) என்னும் அருளிச் செயலாலும் அறியத்தகும். (36)

## வானர வீரர் வேங்கட மலையில் முனிவரை வணங்குதல்

4736. ஆய குன்றினை யெய்தி யருந்தவ
மேய செல்வரை மேயினர் மெய்ந்நெறி
நாய கன்றனை நாளும் வணங்கிய
தூயர் நன்மலர்ப் பாதங்கள் சூடினர்.

ஆய குன்றினை எய்தி, அருந்தவம்
மேய செல்வரை மேயினர், மெய்ந்நெறி
நாயகன்தனை நாளும் வணங்கிய
தூயர் நன்மலர்ப் பாதங்கள் சூடினர்.

பொ :—அத்தன்மையுடைய திருவேங்கடமலையையடைந்து செய் தற்கரிய தவம்புரிதலை மேற்கொண்ட அருட் செல்வரைக் கிட்டி, உண்மையான நெறியாக (உபாயமாக) விளங்கும் இறைவனை நாள் தோறும் வணங்கும் அத்தவச் செல்வருடைய தூய சிறந்த தாமரை மலர்போலும் திருவடிகளைச் சிரமேற்கொண்டு வணங்கினர்.

கு :—மேவிய என்பது மேய என நின்றது விகாரம். மேயினர்- மேவியவராய், முற்றெச்சம். இறைவனை அடைய முயல்வார்க்கு அவனே உபாயமாகவும் பயனுகவும் விளங்குதல், 'நெறிவாசல் தானேயாய் நின்ருன்' (முதல் திருவந்தாதி 4.) என்று பொய்கை யாழ்வார் அருளிச் செய்தலால் அறியத்தகும். திருவேங்கடமலையில் உள்ள இறைவனையே நாளும் வழிபடும் அருட்செல்வராகிய முனிவ ரடிகளை வானரர் வணங்கினமை கூறவே, திருவேங்கடத்தமர்ந்த இறைவனையும் அவர் வணங்கினமை பெறப்படும். (37)

## வானர வீரர் வேங்கடம் நீங்கித் தொண்டை நாட்டிற் புகுதல்

4737. சூடி யாண்டச் சுரிகுழற் றேகையைத்
தேடி வார்புனற் றெண்டிரைத் தண்டக

நாடு நண்ணுகின் றார்மறை நாவலர்
வேட மேயினர் வேண்டுரு மேவுவார்.

சூடி, ஆண்டு அச் சுரிகுழல் தோகையைத்
தேடி வார்புனல் தெண்டிரைத் தண்டக
நாடு நண்ணுகின்றார், மறை நாவலர்
வேடம் மேயினர்; வேண்டு உரு மேவுவார்.

பொ :—விரும்பிய வடிவைக் கொள்ளவல்ல வானர வீரர், (முற் கூறியவாறு திருவேங்கடமலைத்தவச் செல்வரை) வணங்கி, அம்மலையின்கண், சுருண்ட கூந்தலையுடைய மயில் போல்வாளான சீதாபிராட்டியைத் தேடி(க் காணாதவராய்), தெளிந்த அலைகளோடு கூடிய மிக்க நீர்வளமுடைய தண்டக நாட்டை அடைகின்றவர், வேதம் வல்ல பார்ப்பாருருவை அடைந்தனர்.

கு :—வேண்டு உருமேவுவார், சூடி தேடி நண்ணுகின்றார், மேயினர்; என இயையும். சுரிதல்-சுருளுதல். தெண்திரைவார் புனல் தண்டக நாடு என மாறுக. தண்டகநாடு-தொண்டை நாடு. (38)

## தொண்டை நாட்டின் பெருமை

4738. குன்று சூழ்ந்த கடத்தொடுங் கோவலர்
முன்றில் சூழ்ந்த படப்பையு மொய்புனல்
சென்று சூழ்ந்த கிடக்கையுந் தெண்டிரை
மன்று சூழ்ந்த பரப்பு மருங்கெலாம்.

குன்று சூழ்ந்த கடத்தொடும் கோவலர்
முன்றில் சூழ்ந்த படப்பையும் மொய் புனல்
சென்று சூழ்ந்த கிடக்கையும் தெண் திரை
மன்று சூழ்ந்த பரப்பும் மருங்கெலாம்.

பொ :—(அத்தொண்டை நாட்டின்) எல்லாப் பக்கங்களிலும், மலை(குறிஞ்சி)யும் மலை சூழ்ந்த நிலமாகிய பாலையும், இடையர் இல்லங்களின் முன்னே சூழ்ந்த சோலை நிலமாகிய முல்லையும், நிறைந்த நீர் சென்று சூழ்ந்த இடமாகிய மருதமும், தெளிந்த திரைகளையுடைய கடலையடுத்த வெள்ளிடை சூழ்ந்த நிலமாகிய நெய்தலும் உள்ளன.

கு :—குன்று என்பதனுற் குறிஞ்சியும், குன்று சூழ்ந்த கடம் என்பதனுற் பாலையும் கொள்ளத்தகும். ஒடு எண்ணுப் பொருளிற் பயின்றது. கோவலர் - ஆயர். முன்றில் - இல்முன். படப்பை, கிடக்கை பரப்பு என்பவை இடம் அல்லது நிலம் என்னும் பொருளிற் பயின்றன. திரை ஆகுபெயராய்க் கடலை யுணர்த்தியது. மன்று - மன்றம் = வெள்ளிடை. இதனுல் அத்தொண்டை நன்னுடு எல்லாப் பக்கங்களிலும் குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என்னும் ஐந்திணை வளங்களும் மல்கியது என்பது பெறப்படும். (39)

4739. சூல டிப்பல வின்றலை தூங்குதேன்
கோல டிப்ப வெரீஇக்குல மள்ளரேர்ச்
சால டித்தருஞ் சாலியின் வெண்முளை
தோல டிக்கிளை யன்னந் துவைப்பன.

சூல் அடிப் பலவின்தலை தூங்கு தேன்
கோல் அடிப்ப வெரீஇக் குல மள்ளர் ஏர்ச்
சால் அடித்தரும் சாலியின் வெண்முளை,
தோல் அடிக் கிளை அன்னம் துவைப்பன.

பொ :—கருவை வேரின்கட்கொண்ட பலா மரத்தின் உச்சிக்கிளை வளைதற்குக் காரணமான (பருத்த) தேன்கூட்டை மள்ளர் கோல் கொண்டு தாக்குதலால், (அப்பலவின் உச்சியில் அமர்ந்த) தோல் பரவிய கால்களையுடைய கூட்டமான அன்னப்பறவைகள், அஞ்சி, உழுத படைச்சாலையுடைய நிலத்தில் அம்மள்ளர் வித்தி உண்டாக்கிய செந்நெல்லின் வெள்ளிய முளைகளைத் தம் கால்களால் மிதித்து உழக்குவனவாயின.

கு :—சூலடிப்பலவு என்றது வேர்ப்பலாவை. சூல் என்றது பழத்தை. தலை - உச்சி தூங்குதல் - வளைதல். தேன் - தேன் கூடு. பலவின் தலை தூங்கு (தற்குக் காரணமான) தேன் எனவே, தேன் கூட்டின் பருமை புலப்படும். கோல் - கழி; மாடுகளை ஓட்டு தற்குரிய கருவி. தேன்கூட்டைக் கோலால் தாக்கி அக்கூட்டி லிருந்து ஒழுகுந் தேனைக் குடம் முதலியவற்றில் ஏந்திச் சேர்ப்பது வழக்கு. மள்ளர் பலா மரத்தின் உச்சிக்கிளையிலமைந்த தேன் கூட்டைத் தாக்க, அப்பலவில் அமர்ந்திருந்த அன்னங்கள் அம் மள்ளர் தம்மைத் தாக்கியதாக அஞ்சினவாய் (அவர்க்குப் பிரதி செய்வனபோல) அவர் வித்தி உண்டாக்கிய செந்நெல்லின் வெண் முளைகளைக் காலால் துவைத்து உழக்குவனவாயின என்றவாறு. மள்ளர் - மருதநில மாந்தர். மள்ளர் என்பது மள்ளர் கோலடிப்ப

எனவும் மள்ளர் ஏர்ச்சாலடி எனவும் முன்னும் பின்னும் கூட்டிக் கொள்ள நின்றது. ஏர்ச்சால்அடி – ஏர்ச்சாலையுடைய நிலம். தருதல் - உண்டாக்குதல். சாலி - நெல். அன்னத்தின் கால் நீரில் மிதந்து நீந்துதற்கேற்றவாறு தோல் பரவியது ஆதலின், தோலடி என்றார். கிளை – கூட்டம். துவைத்தல் - உழக்குதல். இச்செய்யுள், குறிஞ்சியும் மருதமுமாகிய இருதிணையும் தம்முள் மயங்கினமை கூறியதாகும், பலா குறிஞ்சிக்கும் நெல் மருதத்துக்கும் கருப்பொருள். பலா, குறிஞ்சிக்குரியதென்பது, 'மலைச்சாரற்பலா' (நாட்டுப். 134) என்னுங் காஞ்சிப் புராணத்தாலும் அறியலாம். (40)

**4740.** செருகு றுங்கணிற் றேங்கு வளைக்குல
மருகு றங்கும் வயன்மருங் காய்ச்சிய
ரிருகு றங்கும் பிறங்கின வாழையிற்
குருகு றங்குங் குயிலுந் துயிலுமால்.

செருகு உறும் கணில், தேம் குவளைக் குலம்
அருகு உறங்கும் வயல் மருங்கு; ஆய்ச்சியர்
இரு குறங்கும் பிறங்கின வாழையில்
குருகு உறங்கும்; குயிலும் துயிலும் ஆல்.

பொ:—தேனையுடைய குவளைப் பூக்கள், (உறங்குங்கால்) உள் ஒடுங்கிய ஆய்ச்சியருடைய கண்களைப்போல வரப்பிற் கிடக்கும் வயலின் பக்கத்தே அவ்வாய்ச்சியருடைய இரு தொடைகளும்போல விளங்கும் வாழையில் நாரைகள் தூங்கும்; குயில்களும் தூங்கும்.

கு:—தேம் குவளைக்குலம், ஆய்ச்சியர் செரு குறுங்கணில் அருகு உறங்கும் வயல் என இயைக்க. தேம் - தேன். ஆய்ச்சியர் என்பது முன்னும் கூட்டிக் கொள்ளப்பட்டது. செருகுதல் - உள்ளொடுங் குதல். செருகுதல் என்பது முதனிலை மாத்திரையாய்ச் செருகு என நின்றது. அருகு - வரப்பு. உறங்குதல் - தங்குதல். 'தாமரை யுறங்குஞ் செய்யாள்' (பால. 34) என்றார் முன்னும். மருங்கு - பக்கம். குறங்கு - தொடை. குருகு - நாரை. பகலிற் குவியும் இயல்பின தாகிய குவளை, களைபறிப்பாரால் களைந்து வரப்பில் இடப்பட்டுக் கிடத்தலால் அதற்கு உறங்கும் நிலையிலுள்ள மகளிர் கண்களை உவமை கூறினர். மகளிர் கண்களுக்கும் அவர் தொடைக்கும் உவமையாகும் குவளையையும் வாழையையும் உவமேயமாக்கியது, எதிர்நிலை என்னும் அணிதழுவியமைத்ததாகும். இதனுள், வயல்

என்றதனுல் மருதமும், வாழை யென்றதனுல் குறிஞ்சியும், குருகு என்றதனுல் நெய்தலும் குயில் என்றதனுல் முல்லையும் ஆகியநானில மயக்கம் கூறியவாறு. (41)

4741. தெருவி ஞர்ப்புறும் பல்லியந் தேர்மயில்
கருவி மாமழை யென்று களிப்புரு
பொருநர் தண்ணுமைக் கன்னமும் போகலா
மருவி ஞர்க்கு மயக்கமுண் டாகுமே.

தெருவின் ஆர்ப்புறும் பல்லியம் தேர் மயில்,
கருவிமா மழை யென்று களிப்பு உரு ;
பொருநர் தண்ணுமைக்கு அன்னமும் போகலா,
மருவினுர்க்கு மயக்கம் உண்டாகுமே ?

பொ :—அத்தொண்டை நாட்டு ஊர்களின் தெருக்களில் முழங்குகின்ற பலவகை வாத்திய வொலிகளையும் நன்கு அறிந்த மயில்கள், அவ்வொலியைத் தொகுதியான கரிய மேக முழக்கமென்று மகிழ்வதில்லை; ஏர்க்களம் பாடுவோருடைய மத்தளவொலியால் அன்னங்களும் அஞ்சி அகல்வதில்லை ; பழகினவர்க்கு மயக்கம் உண்டாகுமோ? (உண்டாகாது)

கு :—இயம் - வாத்தியம். கருவி - தொகுதி. மழை என்றது மேக முழக்கத்தை. பொருநர் - ஏர்க்களம் பாடுவோர். தண்ணுமை - மத்தளம் ; இங்கே தண்ணுமை என்றது மத்தளவொலியை. மயில் மேக முழக்கங்கேட்டு மகிழும் இயல்புடையது. வாத்தியங்களின் முழக்கம் மேக முழக்கம் போலிருக்கும். அன்னங்கள் தண்ணுமை யொலிக்கு அஞ்சுவது. பிற இடங்களில் அரிதாக ஒரொரு கால் நிகழும் வாத்திய முழக்கங்கேட்டு மயில்கள் மேக முழக்கமென்று மயங்கி மகிழினும், தொண்டை நாட்டுத் தெருக்களில் இடையருது நிகழும் வாத்திய முழக்கங் கேட்டுப் பழகிய மயில்கள், அதனை மேக முழக்கமென்று மயங்கி மகிழ்வதில்லை; பிற இடங்களில் தண்ணுமை யொலியினை ஒரொருகால் கேட்டு, அன்னங்கள் அஞ்சுமேனும், தொண்டைநாட்டு ஊர்களில் எப்போதும் தண்ணுமையொலி நிகழ்தலின் அதுகேட்டுப் பழகிய அன்னங்கள் அஞ்சி அகல்வதில்லை என்றவாறு. இதனுல் தொண்டை நாட்டு ஊர்களில் எப்போதும் மங்கலங்கள் இடையருது நிகழும் என்பது பெறப்படும். மருவினுர்க்கு மயக்கம் உண்டாகாது என்னும் பொதுப் பொருளால், மயில்கள் வாத்தியங்களின் ஒலியை மேக முழக்கம்என்று மயங்கி மகிழ்வதில்லை; அன்னங்கள் தண்ணுமையொலி கேட்டு அஞ்சி அகல்வதில்லை ;

என்னும் சிறப்புப் பொருள்கள் துணிய நின்றமையின், இச்செய்யுள் வேற்றுப் பொருள் வைப்பு என்னும் அணிதழுவியதாகும். (42)

4742. தேரை வன்றலைத் தெங்கிளம் பாளையை
நாரை யென்றிளங் கெண்டை நடுங்குவ
தாரை வன்றலைத் தண்ணிள வாம்பலைச்
சேரை யென்று புலம்புவ தேரையே.

தேரை வன் தலைத் தெங்கிளம் பாளையை
நாரை என்று இளங்கெண்டை நடுங்குவ
தாரை வன்தலைத் தண் இள ஆம்பலைச்
சேரை என்று புலம்புவ தேரையே.

பொ:—தேரையின் வலிய தலைபோலக் குவிந்து நீண்ட தென்னையின் வலிய இளைய பாளையைக் கொக்கென்று நினைந்து சிறிய கெண்டை மீன்கள் நடுங்குவனவாயுள்ளன. கூர்மையான வலிய நுனியுள்ள அரும்பினையும் குளிர்ச்சியையும் உடைய இளைய ஆம்பற் கொடியைச் சாரைப் பாம்பென்று தேரைகள் நடுங்குவனவாயுள்ளன.

கு:—தேரை - தவளை. நாரை – கொக்கு. தாரை - கூர்மை. தலை - நுனி. தாரை வன் தலை என்றது ஆம்பலரும்பினை. சேரை - சாரைப்பாம்பு. ஆம்பலரும்பு சாரைப் பாம்பின் தலைபோல்வது என்பது, 'சேரைப் பாம்பின தலையவாகிப் பரிந்தன குவிந்து சாய்ந்த ஆம்பலும்' (1979) என ஆசிரியர் முன் கூறிய தனாலும் அறியலாம். தெங்கின்பாளை விரிந்த நிலையில் கொக்குப்பே லத் தோன்ற அது கண்ட கெண்டை மீன்கள், தங்களை உண்ணுதற்குக் கொக்கு வந்த தென்று அஞ்சி நடுங்கி (நீருள் மறைந்த)ன. கூரிய நுனியுள்ள அரும்பொடு கூடிய ஆம்பற் கொடி பாம்புபோலத்தோன்ற, அதைக் கண்ட தேரைகள், தம்மை யுண்ணவந்த பாம்பென்று அஞ்சி வருந்தின என்றவாறு. இதனால் தொண்டை நாட்டு நிலவளமும் நீர்வளமும் பொழில்வளமும் புலனாகும். இச்செய்யுளின் முன்னிரண்டடிகளுடன், 'பானிறங்கொள் தெங்கினிளம் பாளை விரியச் சுனையுள் மீனினங் கொக்கென் றெளிக்கும் வேங்கடமே' (திருவேங் கடமாலை. 27) என்னும் பிள்ளைப் பெருமாளையங்கார் வாக்கும் நோக்கத்தகும். (43)

4743. நள்ளி வாங்கு கடையிள நவ்வியர்
வெள்ளி வால்வளை வீசிய வெண்மணி
யள்ளி நாரை சினைபொரி யாதவென்
றுள்ளி யாமை முதுகி னுடைப்பரால்.

நள்ளி வாங்கு கடைஇள நவ்வியர்,
வெள்ளிவால் வளை வீசிய வெண்மணி
அள்ளி, 'நாரை சினை பொரியாத' என்று
உள்ளி, ஆமை முதுகின் உடைப்பர் ஆல்.

பொ :—(உணவின் பொருட்டு) நண்டைப் பிடிக்கின்ற இளைய மான் போல்பவராகிய உழத்தியர், மிக்க வெண்மை நிறமுடைய சங்குகள் மிகவும் ஈன்ற வெள்ளிய முத்துக்களைக் கைகளில் அள்ளிக் கொண்டு, அவை, நாரையால் (அடைகாத்துக்) குஞ்சு பொறிக்கப் படாத முட்டை' என்று நினைந்து. அவற்றை (உண்ணவிரும்பி) ஆமையின் முதுகில் உடைப்பார்கள்.

கு :—நள்ளி என்றது பெண் நண்டினை. 'பள்ளிக் கமலத் திடைப் பட்ட பகுவாய் அலவன் முகம் நோக்கி, நள்ளியூடும் வயல் சூழ்ந்த நறையூர்' (பெரிய திருமொழி 6. 7. 6) என்னும் அருளிச் செயலுள் நள்ளி பெண் நண்டு என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். வாங்குதல்-பிடித்தல். நவ்வி-மான். கடைசியர்-மருதநிலமகளிர். வெள்ளிவால் என்பது மீமிசைச்சொல். வெண்மணி-முத்து. சினை-முட்டை. நள்ளிபிடிக்கப்புக்க உழத்தியர்கையில் முத்துக்கள் அகப்படு மெனவே, சிறு முயற்சி செய்வார்க்கும் பெரும் பயனுதவுவது அத் தொண்டை நாடு என்பதும், அங்கு உழத்தியரும் ஆண் நண்டைத் தொடார் எனவே, பிற ஆடவரை நோக்காத கற்பு நெறியுடையர் அந்நாட்டு மகளிர் என்பது புலனாகும். (44

4744. சேட்டி ளங்கடு வன்சிறு புன்கையிற்
கோட்ட தேம்பல வின்கனிக் கூன்சுளை
தோட்ட மைந்த பொதும்பரிற் றூங்குதே
னீட்ட மென்னச்சென் றீயின மொய்ப்பன.

சேட்டு இளங்கடுவன் சிறு புன்கையின்
கோட்ட தேம் பலவின் கனிக் கூன்சுளை
தோட்டு அமைந்த பொதும்பரில் தூங்குதேன்
ஈட்டம் என்னச் சென்று ஈ இனம் மொய்ப்பன.

பொ :—மிகவும் இளைய ஆண் குரங்கின் மிகச் சிறிய கையால், கிளைகளிலுள்ள இனிய குடம் போன்ற பலாப் பழத்தில் சுளையைத் தோண்டி யெடுத்தமையால் அமைந்த பொந்தின்கண், தொங்குகின்ற தேன்கூடு என்று சொல்லும்படி ஈக்களின் கூட்டம் சென்று மொய்க்கும்.

கு :—சேடு-இளமை. கடுவன்-குரங்கின் ஆண். சேட்டிளங் கடுவன், சிறு புன்கை என்பவை மீமிசைச் சொல் அடுத்த தொடர்களாம். கோடு-கிளை. தேம்-இனிமை; நறுமணமும் ஆம். கூன்கனி என மாறுக. கூன்-குடம். பலாப்பழத்தைக் குடக்கனி என்று வழங்குவதும் உண்டு. தொடுதல் - தோண்டுதல். தொட்டமைந்த எனற்பாலது, எதுகை நோக்கித், தோட்டமைந்த என நின்றது. பொதும்பர், பொதும்பு என்பவை குழி, பொந்து என்னும் பொருளுடையன. 'கொங்கைச் சிறுவரை யென்னும் பொதும்பினில் வீழ்ந்து' (பெரியாழ்வார் திருமொழி. 5. 2. 7) என்பதனுள் இப்பொருளிற் பயின்றமை காணலாம். தேனீட்டம்-தேன் மிகுதியையுடையது-தேன்கூடு. (45)

45 ல் இதன்பின் ஒரு பிரதியிற் காணப்படுவனவாகக் குறித்த மிகைப் பாடல்கள் வருமாறு.

**4744 (a)** ஆகை யாலங் கடைந்தவ ரியாவர்க்கும்
ஓகை யாலமு தூட்டின ருண்டுரம்
சோகம் மாறிப்பின் ரேகையை யவ்வழிச்
சேகு சேறுறத் தேடினர் காண்கிலார்.

**4744 (b)** இனைய தண்டக நாட்டினு ளெய்தினர்
அனைய நாட்டி னருந்தவர் யாவரும்
நனிவிரும்பி நயந்தனர் நான் மறைப்
புனிதரென்று கொண் டுள்ளுறும் புந்தியார்.

**4745.** செல்வ ரென்றும் வடகலை தென்றமிழ்ச்
சொல்வ ரம்பின ரென்றுஞ் சுளிபடக்
கொல்வ ரென்றுங் கொடுப்பவ ரென்றுமவ்
வில்வ ரம்பின் றகைத்தெனு மீட்டதே.

செல்வர் என்றும், வடகலை தென்தமிழ்ச்
சொல் வரம்பினர் என்றும் சுளி படக்
கொல்வர் என்றும் கொடுப்பவர் என்றும் அவ்
இல் வரம்பின் தகைத் தெனும் மீட்டதே.

பொ :—(ஒருவரைச்சுட்டி) இவர் செல்வமுடையவர் என்றும், இவர் வடமொழி நூல்களின் எல்லை கண்டவர் என்றும், இவர் இனிய தமிழ் மொழி நூல்களின் எல்லை கண்டவர் என்றும், இவர் சினம் அழியக் கொல்லுவர் என்றும், இவர் கொடுப்பவர் என்றும் சொல்லப் படுகிற அவை இல்லாத எல்லை நிலமாகிய வீட்டுலகின் தன்மையினை யுடையது என்று சொல்லத்தக்க பெருமையினையுடையது (அத் தொண்டை நாடு.)

கு :—வீட்டுலகிலுள்ளாரனைவரும் செல்வர், மொழியறிவு நிரம் பியவர், சினமற்றவர், வள்ளியர் ஆதலின் ஒருவரைச் சுட்டி இவர் செல்வர் என்பது முதலிய வழக்கு வீட்டுலகில் இல்லையாயிற்று. அது போலவே, தொண்டை நாட்டிலும் 'எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தியவர் ஆதலின் ஒருவரைச் சுட்டி, இவர் இஃதுடையர் என்று சொல்லலாவதில்லை என்றவாறு. வடகலை வடமொழி நூல்கள். தமிழ்ச் சொல் என்றது தமிழ் நூல்களை. வரம்பு- எல்லை. சுளி-சினம், நான்காம் அடியில் வரம்பு என்றது எல்லை நிலமாகிய வீட்டுலகினை. ஈடு-பெருமை. இதனால் தொண்டைநாட்டு மக்களின் தகுதி விளங்கும். (46)

## வானர வீரர் தண்டகநாடு கடந்து சோழநாடு அடைதல்

**4746.** அன்ன தண்டக நாடு கடந்தகன்
பொன்னி நாடு பொருவில ரெய்தினர்
செந்நெ லுங்கரும் புங்கமு குஞ்செறிந்
தின்னல் செய்யு நெறியரி தேகுவார்.

அன்ன தண்டகநாடு கடந்து, அகன்
பொன்னிநாடு பொருஇலர் எய்தினர்,
செந்நெலும் கரும்பும் கமுகும் செறிந்து,
இன்னல் செய்யும் நெறி அரிது ஏகுவார்.

பொ :—ஒப்பற்றவரான வானர வீரர் அத்தன்மை வாய்ந்த தொண்டை நாட்டினைக் கடந்து, பரந்த காவிரி நாட்டைக் கிட்டியவ ராய், நல்ல நெல்லும் கரும்பும் கமுகும் அடர்ந்து வழி நடப்பார்க்கு இடர்விளைக்கும் வழியில் வருந்திச் செல்வாராயினர்.

கு :—தண்டகநாடு-தொண்டைநாடு. பொன்னி-காவிரி. வழி யெங்கும் நெல்லும் நெல்லரிதாளும் கரும்பும் கரும்பு வெட்டியதூறும் கமுகும் கமுகினின்று உதிர்ந்த பழங்களும் மல்கி உறுத்திவருத்தலின் வழநடத்தல் அரிதாயது, (47)

## சோழநாட்டு வளம்

**4747.** கொடிறு தாங்கிய வாய்க்குழு நாரைவாழ்
தடறு தாங்கிய கூனிளந் தாழையின்
மிடறு தாங்கும் விருப்புடைத் தீங்கனி
யிடறு வார்நறுந் தேனி னிழுக்குவார்.

கொடிறு தாங்கிய வாய்க் குழு நாரைவாழ்
தடறு தாங்கிய கூன் இளந்தாழையின்
மிடறு தாங்கும் விருப்பு உடைத் தீங்கனி
இடறுவார் நறுந்தேனின் இழுக்குவார்.

பொ :—(வானரவீரர் சோழநாட்டுள் செல்லுங்கால்) பற்றுக் குறட்டின் தன்மையைக் கொண்ட வாயலகினையுடைய கூட்டமான நாரைகள் வாழ்கின்ற, நீர்க்கரைகளில் வளர்க்கப்பட்ட வளைந்த இளைய தெங்குகள் கழுத்திலே கொண்ட எல்லாரும் விரும்பும் இயல்புடைய இனிய பழங்களால் ஊறுபடுத்தப்படுவார்; நல்ல தேனொழுக்கினால் வழுக்கி வீழ்வர்.

கு :—கொடிறு-குறடு. நாரையின்வாய் பற்றுக்குறடு போலும் அமைப்புடையது ஆதலின், கொடிறு தாங்கிய வாய் என்றார். தடறு-நீர்க்கரை. தாழை-தெங்கு. இடறுதல்-ஊறுபடுத்தல். இழுக்குதல்-வழுக்குதல். (48)

**4748.** குழுவு மீன்வளர் குட்ட மெனக்கொளா
வெழுவு பாட லிமிழ்கருப் பேந்திரத்
தொழுகு சாற்றகன் கூனையி லூழ்முறை
முழுகி நீர்க்கருங் காக்கை முளைக்குமே.

குழுவு மீன் வளர் குட்டம் எனக் கொளா
எழுவு பாடல் இமிழ் கருப்பேந்திரத்து
ஒழுகு சாற்று அகன் கூனையில் ஊழ்முறை
முழுகி நீர்க் கருங்காக்கை முளைக்குமே.

பொ :—நீரில் வாழும் கரிய காக்கைகள், இயக்குவாரால் எழுப்பப்படுகிற பாடலொடு ஒலிக்கின்ற கரும்பாலையினின்று ஒழுகுகின்ற சாற்றையுடைய கூனைக் கூட்டமாகத் திரள்கின்ற மீன்கள் தங்கிய மடுவென்று எண்ணி, அக்கூனில் வரிசையாக முழுகி எழும்.

கு :—நீர்க்கருங் காக்கை, எழுவுபாடல் இமிழ் கருப்பேந்திரத்து ஒழுகு சாற்று அகன்கூனைக் குழுவு மீன்வளர் குட்டம் எனக்கொளா, அக்கூனில் ஊழ்முறை முழுகி முளைக்கும் என இயையும். குழுவுதல்-திரளுதல். வளர்தல் - தங்குதல். குட்டம் - சிறிய நீர்நிலை; மடுவும் ஆம். எழுவுதல் - எழுப்புதல். இமிழ்தல் - ஒலித்தல். பாடலொடு இமிழ் கருப்பேந்திரம் என ஒடு உருபு விரிக்க. கருப்பேந்திரம்-கரும் பாலை. கூன் - கருப்பஞ்சாறுள்ள வாயகன்ற பெரும் பாத்திரம். கூனையில் என்பதனுள் ஐ சாரியை. ஊழ் - வரிசை முளைத்தல் - எழுதல். கருப்பஞ்சாற்றுக்குக் குட்டத்து நீரும், அச்சாறு வந்து விழும் அல்லது அச்சாற்றைக் காய்ச்சும் பெரும் பாத்திரமாகிய கூனுக்குக் குட்டமும் உவமை. 'குருதி சாறெனப் பாய்வது குரை கடற் கூனில்' (சுந்தர. 790) என்று ஆசிரியர் பின்னே கூறுவதும் இங்கு நோக்கத்தகும். (49)

4749. பூநெ ருங்கிய புள்ளுறு சோலைக
டேனெ ருங்கு சொரிதலிற் றேர்வில
மீனெ ருங்குறும் வெள்ள மெனவெரீஇ
வான ரங்கண் மரங்களின் வைகுமால்.

பூ நெருங்கிய புள் உறு சோலைகள்
தேன் ஒருங்கு சொரிதலின், தேர்வுஇல
மீன் நெருங்குறும் வெள்ளம் என வெரீஇ
வானரங்கள் மரங்களின் வைகுமால்.

பொ :—குரங்குகள், பூக்கள் செறியப் பெற்றனவும் பறவைகள் தங்கப்பெற்றவையுமான பொழில்கள் தேனை ஒருங்கு சொரிதலால் உண்டான தேன் பெருக்கைத் தேன் பெருக்கென்று தெளியாதன வாய், மீன்கள் நெருங்கிய வெள்ளம் என்று அஞ்சி (நிலத்தில் வராமல்) மரங்களின்மேல் தங்கும்.

கு :—புள் - பறவை; வண்டும் ஆம். வெரீஇ - வெருவி, அஞ்சி குரங்குகள் நீர்ப்பெருக்கைக் கண்டு அஞ்சும் இயல்பின. (50)

4750. தாறு நாறுவ வாழைக டாழையின்
சோறு நாறுவ தூங்குறு மாங்கனி
நாறு நாறுவ நாறு வளர்க்குறுஞ்
சேறு நாறுவ செங்கழு நீரரோ.

தாறு நாறுவ வாழைகள்; தாழையின்
சோறு நாறுவ; தூங்குறும் மாங்கனி
நாறு நாறுவ; நாறு வளர்க்குறும்
சேறு நாறுவ செங்கழுநீர் அரோ.

பொ:—குலைகள் தோன்றியுள்ள வாழையின் இலைகள், தாழையின் சோறு விளங்குவனவாயுள்ளன. நெல் நாற்றுக்கள், கிளைகளில் தொங்குகின்ற மாங்கனிகளின் மணம் வீசுவன. அந் நாற்றுக்களை வளர்க்கும் சேறுகள், அங்குள்ள செங்கழுநீர்ப் பூக்களின் நறுமணம் நாறுவனவாய் உள்ளன.

கு:—தாறு - வாழையின் காய்க்குலை. நாறுதல் என்பது, தோன்றுதல், விளங்குதல், நறுமணம் வீசுதல் என்னும் பல பொருளொரு சொல். தாழையின் சோறு தாழை மடலின் உள்ளீடு. உண்ணும்போதன்றி வாழையில் இலை விரியும்போதே அதிற் சோறு விளங்குவதாகக் கூறிய நயம் நோக்கத்தகும். 'தாறு நாறுவ வாழைகள் தாழையின் சோறு நாறுவ என்பது மருதமும் நெய்தலும் ஆகிய திணைகள் மயங்கியமை தோன்ற நின்றது. நாறு - நெல் நாற்று. மாங்கனி என்றது மாம்பழத்தின் மணத்தினை. வயல் தோறும் தனித்தனி தொளி செய்யப்பட்டிருத்தலின், சேறு நாறுவ எனப் பன்மைபடக் கூறினர். சேறு நாறுவ செங்கழுநீர் என்றது நெல் நடுதற்காகக் குழையிட் டழுகவைத்துழுத சேற்றின் நாற்றம் அடங்கச் செங்கழுநீர்ப் பூவின் நறுமணம் பரவும் என்றவாறு. (51)

## சோழநாடும் மலைநாடுங் கடந்த வானர வீரர் பாண்டியநாடு அடைதல்

**4751.** அனைய பொன்னி யகன்புன னாடொரீஇ
மனையின் மாட்சி குலாமலை மண்டலம்
வினையின் நீங்கிய பண்பினர் மேயினர்
இனிய தென்றமிழ் நாடுசென் றெய்தினர்.

அனைய பொன்னி அகன் புனல் நாடுஒரீஇ
மனையின் மாட்சி குலாம் மலைமண்டலம்
வினையின் நீங்கிய பண்பினர் மேயினர்
இனிய தென் தமிழ்நாடு சென்று எய்தினர்,

பொ:—தீவினையினின்று நீங்கிய தன்மையினரான வானரவீரர், (முன்பாடல்களிற் கூறிய) அத்தன்மையினதான பரவிய புனல்வள

முடைய காவிரி நாட்டைக் கடந்து, இல்வாழ்வின் சிறப்பு விளங்கு கின்ற மலைநாட்டை அடைந்தவராய், (அங்கும் சீதாபிராட்டியைத் தேடிக் காணாது) சென்று இனிய தமிழ் வழங்குகின்ற தெற்கின்கண் உள்ள பாண்டிநாட்டை யடைந்தனர்.

கு :—அகன்புனல் பொன்னிநாடு என மாறுக. குலாவும் என்பது குலாம் என நின்றது, விகாரம். குலாவுதல் - விளங்குதல். மலை மண்டலம் - மலைநாடு = சேர நாடு. (52)

## பாண்டிய நாட்டுச் சிறப்பு

4752. அத்தி ருத்தகு நாட்டினை யண்டர்நா
டொத்தி ருக்குமென் றுலுரை யொக்குமோ
எத்தி றத்தினு மேழுல கும்புகழ்
முத்து முத்தமி ழுந்தந்து முற்றுமோ.

அத் திருத்தகு நாட்டினை அண்டர்நாடு
ஒத்திருக்கும் என்றால் உரை ஒக்குமோ ?
எத்திறத்தினும் ஏழ் உலகும் புகழ்
முத்தும் முத்தமிழும் தந்து, முற்றுமோ ?

பொ :—அந்தச் செல்வ மேம்பாட்டினையுடைய பாண்டிய நாட்டை 'இது தேவர் உறையும் பொன்னாட்டை ஒத்திருக்கும்' என்று கூறின், அவ்வுரை பொருந்தாது. ஏன் எனின், அப் பொன்னாடு பாண்டி நாடுபோல் எல்லாவகையாலும் ஏழுலகத்தாரும் பாராட்டும் முத்துக்களையும் முத்தமிழையும் கொடுத்து நிறைவுடைய தாகாது, ஆதலால்.

கு :—அண்டர் - தேவர். திறம் – வகை. ஏழுலகு, மேலேழுலகு கீழேழுலகு என இருவகைப்படும். பூலோகம், புவலோகம், சுவ லோகம், மகலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம் என்பவை மேலேழுலகங்கள். அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம் என்பவை கீழேழுலகங்கள். முத் தமிழ்கள், இயல் இசை நாடகம் என்பவை. பாண்டிநாடு முத்தும் முத்தமிழும் உடையதென்பது, 'பூழியன்றன் தென்னாடு முத்து டைத்து', 'வீயாத்தமிழுடையான் பல்வேற் கடற்றானைப் பாண் டியன்' என்னும் ஆன்றோர் வாக்கால் அறியலாம். சிறந்த நாடு நகரங்களுக்கு முறையே தேவர் உறையும் பொன்னாட்டையும், அதன் தலைநகராகிய அமராவதியையும் உவமை கூறுவதுண்டு. அம் முறையில் பாண்டிநாட்டுக்குப் பொன்னாட்டை உவமை கூறலா

மெனின், பாண்டிநாட்டில் உள்ள உலகெலாம் புகழும் முத்தும் முத்தமிழும் பொன்னுட்டி லில்லாமையால் பாண்டிநாட்டுக்குப் பொன்னுடு உவமையாகாது என்றவாறு. (53)

## தென்றமிழ்நாட்டிற் சீதையைத் தேடிக் காணுது வருந்திய வானர வீரர் மகேந்திரமலையை அடைதல்

**4753.** என்ற தென்றமிழ் நாட்டினை யெங்கணுஞ்
சென்று நாடித் திரிந்து திருந்தினர்
பொன்று வாரிற் பொருந்தினர் போயினர்
துன்ற லோதியைக் கண்டிலர் துன்பினர்.

என்ற தென் தமிழ்நாட்டினை எங்கணும்
சென்று நாடித் திரிந்து, திருந்தினர்.
பொன்றுவாரில் பொருந்தினர் போயினர்,
துன்றுஅல் ஓதியைக் கண்டிலர், துன்பினர்.

பொ :—செவ்வியரான வானரவீரர், என்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட அழகிய தமிழ் நிலமாகிய பாண்டியநாட்டில் எங்கும் சென்று தேடி அலைந்து, செறிந்த இருள் போலும் கூந்தலையுடைய சீதாபிராட்டியைக் காணுது துன்புற்று, இறப்பவர் போலச் சோர்வுற்றவராய்ச் சென்றவர்.

கு :—திருந்தினர் தென்றமிழ் நாட்டினை எங்கும் சென்று நாடித் திரிந்து, துன்றலோதியைக் கண்டிலர், துன்பினர், பொன்றுவாரில் பொருந்தினர், போயினர், நெடுநெறி நீங்கினர், மகேந்திரக் குன்று வல்லையிற் கூடினர் எனப் பின்வரும் செய்யுளுடன் இணைந்து முடிவு கொள்ளும். பொன்றுதல் - இறத்தல். துன்றுதல் - நெருங்குதல். அல் - இருள். ஓதி - கூந்தல். பொருந்தினர், கண்டிலார் என்பவை எச்சப்பொருளிற் பயின்றன. பாண்டிநாட்டுக்குத் தெற்கே தேடுதற்கு நிலமில்லாமல் கடலே விரிந்து பரந்து கிடந்தமையால் சீதையைக் காணுமல் மிகவும் வருந்தி இறப்பவர்போ லாயினர் என்க. (54)

**4754.** வன்றி சைக்களி றன்ன மகேந்திரக்
குன்றி சைத்தது வல்லையிற் கூடினர்
தென்றி சைக்கடற் சீகர மாருத
நின்றி சைக்கு நெடுநெறி நீங்கினர்.

வன் திசைக் களிறு அன்ன மகேந்திரக்
குன்று இசைத்தது வல்லையிற் கூடினார்
தென் திசைக் கடல் சீகர மாருதம்
நின்று இசைக்கும் நெடுநெறி நீங்கினார்,

பொ :—(போயினார்.) தெற்குத் திக்கிலுள்ள கடலின் நீர்த்திவலைகளையுடைய காற்று நிலைத்து ஒலியுடன் உலவும் நெடிய வழியைக் கடந்து, சுக்கிரீவன் சொல்லிய வலிய திசை யானைபோன்ற மகேந்திர மலையை விரைந்து அடைந்தனர்.

கு :—(போயினார்,) தென்றிசைக் கடற் சீகர மாருதம் நின்று இசைக்கும் நெடுநெறி நீங்கினார், இசைத்தது வன்திசைக் களிறன்ன மகேந்திரக் குன்று வல்லையிற் கூடினார் என இயையும். வல்லை - விரைவு. சீகரம் - துளி. மாருதம் - காற்று. இசைத்தல் - ஒலித்தல். நீங்கினார் - நீங்கியவராய்; முற்றெச்சம். (55)

ஆறுசெல் படலம் முற்றிற்று.

# 15. சம்பாதிப் படலம்

இது, சம்பாதியின் செய்தி கூறுதலின் இப்பெயர்த்தாயிற்று. சம்பாதி என்பது நன்ருகப் பறப்பவன் என்று பொருள்படும் என்பர். இவன் அருணன் மைந்தன்; சடாயுவின் அண்ணன்; கழுகுகளின் அரசன். இவன் வரலாறு இப்படலத்துள் 53 முதல் 57 வரையுள்ள பாடல்களால் பேசப்பட்டது. இப்படலப் பாடல்கள் 63. சந்தம் ஐந்து.

மகேந்திர மலையை அடைந்த வானரர், 'சீதாபிராட்டி இலங்கையிலுள்ளாள்; காணவம்மின்' என்று திரைக்கரங்களால் அழைப்பது போன்றிருந்த தென்கடலை நோக்கினர். அவ்வளவில், பல இடங்களிலும் தேடி மகேந்திர மலையில் வந்து தம்மொடு கூடும்படி அங்கதன் முதலியோரால் அனுப்பப்பட்ட வானரப் படைகளும் அங்கு வந்து சேர்ந்தன. அங்கு வந்தடைந்த அனைவரும், சீதாதேவியைக் காணுமையால் செய்வதறியாராய் நாக்குழற நடுங்கி. 'சுக்கிரீவ மகாராசர் நமக்கு இட்ட கட்டளையைக் குறிக்கொண்டு தேடியும் தேவியைக் கண்டோமில்லை; தேடக் குறித்த கால எல்லையும் கடந்துவிட்டது. நாம் பிராட்டியைக் கண்டு கூருமையால் இராமனும் இறந்துபடுவன்; இனி நாம் செய்தற்குரிய செயல் ஒன்றும் இல்லையாய் ஒழிந்தது' என்று நினைந்து, தம் உயிரை மாய்த்துக் கொள்ள எண்ணி, 'வடக்கிருந்து உயிரை விடுவோமா? அதுவன்றேல், மாற்று மருந்தில்லாத கொடிய நஞ்சினையுண்டு மாய்வோமா? இவ்விரண்டனுள் எது சிறந்ததோ அதை மேற்கொண்டு ஒழிவோம்' என்று தங்கினர்.

அவ்வாறு தங்கிய வானரரை நோக்கி, இளவரசனுன அங்கதன் 'நுணுகிய நூலறிவுடையீர்! நாம் இராமன்பால் சீதாபிராட்டியைத் தேடிக் கொணர்வோம் என்று கூறிய உறுதிமொழியை நிறைவேற்ற வில்லை; அதனுல் பழியினை அடைந்தோம்; நாம் சொல்லியவாறு நிறைவேற்ருததோடு, நம் மாட்டாமையையும் குறித்த கால எல்லைக்குள் சென்று சொல்லவும் இல்லை; இன்னும் சீதாபிராட்டியைக் காணலாம் என்னும் உறுதியும் சிறிதும் இல்லை; இந்நிலையடைந்த நாம் உயிர்வாழ்தல் முறையுடையதாகாது; என் தந்தையான மகாராசரும் முனிவார்; இராமனும் மனம் வருந்துவான்; ஆதலால் இந்நிகழ்ச்சிகளைக் காணுது என் உயிரைவிடக் கருதுகிறேன். அதுபற்றி உங்கள் கருத்தினைத் தெரிவித்திடுக' என்று கூறினுன்.

அது கேட்ட சாம்பன், அங்கதனை நோக்கி, 'வெற்றிவீர! நன்று கூறினை. நாம் வந்த பணி முற்றுப்பெருமையால் இங்கிருந்து அழுவோமோ? அன்றிக் கிட்கிந்தைக்குச் சென்று நம் மாட்டாமை சொல்லித் தொழுவோமோ? என்று, மேலும், 'யாங்கள் சொல்லு தற்குரியதாய் எஞ்சி நிற்பது ஒன்றும் இன்று. யாங்கள் அனைவரும் இறந்துபடுவதே நலம் என்று துணிந்தோம்; ஆதலின், இளவரச னை நின் உயிர்க்கு அழிவின்மை வேண்டினம்' என்று கூறினன். சாம்பன் அதுகூற, அங்கதன், நீவிர் இறந்தொழிய, யான் மட்டும் உயிர்கொண்டு கிட்கிந்தைக்குச் செல்வேனேல் அது நன்றாகாது; உலகமும் வெறுக்கும்; "மேற்கொண்ட பணியை நிறைவேற்றாதவ ராயினர் என்று ஆன்றோர் கூறும் பழியுரைக்கு அஞ்சித் தன் உயிரனைய நண்பர் இறந்துபடவும், இவன் உயிர்கொண்டு வந் தான்" என்று உலகத்தார் கூறுமுன் யானும் இறந்துபடுவேன்; நம் முடிவு என் தந்தைக்கும் தாய்க்கும் யாரேனும் சொல்லக்கூடும்; அதனைக் கேட்டால் அவர்கள் இறப்பர்; அதுகண்ட இராமனும் இலக்குவனும் இறத்தல் திண்ணம். அவர்கள் இறந்தார்கள் என்ற பேச்சு அயோத்தியில் எழுந்தால் பரதனும் மற்றோரும் வாழ்வரோ? பரதனும் சத்துருக்கனும் அவரைப் பெற்று வளர்த்த தாயரும், அயோத்தியிலுள்ளாரும் இறப்பர். அந்தோ! தவத்தால் மேம்பட்ட சனகி என்னும் உலகம் போற்றும் விளக்கினால் கரை காணுதற்கரிய துன்பம் விளைந்தவாறு என்? என்று கலுழ்வானாயினன்.

தன் நெஞ்சில் அவியாது கனன்றுகொண்டிருந்த துயர நெருப்பை மூட்டி எரிய விட்டாற்போலத் துயரம் தாங்கமாட்டாத வனாய் அங்கதன் கூறிய மாற்றங்களை நெஞ்சமும் மறுகக்கேட்ட சாம்பன், அங்கதனை நோக்கி, 'உன்குலத்தில் தோன்றிய அரசுரிமை யுடையாருள் உன்னையும் உன் சிறிய தந்தையினையும் ஒழிய வேறு புதல்வர் இல்லை. அதைக் கருத்திற்கொண்டு, அவ்வாறு உன் உயிர்க்கு உறுதி வேண்டினேன். வேறு தனயர் உளரென்றால் தலைவர் முடிதலும் சொல்லவேண்டுமோ? வெற்றிவீர! நீ கிட்கிந் தைக்குச் செல்; அங்கே சென்று, சீதாபிராட்டியைக் காணாமை சொல்லி, இங்கே நாங்கள் இறந்ததனையும் தெரிவி; சோகத்தை ஒழி' என்று கூறினன்.

சாம்பன் அவ்வாறு கூறலும், அனுமன் சாம்பனை நோக்கி, 'மிக்க வேகமுடையீர்! மூன்றுலகத்துள்ளும் இதுவரை ஒரு சிறிய இடமும் புகுந்து தேடினோமில்லை; அதற்குள், வேகமற்றார் போலவும் விவேக மற்றார் போலவும் வெறுப்படைதல் தகுமோ? பாதலத்திலும் மீத லத்திலும் மேருமலையின் உச்சியிலும் வேறு அண்டங்களிலும் தேடி நாம் சீதாதேவியைக் காண்போமாயின், குறித்த காலம் கடந்த

தென்று சுக்கிரீவ மகாராசர் கூறுர்; ஆதலால் நாம் இன்னும் பிராட்டியைத் தேடுவது நல்லது. இன்னும் தேடிக் காணவில்லை எனில், பிராட்டி துயர் நிலையிற் சென்று தவிப்போரில் இறந்த சடாயுவைப் போல் இறத்தல் புகழ்தரும்; மேலும் தேடாது இன்றே மடிதல் பழியாகும்' என்று கூறினன்.

அனுமன் உரையால், தன் இளவலான சடாயு இறந்தமை அறிந்த சம்பாதி, வருந்திய மனத்தினனுய், 'என் தம்பி இறந்தவாறு என்?' என்று இரங்கி, உள்ளமும் உடலும் நடுங்கி, இந்திரனுடைய வச்சிரப்படை தாக்குதலால் இறகற்ற மலைபோல நடந்து, பேராற்ற லுடைய என் தம்பியையும் கொல்லும் கொடிய படையுடையார் எவர்? என்று ஐயுற்றுத் தன் உடலில் அணிந்த அணிகளின் ஒளியாலும், ஒளியற்ற கண்களினின்று சிந்தும் நீராலும் (தம்பியை விளித்து இரங்கியழும் ஒலியாலும்) இடித்து முழங்கிவந்து நிலத்தில் இறங்கும் மேகம் போன்றும், வெள்ளிய பருத்த உட்லுடன், கொடிகளும் மரங் களும் மலையும் நிலத்தில் துகளாயமுந்த விரைந்து செல்லுதலால் நிலத்தில் தவழும் வெள்ளிமலை போன்றும் வானரரை நெருங்கினன். அவனைக் கண்ட வானரர் அஞ்சி ஓடலும், அனுமன், அவனை (இராவணனென்று கொண்டு), 'வஞ்சக அரக்கனே! பொய் வேடம் புனைந்தவனே! இனி நீ பிழைத்தியோ? என்று சினந்து முன்நின்று, சம்பாதியை நோக்கி, சினமின்மையாலும் சோகம் உடைமையாலும் கண்ணீர் பெருக்குதலாலும் இவன் குற்றமற்றவன் என்று துணிந்து, ஒரு சொற் சொல்லுமுன், சம்பாதி அனுமனை நோக்கி, 'ஆற்றலால் சடாயுவைத் தாக்கிக் கொன்றவர் யார்? கூறுக' என்றனன். எனலும் அனுமன், சம்பாதியை நோக்கி, 'உன்னை நீ உள்ளபடி தெரிவித்தால், பின்னர் நின் வினவுக்கு யான் விடையிறுப்பது பொருந்தும்' என்றனன். அவ்வளவில் சம்பாதி யான் சடாயுவின் முன்னேன் என்று தன் செய்தியெல்லாம் கூறினன்.

அது கேட்ட அனுமன், 'சடாயு இராவணன் வாளால் மடிந்த னன் எனலும், சம்பாதி, தம்பி பிரிவால் வெம்பித் தரையில் விழுந்து பதைத்துப் பலவாறு புலம்பி அழுது, இறந்துபடுநிலை எய்தி, அனு மன் பொருந்திய சொற்களால் தேற்றத்தெளிந்து, 'சடாயு இராவண னேடு பொருதநேன்?' என, அனுமன், 'எங்கள் தலைவனை இராமன் மனையாள் சீதாபிராட்டியை, இராவணன் வஞ்சித்துக் கவர்ந்து செல்லுங்கால், அவனைக் கண்டு 'சீதையை விட்டுச்செல்' என்று கூறிச் சினந்து, அவ் இராவணன் ஏறிய தேரை அழித்து, அவன் தோள்களையும் கிழித்துக் கண்டதுண்டங்களாக்க, அதனல் சினந்த இராவணன், சிவபிரான் அளித்த வாள்கொண்டு தாக்கச் சடாயு பொன்றினன்' என்ருன்.

அனுமனுரை கேட்ட சம்பாதி, அவனை நோக்கி, 'என் தம்பி உயர்ந்தோனாகிய இராமன் பொருட்டு உயிரைக் கொடுத்தானே! அது மிகவும் நன்று! நன்று; என்று மகிழ்ந்து, சீதாபிராட்டி திறத்து இறந்த என் தம்பி புகழுடம்பால் என்றும் நிலைத்தவனாயினன்; ஆதலால் அவன் இறந்தது உண்மையாகாது; அறமூர்த்தியான இராமனொடு தனக்குள்ள உறவை எண்ணிய என் தம்பி, இராமன்பால் உயிர்சென்று பொருந்த உடலழிந்தவனானான். அவனுக்குச் சாவினால் விளைந்த இழப்பு என்? பெறுதற்கரிய பேறுபெற்ற அவனுக்கு இதனினும் இன்பம் தருவது வேறு எது?' என்று ஏக்கமுற்று இரங்கி நீராடிச் சடாயுவுக்கு நீர்க்கடன் கழித்தபின் வானரரை நோக்கி நீவிர், சடாயு இறந்த செய்தி கூறி என்னைத் துன்பத்துள் ஆழ்த்தவில்லை; என்னை வாழ்வித்தீர், நீவிர் எல்லீரும் இராமநாமத்தைச் சொல்லுமின்; 'நீவிர் அதனைச் சொல்ல எனக்கு நல்ல கருணையின் பயன் கிட்டும்' என்று கூறினன். வானரர் இராமநாம முழங்குதலும், சம்பாதியின் சிறை வானப்பரப்படங்க விரிந்து வளர்ந்தது. இறக்கை இழந்தமையால் உருண்டு வந்த சம்பாதி' இராமநாமம் செப்பிய அளவில் இறகு பெற்றெழுந்த பேற்றை நினைந்து வானரர் அச்சமும் வியப்பும் ஒருங்கெய்தியவராய் இராமபிரானை வாழ்த்திச் சம்பாதியை வணங்கி, 'நீ முன்னாள் உற்றதெல்லாம் சொல்லுக' எனலும், சம்பாதி அவரை நோக்கி, 'நண்பரே! சம்பாதி சடாயு என்று சொல்லப்படுகிற நாங்களிருவரும் சூரியனுடைய தேரை ஊரும் சாரதியாகிய அருணன் மைந்தர்; கழுகுகட்கு அரசர்; தேவருலகைக் காணும் ஆசையால் நாங்கள் விசும்பினூடு மேலே செல்லுங்கால் சூரியனுடைய தேரைக் கண்டோம். காணுமுன் செங்கதிர்க் கடவுள் சீறுதலால், முன்னே சென்ற என் தம்பி சடாயுவின் உடலை மிக்க வெப்பம் தாக்கியது. அவன் என்னை நோக்கி, 'எந்தாய்! காத்தி' என்றனன். யான் என் இரு சிறகுகளையும் விரித்துச் சூரிய வெப்பம் அவனைத் தாக்காதவாறு மறைத்த அளவில், அவன் அவ்வெப்பத்தால் தகிக்கப்படாமல் மறைந்து சென்று உய்ந்தான். யான் சிறகு தீந்து வீழ்ந்தேன். மண்ணில் வீழ்ந்த என்னை வான்மிசை விளங்கும் வள்ளலாகிய கதிரவன் கருணையொடு நோக்கி, 'இராமன் தேவியைத் தேடிவந்த வானரர் இராமநாமத்தைச் சொல்லுதலால் நின் இறகு மீண்டும் முளைக்கப்பெற்றுப் பறந்து செல்வாய்' என்று மொழிந்தனன். என்னிலை கண்டு துன்பத்துள் முழுகிய சடாயு என் கட்டளையை மறுக்க அஞ்சியவனாய்க் கழுகுகளுக்கு அரசனாய் நின்று அவற்றைக் காப்பானாயினன். இது, யான் உற்றது. நீவிர் இங்கு வந்தவாற்றை யான் அறியக் கூறுமின்' என்றனன்

அவன் அது கூறலும், வானரர் இராமனைத் துதித்து வணங்கிச் 'சீதாதேவியைக் கவர்ந்த இராவணன் தென்றிசைக்கண் கொண்டு சென்ருன் என்பது நினைந்து, அத்தேவியைத் தேடிக்கொண்டு இங்கே வந்து சேர்ந்தோம்' என்று கூறுதலும், சம்பாதி, 'இராவணன் தேவியைக் கவர்ந்துகொண்டு செல்லும்போது கண்டேன்; அவன் இலங்கையுட் புகுந்து, இராமன் பிரிவால் கொதிக்கின்ற மனத்தினளான தேவியை அங்கே கொடிய சிறையிடை வைத்தான்; தேவி இன்னும் அச்சிறையின்கண் உள்ளாள்; அங்கே சென்று அவளைக் காண்மின்' என்று, மேலும், அவ்விலங்கையிருக்கும் இடமும் அதன் காவல் மிகுதியும் இராவணனுடைய ஆற்றலும் சினமும் கூறி, 'தேவதேவர் மூவராலும் அணுகுதற்கரிய இலங்கையுள் நீங்கள் செல்வது எவ்வாறு கூடும்? நீவிரனைவீரும் அவ்விலங்கையுள் ஒருங்கு சென்று சேர்தல் என்பது எளியதன்று. ஆற்றலுடைய ஒருவர் சென்று அங்கே மறைந்தொழுகித் தேவியைக் கண்டு, இராமன் செய்தியெல்லாம் தேவிக்கு உரைத்து, அவளைத் தேற்றி மீளுக. அன்றெனில் யான் சொல்வதை உறுதியென்று தெளிந்து இராமன்பாற் சொல்லுக; காப்பார் இல்லாமையின் கழுகினம் வருந்தும்; அவ்வருத்தம் தீர்க்க யான் விரைந்து செல்லுதல் இன்றியமையாததாயிற்று. யான் கூறிய இரண்டு வகையுள் நல்லது எதுவோ அதனைச் செய்திர்? என்று கூறி விண்மிசை விரைந்து பறந்து செல்வானுயினன்' என்பது இப்படலத்து நுவல்பொருளாகும்.

வான்மீகத்துள், சம்பாதியின் வரலாறு 53 முதல் 63 முடியவுள்ள 11 ஸர்க்கங்களில் 266 சுலோகங்களால் பேசப்படுகிறது. அங்கு, இராவணன் சீதாபிராட்டியைக் கவர்ந்து செல்லுங்கால், சுபார்சுவன் என்ற பெயருடைய தன் மகன் கண்டு, தனக்கு உரைத்தான் என்றும், சிறகற்று வீழ்ந்த நிலையில் உயிர் துறக்க முற்பட்டதன்னை நிசாகரர் என்னும் முனிவர் தேற்றி ஆறுதல் கூறி, உயிர் தரித்திருக்குமாறு செய்தார் என்றும் சம்பாதி கூறியதாக, 59 முதல் 63 முடியவுள்ள ஐந்து ஸர்க்கங்களில் காணப்படுகிறது. இவ்வைந்து ஸர்க்கங்களும் இடைச்செருகல் என்று வான்மீகத்துக்கு உரைகண்ட கோவிந்தராசர் கருதுகிருர்.

இச் சம்பாதிப் படலத்துள்ளும், இராவணன் சீதாதேவியைக் கவர்ந்து செல்லுங்கால் சுபார்சுவன் கண்டு சம்பாதிக்கு உரைத்தமையும், லோகசாரங்க முனிவர் தேற்றி ஆறுதல் கூறியதால் சம்பாதி உயிர் தாங்கியிருந்தமையும் பேசும் பாடல்கள் சில சுவடிகளிலும் அச்சுப் புத்தகத்திலும் காணப்படுகின்றன. அவை மிகப் பழைய நல்ல சுவடிகளில் இல்லை; கம்பர் பாடலின் அமைதியுடைய

வாயும் இல்லை; அவை இன்றியே முன்பின் பாடல்கள் இயைபுடைய வாய்த் தொடர்ந்து செல்லுகின்றன; வான்மீகத்துள் நிசாகரர் என்று வழங்கும் முனிவர் பெயரும் இங்கு லோகசாரங்கர் என்று மாற்றம் பெற்றது; ஆதலின் அவை வான்மீகத்துள்ள இடைச் செருகற் பகுதியைப் பின்னோர் மொழிபெயர்த்தமைத்த மிகைப் பாடல்களாகக் காட்டப்பட்டன.

சம்பாதியும் சடாயுவும் தம்முள் வேகமாகப் பறப்பதில் சிறந்தவர் யார்? என்று அறிய முற்பட்டு வான்மிசைச் செல்லுகையில் சூரிய வெப்பத்தால் தகிக்கப்பட்டனர் என்கிறது வான்மீகம்.

அவ்விருவரும் உம்பர் நாடுகாண விழைந்து விண்மிசைப் பறந்து செல்லுகையில், சூரிய வெப்பத்தால் தகிக்கப்பட்டனர் என்கிறது கம்பர் காவியம்.

வான்மீகத்துள் அங்கதன், சுக்கிரீவனைப் பல படியாக நிந்திப்பது காணப்படுகிறது. கம்பர் காவியத்துள் அந்நிந்தனை இல்லை.

இராமநாமம் ஒன்றே திருமாலின் ஆயிரநாமங்களையும் பாராயணம் செய்தலால் விளையும் பயனைத் தரவல்லது என்பர் பெரியோர். இராமபிரானுடைய தோளாற்றலும் தாளாற்றலும் அடைந்தார்ப் புரத்தலும் அருளும் அன்பும் ஆண்மையும் வண்மையும் முதலிய நலங்களையெல்லாம் விரிக்கும் இராமாயண நூலுள், சம்பாதியின் செய்திகூறும் இப்பகுதி இராமநாமத்தின் பெருமை பேசும் தனிச் சிறப்புடையதாய் விளங்குகிறது.

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே இராம என்றிரண்டெழுத்தினால்

என்னும் ஆன்றோர் வாக்கும் இங்கு நோக்கத்தகும்.

# 15. சம்பாதிப் படலம்

## வானர வீரர் தென்கடலைக் காணுதல்

**4755.** மழைத்தவிண் ணகமென முழங்கி வானுற
விழைத்தவெண் டிரைக்கர மெடுத்தி லங்கையா
ளுழைத்தடங் கண்ணியென் றுரைத்திட் டூழின்வந்
தழைப்பதே கடுக்குமவ் வாழி நோக்கினர்.

மழைத்த விண்ணகம் என முழங்கி, வான் உற
இழைத்த வெண் திரைக் கரம் எடுத்து, 'இலங்கையாள்
உழைத் தடம் கண்ணி' என்று, உரைத்திட்டு ஊழின் வந்து
அழைப்பதே கடுக்கும் அவ்வாழி நோக்கினர்.

பொ :—(மகேந்திர மலையிற் சென்று கூடிய வானரவீரர்,) பெய்ய எழுந்த மேகத்தோடு கூடிய ஆகாயம்போல முழங்கி, வானளாவும் படி பரப்பிய வெள்ளிய அலைகளாகிய கைகளை மேலே தூக்கி, 'மான் கண்போலும் பெரிய கண்களையுடைய சீதை, இலங்கையில் உள்ளாள்,' என்று கூறி முறையாக வந்து தம்மை அழைப்பதுபோல விளங்கும் அந்தத் தென்கடலைப் பார்த்தார்கள்.

கு :—கூடினராகிய வானரவீரர் என்னும் எழுவாய் முன்பட லத்தின் இறுதிச் செய்யுளினின்று கொள்ளலாயிற்று. சீதையைத் தேடிக் காணாது வருந்திய வானரவீரர், முழக்கத்தோடு மேலெழுந்து மறிந்து தவழும் அலைகளால், 'சீதை இலங்கையிலுள்ளாள்; வருக' என்று கைகளை நீட்டி அழைப்பது போன்றிருந்த தென்கடலை நோக்கினர் என்றவாறு. மழை-பெய்தற்குக் கால் கொண்டெழுந்த மேகம். மழைத்த-மழையினையுடைய. உழை-மான். ஊழ்-முறை. கடுத்தல்-ஒத்தல். முன் படலத்தின் இறுதிச் செய்யுளில் தென்கடல் கூறப் பட்டமையால் இங்கே அவ்வாழி என்று சுட்டுவாராயினர். (1)

## ஏமகூடத்திற் பிரிந்த படைகளும் வந்து அங்கதன் முதலிய வானர வீரரொடு சேர்தல்

**4756.** விரிந்துநீ ரெண்டிசை மேவி நாடினீர்
பொருந்துதிர் மயேந்திரத் தென்று போக்கிய

வருந்துணைக் கவிகளா மளவில் சேனையும்
பெருந்திரைக் கடலெனப் பெயர்த்துங் கூடிற்றே.

விரிந்து, 'நீர் எண் திசை மேவி, நாடினீர்,
பொருந்துதிர் மயேந்திரத்து' என்று போக்கிய
அருந்துணைக் கவிகளாம் அளவு இல் சேனையும்
பெருந்திரைக் கடல் எனப் பெயர்த்தும் கூடிற்றே.

பொ:—'நீவிர், எட்டுத் திக்கினும் பரவிச்சென்று தேடினீராய், மகேந்திரமலையில் வந்து எம்மொடு சேருதிர்' என்று (அங்கதன் முதலியவர்களால்) முன்பு அனுப்பப்பட்ட நல்ல துணைவர்கள் பொருந்திய அளவற்ற குரக்குப் படையும், பெரிய அலைகளையுடைய கடல்போல மீண்டும் வந்து கூடிற்று.

கு:—நீர் எண்டிசை விரிந்து மேவி நாடினீர் என இயைக்க. அங்கதன் முதலியோர், தம்முடன் வந்த வானர சேனையைத் தனியே பிரிந்து சென்று தேடி, மகேந்திர மலையில் தம்மொடு வந்து கூடுமாறு அனுப்பினமை, 'வெள்ளமோரிரண்டென விரிந்த சேனையைத் தெள்ளு நீருலகெலாந் திரிந்து தேடிநீர், எள்ளருமகேந்திரத் தெம்மிற் கூடுமென்று......நீங்கினர்' (பிலம்புக்கு நீங்குபடலம் 20) என முன் கூறப்பட்டது. (2)

## வானரர் சீதையைக் காணாமையால் வருந்திக் கூறுதல்

**4757.** யாவரு மவ்வயி னெளிதி னெய்தினர்
பூவரு புரிகுழற் பொருவில் கற்புடைத்
தேவியைக் காண்கிலார் செய்வ தோர்கிலார்
நாவுறக் குழறிட நவில்கின் றாரரோ.

யாவரும் அவ்வயின் எளிதின் எய்தினர்,
பூ வரு புரி குழல் பொரு இல் கற்பு உடைத்
தேவியைக் காண்கிலார், செய்வது ஓர்கிலார்,
நா உறக் குழறிட நவில்கின்றார் அரோ.

பொ:—(சீதையைத் தேடத் தெற்குத் திசையிற் சென்ற வானரர்) எல்லாரும், அம்மகேந்திரமலையில் எளிதாகச் சென்று சேர்ந்து, பூக்கள் தங்கிய பின்னப்பட்ட கூந்தலினையும் ஒப்பற்ற கற்பினையும் உடைய சீதாதேவியைக் காணாமையால் தாம் செய்யத் தக்கது இது என்று அறியாதவராய், நா மிகவும் குழறும்படி (நடுங்கிப்) பேசுவாராயினர்.

கு :—பூவருதேவி என்று கொண்டு பூமியிலே தோன்றிய தேவி யாகிய சீதை என்று பொருளுரைத்தலும் அமையும். சீதை பூமியில் தோன்றியமை, பாலகாண்டத்துக் கார்முகப் படலத்து 16, 17-ஆம் செய்யுட்களிற் கூறப்பட்டது. உற-மிகவும். (3)

**4758.** அற்றது சொன்னநா ளவதி காட்சியு
முற்றில மிராகவ னுயிரும் பொன்றுமால்
கொற்றவ னாணையுங் குறித்து நின்றனம்
இற்றது நஞ்செய லினியென் றெண்ணினர்.

'அற்றது சொன்ன நாள் அவதி; காட்சியும்
உற்றிலம்; இராகவன் உயிரும் பொன்றும்; ஆல்
கொற்றவன் ஆணையும் குறித்து நின்றனம்;
இற்றது நம் செயல் இனி' என்று எண்ணினர்.

பொ :—(சீதையைத் தேடிக்கண்டு சென்றுரைப்பதற்குச்) சுக்கிரீவ மகாராசர் சொல்லிய காலவெல்லை கழிந்து விட்டது; (அக்கால எல்லையுள் தேவியைக்) காணுதலும் பெற்றிலோம்; (தேவியைக் காணாமையால்) இராமபிரானுடைய உயிரும் அழிந்துபடும். மகாராசர் இட்ட கட்டளையினையும் கருத்தில் கொண்டு, தேடினேம். இனி நாம் செய்வதற்குரிய செயல் ஒன்றுமில்லையாய் ஒழிந்தது என்று நினைவாராயினர்.

கு :—அவதி-எல்லை. (4)

27 என்னும் குறியீடுள்ள சுவடியில் இப்பாடலின் பின்னும், 2, 15, 26, 28, 41, 45, 52 என்னும் குறியீடுள்ளவற்றில் இப்பாடலின் முன்னும் ஒருமிகைச் செய்யுள் காணப்படுகிறது. அது வருமாறு :—

**4758. (a)** அன்னதோ ரளவையி னணங்க நாடனைத்
தென்மலை நாட்டினிற் றேடிச் சென்றுடன்
இன்னியற் றலைவரோ டிரண்டு வெள்ளமென்
மன்னுவா னரமயேந் திரத்தில் வந்ததால்.

**4759.** அருந்தவம் புரிதுமோ வன்ன தன்றெனின்
மருந்தரு நெடுங்கடு வுண்டு மாய்துமோ
திருந்திய தியாதது செய்து தீர்துமென்
றிருந்தனர் தம்முயிர்க் கிறுதி யெண்ணுவார்.

அருந்தவம் புரிதுமோ? அன்னது அன்று எனின்,
மருந்து அரு நெடுங்கடு உண்டு மாய்துமோ?
திருந்தியது யாது? அது செய்து தீர்தும் என்று
இருந்தனர் தம் உயிர்க்கு இறுதி எண்ணுவார்.

பொ:—(சீதையைத் தேடிக் காணவந்த தம் பணி நிறைவேருமையால்) தங்கள் உயிர்க்கு அழிவை நினைபவராகிய வானரர், செய்தற்கரிய தவத்தை (வடக்கிருத்தலை)ச் செய்து அதனுல் உயிரைப் போக்கிக் கொள்வோமோ? அது அன்றெனின், மாற்று மருந்தில்லாத பெரிய நஞ்சையுண்டு இறந்துபடுவோமோ? (இவ்விரண்டனுள்) குற்றமற்றது எதுவோ அதனைச் செய்து முடிவோம் என்று கூறி, அம்மகேந்திர மலையில் தங்கினர்.

கு:—ஏவிய பணியை உரிய காலத்தில் திறம்பட நிறைவேற்றுதவர் என்று சுக்கிரீவ மகாராசரால் ஒறுக்கப்படுதலினும், தாமே தம் உயிரைப் போக்கிக் கொள்ளக் கருதிய வானரர், வடக்கிருத்தலும் நஞ்சுண்ணலுமாகிய நெறிகளுள் குற்றமற்றது எதுவோ அந்த நெறியால் உயிரைவிடத் துணிந்திருந்தனர் என்றவாறு. தம் உயிர்க்கு இறுதி எண்ணுவார், 'அருந்தவம்புரிதுமோ அன்னது அன்றெனின், மருந்தரு நெடுங்கடு உண்டு மாய்துமோ' என்றமையால், அருந்தவம் புரிதலும் நஞ்சுண்ணலும் உயிர்விடுதற்குரிய நெறிகளாக அவர் கருதின்மை பெறப்படும். ஒரு நிகரான செயல்களை எண்ணி அவற்றுள் நன்றும் தீதும் தூக்குதலன்றி, வேறு வேறு திறத்தவாய செயல்களில் எதுநன்று, எது தீது என்னும் ஆராய்ச்சி நிகழாதாதலின், அருந்தவம் புரிதலும் நஞ்சுண்ணலும் ஆகிய இரண்டும் உயிர் நீங்கற்குக் காரணமாய் ஒத்த திறத்தவாதல் காணலாம். ஆதலால் அருந்தவம் புரிதுமோ? என்பதற்குச் செய்தற்கரிய தவத்தை (வடக்கிருத்தலை)ச் செய்து அதனுல் உயிரைப் போக்கிக் கொள்வோமோ என்று உரை வரையலாயிற்று. அருந்தவம் என்றது உண்ணு நோன்பு மேற்கொண்டு, இறைவனையே நினைந்து, வேறு செயலற்றுத் தருப்பை மீது தங்குதலால் உயிர் தானே கழிய நிற்கும் நெறியாகிய வடக்கிருத்தலை. கடு-நஞ்சு. திருத்தியது-குற்றமற்றது. தீர்தல்-முடிதல். (5)

### அங்கதன் உடன்வந்தவரிடம் கூறுதல்

**4760.** கரைபொரு கடலயற் கனக மால்வரை
நிரைதுவன் றியவென நெடிதி ருந்தவர்க்

குரைசெயும் பொருளுள தெனவு ணர்த்தின
னரசிளங் கோளரி யயருஞ் சிந்தையான்.

கரை பொரு கடல் அயல் கனகம் மால் வரை
நிரை துவன்றிய என நெடிது இருந்தவர்க்கு
'உரை செயும் பொருள் உளது' என உணர்த்தினன்;
அரசிளங் கோளரி அயரும் சிந்தையான்.

பொ :—கரையினை மோதுகின்ற தென்கடலின் பக்கத்தே மகா மேருமலையின் வரிசை நெருங்கினற்போலப் பரவியிருந்த வானர வீரர்க்குச் (சீதையைக் காணாமையால்) சோர்வுற்ற மனத்தினனும் இளவரசனும் வலிய சிங்கம் போன்றவனுமான அங்கதன், (யான்) சொல்லும் செய்தி உண்டு' என்று தெரிவிப்பானாயினன்.

கு :—பருத்தவுருவுடைய வானரர்க்குத் தனித்தனி மேருமலை உவமை. நிரை-வரிசை. துவன்றுதல்-நெருங்குதல். (6)

**4761.** நாடினங் கொணருது நளினத் தாளைவான்
மூடிய வுலகினை முற்று முட்டியென்
றாடவர் திலகனுக் கன்பி னரெனப்
பாடவம் விளம்பினம் பழியின் மூழ்கினேம்.

'நாடினம் கொணருதும் நளினத்தாளை வான்
மூடிய உலகினை முற்றும் முட்டி' என்று
ஆடவர் திலகனுக்கு அன்பினர் எனப்
பாடவம் விளம்பினம் பழியின் மூழ்கினேம்.

பொ :—"'தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளின் அமிச மாகிய சீதாதேவியை வானம் கவிந்த உலகு முழுதும் பரவிச் சென்று தேடிக் கொணர்வோம்' என்று, ஆடவர் திலகனான இராமன்பால் அன்புடையார்போல் வல்லமை பேசிப்) பேசியபடி செய்து முடிக் காமல்) பழியாகிய கடலில் அழுந்தினோம்."

கு :—"'நளினத்தாளை வான்மூடிய வுலகு முற்றும் முட்டி நாடினம் கொணருதும்' என்று ஆடவர் திலகனுக்கு அன்பினர் எனப் பாடவம் விளம்பினம் பழியின் மூழ்கினேம்'' என இயைக்க. நாடினம் விளம்பினம் என்பவை எச்சப் பொருளிற் பயின்றன. நளினத்தாள் என்றது சீதையை. உலகினை என்பதனுள் இன், ஐ என்பவை சாரியைகள். முட்டுதல்-பரவுதல். ஆடவர் திலகன்

என்றது இராமனை. திலகனுக்கு-திலகன்பால்; உருபுமயக்கம். பாடவம்-வல்லமை; நளினத்தானை நாடிக் கொணர்தும் என்றது, சீதையைத் தேடிக் கண்டு அவள் இருக்குமிடம் முதலியவற்றைத் தெரிந்து கொண்டு வருவோம் என்றவாறு; சீதையைத் தேடிச் சென்று அவள் இருக்குமிடம் முதலியவற்றை அறிந்து வருதலே வானரர்க்கு இடப்பட்ட கட்டளையாதலால். (7)

**4762.** செய்துமென் றமைந்தது செய்து தீர்ந்தில
நொய்துசென் றுற்றது நுவலகிற்றில
மெய்தும்வந் தென்பதோ ரிறையுங் கண்டில
முய்துமென் ருலிதோ ருரிமைத் தாகுமோ.

"'செய்தும்' என்று அமைந்தது செய்து தீர்ந்திலம்,
நொய்து சென்று உற்றது நுவலகிற்றிலம்,
'எய்தும் வந்து' என்பது ஓர் இறையும் கண்டிலம்,
'உய்தும்' என்ருல் இது ஓர் உரிமைத்து ஆகுமோ?"

பொ:—'செய்வோம்' என்று இசைந்த செயலைச் செய்து முடித்தோமில்லை; குறித்த காலத்துள் சீதையைத் தேடிக் காணமுடியாதபடி நேர்ந்த இடையீட்டை விரைந்து சென்று தெரிவிக்கவும் ஆற்றலற்றவராயினேம்; (நாம் வந்த காரியம்) இனி வந்து கை கூடும் என்பது ஒரு சிறிதும் அறிந்திலோம்; இத்தன்மையுள்ள நாம் உயிரோடிருப்போமென்ருல், இச்செயல், நட்புரிமையோடு கூடிய தாகுமோ? ஆகாது.

கு:—அமைதல் - இசைதல். செய்தும் என்று அமைந்தது என்றது, 'நாடினம் கொணருதும் நளினத்தானை வான்மூடிய வுலகினை முற்றும் முட்டி' என்றதனை. நொய்து-விரைவு. எய்தும் வந்து என்பதற்குரிய நாம் வந்த காரியம் என்பது வருவித்துக் கொள்ள நின்றது; உரிமைத்து - உரிமையொடு கூடியது. ஓகாரம் எதிர்மறை குறித்தது. (8)

**4763.** எந்தையு முனியுமெம் மிறையி ராமனுஞ்
சிந்தனை வருந்துமச் செய்கை காண்குறே
னுந்துவெ னுயிரினை நுணங்கு கேள்வியீர்
புந்தியி னுற்றது புகறி ராமென்ருன்.

'எந்தையும் முனியும்; எம் இறை இராமனும்
சிந்தனை வருந்தும்; அச்செய்கை காண்குறேன்
நுந்துவென் உயிரினை; நுணங்கு கேள்வியீர்!
புந்தியின் உற்றது புகல்திர் ஆம்' என்றான்.

பொ:—'நுணுகிய நூலறிவினையுடையீர்! என் தந்தையாகிய சுக்கிரீவ மகாராசரும் (நாம் குறித்த காலத்துள், சீதையைத் தேடிக் கண்டு உரையாமையால்) சினமடைவார்; எங்கள் தலைவனான இராமனும் மனம் வருந்துவான்; அந்தச் செயல்களைக் காணாமல் உயிர்விடும் நினைவுடையேன்; அதுபற்றி உங்கள் மனத்தில் உள்ளதனை நன்கு புகல்வீராக' என்று கூறினான்.

கு:—சிந்தனை - மனம். நுந்துதல் - தள்ளுதல்; உயிர்விடல். கேள்வி-நூல் கேள்வி; என்றது நூலறிவினை. நுணங்கு கேள்வி என்பதற்கு நுண்ணிய கேள்வியறிவு என்று பொருள் கூறலும் ஆம். புந்தி-மனம். ஆம் சாரியை. (9)

### சாம்பவான் அங்கதனிடம் கூறுதல்

**4764.** விழுமிய துரைத்தனை
விசயம் வீற்றிருந்
தெழுவொடு மலையொடு
மிகலுந் தோளினா
யழுதுமோ விருந்துநம்
மன்பு பாழ்படத்
தொழுதுமோ சென்றெனச்
சாம்பன் சொல்லினான்.

'விழுமியது உரைத்தனை; விசயம் வீற்றிருந்து,
எழுவொடும் மலையொடும் இகலும் தோளினாய்!
அழுதுமோ? இருந்து நம் அன்பு பாழ்படத்
தொழுதுமோ சென்று?' எனச் சாம்பன் சொல்லினான்.

பொ:—வெற்றித்திரு பெருமையோடு நிலைத்திருக்கப் பெற்றுத் தூணொடும் மலையொடும் மாறுபடுகின்ற தோள்களையுடையாய்! சிறந்ததனைச் சொல்லினை! நம் அன்பு பாழ்படலால் இங்கே தங்கி அழுவோமோ? அல்லது (அங்கே) சென்று தொழுவோமோ?' என்று சாம்பவான் கூறினான்.

கு :—‘விசயம் வீற்றிருந்து எழுவொடும் மலையொடும் இகலும் தோளினுய்! விழுமியது உரைத்தனை! நம் அன்பு பாழ்பட இருந்து அழுதுமோ? (அல்லது) சென்று தொழுதுமோ?’ எனச் சாம்பன் சொல்லினுன்; என இயைக்க. தோளினுய்! என்றது அங்கதனை நோக்கிய சாம்பவான் விளிக் கூற்று. விழுமியது-சிறந்தது. விசயம்-வெற்றி. எழு - தூண். அங்கதன், பாரந்தாங்கும் ஆற்றலால் தூணெடும், திரண்டுருண்டு திண்ணென்ற தன்மையால் மலையொடும் மாறுபட்ட தோள்களையுடையான் என்றபடி. இசைந்த பணி நிறைவேற்ருமையால் அன்பு பாழ்பட்டது என்ருன். அழுதுமோ? தொழுதுமோ? என்பவற்றுள் ஓகாரம் எதிர்மறையாய் நின்றது. குறித்த காலத்துள், சீதையைத் தேடிக் காணுத நாம், அதுபற்றி இங்கிருந்து அழுதலும் அங்கே (கிட்கிந்தைக்குச்) சென்று தொழுதலும் ஆகாது என்றவாறு. (10)

**4765.** மீண்டினி யொன்றுநாம் விளம்ப மிக்கதென்
மாண்டுறு வதுநல மெனம தித்தன
மாண்டகை யரசிளங் குமர வன்னது
வேண்டலி னின்னுயிர்க் குறுதி வேண்டுமால்.

‘மீண்டு இனி ஒன்று நாம் விளம்ப மிக்கது என்?
மாண்டுறுவது நலம்’ என மதித்தனம்;
ஆண் தகை அரசிளங்குமர! அன்னது
வேண்டலின் நின் உயிர்க்கு உறுதி வேண்டும் ஆல்.

பொ :—வீரத்தன்மையோடு கூடிய இளவரசனே! இனி மறுபடியும் நாம் சொல்லுதற்குச் சிறந்ததாகவுள்ள சொல் ஒன்று யாது? (ஒன்றும் இல்லை); இறந்துபடுவதே நன்மை என்று துணிந்தோம்; (நாங்கள்) அதை விரும்புதலால் உன் உயிர்க்கு அழிவின்மை வேண்டும்.

கு :—இனி, மீண்டும் நாம் விளம்ப மிக்கது ஒன்று என்? என்க. மீண்டும் என உம்மை விரிக்க. என் என்பது இன்மைப் பொருள் உணர்த்தியது; ஆல் அசை. (11)

சாம்பவான் மாற்றங்கேட்ட அங்கதன் மீட்டும் கூறுதல்

**4766.** என்றவ னுரைத்தலு மிருந்த வாலிசேய்
குன்றுறழ்ந் தெனவளர் குவவுத் தோளினீர்

பொன்றிநீர் மடியயான் போவ னேலது
நன்றதோ வுலகமு நயக்கற் பாலதோ?

என்று அவன் உரைத்தலும், இருந்த வாலி சேய்,
குன்று உறழ்ந்தென வளர் குவவுத் தோளினீர்!
பொன்றி நீர் மடிய, யான் போவனேல், அது
நன்றதோ ? உலகமும் நயக்கற் பாலதோ ?

பொ :—என்று சாம்பவான் சொல்லுதலும், அது கேட்டிருந்த வாலியின் மகனுன அங்கதன், மலைகளை ஒத்தனவென்று சொல்லும்படி வளர்ந்த தோள்களையுடையீர்! நீங்கள் இறந்தொழிய, யான் உயிர்கொண்டு (கிட்கிந்தைக்குச்) செல்வேனுயின், அது நன்ருகுமோ? உலகம் விரும்பும் தன்மையினையுடையதாகுமோ? (ஆகாது)

கு :—அவன் என்றது சாம்பவானை. உறழ்தல்-ஒத்தல்; மாறுபடுதலும் ஆம். குவவு - திரட்சி. நீர் பொன்றிமடிய என மாறுக. பொன்றுதல் - இறத்தல். நன்றதோ? என்பதனுள் அது பகுதிப் பொருள் விகுதி. உலகம் என்றது உயர்ந்தோரை. (12)

**4767.** சான்றவர் பழியுரைக் கஞ்சித் தன்னுயிர்
போன்றவர் மடிதரப் போந்து ளானென
வான்றபே ருலகுளோ ரறைதன் முன்னம்யான்
வான்ரெடர் குவெனென மறித்துங் கூறுவான்.

' " சான்றவர் பழியுரைக்கு அஞ்சித் தன் உயிர்
போன்றவர் மடிதரப் போந்துளான் " என,
ஆன்ற பேர் உலகு உளோர் அறைதல் முன்னம் யான்
வான் தொடர்குவென் ' என மறித்தும் கூறுவான்.

பொ :—" (இசைந்த கருமத்தினை நிறைவேற்ருமையால், தம்மை 'நட்டார் குறை முடியாதவர் என்று) சான்ரோர் கூறும் பழியுரைக்கு அஞ்சித் தன் உயிர் போன்றவரான (உடன் வந்த) வானரர் இறந்துபடத் தான் மட்டும் உயிர்கொண்டு வந்துள்ளான்' என்று நிறைந்த பெரிய உலகிலுள்ளோர் கூறுமுன் யான் இறந்து வானுலகடைவேன்" என்று மீட்டும் கூறுவானுயினன்.

கு :—மறித்தும்-மீட்டும். (13)

**4768.** ★ எல்லைநம் மிறுதி யாய்க்கு
மெந்தைக்கும் யாவ ரேனுஞ்
சொல்லவுங் கூடுங் கேட்டாற்
றுஞ்சவு மடுக்குங் கண்ட
வில்லியு மிளைய கோவும்
வீவது திண்ண மச்சொன்
மல்லனீ ரயோத்தி புக்கால்
வாழ்வரோ பரதன் மற்றோர்.

எல்லை நம் இறுதி யாய்க்கும் எந்தைக்கும் யாவரேனும் சொல்லவும் கூடும்; கேட்டால் துஞ்சவும் அடுக்கும்; கண்ட வில்லியும் இளைய கோவும் வீவது திண்ணம்; அச்சொல் மல்லல் நீர் அயோத்தி புக்கால் வாழ்வரோ? பரதன் மற்றோர்.

பொ :—நம் இறப்பாகிய முடிவை என் தாய்க்கும் தந்தைக்கும் யாரேனும் சொல்லவும் கூடும்; அதனைக் கேட்டால் அவர் இறத் தலும் நேரும்; அவர் இறந்தமை கண்ட இராமனும் இலக்குவனும் இறத்தல் உறுதி; அவர்கள் இறந்தார்கள் என்ற பேச்சு நீர்வள முடைய அயோத்தியில் புக்கால் பரதனும் மற்றவர்களும் வாழ்வரோ? (வாழார்.)

கு :—எல்லை-முடிவு. நம் இறுதி யெல்லை என இயைக்க. இறுதி, துஞ்சல், ஈதல் என்பவை இறத்தல் என்னும் பொருளுடையன. யாய்-தாய். வில்லி என்றது இராமனை. இளையகோ-இலக்குவன். (14)

**4769.** பரதனும் பின்னு ளோனும்
பயந்தெடுத் தவரு மூருஞ்
சரதமே முடிவர் கெட்டேன்
சனகியென் றுலகஞ் சாற்றும்
விரதமா தவத்தின் மிக்க
விளக்கினை லுலகத் தியார்க்குங்
கரைதெரி விலாத துன்பம்
விளைந்தவா வெனக்க ழுழ்ந்தான்.

பரதனும் பின் உளோனும் பயந்து எடுத்தவரும் ஊரும் சரதமே முடிவர், கெட்டேன் ! சனகி என்று உலகம் சாற்றும்

விரத மாதவத்தின் மிக்க விளக்கினுல் உலகத்து யார்க்கும்
கரை தெரிவு இலாத துன்பம் விளைந்த ; ஆ எனக் கலுழ்ந்தான்.

பொ :—பரதனும், அவன்பின் உள்ளவனுன சத்துருக்கனும், அவர்களைப் பெற்று வளர்த்த தாயாரும், அயோத்தி நகர மக்களும் இறந்துபடுவர்; இது சத்தியம்; கெட்டேன்; சானகியென்று உலகு புகழும், நோன்பொடு சிறந்த தவத்தால் மேம்பட்ட விளக்கினுல், உலகத்தில் யாவர்க்கும் எல்லை காண முடியாத துன்பங்கள் விளைந்தன; ஐயோ! என்று அழுதான்.

கு :—பரதன் என்றது, முன் செய்யுளினின்றுகொண்டு கூறியது. பின்னுளோனும்......ஊரும் என்றது, முன் செய்யுளில் மற்ருேர் என்றதனை விரித்துக் கூறியவாறு. சரதம் - மெய். முடிதல் - இறத்தல். கெட்டேன், ஆ என்பவை இரக்கக் குறிப்புக்கள். சனகியென்று உலகம் சாற்றும் விளக்கு, விரதமாதவத்தின் மிக்க விளக்கு என்க. இது உருவகம். தெரிவு - தெரிதல். கலுழ்தல் - அழுதல். (15)

சாம்பவான் அங்கதனை நோக்கி மீட்டும் கூறல்

**4770.** பொருப்புறழ் வயிரத் திண்டோட்
பொருசினத் தாளி போல்வான்
றரிப்பிலா துரைத்த மாற்றந்
தடுப்பருந் தகைத்த தாய
நெருப்பையே விளைத்த போல
நெஞ்சமு மறுகக் கேட்டு
விருப்பினு லவனை நோக்கி
விளம்பின னெண்கின் வேந்தன்.

பொருப்பு உறழ் வயிரத் திண் தோள்
பொருசினத்து ஆளி போல்வான்,
தரிப்பு இலாது உரைத்த மாற்றம்,
தடுப்பருந் தகைத்தது ஆய
நெருப்பையே விளைத்த போல,
நெஞ்சமு மறுகக் கேட்டு,
விருப்பினுல் அவனை நோக்கி,
விளம்பினன் எண்கின் வேந்தன்.

பொ :—மலையொடு மாறுபட்ட உறுதியான வலிய தோள்களை யுடைய, மோதுகின்ற சினத்தொடுகூடிய சிங்கம் போல்பவனை அங்கதன், பொறுக்கமாட்டாமல், தடுத்தற்கரிய தன்மையினையுடைய நெருப்பையே மூட்டினாற்போலச் சொல்லிய சொற்களை மனமும் வருந்தக்கேட்டு, அவனை நோக்கிக் கரடிகளுக்கு அரசனான சாம்ப வான், அன்பொடு கூறுவானாயினன்.

கு :—பொருப்பு - மலை. உறழ்தல் - மாறுபடுதல்; ஒத்தலும் ஆம். வயிரம் - உறுதி. ஆளி - சிங்கம். ஆளிபோல்வான் என்றது அங்கதனை. ஆளிபோல்வான் தரிப்பிலாது, தடுப்பருந்தகைத்த தாய நெருப்பையே விளைத்தபோல உரைத்த மாற்றம் நெஞ்சமும் மறுகக்கேட்டு, அவனை நோக்கி எண்கின்வேந்தன், விருப்பினால் விளம்பினன்: என இயைக்க. தரிப்பு - தரித்தல்; பொறுத்தல். மாற்றம் - சொல். விளைத்தல் - உண்டாக்குதல்; மூட்டுதல். நெஞ் சமும் என்ற உம்மையால் கேட்ட செவியும் மறுக என்பது பெறப் படும். மறுகுதல் - வருந்துதல். எண்கு - கரடி. (16)

**4771.** நீயுநின் றாதையு நீங்க நின்குலத்
☆ தாயம்வந் தவர்க்கொரு தனைய ரில்லையா
லாயது கருதின மன்ன தன்றெனி
னாயக ரிறுதியு நவிலற் பாலதோ.

நீயும் நின் தாதையும் நீங்க, நின் குலத்
தாயம் வந்தவர்க்கு ஒரு தனையர் இல்லை ; ஆல்
ஆயது கருதினம் ; அன்னது அன்று எனின்,
நாயகர் இறுதியும் நவிலற் பாலதோ ?

பொ :—உன் குலத்து உரிமையுடையராய்த் தோன்றினார்க்கு உன்னையும் உன் தந்தையையும் தவிர (வேறு) ஒரு புதல்வரும் இல்லை ; அவ்வாறானதை எண்ணினோம் ; அது அன்றெனில், தலைவர் முடிதலும் சொல்ல வேண்டுமோ ? (சொல்ல வேண்டா)

கு :—தாயம் - உரிமை. தனையர் - புதல்வர். ஆல் - அசை. ஒரு தனையரும் என உம்மை விரிக்க. உன் குலத்து உரிமையுடைய ராய்த் தோன்றினார்க்கு, உன்னையும் உன் தந்தையையும் தவிர வேறு ஒரு புதல்வரும் இல்லை ; அதை நினைந்தமையால் நின் உயிர்க்கு உறுதி வேண்டினோம் என்றவாறு. (17)

**4772.** ஏகுநீ யவ்வழி யெய்தி யிவ்வழித்
தோகையைக் கண்டிலா வகையுஞ் சொல்லியெஞ்
சாகையு முணர்த்துதி தவிர்தி சோகம்போர்
வாகையா யென்றனன் வரம்பி லாற்றலான்.

" ஏகு நீ ; அவ்வழி எய்தி,—இவ்வழித்
தோகையைக் கண்டிலா வகையும் சொல்லி, எம்
சாகையும் உணர்த்துதி ; தவிர்தி சோகம் ; போர்
வாகையாய் !" என்றனன் வரம்பு இல் ஆற்றலான்.

பொ :—எல்லையற்ற ஆற்றலுடைய சாம்பவான், (அங்கதனை நோக்கி,) 'போரில் வெற்றிமாலை சூடுவோனே! நீ செல் ; அவ் விடம் அடைந்து, மயில்போல்வாளான சீதாபிராட்டியை நாம் காணாத தன்மையும் கூறி, இங்கே (நிகழ்ந்த) எங்கள் சாக்காட்டையும் தெரிவி; சோகத்தை விடு' என்று கூறினான்.

கு :—அவ்வழி - அவ்விடம்; கிட்கிந்தை. வகை - தன்மை; 'வள மங்கையர் வகையுரைத்தன்று' என்பது புறப்பொருள் வெண்பா மாலை (9. 50. கொளு). இவ்வழி - இவ்விடம்; மகேந்திரம். சாகை - சாவு. (18)

### அனுமன் கூறுதல்

**4773.** அவனவை யுரைத்தபி னனுமன் செப்புவான்
புவனமூன் றினுமொரு புடையிற் புக்கிலங்
கவனமாண் டவரெனக் கருத்தி லாரெனத்
தவனவே கத்தினீர் சலித்தி ரோவென்றான்.

அவன் அவை உரைத்தபின் அனுமன் செப்புவான்.
' புவனம் மூன்றினும் ஒரு புடையில் புக்கிலம்
கவனம் மாண்டவர் எனக் கருத்து இலார் எனத்
தவன வேகத்தினீர் ! சலித்திரோ ? என்றான்.

பொ :—சாம்பவான் அச்சொற்களைச் சொல்லியபின் அனுமான் கூறத் தொடங்கியவனாய், 'சூரியனையொத்த வேகமுடையவர்களே! நாம் உலக மூன்றினுள்ளும் ஒரு சிற்றிடத்திலும் புகுந்து தேடவில்லை; (அதற்குள்) வேகம் அற்றவரைப் போலவும் விவேகமற்றவரைப் போலவும் வெறுப்படையக் கடவீரோ' என்று கூறினான்.

கு :—புவனம் - உலகம். புடை - இடம். கவனம் - விரைவு. கருத்து-விவேகம். தவனவேகம்-சூரியனுடைய விரைவு. சலித்தல்-வெறுத்தல். (19)

4774. பின்னருங் கூறுவான் பிலத்தில் வானத்திற்
பொன்வரைக் குடுமியிற் புறத்து ளண்டத்தி
னன்னுதற் றேவியைக் காண்டு நாமெனிற்
சொன்னநா ளவதியை யிறைவன் சொல்லுமோ.

பின்னரும் கூறுவான் பிலத்தில் வானத்தில்
பொன்வரைக் குடுமியில் புறத்துள் அண்டத்தில்
நன்னுதல் தேவியைக் காண்டும் நாம் எனில்
சொன்ன நாள் அவதியை இறைவன் சொல்லுமோ.

பொ :—பின்னும் கூறுபவனான அனுமன், 'பாதாளத்திலும், வானுலகத்திலும், மேருவின் சிகரத்திலும், அப்பாலுள்ள அண்டங்களிலும் நல்ல நெற்றியை யுடையவளான சீதாதேவியை நாம் தேடிக் காண்போமாயின் அரச(னான சுக்கிரீவ)ன், முன்கூறிய கால எல்லையை வற்புறுத்திக் கூறுவானோ? கூறான்.

கு :—பிலம் - பாதாளம். பொன்வரை - மேரு. குடுமி - சிகரம். சுக்கிரீவ மகாராசர் சொல்லிய நாளெல்லை கடந்து விட்டதாயினும், நாம் இன்னும் தேடிச் சீதாபிராட்டியைக் காண்போமாயின், குறித்த காலம் கடந்ததென்று அவர் நம்பாற் சினம் கொள்ளமாட்டார் என்றவாறு. (20)

4775. நாடுத லேநல மின்னு நாடியத்
தோடலர் குழலிதன் றுயரிற் சென்றமர்
வீடிய சடாயுவைப் போல வீடுதல்
பாடவ மல்லது பழியிற் றுமென்றான்.

'நாடுதலே நலம் இன்னும் நாடி அத்
தோடு அலர் குழலிதன் துயரில் சென்று அமர்
வீடிய சடாயுவைப் போல வீடுதல்
பாடவம் அல்லது பழியிற்றும்' என்றான்.

பொ :—நாம் சீதையைத் தேடுதலே நன்று; இன்னும் தேவியைத் தேடிப் பூக்கள் விரிந்த கூந்தலையுடைய அச் சீதையின் துயர்

காரணமாகப் போய்ப் போரில் இறந்த சடாயுவைப் போல நாமும் இறத்தல் பெருமையாகும்; அதுவல்லாதது, (இப்போதே நாம் இறந்துபடுதல்) பழியினையுடையதாகும்.

கு:—தோடு - பூவிதழ்; அது ஆகுபெயராய்ப் பூவை யுணர்த்திற்று. தோடலர் குழலியென்றது சீதையை. பாடவம் - பெருமை. (21)

சம்பாதி வானர வீரரை நெருங்குதல்

**4776.** என்றலுங் கேட்டன னெருவை வேந்தன்றன்
பின்றுணை யாகிய பிழைப்பில் வாய்மையான்
பொன்றின னென்றசொற் புலம்பு நெஞ்சினன்
குன்றென நடந்தவர்க் குறுகன் மேயினான்.

என்றலும், கேட்டனன் எருவை வேந்தன், தன்
பின் துணை ஆகிய பிழைப்பு இல் வாய்மையான்
பொன்றினன் என்ற சொல் புலம்பும் நெஞ்சினன்,
குன்று என நடந்து அவர்க் குறுகல் மேயினான்.

பொ:—என்று அனுமன் கூறுதலும், கழுகரசனான சம்பாதி, தன் பின் பிறந்த சகோதரனாகிய தவறாத வாய்மையினையுடைய சடாயு இறந்தான் என்ற சொல்லைக் கேட்டு, வருந்திய மனத்தனாகி, மலை போல நடந்து, அனுமன் முதலியோரை நெருங்கலானான்.

கு:—என்றலும், எருவை வேந்தன் தன் பின் துணையாகிய பிழைப்பில் வாய்மையான் பொன்றினன் என்ற சொல் கேட்டனன் என இயைக்க. எருவை - கழுகு. பின்துணை - இளைய சோதரன். புலம்புதல் - வருந்தல். கேட்டனன் நெஞ்சினன் என்பவை எச்சப் பொருளிற் பயின்றன. (22)

சடாயு இறந்தமை தெரிந்த சம்பாதியின் நிலை

**4777.** முறையுடை யெம்பியார் முடிந்த வாறெனப்
பறையிடு நெஞ்சினன் பதைக்கு மேனிய
னிறையுடைக் குலிசவே லெறித லான்முனஞ்
சிறையறு மலையெனச் செல்லுஞ் செய்கையான்.

முறை உடை எம்பியார் முடிந்தவாறு எனுப்
பறையிடும் நெஞ்சினன், பதைக்கும் மேனியன்
இறை உடைக் குலிச வேல் எறிதலால் முனம்
சிறை அறு மலை எனச் செல்லும் செய்கையான்.

பொ :—ஒழுக்கமுடைய என் தம்பி இறந்தவாறு (என்) என்று இரங்கிப் பறையொலிபோலப் படபடக்கும் மனமுடையவனும், நடுங்கும் உடலுடையவனும், முற்காலத்தில் இந்திரன் தனக்குரிய வச்சிராயுதத்தால் வெட்டினமையால் இறகுகள் அற்ற மலையைப் போலச் செல்லும் செலவையுடையவனும்.

கு :—முறை - ஒழுக்கம். எம்பியார் என்பது உவப்பின் வந்த பால் வழுவமைதி. இறை - இந்திரன். குலிசவேல் என்பதனுள் வேல் என்பது ஆயுதம் என்று பொருள்பட நின்றது. குலிசம் - வச்சிரம். பண்டு மலைகள் சிறகுடையவாயிருந்தன. அவை நகரங்களின்மீதும் மக்கள் திரண்ட இடங்களிலும் பிற இடங்களிலும் பறந்து சென்று விழுந்து அழித்தமையால், இந்திரன் சினந்து அவற்றின் இறகுகளை வச்சிராயுதத்தால் வெட்டிப் போக்கினன்: என்பது புராண வரலாறு. சிறகுகளற்ற நிலையில் பருத்தவுடலோடு காணப்படும் சடாயுவுக்கு இறக்கைகள் அற்ற மலை உவமை. இச்செய்யுள் முதல் இப் படலத்தின் 27-ஆம் செய்யுள்வரை ஒரு தொடர். நெஞ்சினன், மேனியன், செய்கையான், கண்ணினன், மின்னினன், மாரியான், முகிலும் போல்கின்றான், செல்கின்றான், மேனியான் எய்தினன்: என இயைந்து முடிவுபெறும். (23)

4778. மிடலுடை யெம்பியை வீட்டும் வெஞ்சினப்
படையுள ராயினர் பாரில் யாரெனு
வுடலினை வழிந்துபோ யுவரி நீருகக்
கடலினைப் புரையுறு மருவிக் கண்ணினன்.

‘மிடல் உடை எம்பியை வீட்டும் வெம்சினப்
படை உளர் ஆயினர் பாரில் யார்?’ எனு
உடலினை வழிந்துபோய் உவரி நீர் உகக்
கடலினைப் புரையுறும் அருவிக் கண்ணினன்.

பொ :—ஆற்றலுடைய என் தம்பியைக் கொல்லும் கொடிய சினம் பொருந்திய படையினையுடையார் இவ்வுலகில் எவர்? என்று இரங்கி உடலில் வழிந்து சென்று உவர்நீர் உகுதலால், கடலைப் பொருந்தும் அருவியைப் பெருக விடுகின்ற கண்ணினையுடையவனும்.

கு :—சடாயு எவராலும் அழிக்க முடியாத பேராற்றலுடையவன் என்று சம்பாதி, நம்பியிருந்தவனுதலின், 'மிடலுடையெம்பியை வீட்டும் வெஞ்சினப் படையுளராயினர் பாரில் யார்?' என இரங்குவானுயினன். மிடல் - வலிமை. வீட்டுதல் - கொல்லுதல். படை - ஆயுதம். உடையானது சினத்தை உடைமை மேலேற்றி வெஞ்சினப் படை என்ருர். உடலினை - உடலில்; உருபு மயக்கம். உவரிநீர் - உப்புநீர்; கண்ணீர். உகுதல் - சிந்துதல். புரைதல் - பொருந்துதல். (24)

**4779.** உழுங்கதிர் மணியணி யுமிழு மின்னினுன்
மழுங்கிய நெடுங்கணின் வழங்கு மாரியா
னழுங்குரன் முழக்கினு னவனி யாறென
முழங்கிவந் திழிவதோர் முகிலும் போல்கின்ருன்.

உழும் கதிர் மணி அணி உமிழும் மின்னினுல்
மழுங்கிய நெடுங்கணின் வழங்கும் மாரியான்
அழும் குரல் முழக்கினுன் அவனி ஆறு என
முழங்கிவந்து இழிவது ஓர் முகிலும் போல்கின்ருன்.

பொ :—ஊடுருவிப் பாயும் ஒளிக் கிரணங்களையுடைய இரத்தினங்கள் பதித்த அணிகலன்கள் வெளிவிடும் ஒளியினுலும், விளக்கம் குன்றிய நெடுந்தூரம் நோக்குகின்ற கண்களிலிருந்து பெருக விடுகின்ற நீர்ப்பெருக்காலும், அழும் குரல் முழக்கினுலும், பூமியே தான் செல்லும் நெறி என்று கருதி முழங்கிக்கொண்டு வந்து இறங்குகின்ற மேகம் போன்றவனும்.

கு :—மணியணிகள் மின்னக் குரலெடுத்தழும் அழுகையொலியோடு கண்கள் நீரைப்பொழிய வரும் சம்பாதிக்கு, மின்னி முழங்கி மழையைப் பொழிந்துவரும் மேகம் உவமை. பேருருவுடைமை கொண்டு முன்னும், பின்னும் சம்பாதிக்கு மலையை உவமை கூறுவராதலின் இங்கு முகிலும் போல்கின்ருன் என்ருர். உம்மை எச்சப் பொருளது. உழுதல் - ஊடுருவுதல். மழுங்கிய கண் நெடுங்கண் என்க. மூப்பொடு அவல நிலையும் கொண்டு மழுங்கிய கண் என்ருர். (25)

**4780.** வள்ளியு மரங்களு மலையு மண்ணுறத்
தெள்ளுநுண் பொடிபடக் கடிது செல்கின்ருன்

றள்ளுவன் கால்பொரத் தரணி யிற்றவழ்
வெள்ளியம் பெருமலே பொருவு மேனியான்.

வள்ளியும் மரங்களும் மலேயும் மண் உறத்
தெள்ளும் நுண் பொடி படக் கடிது செல்கின்ருன்
தள்ளுவன் கால் பொரத் தரணியில் தவழ்
வெள்ளி அம் பெருமலே பொருவும் மேனியான்.

பொ :—கொடிகளும் மரங்களும் மலேயும் நிலத்தில் அழுந்த, மிக நுண்ணிய புழுதியெழுமாறு விரைந்து செல்லுகின்றவனும் நிலேயான பொருள்களேயும் சாய்க்கும் வலிய காற்றுத் தாக்குதலால் நிலத்தில் இடம் பெயர்ந்து செல்லுகின்ற அழகிய பெரிய வெள்ளிமலேயை ஒத்த உடலேயுடையவனும். (ஆகி)

கு :—வள்ளி-கொடி. வள்ளியும் மரங்களும் மலேயும் மண் உறுத லாவது, சம்பாதி அடிவைத்துச் செல்லுதலால் அவனுடற்பாரம் தாங்கலாற்ருத வள்ளியும் மரங்களும் மலேயும் நிலத்துள் அழுந்துத லாம். இனி, வள்ளியும் மரங்களும் மண்ணுற, மலேயும் தெள்ளும் நுண்பொடிபட என நிரனிறையாகக் கொண்டு பொருளுரைத்தலும் ஆம். மலேபொடிபடுதலாவது சம்பாதி செல்லும் விரைவில் அவன் காலால் எற்றவும் இடறவும்பட்டுச் சிதறித்துகளாதல். தள்ளுதல்-சாய்த்தல். தரணி - நிலம். பொருவுதல் - ஒத்தல். வெண்ணிறம் வாய்ந்த சம்பாதியின் பேருடலுக்கு வெள்ளி மலே உவமை. சடாயு வைக் 'கயிலேயை நிகர்க்குங் காட்சியான்' (சடாயுவுயிர்நீத்த படலம். 90) என்றமையும் இங்கு நோக்கத்தகும். (26)

சம்பாதி நெருங்கக் கண்ட அனுமன் செயல்

**4781.** எய்தின னிருந்தவ ரிரியல் போயினு
ரையனம் மாருதி யழலுங் கண்ணினுன்
கைதவ நிசிசர கள்ள வேடத்தை
யுய்திகொ லினியென வுருத்து முன்னின்ருன்.

எய்தினன் ; இருந்தவர் இரியல் போயினுர் ;
ஐயன் அம் மாருதி அழலும் கண்ணினுன்,
'கைதவ நிசிசர கள்ள வேடத்தை
உய்தி கொல் இனி' என உருத்து முன் நின்ருன்.

பொ :—(சம்பாதி) வந்தான்; அங்கிருந்த வானரர் அஞ்சியோடினர்; உயர்ந்தோனாகிய அவ்வனுமன், நெருப்பெழும் கண்ணினனாய், 'வஞ்சக அரக்கனே! பொய் வேடத்தையுடையாய்; இனி நீ பிழைத்தல் கூடுமோ!' என்று சினந்து, அச்சம்பாதி எதிர் நின்றான்.

கு :—இரியல் போதல் - அஞ்சியோடுதல். மாருதி - அனுமன். கைதவம்-வஞ்சகம். நிசிசரர்-அரக்கர். கள்ளவேடம்-பொய்வேடம். உருத்தல்-சினத்தல். சம்பாதியின் பேருருவு கண்டு ஏனை வானரர் இரியல்போக, அனுமன் மட்டும் இராவணனே பறவையுருவில் வந்தான் என்று ஐயுற்றுச் சினந்து முன்னின்று கூறினான் என்றவாறு. இதுவரை எங்கள் எதிரில் வராமையால் பிழைத்தாய்; இன்று எதிர்ப்பட்டனை; இனி உனக்கு உய்தியில்லை யென்பான் இனி உய்தி கொல் என்றான். (27)

## அனுமான் சம்பாதியைக் குற்றமற்றவனென்று குறிகளால் அறிதல்

**4782.** வெங்கதம் வீசிய மனத்தன் விம்மலன்
பொங்கிய சோரிநீர் பொழியுங் கண்ணினன்
சங்கையிற் சழக்கில னென்னுந் தன்மையை
யிங்கித வகையினா லெய்த நோக்கினான்.

வெம் கதம் வீசிய மனத்தன், விம்மலன்,
பொங்கிய சோரி நீர் பொழியும் கண்ணினன்
சங்கையிற் சழக்கு இலன் என்னும் தன்மையை
இங்கித வகையினால் எய்த நோக்கினான்.

பொ:—(முன் பாட்டிற் கூறியவாறு சம்பாதியை அரக்கன் என்று) ஐயுற்ற நிலையில், கொடிய சினத்தைப் போக்கிய மனமுடையான்; துன்பத்தால் பொருமுகின்றான்; மிகுதியான அரத்த நீரைப் பொழிகின்ற கண்களையுடையான்; (ஆதலால்) குற்றமற்றவன் என்னும் இயல்பை (அனுமன்) நன்றாக ஆராய்ந்தறிந்தான்.

கு :—சங்கையில், மனத்தன் விம்மலன் கண்ணினன்; சழக்கிலன் என்னும் தன்மையை இங்கித வகையினால் எய்த நோக்கினான்; என இயைக்க. சங்கை-ஐயம். கதம்-சினம்; வீசுதல்-நீக்குதல். விம்முதல்-பொருமுதல். சோரிநீர்-இரத்தக்கண்ணீர். சழக்கு-குற்றம். இங்கித வகை-குறிகள். கதம் வீசிய மனமும் பொருமுதலும், அரத்தநீர் பொழியும் கண்களுடைமையும் சடாயு இறந்தது கேட்ட சம்பாதியின் தன்மைகள். சம்பாதியின் மனநிலையும் மெய்ப்பாடும் ஆகிய அவை

அவன் குற்றமற்றவன் (அரக்கனல்லன்) என்று அனுமன் துணிதற் குரிய குறிகளாயின. சோக நிலையில் பெருகுங் கண்ணீரைச் சோரி நீரென்றார். 'உதிரநீர் வழங்குங்கண்ணாள்' (யுத்த. அதிகாயன் வதை. 267), 'குருதிநீர்க் குமிழிக் கண்ணான்' (யுத்த. இராவணன் சோகப்படலம். 43) என்பனவும் இங்கு நோக்கத்தகும். (28)

சம்பாதி, சடாயுவைக் கொன்றவர் யார்? என வினவுதல்

4783. நோக்கின னின்றன னுணங்கு கேள்வியான்
வாக்கினா லொருமொழி வழங்கு முதமுன்
றாக்கருஞ் சடாயுவைத் தருக்கி னாலுயிர்
நீக்கினர் யாரது நிரப்பு வீரென்றான்.

நோக்கினன் நின்றனன்; நுணங்கு கேள்வியான்
வாக்கினால் ஒரு மொழி வழங்குறாத முன்,
'தாக்கருஞ் சடாயுவைத் தருக்கினால் உயிர்
நீக்கினர் யார்? அது நிரப்புவீர்' என்றான்.

பொ:—இவ்வாறு சம்பாதியைக் குற்றமற்றவன் என்று உணர்ந்து நின்ற நுணுகிய கேள்வியறிவினனான அனுமன், தன் வாயால் ஒரு சொல் சொல்லுமுன், 'பிறரால் எதிர்த்துத் தாக்குதற் கரிய (பேராற்றலுடைய) சடாயுவைத் தம் வலிமையால் உயிர் போக்கினவர் யார்? அதனை விரித்துச் சொல்லுக' என்று சம்பாதி கூறினான்.

கு:—தருக்கு-வலிமை. நிரப்புதல்-விரித்துரைத்தல். (29)

அனுமான் வினவச் சம்பாதி தன்னை அறிவித்தல்

4784. உன்னைநீ யுள்ளவா றுரைப்பி னுற்றது
பின்னையா னிரப்புதல் பிழைப்பின் றாகுமா
லென்னமா ருதியெதி ரெருவை வேந்தனுந்
தன்னையாந் தன்மையைச் சாற்றன் மேயினான்.

'உன்னை நீ உள்ளவாறு உரைப்பின், உற்றது
பின்னை யான் நிரப்புதல் பிழைப்பின்றாகும்' ஆல்,
என்ன, மாருதி, எதிர் எருவை வேந்தனும்
தன்னை ஆம் தன்மையைச் சாற்றல் மேயினான்.

பொ :—அனுமன், (சம்பாதியை நோக்கி), ‘நீ உன்னை(ப்பற்றி யான் அறிந்துகொள்ளவேண்டியவற்றை) உள்ளபடி சொன்னால், அதன்பின், யான் சடாயு முடிவைப்பற்றிய செய்தியை விரித்துக் கூறுதல் தவறற்றதாகும்’ என, அவன் முன் கழுகரசனான சம்பாதியும், (தான் சடாயுவுக்குத்) தமையனான முறையைச் சொல்லத் தொடங்கினான்.

கு :—‘உன்னை நீ உள்ளவாறு உரைப்பின் ........பிழைப்பின்ருகும்’ என்பது சம்பாதியை நோக்கி அனுமன் கூறியது. பிழைப்பு-தவறு. ஆல் அசை. தன்னை-தமையன்; ‘தன்னைமார் தந்தகொழுமீன்’ (ஐந்திணையைம்பது. 47) என்பதனுள் தன்னை யென்பது தமையன் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். தன்னையாம் தன்மை என்பதற்குத் ‘தன்னைப்பற்றியுண்டாகிய வரலாற்றை’ என்று பொருள் கூறுவாரும் உண்டு. ஐ, ஆம் என்பவற்றைச் சாரியைகளாக்கித் தன்தன்மை (தன்நிலைமை)யை என்று பொருள் கூறலுமாம். (30)

**4785.** மின்பிறந் தாலென விளங்கெ யிற்றினு
யென்பிறந் தார்க்கிடை யெய்த லாதவென்
பின்பிறந் தான்றுணை பிரிந்த பேதையேன்
முன்பிறந் தேனென முடியக் கூறினுன்.

மின் பிறந்தாலென விளங்கு எயிற்றினுய்!
என் பிறந்தார்க்கிடை எய்தலாத? என்
பின் பிறந்தான் துணை பிரிந்த பேதையேன்
முன்பு இறந்தேன் என முடியக் கூறினுன்.

பொ :—(சம்பாதி அனுமனை நோக்கி,) ‘மின்னல் தோன்றினுற் போல விளங்கும் பற்களையுடையாய்! உடன்பிறந்தார்க்கிடையே எய்தலாகாத நலங்கள் எவை? (எல்லா நலங்களும் எய்துவனவாயிருக்கவும்) என் தம்பியின் துணையை நீங்கிய ஏழையேன் வலியற்றவனுனேன்’ என்று தன் செய்தி முழுவதும் கூறினுன்.

கு :—பிறந்தார்க்கிடை எய்தலாத என்? என மாறுக. உடன்பிறப்புடையார்க்கு எல்லா நலன்களும் எய்தும் என்பது, “திண்பொருள் எய்தலாகும், தெவ்வரைச் செகுக்கலாகும், நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையும் நண்ணலாகும், ஒண்பொருளாவது ஐயா! உடன்பிறப்பு, ஆக்கலாகா, எம்பியை யீங்குப் பெற்றேன், என் எனக்கு அரியதென்ருன்” (சீவகசிந்தாமணி 1760) என்பதனுல்

அறியத்தகும். என் பின் பிறந்தான் துணைபிரிந்த பேதையேன் முன் பிறந்தேன் என்பது சம்பாதி உடன்பிறந்தானையிழந்த தன் அவல நிலை கூறியது. சடாயு வுயிருடனிருக்கும்போதே (நெடுங்காலத்துக்கு முன்) தான் அவன் துணையினைப் பிரிய நேர்ந்ததும் அகப்படப் 'பின் பிறந்தான் துணை பிரிந்த பேதையேன்' என்றான். முன் பிறந்தேன் என்பது முன்பு இறந்தேன் என்றும், முன் பிறந்தேன் என்றும் பிரித்துக்கொள்ள நின்று, வலிமையற்றவனானேன் எனவும், (உயிரோடிருந்தும்) முன்பே இறந்தவனானேன் எனவும், (சடாயுவுக்கு) முன்னே பிறந்தவன், அண்ணன் எனவும் பொருள்பட அமைந்தமை நோக்கத்தகும். முன்பு-வலிமை, முற்காலம். (31)

### அனுமான் சடாயு இறந்தவாறு கூறுதல்

4786. கூறிய வாசகங் கேட்ட கோதிலா
னூறிய துன்பத்தி னுவரி யுள்புகா
வேறின னுணர்த்தின னிகலி ராவணன்
வீறிய வாளிடை விளிந்த வாறெலாம்.

கூறிய வாசகம் கேட்ட கோதிலான்,
ஊறிய துன்பத்தின் உவரி உள் புகா,
ஏறினன், உணர்த்தினன், இகல் இராவணன்
வீறிய வாள் இடை விளிந்தவாறு எலாம்.

பொ:—சம்பாதி கூறிய சொற்களைக் கேட்ட குற்றமற்ற அனுமன், பெருகிய துன்பக் கடலுள் முழுகி (ஒருவாறு) கரையேறிப் போரில் இராவணனுடைய, வேறொன்றற்கில்லாத பெருமை வாய்ந்த வாளால் சடாயு இறந்த வரலாறெல்லாம் அறிவித்தான்.

கு:—கோதிலான் என்றது அனுமனை. ஊறுதல்-மிகுதல்; பெருகுதல். துன்பத்தின் உவரி என்பதனுள் அத்தும் இன்னும் சாரியை. துன்பவுவரி-துன்பக் கடல். துன்பத்தைக் கடலாகவுருவகித்தமைக்கேற்ப, ஏறினன் என்பதற்குக் கரையேறி என்று பொருளுரைக்கலாயிற்று. இராவணன் வாளிடை விளிந்தவாறெலாம் உணர்த்தினன் என இயைக்க. இகல்-போர். வலிமையும் ஆம். வீறு-வேறு ஒன்றற்கில்லாத பெருமை. வீறிய-பெருமையினையுடைய, இராவணன்வாள் சிவபிரான் தரப்பெற்றதாதலின் வீறியவாள் என்றான். வாளிடை-வாளினால்: உருபுமயக்கம் விளிதல்-இறத்தல். (32)

### சடாயு இறந்ததறிந்து சம்பாதி இரங்குதல்

4787. அவ்வுரை கேட்டலு மசனி யேற்றினுற்
றவ்விய கிரியெனத் தரையின் வீழ்ந்தனன்
வெவ்வுயி ராவுயிர் பதைப்ப விம்மினு
னிவ்வுரை யிவ்வுரை யெடுத்தி யம்பினுன்.

அவ்வுரை கேட்டலும், அசனி யேற்றினுல்
தவ்விய கிரி எனத் தரையின் வீழ்ந்தனன்,
வெவ்வுயிரா உயிர் பதைப்ப விம்மினுன்,
இவ்வுரை இவ்வுரை எடுத்து இயம்பினுன்.

பொ :—அனுமன் கூறிய அச்சொற்களைக் கேட்ட அளவில், (சம்பாதி), இடியேற்றினுல் சிதைவுற்ற மலைபோலத் தரையில் விழுந்து, பெருமூச்சுவிட்டு, உயிர் துடிக்க வருந்தி, இச்சொற்களை இச்சொற்களை உரக்கக் கூறுவானுயினுன்.

கு :—அசனி - இடி. இடியுள் கொடுமை மிக்கதனை இடியேறு என்ருர். தவ்வுதல் - சிதைதல். வீழ்ந்தனன், விம்மினுன் என்பவை எச்சப் பொருளிற் பயின்றன. இவ்வுரை இவ்வுரை யென்பது அடுக்கு. எடுத்து இயம்புதல் - உரக்கக் கூறுதல். சம்பாதி கூறியவை பின் வரும் பாடல்களிற் காணத்தகும். (33)

4788. ☆ இளையா நீள்சிற கின்றி வெந்துகத்
தளையா னேனுயிர் போத றக்கதால்
வளையா நேமியன் வன்மை சால்வலிக்
கிளையா னேயிது வென்ன மாயமோ.

இளையா, நீள் சிறகு இன்றி வெந்து, உகத்
தளை ஆனேன் உயிர் போதல் தக்கது, ஆல்
வளையா நேமியன் வன்மைசால் வலிக்கு
இளையானே ! இது என்ன மாயமோ ?

பொ :—இளையவனே ! கெடாத ஒற்றையாழித் தேரினையுடைய சூரியனது வன்மைமிக்க ஆற்றலால் இளைத்து, நீண்ட சிறகுகள் வெந்து விழுதலால் (விரும்பியவாறு செல்லமாட்டாமல்) தளைப்பட்டே(ன் போலுள்ளவ)னுன யான் இறந்துபடுதல் தக்கதாகும்; இளையானுன நீ இறந்துபட்டது என்ன மாயமோ !

கு :—இளையானே! என்றது சம்பாதி சடாயுவை நோக்கிக் கூறிய விளிக்கூற்று. இளையானே! தளையானேன் உயிர் போதல் தக்கது; இது என்ன மாயமோ? என இயைக்க. வளைதல்-கெடுதல். நேமி - தேருருள். வளையா நேமியன் என்றது ஒழியாது உலக மெல்லாம் சுற்றி வரினும் ஒருநாளும் கெடாத ஒற்றைச் சக்கர முடைய தேரினனான சூரியனை. வன்மைசால் வலியாவது எல்லா வற்றையும் சுட்டெரிக்கும் ஆற்றல். வலிக்கு - வலிமையால். வலிக்கு இளையா நீள் சிறகின்றி வெந்துக என்க. தளை - சிறை. இது என்றது சடாயு இறந்ததனை. சூரியனுடைய வெய்ய கிரணங்களால் இளைத்துச் சிறகுகள் வெந்தழிந்தமையால் விரும்பியவாறு எங்கும் செல்ல முடியாமல் சிறைப்பட்டே(ன் போலுள்ள முதியவ)னான யான் இருந்து துன்புற, வளர்ந்த சிறகுகளோடு விரும்பியவாறு எங்கும் செல்லவல்ல பேராற்றல் வாய்ந்த இளையானான நீ இறத்தல் முறையோ? என்றவாறு. சம்பாதி சிறகிழந்த வரலாறு இப்படலத் தின் 54, 55ஆம் பாடல்களால் அறியலாம். (34)

4789. மலரோ னின்றுளன் மண்ணும் விண்ணுமுண்
டுலையா நீடற மின்னு முண்டரோ
நிலையார் கற்பமு நின்ற தின்றுநீ
யிலையா னுயிது வென்ன தன்மையோ.

மலரோன் நின்றுளன்; மண்ணும் விண்ணும் உண்டு;
உலையா நீடு அறம் இன்னும் உண்டு; அரோ,
நிலையார் கற்பமும் நின்றது; இன்று நீ
இலையானாய்; இது என்ன தன்மையோ?

பொ :—திருமாலின் உந்தித் தாமரை மலரில் தோன்றிய பிரமன் இன்று அழிவின்றியுள்ளான்; மண்ணுலகும் விண்ணுலகும் உள்ளன; கெடாத பெருமை வாய்ந்த தருமமும் இன்னும் உள்ளது; நிலைத்த கற்பம் என்னும் காலமும் முடிந்ததில்லை. (இவையெல்லாம் இருக்க) நீ மட்டும் இன்று இறந்து மறைந்தனை; இது என்ன முறையோ?

கு :— உலைதல் - கெடுதல். கற்பம் - கால அளவில் ஒரு பேரெல்லை. தன்மை - முறை. பிரமன் முதலாக எண்ணப்பட்ட வற்றைப் போல நிலைத்து வாழவேண்டிய நீ இறந்தனையே என்று இரங்கியவாறு. (35)

**4790.** உடனே யண்ட மிரண்டு முந்துயிர்த்
திடநாள் வந்திரு வோமு ளோமெனை
விடநீ யேதனி சென்ற வீரமுங்
கடனோ வெங்கலு ழற்கு மேன்மையாய்.

உடனே அண்டம் இரண்டும் முந்து உயிர்த்
திடு அ நாள்வந்து, இருவோம் உளோம், எனை
விட, நீயே தனி சென்ற வீரமும்
கடனோ எம் கலுழற்கும் மேன்மையாய்.

பொ :—எங்கள் குல முதல்வனாகிய கருடனிலும் மேம்பாடுடையாய்! நாமிருவரும் முற்காலத்தில் இரண்டு முட்டைகள் தோற்றுவித்த அந்நாளில் உடன்தோன்றி இன்றுவரை உடனுறைந்தவர்களாய் உள்ளோம்; இப்போது என்னை விட்டு நீ தனியே சென்ற வீரப்பாடும் முறையாகுமோ ?

கு :—எம் கலுழற்கும் மேன்மையாய்! இருவோம் முந்து அண்டம் இரண்டும் உயிர்த்திடு அநாள் உடனே வந்து உளோம் என இயைக்க. கலுழன் தன் குலமுதல்வனாதலின் எம் கலுழற்கும் என்றான். உம்மை உயர்வு சிறப்புணர நின்றது. முந்து - முற்காலத்தில். அண்டம் - முட்டை. உயிர்த்திடுதல் - வெளிப்படுத்துதல்; தோற்றுவித்தல். பறவைகள் முட்டையிற் பிறப்பனவாதலால் அண்டம் உயிர்த்திடு அநாள் என்றான். விட என்னும் செயவென் எச்சத்தை, விட்டு எனச் செய்தெனெச்சமாகத் திரிக்க. இராவணனொடு பொருது தெய்வ மரணம் எய்தினனாதலின், சென்ற வீரமும் என்றான். உம்மை உயர்வு சிறப்புணர்த்தியது. கடன்-முறை. சம்பாதி, சடாயு இவர்கள் பிறப்பு பின் 53-ஆம் பாடலிற் பேசப்படும். (36)

**4791.** ஒன்று மூன்றுல கத்து ளோரையும்
வென்று னென்னினும் வீர நிற்குநேர்
நின்று னேயவ் வரக்க னின்னையுங்
கொன்று னேயிது வென்ன கொள்கையோ.

ஒன்று மூன்று உலகத்துளோரையும்
வென்றான் என்னினும், வீர ! நிற்கு நேர்
நின்றானோ ? அவ் அரக்கன் நின்னையும்
கொன்றானோ ? இது என்ன கொள்கையோ ?

பொ :—வீர! அவ்விராவணன், தன்னெடு மாறுபட்ட மூன்றுல கத்தினும் உள்ளவர்களையெல்லாம் வென்ருனென்ருலும், போரில் உனக்கு முன் நின்ருனு? உன்னையும் கொன்ருனு? இது என்ன (நிகழா) நிகழ்ச்சி?

கு :—வீர! அவ்வரக்கன் வென்ருனென்னினும் நிற்கு நேர் நின்ருனே? என இயைக்க. அவ்வரக்கன் என்றது இராவணனை. இராவணன் என்னும் பெயரைக் கூறுதலும் ஆகாது என்னும் கருத்தால் அவ்வரக்கன் என்ருன். ஒன்ருத என்பது ஈறு கெட்டு ஒன்ரு என நின்றது. ஒன்றுதல் - ஒற்றுமையுடனிருத்தல். இது சடாயுவின் வீர மிகுதி எண்ணிச் சம்பாதி பிரங்கியவரறு. (37)

### அனுமான் சம்பாதியைத் தேற்றுதல்

**4792.** என்றென் றேங்கி யிரங்கி யின்னலாற்
பொன்றுந் தன்மை புகுந்த போதவற்
கொன்றுஞ் சொற்கொ டுணர்ச்சி நல்கினுன்
வன்றிண் டோள்வரை யன்ன மாருதி.

என்று என்று ஏங்கி, இரங்கி, இன்னலால்
பொன்றும் தன்மை புகுந்தபோது, அவற்கு
ஒன்றும் சொல்கொடு உணர்ச்சி நல்கினுன்;
வன் திண் தோள் வரை அன்ன மாருதி.

பொ :—இவ்வாறு பலபடக் கூறி அழுது மனமழிந்து தம்பி பிரிவென்னும் துன்பத்தால் (சம்பாதி) இறந்துபடும் நிலை யடைந்த போது வலிய திண்ணிய மலைபோன்ற தோள்களையுடைய அனுமன், ஏற்ற சொற்களால் (சம்பாதியைத்) தெளிவித்தான்.

கு :—ஏங்குதல் - அழுதல். இரங்குதல் - மனமழிதல். இன்னல் - துன்பம். பொன்றும் தன்மை-இறந்துபடும் நிலை. மாருதி-அனுமன். மாருதி, ஒன்றும் சொற்கொடு அவற்கு உணர்ச்சி நல்கினுன் என இயைக்க. (38)

### சம்பாதி வினவுதல்

**4793.** தேற்றத் தேறி யிருந்த செங்கணுன்
கூற்றெரப் பான்கொலை வாள ரக்கனே

டேற்றுப் போர்செய்த தென்னி மித்தெனக்
காற்றின் சேயது கட்டு ரைக்குமால்.

தேற்றத் தேறி யிருந்த செங்கணன்,
'கூற்று ஒப்பான், கொலை வாள் அரக்கனோடு
ஏற்றுப் போர் செய்தது என் நிமித்து' என,
காற்றின் சேய், அது கட்டுரைக்கும் ஆல்.

பொ :—அனுமன் தெளிவிக்கத் தெளிந்திருந்த சிவந்த கண்களை யுடைய சம்பாதி, 'கூற்றம் போன்றவனான சடாயு, கொலைத்தொழிலை யுடைய வாளினையேந்திய அரக்கனான இராவணனுடன் எதிர்த்துப் போர் செய்தது எக்காரணத்தால்' என்று வினவ, வாயுவின் மகனான அனுமன் அவ்வரலாற்றைக் கூறுவானாயினன்.

கு :—தம்பி யிறந்த துன்பநிலையால் சம்பாதியின் கண்கள் சிவந்தன. தீயோரை ஒறுத்தலால் சம்பாதியைக் கூற்றொப்பான் என்றான். கூற்று - எமன். நிமித்து - நிமித்தம் ; காரணம். (39)

**4794.** எங்கோ மானவ் விராம னில்லுளாள்
செங்கோ லான்மகள் சீதை செவ்வியாள்
வெங்கோல் வஞ்சன் விளைத்த மாயையாற்
றங்கோ னைப்பிரி வுற்ற தன்மையாள்.

எம் கோமான் அவ் இராமன் இல் உளாள்,
செங்கோலான் மகள், சீதை, செவ்வியாள்,
வெம்கோல் வஞ்சன் விளைத்த மாயையால்,
தம் கோனைப் பிரிவுற்ற தன்மையாள்.

பொ :—எங்கள் தலைவனான அந்த இராமனுடைய மனையாளும், நெறி தவறாத ஆட்சி முறையினை மேற்கொண்ட சனகன் மகளுமான சீதையென்னும் நல்லாள், கொடுங்கோலை மேற்கொண்ட வஞ்சகனான இராவணன் செய்த மாயச் செயலால் தன் தலைவனைப் பிரிந்த நிலையினளானாள்.

கு :—வெங்கோல் வஞ்சன் என்றது இராவணனை. (40)

**4795.** கொண்டே குங்கொலை வாள ரக்கனைக்
கண்டா னும்பி யறங்க டக்கலான்

வண்டார் கோதையை வைத்து நீங்கெனுத்
திண்டே ரானொ டெதிர்ந்து சீறினன்.

கொண்டு ஏகும் கொலை வாள் அரக்கனைக்
கண்டான் உம்பி அறம் கடக்கலான்,
'வண்டு ஆர் கோதையை வைத்து நீங்கு' எனுத்
திண் தேரானொடு எதிர்ந்து சீறினன்.

பொ :—அறநெறி கடவாதவனான உன் தம்பி (சடாயு), (அச் சீதையைக்) கவர்ந்து செல்லும் கொலைத்தொழிலையுடைய வாளை யேந்திய அரக்கனான இராவணனைக் கண்டு, 'வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய சீதையை விட்டுச் செல்' என்று வலிய தேராளியான இராவணனுடன் எதிர்த்து வெகுள்வானாயினான்.

கு :—உம்பி - உன் தம்பி; (சடாயு). அறம் - அறநெறி. (41)

4796. சீறித் தீயவ னேறு தேரையுங்
கீறித் தோள்கள் கிழித்த ழித்தபின்
றேறித் தேவர்க டேவன் றெய்வவாள்
வீறப் பொன்றினன் மெய்ம்மை யோனென்றான்.

'சீறித் தீயவன் ஏறு தேரையும்
கீறித் தோள்கள் கிழித்து, அழித்தபின்,
தேறித் தேவர்கள் தேவன் தெய்வ வாள்
வீறப் பொன்றினன் மெய்ம்மையோன்' என்றான்.

பொ :—'அவ்வாறு சினந்து, கொடியோனான இராவணன் ஏறிய தேரையும் சிதைத்து, அவனுடைய தோள்களையும் கிழித்து, அவன் வலியை அழித்தபின், (இராவணன், இவன் வேறு படைக்கலங் களால் வெல்லுதற்கரியன் என்று) தெளிந்து, தேவ தேவனான சிவபெருமான் தந்த தெய்வத்தன்மையுள்ள வாளால் எறிய உண்மையே பேசுபவனான சடாயு இறந்தான்' என்று கூறினான்.

கு :—வீறுதல் - எறிதல். (42)

சம்பாதி, சடாயுவைப் பாராட்டுதல்

4797. விளித்தா னென்னது கேட்டு மெய்ம்மையோய்
தெளித்தா டத்தகு தீர்த்தன் மாட்டுயி

ரளித்தா னேயது நன்று நன்றெனக்
களித்தான் வாரி கரந்த கண்ணினன்.

விளித்தான், அன்னது கேட்டு, மெய்ம்மையோய்!
தெளித்து ஆடத்தகு தீர்த்தன்மாட்டு உயிர்
அளித்தானே! அது நன்று! நன்று!! எனக்
களித்தான்; வாரி கரந்த கண்ணினன்.

பொ :— சொன்னன்; அவ்வுரையினைக் கேட்டு, கடல்போல மிகுதியான துன்பக் கண்ணீரை அடக்கிக்கொண்ட கண்களை யுடையனை சம்பாதி, (அனுமனை நோக்கி) 'உண்மையுடையோனே! தன்பால் வருவாருடைய கலக்கத்தை நீக்கி உரையாடவல்ல தூயோனை இராமன் திறத்து என் தம்பி உயிர் கொடுத்தானே; அவ்வாறு உயிர் தந்த செயல் நன்று நன்று' என்று மகிழ்ந்தான்.

கு :—விளித்தான் என்பது முன் பாடலில் என்ருன் என்பதன் அனுவாதம். விளி - சொல். விளித்தல் - சொல்லுதல்; 'தீவிளி விளிவன்' (திருமாலை. 30) என்னும் அருளிச் செயலுள், விளி, சொல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். மெய்ம்மையோய் என்பது அனுமனை நோக்கிய சம்பாதியின் விளி. அன்னது கேட்டு, வாரி கரந்த கண்ணினன், மெய்ம்மையோய்! தெளித்தாடத் தகு தீர்த்தன் மாட்டு உயிரளித்தானே! அது நன்று நன்று எனக் களித்தான் என இயைக்க. வாரி - கடல். தெளித்தல் - தெளி வித்தல்; 'தெளித்த சொல் தேறியார்க்குண்டோ தவறு' (1154) என்பது திருக்குறள். ஆடுதல் - உரையாடுதல். தீர்த்தன் - தூயோன்; இராமன். இராமன் தெளிவுறப் பேசுமாற்றலுடையான் என்பது, ஆசிரியர், முன் அவனைச் 'செல்லுஞ் சொல் வல்லான்' (1830) என்று கூறுதலாலும் புலனுகும். அளித்தானே என்பதனுள் ஏகாரம் வியப்புணர்த்தியது, 'தெளித்தாடத் தகு தீர்த்தன்' என்ப தற்கு, 'மனம் தெளிந்து அனுபவித்தற்குரிய பரிசுத்த மூர்த்தியாகிய இராமன்' எனவும், 'முழுமுதற் கடவுள் என்று உறுதிகொண்டு சரணமடைதற்கேற்ற புண்ணிய மூர்த்தி' எனவும் பொருளுரைப் பாரும் உளர். இங்கு தெளிந்து என்பது எதுகை நோக்கித் தெளித்து என நின்றது வலித்தல் விகாரம். (43)

**4798.** பைந்தா ரெங்க ளிராமன் பத்தினி
செந்தாள் வஞ்சி திறத்தி றந்தவன்
மைந்தா ரெம்பி வரம்பில் சீர்த்தியோ
டுய்ந்தா னல்ல துலந்த துண்மையோ.

பைந்தார் எங்கள் இராமன் பத்தினி
செந்தாள் வஞ்சி திறத்து இறந்தவன்,
மைந்து ஆர் எம்பி, வரம்பு இல் சீர்த்தியோடு
உய்ந்தான்; அல்லது உலந்தது உண்மையோ?

பொ :—பசிய மாலையணிந்த எங்கள் இராமனுடைய தேவியும் சிவந்த அடியினையுடைய வஞ்சிக்கொடி போன்றவளுமான சீதையின் இடர் நீக்கல் காரணமாக இறந்த வலிமை பொருந்திய என் தம்பி (சடாயு) எல்லையற்ற புகழுடம்பொடு உயிர் வாழ்ந்திருக்கின்றானே யன்றி அவனை உயிர் ஒழிந்தானென்று கூறுவது உண்மையாகுமோ? (ஆகாது)

கு :—பைந்தார் - பசுமையான (வாடாத) மாலை. துளவு முதலிய வற்றாற் றொடுத்த இலைமாலையும் ஆம். மைந்து - வலிமை. சீர்த்தி - மிகுபுகழ். உலத்தல் - சாதல். சடாயு சீதாபிராட்டியை இராவண னிடமிருந்து மீட்கும் முயற்சியில் அழியுந் தன்மையுள்ள தன் பூத வுடலை யிழந்தாலும், என்றும் அழியாத புகழுடம்பு பெற்று நிலவினனாதலின் அவனை இறந்தானென்று கூறுதல் பொருந்தா தென்றவாறு.

மூன்றும் அடியில் மைந்தார் எம்பி என்ற பாடம், 45 என்னும் குறியீடுள்ள மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர் நூல் நிலைய வெளியீட்டில் மட்டும் காணப்பட்டது. எனினும், பொரு ளமைதி யுடையதா யிருத்தலிற் கொள்ளலாயிற்று. (44)

4799. அறமன் னானுட னெம்பி யன்பினோ
டுறவுன் னாவுயி ரொன்ற வோவினான்
பெறவொண் ணாததோர் பேறு பெற்றவற்
கிறவென் னுமதி னின்பம் யாவதோ.

அறம் அன்னானுடன் எம்பி அன்பினோடு
உறவு உன்னா, உயிர் ஒன்ற ஓவினான்;
பெறவொண்ணாதது ஓர் பேறு பெற்றவற்கு
இறவு என்னும்? அதின் இன்பம் யாவதோ?

பொ :—என் தம்பி (சடாயு), அன்புடன் அறக்கடவுள் போல் வானான இராமனுடன் தனக்குள்ள உறவை எண்ணி, உயிர் அவ் விராமன்பால் சென்று சேர, உடலை நீக்கினான்; அடைய முடியாத ஒப்பற்ற பேற்றினைப் பெற்ற அவனுக்குச் சாவு என்ன தீங்கு தரும்? இவ்வாறு இறப்பதினும் இன்பம் தருவது வேறு யாது?

கு :—அறம் - அறக் கடவுள், 'அறத்தின் மூர்த்தி' (1437) என்றார் முன்னும். உறவு-இராமனுக்கும் சடாயுவுக்கும் அறிவனூன் முறையால் உள்ள தொடர்பு (சம்பந்தம்). ஒன்றுதல்-சேர்தல். ஓவுதல் - நீக்குதல். இறையுலக வாழ்வினைப் பெற வொண்ணாத தோர் பேறு என்றான். இறவு-சாவு; 'பிறவினோடிறவுமானான்' (447.1) என்பது தேவாரம். (45)

## சம்பாதி, சடாயுவுக்கு நீர்க்கடன் செய்து வானர வீரரை நோக்கிக் கூறுதல்

**4800.** என்றென் றேங்கி யிரங்கி யீர்ம்புனல்
சென்றங் காடுதல் செய்து தீர்ந்தபின்
வன்றிண் டோள்வலி மாறி லாதவன்
றுன்றுந் தாரவர்க் கின்ன சொல்லினான்.

என்று என்று ஏங்கி இரங்கி ஈர்ம்புனல்
சென்று, அங்கு ஆடுதல் செய்து, தீர்ந்தபின்,
வன் திண் தோள் வலி மாறு இலாதவன்,
துன்றும் தார் அவர்க்கு இன்ன சொல்லினான்.

பொ :—இவ்வாறு பலவுங்கூறி அழுது மனங்கரைந்து, குளிர்ந்த நீரிலே சென்று முழுகிச் சடாயுவுக்கு நீர்க்கடன் செய்து முடித்தபின், வலிய திண்ணிய தோள்வலியால் ஒப்பில்லாதவனான சம்பாதி, நெருங்கிய மாலையணிந்த வானர வீரர்க்கு இவற்றைச் சொல்லுவா னாயினான்.

கு :—தோள்வலியால் மாறிலாதவன் என்க; என்றது, சம்பா தியை. தோள்வலி-தோளாற்றல்; வீரம். மாறு-ஒப்பு. (46)

**4801.** வாழ்வித் தீரெனை மைந்தர் வந்துநீ
ராழ்வித் தீரலிர் துன்ப வாழிவாய்க்
கேள்வித் தீவினை கீறி னீரிருள்
போழ்வித் தீருரை பொய்யி னீங்கினீர்.

வாழ்வித்தீர் எனை, மைந்தர்! வந்து, நீர்
ஆழ்வித்தீரலிர் துன்ப ஆழிவாய்க்
கேள்வித் தீவினை கீறினீர், இருள்
போழ்வித்தீர்; உரை பொய்யின் நீங்கினீர்.

பொ :—பொய்யினின்று நீங்கினீரும் ஆற்றலுடையீரும் ஆன வானர வீரர்களே ! நீங்கள் வந்து என்னைத் (தம்பி பிரிவு என்னும்) துன்பக் கடலுள் ஆழ்த்தினீரல்லீர் ; நூல்களால் அறியப்படும் என்னுடைய தீவினைகளை அறுத்தொழித்தீர் ; என் அறியாமையினைப் பிளந்தழித்தீர் ; என்னை வாழ்வித்தீர்.

கு :—பொய்யின் நீங்கினீர் ! மைந்தர் ! நீர் வந்து, எனைத் துன்ப ஆழிவாய் ஆழ்வித்தீரலிர் ; கேள்வித்தீவினை கீறினீர், இருள்போழ்வித்தீர் ; வாழ்வித்தீர் என இயைக்க. கேள்வித்தீவினை-நூல்களால் அறியப்படும் தீவினைகள். கேள்வி-நூல். கீறுதல்-கண்டதுண்டஞ் செய்தல். இருள் என்றது அறியாமையினை. போழ்தல் - பிளத்தல். (47)

4802. எல்லீ ரும்மவ் விராம நாமமே
சொல்லீர் சொல்ல வெனக்கோர் சோர்விலா
நல்லீ ரப்பய னண்ணு நல்லசொல்
வல்லீர் வாய்மை வளர்க்கு மாண்பினீர்.

‘எல்லீரும் அவ் இராம நாமமே
சொல்லீர் ; சொல்ல, எனக்கு ஓர் சோர்வு இலா
நல் ஈரப் பயன் நண்ணும் ; நல்ல சொல்
வல்லீர் ! வாய்மை வளர்க்கும் மாண்பினீர்’

பொ :—‘நல்ல சொற்களைச் சொல்லவல்லீர் ! உண்மை மேலும் மேலும் ஓங்க வளர்க்கும் மாண்பினையுடையீர் ! நீவிர் எல்லீரும் அந்த இராமநாமத்தினையே சொல்லுங்கள் ; (நீவிர் அதனைச்) சொல்லுதலால், எனக்கு ஒப்பற்றதும் பிழைபாடில்லாததும் அன்பின் விளைவும் ஆன பயன்கிட்டும்.’

கு :—என்றான் எனப் பின்வரும் பாடலோடு தொடர்ந்து முடிவுறும். வல்லீர் ! மாண்பினீர் ! சொல்லீர் ! சொல்ல, எனக்குப் பயன் நண்ணும் என இயைக்க. சோர்வு-பிழைபடுதல். ஈரம்-அன்பு. இராம என்னும் ஒன்றே பயன்தரவல்லது என்னுங் கருத்தால் இராம நாமமே சொல்லீர் என்றான். (48)

வானரர் இராமநாமம் சொல்லச் சம்பாதி சிறை வளர்தல்

4803. என்றா னன்னது காண்டும் யாமெனா
நின்றார் நின்றுழி நீல மேனியா

னன்ரு நாம நவின்று நல்கினர்
வன்ரே ளான்சிறை வானந் தாயவே.

என்ருன் ; 'அன்னது காண்டும் யாம்' என,
நின்ருர் நின்றுழி நீல மேனியான்
நன்று ஆம் நாமம் நவின்று நல்கினர் ;
வன் தோளான் சிறை வானம் தாயவே.

பொ :—என்று சம்பாதி கூறினன் ; அவனெதிர் நின்ற வானரர், அப்பயன் விளைதலை நாம் காண்போம் என்று தாம் நின்ற நிலையிலேயே நீலமேனியனுன இராமனுடைய, நன்மைகள் விளையும் நாமத்தைச் சொல்லி அச் சம்பாதியை அருளினராக, வலிய தோள்களையுடைய அவன் சிறகுகள் வானம் தாவி வளர்ந்தன.

கு :—நல்குதல்-அருளுதல். சிறை-இறகு. (49)

**4804.** சிறைபெற் ருன்றிகழ் கின்ற மேனியான்
முறைபெற் ருமுல கெங்கும் மூடின
னிறைபெற் ருவி நெருப்பு யிர்க்கும்வா
ளுறைபெற் ருலென லாமு றுப்பினன்.

சிறை பெற்ருன், திகழ்கின்ற மேனியான்,
முறைபெற்று ஆம் உலகு எங்கும் மூடினன் ;
நிறைபெற்று, ஆவி நெருப்பு உயிர்க்கும் வாள்
உறை பெற்ருல் எனலாம் உறுப்பினன்.

பொ :—புகையொடு நெருப்பும் தோன்ற உயிர்க்கின்ற, வாள் உறையினைப் பெற்ருல் உவமமாகச் சொல்லத்தக்க உறுப்பான மூக்கினையுடைய சம்பாதி, சிறகுகளைப் பெற்று ஒளிவிடுகின்ற உடலினையுடையனுகி, வலிமை பெற்று, முறையே வளர்ச்சியடைந்த உலகெங்கும் மறைத்தான்.

கு :—ஆவி நெருப்பு உயிர்க்கும் வாள் உறைபெற்ருல் எனலாம் உறுப்பினன், சிறைபெற்ருன், திகழ்கின்ற மேனியான், நிறைபெற்று, முறைபெற்று ஆம் உலகெங்கும் மூடினன்; என இயைக்க. ஆவி(யும்) நெருப்பு(ம்) உயிர்க்கும் உறுப்பு, வாள் உறைபெற்ருல் எனலாம் உறுப்பு என்க. ஆவி-புகை. உயிர்த்தல்-நெடுமூச்செறிதல். உறுப்பு என்றது மூக்கினை. வாயிடை யிணைந்த சம்பாதி மூக்குக்கு உறையிடையிட்ட வாள் உவமை. பெற்ருன் மேனியான் என்பவை எச்சப்

பொருளிற் பயின்றன. பெற்று-பெருக்கம்; வளர்ச்சி. நிறை-வலிமை. தன் சிறகிழந்தமையாலும், தம்பியிறந்தமையாலும் விளைந்த துயர் மிகுதியால் புகையொடு நெருப்பும் தோன்ற நெடுமூச்செறிகின்றவனாய், ஒளியிழந்து வலியழிந்து நின்ற சம்பாதி, வானரர் இராம நாமம் கூறிய அளவில், இறகுகள் வளர, ஒளியொடு வலியும் பெற்றுப் பூரித்த உடலாலும் இறகுகளாலும் உலகு முழுவதையும் மறைப்பானாயினன் என்றவாறு. (50)

## இராமநாமத்தால் சம்பாதிக்குச் சிறகு முளைக்கக் கண்ட வானரர் வியத்தல்

4805. தெருண்டான் மெய்ப்பெயர் செப்ப லோடும்வந்
துருண்டா னுற்ற பயத்தை யுன்னினர்
மருண்டார் வானவர் கோனை வாழ்த்தினர்
வெருண்டார் சிந்தை வியந்து விம்முவார்.

தெருண்டான் மெய்ப்பெயர் செப்பலோடும், வந்து
உருண்டான் உற்ற பயத்தை உன்னினர்,
மருண்டார் வானவர் கோனை வாழ்த்தினர்,
வெருண்டார் சிந்தை வியந்து விம்முவார்.

பொ :—சிறகின்மையால் தங்கள் பக்கல் உருண்டு வந்தவனான சம்பாதி, உயர்ந்தோரால் புருடோத்தமன் என்று துணியப்பட்டவனான இராமனுடைய, நற்பயன் விளைத்தலில் தவறுபடாத நாமத்தைத் தாங்கள் சொன்ன அளவில் அடைந்த பயனை நினைந்து, மனத்துள் வியந்து பூரித்த வானரர் மருட்சியும் அச்சமும் உற்றவராய்த் தேவர் தலைவனான இராமனை வாழ்த்துவராயினர்.

கு :—உன்னினர், விம்முவார், மருண்டார் வெருண்டார் வாழ்த்தினர் என முடிக்க. உருண்டான் என்பதனோடு முன், தள்ளுவன் கால் பொரத் தரணியிற்றவழ் வெள்ளியம்பெருமலை பொருவுமேனியார் (26) என்பதும் நோக்கத்தகும். பயம்-பயன். விம்முதல்-பூரித்தல்; பருத்தல். பிறப்பில் பெருந்தேவன் பிறந்தானே என்று மருட்சியும், அவனுக்கு என்ன தீங்கு நேருமோ என்று வெருட்சியும் எய்தித் தீது நேராதவாறு வாழ்த்துவாராயினர். இராமனாவதற்கு முந்திய நிலைகொண்டு, 'வானவர்கோன்' என்றார். (51)

வானரர் வேண்டச் சம்பாதி தன் முன்னை வரலாறு கூறுதல்

4806. அன்னா னைக்கடி தஞ்ச லித்துநீ
முன்னா ளுற்றது முற்று மோதெனச்
சொன்னார் சொற்றது சிந்தை தோய்வுறத்
தன்னா லுற்றது தான்வி ளம்புவான்.

அன்னானைக் கடிது அஞ்சலித்து, 'நீ
முன்னாள் உற்றது முற்றும் ஓது' எனச்
சொன்னார்; சொற்றது சிந்தை தோய்வுறத்
தன்னால் உற்றது தான் விளம்புவான்.

பொ :—(வாழ்த்திய வானரர்), அந்தச் சம்பாதியை விரைந்து வணங்கி, 'நீ முற்காலத்தில் உற்றதனை (இறகிழந்த வரலாற்றை) முழுதும் சொல்லுக' என்று கூறினர்; அவர் கூறியது மனத்திற் பதியத் தன் செயலால்தான் அடைந்ததனை அவன் கூறுவா னாயினன்.

கு :—அஞ்சலித்தல்-கைகுவித்து வணங்குதல். இறையருள் எய்தியமையால் சம்பாதியை வானரர் வணங்குவாராயினர். (52)

4807. தாயெனத் தகைய நண்பீர்
☆ சம்பாதி சடாயு வென்பேஞ்
சேயொளிச் சேண்செ னோக்கிற்
கழுகினுக் கரசு செய்வேம்
பாய்திரைப் பரவை ஞாலம்
படரிருள் பருகும் பண்பி
னாய்கதிர்க் கடவுட் டேரூ
ரருணனுக் கமைந்த மைந்தர்.

தாய் எனத் தகைய நண்பீர்! சம்பாதி சடாயு என்பேம்,
சேய் ஒளிச் சேண் செல் நோக்கின் கழுகினுக்கு அரசு செய்வேம்
பாய் திரைப் பரவை ஞாலம் படர் இருள் பருகும் பண்பின்
ஆய் கதிர்க் கடவுட்டேர் ஊர் அருணனுக்கு அமைந்த மைந்தர்.

பொ :—(சம்பாதி வானரரை நோக்கி) தலையளி செய்தலால் தாய் என்று சொல்லத்தக்க நண்பர்களே! சம்பாதி சடாயு என்னும் பெயருடைய நாங்கள், தாவுகின்ற அலைகளையுடைய கடல் சூழ்ந்த உலகிற் பரவிய இருளைப் போக்கும் இயல்புவாய்ந்த சூரியனுடைய தெய்வத்

தன்மையுள்ள தேரை ஊர்பவனுன அருணன் மக்கள்; சிவந்த ஒளியினையும், நெடுந்தூரம் நோக்கும் கண்களையும் உடைய கழுகுகளுக்கு அரசராயிருந்து முறை செய்வோம்.

கு:—நண்பீர்! சம்பாதி சடாயு என்போம், சூரியன் தேர்ப்பாகனுகிய அருணன் மக்கள். கழுகுகளுக்கு அரசராயிருந்து முறை செய்வோம் என்றவாறு. கழுகுகள் நெடுந்தூரத்திலுள்ள பொருளையும் பார்க்கவல்ல கண்ணுடையவை என்பது, 'சேய்மையினேக்குறு சிறுகணுன்றனை (2785) என்பதனுலும் அறியலாம். ஆரணியகாண்டத்துச் சடாயுகாண் படலத்துச் சடாயு கூற்றுக வந்த 'அருணன் றன்புதல்வரியாம் என்று தொடங்கும் செய்யுளும் (2810) இங்கே நோக்கத்தகும். இச்செய்யுள் முதல் 57-ஆம் செய்யுள் முடிய ஒரு தொடராய் அச்செய்யுளிலுள்ள என்ருன் என்னும் வினைகொண்டு முடிவுறும். (53)

**4808.** ஆயுய ரும்பர் நாடு
காண்டுமென் றறிவு தள்ள
மீயுயர் விசும்பி னூடு
மேக்குறச் செல்லும் வேலை
காய்கதிர்க் கடவுட் டேரைக்
கண்ணுற்றேங் கண்ணு ருமுன்
றீயையுந் தீக்குந் தெய்வச்
செங்கதிர்ச் செல்வன் சீற.

ஆய் உயர் 'உம்பர் நாடு
காண்டும்' என்று அறிவு தள்ள
மீ உயர் விசும்பின் ஊடு
மேக்கு உறச் செல்லும் வேலை,
காய் கதிர்க் கடவுள் தேரைக்
கண்ணுற்றேம்; கண்ணுருமுன்
தீயையும் தீக்கும் தெய்வச்
செங்கதிர்ச் செல்வன் சீற,

பொ:—நாங்கள் இருவரும், அந்தச் சிறந்த தேவருலகைக் காண்போமென்று அறிவு செலுத்த, மிகவுயர்ந்த வானத்தினிடையே மிக மிக மேலே செல்லும்பொழுது, வெதுப்புகின்ற கிரணங்களை யுடைய சூரியனது தெய்வத் தேரினைக் கண்டோம்; கணுமுன்,

நெருப்பையும் சுடவல்ல கடவுளாகிய செவ்விய கிரணங்களைச் செல்வமாகக் கொண்ட அவன் சீறுதலால்.

கு :—அகரச் சுட்டு நீண்டு யகரமெய் பெற்று ஆயுயரும்பர்நாடு என்றாயிற்று. சீற என்னும் எச்சம் வரும் செய்யுளில் முடுகும் வேலை என்பதனுள் முடுகும் என்பதனொடு இயையும். (54)

4809. முந்திய வெம்பி மேனி
முருங்கழன் முடுகும் வேலை
யெந்தைநீ காத்தி யென்றான்
யானிரு சிறையு மேந்தி
வந்தனென் மறைத்த லோடு
மற்றவன் மறையப் போனான்
வெந்துமெய் யிறகு தீந்து
விழுந்தனென் விளிந்தி லாதேன்.

முந்திய எம்பி மேனி
முருங்கு அழல் முடுகும் வேலை,
'எந்தை! நீ காத்தி' என்றான்;
யான் இரு சிறையும் ஏந்தி
வந்தனென், மறைத்தலோடும்
மற்று அவன் மறையப் போனான்
வெந்து மெய் இறகு தீந்து
விழுந்தனென் விளிந்தி லாதேன்.

பொ :—முன்னே சென்ற என் தம்பியான சடாயுவின் உடலில் தகிக்கின்ற (சூரிய வெப்பமாகிய) நெருப்புத் தாக்கி யழிக்க விரைந்த போது, அவன் (என்னை நோக்கி) 'எந்தாய்! காத்தி' என்று கூறினன்; யான் என் இரண்டு சிறகுகளையும் (குடையாக விரித்துத்) தாங்கி வந்து, சூரிய வெப்பம் அவன்மீது தாக்காதவாறு மறைத்த அளவில், அவன், (என் சிறை நிழலில் தன்னுடல்) மறைய (ஊறு படாது) சென்றான்; யான் (சூரிய வெப்பத்தால்) மெய்யும் இறகும் வெந்து கரிந்தும் சாகாதவனாய் (நிலத்தில்) விழுந்தேன்.

கு :—முருங்குதல் - தகித்தல். முடுகுதல் - விரைதல். தமையன் தந்தைபோல் மதிக்கத்தக்கானாதலின் 'எந்தை' என்றான். மற்று அசை. தீந்தும் என உம்மை விரிக்க. விளிதல் - சாதல். (55)

4810. மண்ணிடை விழுந்த வென்னை
வானிடை வயங்கும் வள்ளல்
கண்ணிடை நோக்கி யுற்ற
கருணையன் சனகன் காதற்
பெண்ணிடை யீட்டின் வந்த
வானர ரிராமன் பேரை
யெண்ணிடை வுற்ற காலத்
திறகுபெற் றெழுதி யென்றான்.

மண்ணிடை விழுந்த என்னை
வானிடை வயங்கும் வள்ளல்
கண்ணிடை நோக்கி உற்ற
கருணையன், 'சனகன் காதல்
பெண் இடை யீட்டின் வந்த
வானரர், இராமன் பேரை
எண் இடை உற்ற காலத்து,
இறகு பெற்று எழுதி' என்றான்.

பொ :—நிலத்தில் விழுந்த என்னை, ஆகாயத்தில் விளங்குகின்ற வள்ளியோனான சூரியன் தன் கண்ணால் நோக்கி, மிக்க கருணையுடையனாய்ச் 'சனக மன்னனுடைய அன்புக்குரிய மகளான சீதையின் இடையூறு காரணமாக (அவளைத் தேடி) வந்த வானரர்கள் இராமனுடைய பெயரை எண்ணுத (உருச்சொல்லுத)லாகிய ஏது நிகழ்ந்தபோது, நின் சிறகுகள் முளைக்கப்பெற்று எழுவாய்' என்று கூறினான்.

கு :—வானிடை வயங்கும் வள்ளல் என்றது சூரியனை. சூரியவொளியால் எல்லா உயிர்களும் செழித்து வளர்தலின் அவனை 'வள்ளல்' என்றார். கண்ணிடை, எண்ணிடை என்பவற்றில் இடை என்பது ஏது என்னும் பொருள் தந்தது. இடையீடு - இடையூறு. சீதைக்கு நேர்ந்த இடையூறுவது, இராவணனாற் கவரப்பட்டமை. எண்ணுதல் என்பது முதனிலை மாத்திரமாய் நின்று உருச் சொல்லுதல் 'பலமுறை சொல்லுதல்' என்னும் பொருள் தந்தது. (56)

இச் செய்யுளின் பின் 2, 4, 20, 23, 24, 41, 43, 45-47, 49, 53, 58, 59-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைச் செய்யுட்கள் காணப்படுகின்றன. அவை கம்பர் பாடலின் அமைதியுடையனவாயில்லை; அன்றியும் அவை பழைய திருந்திய சுவடிகளில் இல்லை. வான்மீகத்தும் திசாகரர் செய்தி கூறும் பகுதி இடைச்செருகல் என்று கருதப்

படுகிறது. ஆதலின் மூலத்தோடு சேர்க்காமல் இங்கே காட்டப் பட்டன.

**4810. (a)** தாழ்ந்தமா தவத்துலோக
சாரங்க னுறையுஞ் சாரல்
வீழ்ந்தனென் சிறைகடீய
வெவ்வுயிர்த் துளமு மெய்யும்
போழ்ந்தன துன்பமூன்ற
வுயிர்ப்பொறை போற்றகில்லா
தாழ்ந்தனெ னாழ்ந்த வென்னை
யருந்தவ னெதிர்ந்து தேற்றி.

**4810. (b)** கற்றிலர் போல வுள்ளக்
களிப்பினு லமரர் காப்பூ
டுற்றிடக் கருதி மீப்போ
யாதபத் துனது மேனி
முற்றழன் முருங்க மண்ணை
முயங்கினை யினியென் சின்னாள்
மற்றுநின் னுயிரை யோம்பா
திகழ்வது மாலைத் தன்றால்.

**4810. (c)** களித்தவர் கெடுத நிண்ணஞ்
சனகியைக் கபடன் வெளவி
ஒளித்தவாய் துருவி யுற்ற
வானர ரிராம நாமம்
விளித்திடச் சிறைவந் தோங்கும்
வெவ்வுயிர்த் தயர லென்றன்
றளித்தன னதனு லாவி
யாற்றினே னற்றன் மொய்ம்பீர்!

**4810. (d)** அன்றியு மலருள் வைகு
மயனைநேர் முனிவன் வாய்மை
நன்றிகொ ளீசற் காண்பா
னணுகலும் வினையே னுற்ற
தொன்றெழி வுருமற் கேட்ட
தியோகத்தி னுணர்ச்சி பேணிப்
பொன்றுத லொழிமின் யானே
புகல்வது கேண்மி னென்றான்.

4810. (e) தசரத ராமன் றேவர்
தவத்தினுற் ருய்சொற் ருங்கிக்
கசரத துரக மின்றிக்
கானிடை யிறுத்த காலை
வசைதரு மிலங்கை வேந்தன்
வௌவிய திருவை நாடித்
திசைதிரி கவிக ளுற்ருற்
சிறகுபெற் றெழுதி யென்ன.*

20, 24-ஆம் பிரதிகளில் 'தாழ்ந்த மாதவத்து' (4810) என்னும் மிகைச் செய்யுளின் பின்,

4810. (f) பறவையின் றலைவன் வெய்ய
பானுவின் கதிர்கள் பாத்த
விறகுவெந் துருகி வீழ
விடருற விராமன் றேவி
நறைகுழற் சீதை தன்னை
நாடுனர் நின்பால் நண்ணி
இறைவனுர் நாம மேத்த
விறகுபெற் றெழுதி யென்ருன்.

4810. (g) அன்றியுந் தவத்தோர் கோமா
னகத்திய னென்பா னண்ணி
வென்றிசே ரிராம நாமம்
வானரம் விளம்ப மிக்குத்
துன்றிருஞ் சிறைக டோன்றும்
துயருற லென்னச் சொன்னுன்
அன்றியும் நெறிதின் றீர்நா
னின்னிலும் நவில்வ னம்மா.

என்னும் பாடல்களும் காணப்படுகின்றன.

4811. எம்பியு மிடரின் வீழ்ந்தா
னேயது மறுக்க வஞ்சி
யம்பரத் தியங்கும் யாணர்க்
கழுகினுக் கரச னுனன்

---

* இச்செய்யுள் மட்டும் 53-ல் நான்முகத் தொருவன் என்று தொடங்கும் 61-ஆம் பாடலின் பின் காணப்படுகிறது.

நம்பிமீ ரீதெந் தன்மை
நீரிவ ணடந்த வாற்றை
யும்பரு முவக்கத் தக்கீ
ருணர்த்துமி னுணர வென்ருன்.

'எம்பியும் இடரின் வீழ்ந்தான்,
ஏயது மறுக்க அஞ்சி
அம்பரத்து இயங்கும் யாணர்க்
கழுகினுக்கு அரசன் ஆனுன்;
நம்பிமீர்! ஈது எம் தன்மை;
நீர் இவண் நடந்த வாற்றை
உம்பரும் உவக்கத் தக்கீர்!
உணர்த்துமின் உணர' என்ருன்.

பொ :—'ஆடவருட் சிறந்தோரே! தேவரும் விரும்பத்தக்க பெருமையுடையோரே! (என்னிலே நோக்கித்) துன்பக் கடலுள் விழுந்தவனுன என் தம்பியும் (சடாயுவும்) நான் ஏவிய பணியை மறுக்க அஞ்சி, வானில் சஞ்சரிக்கும் இயல்புடைய கழுகுகளுக்கு அரசனுனன்; இதுவே எங்கள் நிலைமை (வரலாறு); நீங்கள் இங்கு வந்த வரலாற்றையும் யானறியத் தெரிவிப்பீராக' என்ருன்.

கு :—ஏயது - ஏவியது. அம்பரம் - ஆகாயம். (57)

### வானரர் சீதையைத் தேடிவந்தமை சொல்லச் சம்பாதி கூறுதல்

4812. என்றலு மிராமன் றன்னை
யேத்தின ரிறைஞ்சி யெந்தாய்
புன்ரெழி லரக்கன் மற்றத்
தேவியைக் கொண்டு போந்தான்
றென்றிசை யென்ன வுன்னித்
தேடிநாம் வருது மென்ருர்
நன்றுநீர் வருந்தல் வேண்டா
நானது நவில்வ னென்ருன்.

என்றலும், இராமன் றன்னை
ஏத்தினர் இறைஞ்சி, ' "எந்தாய்!
புன் தொழில் அரக்கன், மற்று அத்
தேவியைக் கொண்டு போந்தான்,
தென் திசை" என்ன உன்னித்
தேடி நாம் வருதும்' என்றார்;
'நன்று; நீர் வருந்தல் வேண்டா;
நான் அது நவில்வன்' என்றான்.

பொ:—என்று சம்பாதி கூறுதலும், (வானரவீரர்) இராமனைத் திசை நோக்கித் துதித்து வணங்கி, (அவனை நோக்கி,) 'எங்கள் தந்தை போல்வானே! இழிதொழிலர்ளுன இராவணன் அச்சீதா பிராட்டியைத் தென்றிசையிற் கொண்டு சென்றான் என்று நினைந்து நாங்கள் தேடிவந்தோம்;' என்று கூறினர்; (அது கேட்ட சம்பாதி) நல்லது; நீவிர் வருந்த வேண்டா? நான், அச் சீதாபிராட்டி செய்தி சொல்லுவேன்' என்று கூறுவானுயினான்.

கு:—சம்பாதியின் இறகு மீண்டும் முளைத்தமையால் இராம நாமத்தின் பெருமையினைக் கண்கூடாகக் கண்ட வானரர் தாம் வந்த காரியம் முற்றுதற்கு அப்பெயரால் சுட்டப்படும் தலைவனையே திசை நோக்கி வணங்குவாராயினர். பிறன்மனை நயந்தவனாதலின், 'புன்றொழில் அரக்கன்' என்றார். (58)

20-ஆம் பிரதியில் இச்செய்யுளின்பின், பின்வரும் இரண்டு மிகைச் செய்யுட்கள் காணப்படுகின்றன.

4812 (a) என்மகன் சுபர்ணன் முன்னு
ளெனக்கிரை குணர வேகிப்
பொன்மதி ளிலங்கை வாயிற்
கோபுரத் தும்பர்ப் பொங்கா
சின்மொழிக்...கொண்டே
யிராவணன் சேரத் தத்திப்
புன்மையா யணங்கை விட்டுப்
போதெனப் புகன்று நக்கான்.

4812 (b) புக்கபி னும்பர் போகு
மரக்கனைப் பொருந்தப் பற்றித்
தக்கவன் றந்தைக் கீய்வன்
திறையெனக் கொண்டு சாற்ற

வக்கணத் தரக்கன் புல்லைக்
கவ்விவந் தடியின் வீழ்ந்தான்
எக்குள மிரங்கி மீள
விம்மொழி வந்து நேர்ந்தான்.

1, 23, 24, 26, 40. 41, 43-45, 49, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் நான்கு மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன.

4812 (c) எனக்குண வியற்றுங் காத
லென்மகன் சுபார்சு பன்போய்ச்
சினக்கொலை யரக்கன் மூதூர்
வடதிசை சென்று செல்வின்
நினைக்குமு னிரும்போர் செய்து
நீசனை நோக்கி யெந்தை
தனக்கிரை யெய்திற் றென்னச்
சிறகினுற் றகைந்து கொண்டான்.

4812 (d) காமத்தா னெய்தப் பட்டு
கனங்குழை தன்னைக் கொண்டு
போமத்தார் போக லெந்தை
தன்பசிக் கமைந்தா யென்று
தாமத்தார் மௌலி மைந்தன்
தடுத்திடை விலக்க நீச
நாமத்தான் விரலைக் கவ்வ
நாணிமீண் டெனக்குச் சொன்னன்.

4812 (e) முன்னர ணிசாகர முனிமொ ழிந்ததும்
பின்னையச் சுபார்ச்சுபன் பெலத்தி ராவணன்
தன்னெடு மமர்பொரச் சமைந்து நின்றதும்
கொன்னியல் சனகியைக் கொண்டு போவதும்.

4812 (f) நினைந்துசம் பாதியு நீதி யாவையு
மினைந்தனன் வானர ரெவருங் கேட்கவே
நினைந்துகண் ணீர்விழ நெடிது யிர்த்தனர்
வினைந்தனர் புரண்டனர் விதியை நொந்தனர்.

**4813.** பாகொன்று குதலை யாளைப்
பாதக வரக்கன் பற்றிப்
போகின்ற பொழுது கண்டேன்
புக்கன னிலங்கை புக்கு

வேகின்ற வுள்ளத் தாளை
வெஞ்சிறை யகத்து வைத்தா
னேகுமின் காண்டி ராங்கே
யிருந்தன ளிறைவி யின்னும்.

பாகு ஒன்று குதலை யாளைப்
பாதக அரக்கன், பற்றிப்
போகின்ற பொழுது கண்டேன்;
புக்கனன் இலங்கை, புக்கு
வேகின்ற உள்ளத்தாளை
வெம் சிறை யகத்து வைத்தான்;
ஏகுமின், காண்டிர்; ஆங்கே
இருந்தனள் இறைவி இன்னும்.

பொ ;—பாகுபோலும் இனிய மழலை மொழியினளான சீதாதேவியைப் பாவியான இராவணன் கவர்ந்து சென்றபோது நான் பார்த்தேன்; இலங்கையிலே புகுந்தான்; புகுந்து கொதிக்கின்ற மனத்தினளான அத்தேவியைக் கொடிய காவலுள் வைத்தான்; தலைவியான அவள் இன்னும் அங்கே உள்ளாள்; காண்பீர்; செல்லுமின்.

கு :—இச்செய்யுளும் பின் வரும் செய்யுளும் ஒரு தொடர். வருஞ் செய்யுளில் என்றான் என்பது கொண்டு முடிவுறும். குதலை-மழலை. பாதகம்-பாவம். பிறன்கடை நின்றானாதலின் பாதகவரக்கன் என்றான்; அடுத்துவரும் பாடலுள் இராவணனை நீசன் என்பதும் இக் கருத்தால். (59)

**4814.** ஓசனை யொருநா றுண்டா
லொலிகட லிலங்கை யவ்வூர்
பாசவெங் கரத்துக் கூற்றுங்
கட்புலம் பரப்ப வஞ்சு
நீசனவ் வரக்கன் சீற்ற
நெருப்புக்கு நெருப்பு நீங்க
ளேசறு குணத்தீர் சேற
லெப்பரி சியைவ தென்றான்.

ஓசனை ஒரு நூறு உண்டால்
ஒலி கடல் இலங்கை அவ்வூர்,
பாச வெம் கரத்துக் கூற்றும்
கட்புலம் பரப்ப அஞ்சும்;
நீசன் அவ் அரக்கன் சீற்றம்
நெருப்புக்கும் நெருப்பு; நீங்கள்
ஏசறு குணத்தீர்! சேறல்
எப் பரிசு இயைவது? என்றான்.

பொ:—குற்றமற்ற குணங்களையுடையீர்! ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட இலங்கையாகிய அவ்வூர், இங்கிருந்து ஒரு நூறு யோசனை தூரத்தில் உள்ளது; பாசம் என்னும் ஆயுதத்தைக் கொண்ட கையினையுடைய யமனும் அவ்வூரை நோக்க அஞ்சுவான். இழிந்தோனாகிய அவ்விராவணனுடைய சினம் நெருப்பையும் சுடும் நெருப்பாகும். நீங்கள் அவ்விலங்கையை அடைதல் எவ்விதம் இயலும்; என்று கூறினன்.

கு:—ஏசுதல் என்பது ஏசு என முதனிலை மாத்திரமாய் நின்றது. ஏசுதல்-பழித்தல். கூற்று-யமன். உம்மை உயர்வுசிறப்பு. கட்புலம் பரப்பல்-நோக்குதல். சேறல்-சேர்தல். பரிசு-விதம். சேறல் எப்பரிசியைவது என்பது, செல்ல முடியாதென்று அறுதியிடாமல், செல்லல் அரிதென்று சுட்டியவாறு. எல்லாரும் சேறல் இயலாது என்றதும் ஆம். இரண்டாம் அடியுடன், பின் 'மறலி மறம்புகாது' (சுந்தர. 118.) என்பதும் நோக்கத்தகும். (60)

**4315** நான்முகத் தொருவன் மற்றை
நாரியோர் பாகத் தண்ணல்
பான்முகப் பரவைப் பள்ளிப்
பாம்பணைப் பரனென் றாலுங்
காலினுக் கேயுஞ் சேற
லரிதிது காவற் றன்மை
மேலுமக் குறுவ தெண்ணிச்
செல்லுமின் விளிவி லாதீர்.

நால் முகத்து ஒருவன் மற்றை
நாரி ஓர் பாகத்து அண்ணல்
பால் முகப் பரவைப் பள்ளிப்
பாம்பணைப் பரன் என்றாலும்,

காலினுக் கேயும் சேறல்
அரிது; இது காவல் தன்மை
மேல் உமக்கு உறுவது எண்ணிச்
செல்லுமின் விளிவு இலாதீர்.

பொ :—கெடாத (வளர்ச்சியடையும்) வாழ்நாளுடையீர்! நான்கு முகங்களையுடைய ஒப்பற்றவனான பிரமனும், உமாதேவியை ஒரு பாகத்தே யுடைய பெருமையிற் சிறந்தோனான சிவபிரானும், பாலைத் தன்னிடம் கொண்ட கடலில் பாம்பணையில் துயிலும் மேலோனாகிய திருமாலும் ஆகிய தேவர் மூவராயினும், காற்றானாலும் உட்புகல் இயலாது; இது, இலங்கை மாநகரின் காவலமைதி; இனி நுமக்குத் தக்கதை ஆராய்ந்து கொண்டு செல்லுங்கள்.

கு :—நாரி-பெண்; உமாதேவி. அண்ணல்-பெருமையிற் சிறந்தோன். பரவை-கடல். பான்முகப்பரவை-பாற்கடல். பாம்பணைப் பள்ளிப்பரன் என்க. பள்ளி-துயில். என்றாலும் என்பதனை ஒருவன், அண்ணல், பரன் என்பவற்றோடு தனித்தனி கூட்டி, நான்முகத் தொருவன் என்றாலும் நாரியோர் பாகத்தண்ணல் என்றாலும் பரவைப் பாம்பணைப் பள்ளிப்பரனென்றாலும் என்றியைத்தலுமாம். காலன்- யமன். உறுவது-தக்கது; மேலுமக்குறுவது என்பதற்கு இனி உமக்கு வரற்பாலதாகிய நன்மை என்று பொருளுரைத்தலும் ஆம். (61)

**4816.** எல்லீருஞ் சேற லென்ப
தெளிதன்றவ் விலங்கை மூதூர்
வல்லீரே லொருவ ரேகி
மறைந்தவ ணொழுகி வாய்மைச்
சொல்லீரே துயரை நீக்கித்
தோகையைத் தெருட்டி மீடி
ரல்லீரே லென்சொற் றேறி
யுணர்த்துமி னழகற் கம்மா.

எல்லீரும் சேறல் என்பது
எளிதன்று அவ் இலங்கை மூதூர்
வல்லீரேல் ஒருவர் ஏகி,
மறைந்து அவண் ஒழுகி, வாய்மைச்

சொல்லீரே! துயரை நீக்கித்
தோகையைத் தெருட்டி, மீடிர்;
அல்லீரேல், என் சொல் தேறி
உணர்த்துமின் அழகற்கு அம்மா.

பொ:—தவறுபடாத சொற்களையுடையீர்! பழையதாகிய அவ் விலங்கை நகரை நீவிர் எல்லீரும் அடைவதென்பது எளிதில் நிகழக் கூடியதன்று; ஆற்றலுடையீரேல் ஒருவர் சென்று அங்கு மறைந்து சஞ்சரித்து, மயில் போல்பவளான சீதாதேவியின் துயரை நீக்கித் தெளிவித்துத் திரும்புதிர்; ஆற்றலற்றவராயின் என் சொல்லைப் பிழையற்ற தென்று தெளிந்து அழகனாகிய இராமனுக்குச் சொல்லுமின்.

கு:—உணர்த்துமின், நல்லது புரிமின் என்று விசையிற் சென்றான் என அடுத்துவரும் பாடலுடன் இணைந்து முடியும். தேறி-தெளிந்து. அழகன் என்றது இராமனை. வாய்மை சொல்லீரே என்று பாடம் கொண்டு, இராமன் நிலையினை உள்ளவாறு சொல்லுமின் என்று பொருள் கொள்ளலும் ஆம். (62)

**4817.** காக்குந ரின்மை யாலக்
கழுகின முழுதுங் கன்றிச்
சேக்கைவிட் டிரியல் போகித்
தெருமரு மதனைத் தீர்க்கப்
போக்கெனக் கடுத்த நண்பீர்!
நல்லது புரிமி னென்று
மேக்குற விசையிற் சென்றான்
சிறையினால் விசும்பு போர்ப்பான்.

**'காக்குநர் இன்மையால் அக்**
**கழுகினம் முழுதும் கன்றிச்**
**சேக்கை விட்டு இரியல் போகித்**
**தெருமரும்; அதனைத் தீர்க்கப்**
**போக்கு எனக்கு அடுத்த; நண்பீர்!**
**நல்லது புரிமின்;' என்று**
**மேக்குஉற விசையின் சென்றான்;**
**சிறையினால் விசும்பு போர்ப்பான்.**

பொ :—'சிறகுகளால் ஆகாயத்தை மறைப்பவனுன சம்பாதி, நண்பர்களே ! காப்போர் இல்லாமையால் அந்தக் கழுகின் வகைக ளெல்லாம் வருந்திக் கூடுகளை விட்டு அஞ்சியோடிக் கலக்கமடையும் ; அதைத் தவிர்க்கச் செல்லுதல் எனக்குத் தவிர்க்க முடியாததாக நேர்ந்தது ; நான் கூறியவற்றுள் நல்ல(தென்று நீங்கள் கருதுவ) தனைச் செய்யுங்கள்' என்று விசும்பில் மிகவும் விரைந்து சென்றுன்.

கு :—'சிறையினுல் விசும்பு போர்ப்பான், நண்பீர்! எனக்குப் போக்கு அடுத்தது ; நல்லது புரிமின்' என்ன விசையிற் சென்றுன் என இயைக்க. சடாயு இறந்தமை நினைந்து காக்குநர் இன்மையால் என்றுன். அக்கழுகினம் என்றது, இதுவரை சடாயுவின் ஆட்சியில் இடரிலாது வாழ்ந்த அக்கழுகினம் என்றவாறு, கன்றுதல் - வருந்து தல். சேக்கை - கூடு. இரியல் போதல் - அஞ்சி ஓடுதல். தெருமரல்- கலக்கம். அடுத்தது என்பது ஈறு கெட்டு அடுத்த என நின்றது. மேக்கு - மேல். (63)

சம்பாதிப் படலம் முற்றிற்று

# 16. மயேந்திரப் படலம்

இது மயேந்திர மலையை யடைந்த வானர வீரர்களின் செயல்களைக் கூறும் பகுதியாதலின், இப்பெயர் பெற்றது. சம்பாதியால் இலங்கையில் சீதை இருப்பதை யறிந்த வானரர்கள், கடலைக் கடப்பது யார் என்று கலங்குவதும், சாம்பவான் அனுமன் ஆற்றல்களைக் கூறி அவனே செல்ல வேண்டும் என்று வேண்டுவதும், அதற்கிணங்கிய அனுமன் மயேந்திர மலையின் உச்சியை யடைந்து பேருருவங் கொண்டு கடலைக் கடக்க முற்படுவதும், அவன் தாவும் முன்னரே அவன் நிழல் கடலைத் தாவி இலங்கைமேற் படர்வதும் ஆகிய செய்திகள் இப்படலத்திற் கூறப்பட்டுள்ளன. சில ஏட்டுச் சுவடிகளில் இது மகேந்திரப் படலம் என்றும் எழுதப்பட்டுள்ளது.

சில பிரதிகளில் இப்படலத்தின் இரண்டு மூன்றும் செய்யுள்கள் முன் பின்னாக மாறிக் காணப்படுகின்றன. மற்றும் சில பிரதிகளில் 'சூரியன்' என்பது முதற்செய்யுளாகவும், 'பொய்யுரை' என்பது ஆறுஞ் செய்யுளாகவும் உள்ளன. அன்றியும் முதற்பத்துச் செய்யுட்கள் ஒரு முறையிலன்றி வெவ்வேறு பிரதிகளில் வெவ்வேறாக மாறி மாறியுள்ளன.

வான்மீகம், கிஷ்கிந்தா காண்டம் 61-ஆவது ஸர்க்கம் முதல் 67-ஆவது ஸர்க்கம் முடியக் கூறப்படும் செய்திகள் இம் மயேந்திரப் படலத்திற் காணப்படுகின்றன. வான்மீகத்தில் சாம்பவன் அனுமானின் பிறப்பு வளர்ப்பை விரிவாக எடுத்துக் கூறுகிறான். கம்பர் அதைக் கூறாது விடுத்தார். மற்றப்படி யாதொரு வேறுபாடும் சொல்வதற்கில்லை.

# 16. மயேந்திரப் படலம்

4818. பொய்யுரை செய்யான் புள்ளரச
☆ சென்றே புகலுற்றார்
கையுறை நெல்லித் தன்மையி
னெல்லாங் கரைகண்டாம்
உய்யுரை பெற்றா நல்லவை
யெல்லா முறவெண்ணிச்
செய்யுமி னொன்றோ செய்வதை
நொய்திற் செயவல்லீர்.

'பொய் உரை செய்யான் புள் அரசு' என்றே புகலுற்றார்,
'கை உறை நெல்லித் தன்மையின் எல்லாம் கரை கண்டாம்,
உய் உரை பெற்றாம், நல்லவை எல்லாம் உற எண்ணிச்
செய்யுமின் ஒன்று ஓ, செய்வதை நொய்தின் செயவல்லீர்.'

பொ :—(சில வானர வீரர்கள்) 'கழுகுகட்கரசனாகிய சம்பாதி பொய் சொல்ல மாட்டான்' என்று உறுதியாக நினைத்து (மற்றை வானரரை நோக்கி) 'செய்வதை விரைவிற் செய்து முடிக்க வல்லவர்களே! (சம்பாதி கூறியவைகளால்) அங்கையிற்கொண்ட நெல்லிக் கனிபோல எல்லாவற்றையும் நன்றாகத் தெரிந்து கொண்டோம், (அதனால்) நாம் உயிர் பிழைத்தற்குரிய சொல்லைப் பெற்றவரானோம்; நாம் செய்தற்குரியவை முழுவதையும் நன்றாக ஆராய்ந்து (ஏதாவது) ஒன்றைச் செய்யுங்கள்.'

கு :—இது முதல் மூன்று பாடல்கள் ஒரு தொடர். சில வானர வீரர் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது, (1)

இதன் முன், தொடக்கத்தில், 12 என்னும் குறியீடுள்ள சுவடியில் அடியிற் காணும் பாடல் மிகையாகவுள்ளது :—

4817 (a) புள்ளரசின்ன வாய்மை சொல்லிவிண் போந்தபின்னர்
தெள்ளிதினுணர்ந்தாரியாரும் அங்கது சாம்பன் சிந்தித்
துள்ளவர் தன்னில் வல்லார் யாரென வுன்னியாண்டும்
தள்ளரும் புகழோன் வாயுத் தனயனை நோக்கிச் செப்பும்.

45 என்னும் குறியீடுள்ள புத்தகத்தில், இப்படலத்தின் முதற் பாடலாக அடியிற் காணும் மிகைப் பாடல் வந்துள்ளதாகக் குறிக்கப் பெற்றுள்ளது :—

4817 (b) ஆயவ னங்குப் போகிய பின்ன ரகமீதே
நோயுறு தன்மைத் தாகிய வீரர் தமைநோக்கித்
தூய மனத்த ளுகிய வாலி தருதொன்மைச்
சேயு மவர்க்கே செப்பின ளுடுஞ் செயலோர்வான்.

4819. மாள வலித்தே மென்றுமிம்
மாளா வசையோடு
மீளவு முற்றே மன்னவை
தீரும் வெளிபெற்றேம்
காள நிறத்தோ டொப்பவர்
மாயக் கடருவுற்
ருளு நலத்தீ ராளுமி
னெம்மா ருயிரம்மா.

'மாள வலித்தேம்; என்றும் இம் மாளா வசையோடும்
மீளவும் உற்றேம்; அன்னவை தீரும் வெளி பெற்றேம்;
காள நிறத்தோடு ஒப்பவர் மாயக் கடல் தாவுற்று
ஆளும் நலத்தீர்! ஆளுமின் எம் ஆர் உயிர் அம்மா!'

பொ:—'(குறித்த நாள் எல்லை கடந்ததால் முதலில்) இறக்கத் துணிந்தோம்; (பிறகு) எப்போதும் அழியாத இந்தப் பழியுடனே மீண்டு செல்லவும் துணிந்தோம்; (இப்பொழுது சாதலும் திரும்பிப் போதலுமாகிய) அவ்விரண்டும் நீங்கும்படியான ஒரு நல்ல வழியை அடைந்துள்ளோம்; நஞ்சின் நிறம்போற் கரியவரான அரக்கர்கள் அழியும்படி (இக்) கடலைக் கடந்து காக்கவல்ல சிறப்புடையவர்களே! (அவ்வாறு செய்து) எமது அருமையான உயிரைக் காத்தருள்வீராக.' (2)

4820. சூரியன் வெற்றிக் காதல
னேடுஞ் சுடர்விற்கை
ஆரிய னைச்சென் றேதொழு
துற்ற தறைகிற்பின்
சீரிய தன்று தேருதல்
கொற்றச் செயலம்மா
வாரிக டப்பார் யாவ
ரெனத்தம் வலிசொல்வார்.

'சூரியன் வெற்றிக் காதலனோடும் சுடர்விற்கை
ஆரியனைச் சென்றே தொழுது; உற்றது அறைகிற்பின்
சீரியது அன்று; தேருதல் கொற்றச் செயல் அம்மா!
வாரி கடப்போர் யாவர்?' எனத் தம் வலி சொல்வார்.

பொ:—'சூரியனுடைய மகனாகிய வெற்றி பொருந்திய சுக்கிரீவனிடமும் ஒளி வீசுகின்ற வில்லேந்திய கையையுடைய சிறந்தவனாகிய இராமனிடமும் போய் வணங்கி (இங்கு) நிகழ்ந்ததைக் கூறுவதாயிருந்தால் (அது) சிறப்புடையதாகாது; (ஆனால் சீதையைத்) தேடுதல் வீரச் செயலாகும்; கடலைக் கடக்கின்ற வல்லமையுள்ளவர் (நம்முள்) எவர்?' என்று சொல்லவும், (ஒவ்வொருவரும் தத்தம்) வலிமை (இத்தகையது என்பதை) எடுத்துச் சொல்வாராயினர்.

கு:—காதலன் - மகன். தாம் ஏற்றுக்கொண்ட பணியை முற்றுவிக்காமல் சுக்கிரீவனிடமும் இராமனிடமும் மீளுதல் சிறக்காது என்று சிலர் வற்புறுத்திக் கூறினர் என்றவாறு. (3)

4821. வேத மனைத்துந் தேர்தர
வெட்டா வொருமெய்யன்
பூதல முற்று மோரடி
வைத்துப் பொலிபோழ்தியான்
மாதிர மெட்டுஞ் சூழ்பறை
வைத்தே வரமேரு
மோத விளைத்தே தாளுலை
வுற்றேன் விறன்மொய்ம்பீர்.

'வேதம் அனைத்தும் தேர்தர எட்டா ஒரு மெய்யன்
பூதலம் முற்றும் ஓர் அடி வைத்துப் பொலிபோழ்து, யான்
மாதிரம் எட்டும் சூழ் பறை வைத்தே வர, மேரு
மோத இளைத்தே தாள் உலைவு உற்றேன் விறல்மொய்ம்பீர்!'

பொ:—('நாலுமுகத்தான் உதவுற்றான்' ஆகிய சாம்பவன் மற்ற வானரர்களை நோக்கி) 'வலிய தோள்களையுடையீர்! வேதங்கள் யாவும் தேடிக்காண எட்டாத (அகப்படாத) ஒப்பற்ற உருவை உடையவனாகிய திருமால் (திரிவிக்கிரமாவதாரஞ் செய்து) பூமி முழுவதையும் ஓர் அடியால் அளந்து விளங்கின காலத்தில், யான் எட்டுத் திக்குகளிலும் வலமாகப் (பெருமாள் உலகளக்கும்

செய்தியைப்) பறையடித்துக் கொண்டு வருகையில், மேருமலை யானது, காலில் இடித்ததனால் வலி குன்றிக் கால் வருந்தினேன்.'

கு :—இதுவும் அடுத்துவரும் செய்யுளும் ஒரு தொடர். இவ்விரு செய்யுளுக்கும் அடுத்துவரும் செய்யுளின் ஈற்றடியிலுள்ள 'நாலு முகத்தான் உதவுற்றான்' எழுவாய். திருமால் மகாபலியின் முன் பேருருவங்கொண்டு, ஓரடியால் பூமியின் மேற்பரப்பையெல்லாம் அளந்து, மற்றோரடியால் ஆகாயமுற்றவும் அளந்த காலத்தில், சாம்பவன் வலமாகச் சுற்றித் திருவடியைத் தரிசித்துக் கொண்டே எட்டுத் திசையும் இச்செய்தியைப் பறைசாற்றி வந்ததாகவும், அப்பொழுது அவன் வருந்தும்படி கால் மேருமலையில் இடித்து ஊனமானதால், இப்பொழுது கடல்தாண்ட இயலாமல் போய் விட்டது என்றும் கூறினான் என்க. (4)

4822. ஆதலி னிப்பே ரார்கலி
குப்புற் றகழிஞ்சி
மீது கடந்தத் தீயவ
ருட்கும் வினையோடும்
சீதை தனைத்தேர்ந் திங்குடன்
மீளுந் திறனின்றென்
றோதி யிறுத்தா னாலு
முகத்தா னுதவுற்றான்.

'ஆதலின், இப்பேர் ஆர்கலி
குப்புற்று, அகழ் இஞ்சி
மீது கடந்து, அத் தீயவர்
உட்கும் வினையோடும்
சீதை தனைத் தேர்ந்து, இங்கு
உடன் மீளும் திறன் இன்று' என்று
ஓதி இறுத்தான், நாலு
முகத்தான் உதவுற்றான்.

பொ :—'ஆதலினால், இந்தப் பெரிய கடலின் மீது எழும்பித் தாவி, (இலங்கையின்) அகழியைச் சார்ந்த மதில்களின் மீது குதித்து (உட்புகுந்து) கொடியவராகிய அரக்கர்கள் அஞ்சத்தக்க செயலுடனே சீதையைத் தேடிக்கண்டு உடனே திரும்பும் திறமை (எனக்கு) இல்லை' என்று நான்முகக் கடவுள் அருளியவனாகிய சாம்பவன் சொல்லி முடித்தான்.

கு :—சாம்பவன் பிரமாவின் மகனுதலால் 'நாலுமுகத்தரன் உதவுற்ருன்' என்னப்பட்டான். அகழிஞ்சி - அகழியால் சூழப்பட்ட மதில். (5)

4823. நீலன் முதற்பேர் போர்கெழு
 கொற்ற நெடுவீரர்
சால வுரைத்தார் வாரி
 கடக்குந் தகவின்மை
வேலே கடப்பென் மீள
 மிடுக்கின் றெனவிட்டான்
வாலி யளிக்கும் வீர
 வயப்போர் வசையில்லான்.

நீலன் முதல் பேர் போர்கெழு கொற்ற நெடுவீரர்
சால உரைத்தார், வாரி கடக்கும் தகவு இன்மை;
'வேலே கடப்பென், மீளமிடுக்கு இன்று' என விட்டான்,
வாலி அளிக்கும் வீர வயப்போர் வசை இல்லான்.

பொ :—போரில் மிக்க வெற்றி அடைதற்கு உரிய நீலன் முதலாகிய பெரிய சிறந்த வானர வீரர்கள் கடலேத் தாண்டிச் செல்லும் வலிமை தமக்கு இல்லாமையைத் தெளிவாக எடுத்துக் கூறிவிட்டார்கள்; வாலி பெற்றவனும் வீரத்தையும் வெற்றியையும் காட்ட வல்ல போரிற் பழிப்பில்லாதவனுமாகிய அங்கதன் 'கடலேத் தாண்டிச் செல்வேன், ஆனல் திரும்பிவரும் வல்லமை (எனக்கு) இல்லே' என்று கூறிவிட்டான்.

கு :—சால உரைத்தார் - விரிவாகவும் விளக்கியும் கூறினர். (6)

4824. யாமினி யிப்போ தாரிடர்
 துய்த்திங் கினியாரைப்
போமென வைப்போ மென்பது
 புன்மை புகழன்றே
கோமுதல் வர்க்கே ருகிய
 கொற்றக் குமாரநம்
நாம நிறுத்திப் பேரிசை
 தைக்கு நவையில்லோன்.

'யாம் இனி இப்போது ஆர்இடர்
துய்த்து, இங்கு இனி யாரைப்
போம் என வைப்போம் என்பது
புன்மை; புகழ் அன்றே;
கோ முதல்வர்க்கு ஏறு ஆகிய
கொற்றக் குமரா! நம்
நாமம் நிறுத்திப் பேர் இசை
தைக்கும் நவை இல்லோன்."

பொ:—'வானரத் தலைவர்களுள் சிங்கம் போன்ற வெற்றி பொருந்திய அங்கதகுமாரனே! நாம் இப்போது பெருந் துன்பத்தில் வருந்திக் கொண்டு இனிமேல் இங்கு யாரைத்தான் கடல் கடந்து செல்லவைப்போம் என்று கவலைப்படுவது இழிவானது; பழியுமாகும்; நமது பெயரை நிலைபெறச் செய்து பெரும் புகழையும் உண்டாக்க வல்ல குற்றமற்றவன்'

கு:—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர் சாம்பவன் அங்கதனை நோக்கி அனுமனைப் பற்றிக் கூறியது. இங்கே 'நவை யில்லோன்' என்றது அனுமனை. (7)

**4825.** ஆரியன் முன்னர்ப் போதுற
வுற்ற வதனனும்
காரிய மெண்ணிச் சோர்வற
முற்றுங் கடனனும்
மாருதி யொப்பார் வேறிலை
யென்ன வயன்மைந்தன்
சீரியன் மற்றோ ளாண்மை
தெரிப்பா னிவைசெப்பும்.

'ஆரியன் முன்னர்ப் போதுற உற்ற அதனனும்,
காரியம் எண்ணிச் சோர்வு அற முற்றும் கடனனும்
மாருதி ஒப்பார் வேறு இலை' என்ன, அயன் மைந்தன்,
சீரியன் மல் தோள் ஆண்மை விரிப்பான், இவை செப்பும்.

பொ:—'(முதன் முதல்) இராமன் முன்னிலையில் (அஞ்சாது) செல்லலுற்ற (துணிவுடைமை) அதனாலும் செய்யும் தொழிலை ஆராய்ந்து தளர்வின்றிச் செய்து முடிக்கும் கடப்பாடுடைமையாலும்,

அனுமானை ஒப்பவர்கள் வேறு கிடையாது' என்று சொல்லி, பிரமனின் மகனாகிய சாம்பவன், சிறந்தவனாகிய அந்த அனுமானின் மற்போர் செய்யவல்ல தோள்களின் வீரத்தைத் தெரிவிக்கும் பொருட்டு (அனுமனை நோக்கி) இவற்றைக் கூறலுற்றான்.

கு :—அடுத்துவரும் பத்துச் செய்யுட்களில் சாம்பவன் அனுமனை நோக்கிக் கூறியவற்றைக் காணலாம். ருசியமூக மலைக்குச் சென்ற இராமலக்குவரை முதன் முதற் கண்டதும் சுக்கிரீவனும் அவன் வீரர் களும் அஞ்சியோடிப் போய் முழைஞ்சுகளில் ஒளிந்துகொள்ளவும் அனுமானே அஞ்சாது முன் சென்று, இராமனோடு அளவளாவிப் பின் சுக்கிரீவனோடு நட்புக் கொள்ளும்படி செய்தான் ஆதலால், எக்காரியத்தையும் திறம்படச் செய்து முடிப்பதில் மாருதி ஈடில்லா தவன் என்று சாம்பவன் பாராட்டினான் என்க. (8)

4826. மேலை விரிஞ்சன் வீயினும்
வீயா மிகைநாளீர்
நூலை நயந்து நுண்ணி
துணர்ந்தீர் நுவறக்கீர்
காலனு மஞ்சுங் காய்சின
மொய்ம்பீர் கடனின்றீர்
ஆல நுகர்ந்தா ளுமென
வெம்போ ரடர்கிற்பீர்.

'மேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகைநாளீர்
நூலை நயந்து நுண்ணிது உணர்ந்தீர்; நுவல்தக்கீர்;
காலனும் அஞ்சும் காய்சின மொய்ம்பீர்; கடன் நின்றீர்;
ஆலம் நுகர்ந்தான் ஆம் என வெம்போர் அடர்கிற்பீர்.'

பொ :—'(நீர்) யாவரினும் மேம்பட்ட பிரமன் இறந்தாலும் இறவாத நீண்ட ஆயுள் நாளையுடையீர்; கற்கவேண்டிய நூல்களை எல்லாம் விரும்பிக் கற்று நுட்பமாக அறிந்திருக்கிறீர்; (எதையும்) எடுத்துக் கூறத்தக்க சொல்வன்மையுடையீர்; யமனும் அஞ்சும்படி யான கடிய கோபமும் உடல்வலிமையும் உடையீர்; கடமையிற் பிறழாது நிற்க வல்லீர்; நஞ்சை உண்ட சிவனும் என்று சொல்லும் படி கொடும்போர் புரிந்தழிக்கவல்லீர்.' (9)

**4827.** வெப்புறு செந்தீ நீர்வளி
யாலும் விளியாதீர்
செப்புறு தெய்வப் பல்படை
யாலுஞ் சிதையாதீர்
ஒப்புறி னொப்பார் நும்மல
தில்லீ ரொருகாலே
குப்புறி னண்டத் தப்புற
மேயுங் குதிகொள்வீர்.

'வெப்புறு செந்தீ நீர் வளியாலும் விளியாதீர்;
செப்புறு தெய்வப் பல் படையாலும் சிதையாதீர்;
ஒப்பு உறின், ஒப்பார் நும் அலது இல்லீர்; ஒருகாலே
குப்புறின், அண்டத்து அப்புறமேயும் குதிகொள்வீர்.'

பொ :—'வெப்பம் பொருந்திய சிவந்த நெருப்பாலும், நீரினாலும், காற்றினாலும் நீர் இறவாதவர் ஆவீர்; சிறப்பாகச் சொல்லப்படும் தெய்வத்தன்மையுள்ள பலவகைப் படைக்கலங்களாலும் அழியாதிருப்பீர்; (உமக்கு) உவமை எடுத்துக் கூறவேண்டுமானால், உவமை யாவரர் உம்மையேயல்லாமல் வேறொருவரையும் பெறுமலிருப்பீர்; இந்த உலக உருண்டைக்கு அப்புறத்தில் குதிக்க வேண்டுமானாலும் ஒரே பாய்ச்சலில் பாயும் திறமுடையீர்.' (10)

**4828.** நல்லவு மொன்றே தீயவு
நாடி நவைதீரச்
சொல்லவும் வல்லீர் காரிய
நீரே துணிகிற்பீர்
வெல்லவும் வல்லீர் மீளவும்
வல்லீர் மிடலுண்டேல்
கொல்லவும் வல்லீர் தோள்வலி
யென்றுங் குறையாதீர்.

'நல்லவும் ஒன்றே, தீயவும் நாடி, நவைதீரச்
சொல்லவும் வல்லீர்; காரியம் நீரே துணிகிற்பீர்;
வெல்லவும் வல்லீர், மீளவும் வல்லீர்; மிடல் உண்டேல்
கொல்லவும் வல்லீர்; தோள்வலி என்றும் குறையாதீர்.'

பொ :—'நல்லவை மட்டுமல்லாமல் தீயனவற்றையும் ஆராய்ந்து குற்றமில்லாமல் எடுத்துக் கூறுதற்கும் திறமுடையீர்; செய்யவேண்டிய வினையை நீரே தீர்மானித்து முடிக்கவும் வல்லீர்; வெல்வதற்கும் வல்லமையுடையீர், திரும்பி வருவதற்கும் வல்லமையுடையீர்; (பகைவர்) வலி செய்து எதிர்ப்பதுளதேல் (அவர்களைக்) கொல்லவும் வல்லமை பெற்றிருக்கிறீர்; எப்போதும் தோள் வலிமையில் குறைவடையமாட்டீர்.'

கு :—குற்ற நற்றங்களைத் தெரிந்து கொண்டு, அவைகளில் குற்றத்தை நீக்கி நல்லனவற்றையே நாடியுரைக்கவல்லீர் என்பான். 'நல்லவும் ஒன்றோ தீயவும் நாடி, நவை தீரச் சொல்லவும் வல்லீர்' என்றான். மிடல்-வலி; "மிடல்புக் கடங்காத வெம்முலையோ பாரம்" (*சிலப்.* 7, 17.) (11)

4829. மேரு கிரிக்கு மீதுற
நிற்கும் பெருமெய்யீர்
மாரி துளிக்குந் தாரை
யிடுக்கும் வரவல்லீர்
பாரை யெடுக்கு நோன்மை
வலத்தீர் பழியற்றீர்
சூரிய னைச்சென் றொண்கை
யகத்துந் தொடவல்லீர்.

'மேரு கிரிக்கும் மீது உற நிற்கும் பெரு மெய்யீர்;
மாரி துளிக்கும் தாரை இடுக்கும் வர வல்லீர்;
பாரை எடுக்கும் நோன்மை வலத்தீர்; பழி அற்றீர்;
சூரியனைச் சென்று ஒண் கையகத்தும் தொடவல்லீர்.'

பொ :—'மேருமலைக்கு மேலும் உயரமாக வளரக்கூடிய பேருடம்பையுடையீர்; மேகம் சொரிகின்ற நீர்த்துளிகளின் இடையிலும் (சிற்றுருவங் கொண்டு) நுழைந்து செல்லும் ஆற்றலுடையீர்; பூமியையும் தூக்கவல்ல பெருவலியினையுடையீர்; பழியில்லாதீர்; சூரியனைப்போய் அழகிய கையினால் (பழம் எனக் கருதித்) தொடுதற்குரிய வல்லமையும் உடையீர்."

கு :—தாரை - நீரொழுக்கு. இடுக்கு - குறுகிய சந்துவழி. (12)

**4830.** அறிந்து திறத்தா றெண்ணி
யறத்தா றழியாமை
மறிந்துரு ளப்போர் வாலியை
வெல்லும் மதிவல்லீர்
பொறிந்திமை யாக்கோன் வச்சிர
பாணம் புகமூழ்க
எறிந்துழி யிற்றோர் புன்மயி
ரேனு மிழவாதீர்.

'அறிந்து, திறத்து ஆறு எண்ணி, அறத்து ஆறு அழியாமை மறிந்து உருளப் போர் வாலியை வெல்லும் மதிவல்லீர்; பொறிந்து இமையாக்கோன் வச்சிர பாணம் புகமூழ்க எறிந்துழி, இற்று ஓர் புன்மயிரேனும் இழவாதீர்.'

பொ :—'தருமத்தின் நெறியானது தவறிவிடாதபடி, உரிய வழி வகைகளை ஆராய்ந்துணர்ந்து போர்த்திறம் படைத்த வாலியை இறந்து விழும்படி வெல்லுதற்குச் செய்த அறிவின் வல்லமையை யுடையீர்; கண்ணிமைத்தலில்லாத (தேவர்களின்) தலைவனை இந்திரன் (கோபத்தினால் கண்களில்) தீப்பொறி பறக்க வச்சிரப் படையை உடம்பில் தாக்குமாறு எறிந்தபோது, ஒரு சிறு மயிர் தானும் அறுபட்டு இழவாமலிருந்தீர்.'

கு :—சுக்கிரீவனை இராமனோடு நட்புக்கொள்ளச் செய்து, வாலியை ஒழித்துக் கட்டுவதற்கு இராமனுடைய உதவி கிடைக்குமாறு செய்து, மறைந்து நின்று வாலியை எய்யும்படி இராமனையும் உடன்படச் செய்து, சுக்கிரீவனை கிட்கிந்தைக்கு மன்னனாகச் செய்தவன் அனுமனே யாதலால் சாம்பவன் முதல் இரண்டு அடிகளில் வாலியை வெல்லும் மதிவல்லமையை எடுத்துக் கூறினான்.

அனுமன் பிறந்தவுடன் கிழக்கே கண்ட கதிரவனை ஒரு கனியெனக் கருதி அதனைப் பற்றியுண்ண வானில் எழுந்தபோது, இந்திரன் அவன் மீது வச்சிரப் படையை ஏவினதாகக் கூறப்படும், (உத்தர - அனுமப்படலம். 22) (13)

**4831.** போர்மு னெதிர்ந்தான் மூவுல
கேனும் பொருளாக
ஓர்வில் வலங்கொண் டொல்கலில்
வீரத் துயர்தோளீர்

பாருல கெங்கும் பேரிருள்
சீக்கும் பகலோன்முன்
தேர்மு னடந்தே யாரிய
நூலுந் தெரிவுற்றீர்.

‘போர் முன் எதிர்ந்தால் மூஉல
கேனும் பொருள் ஆகா;
ஓர்வு இல் வலம் கொண்டு
ஒல்கல் இல் வீரத்து உயர் தோளீர்;
பார் உலகு எங்கும் பேர் இருள்
சீக்கும் பகலோன் முன்,
தேர் முன் நடந்தே, ஆரிய
நூலும் தெரிவுற்றீர்.’

பொ :—‘மூன்று உலகங்களில் உள்ளோர்களும் போரில் உம் முன்னே எதிரேற்று வந்தால் அவர்கள் ஒரு பொருட்டாகாதபடி உணர்தற்கரிய பெருவலி கொண்டு குறையாத வீரத் தன்மையால் சிறந்து விளங்கும் தோள்வலியுடையீர்; இந்நிலவுலக முழுவதிலும் நிறைந்துள்ள மிக்க இருளை யொழிக்கின்ற சூரியனிடத்தில் (அவன்) தேர்க்கு முன்னே நடந்துகொண்டே வடமொழி நூல்களை யெல் லாம் கற்றறிந்தவராவீர்.’

கு :—அனுமன் சூரியனிடம் வியாகரணம் முதலிய சாத்திரங் களைக் கற்க விரும்பினதாகவும், தான் வானில் ஓயாது இயங்கிக் கொண்டிருப்பதால் முடியாது என்று சூரியன் மறுக்கவும், அனுமன் சூரியனுக்கு எதிர்முகமாய்க் கூடவே நடந்து சென்று பாடம் கேட்டு நவவியாகரண பண்டிதனுயினன் என்றும் உத்தரகாண்டத்தில் கூறப்படும். (14)

4832. நீதியி னின்றீர் வாய்மை
யமைந்தீர் நினைவானும்
மாதர் நலம்பே ணுது
வளர்ந்தீர் மறையெல்லாம்
ஓதி யுணர்ந்தீ ரூழி
கடந்தீ ருலகீனும்
ஆதி யயன்ரு னேயென
யாது மறைகின்றீர்.

'நீதியின் நின்றீர்; வாய்மை அமைந்தீர்; நினைவானும்
மாதர் நலம் பேணாது வளர்ந்தீர்; மறை எல்லாம்
ஓதி உணர்ந்தீர்; ஊழி கடந்தீர்; உலகு ஈனும்
ஆதி அயன் தானே என யாதும் அறைகின்றீர்.'

பொ :—'நீதிநெறியில் நிற்கின்றீர்; உண்மை வாழ்க்கையிற் பொருந்தினீர்; மகளிரின்பத்தை மனத்தினாலும் எண்ணாது (நல்ல முறையில்) வளர்ந்துள்ளீர்; வேதங்களையெல்லாம் ஓதி அவற்றின் மெய்ப்பொருளை அறிந்துள்ளீர்; பிரமன் ஆயுளினும் மேற்பட்ட ஆயுட்காலத்தையுடையீர்; உலகங்களைப் படைக்கின்ற பிரமனைப் போல யாவையும் சொல்கின்றீர்.'

கு :—ஊழி கடந்தீர் என்பதற்கு ஊழிக் காலத்தினும் அழியாது வாழ்வதானீர் என்றும் பொருள் கூறலாம். (15)

4833. அண்ண லமைந்தாற் கன்பு
சிறந்தீ ரதனானே
கண்ணி யுணர்ந்தீர் கரும
நுமக்கே கடனென்னத்
திண்ணி தமைந்தீர் செய்து
முடிப்பீர் சிதைவின்றால்
புண்ணிய மொன்றே யென்று
நிலைக்கும் பொருள்கொண்டீர்.

'அண்ணல் அமைந்தாற்கு அன்பு
சிறந்தீர்; அதனானே
கண்ணி உணர்ந்தீர் கருமம்;
நுமக்கே கடன் என்னத்
திண்ணிது அமைந்தீர்; செய்து
முடிப்பீர்; சிதைவு இன்றால்;
புண்ணியம் ஒன்றே என்றும்
நிலைக்கும் பொருள் கொண்டீர்.'

பொ :—'பெருமை பொருந்தியவனாகிய இராமனிடத்துப் பேரன்பு கொண்டு விளங்குகிறீர்; அக்காரணத்தினால் செய்ய வேண்டிய வினையையும் ஆராய்ந்து அறிந்தவராவீர்; (அவ்வினையையும்) செய்து முடிக்கும் கடமை உமக்கே உரியது என்பதை உறுதியாக ஏற்றுக்கொண்டவராவீர்; அதைச் செய்தும் முடிப்பீர்; (அதற்கு)

ஒரு குறையும் வராது; புண்ணியம் ஒன்றையே எப்பொழுதும் அழியாமல் நிலைத்திருக்கும் பொருளாகக் கருதியுள்ளீர்.'

கு:—அண்ணல்-பெருமை; தலைமையுமாம்: அண்ணல் அமைந் தாற்கு என்பதற்கு, தலைமை பொருந்திய சுக்கிரீவனுக்கு என்றும் பொருள் கொள்ளலாம். புண்ணியம் - நல்வினைப்பயன். (16)

4834. அடங்கவும் வல்லீர் காலம
தன்றே லமர்வந்தால்
மடங்கன் முனிந்தா லன்ன
வலத்தீர் மதிநாடித்
தொடங்கிய தொன்றே முற்று
முடிக்குந் தொழிலல்லால்
இடங்கெட வெவ்வா யூறு
கிடைத்தா லிடையாதீர்.

'அடங்கவும் வல்லீர் காலம் அது அன்றேல்; அமர் வந்தால்
மடங்கல் முனிந்தால் அன்ன வலத்தீர்; மதி நாடித்
தொடங்கியது ஒன்றே, முற்றும் முடிக்கும் தொழில் அல்லால்
இடம் கெட வெவ்வாய் ஊறு கிடைத்தால் இடையாதீர்.'

பொ:—'எது பொருந்தாத காலமாயிருக்குமோ அப்போது அடங்கியிருக்கவும் வல்லவராவீர்; போர் கிடைக்குமானால் ஆண் சிங்கம் சீறியெழுந்தாற்போன்ற வலிமையுடையவராவீர்; அறிவினால் ஆராய்ந்து பார்த்து ஒரு காரியத்தை ஆரம்பித்து விட்டால் அதை முழுவதும் வெற்றிகரமாகச் செய்து முடிக்கும் வேலையல்லாமல், பெருமையழியும்படி கொடிய இடையூறுகள் நேர்ந்தாலும் (அஞ்சிப்) பின்வாங்க மாட்டீர்.' (17)

4835. ஈண்டிய கொற்றத் திந்திர
னென்பான் முதல்யாரும்
பூண்டு நடக்கு நன்னெறி
யானும் பொறையாலு

பாண்டிதர் நீரே பார்த்தினி
துய்க்கும் படிவல்லீர்
வேண்டிய போதே வேண்டுவ
வெய்தும் வினைவல்லீர்.

'ஈண்டிய கொற்றத்து இந்திரன் என்பான் முதல் யாரும்
பூண்டு நடக்கும் நல் நெறியானும் பொறையாலும்
பாண்டிதர் நீரே; பார்த்து இனிது உய்க்கும்படி வல்லீர்;
வேண்டிய போதே வேண்டுவ எய்தும் வினை வல்லீர்.'

பொ :—'மிக்க வெற்றியையுடைய இந்திரன் முதலிய யாவரும் மேற்கொண்டு நடக்கத்தக்க நல்லொழுக்கத்தாலும், பொறுமைக் குணத்தாலும் தேர்ச்சி பெற்றவர் நீரேயாவீர்; (எதையும்) சிந்தித்து இனிமையாக நடத்தும்படியான வல்லமையுடையீர்; விரும்பிய அப்பொழுதே விரும்பியவற்றை அடையும் செயலிலும் வல்லவர் ஆவீர்.'

கு :—பண்டிதர் என்பது பாண்டிதர் என நீண்டது; கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்றவர். வேண்டியபோதே வேண்டுவ வெய்தும் என்பது, 'வேண்டிய வேண்டியாங் கெய்தலின்' என்னும் திருக்குறளின் விளக்கமாயமைந்தது. (18)

"இதன் பின் ஒரு சுவடியில் அடியிற்காணும் இரு பாடல்கள் அதிகமாக உள்ளன" என்று 45-ல் குறிக்கப்பெறுகிறது:

4835 (a) நாலு மறைக்கும் வேலியு மாகி நடுநிற்கும்
சீல மிகுந்தீர் திங்கண் மிலைச்சித் திகழ்வேணி
ஆல மிடற்றான் மேலு முதித்தீ ரதுபோதில்
காலி னிறைக்கோ காலனு மாகக் கடிதுற்றீர்

4835 (b) ஆதி யரிப்புத் தேளடிப் பாரித் தணவாதற்
கோது கருத்திற் சால நினைத்திட் டொழிவில்லாப்
போது தளத்திற் புக்கிய செய்கைத் திறனாலே
சாதல் கெடுத்துத் தானழி யாதீ ரதனாலே.

4836. ஏகுமி னேகி யெம்முயிர்
நல்கி யிசைகொள்ளீர்
ஓகை கொணர்ந்தும் மன்னையு
முய்யும் படிசெய்யீர்

சாகர முற்றுந் தாவிடு
நீரிக் கடருவும்
வேக மமைந்தீ ரென்று
விரிஞ்சன் மகன்விட்டான்.

'ஏகுமின்; ஏகி, எம் உயிர் நல்கி, இசை கொள்ளீர்;
ஓகை கொணர்ந்து உம் மன்னையும் உய்யும்படி செய்யீர்;
சாகரம் முற்றும தாவிடும் நீர் இக்கடல் தாவும்
வேகம் அமைந்தீர்' என்று விரிஞ்சன் மகன் விட்டான்.

பொ:—'எல்லாக் கடல்களையும் தாவுதற்கு உரியவரான நீர் இந்த ஒரு (சின்னக்) கடலைத் தாவவும் வலிமை பொருந்தியுள்ளீர்; (ஆதலால்) விரைந்து செல்லுக; சென்று, எங்களுக்கு உயிர்ப் பிச்சை அளித்து, நீர் புகழ்பெறுவீராக; (மீண்டு) மகிழ்ச்சியான செய்தி கொண்டுவந்து உம்முடைய மன்னனாகிய இராமனையும் உயிர் பிழைக்கும்படி செய்வீராக' என்று பிரமனின் மகனான சாம்பவன் கூறி முடித்தான்.

கு:—மன் என்றது இராமனை; சுக்கிரீவன் என்றும் கொள்ளலாம். எழுகடல் தாவவும் வல்லவரான நீர் இந்த ஒரு கடலைத் தாவுதல் எளிது என்றவாறு. (19)

4837. சாம்ப னியம்பத் தாழ்வத
னத்தா மரைநாப்பண்
ஆம்பல் விரிந்தா லன்ன
சிரிப்பா னறிவாளன்
கூம்ப லொடுஞ்சேர் கைக்கம
லத்தன் குலமெல்லாம்
ஏம்பல் வரத்தன் சிந்தை
தெரிப்பா னிவைசொன்னான்.

சாம்பன் இயம்பத் தாழ்வதனத் தாமரை நாப்பண்
ஆம்பல் விரிந்தால் அன்ன சிரிப்பான், அறிவாளன்,
கூம்பலொடும் சேர் கைக்கமலத்தன், குலம் எல்லாம்
ஏம்பல் வரத் தன் சிந்தை தெரிப்பான், இவை சொன்னான்.

பொ:—சாம்பவன் இவ்வாறு கூறி முடிக்க, பேரறிவுடையவனாகிய அனுமன், இறங்கிய முகமாகிய தாமரை மலரின் நடுவில்

செவ்வாம்பல் மலர்ந்தாற்போன்ற சிரிப்பை யுடையவனுகியும், குவிதலோடுகூடிய தாமரை மலர் போன்ற கைகளையுடையவனுகியும், (அங்குள்ள) தன் குலத்தவராகிய வானரர் அனைவர்க்கும் மகிழ்ச்சி யுண்டாகத் தன் மனக் கருத்தைத் தெரிவிப்பானுய், இவற்றைச் சொன்னுன்.

கு :—சாம்பவன் தன்னைப் புகழும்பொழுது அனுமன் வெட்கத்தால் தலை சாய்த்திருந்தமையால் 'தாழ்வதனத் தாமரை' என்ருர். முகத்தைத் தாமரை மலராக உருவகம் செய்தவாறு. செவ்வாம்பல் மலர் சிவந்த வாய்க்கு உவமையாகக் கூறபபட்டது. அனுமன் அறிவாளியாதலால் தன் புகழ் கேட்டு இறுமாப்புக் கொள்ளாது வெட்கித் தலைகுனிந்திருந்தான் என்றவாறு. ஏம்பல் - மகிழ்ச்சி. (20)

4838. நீயிரே நினைவின் முன்னே
☆ நெடுந்திரைப் பரவை யேழும்
தாயுல கனைத்தும் வென்று
தையலைத் தருதற் கொத்தீர்
போயிது புரிதி யென்று
புலமைதீர் புன்மை காண்டற்
கேயினி ரென்னி னென்னிற்
பிறந்தவர் யாவ ரின்னும்.

'நீயிரே நினைவின் முன்னே
நெடுந்திரைப் பரவை ஏழும்
தாய், உலகு அனைத்தும் வென்று,
தையலைத் தருதற்கு ஒத்தீர்;
"போய் இது புரிதி" என்று
புலமைதீர் புன்மை காண்டற்கு
ஏயினிர் என்னின், என்னின்
பிறந்தவர் யாவர் இன்னும்?'

பொ :—நீவிரே நினைப்பதற்கு முன்னமே பெரிய அலைகளையுடைய ஏழு கடல்களையும் தாண்டி, உலகத்தவர் அனைவரையும் வென்று, சீதையை மீட்டுக் கொணர்தற்கு வல்லமையுடையீர் ; (அத்தகைய நீவிரே) "(நீ) சென்று இதனைச் செய்வாயாக" என்று அறிவில்லாத என் சிறு தொழிலைக் காண்பதற்காக (என்னை)க் கட்டளையிட்டீர் என்ருல், என்னைப்போல (நற்பேறுடன்) பிறந்தவர் வேறு யாவர் உளர்?

கு:—சாம்பவனே இக்காரியத்தை எளிதிற் செய்யத்தக்கவனு யிருந்தும், அவனைவிடக் குறைந்த ஆற்றலுடைய தன்னை ஏவியது தனக்கு ஒரு பெருமை கொடுக்கவேண்டியேயாகும் என்று அனுமன் அடக்கமாய்க் கூறினன் என்க. தான் அறிவும் பெருமையும் சிறக்கப் பெற்றிருந்தும் "புலமைதீர் புன்மை" என்று தன்னைப்பற்றிக் கூறியது பெருக்கத்து வேண்டும் பணிவைக் காட்டியதாகும். (21)

4839. இலங்கையை யிடந்து வேரோ
டிவ்வயிற் றருகென் றாலும்
விலங்கினர் தம்மை யெல்லாம்
வேரொடும் விளிய நூறிப்
பொலங்குழை மயிலைக் கொண்டு
போதெனப் புகன்றிட் டாலும்
கலங்கலி ருரைத்த மாற்ற
முடிக்குவல் கடிது காண்டிர்.

'"இலங்கையை இடந்து வேரோடு
இவ் வயின் தருக" என்றாலும்,
"விலங்கினர் தம்மை எல்லாம்
வேரொடும் விளிய நூறிப்
பொலங் குழை மயிலைக் கொண்டு
போது" எனப் புகன்றிட்டாலும்,
கலங்கலிர்! உரைத்த மாற்றம்
முடிக்குவல் கடிது, காண்டிர்.'

பொ:—'"இலங்கை மாநகரை வேரோடும் பெயர்த்தெடுத்து இவ்விடத்திற்குக் கொண்டுவர வேண்டும்" என்று நீங்கள் சொன்னாலும், தடுத்து எதிர்ப்பவர்களையெல்லாம் அடியோடு அழியுமாறு நீருக்கிப் பொன்னாலாகிய குழையென்னும் காதணியையுடைய மயில் போல்வாளாகிய சீதையை எடுத்துக்கொண்டு வா" என்று சொன்னாலும், நீங்கள் சொன்ன சொற்படியே செய்து முடிப்பேன், விரைவிற் காண்பீர்களாக; கலங்க வேண்டாம்.' (22)

4840. ஓசனை யொன்று நூறு
முள்ளடி யுள்ள தாக
ஈசன்மண் ணளந்த தேய்ப்ப
விருங்கட லினிது தாவி

வாசவன் முதலோர் வந்து
　　மலையினு மிலங்கை வாழும்
நீசரை யெல்லா நூறி
　　நினைத்தது முடிப்பல் பின்னும்.

'ஓசனை ஒன்று நூறும் உள் அடி உள்ளதாக
ஈசன் மண் அளந்தது ஏய்ப்ப, இருங்கடல் இனிது தாவி,
வாசவன் முதலோர் வந்து மலையினும், இலங்கை வாழும்
நீசரை எல்லாம் நூறி நினைத்தது முடிப்பல், பின்னும்.'

பொ :—'திருமால் உலகை அளந்தது போல, ஒரு நூறு யோசனை தூரமுள்ள பகுதியும் என் உள்ளங்காலினுள் அடங்கும் படியாக இந்தப் பெரிய கடலை எளிதாகத் தாண்டி, இந்திரன் முதலிய தேவர்கள் வந்து போர் செய்தாலும் (பின்னடையாமல்) இலங்கையில் வாழ்கின்ற கீழோர் ஆகிய அரக்கரையெல்லாம் அழித்து, நினைத்த காரியத்தை முடித்து விடுவேன் ; மற்றும்.'

கு :—மயேந்திர மலையில் அனுமான் நின்ற இடத்திலிருந்து இலங்கை நூறு யோசனை தொலைவில் உள்ளது என்றவாறு. (23)

4841. முற்றுநீ ருலக முற்றும்
　　விழுங்குவான் முழங்கி முந்நீர்
உற்றதே யெனினு மண்ட
　　முடைந்துபோ யுயர்ந்த தேனும்
இற்றைநும் மருளு மெங்கோ
　　னேவலு மிரண்டு பாலுங்
கற்றைவார் சிறைக ளாகக்
　　கலுழனிற் கடப்பல் காண்டிர்.

'முற்றும் நீர் உலகம் முற்றும்
　　விழுங்குவான் முழங்கி, முந்நீர்
உற்றதே எனினும், அண்டம்
　　உடைந்துபோய் உயர்ந்த தேனும்,
இற்றைநும் அருளும், எம்கோன்
　　ஏவலும், இரண்டு பாலும்
கற்றைவார் சிறைகள் ஆகக்
　　கலுழனின் கடப்பல் காண்டிர்.'

பொ :—'நீரால் சூழப்பட்ட உலகம் முழுவதையும் விழுங்குவதற்காகக் கடலானது பேரொலி செய்து கிளம்பி எழுந்தாலும், இவ்வண்டகோளமே உடைந்துபோய் வானவெளி உயர்ந்தாலும் (சிறிதுங் கலங்காமல்) இப்பொழுது நீங்கள் என்மீது கொண்டுள்ள அருளையும், எமது தலைவனாகிய இராமனின் கட்டளையையும் (என்) இரண்டு பக்கத்திலும் தொகுதியான நீண்ட சிறகுகளாகக் கொண்டு, கருடனைப்போல(ப் பறந்து இக்கடலை)க் கடந்து செல்வேன், காண்பீர்களாக.'

கு :—எத்தகைய இடையூறு நேரினும் அஞ்சாது வேகமாய் இக்கடலைக் கடந்து செல்வேன்' என்று அனுமன் கூறினான். சிறியவனாகிய தன்மீது அவ்வானரர் கொண்டுள்ள அன்பை அருள் என்று கூறினான். 'சிறைகள் ஆக' என்றது, துணையாகக்கொண்டு என்றவாறு. (24)

4842. ஈண்டினி துறைமின் யானே
யெறிகட லிலங்கை யெய்தி
மீண்டிவண் வருதல் காறும்
விடைதம்மின் விரைவி னென்னா
ஆண்டவ ருவந்து வாழ்த்த
வலர்மழை யமரர் தூவச்
சேண்டொடர் சிமயத் தெய்வ
மயேந்திரத் தும்பர் சென்றான்.

'ஈண்டு இனிது உறைமின், யானே
எறி கடல் இலங்கை எய்தி,
மீண்டு இவண் வருதல் காறும்;
விடை தம்மின், விரைவின்' என்னா,
ஆண்டு அவர் உவந்து வாழ்த்த,
அலர் மழை அமரர் தூவச்
சேண் தொடர் சிமயத் தெய்வ
மயேந்திரத்து உம்பர் சென்றான்.

பொ :—'நான் ஒருவனாகவே அலைகள் வீசுகின்ற கடலாற் சூழப்பட்ட இலங்கைக்குச் சென்று விட்டு இங்கே திரும்பி வருகிறவரையும் (நீங்கள்) கவலையின்றி இங்கேயே இருங்கள்; விரைவாக விடை தாருங்கள்' என்று கூறிவிட்டு, அங்கே அவர்கள் மகிழ்ச்சியோடு வாழ்த்தவும், தேவர்கள் (அவன் மீது) பூமாரி பெய்யவும், தெய்வ

மலையாகிய மயேந்திரத்தின் மிக உயரத்திலுள்ள உச்சியின் மேலிடத்தை யடைந்தான்.

கு :—அனுமான் இலங்கை சென்று சீதையைக் காண்பதால் இராவணன் அழிவுக்கு வழி கோலுவதாய் அமைவதால் தேவர்கள் மகிழ்ச்சியோடு அலர்களைச் சொரிந்தனர் என்றார். மலையின் உயர்ந்த சிகரங்களில் தெய்வம் உறைவதாகக் கூறப்படுவதால் 'தெய்வ மயேந்திரம்' என்றார். (25)

4843. பொருவரு வேலை தாவும்
புந்தியான் புவனந் தாய
பெருவடி வுயர்ந்த மாயோன்
மேக்குறப் பெயர்ந்த தாள்போல்
உருவறி வடிவி னும்ப
ரோங்கின னுவமை யாலும்
திருவடி யென்னுந் தன்மை
யாவர்க்குந் தெரிய நின்றான்.

பொரு அரு வேலை தாவும்
புந்தியான், புவனம் தாய
பெரு வடிவு உயர்ந்த மாயோன்
மேக்கு உறப் பெயர்ந்த தாள்போல்,
உரு அறி வடிவின் உம்பர்
ஓங்கினன், உவமை யாலும்
திருவடி என்னும் தன்மை
யாவர்க்கும் தெரிய நின்றான்.

பொ :—ஒப்பற்ற கடலைத் தாண்ட வேண்டும் என்ற எண்ணமுள்ள அனுமன், மூவுலகங்களையும் தாவி அளப்பதற்காகப் பேருருவோடு ஓங்கிய திருமால் மேலிடத்தைப் பொருந்துமாறு உயர எடுத்த திருவடிபோல, யாவர்க்கும் புலனாகும் உருவத்தோடு வானளாவ வளர்ந்தான்; (அதனால் பெயர் மாத்திரத்தாலன்றி) ஒப்புமையாலும் திருவடி என்கின்ற தன்மை யாவர்க்கும் விளங்கும்படி நின்றான்.

கு :—திருவிக்கிரமனது திருவடிபோல அனுமான் வானத்தை யளாவுமாறு பெருவடிவங் கொண்டனன் என்றவாறு. இப்பேருருவம் எடுக்குமுன் பெயரால் திருவடி யென்னப்பட்ட அனுமன், இப்பொழுது வடிவாலும் திருவடியானான் என்று புலவர் சிறப்புறக் கூறினார். (26)

4844. பார்நிழல் பரப்பும் பொற்றேர்
வெயிற்கதிர்ப் பரிதி மைந்தன்
போர்நிழல் பரப்பு மேலோர்
புகழென வுலகம் புக்குத்
தார்நிழல் பரப்புந் தோளான்
றடங்கட ருவா முன்னம்
நீர்நிழ லுவரி தாவி
யிலங்கைமேற் செல்ல நின்ருன்.

பார்நிழல் பரப்பும் பொன் தேர்
வெயில் கதிர்ப் பரிதி மைந்தன்
போர் நிழல் பரப்பும் மேலோர்
புகழ் என உலகம் புக்குத்
தார் நிழல் பரப்பும் தோளான்,
தடங்கடல் தாவா முன்னம்,
நீர் நிழல் உவரி தாவி
இலங்கை மேல் செல்ல நின்ருன்.

பொ :—(தன் தலைவணங்கிய) பூமியில் ஒளியைப் பரப்பும் அழகிய தேரின்கணுள்ள வெயிலை வீசும் கிரணங்களையுடைய சூரியனின் மகனுன இராமனின் போரின் சாயையைப் பரப்புகின்ற, மேலோரது புகழைப்போல உலகத்திற் புகுந்து ஒளியைப் பரப்புகின்ற மாலையை யணிந்த தோள்களையுடையவனுன அனுமன், (அந்தப்) பெரிய கடலைத் தாவுவதற்கு முன்னரே நீரின் மீது விழுந்த அவனது (பெரு வடிவின்) நிழல் கடலைத் தாண்டிச் சென்று இலங்கையின்மேற் படரும்படியாக (உயர்ந்து) நின்ருன்.

கு :—மாலைப் பொழுதில் அனுமன் மலைமீது இலங்கை நோக்கி நின்ருனுகவும், சூரியன் மேலைத் திசையுற்றதால் அனுமனின் நிழல் கீழ்த்திசையிற் படிந்து இலங்கையின் மேலும் படர்ந்து அங்கே இருளைப் பரப்பி, இராமனின் போர் நிழலைப் பரப்புவது போன்று காட்சியளித்ததாகக் கொள்க. அனுமன் தாவு முன்னரே அவன் நிழல் கடலைத் தாவிவிட்டது என்ற நயமும் கவியின் வேகமும் நோக்கத்தகும். இதுபோல், சுந்தரகாண்டம், கடல்தாவு படலத்திலும், "சேவகன் சீருமுன்னம் சேதுவுந் தெரிந்த மாதோ" என்பர். போர் நிழல் பரப்புந் தோளான், தார்நிழல் பரப்புந்தோளான் என இயைக்க. 'பரிதிமைந்தன்' என்பதற்கு, சுக்கிரீவன் என்றும் பொருள் கொள்ளலாம், (27)

**4845.** பகுவாய மடங்கல் வைகும்
படர்வரை முழுது மூழ்க
உகுவாய விடங்கொ ணாகத்
தொத்தவால் சுற்றி யூழின்
நெகுவாய சிகர கோடி
நெரிவன தெரிய நின்றான்
மகவாமை முதுகிற் றோன்று
மந்தர மெனலு மானான்.

பகு வாய மடங்கல் வைகும்
படர்வரை முழுதும் மூழ்க
உகு வாய விடம் கொள் நாகத்து
ஒத்த வால் சுற்றி, ஊழின்
நெகு வாய சிகர கோடி
நெரிவன தெரிய நின்றான்,
மக ஆமை முதுகில் தோன்றும்
மந்தரம் எனலும் ஆனான்.

பொ :—பிளந்த வாயையுடைய சிங்கங்கள் தங்கும்படியான பெரிய மயேந்திரமலை முழுவதும் (அனுமனது பேருருவின் பளுவால்) கீழே யழுந்தவும், வரிசையாயுள்ள சிதைகின்ற இடங்களையுடைய பலவாய சிகரங்கள் நொருங்கியனவாய் விளங்கவும், நஞ்சைக் கக்கு கின்ற வாயையுடைய பாம்பைப் போன்ற வாலினால் (தனது உடம்பைச்) சுற்றிக் கொண்டு (பேருருக் கொண்டு) நின்றவனாகிய அனுமன், பெரிய ஆமையினது முதுகின்மேல் விளங்கித் தோன்றிய மந்தரமலை யென்று கூறுமாறும் ஆயினான்.

கு :—திருமால் கூர்மாவதாரத்தில் எடுத்த ஆமை வடிவம் மயேந்திர மலைக்கும், அவ்வாமைமேல் நிறுத்தப்பட்ட மந்தரமலை அனுமனுக்கும், வாசுகி என்னும் பாம்பு அனுமன் வாலுக்கும் உவமை. திருப்பாற் கடலைக் கடைந்த காலத்துத் திருமால் ஆமையின் வடிவு கொண்டு மத்தாகிய மந்தரமலையைத் தாங்கினன் என்பது வரலாறு. கோடி என்பது இங்கே பல என்னும் பொருளில் வந்தது. (28)

**4846.** மின்னெடும் கொண்ட ருளின்
வீக்கிய கழலி னார்ப்பத்
தன்னெடுந் தோற்றம் வானோர்
கட்புலத் தெல்லை தாவு

வன்னெடுஞ் சிகர கோடி
மயேந்திர மண்டந் தாங்கும்
பொன்னெடுந் தூணின் பாத
சிலையெனப் பொலிந்து நின்முன்.

மின் நெடும் கொண்டல் தாளின்
வீக்கிய கழலின் ஆர்ப்பத்
தன் நெடும் தோற்றம் வானோர்
கட்புலத்து எல்லை தாவ,
வல் நெடும் சிகர கோடி
மயேந்திரம், அண்டம் தாங்கும்
பொன் நெடும் தூணின் பாத
சிலை எனப் பொலிந்து நின்முன்.

பொ :—மின்னலையுடைய பெரிய மேகங்கள் (தனது) காலிற் கட்டப்பட்ட வீரக் கழல்போல ஒலிக்கவும், தனது பேருருவத்தின் காட்சி தேவர்களின் கண்பார்வை எல்லையைத் தாண்டி அப்பால் கடந்து செல்லவும், வலிய உயர்ந்த சிகரங்களின் தொகுதிகளையுடைய மயேந்திர மலையானது, இவ்வுலக வுருண்டையைத் தாங்குகின்ற பொன்மயமாகிய நீண்ட தூணின் அடியிலிட்ட கல்லைப் போன்று தோன்றவும் விளங்கி நின்முன் (அனுமன்).

கு :—அனுமன் உலகைத் தாங்கும் தூண்போலவும், மயேந்திர மலை அத்தூணின் அடியிலிட்ட கல் (பாதசிலை) போலவும் விளங்கிய காட்சியைப் புலவர் இங்குக் கூறியுள்ளார். (29)

மயேந்திரப் படலம் முற்றிற்று.

## ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும், அச்சுப்பிரதிகளும் அவற்றின் குறியீடுகளும்

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | தஞ்சை சரஸ்வதி மகால் | 367-8 | |
| *2 | ,, | 369 | |
| 4 | ,, | 371 | |
| 12 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 30 | |
| 13 | ,, | 42 | |
| 15 | ,, | 471 | |
| 16 | ,, | 472 | |
| 17 | ,, | 672 | |
| 18 | ,, | 677 | |
| 19 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 20 | ,, | | |
| 21 | ,, | | |
| 22 | ,, | | |
| 23 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L. 1150 | |
| 24 | திரு. C. கணேசையர், யாழ்ப்பாணம். | | |
| 26 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 27 | |
| 27 | ,, | 28 | |
| 28 | ,, | 33 | |
| 29 | ,, | 41 | |
| 30 | ,, | 540 | |

* 3, 5-11, 14, 25, 32-38, 50, 51, 54, 55, 57-ஆம் பிரதிகளில் கிட்கிந்தா காண்டம் இல்லை.

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 31 | அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலை, சென்னை. | 514 | |
| 39 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 40 | |
| 40 | | | ஆழ்வார் திருநகரி பிரதிகளின் படி பெரியன் ஸ்ரீநிவாசையங்கார் பதிப்பித்தது 1942. |
| 41 | | | வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர்உரைப்பதிப்பு.1955 |
| 42 | | | கவித்தலம் துரைசாமி மூப்பனார் பதிப்பு 1888. |
| 43 | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L 1147 | |
| 44 | ,, | T.R.D.L. 1148 | |
| 45 | | | உ. வே. சாமிநாதையர் நூல் நிலையப் பதிப்பு, அடையாறு. |
| 46 | | | பூமகள் விலாசம் பதிப்பு 1928 |
| 47 | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | | |
| 48 | | | வெ. ப. சுப்பிரமணிய முதலியார் பதிப்பு—கம்பராமாயண சாரம் 1955. |
| 49 | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L 1149 | |
| 52 | | | மலிவுப் பதிப்பு (எஸ். ராஜம் வெளியிட்டது) 1958. |
| 53 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 38 | |
| 56 | திரு. சாத்தான் குட்டிப் பிள்ளை அவர்கள், தெங்கம்புதூர். | | |
| 58 | | | சந்திரசேகர கவிராஜ பண்டிதர் பதிப்பு (துந்துபி) |
| 59 | | | மு. ரா. அருணசலக் கவிராயர் பதிப்பு 1919. |

## குறிப்பு

இப்பதிப்பில் மூலத்தில் எடுத்துக்கொண்ட பாடங்கள், செய்யுட்களின் தொடரெண் முறைப்படி அடிமுறையாகவும் சீர்முறையாகவும் தடித்த முதலெழுத்தோடு முன்னே காட்டப்பெற்றுள்ளன. அவற்றோடு வேறுபட்ட பாடங்கள் அவற்றின்பின் முறையே சேர்க்கப்பெற்றுள்ளன. பாடங்களின் பின்னே குறிக்கப்பட்டுள்ள எண்கள், அப்பாடங்கள் உள்ள சுவடிகளின் குறியீடுகள். 40, 41, 45, 48 என்ற எண்கள், அக்குறியீடுள்ள அச்சுப்புத்தகங்களிலுள்ள மூலபாடங்களுக்கும், அப்புத்தகங்களில் பிரதிபேதங்களாகக் காட்டப்பட்ட பாடங்களுக்கும் உரியன. '46—' என்னும் குறியீடு, 46 என்னும் எண் இட்டுக்காட்டிய அச்சுப்புத்தகத்தோடு ஒத்த பாடம் உடைய ஏடுகளின் எண்களையும் குறிக்கும். பிழைபட்ட பாடங்களும் அவற்றைக் காட்டும் சுவடிகளின் எண்களும், சிதைந்த சுவடிகளின் எண்களும் விரிவஞ்சிக் குறிக்கப்படவில்லை.

# பாட வேறுபாடு

## 10. கிட்கிந்தைப் படலம்

### 4374

I அன்னகாலம் ; 46—
இன்னகாலம்; 13, 17–20, 23, 29, 39–41, 43, 45, 49, 56.

அகலுமளவினில்; 46—
அகலுமள்வையில்; 12.
அகலவின்புறும்; 45.
அகலவன்புறும்; 45.
அகலவிளம்பினன்; 27.
அகன்றனவின்புறும்; 13, 17–19, 23, 29, 39–41, 43, 45, 49, 56.
அகன்றனவன்புறும்; 41.
புகலுமளவினில்; 20.

II முன்னவீரன்; 4, 23, 26, 30, 41, 43-45, 47, 59.
முன்னைவீரன்; 46—
முன்னவீரர்; 1, 2.

மொய்ம்பினேய்; 46—
முன்பினேய்; 1, 4, 13, 16–20, 23, 27, 29, 39–41, 43, 45, 47, 49, 56,
நோக்கிமுன்; 45.

III எல்லையினூங்கினுந்தூங்கினன்; 15.
எல்லையினூங்குமத்தூங்கிய; 46—
எல்லையினூங்குவந்தூங்கின; 1, 22.
எல்லையினூங்குமற்றூங்கின; 13, 17, 18, 40.
எல்லையினூங்குமற்றூங்கினன்; 41.
எல்லையினூங்கினுந்தூங்கினன்; 52.
எல்லையினூங்கினுந்தூங்குற்று; 45.
எல்லையினூங்குறத்தூங்கினன்; 41.
எல்லைதொலைந்துமவ்வூகத்தின்; 15, 28.
எல்வையினூங்குமத்தோங்கின; 20.
எல்வைதொலைந்துமவ்வூகத்தின்; 12.
ஊங்குமத்தூங்கினயூகத்தின்; 16.
வேலையினூங்குமற்றூங்கின; 23, 43, 49, 56.
வேலையினூங்குமற்றூங்கினன்; 19.
வேலையினூங்கினுந்தூங்கினன்; 41, 45.
வேலையினூங்குமித்தூங்கிய; 53.
வேலையினூங்குமத்தூங்கின; 26, 27, 29, 44.

IV என்செய்தவாறரோ; 46—
என்செயவாறரோ; 26
என்செய்யுமாறரோ; 41, 45.
என்செய்தவாறென்ருன்; 27.

### 4375

I பெற்றுதவிப்பெரும்; 46—
பெற்றுதவப்பெரும்; 45.
பெற்றுதவப்பறும்; 41.
பெற்றுறுதிப்பெரும்; 27, 45.

II திறனிலைந்திலன்; 46—
திறநிலைந்திலன்; 1, 2, 12, 13, 15–18, 20, 28, 29, 40, 41, 52 53, 56.
திறலறிந்திலன்; 26, 44, 45.

தீர்ந்தனன்; 46—
தீர்ந்தவன்; 16, 27, 45.

III அறமறந்தனன்; 46—
அறன்மறந்தனன்; 1, 2, 12.
அறமறிந்திலன்; 45.
அறனறிந்திலன்; 45.
அறனறிந்தனன்; 26.
அலனிறந்தனன்; 45.
அறநினைந்திலன்; 27.

கிடக்கநம்; 46—
கிடைக்கநம்; 45, 59.
கிடந்தநம்; 12.
கிடக்கரும்; 26, 44.

IV மறனறிந்திலன்; 46—
மறமறிந்திலன்; 12, 13, 23, 29, 39, 40, 43, 49, 52, 56.
மறமறந்தனன்; 16 20.
மறநினைந்திலன்; 15, 27, 28, 53.
மறனினைந்திலன்; 45.

மயங்கினான்; 46—
மயக்கினான்; 4.

## 4376

I நன்றிகொன்றருநட்பொடு; 1, 2, 22, 41.
நன்றிகொன்றருநட்பினை; 46—
நன்றிகொன்றருநட்பினின்; 41, 45.
நன்றிகொன்றருநம்பினை; 49.
நன்றிகொன்றுநம்நட் பொடு; 45.
நன்றிகொன்றுநம்நட்பினை; 26, 44.
நன்றிசெய்தவர்நட்பினை; 45.

நாரறுத்து; 46—
நாடொறுத்து; 49.
வேரறுத்து; 45.

II ஒன்றுமெய்ம்மை; 46—
ஒன்றும்மெய்மை; 13.
ஒன்றுமெய்மை; 49.
ஒன்றுமென்மை: 44.
ஒன்றுமேன்மை; 26, 45.
என்றுமெம்மைச்; 20.

சிதைத்துரை; 46—
சிதைந்துரை; 16, 27.

பொய்த்துளாற்; 46—
பொய்த்துளார்க்; 23, 41, 43, 45, 49, 52, 56.
பொய்த்துளோர்க்; 13, 40, 45.
ஒத்துளான்; 26, 44.

III குற்றத்தினீங்குமால்; 46—
குற்றத்துநீங்குமால்; 1, 2, 22, 26, 30, 41, 45, 47.
குற்றத்துநீக்குமால்; 15, 20, 28.
குற்றத்துணீங்குமோ; 53.
குற்றத்துத்தாங்குமோ; 49.
குற்றத்துத்தங்குமோ; 23, 39, 43.
குற்றத்துத்தங்குமால்; 19, 29.
குற்றத்திற்றங்குமோ; 13, 17, 18, 40, 41, 45, 52, 56.
குற்றத்திற்றங்குருச்; 24.
குற்றத்தைநீங்குநீ; 12.
குற்றமற்றில்லையால்; 45.

IV மற்றவன்; 46—
நீயவன்; 27.

தேர்குவாய்; 46—
தேருவாய்; 19, 29, 41.

## 4377

II செய்ய; 46—
நாட்ட; 28.

எடுத்தவில்; 46—
விடுத்தவில்; 26.

III உண்டுங்கள்; 46—
உண்டெங்கள்; 41, 45.

IV நம்மானையே; 46—
நம்மானையால்; 12.

## 4378

I நஞ்சமன்னவரை; 46—
நஞ்சின்மன்னவரை; 41, 45.
நஞ்சினன்னவரை; 27, 45.

II வஞ்சமன்று; 46—
வஞ்சமல்ல; 12, 13, 15, 17, 19, 23, 29, 39–41, 45, 49.
வஞ்சமென்னூர்; 41, 45.

ஆதலால்; 46—
ஆதலான்; 36, 45, 59.
ஆதலாய்; 31.

III அஞ்சிலேம்பதில்; 41, 52, 58, 59.
அஞ்சிலம்பதில்; 46—
அஞ்சிலன்பதில்; 13, 17–19, 29, 39, 40, 45, 49.
அஞ்சியல்லதொன்று; 1, 2, 4, 12, 15, 16, 20, 22, 23, 27, 30, 31, 41, 43, 45, 47.
அஞ்சியல்லதென்று; 26, 28, 44.
அஞ்சிலல்லதொன்று; 24.

ஒன்றறியாதவன்; 46—
ஒன்றறியாரவர்; 13, 17-19, 29, 39–41, 49, 53, 56.
ஒன்றறியாதவர்; 41.
ஆரறிவாரவர்; 1. 2, 4, 16, 20, 22, 23, 24, 26, 27, 30, 31, 41, 43-45, 47.
ஆரயர்வாரவன்; 28.
ஆரழிவாரவன்; 15.
யாரறிவாரயர்; 12,

IV நின்றுநிலாவ; 46—
நின்றநினைவை; 13, 16–19, 23, 24, 29, 39–41, 43, 45, 49, 56.
நின்றநிலேமை; 12.
நின்றநிலாவி; 47.
நின்றநிலாவை; 53.
நின்றதுலாவி; 2, 45.
நின்றவிலாபம்; 22, 41.
நின்றவிலாப்ப; 1.
நின்றுமுலாய; 27.
நின்றயலாக; 26, 44.
நிறுத்துவாய்; 46—
நிறுத்துவார்; 19.

## 4379

I ஊருமாளும்; 46—
தேருமாளும்; 27.

அரசுநுஞ்சுற்றமும்; 46—
அரசுமுலு சுற்றமும்; 24, 41.
அரைசுமுஞ்சுற்றமும்; 44.
அரசுமுன்சுற்றமும்; 12, 13, 15, 17–19, 23, 26, 28, 39, 40, 43, 45, 49, 56.
அரசுறுசுற்றமும்; 58.
அரசுறுஞ்சுற்றமும்; 20, 53,
அரசொடுசுற்றமும்; 1, 2, 22.

II நீருமாளுதிரேயெனின்; 13, 17–19, 23, 24, 29, 30, 39–41, 43, 45, 49, 52, 56.
நீருமாளுதிரென்பது; 46—
நீருமாளுதிரென்பதென்; 1, 22.
நீருமாறுதிரென்பது; 45.
நீரும்வாழுதிரென்பது; 41, 45.

நேர்ந்தநாள்; 46—
நேர்ந்தநீர்; 41, 45.
நேர்திரேல்; 41, 45.
நேர்ந்திரு; 45.
எங்கள்பால்; 45.

III வாரலிராமெனின்; 46—
வாரலிராமெனில்; 12, 15, 24, 26, 28, 44, 45, 58.
வாரலிரேயெனில்; 13, 17–19, 23, 29, 39, 40, 43, 49, 56.
வாரலிரேயெனின்; 41, 45, 52.
வாரீர்களாமெனில்; 45.
யாரவிராமனின்; 20.

IV எனும்பொருள்; 46—
எனும்திறம்; 12.
எனும்உரை; 41, 44, 45.
எனுமுறை; 26.

## 4380

I இன்னநாடுதும்; 1, 13, 16–18, 26, 39-41, 44, 45, 53, 56.
இன்னுநாடுதும்; 46—
இன்னுநாடிதும்; 19.
இன்னவாசகம்; 45.
மின்னைநாடுதும்; 27.

இங்கிவர்க்கும்வலி; 46—
இங்கிவற்கும்வலி; 19, 20.
ஈங்கிவர்க்கும்வலி; 4, 16–18, 23, 26-28, 39, 41, 43, 44, 49, 53, 56.
அங்கவரெய்துரு; 45.

II துன்னினுரை; 46—
துன்னலார்கள்; 45.

துணிந்தாரெனின்; 46—
துணிந்தாரெனில்: 1, 2, 13, 17–20, 22–24. 26, 29, 40, 42–45, 49, 53, 58.
துணிந்தானெனில்; 41, 45.
துணிந்தாயெனில்; 12.

III உன்னைவெல்ல; 46—
உன்னையொப்ப; 45.

IV பிறரின்மை; 46—
பிறரில்லை; 23, 41, 43. 45, 49.
பிறரில்லாய்; 45.

## 4381

I நீதியாதி; 46—
நீதியாக; 12, 13, 17–19, 23, 24, 29, 39–41, 43, 45, 49, 56.
நீதியாகி; 27.
நீதியாது; 15. 16, 20, 28.
நீதிவாய்மை; 45.

நிகழ்த்தினை; 46—
நிகழ்த்துதி; 12, 13, 17–19, 23, 24, 39–41, 43, 45, 49, 56.
நிகழ்த்திது; 29, 41, 45.

நின்றது; 46—
நின்றதில்; 1, 22.
நின்வயின்; 2, 4, 47, 53
நிற்கவர்; 45;

II வேதியாத; 46—
பேதியாத; 1.

பொழுது; 46—
பொழுதும்; 19, 24, 29.

வெகுண்டவண்; 46—
வெகுண்டவன்; 24.
வெகுண்டனை; 1, 2, 12, 15, 22, 26–28, 41, 45.
வெகுண்டனைச்; 44.
வெகுண்டில; 16, 56.
வெகுண்டிடல்; 17–19, 29, 39-41, 45, 49.
வெகுண்டிடேல்; 41, 45.
வெகுண்டடேல்; 13.
வெகுளலை; 23, 43.

III சொற்றரத் தக்கனை; 46—
சொற்றரத் தக்கன; 41, 45.
சொற்றதரக்கனை; 26.

IV போதியாதி; 46—
போதியாக; 13, 17–19, 23, 24, 29, 39–41, 43, 49, 56.
போதிபோதி; 45.

புகழ்ப்பூணினுன்; 46—
புகழ்ப்பூணினுய்; 20.
புகழ்பூணினுன்; 26.

## 4382

I ஆண்டிறை; 46—
ஆண்டினம்; 44.

II படர்வெறிந்; 45, 52, 58.
படர்வெறின்; 46—
படர்வெனின்; 20, 53.
படர்வோன்; 13, 17–19, 29, 39–41, 45, 49, 56.
பகர்வோன்; 27.
வெரிநிடைப்; 45.

பாழ்படாத்; 46—
பாழ்படத்; 15, 20.
பாழ்படரத்; 45.
பாழியம்; 16.

பார்ப்பட; 28.
பழிபட; 41.
பழிபடரத்; 13, 17-19, 40, 45, 56.

பகைகெட; 27, 41, 45.
பல்லவத்; 45.
வழிபடா; 29, 39.

III தூக்கித்; 12, 13, 17-19, 23, 24, 29, 39-41, 43, 45, 49.
பூட்டித்; 46—
பூட்டி; 45.
பூட்டிக்; 1, 2, 22, 41, 45.
நீக்கித்; 56.

தொடுசிலை; 46—
தொடுஞ்சிலை; 44.
கொடுஞ்சிலை; 1, 2, 22, 41, 45.
வரிசிலை; 45.

IV சிந்தையுள்; 46—
சிந்தையில்; 1, 2, 4, 12, 13, 15-20, 22-29, 39-41, 43-45, 47, 49, 52, 53, 56, 58.

நீங்கலான்; 46—
நீங்கிலான்; 4.

## 4383

I மாறுநின்ற; 46—
மாறுசென்ற; 1. 2, 12, 13, 15-19, 22-24, 26-29, 39-41, 43, 44, 49, 53, 56.

மரனுமலைகளும்; 46—
மரமுமலைகளும்; 13, 17-19, 23, 40, 43, 49, 56.
மலையுமரங்களும்; 53.
மலைகளுமாமரம்; 30, 41.

II நீறுசென்று; 46—
நீறுசென்ற; 15, 26, 28, 44.
நீறுசென்றுக; 23, 43.

நெடுநெறி; 46—
நீணெறி; 23, 43.

நீங்கிட; 46—
ஓங்கிட; 13, 17-19, 29, 39-41, 45, 49, 56.

III வேறு சென்றனன்; 46—
வேறு சென்றன; 15, 23, 41, 43, 44, 53.

மேன்மையினேங்கிடும்; 45, 49, 52.
மென்மையனையினும்; 46—
மென்மையினனுமோர்; 20.
மென்மையினனுறு; 45.
மெய்ம்மையினேங்கிடும்; 17, 18, 40, 41, 56.
மெய்ம்மையினேங்கிய; 45.
மெய்ம்மையினனுமோர்; 15, 16
மெய்ம்மையினீங்கியே; 41.
மெய்மையினீங்கியே; 45.
மெய்மையனேங்கிடும்; 13.
மெய்மையினனுமோர்; 28.
மெய்மையினலுமோர்; 27.
மெய்மையினேங்கிடும்; 39.
மேன்மையனையினும்; 30, 41, 45, 59.
மேன்மையனனுறும்; 12.
மேன்மையினையினும்; 31, 53.
மேன்மையினலுமோர்; 23, 43-45.
மேன்மையினனெடும்; 19, 29.
மேன்மெயினலுமோர்; 26.

IV சென்றிலன்; 46—
சென்றனன்; 1, 2, 12, 39, 45.
சென்றவன்; 13, 17, 18, 40, 41, 45, 49, 52, 56.
சென்றிதுன்; 19, 29.

## 4384

I மேருவின் சீர்வரை; 46—
மேருவைப்போல்மலை; 45.

II புக்கழுந்தினமாதிரம்; 46—
புக்கழுந்தினமாதிரக்; 27.
புக்கழுந்தியமாதிரம்; 30.
புகலுற்றன மாதிரம்; 53.
புகுந்தனமாதிரங்களும்; 20.

III தெரிவுற்றது; 46—
தெரிவுற்றன; 2, 22.

தெரியுற்றன; 1.
திரிவுற்றது; 41, 45.

IV ஒண்ணிறக்; 46—
ஒண்ணுறக்; 12.
உண்ணிறக்; 1, 2, 4, 13, 16-18, 22, 24, 30, 31, 40, 53.
உண்ணுறக்; 19, 20, 27, 29, 39, 49.

## 4385

I வெம்புகானிடைப்; 46—
வெம்புகானிடை; 19, 26, 31.
வெம்புங்கானிடைப்; 58.

வேகத்தால்; 46—
வேகத்தான்; 13, 15, 28.

II உம்பர்தோயும்; 46—
உம்பர்தோய; 41.
உம்பரோடளவும்; 45.

ஊடுசெல்; 46—
ஊறுசெல்; 16.

III அம்புபோன்றனன்; 46—
அம்பிற்சென்றனன்; 4, 12, 19, 23, 29, 31, 39, 41, 43, 45, 47, 49, 52, 58, 59.

அன்றடல் வாலிதன்; 46—
ஆடலவாலிதன்; 4, 16, 47, 53.
ஆடலவ்வாலிதன்; 1, 2, 15, 19, 22, 23, 43, 49.
ஆடலில்வாலிதன்; 20.
ஆடவல்வாலிதன்; 26, 44.
ஆலடல்வாலிதன்; 13, 17, 18, 24, 27-29, 39-41, 56.
அங்கொருவாலிதன்; 12.

IV தம்பி; 46—
நம்பி; 45.

மேற்செலும்; 46—
மேற்செல்லும்; 20, 49.

மானவன்; 46—
மன்னவன்; 12, 13, 17-20, 24, 39-41, 45, 49.

## 4386

I மாடு; 46—
மாடில்; 16, 27.

வென்றியொர்; 46—
வென்றியோர்; 40, 41.
நின்றதோர்; 45.

யானையின்; 46—
யானைமுன்; 41, 45,
யானையைச்; 45,

II சென்று; 46—
சென்ற; 15, 16, 28.
நின்ற; 45.
துன்று; 12, 13, 17-19, 27, 29, 39-41, 45, 49.

கெடிலொரு; 46—
செடிலொரு; 1, 2, 12, 13, 15-20, 27. 29, 30, 39-42, 45, 47, 49, 52, 53, 58, 59.
செலாதொரு; 23, 26, 41, 43, 44.
திறத்தொடு; 45.

திக்கின்மா; 46—
திக்கின்மான்; 1, 20, 28.

III நாடுகின்றது; 46—
நாடுநின்றது; 27, 28.
நாடுசென்றது; 4.

IV ஒத்துளனுயினன்; 46—
ஒத்துளதாயினன்; 27, 28, 44, 45, 53.

## 4387

I உருக்கொளொண்கிரி; 46—
உருக்கொள்வண்கிரி; 16.
உருக்கொள்வெண்கிரி; 45.
நாடியோர்பொற்கிரி; 45.

ஒன்றினின்ருென்றினைப்; 46—
ஒன்றிநின்ருென்றினைப்; 24, 26, 44.
ஒன்றினிஒென்றினைப்; 29.

ஒன்றினொடொன்றினைப்; 1, 2, 16, 23, 27, 43, 53.
ஒன்றுநின்ருென்றினைப்; 4.

II பொருக்கவெய்தினன்; 46—
பொருக்கினெய்திய; 45.
பொருத்தவெய்தினன்; 29.

பொன்னெளிர்மேனியான்; 46—
பொன்னெளிமேனியான்; 1, 2, 4, 15, 16, 28, 30, 31, 41, 53.
பொன்னெளிமேன்மை யான்; 45.
தன்மையும்போன்றுளான்; 45.

III அருக்கன்; 46—
அருக்க; 53.

மாவுதயத்தினின்று; 46—
மாலுதயத்தினின்று; 1, 2, 16, 20, 22, 47.
மானுதயத்தினின்று; 15, 27, 28,
நீண்டுதயத்தினின்று; 26, 44.
மாவுதயத்தினின்; 53.

அத்தமாம்; 46—
அத்தமாப்; 24.

IV பருப்பதத்தினை; 46—
பருப்பதத்தினில்; 12
பருப்பதந்தனை; 26, 44.

எய்திய; 46—
எய்துறும்; 12.

பண்பினுல்; 46—
பண்பினுன்; 26, 41, 45.
பண்பினே; 15.
பண்பென; 16.
பண்புபோல்; 12, 13, 17-19, 23, 24, 29. 39-41, 43, 45, 49, 52, 56, 58.

## 4388

I தன்றுணைத்தமையன்; 46—
தன்றுணைத்தமியன்; 27.
தன்றுணைத்தபலன்; 53.
தன்றுணைத்தம்பி; 2.

II சேனுயர்; 46—
சேனுறை; 12.
சென்றுயர்; 45.

சேர்ந்தவன்; 46—
சேந்தனன்; 12.

III நின்ருருகுன்றினில்; 46—
நின்ருருகுன்றினைக்; 16, 26, 27, 44, 45.
நின்ருருகுப்பினில்; 53.
ஒன்றிேனுடொன்றினைக்; 41.

குப்புறும்; 46—
குப்புற; 27.

IV போன்றனன்; 46—
போன்றுளான்; 19, 29, 41, 45.

## 4389

I வானரம்; 46—
வானரர்; 41, 58.

கண்டபோல்; 46—
காண்டல்போல்; 41, 58.
கண்டென; 41, 45.

II ஓடின; 46—
ஓடினர்; 41.

மகற்கமர்; 1, 2, 12, 13, 15, 17-20, 23, 26, 28, 29, 39-41, 43, 44, 49, 56.

மகற்கையா; 46—
மகற்கம்மா; 16.

III சீற்றத்திளையோன்; 46—
சீற்றத்திளவல்; 41, 45.
சீற்றக்குமரன்; 23, 43.

IV வேகத்தினுல்; 46—
வேகத்தினுன்; 12, 13, 16-19, 23, 24, 29, 39-41, 43, 45, 49.
வேகத்துடன்; 45.

